KVC0038

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| | | |
|---|---|---|
| மலர் 1 | காரைக்குடி<br>தாது-ஞூ ஆவணி-மீ | இதழ் 1 |

## காதலைத் தீய்த்த கட்டுப்பாடு.

PRESENTED BY:
V. PR. PL. M.
... CHETTIAR
KARAIKUDI.

(பாரதி தாஸன்)

(1) வேற்றூர்போய் நள்ளிரவில் வீடுவந்த
வேலனிடம், ஆள்ஒருவன் கடிதம் தந்தான்.
ஏற்றதனை வாசிக்கலுற்றான் வேலன்:
"என்னருமைக் காதலரே, கடைசிச் சேதி.
நேற்றிரவு நாமிருவர் பூந்தோட்டத்தில்
நெடுநேரம் பேசியதை என்தாய் கண்டாள்;
ஆற்றாத துயரால் என் தந்தை, அண்ணன்
அனைவரிடமும்சொல்லி முடித்து விட்டாள்.

(2) குடும்பத்தின் பெயர் கெடுக்கத் தோன்றிவிட்டாய்
கொடியவளே! விஷப்பாம்பே! என்று தந்தை
தடதடவென் றிருகையால் தலையில் மோதித்
தரையினிலே புரண்டழுதார். அண்ணன் அங்கு
மடமடவென் றேகொல்லைக் கிணற்றில் வீழ்ந்தே
மாய்வார் போல் ஓடிப்பின் திரும்பிவந்து
படுபாவி தாலியற்ற பிறகும் இந்தப்
பழுதுநடை கொள்வதுண்டோ என்று நைந்தார்.

(3) தாயோ என் எதிர்வந்து, தாலியோடு
சகலமும் போயின வடி இன்னும் என்ன!
தீயாகிக் கொளுத்திவிட்டாய் எம்மை யெல்லாம்!
தெருவார்கள் ஊரார்கள் இதை யறிந்தால்

ஓயாமல் தூற்றிடுவார்! யாம் இவ்வூரில்
உயர்ந்திருந்தோம் தாழ்த்திவிட்டாய் அந்தோ அந்தோ!
பாயேனும் விரித்ததிலே படுப்பதுண்டா
பதியிழந்தால்? மூதேவி! என்று சொன்னாள்.

(4) தந்தையார் "அடி உன்னைக் கொன்றுபோட்டுத்
தலையறுத்துக் கொள்ளுகின்றேன் என்பார்: அண்ணன்
அந்தமதி யற்றவனைக் கொல்வேன் என்றே
அருகிருக்கும் கொடுவாளைப் பாய்ந்தெடுப்பார்!
இந்தவிதம் கொதித்தார்கள் இரவுமட்டும்!
இனி என்னால் அவர்கட்குத் தொல்லை வேண்டாம்
சுந்தரனே, என் காதல் துரையே! உன்னைத்
துறக்கின்றேன் இன்றிரவில் கடலில் வீழ்ந்தே!-

(5) காதலியின் கடிதத்தில் இதை வாசித்தான்!
கதறினான்! கடல்நோக்கிப் பறந்தான் வேலன்!
ஈதறிந்தார் ஊரிலுள்ளார்! ஓடினார்கள்!
எழில்வானம், முழுநிலவு, சமுத்திரத்தின்
மீதெல்லாம் மிதக்கும் ஒளி, அகண்டாகாரம்
மேவு பெருங் காட்சியில் ஓர் துன்பப் புள்போல்
மாது கடற் பாலத்தின் கடைசி நின்று
வாய்விட்டுக் கதறுகின்றாள் வசமிழந்தாள்!

(6) எனை மணந்தார் இறந்தார்; என் குற்றமல்ல;
இறந்தவுடன் மங்கல நாண், நல்லாடைகள்,
புனைமலர், குங் குமம் அணிகள் போனதுண்டு;
பொன்னுடலும் இன்னுயிரும் போனதுண்டோ?
எனை ஆளும் காதலுக்கோர் இலக்கியத்துக்
கிசைந்த தெனில் உயிரியற்கை; நான் என் செய்வேன்.
தனையடக்கிக் காதலினைத் தவிர்ந்து வாழும்
சகம் இருந்தால் காட்டாயோ நிலவே நீதான்!

(7) கண்படைத்த குற்றத்தால் அழகியோன் என்
கருத்தேறி உயிர்ஏறிக் கலந்து கொண்டான்!

பெண்படைத்த இவ்வுலகைப் பல்லாண்டாகப்
பெற்றுணர்ந்த நெடுவானே ! புனலே ! கூறீர்,
மண்படைப்பே காதலெனில் காதலுக்கு
மறுப்பெதற்குக் கட்டுப்பா டெதற்குக் கண்டார் !
புண்படைத்த என் நாடே, கைம்மைக் கூர்வேல்
பொழிகின்றாய் மங்கையர்மேல் ! அழிகின்றாயே !

(8) ஆடவரின் காதலுக்கும், பெண்கள் கூட்டம்
அடைகின்ற காதலுக்கும் மாற்றமுண்டோ ?
பேடகன்ற அன்றிலைப்போல், மனைவி செத்தால்
பெருங்கிழவன் காதல் செயப் பெண் கேட்கின்றான் !
வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்
மணவாளன் இறந்தால் பின் மணத்தல் தீதோ ?
பாடாத தேனீக்கள், உலவாத் தென்றல்,
பசியாத நல்வயிறு, பார்த்ததுண்டோ ?

(9) இளமைதந்தாய், உணர்வுதந்தாய், இன்பங் காணும்
இன்னுயிரும் தந்திட்டாய் இயற்கைத் தேவி,
வளமையற்ற நெஞ்சுடையார் இந்நாட்டார்கள்
மறுக்கின்றார் காதலினைக் கைம்மை கூறித் !
தளைமீற வலியில்லேன் ! அந்தோ என்றன்
தண்டமிழின் இனிமைபோல் இனிய சொல்லான்
உளமாரக் காதலித்தான் என்னை ! அன்னோன்
ஊர்நிந்தை ஏற்பதனைச் சகிப்பே னோநான் !

(10) ஒருயிரும் இரண்டுடலும் நாங்கள் ! எம்மை
உளிகொண்டு வெட்டி விட்ட கட்டுப்பாடே,
தீராத காதலினை நெஞ்சத் தோடு
தீய்த்துவிட்டாய் என்றாள்—பின் ஓடிவந்து
சீராளன் தாவினான் !—வீழ்ந்தாள்—வீழ்ந்தான் !
தேம்பிற்றுப் பெண்ணுலகு ! இருவர் தீர்ந்தார் !
ஊரார்கள் பார்த்திருந்தார் கரையில் நின்றே
உளம் துடித்தார் எனினும் அவர் உயிர்வாழ்கின்றார்.



# பெண்ணின் கண்ணீர்.



( சுவாமி சுத்தானந்த பாரதியார். )

ஊர்நோய் தீர்க்குமுன் உடல்நோய் தீர்த்தல் வேண்டும். நாட்டுக் கண்ணீர் துடைக்குமுன் வீட்டுக்கண்ணீர் துடைத்தல் இன்றியமையாதது. அன்னியர் கொடுமை தீருமுன்நமக்கு நாமே செய்யும் கொடுமை தீரவேண்டும். நமது சமுதாயத்தைப் பிடித்த பெரிய தொன்றுநோய் அல்லது தொற்று நோய்கள் பல. தீண்டாமை என்னும் தோற்பிணி, சாதியென்னும் இரத்தக் கொதிப்பு, பார்த்துண்ணுமை என்னும் காமாலை, நைம்மைத்துயர் என்னும் காசநோய், இவை யாருக்கும் வெளிப்படையாகத் தென் படும் சமூகப் பிணிகள். இவற்றை ஒழிக்க மருந்து நமது மன வுறுதிதான். இவையெல்லாம் நாம் மனமயக்கத்தால் வருவித்துக் கொண்ட பழக்கக் கொடுமைகள் என்ற உணர்ச்சி ஏற்படவேண்டும். இப்பிணிகள் தீர்ந்து, ஆணும் பெண்ணும் சரிசமானமாக சாதி மத வேறுபாடுகளை அறவே மறந்து, நாட்டுப்பணி புரிந்தால் நமது எண்ணம் எவ்வளவு எளிதாக வெற்றிபெறும்! இந்திய சமுதாய மென்னும் சீவநதியில் இந்த அழுக்குகளும் சகதியும் தடைகளும் பெருகி ஓட்டத்தைக் கெடுத்துப் பாசிபடிய வைக்கின்றன. இது என் தாத்தா காலத்துப் பாசி, இதைப் போக்கலாமா என்று வாதாடுவது பாசிபிடித்த மடமையாகும்.

காலவெள்ளம் பழமைத் தீமைகளை அடித்துக்கொண்டேகிப் புதிய கங்கையாகப் பாய்ந்து செல்லுகிறது. மனித சமுதாயம் வரவர அறிவில் விரிவடைந்து முன்னேறுகிறது. காலவேகத்திற்குத் தக்கபடி நமது சமுதாயமும் முட்டுக்கட்டைகளைத் தகர்த்தெறிந்து முன்னேறவேண்டும். இன்றேல் முன்னேற்ற வெள்ளம் நம்மையும் சேர்த்து அடித்துக் கடலில் தள்ளும்! பழைய நன்மை புதிய நன்மை இரண்டும் பொருந்திய ஒரு புதிய சுத்த சுதந்திர ஸமத்வ சக்திபெற்ற வீர சமுதாயத்தை நாம் உண்டுபண்ணவேண்டும். இன்றேல் மேற்குப் புயல் முன் நிற்கமாட்டோம்.

பாருங்கள் நாட்டைச்சுற்றி! நமது அருமை நாட்டின் நிலைமை எப்படியுள்ளது? பாருங்கள்! அந்தோ கண்ணீர்! கண்ணீர்? நாட்டிற்

பாதி பெண். வீட்டின் திருமகள் பெண். நம்மைச் சுமந்து பெற்றுப் பாலூட்டி வளர்த்துத் தாலாட்டிச் சீராட்டிப் பாராட்டி ஆளாக்கியது யார்? பெண். பெண்ணின்றி மனிதவாழ்வு வரண்ட வனாந்திரம் போலும். பெண்ணே வாழ்வின் விளக்கம்; விரிவு; இன்பம். அத்தகைய பெண் சக்தியை பாரத ரிக்ஷிகள் சக்தி அன்னை இலக்குமி என்று போற்றினர். பெண் மகிழ்ந்த வீட்டில் செல்வம் பெருகும் என்றனர். ஒரு பெண்ணின் புன்னகையைப்பெற வீரர் தமது திறமைகளையெல்லாம் காட்டினர். ஒரு பெண்ணின் கைமலரைப் பிடிக்க மடலேறினர். இப்போது காலக்கொடுமை பாருங்கள்! "என்னமோ என் அதிட்டம் பொட்டையே பிறக்கிறது, உம்" என்று சலித்துக்கொள்கின்றனர். "ஐயோ, பெண்ணைப்பெற்றதும் கவலையும் கூடப்பிறந்ததடீ அம்மா? இதற்கு வயது பதினாலாகிவிட்டது. பிள்ளையாண்டான் சரியாக அகப்படவில்லை. 2000, 3000 கேட்கிறார்கள். நானெங்கு போவேன்" என்று கண்ணீர்விடும் பெற்றோர் எத்தனை? "ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்? என்னாலல்லவா பெற்றோர் கவலைப்பட்டு மனம் உடைகின்றனர்" என்று வருந்தி, மெலிந்து தற்கொலையும் புரிந்துகொள்ளும் பெண்கள் எத்தனை? இந்த ஆங்கிலக் கல்விக்கு அடிமைப்பட்டு திரிசங்கு சுவர்க்கத்தில் தொங்கும் இந்த அரைத்துரைமாருக்கு எவ்வளவு மேட்டிமை? அன்பும் காதலும் மணவினைக்கு அடிப்படை என்பது உண்மை. இப்போது எதிர் ஜாமீனும் பெற்றோர் கட்டாயமும் முதன்மையாகி கடிமணத்தை, நடிமணமாக்குகின்றன.

"உடலும் உயிரும்போல வாழுவோம், உன் இன்பதுன்பம் என் இன்பதுன்பம்; உன் வாழ்விற்கு நான் உற்ற துணைநலம்; நான் உன் மனைவி; உன் வீட்டைப் பாதுகாத்து, உனக்கு உணவும் சுகமும் கொடுத்து, உன் சந்ததியை விருத்திசெய்து, உன்னை வாழையடிவாழையாக வாழவைக்கும் சக்தி நான்" என்று பெண்மைத் தெய்வம் எதிரே வந்து புன்னகை புரிகிறது. அதை வீரமுடன் வரவேற்றுக் கூடி வாழாமல் "கொண்டா எதிர்ஜாமீன் 2000, 3000, கொண்டா ருதுசாந்திக்கு 1000, இல்லாவிட்டால் என் முகத்தில் விழியாதே" என்பதா ஆண்மை? ரூ. 1000 ரொக்கம், வெள்ளிப் பாத்திரம் 500, தங்கால்தான் சாந்தி, என்று 5 ஆண்டுகள் பிடிவா

தம் செய்தான் ஒரு மாப்பிள்ளைக்காளை. ஏழை வாலிபப்பெண் என்ன செய்வாள்? முடிவில் தன்னை உண்மையாகக் காதலித்த ஒரு வாலிபனுடன் கண்ணறியாத ஊருக்கு ஓடிப்போய்விட்டாள். கணவனுக்குச் செருக்கு ஒழிந்தது. நெடுநாட் சென்று தன் மனைவி, பம்பாயில் பெற்றுப் பெருகிப் பெருவாழ்வு வாழுகிறாள், அவளைக் காதலித்த கணவன் சுயசாதியல்ல என்று அறிந்தான். இது நடந்த கதை. மாப்பிள்ளைக்காளைக்கு விலை கொடுக்கமுடியாமல் எத்தனை வாலிபப் பெண்கள் தமது இளமையை இழக்கின்றனர். ஏன்? மானத்தையும் இழக்கின்றனர். இந்த வரசுல்கக் கொடுமை ஒழிந்து காதலால் மனமொன்றி பொன்னும் நகையும்போல ஆணும் பெண்ணும் இன்புறவேண்டும்.

அழகுத் தெய்வமான பெண் படும் இரண்டாவது பெருங் கொடுமை, கைம்மைத்துயர். இந்தத் துயரால் நமது சமுதாயம் படும் அவமானத்தை நாடோறும் பார்க்கிறோம், கேட்கிறோம். எனினும், தொன்றுதொட்டு வந்த நோயை விடுவோமா என்று பற்றிக்கொண்டிருக்கிறோம். பிறநாட்டார் நம்மை அநாகரிகர் என்று ஏளனம் செய்வதற்கு ஏதுவாயிருப்பது இந்த அநாகரிகமே. கலியாணம், சாதகம் பார்த்து பெற்றோர் கட்டாயத்தால் நடக்கிறது. நடத்துவது பஞ்சாங்கமய்யர்; பழங்கொள்கைப் பிடிவாதர்; மாப்பிள்ளையின் உடல் வலிமை, நிர்வாகத்திறமை, மனப்பொருத்தம், நிலைமை ஒன்றும் பாராது, நட்சத்திரத்தைப்பார்த்து, மேளந்தட்டி தாலிகட்டிக் கைதட்டி விடுகின்றனர். ஜீவனற்றபிள்ளை நோய் வாய்ப்பட்டு விதி மூய்ந்து எமலோகம் போகிறான். இளம் மனைவி இங்கேதான் இருக்கிறாள். ராஜாராம்மோகன்ராய் செய்த புண்ணியத்தால் உடன்கட்டை ஒழிந்தது. அதைவிடப் பெரிய துயர் உயிரோடு வைத்து பெண்களை நடைப்பிணமாக்கல். ஐயோ, என் சகோதரிகளா, இத்துயரத்தை எத்தனைநாள் பொறுப்பீர்கள்? பிள்ளையாண்டான் பாடையோடு போய்விடுகிறான். பெண்ணுக்குப்பிடிக்கிறது சனியன். வண்டுமொய்த்த மலர்க்கூந்தல் வழித்தெடுக்கப்பட்டு நாடகபாத்திரங்களுக்கு டோப்பாவாகிறது. ஐயோ கூந்தலை வழிக்கும்போது அழகுமணிப் பாவைபோடும் கூக்குரலைக்கேட்டாவது இரக்கம் வரவேண்டாமா! தலை கண்ணாடிபோலச்சிரைக்கப்

பட்டதும் முக்காடு; அத்தோடு அவள்வாழ்க்கைசரி! அரோஹரா! பிறகு இருட்டு மூலேயும் கண்ணீருந்தான் கதி! ஐயோ! "போமூ முண்டை எதிரே வருகிருய் சகுனத்தடை!" என்று பாய்வர் ஒரு பால்! "கட்டைவிதவைக்கு ஒருவேளேப் பலகாரம் போதாதோ" என்று இடிப்பார் ஒருபால். பணமில்லாத ஏழைக்கணவனின் கைம் பெண் இரண்டு நாட்டுப்பெண்கள் உள்ளகுடும்பத்தில் அகப்பட்டால் அந்தக்கொடுமை காளகண்டக் கொடுமைதான்! முதலேவாய்ப்பட்ட உயிர்போலத் துடிக்கும் இத்தகைய கைம்பெண்கள் நமது நாட்டில் மிகப்பலர். எத்தனேகட்டு! எத்தனே காவல்!

ஒரு இளங்கைம்பெண் சோப்புத் தேய்த்துக்கொண்டு இரகசிய மாகக் குங்குமப் பொட்டு வைத்துக்கொண்டு கண்ணுடியைப் பார்த் துக்கொண்டிருந்தாள்! அண்ணன் மனேவி இதைப் பார்த்து, மாமி யாரிடம் பற்றவைத்துவிட்டாள். "குடிமுழுகிப் போனதே, அடி தட்டுவாணி, என் குடும்ப மானத்தைக் கெடுக்கவா இந்தக்காரியம் பண்ணினுய். யாரோடாவது ஓடப்போகிருயா வைபூசை" என்று மட்டையடித்திருநாள் நடத்திவிட்டார்கள். பெண் என்ன செய்வாள்? கண்ணுங் கண்ணீருமாக அழுதாள். கிளிபோலப் பெண்; குயில்போலக் குரல்; படித்தவள். "அடி அறுதலி, பத் துத்தேய், மெழுகு, சமை, பெருக்கு, தண்சுமந்துவா, தண் கொண்டுவரும்போது, தெருவில் பராக்குப்பார்த்தால் விழும்பூசை" இப்படி ஆர்ப்பரித்து அடிமையைவிடக் கொடுமை செய்கின்றனர் பெண்தெய்வத்தை. ஒருநாள், இளம்பெண் யோசிக்கிருள். "நாம் ஏன் மற்றப் பெண்களேப்போல மணம்புரிந்து வாழக்கூடாது? ஆண்கள் மட்டும் மனேவி சென்ருல் மணம்புரிந்து பெற்றுப்பெருகி வாழுகின்றனரோ. ஆசை ஒன்றுதானே. ஆசைக்கு முக்காடு போடமுடியுமா? இயல்பான காதலுக்கு மூலேவாழ்வு மருந்தாகுமா? அடுத்தவீட்டு நாயும் மாடும்கூட ஆண் பெண் என்று கூடி இன் புற்று வாழுகின்றனவே; நான் ஏன் அவ்வாறு வாழலாகாது? என்ற உணர்ச்சி பலப்படுகிறது. கண் வாலிபர்களே நோக்குகிறது. வீட்டிலுள்ளவர்கள் "எங்கே பார்க்கிருய், கொல்லு முண்டையை! எங்கே வம்பாடுகிருய்? அறு நாக்கை! படியைவிட்டு இறங்கு காலே ஒடிக்கிறேன்" என்று பெண்சக்திக்கு 144, 124-A போட்டு

வசவார்ச்சனை நடத்துகின்றனர். ஒருநாள் இளம்பெண் மனம் பொறுக்காமல் வேதனை தாங்காமல், இரகசியமாகக் குளத்தில் விழுந்து சாகப்போகிறாள். அப்போது சாதி இன்னதென்று தெரியாத வாலிபன் ஒருவன் எதிர்ந்து பெண்ணைக் காப்பாற்றுகிறான், ஆறுதல் சொல்லுகிறான். இருவருக்கும் காதல் உண்டாகிறது. இரவில் யாருங் காணமுடியாத ஊருக்கு ஓடிப்போகின்றனர். அங்கு பெற்றுப்பெருகி வாழுகின்றனர். அல்லது இரகசிய விலைத்தொழில் நடக்கிறது. அல்லது வெளிப்படையாக காலக்கொடுமையால் விபசாரக்கடை வைக்கின்றனர். அல்லது மேடைமேல் நட்சத்திரங்களாக மின்னுகின்றனர். "ஐயோ முண்டை ஓடிப்போய்விட்டாளே! குலமானம் போச்சே ஐயையோ" என்று வீட்டில் அழுகிறார்கள், சாபம்வைக்கிறார்கள். குற்றம் யார்மேல்? இந்த நாடகத்தை நாள்தோறும் பார்க்கிறோம். இன்னும் இளம்பெண்களின் கண்ணீரைத் துடைக்கப் பஞ்சாங்கம் பார்க்கிறோம். சாத்திரம் பேசுகிறோம். அன்னியர் நம்மைப் பார்த்துச் சிரிக்கின்றனர். பெண்கள் அழுத கண்ணீர் இரும்பு விலங்காக நமது கைகளைப் பிடித்துக்கொண்டிருக்கிறது.

புதுயுகம் வருகிறது! அடிமைப்பேய் நடுங்குகிறது! சுதந்திரக் கதிர் எழுந்தது! மூடப்பழமை ஓடுகிறது! பெண்கள் விழித்துக் கொண்டனர்! இது நல்லகாலம்! இந்த விழிப்பால் பல தீமைகள் ஒழியும். பெண் கல்விக்கு ஏற்ற கலாநிலயங்கள் ஏற்படுத்தவேண்டும். எண், எழுத்து, நாட்டு வாலாறு, உலகநூல், வீட்டுவேலை. அழகுக்கலைகள், நுண்கலைகள், பெண்களுக்குக் கற்பிக்கவேண்டும், விபரமறிந்து, மனங்கொண்ட காதலனை அவர்கள் மணம்புரிய சுதந்திரம் இன்றியமையாதது. மனைவியை இழந்தவனுக்கு இருக்கும் சுதந்திரம் கணவனை யிழந்தவளுக்கும் இருத்தல் வேண்டும். குடும்பச் செல்வத்திலும் செல்வாக்கிலும் ஆண் பெண் இருவருக்கும் சரிபங்கு இருத்தல் வேண்டும். குடும்பத்தார் கொடுமையால் பரிதபிக்கும் இளம் பெண்களைக் காப்பாற்ற ஒவ்வொரு ஊரிலும் பெண்ணுரிமை நிலயங்கள் முறையாகப் பணிபுரியவேண்டும். இதில் பெண்களுக்கு ஏற்ற கல்வி தொழில் ஆடல்பாடல்கள் கற்பிக்கலாம். சரியான வரன் வந்தால் நிலயச்சார்பிலேயே மணவினை

நடத்தலாம். தீண்டாமை ஒழிய ஒரு கனல் எழுந்துள்ளது. அது போலவே கணவனை யிழந்த பெண்மணிகளின் கண்ணீரைத் துடைக்க ஒரு பெரிய இயக்கம் அவசியம். பெண்டிர் ஊர்தோறும் கொடுமையைக் குமுறித்தள்ளி, சுதந்திர முழக்கத்துடன் முன்வர வேண்டும்! ஒவ்வொரு பெண்ணின் மனத்திலும் இந்த எண்ணங்கள் கனலுற்றெழுந்து காரியவீறு பெறுக!

---

## எனது மகிழ்ச்சி

சுங்குரும்பை ஸ்ரீமான் பெ. நா. மு. முத்துப்பழனியப்ப செட்டியார் J. P.

நம் சமூகத்தில் ஆடவர்களைப் போன்று மகளிருக்கும் மறுமணம் நடைபெற வேண்டுவது இன்றியமையாததொன்று. இதனை அறிஞர் பலரும் வற்புறுத்துவதிலிருந்தே இதன் அவசியம் நன்கு புலனாகும். "மாதர் மறுமணம்" என்ற சொல்லைக் கேட்பதே சுவையுடைத்தாய் இருக்கிறது. "மாதர் மறுமணம்" என்ற பெயரையே தாங்கிவரும் இந்தப் பத்திரிகையை நான் வரவேற்றுப் பாராட்டுகின்றேன். மாதர் மறுமணத்தில் நோக்கமுள்ளார் அனைவரும் முனைந்து உழைக்க முன்வரவேண்டும். அவரவர்களால் இயன்ற உதவியை நல்கினால் விரைவில் காரியம் கைகூடும். பயமென்னும் பேயை ஓட்டிவிடவேண்டும். பிறர் ஏதேனும் சொல்வார்களோ என்ற அச்சம் ஒழியச்செய்தல் வேண்டும். காரியம் நியாயமானது—தருமமானது. அதனைச்செய்ய ஏன் தயங்க வேண்டும்? துணையிழந்திருக்கும் மகளிரையே விவாகம் முடிக்க இளைஞர்கள் முற்படுதல் வேண்டும். சிறப்பாகத் துணையிழந்த ஆடவர் நாயிழந்த ஒருவரையே மணப்பதெனக் கங்கணம் கட்டிக்கொள்ள வேண்டும். பெண்மக்களும் இனிஇதில் கவனம் செலுத்த வேண்டும். பெண்கள் பங்கெடுத்து உழைப்பார்களானால் "மாதர் மறுமணத்தை"யே வெகு சுலபத்தில் கண் முன் காண்போமென்பது திண்ணம்' இந்நன்னாளை விரைவில்காண ஆண்—பெண் இருபாலாரும் ஒத்துழைத்து சமூகம் நற்பயனடையச் செய்யவேணுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

# மாதர் மறுமணம்.

மகிபாலன்பட்டி திருவாளர் மு. சின்னையா செட்டியாரவர்கள் எழுதுவது

புருஷர்களைப் போல் பெண்களும் மறுமணஞ் செய்துகொள்ளுதல் அவசியமெனப் பல காரணங்களையும் எடுத்துக் காட்டி இரண்டு வருஷங்களுக்கு முன் "மாதர் மறுமணம்" என்னும் ஒரு புத்தகம் எழுதி வெளியிட்டுள்ளேன். என்னைப் போலவே வேறு பலரும் அதன் அவசியத்தை வற்புறுத்திப் பத்திரிகைகளில் எழுதியும் கூட்டங்களிற் பேசியும் வருகிறார்கள். இரண்டாயிரத்துக் கதிகமானவர்கள் மாதர் மறுமணத்திற்குச் சம்மதம் கூறிக் கையெழுத்துச் செய்திருக்கிறார்கள். ஆதலால் மாதர் மறுமணம் ஒரு முக்கியமான திருத்தம் என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆயினும் இதுவரை பகிரங்கமாக ஒரு மணங்கூட நடக்கவில்லை! ஏன் நடக்கவில்லை? பகுத்தறிவில்லாத ஒரு சில முண்டங்களின் ஆக்ஷேபணை காரணமா? இல்லை. அத்தகைய ஆக்ஷேபணைகளை யாரும் பொருட்படுத்தவில்லை. புருஷன் இழந்த பெண்களை மணக்க மனிதர்கள் அகப்படாத காரணமா? இல்லை. ஏராளமான வாலிபர்கள் தயாராக இருக்கின்றார்கள். சாத்திரக் குப்பைகளுக்கு அஞ்சி நிற்கும் காரணமா? இல்லை. சாத்திரத்தைப்பற்றி சிந்தனையே கிடையாது. வேறு காரணம் என்ன? பெண்கள் திடமாக முன் வாராததே காரணம்! பெண்கள் மட்டும் திடமாக முன் வந்தால் அதைத் தடைப்படுத்த எந்தச் சக்தியாலும் முடியாது. சமூகக் கட்டுப்பாடுகளும் சாதிப்பிரஷ்டமும் மலையேறி வெகு காலமாயிற்று. ஆனால் அந்தப் பழுதையைப் பாம்பென்று நினைத்து அஞ்சிக்கிடக்கும் ஜனங்கள் இன்னும் ஏராளமாக இருக்கிறார்கள். அந்த அச்சம் நீங்குவதற்கும் மனித உணர்ச்சி பெற்றுப் பெண்களும் மனோதிடத்துடன் முன் வருவதற்கும் கல்வியறிவு மிகவும் அவசியமாக இருக்கிறது. பெண்கள் கல்வியறிவு பெறாத காரணத்தாலும் ஒன்றையும் படிக்கவும் கேட்கவும் மாட்டாதவர்களாகவும் கேவலம் பசுக்களைப் போல் வளர்ந்து வந்தவர்களாக இருந்தமையாலும் தங்களுக்கு விமோசனமே இல்லையென்ற உணர்ச்சிபெற்று மனத்திட

யில்லாமல் கட்டுண்டு கிடந்தார்கள். இனி அந்தக்காலமும் அந்திய காலமாகி வருகிறது. ஆண் பிள்ளைகளைப் போலவே பெண் பிள்ளைகளும் ஏராளமாகக் கல்வி கற்று உலக அறிவும் ஞானமும் பெற்று முன்னேறி வருகிறார்கள். ஆதலால் இன்னும் சில நாட்களில் ஏனைய சீர்திருத்தங்களைப் போல மறுமண இயக்கமும் அபிவிருத்தியடையுமென்பதில் சந்தேகமில்லை.

ஆயினும் அதற்கென்று ஒரு பத்திரிகை நடைபெறுவதும் அது சம்பந்தமான நடைமுறைகளை எடுத்துக் கூறுவதும் நடந்த காரியங்களைப் பாராட்டி உற்சாகப்படுத்தி ஊக்குவிப்பதும் நல்ல தூண்டுதலாகவும், பெரிதும் வேண்டற் பாலதாகவும் இருக்கும். இந்த முக்கியமான திருத்தத்தை மேற்கொண்டு ஒரு பத்திரிகை நடத்த முன்வந்த எனது நண்பர் திரு. செ. முருகப்பா அவர்களின் முயற்சியைப் பெரிதும் பாராட்டுகிறேன். அபிமானிகள் யாவரும் ஆதரவளித்துப் பத்திரிகை அபிவிருத்தியடையும்படி செய்ய வேண்டுகிறேன்.

---

## மறு மணம்.

திருச்சி தோழர் நீலாவதி

"மறுமணம்" என்றவுடன் யாருக்கு? என்ற கேள்வி எவரிடத்திருந்தும் எழாதென்றே எண்ணுகிறேன். என்னையெனில் இவ்வுலகில் எல்லாசவுகரியங்களும் ஆணுலகிற்கே அர்ப்பணமாகியிருக்கையில் அவர்களைப்பற்றி ஏதும் பேச இடமில்லை. இவ்வுலக வாழ்க்கையில் பொருளாதார செழுமைபெற்ற ஆடவர்கள் "எண்ணிய எண்ணியாங் கெய்தும் புண்ணியவான்கள்" என்பதில் என்ன சந்தேகம்? நித்தமொரு பெண் வேண்டுமெனினும் நேரமொரு மனைவிவேண்டுமெனினும்கண்ணில் கண்டதோர் பெண்ணைக்காதலியாக்கிக்கொண்டு ஆள்வதெனினும் அவர்களுக்கு இயலாததில்லை. ஏன்? இன்றுள்ள சமூக அமைப்பும், பெண்ணுலகின் அடிமைத்தனமும் அந்தகார இருளும் அத்தனைக்கும் இடங்கொடுக்கின்றன. "மறுமணம்" என்

றதும் மாதர்களுக்கே அது, என, வயிற்றினுள்ளிருக்கும் கருமுதல் தீர்மானிப்பது இன்றைய உலகவாழ்வில் பெண் ஆண் பேதத்தன் மையை உள்ளங்கை நெல்லிக்கனி யெனத் தெளிவுபடுத்துவதாகும். ஆணுலகின் அக்ரமங்கள் அளவுகடந்தது! வைதீகத்தின் வஞ்சகங் கள் வரையறையற்றது!! சமூகவாழ்வில் ஆணும் பெண்ணும் மலரும், மணமும் போன்ற நிலையிலிருக்க வேண்டியவர்கள். வாழ்க் கையின் போராட்டம் அத்தனையிலும் ஆண் பெண் இருவருக்கும் சமபங்கு இருந்தே தீருகிறது. ஆனால் வைதீகமும், பிரித்தாண்டு அடிமை கொள்ளும் மனப்பான்மையும் பெண்ணை வேறுபடுத்தி இழிவுபடுத்தி ஏற்றத்தாழ்வு கற்பித்து எதுக்கும் தலைகாட்டாது எங்கோ ஒரு மூலையில் ஒதுக்கிவிட்டன. இத்தகைய பேதத்தால், வஞ்சக நெஞ்சத்தார் வகுத்திட்ட சட்டதிட்டங்களால் பெண்ணுல கின் பெருமையழிந்தது! சீர்குலைந்தது!! சிறப்பு நலிந்தது!!! மக்கள் படைப்பில் பேதங்கொண்ட இந்நாடு, மாண்புறு பெண்ணின் படை ப்பிலும் பேதம் கொண்டது. இதன் பயனாய் பெண்ணுலகம், இன்று நாயின் கழுத்தில் கட்டிய நன்மாணிக்கம் போன்றும், கொக்கின் கழுத்தில் கட்டிய கோமேதகம் போன்றும் பிரகாசிப்பற்று, பேச்சு மூச்சற்றுக்கிடக்கின்றது. இந்நிலைமுற்றும் முறிபடும்நாள் எந்நாளோ? சமூகராஜீய பொருளாதார நிலை மூன்றும் மாறினாலன்றி அந்நிலை முற் றும்மாற வழியில்லை. நிற்க, ஆணுலகு பெண்ணுலகிற்குச் செய்த அநேகஅக்ரமங்களில்விதவைத்தன்மையிருக்கின்றதே! இதைப்போல் கொடுமை வேறு எதுவும் இல்லை. அம்மா! ஒரு பெண் தன் புருஷனை இழந்து விட்டால், அந்த போக்கியர்களின் சட்டப்படி விதவைத் தன்மைக்கு ஆளாகி விட்டால், இவ்வுலகில் அனுபவிக்கும் இன்னல் கள்தான் எவ்வளவு? என்னென்ன? கொல்லாமையும், கொன்று புசியாமையும், ஜீவகாருண்யமென முழங்கிவரும் சிவனடியார்கள் திருவுள்ளத்தில், பெண்களை, வாய்பேசும் தெய்வங்களை விதவைத் தன்மையால் கொல்லாமல் கொல்லும், சித்திரவதையின் சின்னம் பதியவில்லையே! கணவனை யிழந்த பெண்கள், கண்ணீருங் கம்பலையு மாய்த் தவிக்கும் இப் பாழான நாட்டிலே "அன்பே சிவம்" என அறைதலுக்கர்த்தமுண்டோ? என என் போன்றோர் எண்ணாமலிருக்க எவ்விதம் முடியுமென்பது கவனிக்கத் தக்கது. இவ் விதவைக் தன்மை ஒருவரிடத்து மட்டும், ஒரு சமூகத்தாரிடைமட்டும் காணப்

படுவதாயில்லை. பெரிய ஜாதியார்களென்று குருட்டுத் தனமாக எண்ணி இறுமாந்து, ஒருசிலரைத் தாழ்ந்த ஜாதியார்களெனத் தள்ளி வைத்திருக்கிறோமே, அவர்களில் சிலரைத் தவிர, மற்ற எல்லாரிடத்தும் இக் கொடுமை தாண்டவமாடியே வருகின்றது. தற்போது உலகெங்கணும் அடிமையும், கொடுமையும் அழிந்துபட வேண்டுமென்னும் இடி யோசைகள் காது செவிடுபட முழங்குகின்றன. காலச் சக்கரம், ஒரு சாராரிடை மட்டும் ஒரு சமூகத்தாரிடை மட்டும், ஒரு நாட்டிடைமட்டும் சுழலாதன்றோ? எங்கெங்கு, அடக்குமுறையின் வேர் ஒடிக்கொண்டிருக்கிறதோ? எங்கெங்கு மாறுதல் அவசியமோ, அங்கெல்லாம் அது சென்று தன் பணியையாற்றியே தீரும். எனவே செட்டிமார்நாட்டிலும், விதவைத்தன்மைக்குச் சாவுமணியடிக்க வேண்டுமென்ற ஆசை அபிவிர்த்தியடைந்து வருவது ஆச்சரியமாகாதெனினும், காரியம் கடிதில் நிறைவேற வேண்டும். மனிதசமூகத்தில் ஆண், பெண், இரண்டும், இரு கண்களுக்கு ஒப்பானவர்கள். இருகண்களில் ஒன்றுஉயர்விற்கும் ஒன்று தாழ்விற்கும் ஆளாவதெனில், அதைப்போல் கொடுமை வேறுஎதுவுமில்லை. ஒருகண்ணிற்கு வெண்ணெயும், ஒருகண்ணிற்குச் சுண்ணாம்பும் இடும்மடமைத்தனம், சமூகத்திற்கு, நாட்டிற்கு எவ்வளவுதீங்கு என்பதை நாம் இன்னும் உணராதிருத்தல் பெரும் பைத்தியக்காரத்தனமேயாகும். இந்தஇடத்தில் பாரதியாரின் அரியமொழிகளை ஆராய்ந்து பார்த்தால் நலந்தருவதாகும், "கண்களிரண்டினி லொன்றைக்—குத்தி, காட்சி கெடுத்திடலாமோ?" "பெண்ணுக்கு விடுதலை நீர் இல்லையென்றால், பின்னிந்த உலகினிலே வாழ்க்கையில்லை" ஆ! எவ்வளவு உண்மையான சொற்கள்! எவ்வளவு உயரியகருத்துகள்! இதற்கும் புருஷனை இழந்தவுடன் பெண்களை நாம் வைத்திருக்கும் நிலைக்கும் எவ்வளவுவித்தியாசம்? ஓர் இளம்பெண் தன் புருடனையிழந்துவிட்டால், அவள்படும் வேதனைக்கோர் அளவுண்டா? அறிவாற்றலில், பசிதாகத்தில், உள்ளஉணர்ச்சியில், ஆணுக்குவேறு! பெண்ணுக்குவேறு!! என யாராவது துணிந்து கூறுவார்களா? கூறினால், இன்று அவர் தம் ஆபாசக் கூற்றுக்கு ஆப்புகள் கொடுக்க ஆயிரக் கணக்கான, ஆண் பெண் தோழர்கள் கிளம்பிவிடுவார்களன்றோ? ஓர் பெண் புருஷனை இழந்தால் சாகும் வரை புருஷ வாடையேயின்றி வாழ, விருப்பு வெறுப்புணர்ச்சி இல்லாமலா மரக்கட்டை

யாகி விடுகின்றுள்? கடவுள் பக்தர்கள் கருதிக்கொண்டிருப்பது போல், புருஷனை யிழந்த பெண் குட்டிச்சுவருக்கு சமமானவளே யெனின், இன்று ஆயிரக்கணக்கான சிசுக்கொலைகள் திருட்டுத்தனமாக நடைபெறுகின்றனவே! அது எப்படி? விதவையென்று பெண்ணை வேறுபடுத்திய இழிவுபடுத்திய, யோக்கியர்களும் வீரர்களும் (!) கள்ளத்தனமாக அவளோடு கூடிக்கலந்து, கொஞ்சி விளையாற்றி, குட்டு வெளிப்படுமெனத் தெரிந்தால், விட்டு ஓடுகிறுர்களே! இச்சென்மங்களுக்கு ஏதாவது விவஸ்தை இருக்கின்றதா? கலியாணம் செய்யலாமென்றுல் கசப்பு! கள்ளத்தனமென்றுல் இனிப்பு!! இதில் மறுமணம் கூடாதென்ற மன்னுப்பு!!! அக்ரமத்திற்கும், அநியாயத்திற்கும் ஓர் எல்லை கிடையாதா! புருடன் இறந்தவுடன் பெண்ணுக்குச் செய்யும் ஆக்கினைக்குத்தான் என்ன அர்த்தமிருக்கின்றது! புருஷனோடு கூட்டு வாழ்க்கை நடத்த முற்படும்போதுதான் பெண்கள் கலர்ப் புடவைகளும், ஆபரணங்களும், புஷ்பங்களும் சூடுகிறுர்களா? இல்லை. பிறந்தது முதல் சகலவித ஆசைகளையும் அநுபவிக்கிறுர்கள். ஆனுல், நடப்பது என்ன? நடுவில் சம்பந்தப்பட்ட புருடன் இடையில் இறந்தால், அதோடு அவளது வாழ்க்கை வெள்ளைச்சேலைக்கும், வேதனைக்கும் தான் அர்ப்பணம். எத்தனை பால்யமாயினும் சரி, எவ்வளவு குழந்தையாயினும் சரி; கொலை! கொலை!! உயிரோடு கொலை!!! ஜீவகாருண்யமெல்லாம் சிவநேசமெல்லாம், அன்பின் அருளெல்லாம் ஏட்டோடே! எழுத்தோடே!! பேச்சோடே!!! பத்தி சிலையோடே !!!! ஆடு கோழிகளைவிட, ஆறறிவு படைத்த பெண்மணிகள் உணர்வற்ற சவமாகிவிட்டார்கள் நம் நாட்டிலே! சாரமற்ற சக்கையாகிவிட்டார்கள் நம் தேசத்திலே! மாண்பற்ற மரக்கட்டையாகிவிட்டார்கள் நம் சமூகத்திலே!!! ஆனுல், வீரப் பெண்மணிகளே! இக்கொடுமைகளுக்கு இன்னும் நாம் நெடுநாளைக்கு இரையாகிக்கொண்டே போகவேண்டுமா? இவை என்றும் நிலைத்திருக்க உங்கள் மனம் சம்மதமா? வேண்டாம் வாலிப உலகே! உன் சுயரூபத்தைக் காட்டத்தவறுதே! உன் தூய்மையான உள்ளத்தை அயோக்கியர்களின் வசம் அடமானம் வைத்து விடாதே! கொடுமை கண்டவிடத்து குதித்தோடிச்சென்று அவைகளைச் சின்னுபின்னப்படுத்தி, சுக்கு நூருக்கி, சுதந்திரத்தையும்;

சுயமரியாதையையும், சமத்துவத்தையும் நிலைநாட்டு!! பெண்ணினத் துரோகிகளை இவ்வுலகினின்றும் பிடரியிலடித்துத் தள்ளிவிடு!! எத்தனையோ காரியங்களை சாதித்த நீ, எண்ணிய காரியங்களை இனி சாதிக்கப்போகும் நீ, மாதர் மறுமண விஷயத்தில் அஜாக்கிரதையாய், சாவதானமாய் இருந்துவிடுதல் அழகல்ல. இறுதியாக விதவைத் தன்மையால் வாடிவதங்கும் சகோதரிகளே! உங்கள் அடிமைக் கட்டுப்பாட்டை உடைத்தெறிய உங்களால்தான் முடியும். வஞ்சகர்களின் நெஞ்சம் கொதிக்க, நேர்மையான வழியிலிறங்கவேண்டியதும் நீங்கள்தான்!! உங்கள், உணர்ச்சியின்றி உங்கள் உறுதியின்றி காரியம் நடைபெறாது. சாதிப்பூச்சாண்டி, மோட்சப்பூச்சாண்டி காட்டி, உங்களை மூடராக்கும் மோசக்காரர்களை நாசமாக்கி நன்மையடையுங்கள். "விதவை" என்ற பெயரே, வேரோடொழியப் போராடுங்கள். வெற்றி நமதே!

---

# மலிவுக்குக் காரணம்.

காரைக்குடி ஆனரரி மாஜிஸ்டிரேட் திரு. T. திருநெல்லை அவர்கள்

ஆர்வமிக்க சீர்திருத்தச் செல்வர்களே! செல்விகளே!

நமது குலத்தில் தொன்றுதொட்டு வழக்கமாக வந்த பற்பல விஷயங்கள் இன்று அடியோடு மாறிவிட்டன. எப்படி மாறினாலும் நம்மரபில் தோன்றிய ஆடவரோ பெண்டிரோ துன்பப்படாதிருக்க முடியவில்லை. ஏன்? என்ன துன்பம் என்று நோக்கினால் கலியாணந்தான் காரணமாக வந்துமுடியும். இதை எண்ணி முன் பலமுறை கூட்டங்கள் கூட்டிக் கட்டுப்பாடு செய்தும் கட்டுப்பட்ட பாடில்லையல்லவா? அதையுன்னியே நம்மினத்தில் கைம்பெண் எனப் பெயரிட்டுக் கட்டுண்டு கிடக்கும் கன்னியர்களை, கல்வியறிவிற் சிறந்தும் கலியாணமில்லாது தயங்கித் தவிக்கும் கட்டிளங் காளையர்க்குக் கடிமணஞ்செய்துகொடுப்பதுதான் சாலச்சிறந்ததென்று கருதி இத்துறைக்கு உழைக்கவந்த இவ்வெளியீடு இக்கொள்கையை நிறைவேற்றி வருவதோடு இன்னும் பல சீர்திருத்தத் தொண்டும் புரியுமென்று நினைக்கிறேன். நிற்க, முன் நம்மவர்கள்

கூடிய தொண்ணூற்றுறார்க் கூட்டத்தில் கட்டுப்பாடு பேசி நிறை வேருதுபோன தொகைகூடக் கிடைக்காது தவிக்கின்றனர். இப் போது பெண் வைத்திருக்கும் ஒவ்வொருவரும் ஸ்ரீதனம் கை நிறை யக் கொடுக்கக் கருதும் மற்ருெரு சாராரும் பாங்கு (Bank) களில் தேடுகிருர்கள் 'யார்பேரால் அதிகமாக பணம் டிபாசிட் இருக் கிறது அவர் பையனுக்கு பெண் கொடுப்போமென்று. என்னே பரி தாபம்! இவ்வளவு குறுகிய காலத்தில் இத்தனை மலிவு!! ஏற்படக் காரணம் கலப்பு மணமும் காதல் மணமும் மறுமணமும்தான் என் ருல் மிகையாகாது. ஆகவே பால் மணம் மாரு பால்ய விவாகம் தடைப்படுதல் வேண்டும். மறுமணம் செய்துகொள்ள விரும்பு வோரை ஆதரித்தலும் வேண்டும். மறுமணஞ் செய்துகொள்ள விரும்புவோரும் வீணெண்ணங்கொண்டு வாடாமல் எக்காரி யத்திற்கும் வசையும், பாராட்டும் ஏற்படுவது நிச்சயமெனக் கருதி வெளி வந்து வெற்றி மாலை சூடிக்கொள்ள வேண்டும் என்று கேட் டுக் கொள்கிறேன்.

---

## மறு மணமா! விதவைக்கா!

L. பார்வதிதேவி, கானுடுகாத்தான்.

உயர்ந்த ஜாதி என்போரிடையேதான் மாதர்களுக்கு மறுமண உரிமை கொடுக்கப்படுவதில்லை. பெண்களை எவ்வளவுதான் அருமை யாய்ச் சீராட்டிப் பாராட்டி வளர்த்தாலும், அவர்கள் கல்வியின் அவசியத்தை நன்கு அறியாது, சுமார் 11, 12 வயதிலேயே பள்ளிப் படிப்பை நிறுத்திவிடுகிருர்கள். இன்னும் சிறிதுகாலமாவது படிக் கட்டும் என்ருல், பெண்களே! அதாவது தாய்மார்களே! அதற்குத் தடையாக நின்று "படித்து என்ன உத்தியோகத்திற்கா போகப் போகிருள்" என்று சொல்லி, கல்வி அறிவு வளர்ச்சியை வெகு சுலபமாகக் கெடுத்துவிடுகிருர்கள். இதற்குத் தந்தைமாரும் இணங்கு கின்றனர்.

தன் தாயார், பாட்டியார், பாட்டனூர் முதலிய பெரியோர்கள் உயிருடன் இருக்கையிலேயே தன் மகளுக்கு மணம் செய்து

பார்த்து மகிழ வேண்டுமென்ற ஆசையினலோ, பணப் பித்தினலோ சிறு பெண்களுக்குத் தாலிகட்டப் படுகிறது. அதோடு தங்களது ஆசை, கடமை எல்லாம் முடிந்ததென்று அந்தப் பெரியவர்களும் நினைக்கிருர்கள்.

விதவைத் தன்மையின் கொடுமையை அறிந்த எந்த இரக்க மூள்ள பெற்ருேர்களும் சற்று ஆழ்ந்து சிந்திப்பார்களாளுல் இவ் விதம் இளமை மணம் செய்ப சம்மதியார்கள். தங்கள் மனச் சாட்சிக்கு ஏற்ப ஆழ்ந்து சிந்தியாமலிருந்ததினலேயே விதவைத் தன்மை இன்னும் நிலைத்திருக்கிறது.

பெண் மக்கட்குப் பால்ய விவாகம் செய்வதிலும், மாப்பிளை யின் குணத்தையோ, திறமையையோ, உடற்கூற்றையோ, வய தையோ கவனியாமல், தங்கள் விருப்பப்படி குலங்காரணமாகவோ, பணங் காரணமாகவோ ஆசைப்பட்டு, அவன் முடவனுனுலுஞ் சரி, மூர்க்கனுனுலுஞ் சரி, முதிர்ந்தவனுனுலுஞ் சரி, விவாகங்கள் முடிக் கப்படுகின்றன. அறுபது வயதுக் கிழவன் மறுமணம், மூன்ரும் மணம் ஏன் ஆரும் மணம் கூடச் செய்துகொள்ளலாம். மனேவி உயிருடன் இருக்கையிலுங்கூட செய்துகொள்ளலாம். கிழவனின் ஆசை இளம் வயதுள்ள, அழகு நிரம்பிய பெண்களை மணக்கவேண் டும் என்பதுதான். அவன் ஆசைப்படுவதும், அவ்விதம் மணப்பதும் குற்றமெனப் பெண்மக்கள் கூடக் கருதுவதில்லை. அப்படி முறை தவருன மணங்களைத் தடைப்படுத்த முயற்சிப்பதுமில்லை. (ஏனெனில் தங்களைப் போன்ற மற்ருெரு பெண் அடையும் துன்பத்தை அறி யாதவர்களாயிருக்கிருர்கள்.)

அறியாத பருவத்தில் பெற்ருேர்களால் கல்யாணம் செய்யப் பட்ட பெண், தன் புருஷன் இறந்தபிறகு "விதவை" எனும் பட்டம் சூட்டப் பெறுகிருள். அந்தப் பட்டத்திற்கு அடையாளமாக அபலைகளாக்கி, உருவை மாற்றிவிடுகிருர்கள். கல்யாணமாகுமுன்பு சாதாரணமாகப் பெண்கள் அணியும் நகை தோடு சங்கிலி காப்பு மூக்குத்தி இதுபோன்ற மற்ற சில்லரை நகைகள் பலவாகுமன்ருே? கல்யாணம் ஆன பின்பு நகைகளில் "தாலி" என்ற சிறு வஸ்து ஒன்றுதானே கூடச் சேர்க்கப்படுகிறது. கணவனிறந்து விட்டால்

அந்த அடையாளமான தாலி என்ற ஒரு வஸ்துவுடன் ஏற்கனவே அணிந்திருந்த பல நகைகளையும், மற்ற அலங்கார உரிமைகளையும் ஒருங்கே பிடுங்கி, பெண்களை அலங்கோலப்படுத்துகிறார்கள். புருடனிறந்தால் அதன் அடையாளமான "தாலி" ஒன்றை எடுக்க வேண்டுமே தவிர மற்றவைகளையும் ஏன் பறிக்கவேண்டும்?

மறுமணம் செய்யாமலிருந்த கொடுமை ஒன்றோடு நில்லாமல் மேலும் அவலட்சணப்படுத்தி, அவர்களை உடை முதலிய சில்லரை விஷயங்களிலும் துன்புறுத்துவதினால், அவர்களின் விசாலமற்ற மனதின் தன்மையைக் காட்டுகிறார்கள். இந்தக் கொடுமைக்குப் பெண் மக்களின் ஆதரவு இந்த இருபதாம் நூற்றாண்டில் இங்கு இருந்து வருவதை நினைக்கும்போது பரிதாபமாகவேயிருக்கிறது.

ஒரு கிழவன் அவன் உயிர் உள்ளவரையிலும் எத்தனை மணம் வேண்டுமென்றாலும் செய்து கொள்ளலாம். ஓர் இளம் பெண் மறு மணத்தைப்பற்றி நினைந்தாலும் குற்றம் என்று பாவிக்கப்படுகிறது. முதலில் அந்தப் பெண்ணைப்பெற்ற தாய்மார்களே மறுமணத்திற்கு இணங்குகிறார்களில்லை. தனது மகனின் மனைவி யிறந்துவிட்டால் மறுகணமே ஏன் அம்மகனின் மனைவி நோயாக இருக்கும் பொழுதே மகனுக்கு மறுமணம் செய்ய நினைக்கிறாள், நினைத்தபடியே முடித்தும் விடுகிறாள். ஆனால் அதே தாய் தனது மற்றொரு குழந்தையாகிய பெண்ணிற்கு மறுமணம் செய்ய அஞ்சுகிறாள். ஏன்? அவள் மகள் இனிது வாழக்கூடாதென்ற எண்ணமா? அப்படி இல்லவே இல்லை. பின்னை ஏன்? உற்றார் தூற்றுவார்களே! ஊரார் பரிகசிப்பார்களே! இதுவரையில் அப்படி ஒன்று நடக்கவில்லையே! நாம் மாத்திரம் எப்படிச் செய்கிறதென்று அஞ்சுகிறார்களே தவிர வேறில்லை. சிறிது கல்வியறிவுள்ள வெளியுலகந் தெரிந்த ஆண்களே தங்கள் சொந்த (விதவை) மகளுக்கு மணமுடிக்க அஞ்சுகிறார்களென்றால் வீட்டிலேயே அடைக்கப்பெற்று, கல்வி அறிவு சிறிதுமற்று, வெளியுலகத்தைப்பற்றி ஓர் அளவும் தெரியாத பெண்மக்கள் பயப்படுவதைப்பற்றி நாம் சிந்திக்கவே வேண்டியதில்லை. "அவர்களுக்கும், அடுப்பங்கரைக்கும் சரி" என்று அடிமைப்படுத்தி தாழ்த்தப்பட்டு—போகப் பொருளாக உபயோகிக்கப்படுகிற நிலையில் கல்வி

யறிவற்ற எனது சகோதரிகள் பேரில் குறைசொல்ல இடமே இல்லை.

கணவனிறந்தாலும், பெண்ணிற்கும் இவ்விதம் மணம் செய்விக்கப்பட்ட மாப்பிள்ளைக்கும் மன ஒற்றுமை இல்லாத போதிலும். "அது அவள் தலையெழுத்து! நம்மளால் என்னசெய்ய முடியும்? அன்று எழுதினவன் அழித்தெழுதப் போவானே? எல்லாம் கடவுள் செயல். அவனன்றி ஓர் அணுவும் அசையாது" என்று பக்தா! இது பூலோகமா? கைலாசமா? என்ற மாதிரி வேதாந்தம் பேசுகிறார்கள், அறிவை விசாலப்படுத்தி, சற்று வெளியுலகைத் திரும்பிப் பார்த்து நாமும் அவ்விதமே நடப்போமானால் "அவன் செயலைப்" போக்கி, "தலையெழுத்தை" மாற்றி, அறியாமையை அகற்றி இன்பமடையலாம். மாதர்களுக்கு மறுமணஉரிமை வேண்டுமென்று நினைத்தவுடனேயே ஏதோ செய்யக்கூடாத செய்கையை செய்ப்போகிறதாகக் கருதுகிறார்கள்.

பெண்கட்கு இழைக்கும் கொடுமைகளில் இந்த விதவைத் தன்மையே தலைசிறந்தது. ஆணுக்கும், பெண்ணிற்கும் அங்க அமைப்பிலன்றி அறிவிலோ, திறமையிலோ வித்தியாசமில்லை என்ற உண்மை கண்ட இக்காலத்தில், நம் நாட்டில் இன்று பெண்களை வளர்த்திருக்கும் முறைகளினாலேயே இந்தத் தாழ்த்தப்பட்ட, தாழ்ந்த நிலையில் விதவைக் கொடுமை இருந்துவருகிறது.

மாதர்கட்கு மறுமணம் செய்தால் அவர்கள் 'கற்பு' கெட்டு விடுமென்று சொல்லப்படுகிறது. விதவைகட்கு மறுமணம் செய்யாமலிருப்பதினாலேயே அவர்கள் ஒழுக்கம் கெடுகிறதென்று நான் வற்புறுத்திக்கூறுகிறேன். விதவைத் தன்மையிலுள்ள கொடுமைகளை உணர்ந்தோர் மறுமணங் கூடாதென்று சொல்லத்துணிவார்களோ? ஒருபோதும் இல்லை. விதவைப் பெண்களுக்கிருக்கும் பலவந்தமான கொடிய பல நிபந்தனைத் தண்டனைகளை ஆண்களும் அனுபவித்தால் பெண்கள் துன்புறுவதும் ஒருவழியில் நியாயம் என்று சொல்லலாம். அதை விட்டு ஒரு பகுதிக்குமட்டும் அந்தக் கொடுமை இருக்க இடம் கொடுப்பது என்றால் அந்த நியாயம் எப்படிப்பட்டது.

முற்காலத்தில் கணவனிறந்தவுடன் மனைவியும் உடன்கட்டை

ஏறுதல் என்ற வழக்கமிருந்து வந்தது. அது மிகவும் கொடிது என்றுகண்ட பெரியார்கள் அதைச் சட்ட பூர்வமாக அரசாங்கத்தின் உதவி கொண்டு தடுத்து நிறுத்தினார்கள். ஆனால், உடன் கட்டை ஏறுவதைவிட மகாபயங்கரமான உயிரோடு தோலுரிப்பது போன்ற விதவைவேடம் மிகக்கொடிதானதாகும். உடன் கட்டை ஏறுவதினால் துன்பம் ஒரேகாலத்தில் தொலைந்து விடுகிறது. ஆனால் விதவைத்தன்மையோ நாளுக்குநாள் உயிரை சிறுகச் சிறுகப் பருகும்—சீர்கெட்டு மனம் புழுங்கும், சகிக்கொணுங் கொடுமையாகும்.

"பால்ய விதவைகளைக் கட்டாயப்படுத்தி வைத்திருப்பது போன்ற இயற்கைக்கு விரோதமான கொடுமை உலகில் வேறொன்றுமில்லை என்பது எனது திடமான நம்பிக்கை. விதவைத் தன்மை என்பது எவ்விதத்திலும் தர்மமாகாது. பலாத்காரத்தினால் அநுஷ்டிக்கச்செய்யும் எவ்விதச்செயலும் அறமாகாது. பதினைந்து வயதுள்ள ஒரு பால்ய விதவை தானாகவே விதவை வாழ்வைக் கொண்டிருக்கிறாள் என்று சொல்வது அவ்விதம் கூறுபவரின் கொடூர சொபாவத்தையும், அறியாமையையுமே விளக்குவதாகிறது" என்று பெரியார் காந்திஅவர்கள் கூறியிருப்பதை ஆழ்ந்து சிந்தித்துப் பார்ப்பீர்களாக.

இன்று சீர்திருத்தக் காரர்கள் என்று சொல்வோர்கள் அரசியல் சீர்திருத்தத் துறையிலும், சமூக சீர்திருத்தத்துறையிலும், நிற்கிறார்களேயன்றி மனித வகுப்பில் ஒருபக்கம் சமபங்கினரான பெண்கள், கல்வி வளர்ச்சியிலும், சுதந்தரத்திலும் பங்குபெறாமல் அழிந்து வருவதை இன்னும் சரிவர அறியவில்லை என்றுதான் சொல்லவேண்டும்.

அறிவு மிகுந்து ஆராய்ச்சி வளர்ந்திருக்கும் இந்த 20-ம் நூற்றாண்டில் மாதர்கட்கு மறுமணம் செய்வது என்ற விஷயம் நமது சமூகத்தில் இன்னும் பெரிதாக இருப்பதைப் பார்க்கும்பொழுது நமது சமூகம் மற்ற துறைகளில் எவ்வளவு பின்னணியில் நிற்கிறதென்பதையே காட்டுகிறது.

இதுவரை நமது "குமர"னில் எத்தனையோ பெரியோரும், இளைஞரும் "மாதர் மறுமண சகாய சங்க"த்தை உத்ஸாகப்படுத்தி

மறுமணத்தை ஆதரிப்பதாய்க் கையொப்பமிட்டிருக்கிறார்கள். அப்படிக் கையெழுத்திட்டோர் வீடுகளில் விவாகம் செய்யத்தகுந்த விதவைகள் இல்லாமலா இருப்பார்கள்? அவர்கள் ஆதரித்தால் மட்டும் போதாது. அவர்கள் ஆதரித்ததை நடைமுறையில் செய்து காண்பித்தல்தான் சிறப்புடையது என்பதை விண்ணப்பம் செய்துகொள்கிறேன்.

விதவா விவாக விஷயத்தில் முன் அசிரத்தையாக இருந்த நமது சமூகம் இப்பொழுது அதை ஆதரிக்கும் அளவுக்கு வந்ததே நல்ல குறி. இதற்காக "மாதர் மறுமண சகாய சங்கம்" அதைவிட நல்ல குறியன்றோ?

விதவையாக்கப்பட்டு, பல உரிமைகள் பறிக்கப்பட்டு, மனம் புழுங்கிய அபலைகளின் மனதிலெழுந்த எண்ணங்கள் உருப்பெற்று இரக்கமுள்ள ஆண்மக்களின் மனதைக் கவர்ந்துவிட்டது. இவ்வெண்ணங்கள் செயலுக்கு வர இன்னும் நீண்டகாலம் செல்லாதென நம்ப இடந்தருகிறதன்றோ?

மறுமணமா! விதவைக்கா! என்று ஆச்சரியத்தோடு, பயங்கரத் தொனியில் கேள்வி கேட்கப்பட்டது மாறி, சர்வசாதாரணமாக நூலிழந்தவர்கட்கு மறு கல்யாணம் செய்யவேண்டுமெனப் பேசுகிறார்களாம், நடந்தால் நல்லதுதான், யார்முதலில் செய்வார்கள் என்றே இன்று பேசப்படுகிறது. அது நடந்துவிட்டது என்று பேசுங்காலம் தூரத்தில் இல்லையென்று மீண்டும் வற்புறுத்துகிறேன்.

இந்த (மறுமணம்) பூனைக்கு யார் முதலில் மணிகட்டுவது என்பதுதான் தற்பொழுதுள்ள பிரச்னை. சீர் திருத்தம் பூனையன்று. அது யார்தடுத்தாலும் அலட்சியப்படுத்தி கெம்பீரமாக மதயானை போன்று காலஅளவில் வந்துகொண்டிருக்கும் பெருமையுடைய யானையாகும். அதனைப் (சீர்திருத்தத்தை) போற்றி விதவைமணம் செய்துகொண்டு முதல் முதலில் சீர்திருத்தயானையை வரவேற்கும் பெருமை யாருக்கு (?) நேரப் போகிறதென்பதைச் சிறிது பொறுத்திருந்து பார்ப்போம்.

அடிமைத்தனம் ஒழியவேண்டுமானால்--நமக்கு சுதந்திரதாகமிருந்தால், பெண்ணுலகை அடிமையாகக்கருதி நடத்தும் அசட்டுத்

தன்மையும், அகம்பாவமும் ஒழிந்தாலன்றி அதாவது பெண்மக்கட்கு சரிநிகர்சமானம் அளித்தாலன்றி நமக்கு விடுதலையோ—வேறு இன்பங்களோ அடையவழியில்லை என்று அறிவாளிகள் கூறுவதை இங்கு குறிப்பிடவிரும்புகிறேன்.

மாதர்களின் துன்பத்தைத்துடைக்க முன்வந்த "மாதர் மறுமணசகாய சங்க"த்திற்கு தனவணிக மாபிஹுதித்த பெண்களின் சார்பாக நன்றிகூறி இதனை முடிக்கிறேன்.

---

## அரிவையர் ஆநந்தம்

சாமி சிதம்பரனுர்

(இராகம்—வாளி. தாளம்—ஆதி)

பல்லவி

ஆடுவோமே வெற்றி பாடுவோமே—நல்ல
ஆநந்த சுதந்தர வாழ்வை யடைந்தே (ஆடுவோ)

சரணங்கள்

1. ஆடவர்க்கு நாம் இளைப்போம்
அல்ல வென்றே—பெரும்
ஆண்மையுடன் கூறிநின்று
பாடு வோமே
கோடிபொன்கள் வந்து நம்மைக்
கூடி னுலும்—இனி
கொஞ்சமேனும் பஞ்சையென
வாழ மாட்டோம் (ஆடுவோமே)

2. இனிஅடிமை செய்தவர் சொல்
நம்ப மாட்டோம்—முன்பு

ஏய்த்த கள்ளர் வஞ்சனைகள்
கண்டு கொண்டோம்
கனிந்தமொழி பேசி நம்மை
வீட்டின் உள்ளே—இரு
கால் மிருகம் போலடைத்தோர்
எண்ணம் அழிப்போம் (ஆடுவோமே)

3. எட்டுத்திக்கும் சென்றுவெற்றி
கூறு வோமே—உடன்
இந்நிலத்தில் மாதர் ஒன்று
சேரு வோமே
தட்டுக்கெட்ட சாதிமத
பேதம் எல்லாம்—இந்த
தாரணியில் மாதருக்குள்
இல்லை யென்போம் (ஆடுவோமே)

4. கரும்புகொண்டு யானைகட்டும்
செய்கை போலே—அரும்
கற்புகாதல் அன்பெனவே
வஞ்சம் பேசி
பெருந்துயரம் செய்துரிமை
கொன்று போட்டார்—இந்தப்
பேச்சைநம்பி இனிமோசம்
போக மாட்டோம் (ஆடுவோமே)

5 அச்ச மடம் நாணம் பயிர்ப்
பென்ப வெல்லாம்—நம்மை
அடக்கிவைக்கச் செய்த வஞ்ச
விலங்கு காணீர்
நிச்சயமே சுதந்தர
வாழ்வை நாடின்—இந்த
நீதியற்ற கட்டையெலாம்
வெட்டி எறிவீர் (ஆடுவோமே)

6 தேசவளம் கேணியுறை
தேரை தானும்—கண்டு
தெளிவதில்லை அதுபோல
வீட்டின் உள்ளே
பேசுதற்கும் துணையின்றித்
தின்று வளர்வோர்—யாரும்
பேதையராய் அச்சங்கொண்டு
நாணி வசிப்பார் (ஆடுவோமே)

7. இவ்விதத்தில் உண்மை யென்ன
என்று பார்த்தால்—மக்கள்
யாவருக்கும் பேதை குணம்
நான்கும் இயல்பே
எவ்விதத்தில் மாதர் மட்டும்
பேதை யாவார்—இனி
இம்மொழிகள் கூற வேண்டாம்
என்று கனைப்போம். (ஆடுவோமே)

8. கட்டும் அணை பேர்த்தெழுந்த
வெள்ளம் போலே—சற்றும்
கலக்கமின்றி நாம் உரிமை
நாதஞ் செய்வோம்
கெட்டவினை நச்சுமரம்
வெட்டி வீழ்ப்போம்—இன்னும்
கிழெனவே நம்மை வைவார்
தம்மை மதி யோம். (ஆடுவோமே)



# விதவா விவாகம் நடந்தால்—?

(குட்டிச்சாத்தன் A B C D E F etc.)

கணவனிழந்த மாதர்கட்கு மறுபடியும் விவாகம் செய்ய வேண்டும் என்ற விவகாரம் எழுந்துவிட்டது. எப்படி எழுந்தது? ஏன் எழுந்தது? என்று கேட்பதைக் காட்டிலும், இந்தக் கல்யாணம் நடந்துவிட்டது என்று வைத்துக்கொள்வோம். ஐயா! கல்யாணம் முதல் முதலில் ஒன்று நடந்தது; இரண்டு நடந்தது; வைதிகர் எல்லோரும் திட்டுகிறார்கள். அப்பால் சுவாமி கிருபையாலோ, சீர்திருத்தக்காரர் கிருபையாலோ பத்து நடந்தது. நூறு நடந்தது. அப்பால் யார் திட்டப்போகிறார்கள். இருக்கிற விதவைகள் யாவரும் கல்யாணம் செய்து கொண்டு விட்டார்களென்று வைத்துக் கொள்வோம். அப்படி நடந்தால் யார் யார் சந்தோஷப்படக்கூடும்? யார் யார் அழுது வடிவார்கள்? இதைப்பற்றி ஆராய்ச்சி செய்யலாம். யாரைக்கேட்டால் என்ன சொல்வார் என்பதுதான் சுவாரஸ்யமான சங்கதி?

தாத்தா:—பழய வழக்கமெல்லாம் போச்சு; தொலைத்து விட்டான்கள். இனியென்ன இருக்கிறது. கலி முற்றிப் போச்சு.

பாட்டி:—அட பாவிகளா! இதுதானிருந்தது. இந்தக்கட்டையும் தொலைத்தீர்களா? ஆ! கொடுமை!

வைதீகர்:—நம்முடைய கட்டிடம் இருக்கிறபோதே அஸ்திவாரத்தைப் பிடுங்கிவிட்டார்களே! இனி சடங்கேது? அரசாணிக்கா லேது? சீமந்தம் நாமகரணம் எல்லாம் போச்சே. விதவை பெற்ற பிள்ளை இதெல்லாமா செய்யப் போகிறார்கள். ஆஹா மண் விழுந்தது!

ஒப்பாரி ரசிகர்:— இனி யாரிடத்தில் ஒப்பாரி கேட்கிறது. யார் சாகக் கொடுத்தாலும் அழுகமாட்டார்கள் போலிருக்கிறது. ஆம்பிளை மாதிரி பொம்பிளையும் இரண்டாந்தாரம் மூன்றாந்தாரம்

செய்துகொண்டால் ஒப்பாரி வைப்பாளா? போச்சே, இனி எப்படிப் பொழுதைப் போக்குகிறது?

மலை விழுங்கி:—போச்சு; எத்தனை விதவை வீட்டுச் சீதனப் பணம் ஏனென்று கேளாமல் கிடக்கும்? வட்டி ஏது? முதலேது? போச்சு. பணம் சேர இனிமேல் வழியில்லை. தொலைத்து விட்டான்கள்.

பெண்ணுக்குப் பணம் வாங்குந்தனவணிகர்:—என் வாயில் தான் மண்ணைப் போட்டான்கள். கலப்பு மணம் கலப்பு மணமென்று கண்டவளை யெல்லாம் கட்டி 35000 இருந்ததை 10000-க்குக் கீழே கொண்டு வந்தான்கள். தொலையட்டு மென்று இருந்தேன். போச்சே. இனி செல்லாக் காசுகூடக் கிடைக்காதே. பழய கூட்டத்துக்குக் கட்டுப்படாமல் போனேமே போனேமே! அதிலாவது 13000 வாங்கச் சொன்னர்களே! அதுவும் போச்சே போச்சே.

காபி கிளப் புரோப்ரைட்டர்:—அட சனியன்களா! எல்லோரும கல்யாணம் கட்டிக் கொண்டார்கள்? இனி யார் கிளப்பில் மாவறைக்கிறது? விழுந்ததா என் வாயிலே மண். வேலைக்காரனை வைத்து மாவறைத்துக் கட்டுமா? மாவறைக்கிற கவலையில்லாமல் இத்தனை நாளாக இருந்தேனே?

அம்பட்டன்:— விதவைகள் இனிக்கிடையாதா? எங்கள் வரும்படியில் ஒருபாகம் தொலைந்துபோய் விட்டது. பிராமண வீட்டு விதவைகள் லெட்சக்கணக்காக எங்களிடம் சவரம்செய்து கொண்டார்களே. இனியேது! போச்சு!

பேர்வழி:— ஆஹா! நமக்கு கல்யாணத்துக்கும் வழியில்லை. அங்கே இங்கே போனல் சிக்குவரும்: இது எவ்வளவு சௌகர்யமாக இருந்தது. காலணு செலவில்லை. ஒருஇடத்தில் இரண்டொன்று சிலவானுலும் மற்ருேர் இடத்தில் வரும்படியோடு நடந்தது. தொலைத்துவிட்டார்கள். நம்மள் பிழைப்பு அந்தரமாகி விட்டதே!

பரதேசி:— கல்யாணம் செய்துகொண்டிருக்கிற பெண்கள் புருஷனுக்கும் பிள்ளைகளுக்கும் பார்த்தழுகச் சரியாகிவிடும்: விதவைகள்தானே நம்மைக்காப்பாற்றினர்கள். ஆளைக்கண்டால்

போதுமே! என்னபக்தி! எவ்வளவு உபசாரம்! வற்றக்காய்ச்சிய பால்! பலகாரம்! சாப்பாடு! ஆஹா! இனியென்ன செய்கிறது! எல்லா விதவைக்கும் புருஷன் வந்துவிட்டானே. இனி அங்கே போகமுடியுமா? போனால் உதையில்லாமல் திரும்பமுடியுமா! இப்படிவருமென்று யாருக்குத்தெரியும்? பரமசிவனே எங்களைக் கைவிட்டு விட்டீரே?

தீர்த்தக்கரைப் பார்ப்பான்:— அடே ராமு! தீர்த்தக்கரை ஒழிந்ததடா! இனியார் வரப்போகிறார்? வெள்ளைப்புடவை ஜனங்கள் பட்டுப்புடவையாகி விட்டதாமடா! விதவைகட்கு வேறுகதியேது? தீர்த்தகட்டமும் கோவிலுந்தானடா புகலிடம்: இவர்கள் போனால் ஏதடா நமக்குமகிமை? நம்வாயில்தான் சரியான மண்விழுந்தது!

டாக்டர்:— நல்லவரும்படி போச்சு. ஏதாவது எத்துக் குத்தாக சமயம் வாய்த்தால் ஒருவருஷத்து வரும்படி ஒருநாளில் கிடைத்ததே! சான்ஸ் இனிமேல் ஏது? இனி டாக்டர் படிப்பில் என்ன இருக்கிறது. ஒன்றும் பிரயோசனமில்லை. கர்ப்பமெல்லாம் பிள்ளைதான். பிள்ளையெல்லாம் சுகப்பிரசவம்! பிழைப்புப் போச்சு!

போலீஸ்காரன்:— நல்லகேஸ்களுக்கு இனிமேல் சான்ஸ் இல்லை. குப்பைத்தொட்டியில் பிள்ளைகிடந்து கீ என்றழுவதும் அதைக்கண்டு பிடிப்பதும் கேஸ் எடுப்பதும் நடத்துவதும் ஒரு ஷோக்தானே! அதில் எத்தனைமாதிரி சந்தர்ப்பம். எவ்வளவு துப்பு தெரியும்? தொலைந்தது. தொலைந்தது. இனிகேஸ்களில் ரசமில்லை.

ஜப்பான் மாட்டுக்கச்சை வியாபாரி:—- இரண்டரைக்கோடி விதவையும் எவ்வளவு வெள்ளைச்சீலை கட்டினார்கள்? தொலைந்ததே! ஒருத்திக்கு ஒருவருஷத்திற்கு ஒரு கச்சைவீதம் வைத்தாலும் வருஷத்திலே 2½ கோடி கச்சைவிற்குமே. விழுந்ததடா ஒரேயடியாக வாயிலேமண். கோவிந்தா கோவிந்தா! வெள்ளைக் கச்சைக்குக் கோவிந்தா.

விதவைகட்கெல்லாம் கல்யாணம் ஆகப்போகிறதென்ற செய்தியைக் கேட்டால் யார் யார் சந்தோஷப்படுவார்கள் தெரியுமா?

ஜவுளிக்கடைகாரர்:— நல்ல வேளை. பட்டுப்புடவைக்குக்

கிருக்கி வந்துவிட்டது. ஸ்டாக் எல்லாம் தட்டிவிடலாம். ரவிக் கைத்துணி பீஸ் ஏராளமாக விற்கும்! வந்தது நமக்கு அதிஷ்டம்.

ஆசாரி:— சரி சரி. நகைகளுக்கு ஆர்டர் ஒருமூச்சு வந்து விழப்போகிறது. அடே வேலையில்லாத ஆசாரியெல்லாம் கூப்பிடு. செய்துகொடுக்க முடியாதபடி ஆர்டர் வரப்போகிறது.

பூக்கடைக்காரன்:—பூவுக்குக் கிருக்கியில்லாமல் விழுந்துகிடந்தது. இனிமேல்தான் சரியான மௌஸ் வரப்போகிறது. பக்கத்து இடத்தையும் வாங்கிப் பூஞ்செடி போடவேண்டும். நல்ல விலை கிடைக்கும்.

புரோகிதன்:— விதவாவிவாகம் இனிமேல் தடைப்படாது போலிருக்கிறதே. எப்படியாவது இதிலும் புகுந்துகொள்ளவேண்டும். இதில் ஓமம் வளர்க்க வராதா? நெருப்பை மூட்டி நெய்யைவிட்டால் எரிகிறது. டபிள் தக்ஷிணை தட்டிவிடலாம். இருக்கிறது. நமக்கும் ஒரு அதிஷ்டம்.

மேளகாரன்:—நாள்தோறும் கல்யாணந்தான். நம்மைவிட்டா கல்யாணம் போகப்போகிறது. ஒரு தட்டு தட்டலாம். நல்ல பணம் கிடைக்கப் போகிறது. அடே பயலே சித்தப்பாவைக் கூப்பிடடா! வீட்டிலே யிருக்கிற குழா யெல்லாம் கொண்டுவாடா! தவில் தோலைப்பாரடா! எலிகிலி கடித்திருக்கிறதா? எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்திவை. ஆளுக்கு ஒன்ருகத் எடுத்துக்கொண்டு போகலாம்.

வளையல் வியாபாரி:—விதவை யெல்லாம் வீணுகக்கிடந்ததால் தானையா வளையல் வியாபாரம் தொலைந்து போய்விட்டது. இனி வளையலுக்கு நல்ல பிரியம் ஏற்படக்கூடும். நம்முடைய கலி நீங்கியது.

வேலையாட்கள்:—வீடுதோறும் விதவைகளிருந்து வேலையாள் தேவையைத் தொலைத்துவிட்டார்கள். ஒரு வீட்டில் ஒரு விதவையிருந்தால் மூன்று ஆள் வேலையைப் பார்த்துவிடுவாள். இனி முடிந்தது. விதவை யெல்லாம் கலியாணம் செய்து கொண்டுவிட்டால் இருந்த வீட்டுக்கு வேலைஆள் தேவைப்படும். தவிர விதவைக்குப் புருஷனிருப்பான்; பிள்ளை பிறக்கும். அங்கேயும் வேலையாள்

தேவை. இரண்டு வழியாலும் வேலை கிடைக்கும். வேலையில்லா மல் தவிக்கிற ஜனங்கட்குப் பிழைப்புக்கு வழி பிறந்துவிட்டது.

காரியக்கண்ணன்:—இனி வேலை ஒழுங்காக நடக்குமையா! எந்தப்பக்கம் திரும்பினும் தோசித்தனமாக விதவைகள் எதிர்ப் பட்டுக்கொண்டே யிருந்தார்கள். ஏதாவது காரியமாக வீட்டை விட்டு வெளிப்பட்டால் எதிரே ஒருத்தி வெள்ளைத் துணியைக்கட்டிக்கொண்டு வருவாள். இனித்தொலைந்தது இந்தத்தொல்லை. விதவை யெதிரே வருகிற சகுனத்தடை இனி ஏற்படாது. குறிப்பிட்டபடி வேலையாவது பார்க்கலாம். நல்லதுதான். இந்த நடவடிக்கை நடக் கட்டும். நன்றுகநடக்கட்டும். நமக்கென்ன?

---

## வீரப்பெண்ணின் சபதம்

விதவாவிவாக வீரப்பெண்ணின் சரித்திரமான "அமிர்தவல்லி மாலை" யில் பால்யப் பெண்ணன அமிர்தவல்லியை விதவையாக் கும் போது அவளிட்ட சபதம் பின்வருமாறு:—

அந்தப் பெருமாட்டி அழகான பாஞ்சாலி
வீரப் பெருமாட்டி மேன்மையுள்ள பாஞ்சாலி
பிறந்த திருநாட்டில் பெண்ணும் பிறக்கலையோ
மாதேவி தன்நாட்டில் வந்து பிறந்திருந்தேன்
என்னுலே இக்கொடுமை இருக்க விடுவேனே
பெண்ணுக்கு வாழ்வு பேணு தழிக்கலுற்ருர்
ஆணுக் கொருநீதி பெண்ணுங் கொருநீதி
ஆகாத நீதியெல்லாம் ஆருக்குச் சொல்லுகிருர்
துரோபதை நாச்சியார் சொன்ன சபதம் போல்
வீம னெடுமன்னன் விளம்பும் விதியது போல்
இந்தக் கொடுமை இனிநடக்க வொட்டாமல்
கொடுமை யொழியுமட்டும் கொள்வேன் சபதமென்ருள்
ஒருவேளைச் சோறும் உண்ண மறுத்துவிட்டாள்
நாய்க்குப்போ டும்சோறு நானுண்ப தில்லையென்ருள்
ஆடை பிடுங்கி அணியும் நகைபிடுங்கி

கதவை யடைத்துக் கட்டைபோ லேகிடந்தி
வாராத கண்ணீரை வருந்தி வாவழைத்துப்
பொய்யழுகை யழுது பொல்லாத் திருடரைப்போல்
காவலுக் குள்ளடங்கிக் கடையழியப் போவதில்லை
இந்தக் கதியில் எனக்கென்ன சாப்பாடு
வழக்கந் தொலைத்து மறுமணமும் தான்செய்து
சந்தோஷங் கொண்டாடி தாலி யெடுத்துக்கட்டி
பட்டாடை யுடுத்திப் பாரில் நகைபோட்டு
முன்மா திரிசெய்து முடிக்குநாள் ஆகுமட்டும்
தண்ணீர் தவிர சாப்பிடேன் ஒன்று மென்றாள்
செத்தாலும் சாவதல்லால் தீண்டேன் ஒருபருக்கை
சபதம் முடியுமட்டும் சாப்பிடேன் சாதமினி
என்று பெருஞ்சபதம் இட்டாளே மாதரசி

இதில் எவ்வளவு நியாயமிருக்கிறது பாருங்கள்! பெண்மக்களே! வீரவாழ்க்கை வாழ்வதைவிட்டுச் சோர வாழ்க்கையை ஏன் விரும்ப வேண்டும்? உண்மையில் உங்கட்கு பட்டாடைகளில் விருப்பமில்லையா? நகைகளில் விருப்பமில்லையா? நல்ல சாப்பாட்டில் விருப்பமில்லையா? பூச்சூடவும் தலைபின்னிக் கொள்ளவும் ஆசையில்லையா? ஆனந்தமாக அலங்காரம் செய்துகொண்டு கல்யாண வீடுகட்குச் செல்ல எண்ணமில்லையா? மற்ற எந்த இன்பத்தில் உங்கள் மனம் செல்லாமலிருக்கிறது. உண்மையிலேயே இவையெல்லாம் வேண்டாமென்றால் விட்டு விடுங்கள். ஆசையிருந்தால் ஏன் மற்றவருக்குப் பயந்து அடங்கிக் கிடக்கிறீர்கள்! மெதுவாக இரகஸ்யமாக ஏன் விரும்ப வேண்டும். ராஜாங்கமாக வீரத்துடன் மறுமணம் செய்து கொள்ள முன்னிற்க வேண்டாமா? பயங்காளித்தனமாகத் திருட்டுத்தனமாக—ஏன் இன்பமனுபவிக்க வேண்டும்? வெட்டொன்று துண்டிரெண்டு என்று எல்லாவற்றையும் வெறுத்துவிட்டு மனமாரத் துறவு பூண வேண்டும். இல்லாவிட்டால் துணிந்து கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். இரண்டுமில்லாமல் திரிசங்கு சொர்க்கமாக இடையில் கிடந்து சீரழிவானேன்? சீரழிவென்றால் கொஞ்சமா? பரிதாபம்! சீரழிந்தாலும் சுகம் கிடைக்கிறதா? நாற்றப்பேரும் நாறிப்போன பொய்வாழ்வுந் தானே? எங்கும் சீ சீ என்று திரிவதில் என்ன சுகமிருக்கிறது?

# விடுதலை! விதவையர்க்கு விடுதலை!

புதுவை R. S. ராஜலக்ஷிமி.

காந்திரிஷி—என்ற மெட்டு

இராகம்—இந்துஸ்தான்—தாளம் ஆதி

பல்லவி.

வேண்டுவோமே நாட்டில்
விதவை மறு மணத்தை (வே)

அநுபல்லவி

ஆண்டாண்டாய் அவர்கள் துயர் அந்தோ புகலொணுது
அறியாத வயதில்மணம் செய்ததாலே வந்த தீது
ஈண்டுமிதற் கோர்வழி ஏற்பட்டதுவே தப்பாது
இனிமேல் நாட்டில் விதவை ஏக்கமே தலைகாட் டாது
எங்கிலுமே புகழ்
தங்கும் மறு மணமே (எ)

(தொகையறு)

அறுபது வயதான கிழவனும் யவ்வன
அணங்கின் மீதாசை கொண்டு
பரிவுடன் திருமணம் புரிகின்ற வேடிக்கை
பார்த்ததுண்டு நாம் இன்றும்

பாட்டு

அன்னாளில் ராஜாராம் மோகனராய் சட்டமதால்
அரிவையர் உடன்கட்டை ஏறுவதொ ழிந்ததினுல்
இன்னாளில் விதவைகளாய் எண்ணிறந்தோ ரிருப்பதினுல்
எல்லோரும் முன்வந்தால் இன்றெழியும் துயர்தானுய்
இன்பமாமே கொள்வீர்
ஏற்ற மறுமணமே (இ)

(தொகையறு)

வீட்டிலே சிறைவைத்து விதவையர்கள் தங்களை
வெகு துன்பம் செய்யலாமோ

நாட்டிலுள்ளோர் போல நலமொன்று மில்லாமல்
நாளும் மனம் நையல் ஆமோ

பாட்டு

கள்ளத்தனமாகக் கூடி கருவழித்திடல் ஞாயமாமோ
காதலுறும் காளையர்க்கிக் கருத்தில்லாமல் போனதேனோ
பள்ளம் ஏரி கிணறிலே பெற்ற பாலர்களை எறியலாமோ
பாதகம் இருவருக்கும் பங்கில்லாமல் விடுவதாமோ
பாங்குறுமே யாரும்
பற்றுவீர் மறுமணமே (பா)

(தொகையறு)

பருவகாலத்தில் பண்பாய் மணஞ் செய்தாலிப்
பரிதாபம் நேர்ந்திடாது
உரிமையுள பெற்றோர்கள் ஊன்றியிதை யோசித்தால்
உணர்வார்கள் தங்கள்தீது

பாட்டு

கானமயிலோன் அருளால் காரைக்குடி தனில் விளங்கும்
கண்ணிய மிகும் மாதர் மறுமண சகாயசங்கம்
ஞாணயமாய் விதவையரின் நலங்கருதி யுழைத்திலங்கும்
நாடியதன் மூலமாக நங்கையர்கள் துயர்நீங்கும்
நானிலமே மகிழ்
நாடும்மறு மணமே



# இரண்டு முட்டுக்கட்டை.




விதவைகள் கணவனில்லாமல் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டுக் கிடக்கிறார்கள். ஒரு கூட்டம் வாலிபர்க்குப் பெண்ணில்லை. பெண்ணுக்குக் கொடுக்கப் பணமுமில்லை. விதவையைக் கட்டிக்கொள்ளலாமென்றால் மதச்சுவர் தடுக்கிறது.

சில இடத்தில் பெண் சவுகத்தினால் மாப்பிள்ளைகள் வரதக்ஷிணை கேட்கிறார்கள். சில இடத்தில் பெண் கிறாக்கியில் பெண்ணுக்குப் பணங் கேட்கின்றனர். இரண்டையும் ஒழிக்க ஜாதிச்சுவர் தடுக்கிறது.

# கிழவன் கொடுத்த மிட்டாய்.

( ஒரு சிறுகதை. )

("விதவபந்து" எனும் ஹிந்தி பத்திரிகையில், கிர்தாரிலால் குப்தா B. A. L. L. B. எழுதியது.)

தசரா நாள்களில் நான் லூடியானுவுக்குப் போயிருந்தேன். திருவிழாப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டதும், நான் தனிமையாகவே ராமலீலா நடக்கும் பக்கமாக விரைந்து சென்று கொண்டிருந்தேன். அன்று தசராவின் கடைசி நாள். எங்கும் பெரும் கோலாகலமாகக் காணப்பட்டது. கடைகளெல்லாம் நன்ருய் அலங்கரிக்கப்பட்டிருந்தன. ஊர் பூரு திரண்டு வந்து விட்டதோ என்று ஐயுறும்படி அவ்வளவு கூட்டம் அங்கு நின்றுகொண்டிருந்தது.

இந்தக் கூட்டத்திற்கு மத்தியில் ஓர் பிரகாசம் தோன்றியது. இந்த பகல் நேரத்தில் இவ்வளவு பிரகாசிக்கக் கூடிய வஸ்து என்ன வாயிருக்கலாமென்று எண்ணி ஆச்சரியமடைந்தேன். அந்த ஜோதியானது என்னை தன்பக்கம் இழுத்துச் சென்றது. என் கால்கள் என் அனுமதியின்றி அந்த ஜோதியின் இருப்பிடத்திற்கு விரைந்து சென்றன. அங்கே ஓர் இளமங்கை. தெய்வலோகத்து மாதர்களும் பார்த்து வெட்கப்படத் தகுந்த அவ்வளவு அழகு பொருந்திய ஓர் யௌவன ஸ்திரீ உட்கார்ந்திருப்பதை என் கண்கள் கண்டன. கஸ்தூரியைப்போல் அவள் சவுந்தரியத்தின் பிரகாசமானது எல்லா வாயு மண்டலத்திலும் பரவிக்கொண்டிருந்தது. நான் அவளைப் பார்த்ததும், அப்படியே அசைவற்று நின்று விட்டேன். என்னுல் என் கண்களை நம்ப முடியவில்லை. நான் கனவுதான் கண்டுகொண்டிருக்கிறேனே என்ற சந்தேகம் உண்டாகத் தொடங்கியது.

கார்மேகத்தைப்போன்று கன்னங்கறேலென முழுங்கால்வரை தொங்கிக்கொண்டிருந்த அவளது கூந்தலும், பெரிய பெரிய கண்களும், உயர்ந்த புஜங்களும், அழகு ஜொலித்துக் கொண்டிருந்த அவளது முகமும் பார்ப்போர் மனதை அரைக்ஷணத்தில் கொள்ளை கொள்ளக் கூடியனவாயிருந்தன. அவள் முகத்தில் கபடமின்மை

நன்றுய்ப் பிரகாசித்தது. அதைப் பார்த்ததும் இந்த உலகத்திற்கு அன்பின்—பக்தியின் மார்க்கத்தை போதிக்க நேராக கடவுளிடத்திலிருந்தே வந்திருப்பவள் போல் தோன்றியது. அந்த மாதரசியின் பக்கத்தில் ஓர் கிழவன் நின்றுகொண்டிருந்தான். அவன் வேலைக்காரனுயிருக்கலாமென்று எண்ணினேன். அந்த மோகினியின் உருவத்தைப் பார்த்தது முதல் என் மனதில் பலவிதமான எண்ணங்கள் தோன்றிக்கொண்டிருந்தன.

ஆகா! இந்த சுந்தரியின் கழுத்தில் எந்த பாக்கியசாலி மாலை அணியப் போகிறுனே! இவளை மணக்கக் கொடுத்துவைப்பவன் ஓர் பெரிய பாக்கியசாலிதான்! இதில் எனக்கும் ஆசை தோன்ருமலிருக்கவில்லை. ஆனுல் அது எப்படி முடியும்! எனக்கோர் கலியாணம் ஆகிவிட்டது. ஆகையால் அந்த எண்ணத்தை விட்டுவிட எண்ணினேன். ஆனுல் இவளுடன் எனக்கு ஏதாவதொரு தொடர்பு எவ்விதத்திலாவது ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்று என் மனம் விரும்பியது. தமையனுகவாவது சீடன் நண்பன் அல்லது எவ்விதமானுலும் சரி அவளுடன் எனக்குக் கட்டாயம் தொடர்பு ஏற்படவேண்டும்.

அவள்பேரில் என் மனதில் உண்மையான ஓர் பற்றுதல் ஏற்பட்டுவிட்டது. அவளுக்கு ஓர் யோக்கியனை வரன் கிடைக்க வேண்டுமென்று நான் விரும்பினேன். இவ்விதமான எண்ணங்களில் லயித்திருந்த என்பார்வை திடீரென்று அவள் கழுத்திலணிந்திருந்த திருமங்கிலியத்தில் விழுந்தது. ஆம் அவள் ஒருவனுக்கு சொந்தமாகிவிட்டாள்.

அவளை இல்லறத்துணைவியாக அடைந்த பாக்கியசாலியைப்பார்க்கவும் அவன் எப்பேர்ப்பட்டவன் என்பதை அறியவும் என்மனம் துடிதுடித்துக் கொண்டிருந்தது. அவளது தளிர்போன்ற கையில் ஓர் சில்க் கைக்குட்டை இருந்தது. அவள் அதை அடிக்கடி தன் கண்களில் வைத்துக் கொண்டிருந்தாள். ஆகா இந்தக் கைக்குட்டை எவ்வளவு பாக்கியம்செய்தது! ஆனுல் அவள்ஏன் அப்படிச் செய்து கொண்டிருக்கிறுள் என்பது எனக்கு விளங்கவில்லை. கவனமாய்ப் பார்த்தபின் அவள் தன் கண்ணை கைக்குட்டையால் துடைத்துக் கொண்டிருக்கிறுள் என்று தெரிந்தது. அவள் பெரும் கவலையால்

பிடிக்கப்பட்டிருந்தாள். அவள் முகத்தில் சந்தோஷக்குறி இல்லை. ஆனால் அளவுகடந்து சகிக்க முடியாத பெருந்துக்கம். அந்த யௌவன சுந்தரி துக்கமென்னும் சமுத்திரத்தில் மூழ்கிக்கொண்டிருந்தாள். அதேசமயத்தில் பக்கத்தில் நின்று கொண்டிருந்த கிழவன் கொஞ்சம் மிட்டாயும் பழங்களும் வாங்கி அவளுக்கு சாப்பிடக் கொடுத்தான். இதைப்பார்த்ததும் அந்தமடந்தையின் முகம் கோபத்தால் ஜொலித்தது. கிழவன் கையிலிருந்தவைகளைப் பிடுங்கித் தரையில் எறிந்துவிட்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள். அவள் அதுவரையிலும் தன் துக்கத்தை பலவந்தமாக அடக்கிக் கொண்டிருந்தாள், ஆனால் இப்பொழுது அவளால் பொறுக்கமுடியாமல் போய்விட்டது. அவள் அதுவரையிலும் காப்பாற்றி வைத்திருந்த பொறுமையை இழந்துவிட்டாள். அவள் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகவடியத் தொடங்கியது. கிழவன் அவளை சாந்தப்படுத்த முயற்சித்தான். ஆனால் அவள் அதற்கு நேர்மாறாக இன்னும் அதிகமாகவே விம்மி விம்மி அழத்தொடங்கினாள். இவள் அழுவதை என் மனம் எப்படிப் பார்த்துக்கொண்டிருக்க முடியும். ஆம் என்னால் இதை சகிக்கமுடியவில்லை. அவள் அழுவதற்குக் காரணம் யாது என்று அறிய என் மனம் ஆசையால் துடிதுடித்தது. கிழவனிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள எண்ணி இவள் ஏன் அழுகிறாள் என்று கிழவனைக் கேட்டேன். அவன் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு காரணமில்லாமலே அழுகிறாள் என்று பதிலுரைத்தான். கொஞ்ச நேரம் எங்களுக்குள் மவுனம் குடிகொண்டது. கிழவன் முதலாவதாகப் பேசத் தொடங்கி மெதுவாக அபாக்கியசாலி—என் மனைவி என்றான். நான் நின்றுகொண்டிருந்த இடத்தில் திடீரென்று ஓர் பூகம்பம் ஏற்பட்டால் நான் எவ்வளவு திடுக்கிட்டிருப்பேனோ அதைவிடப் பன்மடங்கு அதிகமாக இவ்வார்த்தையைக் கேட்டதும் நான் திடுக்கிட்டு விட்டேன்.

அந்தோ! இதென்ன அநியாயம். பெரும் கொடுமை. என் மனம் இதை எண்ணவே கூசுகிறது. ஆகா இன்னும் 16 வயது பூர்த்தியாகவில்லையே! இவளுக்கு 60 வயதுக் கிழவனா மணவாளன். என்ன பரிதாபகரமான செய்தி! இவள் பெற்றோர்களிருதயம் இவ்வளவு கொடூரமானதா? ஸ்திரீ ஜாதியின் பேரில் இவ்வளவு

அனியாயமா! நாம் நமது இவ்விதமான நாகரீகத்தை நினைத்துத்தானு நாம் நாகரீகத்தில் சிறந்தவர்கள் என்று எண்ணி ஆனந்தக் கூத்தாடுகிறோம் என்ற இவ்விதமான எண்ணங்கள் ஹிருதயத்தில் எழுந்ததும் அதைப்பற்றி சிந்தித்துக்கொண்டே ராமலீலா நடக்குமிடத்திலிருந்து திரும்பிவிட்டேன். கொஞ்சநாளையில் நான் இந்தவிஷயத்தை அறவே மறந்துவிட்டேன்.

இதற்கு மூன்று மாதத்திற்குப்பின் நான் சாஹ்றகோட்டுக்குப் போயிருந்தேன். சாஹ்றகோட் என்னுடைய சொந்த ஊர். ஓர்நாள் மாலை காற்று வாங்குவதற்காக நடந்து கொண்டிருந்த சமயம் போலீஸ் ஸ்டேஷனில் பெரும் கூட்டம். அதைக்கண்டதும் காரணத்தை அறிய விரும்பி அதன் பக்கமாகச் சென்றேன். கையில் விலங்குடன் இரண்டு புருஷர்களும் அவர்கள் பக்கத்தில் விலங்கணியாத ஓர் மாதும் நின்று கொண்டிருப்பதைக் கண்டேன். அந்த இரு ஆடவர்களையும் நான் நன்ருய் அறிவேன். அவர்கள் உள்ளூர் வாசிகளான காலிகள்.

அந்த ஸ்திரீயைப் பார்த்ததும் அவளை இதற்கு முன்னுல் எங்கேயோ பார்த்ததாக தொன்றியது. ஆனல் எங்கேபார்த்தேன் என்பது தான் ஞாபகத்திற்கு வரவில்லை. நான் அவளை உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தென். திடீரென்று அவளது திருஷ்டியும் உயர்ந்தது. அவளது விசாலமான கண்களைப்பார்த்ததும் லூடியானுவில் நடந்த எல்லாசம்பவங்களும் என் கண்ணுக்குமுன்னுல் தோன்றின. ஆனுல் அவளிடத்தில் முன்னுலிருந்த அழகு எங்கேயோ சென்று மறைந்துவிட்டது. ஸ்திரீகளின் ஆபரணங்களான கபடமின்மை அச்சம் நாணம் முதலிய குணங்கள் அவளிடத்திலிருந்து மறைவனபோல் தொன்றின. பலவிதமான அனேக கஷ்டங்களும் ஹிந்து ஜாதியாரின் இரக்கமற்ற கொடுமையும் சேர்ந்து அவளுடைய மெல்லிய ஹிருதயத்தைக் கடினமாக்கி விட்டன.

நான் அவளுக்கு நமஸ்காரம் செய்தேன். அவள் என்னை அறிந்து கொண்டாள். பதில் நமஸ்காரம் செய்து கொண்டே இப்பொழுது நான் பழைய பிரேமலதா (அவள் பெயர்) வல்ல. இப்பொழுது நான் மஸ்கீனுபேகம் (மகம்மதிய ஸ்திரீகள் வைத்துக்கொள்ளும் பெயர்) ஆய்விட்டேன் என்று சிரித்தவண்ணமாய்க் கூறினுள்.

இதைக் கேட்டதும் என்மனதிற்கு அபாரமான துக்கம் ஏற்பட்டது. நீ பெரியதவறுதல் செய்து விட்டாய் என்று அவளைப்பார்த்துக் கூறினேன். அவளை மறுபடியும் பழய பிரேமலதா ஆய்விடும்படி வேண்டினேன். அவள் என்வார்த்தைகளைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் அதற்கு நேர்மாருக நான் ஹிந்துக்களை ரொம்ப வெறுக்கிறேன். என்று பதிலுரைத்தாள்.

பிரேமலதா! என்னை உன்சகோதரன் என்று எண்ணி நடந்தவைகளைக் கொஞ்சம் தெளிவாய்ச் சொல் என்று நான் அவளைக்கேட்டேன். இதைக் கேட்டதும் மத்தியில் பல துன்பங்களால் கடினமாகிவிட்ட அவளது ஹிருதயம் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் இளகிவிட்டது. விம்மி விம்மி அழுதுகொண்டே தன் துக்ககரமான கதையைச் சொல்ல ஆரம்பித்தாள்.

சகோதரரே! தாங்கள் தசரா'வன்று என் நிலைமையை நேரிலேயே பார்த்தீர்கள் அல்லவா!

நான்:—ஆம். பார்த்தேன்.

அதற்கு ஒரு மாதத்திற்குப் பின்னால் எதை நினைத்து நான் பயப்பட்டுக்கொண்டிருந்தேனோ அதே ஆயிற்று. இதைச் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது அந்தப் பேதைப்பெண்ணின் கண்களிலிருந்து நீரானது அருவிஜலம் போல் ஓடத் தொடங்கியது. அந்தோ! என்ன பரிதாபகரமான காட்சி. ஆம். இதை நான்என்றும் மறக்க முடியாது. அவளது கணவன் மண்ணுலகிலிருந்து மறைந்து விட்டான். நான் அவளுக்குத் தேறுதல் கூறினேன்.

மறுபடியும் சொல்லத் தொடங்கி,

என் கணவர் இறந்ததும் அவர் சகோதரர்கள் என் கணவன் சொத்தைக் கைப்பற்ற வேண்டியதின் நிமித்தம் என்னைத் தொலைத்து விட விரும்பினார்கள். சீர்திருத்தக் காரர்கள் எனக்கு மறுமணம் செய்ய முயன்றார்கள். ஆனால், என் பெற்றோர்கள் விரும்பவில்லை. இதனால் தங்களுடைய குலத்திற்குப் பெரிய களங்கம் ஏற்பட்டு விடுமென்று அவர்கள் சொல்லி வந்தார்கள். ஆனால், என்னை 10000 ரூபாய்க்காக விற்றபொழுது குலத்திற்குக் களங்கம் ஏற்படவில்லையா! இதைப் பற்றி அவர்களைக் கேட்க யாருக்கும் உரிமையில்லை.மறுமணம் ஆகவொட்டாமல் கட்டுப்பாடு செய்துவிட்டனர்.

இதற்குமத்தியில் என் கணவனின் சகோதரர்கள் என்னை ரொம்ப கஷ்டப்படுத்தத் தொடங்கினார்கள். அதையெல்லாம் நான் மிகப் பொறுமையாகவே சகித்துவந்தேன். ஆனால் இப்பொழுது அளவுக்கு மீறிவிட்டது. இந்த இரண்டு பேர்களும் (எதிரில் கை விலங்குடன் நின்றுகொண்டிருந்த இருவர்களைச்சுட்டிக்காட்டி) எங்கள் வீட்டிற்கு அடிக்கடி வந்துகொண்டிருந்தார்கள். இவர்கள் ஒரு நாள் ராத்திரி திடீரென்று என் அறையில் புகுந்து என்னைத் தூக்கிக் கொண்டு ஓடிவிட்டார்கள். பின் அவர்கள் என்னை என்ன செய்தார்கள் என்பது என்னால் விளக்கமுடியாது. இந்த நிலையிலிருக்கிறேன் என்றாள். இந்த துக்ககரமான சம்பவத்தைக் கேட்டதும் என் மனம் மிகவும் வருந்தியது.

நம்முடைய மதம் இவ்வளவு பெரிய கொடூரமான செயலுக்குக் காரணமாயிருந்தும் நாம் அதன்பேரில் எவ்வளவு கர்வமடைகிறோம். இந்த மங்கைக்கு மறுமணம் செய்திருந்தால் அவளுக்கு இந்த பரிதாபகரமான நிலைமை ஏற்பட்டிருக்காதல்லவா! நான் அவளை மறுபடியும் பிரேமலதா வாகிவிடும்படி வற்புறுத்தினேன். கடைசியாக சாஹ்கோட்டிலுள்ள ஓர் உத்தம வாலிபனுக்கு அவளை விவாகம் செய்து கொடுக்கப்பட்டது. இப்பொழுது அவள் ஆனந்தமாக வாழ்ந்துவருகிறாள். குழந்தைகளையும் கடவுள் அனுக்ரகம் செய்திருக்கிறார்.

---

## சுந்தரர் கலப்புமணம்.

"ஆராய்ச்சியாளன்"

சுந்தரமூர்த்தி நாயனாரையறியாத சைவர் இல்லை. சமயாசாரியார்கள் நால்வருள் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனாரின் சரிதையையும் குணாதிசயங்களையும் நோக்கும்போது அவர் சிவத்தொண்டராக மட்டுமன்றிப் பெரியதொரு சீர்திருத்தக் காரராகவும் உலக விவகார விற்பன்னராகவும் இருந்திருக் கிறாரென்பது தெளிவு படு

கிறது. சுந்தரருக்குத் தம் குலமாகிய பார்ப்பனக் குலத்தில் முதலாவது பெண்பேசிக் கல்யாண எடுப்பு முழுதுமெடுத்து மணவறையிருக்குந் தறுவாயில் மணம் தடுக்கப்பட்டது. சுந்தரருடைய சரிதம் முழுமையும் இறைவன் வசப்பட்டே நிகழ்ந்ததாக கதைசெலுத்தப்படுவதால் இக்கலியாணத்திலும் வயோதிகர் வடிவந் தாங்கிய கடவுள் தோன்றி இக் கலியாணம் பிரயோசன மற்றதென்று கூறுமற் கூறிச் சுந்தரரைக் கல்யாணத்தினின்றும் தடுத்து ஆட்கொள்கின்றார். இந்த சுயஜாதிக்கல்யாணம் காதல் கலப்பின்றிச் சுற்றத்தாரற் செய்யப்பட விருந்ததாகும். பெரிய புராணத்திலும் இக்கல்யாணத்தின் அடிப்படை காதலெனக் கூறப்பட்டிலது. பின்வரும் கல்யாணங்களிரண்டும் காதல் கமழ நிகழ்கின்றன. கல்யாணப்பேச்சுக்கு முன்பு காதல் கனிகின்றது. ஆனால் இந்த சுயஜாதிக் கல்யாணத்தில் மணமகனின் பெற்றோரும், மணமகளின் பெற்றோரும் ஓலைபோக்கித் தரம்பார்த்துக் குலம்பார்த்து மணத்தை நிச்சயிக்கின்றனர். இம்மணம் சுந்தரருக்குத் தகுந்ததன்றென்று கடவுள் கருதித் தடுப்பதாகக் கதை சொல்லுகிறது. தடுத்தது மட்டுமன்று தடுத்து ஆட்கொண்டார் என்றும் பாராட்டப் படுகின்றது.

சிலகாலம் சென்றபின்பு தற்செயலாகக் கோயிலில் பரவையாரைச் சுந்தரர் சந்திக்கிறார். இயற்கையான காதல் கனிகின்றது. பரவையாரை சுந்தரர் பார்க்கிறார். கோயிலினுள்ளே அடியார் பலர் சூழ்ந்து தொடர்கின்றனர். தாம் ஒரு பெரிய அடியார் என்பதையும் இருக்கு மிடத்தையும் ஜனக்கூட்டத்தையும் சுந்தரர் கவனிக்கவில்லை. இவைகளைக் காதல் லட்சியம் செய்யுமா?

சுற்றிய பரிசனங்கள் சூழவா
ளுடைய நம்பி
நற்பெரும் பான்மை கூட்ட நகைபொதிந்
திலங்கு செவ்வாய்
விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழை
யவரைக் கண்டார்.

அம்மையாரை ஐயர் பார்த்தார். பார்த்ததும் என்னவாயிற்று! ஜாதி என்னவென்று கவனித்தாரா? பத்துப் பொருத்தம் பார்க்க ஜோதிடர் வரவழைக்கப்பட்டாரா? குலனை யோர்ந்தாரா! கோத்

திரம் கேட்டாரா? குடிமை நலன் கருதப்பட்டதா? கரைபுரண்ட காதலுக்கு இவை தேவையா? இந்தச் சனியன்களை நோக்குமிடத்திற் காதல் அரும்புமா? ஆஹா! சுந்தாருடைய உள்ளம் தன்னுடைய மகிமையையாவது எதிரே நிற்கும் பெண்ணினுடைய விருத்தாந்தங்களையாவது பற்றவில்லை. கண்டார்! காதல் பொங்கியது. சுந்தார் ஆச்சரியப்படுகிறார்:—

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன்
பெரு வாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ
புயல் சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த
விரைக் கொடியோ
அற்புதமோ சிவனருளோ யாதோவென்
றதிசயித்தார்.

இந்நிலையில் பரவையாரும்கண்டார். "அண்ணலும் நோக்கினன் அவளும் நோக்கினள்" என்று கம்பன் கூறுவதுபோல இருவர் பார்வையும் கலந்தன. திரியாத என் மனத்தை ஈர்த்த இப்புண்ணிய புருஷன் யாரோ என்று பரவையார் பாக்கின்றார்:—

முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ
பெருகொளியால்
தன்னேரில் மாரனோ தார்மார்பின்
விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற்
றுடையவனோ
என்னேஎன் மனந்திரித்த இவன்யாரோ
வெனநினைத்தார்.

இந்தக் காட்சி கல்யாணத்தில் முடிகிறது. முன் சொந்த ஜாதியில் செய்ய ஏற்பட்டிருந்த கல்யாண ஏற்பாட்டைத் தடுத்து ஆட்கொண்ட பரமசிவனே இக்கல்யாணத்தை நடத்தி முடிக்கின்றார். இதிலிருந்து எத்தனை சுற்றத்தார் பார்த்து ஆராய்ந்து கடைந்தெடுத்துச் செய்வதானாலும் காதலில்லாத கல்யாணம் பிரயோசன

மற்றதென்பதும், காதல் கனியச் செய்யுங் கல்யாணத்துக்கு எந்தப் பொருத்தமும் ஜாதி குலம் முதலியனவும் பார்க்கத் தேவையில்லை யென்பதும் தெள்ளிதின் விளங்குகின்றன. சைவசமயாசாரியரின் கல்யாணத்தின் மூலம் காதல் மணத்தின் பெற்றியை கடவுள் விளக்குகின்றாரென்றுஏற்பட்ட இந்தக் கதை நிகழ்ச்சி எவ்வளவு பயனுடையதாகுமென்பது கவனிக்கத்தக்கது.

சிவபக்தர் சிலர் பூர்வ ஜென்மத் தொடர்பால் இந்தமணம் நிகழ்ந்ததென்பர். அப்படியே யானாலும் இப் பரவையாரை ஓர் பிராமணக்குலத்தி லுதிக்கும்படி செய்து இருவருக்கும் மணமாற்ற இறைவன் நினைத்திருக்கலாமன்றோ? ஜாதி ஒழுங்கை உடைத்தெறியும் படியான இந்த நிகழ்ச்சியைக் கடவுள் ஏன் மகிழ்ந்து செய்தல் வேண்டும்? ஜாதிகுலம் கோத்திரமெல்லாம் ஒப்ப இருவரையும் பிறக்கும்படிசெய்து சேர்த்து வைக்க ஏன் விரும்பவில்லை! காதல்மணம் சிறப்புடையதென்று காட்ட வேண்டுமென்றே எதிர் காலத்துக் கேற்ப இந்நிகழ்ச்சியை ஆடிக் காட்டியிருக்கிறாரெனக் கொள்தலே பொருந்து மென்க.

---

## பத்திராதிபர் குறிப்புகள்.

### இரண்டரைக்கோடி

நமது நாட்டில் விதவைப் பெண்களின் மொத்த தொகை இரண்டரைக்கோடி யென்று அரசாங்கக் கணக்கிலிருந்து தெரிகிறது. விதவை என்ற சொல் கணவனிழந்த பெண் என்ற பொருள் தருகிறது. மேலைத் தேசங்களில்—ஏன்? இந்துக்களல்லாத மற்ற எல்லா சமூகத்தாரிடத்திலும் விதவைத் துயர் இல்லை. அங்கும் கணவனிழந்த மாதர் உண்டு. ஆனால் அவர்கள் இஷ்டப்பட்டால் வேறு கணவனைத் தேர்ந்து கல்யாணம் செய்து கொள்ளலாம். இஷ்டமில்லையென்றால் ஆயுள்வரை சன்யாசினிமாதிரி இருக்கலாம். அப்படியே மனைவியை இழந்த புருஷர்களும் இஷ்டப்படுகிறவரை வேறு பெண்ணை மணக்கலாம். இஷ்டமில்லை யென்றால் ஆயுள்

வரை சன்யாசியாக இருக்கலாம். அவர்களில் பெண்ணை எப்படி Widow என்று கூறுகிறார்களோ அப்படியே ஆணை Widower என்று அழைக்கிறார்கள். ஆண் பெண் உணர்ச்சியும் வாழ்வும் சமம் என்று கருதுகிறார்கள். நம் நாட்டில் அப்படியில்லை. புருஷன் எத்தனை பெண்ணையும் மணக்கலாம். அவன் மனைவியை இழந்துவிட்டால் "விதவன்" என்று கூறும் வழக்கமுமில்லை.

## கட்டாய் விதவை

நமது நாட்டில் விதவைக்கோலம் இஷ்டத்துக்கு நடைபெறவில்லையென்பதுதான் முக்கியமாகும். காதலன் இறந்துபோகிறபோது கரையழிந்த அன்புடன் வாழ்ந்திருந்த மனைவி, தன்னுடைய வாழ்நாளில் மற்றொரு புருஷனைப் பற்றி வாழ இஷ்டப்படாமலிருக்கலாம். அப்படிப்பட்ட பெண் இறக்கவும் இறக்கலாம்; இருந்தாலும் வாழ்வும் அலங்காரமுமிழந்து சன்யாசினியாக இருக்கலாம். அது ஒரு புனிதவாழ்வு என்பதில் தடையேயில்லை. அப்படிப்பட்ட காதல் வாழ்வு எங்கே நிகழ்கிறது. அப்படி மனமார ஐம்புலன்களையும் அடக்கி உலகில் இருக்கும் விதவைப் பெண் எத்தனை என்பதை நாம் கவனிக்கவேண்டும். இன்று இருக்கும் விதவையரைப்பற்றிக் கவனிக்கும்போது இந்தப் புன்மைக் கோலத்தில் இஷ்டப்படுபவர் 100-க்கு ஒன்றிரண்டுகூட இருப்பதாக உணரமுடியவில்லை. சுற்றத்தாரும் ஊராரும் தூற்றுவார்களே என்ற பயத்தினாலும் தாயாதிகளும் ஜாதியாரும் தன்னைத் தூரத்திவிடுவார்களே என்ற அவமானத்திற்காகவுமே பெண்கள் இந்தக் கொடுமையான விதவைக் கொலைக்கு உட்படுகின்றனர். அப்பெண்கள் ஆடைக்கும் அணிகலன்கட்கும் வாழ்வுக்கும் ஏங்கி நிற்கும் பரிதாப நிலை பார்க்க சகியாததாகும். விதவைக்கோலத்திற்கு கட்டுப்பட இஷ்டமில்லாத ஒரு பெண்ணை சுற்றியிருப்பவர் சேர்ந்து கட்டாயப்படுத்திப் பயமுறுத்தி அடக்கிவைப்பதனால் பலவிதமான துன்பமும் அவமானமும்தான் ஏற்பட முடியும்.

## இளம் விதவையர்

இப்படிப்பட்ட விதவைக் கொடுமைக்கு ஆளாகி மாள்கின்ற பெண்மக்கள் தொகை எண்ணிமுடியாததாகும். 1931-ம் வருஷத்

திய அரசாங்க ஜனக்கணிதத்தின்படி இந்தியாவிலுள்ள மொத்த விதவையரின் தொகை 2½-கோடி ஆகும். இத்தனை பெயரும் உலக வாழ்வை வெறுத்த யோகியர் என்று எவராலும் கூற முடியாது. சேலைக்கும் பூவுக்கும் பொட்டுக்கும் நகைக்கும் வாழ்வுக்கும் நாள்தோறும் அழுதுகிடப்பவர் தொகையே இதில் மலிந்து கிடக்கிறது. இவர்களின் வாழ்க்கையைப் பறிமுதல் செய்து ஒடுக்கி அடக்கிப் பூட்டிப்போட்டு வைப்பதால் தேசத்திற்காவது மதத்திற்காவது ஒழுக்கத்திற்காவது நன்மை கிடைத்திருக்கிறதா? இப்படிப்பட்ட கொடுமைக்கு இலக்கானவர்கள் வயதானவர்கள் மட்டுமா? பருவமடையாத பச்சைப் பசுங் குழந்தைகள் பதினாயிரக்கணக்காகவும் லட்சக்கணக்காகவும் இந்தப் பாழ்ங் குழியில் தள்ளப்பட்டிருக்கின்றனர். உலக வாழ்வு இன்னதென்றறிய சந்தர்ப்பமே கிடைக்காமல் ஒவ்வொரு பசுங்குழந்தையும் பூக்கிற மலரைப் பிடுங்கி நெருப்பில் போட்ட மாதிரி விதவைப் படுகிடங்கில் தள்ளப்பட்டிருக்கின்றனர்.

## நமது பத்திரிகை

இந்தப் பரிதாபகரமான விதவைப் பெண்களின் வாழ்வில் உள்ள துயரை நீக்கி எல்லாரும் அடைகிற உலக இன்பங்களை அந்தப் பெண்களும் நேரான வழியில் பெறவேண்டியது அவசியமாகுமன்றோ? அவர்களுடைய கவலையை நீக்குவதற்கும் ஒழுக்கத்தைப் பாதுகாப்பதற்கும் உலகில் அவர்களுக்குள்ள உரிமையைப் பெறுவதற்கும் முக்கியமாக உழைப்பதற்கே இப்பத்திரிக்கையைத் தோற்றுவிக்கிறோம். மேலும் இம்மாதிரியான கொடுமை நேராதிருக்கும்பொருட்டு பால்ய விவாஹம் கிழவர் விவாஹம் முதலியவைகளின் தீமையை விளக்கவும் பெண்களின் அறிவையும் சுதந்திரத்தையும் கட்டுப்படுத்துவதனாலே நமது நாடு அடிமைப்பட வேண்டியதாயிற்றாதலால் பெண்மக்கட்கு சுதந்திரம் நல்கவும் அவர்களின் அறிவு விசாலமடையவும் வேண்டிய துறையில் நமது பத்திரிகை உழைத்துவரும். இன்னும் காலத்திற்கும் சந்தர்ப்பத்திற்கு மேற்ப தேசநலம் சமூக நலத்திற்கு வேண்டிய விஷயங்களிலும் தலையிட்டு உழைத்து வருமென்பதையும் தெரிவிக்கிறோம்.

## வைதீகர் எதிர்ப்பு

இப்பத்திரிகையானது மிகுந்த தைர்யத்தின்பேரில்தான் ஆரம்பிக்கப்படுகிறது. ஒரு சிறு வழக்கத்தைக்கூட மீறக்கூடாதென்று கருதுகிற மனப்பான்மையுடைய ஹிந்து—தமிழ் மக்களிடையே இதனைத் தொடங்குகிறோம்; ஆனால் நமது தமிழ்நாட்டு உயர் ஜாதி வைதீக சகோதரர்கள் மனமார ஒரு ரூபா கொடுக்க இஷ்டப்படமாட்டார்கள். சந்தர்ப்பத்தில் பணப்பெட்டியைப் பறிகொடுத்துவிட்டுத் துடிப்பார்கள். இப்படித்தான் நமது சமூக சீர்திருத்தம் முழுமையும் நடந்து வருகிறது. புருஷன் தன் மனைவியை கடல் கடந்து அழைத்துச் செல்லக்கூடாது என்று பிடிவாதம் செய்வர். ஒருவர் தன் மனைவியை அழைத்துக்கொண்டு போய் வைதீகரின் சட்டத்தை மீறிவிட்டால் வேறொருவன் வேறொருவர் மனைவியைக் கூட்டிக்கொண்டு ஓடிப்போனாலும் கேட்க முடியாமல் போய்விடும். ஜெயிலுக்குச் சென்றவரை ஜாதியில் சேர்ப்பதில்லை யென்று ஒரு ஜாதிச்சட்டம் இருக்கும். தேசத்தொண்டு செய்து தியாகமூர்த்தியாக ஒருவர் ஜெயிலுக்குச் செல்வர். வரும்போது வாழ்த்தி மாலையிட்டு வரவேற்பதைவிட்டு ஜாதிப்பிடிவாதக்காரர்கள் அவரைத் தள்ளி வைப்பார்கள். மாற்ற உணர்ச்சியும் அறிவுமுள்ளவர்களும் காலத்தின் போக்கை அறிந்தவர்களும் சேர்ந்து ஜெயில் புகுந்த தேசாபிமானியைச் சேர்த்துக்கொண்டு விடுவார்கள். கட்டு தானாகவே தூளாகிவிடும். அப்பால் கள்குடித்துச் சிறை சென்றாலும் களவாடிச் சிறை சென்றாலும் கேட்பாரிருக்கமாட்டார்கள. இப்படியே ஒவ்வொரு கட்டுப்பாட்டையும் வைதீகப் பிடிப்புள்ளவர் பறிகொடுத்து வருகின்றனர். ஜாதி—மதக் கட்டுப்பாடுகள் இப்படியே சிதைந்து வருவதை யாவரும் காணலாம். மாதர் மறுமண விஷயத்தில் யாவரும் சிந்தித்து நீதி வழங்க வேண்டுமென்று விரும்புகிறோம். அநீதியைச் செய்துகொண்டு பரிகாரத்திற் கிடங்கொடுக்க முடியாதென்றால் நிலைக்காது என்று வற்புறுத்திக் கூறுகின்றோம்.

## அன்பர்கள் உதவி

மாதர் உரிமையே தேச உரிமை. அதுவே மக்கள் உரிமை. மாதர் சுதந்திரமே தேச சுதந்திரம். அதுவே மக்கள் சுதந்திரம். பெண்களின் உரிமையைத் தடைப்படுத்தி அடிமைகொண்ட தினத்தில் தான் தேசம் அடிமைப்பட்டது. உரிமை இழந்தது. ஆதலால் அடைபட்டுவாடும் பெண்களின் முகத்தை நோக்குதல் வேண்டும். வாட்டத்தை ஒழிக்கவேண்டும். பெரியவர்களே ஆசீர்வதியுங்கள்! இளைஞர்களே எழுங்கள்! துணிவுகொள்ளுங்கள்! வெற்றிநமது!

## நிகழ்ச்சிகள்.

### சுலோகமிருக்கிறது.

கொழும்பில் ஆடிவேல்விழாவை முன்னிட்டு தனவைசிய இளைஞர் சங்க ஆதரவில் ஒரு கூட்டம் நடைபெற்றது. இலங்கை சர்வ கலாசாலைத் தமிழ்ப் போரசிரியர் ரெவரெண்ட் பிரான்ஸிஸ் கிங்ஸ்பரி B. A. தலைமை வகித்துப் பேசும்போது பின்வருமாறு கூறியிருக்கிறார்:—

"சீர்திருத்த விஷயங்கள் சில பேசப்பட்டன. நான் தமிழ் மொழியிலுமன்றி வடமொழியிலும் சிறிது பயிற்சி பெற்றவன். புருஷன் இறந்துபோயினும், காணமற் போயினும் கூன் குருடு செவிடாயிருப்பினும், பைத்தியமாயிருந்தாலும், தூர தேசம் சென்று ஏழுவருஷகாலம்திரும்பி வாராமலிருந்தாலும் பெண்கள் வேறொரு புருஷனை விவாகம் செய்துகொள்ளலாம் என்றொரு சுலோகமிருக்கிறது. நரைகூடிய கிழவர்கள் தங்களுக்கு 4 அல்லது 5 பெண்களைத் தேடும் காலத்தில், ஸ்திரீகள் இரண்டாவது புருஷனை மணக்கநினைத்தால் அது பிசகான காரியமன்று"

---

### திருவாங்கூரில் மறுமண மசோதா.

ஹிந்து விதவைகள் மறுமண மசோதா வொன்று ஸ்ரீமதி T. நாராயணி அம்மாளவர்களால் திருவாங்கூர் சட்டசபையில் ஆஜர் செய்யப்பட்டிருக்கிறது. இம்மாதிரி மசோதா பிரிஷ்ட்டிஷ் இந்தியாவில் 1850ம் ஆண்டு முதல் இருந்து வருகிறதென்றும் இந்தியாவின் மற்றைய பாகங்களைப் போல் திருவாங்கூர் ராஜ்யத்தில் அதிகமில்லையாயினும் இங்கும் இச்சட்டத்திற்கு அவசியமிருக்கிறதென்றும் பிரிட்டிஷ் இந்தியாவிலிருக்கிற சட்டத்தைவிட இதில் புதியதொரு விஷயம்சேர்க்கப்பட்டிருக்கிறதென்றும், அதாவது மறுமணம் செய்துகொண்டால் முந்திய கணவனின் சொத்தைஇழக்க வேண்டிய அவசியமில்லையென்றும் கூறப்பட்டிருக்கிறது.

---

### விவாகக் கணக்கு

1936-ம் வருடம் ஏப்ரல் மாதத்தில் நடந்த விதவா விவாகங்களைக் குறித்து லாகூர் விதவா விவாக சகாய சங்கத்தாருக்குக் கிடைத்துள்ள கணக்கு வருமாறு:—

| ஜாதி | விவாகங்கள் |
|---|---|
| பிராமணர் | 65 |
| க்ஷத்திரியர் | 23 |
| அரோடா | 37 |
| அகர்வால் | 22 |
| காயஸ்தர் | 30 |
| ராஜபுத்திரர் | 84 |
| பாட்டியா | 4 |
| சீக்கியர் | 11 |
| இதரவகுப்பினர் | 3 |
| மொத்தம் | 279 |

ஷை விவாகங்களின் மாகாண வாரியான கணக்கு:—

| | |
|---|---|
| பஞ்சாப் மாகாணம் | 83 |
| ஐக்கிய மாகாணம் | 78 |
| மத்திய மாகாணம் | 21 |
| பம்பாய் | 17 |
| வங்காளம் | 78 |
| மற்ற மாகாணங்கள் | 2 |
| மொத்தம் | 279 |

## ஓமர் வைசியர் வகுப்பில் முதல் மறுமணம்

1936-ஆம் மேமீ 18உ கான்பூரில் ஓமர் வைசிய வகுப்பைச் சேர்ந்த ஸ்ரீமதி சுந்திதேவிக்கும் கஜுகாவிலுள்ள பால்முகுந்த குப்தாவுக்கும் விதவாவிவாகம் சிறப்பாக நடைபெற்றது. ஓமர் வைசியர் வகுப்பினர் கடுமையான வைதீக வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவ்வகுப்பில் இதுவே முதலாவது விதவாவிவாக மாகும். கலியாணத்தை முன்னிட்டு நடந்த விருந்திற்கு ஏராளமான பிரபலஸ்தர்கள் விஜயஞ் செய்தனர். பிரபல சீர்திருத்த வாதியான லாலா பியாரிலால் இவ்விவாக நிகழ்ச்சியில் விசேஷப் பங்கெடுத்துக் கொண்டார்.

## லூதியானாவில் மறுமணம்

கன்னு ஜில்லாவைச் சேர்ந்த லூதியானுவிலுள்ள லாலா ரூடாமல் கத்ரீ அல்வாயி என்பவரின் பெண் 15 வயதில் விதவையாகி விட்டாள். ஒரு வருஷத்திற்குப் பின் மேற்கூறிய விதவையின் இளைய கொழுந்தனுக்கும் ஷை விதவைக்கும் விவாகம் இனிது நிறைவேறியது. விவாகத்திற்கு விதவா விவாக சகாய சங்கத்தின் கௌரவ காரியதரிசியான திரு. ராதாகிருஷ்ண B. A. அவர்களும் இதர பல பிரமுகர்களும் விஜயஞ் செய்திருந்தனர்.

## கிசேளலியில் மறுமணம்

பிரபல லட்சாதி பிரபுவான காலஞ் சென்ற தனுராய் சாவ் அவர்களின் புதல்வியான ஸ்ரீமதி. ராமபியாரி பாய்க்கும், ஜமீன்தாரும் பிரபலஸ்தருமான சிப்தின் அவர்களுடைய மகன் ஜுகுல் கிஷோருக்கும் 3-5-36 ல் விதவா விவாகம் மிக விமரிசையாக நடைபெற்றது. சனாதனிகள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், ஆர்ய சமாஜிகள் முதலிய நூற்றுக்கணக்கானவர் வந்திருந்தனர். பெண்ணுக்கு வயது 15. மணமகனின் வயது 19. பிரபல செல்வந்தர்களான இவர்கள் குடும்பத்தில் நடந்த இவ் விவாகம் எங்கும் பெரிய கிளர்ச்சியை உண்டாக்கியிருக்கிறது.

# வேண்டுகோள்.



அன்பர்களே !

மாதர் மறுமண சகாய சங்கத்திலிருந்து "மாதர் மறுமணம்" என்ற பத்திரிகையை வெளியிடத் தொடங்குகிறோம். பொருள் லாபங் கருதி இதனை வெளியிடவில்லை யென்பது வெட்ட வெளிச்சமாகும். மாதர்கட்கு மறுமணம் செய்வது ஒருபுறமிருக்க அந்தக் கட்சியின் விஷயங்களைப் பலரும் அறியும் பொருட்டு வெளிவரும் இப்பத்திரிகையை வாங்கிப்படிக்க ஆள் பிடிக்கும்படியான நிலைமை யேற்படுமானால் அது வருந்தத்தக்க காரியமல்லவா? சீர்திருத்த விருப்பமுடையவர்களும் இளம் வாலிபர்களும் பெருமுயற்சி செய்து இப்பத்திரிகையை எங்கும் பரவும்படி செய்ய வேண்டுகிறேன்.

உள் நாட்டிலும் வெளி நாட்டிலுமிருந்து சந்தாதார்களைச் சேர்த்து அனுப்பியுள்ள அன்பர்கட்கு வந்தனமளிக்கின்றேன். சிறிதும் பயப்படாமல் துணிந்து சந்தாதாராகச் சேர்ந்திருக்கிற அன்பர்களைப் பாராட்ட வேண்டியது அவசியமாகும்.

இப் பத்திரிகைக்குக் கட்டுரைகளும், பாட்டுகளும் கேட்டவுடன் மகிழ்ச்சியோடு தந்துதவியுள்ள யாவருக்கும் வந்தனம்.

பத்திரிகைக்கு சொற்ப சந்தாவைத்து நஷ்டத்தை யெதிர்பார்த்து நடத்தப்படுவதாலும் பல சந்தர்ப்பங்களில் சந்தாவை யெதிர்பார்த்து அனுப்பி அனுபவப்பட்டிருப்பதாலும் பணஞ் செலுத்தி சந்தாதாராகச் சேராத யாருக்கும் பத்திரிகை அனுப்பவில்லை. நண்பர்கள் மன்னிப்பார்களென்று நம்புகிறேன்.

தமிழ் நாட்டில் விதவா விவாகம் செய்துகொண்டுள்ள தம்பதிகளின் போட்டோ அவர்களின் வயது, கல்யாணம் நடந்த தேதி, அவர்களுடைய சுருக்கமான சரித்திரக் குறிப்பு ஆகியவை தேவை. கிடைக்கிறவரை அனுப்பித்தர வேண்டுகிறேன். விதவா விவாக சம்பந்தமான செய்திகளை ஆங்காங்குள்ள அன்பர்களைத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

காரியதரிசி

மாதர் மறுமண சகாயசங்கம்.

காரைக்குடி.

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| மலர் 1 | காரைக்குடி<br>தாது-ஷூ புரட்டாசி-மீ | இதழ் 2 |
|---|---|---|


## வாடும் பயிர்.

( காளவனப் புலவர். )

"கரும்புத் தோட்டத்திலே" என்ற மெட்டு.

(1) பாரத நாட்டினிலே—இளம்
பாவையர் ரண்டரைக் கோடி விதவையர்
மார்பில் கண் ணீர்வடித்து—வலே
மான்போல் மறுகி மயங்கித் திகைத்திட
வீரரில் ஏன்பிறந்தோம் !—பகை
வீட்டிடக் கேட்டை மதித்திடா மும்மத
வாரணம் போலெதிர்த்தே—உடன்
மாதர் மறுமணம் போற்றுதல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]

(2) நீதி தவிர்த்தலவோ ?—இந்த
நிஷ்டூரத்தை நிலைத்திடச் செய்தனர்
ஜாதிக் கொருநீதி—சொன்ன
சாஸ்திரந் தீயிட ஆத்திரம் மூந்துதே !
தீதினைப் பெண்களுக்கே—செயுஞ்
சித்தமு ளோர்திருப் பேணவும் வல்லரோ ?
வாதுகள் செய்திடாமே—உடன்
மாதர் மறுமணம் போற்றுதல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]

(3) மங்கை துரோபதைக்கே—ஐந்து
மாப்பிளே கொள்ள வகுத்துரை சாஸ்திரம்
எங்கே மறைந்ததையா!—இவர்
இல்வளர் பத்தினி உத்தமி என்றெலாம்
தங்க எழுத்திலிட்டோம்—இன்று
சகோதரி மாரைத் தவிக்கவும் விட டோம்
வங்கிச முட்டாமுன்—உடன்
மாதர் மறுமணம் போற்றுதல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]

(4) பதியை இழந்தபின்பு—குலம்
பல்கவே அந்தனேப் பாண்டுவைப் பெற்றிட
விதியை உரைத்த நூலும்—பஞ்சின்
மெல்லிய நூலென விண்பறந் துற்றதோ?
கதியை இழந்தன்றோ—கருங்
கல்லு முருகக் கலங்குகின் றூர்களே!
மதியை உறவாக்கி—உடன்
மாதர் மறுமணம் போற்றுசல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]

(5) ஆடவன் கொள்வானும்—பெண்
டாயிர மாயினும்; ஆவி துறந் தவன்
பாடை புகுந்திடிலோ?—வந்த
பத்தினி மார்சிறைப் பட்டிட வேணுமாம்
மூடக் கதையையெலாம்—நம்பி
மோசமுற் றூமிதைப் பேசிப் பயனில்லே
வாடும் பயிரலவோ!—உடன்
மாதர் மறுமணம் போற்றுதல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]



# ராஜா ராம் மோகன் ராய்.

திருச்சி கே. வி. எஸ் வாஸ் பீ. ஏ. (ஆனர்ஸ்)

[A Series of sketches on the life and career of Raja-Ram Mohun Roy specially compiled by the author for Mathar Marumanam.]

## அத்தியாயம் 1.

## ராம் மோகனர் காலத்தில் இந்தியா.

இந்தியாவின் தேச சரித்திரத்தைக் கூர்மையாகப் பரிசீலனை செய்து பார்ப்பவர்களுக்கு, அது திட்டமான மூன்று பெரும் பகுதிகளாகப் பிரிந்திருப்பது புலப்படும். ஒன்று முனீச்வரர்களும், யோகீச்வரர்களும், வேதபுராண இதிகாச ஆகம கர்த்தாக்களும், படை வீரர்களும் மலிந்திருந்த பண்டைக்காலம். இக்காலத்தில் கல்விச் செல்வத்திலும், பொருட் செல்வத்திலும், போர்த்திறமை யிலும், கிரியாம்ச சக்தியிலும் சிறப்புற்று விளங்கியது இந்தியா; புல்தரைகளாகவும், மரங்களடர்ந்த வனாந்திரங்களாகவுமிருந்த மேல் நாடுகளுக்கு நாகரீகத்தை நல்கியது இந்தியா; அனைவரையும் உய்ய வைக்க வேண்டுமென்று நல்லெண்ணத்தோடு வாழ்க்கையின் மகத்தான லட்சியங்களை அவர்களுக்குப் புகட்டி, தனது தத்துவங்களை யும் கலைகளையும், அன்புடன் அள்ளியள்ளிக் கொடுத்தது இந்தியா; அதனுடைய உயர்வைக்கண்டு உலகம் பிரமித்தது; செல்வத்தைக் கண்டு பொறாமையுற்றது; கலைகளையும், கவிதைகளையும் கண்டு கலக்கமடைந்தது! சுருங்கங் கூறுங்கால் பாரத நாட்டிற்குப் பொன்னாடென்னும் புகழ்ப்பெயரும் இக்காலத்தில் வழங்கிவந்ததெனலாம்.

அடுத்தாற்போல், பிரகாசம் பொருந்தியிருந்த இந்திய வானத்தைக் கார்மேகங்கள் சூழ்ந்து கொண்டன. தேச சரித்திரத்தின் இருளடர்ந்த இரண்டாவது காலமும் (மத்திய காலம்) ஆரம்பமாயிற்று. நாட்டின் நாகரீகம் ஸ்தம்பித்தது; மனோவலிமை மங்கியது; கவிதைகளும் கல்விப்பெருக்கும் பழைய சங்கதிகளாகி விட்டன; பசுமையுடனிருந்த கலைவிருக்ஷம் பட்டுப்போய் வீழ்ந்

தது; மண்ணுலக வாழ்க்கைக்கும் விண்ணுலக வாழ்க்கைக்கும் வழி காட்டிகளாக இருந்த மத சித்தாந்தங்கள் மூட நம்பிக்கைகளாக வும் முரட்டுப் பிடிவாதங்களாகவும் மாறிவிட்டன. வடமொழி யிலும், மாகாண பாஷைகளிலும் உண்மையான பாண்டித்யம் பெற்றிருந்த அறிஞர்களெல்லாம் அடியோடு மறைந்து விட்டார் கள். கடும் பதப்பிரயோகத்திலும், அற்பமான இலக்கண விஷயங் களைக் குறித்து அபாரமாகச் சண்டையிடுவதிலும், ஆர்வமுடைய அரைகுறைப் பண்டிதர்களே மலிந்திருந்தனர். கலைகளை ரஸிப்பவர்க ளில்லை; கலைஞர்களை ஆதரிப்பவர்களில்லை. மத உணர்ச்சி மட்டில் எல்லோரிடத்திலு மிருந்தது. ஆனால், அதுவும் தன்னலங்கருதித் தவறான மார்க்கங்களில் செலுத்தப்பட்டும் வந்தது!

ஞான வளர்ச்சியும், நல்லொழுக்கமும் இவ்வாறு சீர்குலை யவே, சமூகம் சடுதியில் பிற்போக்கடைந்தது. கண்மூடித்தனமான கட்டுப்பாடுகள் அதிகரிக்கலாயின. கற்சிலைகளைக் கடவுளெனக் கருதி வணங்கும் பழக்கம் கைலையங்கிரி முதல் கன்னியா குமரி வரையில் சர்வ சகஜமாயிருந்தது. பேய் பிசாசங்களை பூஜிப் பதும், காளி வீரன்களுக்குக் களபலி வழங்குவதும், குடிவெறி யில் கும்மாளமடிப்பதும் கோரமான காட்சிகளைத் தோற்றுவித்தன. உண்மையான மதம், உள்ள சுத்தி, நன்னடத்தை முதலியவை களுக்கு பதிலாக சமிக்ஞைகளும், சம்பிரதாயங்களும், அனுஷ்டா னத்திற்கு வந்தன.

தர்மம் தலை குனிந்தது; அதர்மம் வீடுகளிலும், வெளிப்புறத் திலும் செழித்து வளர்ந்தது! சமூகம் சிறு சிறு கூறுகளாகப் பிரிந்து சின்னபின்னமடைந்தது. விதியின் பயனாக வறுமையில் வீழ்ந்தவர்கள் தாழ்த்தப்பட்டோர்களாயினர்; தீண்டத்தகாதவர் களாயினர்; திரஸ்கரிக்கப்பட வேண்டியவர்களாயினர். இம்மட்டா? அவர்களது பிறப்புரிமைகளும் ஒவ்வொன்றாக ஆக்கிரமிக்கப்பட் டன. மனிதத் தன்மையற்றவர்களுக்கு மகத்தான மரியாதைகள் கிடைப்பது வழக்கமாகிவிட்டது.

நீதி தத்துவம் இருவகைப்பட்டது; ஆண்களுக்கு ஒரு நியா யம்; பெண்களுக்கு ஒரு நியாயம். ஆணாய்ப் பிறந்தவர்கள் அடுத் தடுத்தோ அல்லது ஒரே சந்தர்ப்பத்திலோ அனேக மனைவிகளை

மணக்கலாம்; மணந்த பெண்ணைக் காரணமின்றி ஒதுக்கி வைக்கலாம்; வரையின்றி உண்ணலாம்; விரும்பியதைச் செய்யலாம். ஆனால் பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கு இவ்வுரிமைகளில்லை; அவர்கள் ஆறு வயதுச் சிறுமிகளாயிருப்பினும் சரி; கலியாணமாகுமுன் கணவனைக் கண்டிராவிடினும், கலவி செய்திருப்பினும் இல்லாவிடினும் சரி; ஒரு முறை தாலி கட்டியவன் தாரணியை நீத்துவிட்டால் மறுமணம் செய்துகொள்ளலாகாது. நிம்மதியான வாழ்க்கையின் வசதிகளனைத்தையும் துறந்து, காராக்ரகங்களில் அடைபட்டுக் கிடக்கும் கைதிகளைப் போல் துன்பத்தில் உழலவேண்டும்; தலைச்சிகையை நீக்கி, ஆடையாபரணங்களை யொழித்து, அற்ப சுகங்களையும் விலக்கி, மனிதக் கூட்டமற்ற மலையடிவாரங்களிலும் வனாந்திரங்களிலும் வாழும் முனீச்வரர்களைப் போல் வாழ்க்கையை நடத்த வேண்டும். இதிலும் கொடுமை யாதெனில், இந்தியாவின் சிற்சில பாகங்களிலே, கணவனைப் பறிகொடுத்த கைம்பெண்கள் உடன்கட்டையேறித் தீயில் விழுந்து, சித்திரவதைகளுக்கு உட்பட்டுச் செத்து மடியவேண்டும். இதுதான் நடைமுறை சாஸ்திரம்; சர்வேச்வர சம்மதம்; பொதுஜனப் பிரீதி; புகழ்ச்சிக்குரிய செய்கை.

சமூக நிலைமை இங்ஙனமிருக்க, மத்தியகால இந்தியாவின் அரசியல் நிலைமையிலும் வெகு துரிதமான மாறுதல்கள் ஏற்படலாயின. மொகலாய மன்னர்களின் மாட்சி குறைந்தது. வீழ்ச்சியுறும் செங்கோலை வீரமுடன் ஏந்தும் வன்மை மகாராஷ்டிரர்களிடத்திலும் இல்லாமற் போய்விட்டது. கௌரவமான வர்த்தகர்களெனச் சொல்லிக்கொண்டு வந்த கிழக்கிந்தியக் கம்பெனியார் இந்தியாவின் அரசியல் அதிகாரத்தைச் சிறிது சிறிதாகக் கைப்பற்றிக் கொண்டிருந்தார்கள். ஆனால், நிர்வாகப் பொறுப்பை பிரிட்டிஷ் சர்க்கார் பூரணமாக ஏற்றுக்கொண்டு விடவில்லை. வர்த்தகம் செய்வதும், வண்டி வண்டியாகப் பொருள் திரட்டுவதும் இன்னமும் அவர்களது நோக்கமாக இருந்தன. சுதேசிகள் எந்த நிமிடத்தில் திடீரெனத் திரண்டு வந்து தாக்குவார்களோவென்ற அச்சம் ஒவ்வொரு ஆங்கிலேயனையும் உள்ளூர பயமுறுத்திக் கொண்டிருந்தது. இக்காரணத்தை முன்னிட்டே மக்களின் மதவிஷயங்களிலோ அல்லது அவர்களுக்கு மனக்கசப்பை உண்டுபண்ணத்தக்க காரியங்

களிலோ ஆங்கிலேயர்கள் தலையிட விரும்பாதிருந்தனர். உடன் கட்டையேறும் வழக்கம் மகா கொடுமையான தென்பதையும், மனிதத் தன்மையற்ற தென்பதையும், அடுத்தடுத்து வந்த எல்லா கவர்னர்களும் அறிந்திருந்தார்கள். ஆனால், கம்பெனி ஆட்சிக்குச் சாவுமணி அடிக்கப்பட்டு விடுமோ வென்ற அச்சமே அவர்களை இவ்விஷயத்தில் தலையிட வொட்டாது தடை செய்து கொண் டிருந்தது.

இத்தகைய சந்தர்ப்பத்தில்தான் நமது ராஜாராம் மோஹன் ராய் நாட்டில் அவதரித்தார். அவருடன் தேச சரித்திரத்தின் மூன்றாவது காலமும் ஆரம்பமாயிற்று. இங்கு வந்த மேல்நாட்ட வர்கள் நம்மிடமிருந்து பயின்றவைகளை நம்மிடமே திருப்பிப் படிக்கலானார்கள். தேசம் விழித்தெழுந்தது: மக்கள் உறக்கத்தை விட்டொழித்தார்கள். எல்லாத் துறைகளிலும் மறுமலர்ச்சி யேற் பட்டது. கல்வி செழித்தது. கலைகள் பெருகின. தேசீய உணர்ச்சி ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் ஏக காலத்தில் உதயமாயிற்று. பட்டுக்கிடந்த புகழ் விருக்ஷம் மீண்டும் பசுமையுடன் துளிர்த்தது.

பிறர் ஆட்சியிலிருப்பதைக் கண்டு நாம் ரோஷமடைந்தோம்; பரதேசப் பொருள்களிடம் வெறுப்புக் கொண்டோம்; சுதந்திர வாழ்க்கையில் மோகமடைந்தோம்; சுயராஜ்ய மார்க்கத்தைக் கண்டு கொண்டோம், நவ இந்தியா நமது கண்களுக்குப் புலப்பட் டது. அந்தக் காட்சியை நல்கிய பெருமை பெரியார் ராஜாராம் மோஹன்ராய் அவர்களுக்கே உரியதாகும்!

வியப்புறத்தக்க சிறப்புடனிருந்த வேதகாலத்தைப் பண்டைக் காலமென்றோம். மங்கிக்கிடந்த காலத்தை மத்தியகாலமென்றோம். மறுமலர்ச்சி யடைந்திருக்கும் மூன்றாவது காலத்தை என்னபெய ரிட்டழைப்பது? இதற்கு ராம் மோகன் ராய் சகாப்தமென்பதைத் தவிர வேறு பெயர் பொருத்தமாகாது. பெரியார்களின் வாழ்க்கை யைப்பற்றி எழுதுகையில், முதன் முதலாக அவர்கள் எந்தக் காலத்தைச் சேர்ந்தவர்கள்? எந்த நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள்? என்று சிந்திக்கின்றோம். ஆனால் நமது பெரியார் ராம் மோகன் ராய் அவர்களைப்பற்றி எழுதுகையிலோ அவர் அவருடைய காலத் தில் வாழ்ந்தாரென்றுதான் சொல்லவேண்டி யிருக்கின்றது.

ஏனெனில், அவர் வாழ்ந்தகாலம் அவரால் சிருஷ்டி செய்யப்பட்டது. அவர் மத்திய காலத்தில் பிறந்தார். ஆனால் அக்காலத்து மனிதனாகிவிட அவர் விரும்பவில்லை. இருள் சூழ்ந்த இந்தியாவில் நின்று கொண்டு ஒளி மிகுந்த நவ இந்தியாவைத் தூரத்தில் கண்டார். இடையில், எல்லையற்ற இன்னல்க ளிருப்பதையும் அவர் அறிந்து கொண்டார். கரடு முரடான வாழ்க்கைப் பாதையில் மனஞ்சலியாது நிமிர்ந்து நடந்து புதிய சகாப்தத்தைத் துவக்கி வைத்தார். அதற்கு அவருடைய பெயரைத்தவிர வேறு எப்பெயரைச் சூட்டுவது பொருத்தமாகும்.?

ராஜாராம் மோகன் ராய் ஒரு பெரிய தேசத்யாகி; கர்மவீரன்; மதத்தலைவர்! அவருடைய பொதுஜன சேவை ஒருவகைப் பட்டதன்று. பிற்போக்கடைந்திருந்த சமூகத்தைத் தட்டி யெழுப்ப அரும்பாடு பட்டார். கைம் பெண்களின் கண்ணீரைத் துடைக்கக் கணக்கற்ற கஷ்டங்களை யனுபவித்தார். கண்மூடித் தனமான பழக்க வழக்கங்களைக் குழிதோண்டிப் புதைக்கப் பலாது வெறுப்பிற்குப் பாத்தியமானார். ஜாதிமத பேதங்களை யொழித்து சமத்துவத்தையும் சாயுஜ்ய பதவியையும் சகலருக்கு மளிக்க புதியதொரு சித்தாந்தத்தையும் ஸ்தாபித்து வைத்தார். குறிப்பாக இந்திய மாதர்களும், இளங் கைம்பெண்களும் அவரை மறக்கவே முடியாது. பெண்களின் உரிமைகளைப் பாதுகாப்பதும், அவர்களுக்கு இழைக்கப்பட்டுவந்த கொடுமைகளை அகற்றுவதுமே அவருடைய முக்கிய லட்சியமாக இருந்தது.

(1) மாதர்தம்மை இழிவு செய்யும்
மடமையைக் கொளுத்துவோம்
வையவாழ்வு தன்னிலெந்த
வகையிலும் நமக்குள்ளே
தாதரென்ற நிலைமைமாறி
ஆண்களோடு பெண்களும்
சரிநிகர், சமான மாக
வாழ்வமிந்த நாட்டிலே!

(2) பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
பேணி வளர்த்திடும் ஈசன்

மண்ணுக்குள்ளே சில மூடர்—நல்ல
மாதர் அறிவைக் கெடுத்தார்
கண்களிரண்டினி லொன்றைக் – குத்தி
காட்சி கெடுத்திடலாமோ?
பெண்கள் அறிவை வளர்த்தால்—வையம்
பேதைமையற்றிடும் காணீர்!

(3) கற்புநிலையென்று கூறவந்தார்—இரு
கக்ஷிக்குமஃதைப் பொதுவில் வைப்போம்
வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக்கொடுக்கும்
வழக்கத்தைத்தள்ளி மிதித்திடுவோம்.

பெண்ணுரிமையை நிலைநிறுத்துவதின் பொருட்டு மகாகவி ஸ்ரீ சுப்ரமண்ய பாரதியார் மேற்கண்டவாறு மனமுருகப் பாடினர். இதேபோல் மாதர்களின் சமத்துவத்தை ஊர்ஜிதம் செய்வதற்காக ராஜாராம் மோகன் ராய் அவர்கள் எடுத்துரைத்த காரணங்களும் திரஸ்கரிக்க வியலாதவை.

“மிருக பலத்தில் மாதர்கள் ஆடவர்களைக் காட்டிலும் கீழ்ப் பட்டவர்கள். அவர்களது இயற்கையான பலவீனத்தை ஆடவர்கள் அக்ரமமான வழிகளில் பயன்படுத்திக் கொள்ளுகின்றூர்கள். மாதர்களின் உரிமைகளனைத்தையும் பறித்துக்கொண்டு, முற்போக்கடைவதற்கு முக்கியமாயுள்ள சாதனங்களனைத்தையும் திரஸ்கரித்து, “நீங்கள் பசையற்றவர்கள்; எதற்கும் தகுதியற்றவர்கள்!” என்று பிறகு ஏசுகின்றனர். இது எவ்வளவு தூரம் வாஸ்தவமானதாகும்? பெண்களுக்கு அவர்களுடைய முழுத்திறமையையும் காட்ட எப்பொழுது நீங்கள் சந்தர்ப்ப மளித்திருக்கின்றீர்கள்? அறிவை விருத்தி செய்வதற்கு அவகாசமும் வசதியுமளிக்காமலே அறிவிலிகளென்று அவர்களைக் குற்றஞ் சாட்டுதல் நீதியாகுமோ! யஜுர் வேதத்திலுள்ள ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் கடுமையான வேதாந்த விஷயங்களை யக்ஞவல்க்கியர் தமது மனைவி மைத்ரேயிக்கு உபதேசம் செய்தாரென்றும், அவைகளைப் பாராட்டத்தக்க வகையில் அவள் கிரகித்துக் கொண்டாளென்றும் திட்டமாகச் சொல்லப் பட்டிருக்கின்றது. கிரகிக்கும் தன்மையில் பெண்கள் பின்வாங்கிய

வர்களல்ல வென்பதற்கு அடுக்கடுக்காக அனேக உதாரணங்களைச் சுட்டிக்காட்டலாம்.

இரண்டாவதாகப் பெண்களின் அணிகலன் பேதைமை யென்றும், அவர்களுக்கு மனஉறுதி கிடையாதென்றும் குறைகூறுகின்றீர்கள். இதைக்கேட்க நான் ஆச்சர்ய மடைகின்றேன். மரணத்திற்கு நடுநடுங்கும் ஆண்கள் மலிந்த நாட்டிலே, மரித்த கணவனுடன் உடன்கட்டையேறி மடியச் சித்தமாயிருக்கும் பெண்களுக்குக் கோழைகளெனப் பெயரேற்பட்டிருப்பது விசித்திரமானதே!

மூன்றாவதாக, நங்கையர்கள் நம்பத்தகாதவர்களென்று சொல்லுகிறீர்கள். இருபாலர்களுடைய மனோபாவங்களையும் கூர்மையாக அலசிப்பார்த்தால் நம்பிக்கைத் துரோகக் கிருமிகள் எவருடைய உதிரத்தில் ஊறிக்கிடக்கின்றன வென்பது பட்டவர்த்தனமாகப் புலப்படும். ஒவ்வொரு கிராமத்திற்கும் சென்று ஆண்களால் வஞ்சிக்கப்பட்ட பெண்களின் தொகையையும், பெண்களால் வஞ்சிக்கப்பட்ட ஆண்களின் தொகையையும் கணக்கிட்டுப் பாருங்கள்; பெண்களின் தொகை ஆண்களைக்காட்டிலும் பத்துப் பன்னிரண்டு பங்கு அதிகமாயிருப்பதைக் காண்பீர்கள்.

நான்காவதாக, பெண்களுக்குக் காம உணர்ச்சி அதிகமென்றும், அவர்கள் சுதந்திரத்துடனிருந்தால் சடுதியில் கெட்டழிந்து விடுவார்களென்றும் சாற்றுகின்றனர். என்ன விந்தை! இருபாலார்களுடைய திருமண முறைகளையும் நோக்குங்கள். அனேக மாதர்களை அடுத்தடுத்து மணம் செய்துகொள்ளும் ஆண், சிற்றின்ப உணர்ச்சிக் குறைவினால் அங்ஙனம் செய்கின்றானா? தாலி கட்டியவன் தாரணியைத் துறந்துவிட்டால், வாழ்க்கையின் பிற்பகுதியைத் தனித்துக் கழிப்பவளும், உடன் கட்டையேறித் தீயில் மடிகின்றவளும், காம உணர்ச்சி அதிகரிப்பால் அங்ஙனம் செய்கின்றனளா? இக் கேள்விகளுக்கு விடையளியுங்கள்!

அடுத்தாற்போல், நாட்டின் கல்வி விஷயத்தில் ராஜாராம் மோகன்ராய் ஆற்றியுள்ள அருந் தொண்டுகளை நவ இந்தியா நிச்சயமாக மறக்க முடியாது. நம் நாடு, மேல்நாடுகளுக்குச் சமதையான ஸ்தானத்தைப் பெறவேண்டுமானால், அவைகளிலுள்ள கல்வி முறை

இங்கும் புகுத்தப்பட வேண்டுமென்று அவர் திடமாக நம்பினர். அதற்காக பிரிட்டிஷ் சர்க்காரையும், பிரத்யேக நபர்களையும், கிறிஸ்தவப் பாதிரிமார்களையும் இடைவிடாது தூண்டி, ஆங்கிலக் கல்வி போதனையை நாட்டில் பரப்பினர். பாரதநாட்டில் ஆங்கில பாஷா போதனைக்காக முதன் முதலாய் ஏற்பட்ட பொது ஸ்தாபனம் கல்கத்தா ஹிந்துக் கல்லூரியேயாகும். இது 1815-ம் வருடம் ராம் மோகனரின் ஆத்மீக சபையில் நடந்த ஒரு விவாதத்தின் பயனாக நிறுவப்பட்டது. இதைத் தவிர 1822-ம் வருடம் தமது சொந்தச் செலவில் ஆங்கிலோ—இந்தியக் கல்லூரி ஒன்றையும் ஸ்தாபித்து, அதனுடைய நிர்வாகப் பொறுப்பை பூராவாக அவர் ஏற்றுக்கொண்டிருந்தார். இக் கல்லூரியைப்பற்றி அதனுடைய விஸிட்டர்களில் ஒருவரான திரு. வில்லியம் ஆடம் என்பவர் 1827-ம் ஆண்டில் எழுதுவதாவது:—

ராம் மோஹனரில் கல்லூரியில், சுமார் அறுபது அல்லது எழுபது மாணவர்களுக்கு ஆங்கிலம் போதிக்கப் பட்டு வந்தது. அதில் 150 ரூ. மாதச் சம்பளத்தில் ஒருவரும், 70 ரூ. மாதச் சம்பளத்தில் ஒருவருமாக இரு ஆசிரியர்களிருந்தார்கள். கல்லூரியின் செலவை ராம்மோகனரே கொடுத்து வந்தார்.

மகரிஷி தேவேந்திரநாத் தாகூர் தமது இளமைக் கல்வியை ராம்மோகனரின் ஷை பள்ளியில்தான் பெற்றாரென்பது குறிப்பிடத்தக்கது. ராம்மோகனர், ஆங்கிலத்தில் மட்டுமின்றித் தாய் பாஷையிலும், மாகாண பாஷைகளிலும் அளப்பரிய பற்றுக்கொண்டிருந்தார். சமஸ்கிருதம், வங்காளம், ஹிந்தி முதலிய பாஷைகளின் மறுமலர்ச்சிக்கு அவரே மூலகாரணராவர். புராதன ஹிந்து மதத்தின் மேன்மையை உலகினருக்கு உணர்த்திக் காட்டுவதற்காக வேத நூல்களின் சிறந்த பகுதிகளெல்லாம் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெள்ளையர்களிடம் பரிமாறினர். சுருங்கக் கூறுங்கால் இந்தியாவின் முன்னேற்றத்திற்காக சகல துறைகளிலும் அடிபட்டு, உண்மையான ஊக்கத்துடனும், உற்சாகத்துடனும் உழைத்து இறுதியில் வெற்றி பெற்றார். இத்தகைய பெரியாரின் வாழ்க்கைச் சரிதையை ஒவ்வொரு இந்தியனும் அறிந்து கொள்ளவேண்டியது அவசியமாகும்.

———

# பால்ய விதவைகளின் பரிதாப நிலை.

ஸ்ரீமதி பி. நா. சோ. விசாலாட்சி அம்மாள்.

நமது இந்து சமுகத்தினரிடத்தில் குடிகொண்டுள்ள கொடுமையான பழக்கம் இளமங்கையர்களை விதவைகள் என்று ஒதுக்கிவைத்துள்ளதான செயல். அந்தோ பரிதாபம். நினைக்கும்போதே நெஞ்சம் வெடித்துவிடும் போலிருக்கிறது. ஒரே இல்லத்தில் நாலைந்து சகோதர சகோதரிகளுடன் பிறந்த நங்கையொருத்தி தனது 18, 20-வது வயதில் கணவனை இழந்து பிறந்தகத்தில் இருக்கையில், தன்னுடன் பிறந்த தமக்கை தங்கை முதலியவர்கள் தினம் விதவிதமான புஷ்பங்களை அணிந்து பொட்டிட்டு ஆடையாபரண அலங்காரத்தில் ஈடுபட்டு புதிது புதிதாய் அலங்கரித்து ஆனந்தமடைகின்றபோது, அதே இடத்தில் இளமையும் எழிலும் மிக்க யுவதியான பெண் ஒரு வெள்ளைத்துணி யுடுத்து அணிகளிழந்து பூவிழந்து பொட்டிழந்து மனம் வெதும்பி உருகுதல் தினம் நமது வாழ்க்கையில் எவ்வளவோ இல்லங்களில் காண்பதானதொரு சர்வசாதாரணக்காட்சியாக உள்ளது. பெற்றோர்கள் தங்களது இளங்குழந்தைகளை அவர்கள் அறிவு தெரிவதற்கு முன்னரே மணத்தை முடித்து வைத்து விடுவதும், ஆயுள் முடிந்து மாண்டுபோனவருக்காக ஒன்றுமறியாத பெண்களை வலிதில் அமங்கலிகளாக்கி விடுவதும் அத்தகைய பெண்கள் கல்யாணம் நடந்ததையும் கணவனிறந்ததையும் உண்மையில் நடந்தவையா? அல்லது கனவின் தோற்றமா வென எண்ணி ஏங்குவதும் இடையில் தோன்றிய ஒருவர் தன்னுடைய கழுத்தில் தாலியைக்கட்டிவிட்டு விதியாலோ வியாதியாலோ அவர் மரணமுற்றால் சுற்றியிருப்பவர்கள் சூழ்ந்து கொண்டு தன்னுடைய ஆடை அணிகள் அலங்கார மெல்லாவற்றையும் அழிப்பதற்கு விரைந்து முந்துவதும், விதவை விதவையென்று குறிப்பதுவும் கண்டு ஐயோ சண்டாள உலகமே இவ்வுலகத்தில் இத்தகைய கொடிய நீதியும் உண்டோ! கணவனிறந்தால் அவரால் அணிவிக்கப்பட்ட தாலியை எடுப்பதுடன் நில்லாமல், குழவிப்பருவ முதல் அணிந்த ஆடை அணிகள் பொட்டு மஞ்சள் யாவையும் ஏன்

இழக்கவேண்டும்? அது மட்டுமா? வீட்டை விட்டு வெளியில் செல்லவும் முடியாது. மீறிச்செல்லும்போதும், விதவை எதிரில் வந்துவிட்டாள் ஐயோ காரியம் கெட்டுவிட்டது என்பனபோன்ற இழிசொல்லுக்கும் ஆளாக நேருகின்றது. எல்லா மனிதர்களாலும் சகலமான போக பாக்கியத்திலும் சர்வ மங்களத்திலும் விலக்கப்பட்டு பரிதாபமான நிலைமையில் வாழும் சகோதரிகளின் நிலைமையைச் சிந்தித்துப் பாருங்கள். விதவையான மங்கைக்கு மனித உணர்ச்சியே இல்லாது போய்விடுமா. அல்லது இளமை மாறி முதுமைப் பருவம் வந்துவிடுமா? அவர்கள் கூந்தல் பரிமள தைலத்தையும் பூவையும் ஏற்றுக்கொள்ள மறுத்து விடுமா? பகுத்தறிவுடையவர்களான மக்கள் இவைகளை ஏனோ சிந்தியாதிருக்கின்றனர்.

எவரிடமேனும் இதுபோன்ற விஷயங்களைச் சொன்னால் உடனே சொல்லுகின்றவர்களின்மேல் சீறிவிழுகின்றனர். விதவைகளாவதும் இதர செயலும் அவரவர்களின் தலைவிதியெனக் கூறுகின்றனர். வாஸ்தவம். தலைவிதி என்பது உண்மையானல் அவ்விதி இருசாராருக்கும் பொதுவில்லலவா இருக்கவேண்டும். ஆண்பாலருக் கொருவிதமும் பெண்பாலருக் கொருவிதமுமாக இருக்க முடியுமா? மனைவியை இழந்த ஆடவரும் எல்லா சுகபோகத்தையும் துறந்து ஏகாங்கியாய் ஏன்வாழவில்லை. வயது அறுபதைக் கடந்த பின்னரும் எண்பதை எட்டியபிறகும் 5-வது 6-வது மனைவிகளை அடைய முயலுவானேன்! என்ன அநீதம்! ஆணுக்கொரு நீதி பெண்ணுக்கொரு நீதியாகுமா? ஆண்மக்கள் மனைவியை இழந்தால் மறுவிவாஹம் செய்துகொள்ளக் கூடாதென்று தடுக்கப்பட்டால் வாளா விருப்பார்களா? அவ்விதமான கண்டிப்பு ஏற்பட்டால் விதவைகள் விஷயத்தில் கொண்டிருக்கும் இரக்கமற்ற செய்கை எத்தகையதென்பது ஒருவாறு உணர்தல் கூடும். அநுபவித்தாலல்லவா உண்மை நிலைமையை உணரக்கூடும். தங்கள் வரையில் எத்தனை மனைவிகளையும் அடையலாமென்றிருந்தால் எவ்விதம் அவர்கள் விதவைகளின் துயரத்தை அறியமுடியும்? பணம் ஒன்றையே பிரதானமாகக் கருதித் தாம் பெற்ற மக்களையே பலியிடுவதற்கொப்ப மரணப் படுக்கையிலிருக்கும் வயோதிகர்கட்கும், வியாதியஸ்தர்கட்கும் ஒருபுறமும், பால்ய விவாஹம் மற்றொரு

புறமும் இளங்கன்னிகளின் வாழ்வைப் பாழ் படுத்துகின்றன. அனியாயமாக அத்தகைய பால்ய விதவைகள் தங்களது பருவ இச்சைக்கு ஆளாகி நிறையழிந்து கற்பிழந்து கருச்சிதைத்தல், சிசுஹத்தி முதலியவற்றிலும் பிரவேசிக்க நேர்ந்து விடுகின்றது என்பதும் உலகறிந்த உண்மை. எவ்வளவு கட்டுக்காவலிலுள்ளவர்களாக விருப்பினும் அனேக துஷ்டர்களுடைய சூழ்ச்சிக்கு ஆளாகி அல்லலுறவும் நேர்ந்து விடுகின்றது. ஆண்பாலரிலும் பெண்பாலரிலும் தம்மைத்தாம் அடக்கிக் காத்துக் கொள்ளும் தெய்வத்தன்மை பொருந்திய சக்திவாய்ப்பது வெகு துர்லபம் என்பது எனது அபிப்பிராயம். வாய்ப்பேச்சளவில் வேதாந்தம் பேசலாம். ஜிதேந்திரியத்வம் வகிக்கின்றேன், மனது திடமாக விருந்தால் எத்தகைய சலனமுமில்லாமல் இரும்புபோல் கடினமாயிருந்து விடலாமென்று மற்றவர்கட்குப் போதிப்பது வெகு எளிதுதான். ஆனல் அத்தகையோர் உலகில் இல்லவே இல்லையென்று நான் கூறவில்லை. அத்தகையவர்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைந்தவர்கள்தான் இருக்கக்கூடும். லக்ஷத்தில் ஒருவர் சுகமுனிவர் போன்று எவ்விஷயத்திலும் பற்றற்றிருந்தால் இக்கலிகாலத்தில் அரிது. மகா பெரிய தவ சிரேஷ்டர்கள் எல்லாம் தவம் குலேந்து பாழாகி யிருக்கையில் கேவலம் நாம் எம்மட்டாதல் முடியும். பருவகாலமும் ஆசை மோகம் காதல் அன்பு முதலியவைகள் அந்தந்தக் காலத்தில் தமது வீரியத்தைக் காட்டா தொழியா. மகா மேதாவியும் பாண்டித்யம் பொருந்திய புனிதவதியும், யோகிகளுக்குச் சமமான யோக்கிதையுடைய ஸ்திரீ ரத்னமுமாகிய மணிமேகலையைப் பருவகாலத்தின் சேஷ்டை பாதிக்காமல் விட்டதா? அவ்வாறிருக்க மற்றையோரைப் பற்றிக் கேட்கவேண்டுமா?

விதவா விவாகத்தை ஆதரித்துப் பேசுபவர்கள், மேல் வேஷமாக வீராவேசத்துடன் மார்தட்டிப் பேசுவது மட்டும் போதாது. அவர்கள் வீட்டிலிருக்கும் பால்ய விதவைகளின் பரிதாபத்தை அவர்கள் நிவர்த்திக்க வழிதேடினர்களில்லே. ஒவ்வொருவரும் எவரேனும் ஒருவர் செய்து வழிகாட்ட வேண்டுமென்று எதிர் பார்த்துக்கொண்டிருத்தல் கூடாது. எல்லோரும் இவ்விதம் மீனம் மேஷம் பார்த்துக் கொண்டிருந்தால் விமோசன மடை

வது எப்பொழுதோ! தற்காலத்தில் உலகம் மாறி, இருக்கும் தன்மை யாவரும் அறிந்த விஷயமே. பண்டையகாலப் பழக்கத்திற்கும், தற்காலத்துப் பழக்க வழக்கத்திற்கும் மலைக்கும் மடுவிற்குமாக ஆய்விட்டது. காலப்போக்கின் கிரமத்தில் காலம் மாறுவதுபோல மற்ற யாவும் மாறுகின்றன. மனிதர்களின் பழக்க வழக்கங்கள் யாவும் மாறுகின்றன. சனாதனத்திலும் வைதீகத்திலும் திடமும் தீவிரமுமிருந்த சமூகத்தாரான பிராமண சமூகத்தார் காலரீதிக்கு ஏற்ப விதவா விவாஹம் அவசியமென்பதுணர்ந்து ஆதரித்துச் செயலில் நடத்திக்காட்டி வருகின்றார்கள். எந்த மரபினரும் காலப்போக்கை அனுசரித்து தங்களுடைய பிடிவாதமான மனோநிலையைச் சீர் படுத்துவதான முறையில் சீர் திருத்தத்தை ஆதரிப்பதுதான் அறிவுடைச் செயலாகும். எவ்வளவு உறவினர்களிருப்பினும் ஒரு நங்கைக்கு உண்மையான உறுதுணை ஒரு நாதன் காப்பாளியாக விருப்பதுதான். நாதனற்ற நங்கைகளின் துன்பங்களும் துயரங்களும் எண்ணவும் சொல்லவும் இயலாதனவாயுள்ளன. பாலிய விதவைகளின் அலங்கோலமான கோர சம்பவங்களைப் பற்றி பல பத்திரிகைகளில் தினம் பார்க்கின்றோம். அநியாயமாக விதவைப் பெண்கள் பிறர் சூழ்ச்சிக்கு வயப்பட்டுப் பாழாகி நாசமடைந்து போய்விடுகிறார்கள். முன்னோர்கள் விதவா விவாகத்தை ஆதரியாதிருந்தார்களென்று ஒருசாரார் கூறுகின்றார்கள். ஆதரித்துள்ளார்கள் என்பதற்குப் பல சான்றுகளிருக்கின்றன வானாலும் நான் அத்தகைய தர்க்கரீதியைப்பற்றி எழுத விரும்பவில்லை.

முற்காலத்தில் ஒவ்வொருவருக்கும் நியாயக் கட்டுப்பாடும் தர்ம சிந்தனையும் சத்திய பரிபாலனமும் நிரம்பி இருந்தன. தீய ஒழுக்கம் பிறரைக் கெடுப்பது படாடோபம் மோசக்கருத்து சுயநலம் முதலிய துர்க்கிருத்தியமான எண்ணங்கள் பெரும்பாலோரான ஜனங்களிடத்தில் மருந்துக்கும் கிடைக்கமாட்டா. அக்காலத்து நெறிகள் பழக்க வழக்கங்கள் யாவும் ஒழுங்கான முறையில் நன்றாக நடந்து வந்தன. இக்காலத்திலோ யாவும் அவற்றிற்கு நேர் மாறாக விருப்பதால் அனேக கெடுதல்கள் தானாக விளைந்து விடுகின்றன. இளமையில் தைத்த சட்டை எவ்விதம் வயதேற வேற சோமல்

புதிது தைக்க் நேரிடுகின்றதோ அதே முறையில் காலத்தை அனுசரித்து நடை முறைகளையும் திருத்திக் கொள்வதே அறிவுடையார் செயலாகும். இதர நாட்டினர் எவ்விதம் காலப்போக்கிற் கிசைய நடந்துகொள்ளுகின்றன ரென்பதையும் கவனித்தல் அவசியம். வைதவ்யமென்ற கொடுமையை அனுஷ்டியாத இதர சமூகத்தினரோ நாட்டினரோ பூகம்பத்தால் அழிக்கப்படவில்லை. அவர்கள் க்ஷேமமாகத்தான் வாழ்கின்றனர் . என்பதையும் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். ஓர் இல்லத்தில் வாழாமலோ அல்லது மணம் சீக்கிரம் நடத்தப்படாமலோ, இருப்பதன் காரணமாய் ஒரு பெண் மனம் நொந்தால் அந்தவீடு க்ஷேமமடையாமல் க்ஷீணித்துப் போய்விடுமென்று பெரியவர் வாயிலாகவும், கதைகள் மூலமாகவும் கேட்டுள்ளோம். இதே கதி நமது நாட்டில் குறிப்பிட்ட சில சமூகத்தாரிடையே விதவைகள் மனம் வெதும்பிப் புழுவெனத் துடித்துத் துயருற நேர்வதால் குறிப்பிட்ட சமூகம் மட்டிலுமல்ல நமது நாடே க்ஷேமமடையாமல் சீர்கெட்டுத் தியங்குமென்பது சிறிதும் மிகையாகாது. ஒருநாடு க்ஷேமமுற வேண்டுமானால் சமூக சீர்திருத்தம், பெண்கள் முன்னேற்றம் ஏற்பட வேண்டியதுடன் அடிமை மனப்பான்மை அறவே ஒழிந்தாலன்றி கதி மோக்ஷமடைய வியலாதென்பதே எனது அபிப்பிராயம். விதவைகள் துயர்பற்றி வரையவேணுமானால் எல்லையற்ற பக்கங்கள் வரையக்கூடும். ஆனால் விரிவஞ்சி இத்துடன் இதை முடித்து இனியொரு சந்தர்ப்பம் கிடைத்தால் சிறிது எனக்குத் தெரிந்தவரையில் எழுதலாமென எண்ணி இத்துடன் முடிக்கின்றேன். சமூக சீர்திருத்தப் பிரிய இளைஞர்காள்! விழியுங்கள்! கதியற்ற கட்டழகிகளான விதவைகளின் துயர்நீக்கக் கங்கணம் பூண்டு இடையறாது தொண்டு செய்து பேச்சளவில் நில்லாது செயலில் காட்டுங்கள்.

---

**துணை யிழந்தாரை**

**மணப்பது புண்ணியம்.**

—மெய்யறம்.

# விதவைச் சகோதரிகளுக்கு வேண்டுகோள்.

S. ரங்கம்மாள்—மலாக்கா.

அன்பார்ந்த சகோதரிகளே! நம்நாட்டில் நிகழும் பலகொடுமைகளில் விதவைகளின் கொடுமை பெரிது. அதன் கொடுமையினிற் சிக்கிக் கெடுவதைக் காட்டிலும் மறுமணம் செய்து கொள்வதில் யாதொரு கெடுதியுர் ஏற்பட்டுவிடாது என்பது எனது கருத்து. நமது பெற்ஞேர் பால்மணமாருத பருவத்தில் மணம் செய்து பார்க்க வேண்டுமென்று ஆசைகொண்டு மணம் செய்து விடுகின்றனர். மணம் செய்த சில தினங்களுக்குப் பிறகு மணகன் இறந்துவிடுவானுகில் நாம் விதவைத்தன்மை அடைந்து விடுகிறேம். ஆனல் நாம்தான் விதவைத்தன்மை அடைகிறேமே தவிர நம் இயற்கையான குணங்கள் விதவைத்தன்மையை அடையவில்லே. அந்நிலேமையில். மோகம் குலமறியாது என்பதுபோல் நம் வேலேக்காரனே நமக்கு இளேய வயதுடையவனே சகோதரனே தகப்பனே மற்ற யாரோ ஒருவரால் தூண்டப்பட்டால் நம் இயற்கையின் தன்மையால் குணம் மாறிப் பல இடஞ்சல்களில் சிக்கிக்கொள்கிறேம். அப்படிப் பிறால் தூண்டப்பட்டு நாம் அடையும் கஷ்டம்பல. அதாவது நாம்தான் விதவையாச்சே (கடவுளே தலேயில் எழுதி அனுப்பினரே) கர்ப்பம் வராமல் இருக்கக் கூடாதா? அதுவும் இல்லே. நம்பந்துக்களுக்கும் ஏனேய சகோதரர்களுக்கும் பயந்து நம்முடைய இயற்கைக் குணத்திற்கு சுதந்திரம் கொடுத்து விட்டால் கர்ப்பம் வந்து நம்முடைய நிலேமையை வெளிப்படுத்தி விடுகிறது. அதற்குப் பயந்து நமக்கு ஏற்படும் கர்ப்பத்தைச் சிதைக்க எத்தனிக்கிறேம். அதனல் நாம் அவமானம் அடைவதோடு நம் சரீரமும் கெட்டுவிடுகிறது. அத்தோடு அல்லாமல் நம்மைக் காப்பாற்றக்கூடிய சக்தி அற்றவர்களோடு கூடி வெளிப்புறப்படும் சகோதரிகள்படும் கஷ்டம் கொஞ்சமல்ல. அதாவது இங்கிருந்தால் நம் இயற்கை அன்பைப் பயமில்லாமல் வெளிக்காட்ட இயலாத நிலேமையில் வெளியில் வெளியூர்களுக்குச் சென்றுவிட்டால் நம் இஷ்டத்தின்படி நடக்கலாம் என்று இதோபதேசம் கூறி அழைப்பதனல் நாமும்

சரி என்று அத்தருணம் இருக்கும் நிலை நமக்குக் கெடுதலோ நன்மையோ என்று அறிய முடியாமல் சரி என்று புறப்பட்டுப் போய் விடுகிறோம். நம் கையில் பொருள் உள்ளவரை நம்மோடு கலவி புரிந்து சுகமனுபவித்து விட்டுப் பொருள் அற்ற காலத்தில் நம்மைத் தெருவில் விட்டதோடு அல்லாமல் அவர்களும் புறப்பட்டுத் தங்களுடைய மனைவி மக்களுடன் சேர்ந்து கொள்ளுகின்றனர். நமக்கு யாதொரு ஆதரவு இல்லாமலும் நம் உறவினரோடு கலந்து வாழ முடியாத நிலைமைக்கும் ஆளாகிறோம். அவ்வாறு கெட்டு அலைவதைவிட மறுமணம் செய்து கொள்வதில் என்ன தவறுதல் ஏற்பட்டுவிடுமென்று நினைக்கின்றீர்கள்! அல்லது நாம் இயற்கையின் குணத்தை அடக்கி சாமர்த்தியமாக விருந்தாலும் "அவள் ஆஷாட பூதிமாதிரி இருக்கிறாள் கெட்ட நடவடிக்கை இல்லாமலில்லை; ரகசியமாக நடந்து வருகிறது; வெளிக்குத் தெரியாதமாதிரி நடந்துகொள்ளுகிறாள்" என்றும், தனிப்பட்ட முறையில் எங்காவது செல்லநேர்ந்து விட்டால் அங்கு வந்து சரச வார்த்தை புகலுவதும், அதற்கு இசையாவிட்டால் நமக்கு ஏதாவது கெடுதலோ கெட்ட பெயரையோ உண்டாக்கும் தன்னலப் புலிகள் வசிக்கும் நாட்டில் நாம் ஒழுங்காக விருப்பது அசாத்தியமான காரியமாகும். சகோதரிகளே! நாம் ஏன் இம்மாதிரியான துன்பத்திலாழ்ந்து கொண்டிருக்க வேண்டும்? ஆனால் மரியாதையாக மணம் செய்துகொள்ள நம்பந்துக்கள் முன்னாடி இடந்தரமாட்டார்கள். பின்னாடி நல்லதுதானே என்று கூறிக்கொள்வார்கள். முதலில் நமக்கு யார் ஒத்தாசை செய்வார்கள் என்று சிந்திக்கவேண்டாம். நம் சகோதரிகள் மரகதவல்லி அம்மையார், நீலாவதி அம்மையார் இதற்கு வேண்டிய வசதிகளும் உங்களுக்கு வேண்டிய ஒத்தாசைகளும் புரிவார்கள். உங்கள் உறவினரிடத்தில் கூற வெட்கமாய் இருந்தாலும் மேற்கண்ட சகோதரிகளுக்கு நீங்களே கடித மூலியமாக எழுதி உங்களுக்கு வேண்டிய சவுகரியங்களைத் தெரியப்படுத்தினால் எவ்வளவு ரகசியமாக உங்களுக்கு நன்மையைத் தேடமுடியுமோ அவ்வளவு நன்மையைத்தேடி உங்களுக்கு உதவி செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஏன் என்றால் மற்ற நாடுகளில் பெண்களுக்கு இவ்வளவு கொடுமை கிடையாது. நம் நாட்டில் மட்டும் பெண்களின் கொடுமை அதிகமாக இருக்கிறது. பெண்

மக்களை நாம் விடுதலை செய்வதோடு மூடப்பழக்க வழக்கங்களைத் தகர்த்தெறிய வேண்டும் என்ற நன்னோக்கமே தவிர நம்மால் ஏதோ வருமானம் தேடிப் பிழைக்கலா மென்ற கருத்துடன் இவ்வரும் பெருந் தொண்டிற் புகவில்லை என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். மற்ற ஜாதி அதாவது பிராமணர் முதல் ஆதித் திராவிடர் வரை மறுமணம் செய்து கொள்ள முன்வந்து விட்டார்கள். ஆனால் செட்டிமார் நாட்டில் பலவழிகளில் கெட்ட பெயர்கள் வெளி ஆகிறதே தவிர மறுமணம் செய்துக் கொள்வதற்கு முன்னுக்கு வாராதது மிகவும் பிற்போக்கான காரியமாகும். ஏன் என்றால் அவர்களுக்குப் போதிய பொருள் இருந்தும் ஒரு சகோதரியாவது தைரியமாக முன்வந்து மறுமணம் செய்து கொள்ளவில்லை என்றும் நம் சமூகம் பாழடைந்து கிடக்கிறதே என்னும் நோக்கத்துடன் சமீபத்தில் மாதர் மறுமண சகாய சங்கம் ஒன்று ஸ்தாபிதப் படுத்தி இருக்கிறார்கள். அது ஆண்களும் பெண்களும் சேர்ந்து ஒத்துழைக்கும் சங்கமாகத்தான் இருக்கிறது. அதில் அநேகமாக விதவைச் சகோதரிகள் அங்கத்தினர்களாகி தங்களுக்குப் பொருத்தமற்றதாய் இருந்தாலும் பால்ய விதவைகளுக்கு மணம்புரிய ஆவல் கொள்ளும் சகோதரிகளுக்கு இதோபதேசம் கூறி அவர்களுக்கு வேண்டிய வசதிகளை அளிக்கவேண்டும். மாதர் மறுமணம் என்னும் பத்திரிகைக்கு சந்தாதாராகச் சேரவும் பத்திரிகையை வாசிக்கவும் முதலில் தூண்டப்பட்டால் உலக விஷயங்கள் தெரிந்து அதன் பிறகு தைரியமாக முன்வரக்கூடும் என்பது எனது கருத்து. ஆனால் முன்னடி "மாதர் மறுமணம்" என்றால் நம் பாட்டன் பாட்டிகள் என்னமோ கெடுதலாக நினைத்துப் பயந்து வாசிக்க விடமாட்டார்கள். அதற்கு அஞ்சாமல் தற்காலம் உலகம் முற்போக்குக்கு வந்துவிட்டது என்றும் நாமும் நம் சமூகமும் முன்னேறினால்தான் நம் நாட்டில் உள்ள விதவைகளின் துயரை நீக்க முடியும் என்றும் தைரியமாக முன்வரவேண்டும். சகோதரிகளே! இத்தொண்டிற்கு முன்னணியாக நிற்கும் சகோதரிகளுக்கு அன்பு பெருகும்படி முன்வர வேண்டும் என்றும் வாழ்வற்ற விதவைச் சகோதரிகளுக்கு வழிகாட்டியாகவும் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமான மென்று வாழ முயலவேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன்.

---

# பெண்ணின் பெருமை.

சுவாமி சுத்தாநந்த பாரதியார்.

1. வெள்ளி வெளுக்குது பெண்மணியே—பட்ட
வேதனை தீருது கண்மணியே!
உள்ளம் விழித்தெழு பொன்மணியே—பிறப்
புரிமை கேட்கத் துணிந்திடுவோம்!

2. கட்டுண்ட வாழ்வினி ஞச்சுதடீ—அந்தக்
காலம் மலையேறிப் போச்சுதடீ!
வெட்டொரு துண்டெனப் பேசிடுவோம்—மாதர்
வீர விடுதலை பெற்றிடுவோம்!

3. வீட்டிற் கரசியும் பெண்ணன்றோ—வீரர்
விளைந்த கற்பகம் பெண்ணன்றோ
நாட்டின் சமபங்கு பெண்ணன்றோ—பொது
நல வலக்காம் பெண்ணன்றோ?

4. காதல் துளிர்ப்பதும் பெண்ணாலே—வாழ்வின்
கதை வளர்வதும் பெண்ணாலே
ஆதாரமான மனையறம் பூத்துநல்
அன்பு கனிவதும் பெண்ணாலே

5. தீரர் விளைவதும் பெண்ணாலே—கலைச்
செல்வஞ் செழிப்பதும் பெண்ணாலே
பாரி லழகுஞ் சுவையு மமுதும்
பரந்து தழைப்பது பெண்ணாலே!

6. பெண்ணின் பெருமையைப் பாடிடுவோம்—மடப்
பேதைத் துயர்களைச் சாடிடுவோம்
விண்ணெட்ட வெற்றிக் கொடிபிடிப்போம்—சக்தி
விளங்க வாழ்த்தி முரசடிப்போம்!

# விதவைக்கு விமோசனம்!

ஸ்ரீமதி கே. வீ. எஸ். தேவா எழுதுவது.

விதவை! விதவை! விதவை!! மூன்றே எழுத்தக்களடங்கிய இச்சிறு பதத்தைச் செவியுற்ற மாத்திரத்தில் இந்திய இளமங்கைகளின் மனம் எப்பாடு படுகின்றது. வறுமையும் நோயும், வாழ்க்கையிலே படக்கூடிய மற்றும் பலவகையான கஷ்ட நஷ்டங்களையும் பொறுமையுடன் சகித்துக்கொள்ளும் மாதர்களு மன்றோ இதற்கு அஞ்சுகின்றனர்? இதன் காரணம் என்ன? விதவைத்வம் அவ்வளவு கொடியதா? கொடியதாயின் அதை நம் நாட்டு மக்கள் இன்னமும் உணரா திருப்பதேன்? மாதர் மறுமணத்திற்கு சாதகமாகவும் பாதகமாகவுமுள்ள பல்வேறு வகையான பிரச்னைகள் யாவை?

விதவைகளெனக் குறிப்பிடுகையில் மறுமணம் செய்துகொள்ளத் தகுதியுடையவர்களா யிருக்கும் இளம் கைம்பெண்களைப்பற்றி மட்டுமே இங்கு பிரஸ்தாபிக்கப் படுகின்றது. வாழ்க்கைப் பாதையிலே வெகுதூரம் வரையில் சென்று விட்ட வயோதிக மாதர்களின் நிலைமையைப்பற்றி இங்கு அதிகமாக வற்புறுத்தப்படவில்லை.

விதவைத்வ மென்பது இதா நாடுகளெல்லா வற்றையும்விட நம் நாட்டிலேயே அதிகமாகவும் மிக்க பயங்கரமாகவு மிருக்கின்றதென்பது வெளிப்படை. இளம் விதவைகளின் தொகை நம் நாட்டில் நாளுக்குநாள் மலைபோல் பெருகி வருவதற்கு முக்கியமாக இரு காரணங்கள் தென்படுகின்றன. ஒன்று பால்ய விவாகம். மற்றொன்று மாதர் மறுமணத்தடை விதிகள். இவ்விரண்டும் பிற்காலத்தி லேற்பட்ட சமூகக் கொடுமைகளே யன்றி பண்டை இந்தியர்களின் பழக்கத்திலிருந்து வந்தவைகளன்று. உதாரணமாக புராதன இந்துக்களின் நூலாகிய மனுதர்ம சாஸ்திரத்தைப் புரட்டிப் பார்த்தால் புஷ்பவதியான பிறகு பெண்களை மணம் செய்து கொடுப்பதும், பதியைப் பறிகொடுத்த பாவைக்கு மறுமணம் செய்து வைப்பதும் ஈசுவரப்ரீதிக்கு மாறானவைகளல்லவென்பது புலப்படும்.

மனுதர்ம சாஸ்திரத்திலேயோ அல்லது இதர புராதன நூல்களிலேயோ விதவா விவாகம் தவறல்ல வென்று சொல்லப்பட்டிருக்கின்றதே யன்றி ஏன் பலமாக வற்புறுத்தப்பட வில்லையென்று நமது வாசக நேயர்களிற் சிலர் வினவலாம். விதவா விவாகம் அத்யாவசியமானதென ஆதிகாலத்திய நூல்களில் கட்டாயப்படுத்தப் படவில்லையென்பது வாஸ்தவமே. ஆனால் கட்டாயப்படுத்த வேண்டிய அவசியமும் அக்காலத்திலில்லை யென்பதை நேயர்கள் குறித்துக்கொள்ள வேண்டும். பதியையே பிரத்யக்ஷ தெய்வமாகக் கொண்டாடும் இயல்புடைய புராதன பாரதப் புதல்விகளினிடம் உடன் கட்டை யேறும் வழக்கம் சர்வ சகஜமாக இருந்து வந்தது. எனவே விதவா விவாஹ பிரச்சினை அவர்களது முன்னிலையில் ஓர் பெரிய விஷயமாகக் காட்சியளிக்கவில்லை. இப்பொழுதோ நிலைமை முற்றிலும் மாறிவிட்டது. உடன் கட்டையேறுவது சட்ட விரோதமாகவும் பெரிய குற்றமாகவும் இன்று கருதப்படுகின்றது. ஆகையால் மாதர் மறுமணப் பிரச்னையும் மலைபோன்றதொரு பெரிய விஷயமாக நமது திருஷ்டியில் தோன்றுகின்றது.

காலஞ்சென்ற ஸ்ரீஜத் ராம்மோஹன் ராய் அவர்களும் மற்றும்பல பெரிய சீர்திருத்த வாதிகளும் கடுமையாகப் போராடி உடன் கட்டை யேறும் வழக்கத்தை வேருடன் களைந்தெறிந்தார்கள். ஆனால், அவர்களது வெற்றி எதிர்பார்க்கப்பட்ட பலனை அளியாமற் போய்விட்டது. அதற்கு மாருக துன்பமும் துயரமுமே மலிந்து காணப்படுகின்றன. அதாவது, உடன் கட்டை யேறுவதைச் சட்டவிரோத மில்லாதபடி செய்து விட்டால் பதியைப் பறி கொடுத்த பாவையர்களும் தங்களது மண்ணுலக வாழ்க்கையை ஒருவாறுக முடித்துக்கொண்டு விடுவார்கள். இப்பொழுது அவர்கள் உயிருடன் சித்திர வதைக்கு உட்படவேண்டி யிருக்கின்றது. இந்நிலைமையில் அவர்கள் கோருவது இரண்டில் ஒரு விஷயம். அதாவது "உடன் கட்டை யேறுவது குற்றமென்னும் சட்டத்தை ரத்து செய்யுங்கள். நாங்களும் கணவன்மார்களோடு தீயில் விழுந்து பொசுங்கி ஒழிந்து விடுகின்ரும் இன்றேல் உடன்கட்டை யேறுவதைத் தடைசெய்யும் நீங்கள் அதன் பய

னுகப் பெருகும் விதவைகளுக்கு விமோசன மளிக்க முன்வாருங்கள்;" என்கின்றது. இவ்விரு கோரிக்கைகளும் நியாயமானவைகளே. இவைகளுள் முதற் கோரிக்கைக்கு இணங்குவது மீண்டும் அநாகரிக காலத்தை நோக்கிச் செல்வதைப் போலாகும். இரண்டாவது கோரிக்கைக் கிணங்குவதே சமூகத்தின் முற்போக்கையும் உயர்ந்த இலட்சியங்களையும் உன்னதமான நோக்கங்களையும் சுட்டிக் காட்டுவதாகும். இவ்விரண்டுக்குள் எதிர்கால இந்தியப்பிரஜைகளான இன்றைய இளைஞர்கள் எதைப் பூர்த்தி செய்து வைக்கப் பாடுபடப் போகின்றார்கள்?

விதவா விவாகம் சாஸ்திர விரோதமானதென்று சில சனாதனிகள் விதண்டா வாதம் செய்வது வெறும் புரட்டு. மாதர் மறுமணத்திற்கு மனு நீதியும், மற்றும் பல புராதன நூல்களும் ஆதரவளிக்கின்றன. ஆனால் மாதர் மறுமணமும் ப்ரௌடை விவாகமும் சாஸ்திர விரோதமானவைகளெனச் சொல்லும் சநாதனக் கிழங்களை நான் ஒரு கேள்வி கேட்க விரும்புகின்றேன்! அதாவது உங்களுடைய சாஸ்திரங்களுக்கு உடன்கட்டை யேறாமலிருப்பது விரோதமானதல்லவா? அதை மட்டும் ஏன் விட்டுக்கொடுத்தீர்கள்? உடன் கட்டை யேறும் விஷயத்தில் சலுகை காட்டிய நீங்கள் மாதர் மறுமண விஷயத்திலும் பால்ய விவாகத்தடை விஷயத்திலும் ஏன் சலுகை காட்டலாகாது? உங்களுடைய விவாகத்தின்படி உடன் கட்டை யேறாமலிருப்பதும், விதவா விவாகமும், ப்ரௌடை விவாகமும், எல்லாம் சாஸ்திர விரோதமானவைகள் தானே?

நேயர்களே! உடன்கட்டை யேறும் கொடிய பழக்கம் சுலபமாகத் தடை செய்யப்பட்டுவிடவில்லை. அதற்காக எவ்வளவோ வகையான கஷ்ட நஷ்டங்களையும் அபச் சொற்களையும் சீர்திருத்தக்காரர்கள் சகித்துக்கொள்ள வேண்டியிருந்தது. அதேபோல் மாதர் மறுமணத்திற்காகப் பாடுபடும் நாம் இன்னும் அதிக அவஸ்தைகளுக்கு உட்பட வேண்டியிருக்கலாம். ஆனால் இருளிற்குப் பின் ஒளி தோன்றுவதைப் போல் துன்பத்திற்கும் தோல்விகளுக்கும் அடுத்தாற்போல் சுகமும் வெற்றியும் இயற்கையாகத் தோன்றியே தீரவேண்டும். எனவே இன்றைய சீர்திருத்தக்காரர்களாகிய நாம் சலியாது உழைத்தல் வேண்டும்.

# வாலிபர் பெருமை.

சென்ற இதழில் "வீரப் பெண்ணின் சபதம்" என்று ஒரு துண்டு "அமிர்தவல்லி மாலை"யிலிருந்து எடுத்து வெளியிட்டோம். இப்பொழுது ஷை புத்தகத்திலிருந்து "வாலிபர் பெருமை" எனும் பகுதியை இங்கே வெளியிடுகிறோம். காவிரிப்பூம் பட்டினத்தில் முன்னாளில் வாலிபர்கள் எப்படி இருந்தார்களென்பது இதில் விளக்கப்படுகிறது.

கால்பந்து கைப்பந்து கனத்தபந்து ஆடுமிடம்
விளையாட்டுக் கூடங்கள் மிகுந்திருக்கும் பட்டினத்தில்
பந்து பயிலுமிடம் பாவையர்கள் ஆடுமிடம்
சிலம்பம் பழகுமிடம் சிறுகாடிக் கூடங்கள்
கத்தி விளையாட்டு கனத்த விளையாட்டு
குஸ்திப் பந்தயங்கள் குணமான பஸ்கியுடன்
தண்டா லெடுப்பதுவும் தாவிக் குதிப்பதுவும்
நீந்திப் பழகுவதும் நெடுந்தூரம் ஓடுவதும்
மேனி வளைவதுவும் மேலேறி ஆடுவதும்
பல்லாற் பனைமரத்தைப் பற்றிப் பிடுங்குவதும்
யானை தனைத்தூக்கி வானத்தில் வீசுவதும்
இரும்புச் சதைகளும் உருக்கினல் நரம்புகளும்
வயிரத்தால் எலும்புகளும் வாய்த்திருந்தார் வாலிபர்கள்
மாற்றரசர் சண்டையென்று வாயா லுரைப்பாரோ
சோழநா டென்றால் தொடையாடும் மன்னவர்க்கு
வாலிபரைக் கண்டால் வாயிலெச்சில் ஊறுது
சோழனுடன் சண்டையென்று சொல்ல அரசருண்டோ
சோழனது நாட்டினிலே எல்லாரும் பட்டாளம்
வாலிபர்கள் யாவருமே வளமுள்ள பட்டாளம்
தேசமெல்லாம் போர்வீர ரிருண்டிருக்கும் நாளினிலே
மாற்றரசர் சண்டையென்று வாயா லுரைப்பாரோ!

# பழிக்குப் பழி.

(ஒரு சிறு கதை)

வைகாசிமாதம். பௌர்ணமி. வெண்கலத்தை உருக்கிவார்த்தது போன்ற நிலவு. ராமசந்திரன் மாடி ஜன்னலினருகேயுள்ள தன் படுக்கையின் மேலிருந்து இயற்கை விநோதத்தைக் கண்டு ஆனந்திக்கிறான். சுற்றிலுமுள்ள பூஞ் செடிகளிலுள்ள பூக்களில் தவழ்ந்து வரும் தென்றல் இளங்காற்று உடலில் ஊர்ந்து குளிர்விக்கிறது. மரக்கிளைகளினூடே கிளிகளும் குயிலினமும் குலாவுகிற சப்தந்தவிர வேறு சப்தம் எதுவும் எழவில்லை. இத்தனை இன்பத்திலும் கலவாமல் ஓர் அழகான பெண் இராமசந்திரனுக்குப் பக்கத்தில் அமர்ந்திருக்கிறாள். மெத்தையிலிருப்பவர் இருவர். இன்பம் முற்றும் அங்கே குலாவுகிறது. ஒருவர் அனுபவித்து உளம் பூரிக்கிறார். மற்றொருவர் ஒன்றிலும் கலவாமல் முற்றத்துறந்த மெஞ்ஞானியைப் போல கம்மென்றிருப்ப தென்றால் அந்தப் புருஷனுக்கு எப்படியிருக்கும்? காதலர் கலவாத போது இவ்வின்பங்கள் சுவைக்குமா? ராமசந்திரன் மனைவியைப் பார்த்து "நங்காய்! என்ன கவலை. சந்திரனைப்பார். அந்தச் சந்திரனைக் கடந்து போகவேண்டிய மேகங்கள்கூட நாம் சந்திரனொளியை அனுபவிக்க இடைஞ்சல் செய்யாமல் விரைந்து ஓடிக்கொண்டிருக்கின்றன. மந்தமாக இருக்கிறாயே! உன்னுடைய சுறுசுறுப்பு எங்கே?" என்று கனிந்த பார்வையோடு கூறினான். பெண்ணின் முகம் மெதுவாகத் தன் கணவன் பக்கமாகத் திரும்பியது. "இறக்குந் தறுவாயில் தெரிவிக்க வேண்டுமென்றிருந்த என்னுடைய ரகசியத்தை இனி மூடிவைக்க முடியாது போலிருக்கிறது. அதைத் தெரிவித்து அதனால் ஏற்படுங் கஷ்டத்தை அனுபவிக்க நான் தயாராக இருக்கிறேன்" என்று மெல்லிய குரலில் முத்துதிரும் தன் இனிய செவ்வாயினால் மொழிந்தாள். வாயிலிருந்து வார்த்தை உதிர்வது போலவே அவள் கண்ணிலிருந்தும் முத்துதிர்ந்தது. "கண்ணே சும்மா சொல், என்னவிஷயம்?" என்று கேட்டுக்கொண்டே மனைவியின் முன்தானையை எடுத்துக் கண்ணைத் துடைத்தான்.

இந்த சந்தர்ப்பத்தில் மடமட வென்று மாடிப்படியின் பாதி

தூரம் வரை ஏறிய ராமசந்திரனின் தகப்பனார் வெங்கட்டராமய்யர் "அடே! உன்மனைவியை உடனே வெளியே அனுப்பிவிடு" என்று உரத்த குரலில் அதிகாரத் தொனியில் சொல்லிவிட்டுப் போய் விட்டார். ராதா தன்கணவனை நோக்கி "ஆம். நான் ஒரு பாபி. முன்னமேயே சொல்லாதது என் தப்பிதந்தான்" என்று வருந்திய மொழியில் தன் விருத்தாந்தத்தைக் கூறினாள். தொங்கிய முகத்துடனும் மிகுந்த கவலையுடனும் இராமசந்திரன் மாடியைவிட்டுக் கீழே இறங்கி வெளியே சென்றான். "ஓய் சுப்பராமய்யரே நான் உமக்கு என்ன கெடுதல் செய்தேன். மீளாத துக்க சாகரத்தில் நீர் ஏன் என்னை இப்படி அமிழ்த்த வேண்டும்" என்று கேட்டான். "என் விருத்தாந்தத்தைக் கேள். பிறகு என்னை நீ பழிக்க நோாது" என்று கூறியதோடு சுப்பராமய்யர் பின்வருமாறு கூறினார்:—

"நெடு நாளைக்கு முன் என்மகனும் உன் மாமனுமாகிய சுவாமிநாதன் திடீரெனத் தன் மனைவியின் நகைகளை யெல்லாம் எடுத்துக் கொண்டு மறைந்துவிட்டான். சிலகாலம் கழித்து ஆங்கில நாட்டிலிருந்து பாரிஸ்டர் பட்டம் பெற்றுத் திரும்பினான். உனது தகப்பன் தூண்டுதலின் பேரில் நமது ஜாதிப் பிரமுகர்கள் சேர்ந்து என் மகனை ஜாதிப்பிரஷ்டம் செய்தார்கள். நானும் அவனுடன் சேர்ந்திருந்ததால் என்னையும் பிரஷ்டம் செய்து விட்டார்கள். எங்கள் குடும்பத்தில் நடக்கவேண்டிய கலியாணமும் உலைக்கப்பட்டு விட்டது. இதற்கெல்லாம் வைதீக சமூகத்தின் மீது மிகக் கடுமையாக வஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டு மென்று நான் தீர்மானித்தேன்.

நாங்கள் மதராஸ் வந்து சேர்ந்தோம். அங்கும் எங்களை ஜாதிக்கொடுமை விட்டபாடில்லை. வைதீகர் எங்களை ஒதுக்கியே வைத்திருந்தார்கள். இங்கிலையில் எங்கள் குடும்பத்தில் ராதாவும் பிறந்தாள். வைதீகர்களின் உதவியில்லாமலே ராதாவை அவளது ஐந்தாம் பிராயத்திலேயே ஒரு பிராமண இளைஞனுக்கு வதுவை செய்து கொடுத்தோம். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக அவ்விளைஞன் சீக்கிரமாக மரணமெய்தினான். நாங்களனைவரும் மிகுந்த கவலைக்குள்ளானோம். நகரத்தின் கிழக்கோடியிலுள்ள, எங்கள் மீது அநுதாபமுள்ள, தூர பந்துவாகிய கிருஷ்ணய்யர் எங்கள் கவலையை

நிவர்த்திக்கும் பொருட்டு ராதாவைத் தன்னகத்திற்கு அழைத்துச் சென்றார்.

சிறிது காலத்திற்குள் உயர்தரக் கல்வியின் பொருட்டு சென்னை போந்த நீ, உனது எதிர்வீட்டிலுள்ள ஓர் கட்டழகியின் மீது காதலுற்றாய். அவள் தான் என் பேத்தி ராதா எனச் சொல்ல வேண்டியதில்லை. அவளும் உன்மீது மையலுற்றாள். நாளடைவில் ஏற்பட்ட கடிதப் போக்குவரத்தில் ராதா, கிருஷ்ணய்யரின் மகளென நம்பி உனக்கு அவளை மணம் செய்விக்க உன் தகப்பனார் உடன்பட்டார். எல்லாம் நிச்சயிக்கப்பட்ட பிறகு, தான் விதவை என்பது தெரிந்தால் தன் பிற்கால வாழ்க்கையில் சொல்லொணுத்துயரம் நேரிடும் எனக்கருதி ராதா தான் இறந்துவிட்டதாகப் பிரஸ்தாபித்து விடும்படியாக வேண்டிக் கொண்டாள் நான் வேண்டிய சமாதானம் சொல்லி அவளை அடக்கிவிட்டேன். என்வஞ்சம் எப்படி நிறைவேறுவது?

எல்லாம் சரிவர நடந்துகொண்டு தான் வந்தது. உன் தங்கைக்குக் கலியாணம் நிச்சயிக்கப்பட்டதென்ற சமாசாரம் எனக்குத் தெரிந்தது. முன்னர் என்மகள் கலியாணத்தை உன் தகப்பன் கலைத்துவிட வில்லையா? அதை வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்கு இப்பொழுது நல்ல தருணம் கிடைத்தது. மாப்பிள்ளை வீட்டாரிடம் போய் என் பேத்தியின் விருத்தாந்தத்தைச் சொன்னவுடன் அவர்கள் மணமுடித்துக் கொள்ள முடியாதென்று சொல்லிவிட்டார்கள். சென்றதை யெல்லாம் நினைக்கும் போது உண்மையாகவே நான் சந்தோஷிக்கிறேன்'' என்று கூறியதைக் கேட்ட ராமசந்திரன் சிறிது நேரம் பொறுத்து பெரியவரைப் பார்த்து "உங்கள் பேத்தியை நீங்களே அழைத்துக்கொள்ளக் கூடாதா?'' என்று கேட்டான்.

"உன் பெண்டுபிள்ளைகளைக் காப்பாற்றுவது உன்கடமை யல்லவா? மானமிருந்தால் காப்பாற்று. இல்லாவிட்டால் உன் இஷ்டம்.'' என்றார் பெரியவர். ராமசந்திரன் மெதுவாக அவ்விடத்தை விட்டு நழுவி விட்டான்.

* * *

"அபலையாகிய என்னைக் கைவிட்டு வீடுவீர்களா? தவிர்க்க வொண்ணாத காதல் என்மீது கொண்டிருப்பதாகத் தாங்கள் அடிக்கடி

என்னை நம்பும்படியாகச் சொல்லிவந்த வார்த்தைகள் கேவலம் பசப்புவார்த்தைகளா?" என்று ராதா தன் கணவனின் காலடியிலிருந்து பரிதாபமான பார்வையோடு கெஞ்சுகிறுள்.

ராமசந்திரன் தகப்பனுர் மறுபடியும் தனது உரத்த குரலில் "ஏன் இன்னும் அவளை வெளியேற்ருமலிருக்கிருய்?" என்று சத்தமிட்டார். ஒரு நிமிஷம் வரை ராமசந்திரன் அங்கு மிங்கும் வேகமாக உலவினுன். மனம் குழம்பினுன். ஒரு முடிவு தோன்றியது. அடுத்த நிமிஷத்தில் தைரியமாக" நான் என்மனைவியைத் தள்ளிவிடமாட்டேன்" என்று கம்பீரமாய்ப் பதிலளித்தான். "பிறரெல்லாம் நம்மை ஜாதி கெட்டவர்களென்று தள்ளிவைக்க வேண்டுமா?" என்ருர் பெரியவர்.

"ஜாதி முறையில் எனக்கு நம்பிக்கையில்லை. தள்ளிவைப்பதற்கு நான் பயப்படவில்லை" என்ருன் மகன்.

"இருவரும் வீட்டை விட்டு ஓடுங்கள்" என்ருர் தகப்பனுர். இந்த நிகழ்ச்சி நடந்து மூன்று ஆண்டுகட்குப் பிறகு ராமசந்திரனும் ராதாவும் அழகான இரண்டு குழந்தைகளுடன் அதே மாடியில் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டேன். கிழவர் இறந்து இரண்டு ஆண்டுகள் ஆய்விட்டதென்று சொன்னுர்கள்.

(இது ஒரு ஆங்கிலக் கதையைத் தழுவி எழுதப்பட்டது)

---

# சங்கிலியார் மறுமணம்.

"ஆராய்ச்சியாளன்"

சமயாசாரியாராகக் கொண்டாடப்படும் சுந்தரர்க்கு முதலாவது பரவையார் மணமும் இரண்டாவது சங்கிலியார் திருமணமும் நடைபெற்றிருக்கின்றன. பரவையாரிடம் தீராக் காதல் கொண்ட சுந்தரர் மறுபடியும் ஏன் மற்ருெரு நங்கையை விரும்பினுரென்பது கவனிக்கத்தக்கது. ஜாதி மணத்தைத் தடுத்து இறைவனுக்கு ஆளான சுந்தரர் கலப்புமணம்—அதிலும் வழுக்கி விழுந்த கோத்தி

ரத்து நங்கையை மணங்கொண்டார். கலப்பு மணங்கொண்ட சீர் திருத்த நெறியாளரான சுந்தரர் ஒரு விதவா விவாகமும் கொள்ளல் ஆச்சரியப்படத் தக்கதா? சங்கிலியார் ஒரு பிராமணப் பெண் ணன்று. தாய் தந்தையர் வசத்தில் ஜாதிக்கட்டுக்கடங்கி அடை பட்டிருந்த நங்கையுமல்ல. சுதந்திரமாக எவர் கட்டுப்பாட்டுக்கும் இணங்காமல் கன்னி மடத்தில் விடப்பட்ட பெண்ணுவள். அவர் பிறந்த குலம் வேளாளர் குலமாகும். சுந்தரர் குலம் பிராமண குல மாகும். பெரிய புராணக்காரர் கூறுமாறு பார்த்தால், சுந்தரர் எவ் வாறு ஜாதி மணத்தைப் பொருந்தாமல் வெளிப்பட்டாரோ அப்படி இந்த சங்கிலியாரும் தாய் தந்தையர் மொழியை உதறித் தள்ளி விட்டு தனக்கியைந்த மணுளனைத் தேடிக்கொள்ளப் புறப்பட்டிருக் கின்றூர். தந்தையர் கல்யாணப் பேச்செடுத்தார். பெண் இணங்க வில்லை. மற்ருெருவர் இப்பெண்ணை மணம் பேச வந்தார். மணம் பேசியவர் இறந்தார். எனவே சங்கிலியாரை ஒற்றியூர் மடத்தில் கொண்டு விட்டுவிட்டார்கள் என்று பெரியபுராணங் கூறுகிறது.

நாம் கவனிக்க வேண்டியதொன்று. அறுபத்துமூன்று நாயன் மாரை வகுத்துக் காட்டியவர் சுந்தரரேயாவர். சுந்தரரின் திருத் தொண்டத்தொகை யென்னும் தேவாரப்பதிகத்திற்கு முன்பு சிவ னடியார் தொகை அறுபத்துமூன்றென்ற கணக்குக் கிடையாது. திருத்தொண்டத்தொகையில் 62 முறை அடியேன் என்று சுந்தரர் கூறியிருப்பதைக்கொண்டு, பாடிய நம் சுந்தரரையும் சேர்த்து அறு பத்துமூன்று நாயனுரெனக் கொண்டுவிட்டனர். இதையொட்டியே கோவில்களிலும் 63 விக்கிரகங்கள் வைக்கப்பட்டுள்ளன. சுந்தரர் தேவாரத்தில் "தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்குமடியேன்" என்பதொன்று. இந்த அடியின் பொருட்டு அறுபத்துமூவரில் ஒரு விக்கிரகம் வைக்கப்பட்டிருக்கிறது. இதன் பொருள் "சிதம் பரத்தில் வாழ்கின்ற பிராமணர்களின் அடியார்க்கு நான் அடி யேன்" என்பதாகும். தில்லையில் வாழ்பவர்கள் எத்தனை பேர்? அவர்களின் அடியார்கள் எத்தனை பேர்? அவர்கள் யாவருக்கும் தான் அடியேன் என்கிறூர். இவர்கள் யாவரையும் ஒரு அடியா ராகவே கணக்கிடப்பட்டிருக்கிறது.

இப்படியே "திருவாரூர் பிறந்தார்கள் எல்லார்க்குமடியேன்"

என்று கூறியிருக்கிறார். திருவாரூரில் இதற்குமுன் பிறந்தவர்கள் இனிப் பிறக்கிறவர்கள் யாவரும் நாயன்மாரே யாவர். ஆனால் அத்தனை பேரையும் ஒரு நாயனாராகவே கருதி அறுபத்துமூவரில் ஒரு நம்பர்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இந்த "அடியேன்" என்று சொன்னதை ஆதாரமாகக் கொண்டுதான் 63 நாயன்மார் பேச்சு எழுந்திருக்கிறது. சுந்தரர் பாடிய இந்தத் திருத்தொண்டத் தொகையை ஆதாரமாகக்கொண்டு "நம்பியாண்டார் நம்பி" எனும் சிவனடியார் "திருத்தொண்டர் திருவந்தாதி" என்ற ஒரு அந்தாதியைப் பாடியிருக்கிறார். அந்த அந்தாதி சைவத்திருமுறை பன்னிரண்டில் பதினோராந் திருமுறையில் சேர்க்கப்பட்டிருக்கின்றது. அந்த அந்தாதி பொல்லாப் பிள்ளையார் முன்னிலையில் அவர் சொல்வழியே பாடப்பட்டதாகவும் அது மிகவும் உண்மையானதெனவும் சைவர்களால் பாராட்டப் படுகின்றது. அதில் இந்த அறுபத்து மூவர் சரிதத்தை ஒவ்வொரு பாட்டில் சுருக்கமாகக் கூறி யிருக்கின்றனர். சுந்தரரைப் பற்றிச் சில பாக்கள் அதிலுள்ளன. அதில் சங்கிலியாரைப் பற்றிய பிரஸ்தாபமுள்ள பாடலொன்று. அது வருமாறு:—

தகுமகட் பேசினேன் வீயவே
நூல்போன சங்கிலிபால்
புகுமணக் காதலினால் ஒற்றியூ
ருறைபுண் ணியன்றன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு
ளால்விய னுலகம்
நகும்வழக் கேநன்மையாப் புணர்ந்தான்
நாவலூ ரரசே.

என்பது நம்பியாண்டார் நம்பியின் திருவாக்கு. இப்பாட்டின் பொருள்:— "தகுமென்று மகளை மணம்பேசினோன் இறந்துபோக, நூல் இழந்த சங்கிலியாரிடத்தில் புகுந்த மணக்காதலினால் சுந்தரமூர்த்தியானவர் ஒற்றியூர்ச் சிவபெருமானைப் பணிந்து அவனருளாலே, இந்த உலகத்தா ரெல்லாருக்கும் சிரிப்புக் கிடமாயிருந்த (விதவா விவாக) வழக்கத்தைப் புகழ்பெற்றதாகச் செய்துகொண்டார்" என்பதாகும்.

இதில் "தருமகட் பேசினேன் வீய" என்பதற்குக் கல்யாணம் பேசச்சென்றவன் இறந்தானேயன்றி மணமகன் இறக்கவில்லையென்றும், "நூல்போன சங்கிலி" என்பதற்கு "கல்வியில் மேற்போன சங்கிலி" என்றும் பொருள்கூற முற்படுகின்றனர். மகட்பேசினேன் வீயவே நூல்போன சங்கிலி என்பதற்கு கல்யாணம் பேசப்பட்டமாப்பிள்ளை இறந்துபோனதனால் நூலிழந்த சங்கிலியானாள் என்பதே நேர்பொருள். ஆனால் அப்பெண்ணை மணங்காணவில்லை. இல்வாழ்விற் கலக்கவில்லை என்பது தோன்றவே, "மகட்பேசினேன் வீயவே நூல்போன" என்கிறார். எனவே, அப் பெண்ணுக்கு மறுமணத்தால் இழுக்கேற்பட்டதென்றெண்ண வேண்டாமென்பதற்காகவே அந்த ஏகாரம் அங்கே பெய்யப்பட்டுள்ளதென்க. இதை வற்புறுத்துவது போல பெரிய புராணத்தில், சங்கிலியாரைக் குறிப்பிடும்போது "கோவா முத்தும் சுரும் பேருக் கொழுமென் முகையும் அனையாரை" என்று குறிப்பிடப் படுகிறது. கோவாத முத்து—புணர்ச்சி பழகாத கன்னியென்பதையும், சுரும்பு ஏறாத முகையென்று—தனத்தில் கறுமை யேறவில்லையென்பதைக் குறிப்பதால் கருவுபிர்க்காத பெண்ணென்பதையும் விளக்குகின்றன. இதனால் இப்பெண்ணுக்கும் ஒருவாறு கல்யாணங் குறித்தாலும் சேர்க்கையும், கருப்பமும் உறாத கன்னியென்பதைக் குறிப்பால் உணர்த்துகிறாரென்று கூறவேண்டியதில்லை. இந்தக் காலமாக இருந்தால் இவ்வளவு பேர் கூடி இவ்வளவு தூரம் அப்புக்கட்ட வேண்டியதில்லை. அந்த நாளில் விதவையர் உயிர் வாழ்ந்திருந்தால் பெரிய அவமானமாக இருந்தது. கணவன் இறந்தால் உடன் கட்டையேறுபவளே கற்பாசி யென்று கருதப்பட்டது. திருநாவுக்கரசர் தாயார் கணவனிறந்ததும் உடன்கட்டை ஏறிவிட்டார். திலகவதியார்க்கு கல்யாணம் நடக்கவில்லை; ஆனால், கல்யாணம் பேசப்பட்டிருந்தது. அப்படிப் பேசப்பட்டிருந்த மணமகன் இறந்துபோனான். நங்கை திலகவதியார் நெருப்பில் விழப்போனார். திருநாவுக்கரசர் தடுத்து நிறுத்தினார். அதுமுதல் அவ்வம்மையார் விதவைக் கோலம் பூண்டு வாழ்ந்திருந்தாரென்று கூறப்படுகிறது.

சுந்தரமூர்த்தி நாயனாருக்குச் சொந்த ஜாதியில் மணம்பேசியிருந்த பிராமணப்பெண் சுந்தரரையே நினைத்துக்கொண்டு ஆயுள்

முழுமையும் கன்னியாகவே யிருந்து 'காலஞ்சென்ற தென்றும் பெரிய புராணம் கூறுகிறது. கல்யாணம் செய்யப்படாத காலத்தில் வைதவ்யம் கொண்டாடிய இந்த இரண்டு நிகழ்ச்சிகளுக்கும் இடையில் சங்கிலியார் சரித்திரமானது பெரிய புராணக் காரருக்குப் பெரிய இடர்ப்பாட்டுக் குள்ளாவதில் ஆச்சரியமில்லையன்றோ?

இவை யொருபுறமிருக்க திருத்தொண்டர் திருவந்தாதியின் கடைசி அடியைப் படித்த பிறகு, சங்கிலியார் மணம் சரியான விதவா மறுமணம் என்பதில் சந்தேகப்பட ஒன்றுமில்லை. "ஊரார் கேலி செய்யும் ஒரு வழக்கத்தை புகழுள்ளதாக—நல்லதாகச் செய்து கொண்டான்" என்று கூறுவதைக் காட்டிலும் வேறு அத்தாட்சியும் வேண்டுமா?

---

# லண்ட வேஷம்!

அஞ்சா நெஞ்சன்.

லண்ட வேஷம் என்றால் என்ன? சொன்னதையோ எண்ணியதையோ விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டு இசிப்பது. எவ்வளவு எதிர்ப்பு வந்தாலும் அஞ்சுகிறதில்லை. அதில் கொஞ்சம் முரட்டுத்தனமும் சேரவேண்டும். அப்படியானால் ஆற்றாதவர்கள் என்னடா லண்ட வேஷம் போடுகிறான் என்று சொல்கிறார்கள். மகாத்மா காந்தி பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருடன் இந்த லண்ட வேஷம் தான் போட்டாரோ என்னவோ ஆனால் அதற்குச் சத்தியாக்கிரகம் என்று பேர் வைத்துவிட்டார். மகாத்மா சொல்கிறபடி சத்தியாக்கிரகமோ, ஜனங்கள் சொல்கிறபடி லண்ட வேஷமோ, அல்லது ராமசாமி நாயக்கர் சொல்கிறபடி சண்டித்தனமோ எப்படியாவது இருக்கட்டும். ஒரு வீட்டில் நடந்ததைச் சொல்கிறேன். அந்த நடவடிக்கையிலிருந்து நீங்கள் தீர்மானியுங்கள்!

ஒரு பெரிய வீடு. அந்த வீட்டுக்குச் சொந்தக்காரக் கிழவனார் ஒருவர். அவருக்கு ஒரு மனைவி. மொத்தத்தில் நல்லவர்கள். கடைசியாகப் பிறந்த பையனுக்கு வயது நான்குதானாகிறது. அந்தப் பையனுக்கு நேரே மூத்த பெண்ணுக்கு வயது

15 இருக்கும். அந்தப் பெண் பாயிற் படுத்துக்கிடக்கிருள். ஒரு வெள்ளைப்புடவை அவளுடம்பைச் சுற்றிக்கொண்டிருந்தது. பையன் தன் தாயாரைப் பார்த்து, "அம்மா! சின்ன அக்காளுக்கு எப்போ தங்கச்சி பிறக்கும்?" என்ருன்.

தாயார்:—தங்கச்சி பிறக்காது, என்று சொல்லிக்கொண்டே கண்கலங்கிஞள்.

பையன்:—ஏன் பிறக்காதென்கிருய். முந்தி சின்னத் தங்கச்சி பிறக்குமென்று சொன்னியே! இப்ப பிறக்காது சொல்றியே. ஏன் அம்மா சின்ன அக்காளுக்குச் சின்ன தங்கச்சி பிறக்காது.

தாயார்:—இதென்னடா சனியன்! வெள்ளைச்சேலை உடுத்தினவர்களுக்குத் தங்கச்சி பிறக்காது.

பையன்:—பெரிய அக்காளுக்குப் பிறக்குமா?

தாயார்:—பிறக்கும்.

பையன்:—பங்கஜ அக்காளுக்கு.

தாயார்:—பிறக்கும்.

பையன்:—கமலா அக்காளுக்கு.

தாயார்:—பிறக்கும்.

பையன்:—உனக்கு.

தாயார்:—(திகைத்துவிட்டாள்.) ஆமடா சனியனே. பிறக்குமடா. விடு.

பையன்:—என்ன அம்மா? எல்லாப்பேருக்கும் தங்கச்சி பிறக்கும். சின்ன அக்காளுக்கு மட்டும் பிறக்காது. பண்டி தூ! என்று துப்பிவிட்டு, சின்ன அக்காளுக்குப் பட்டுச்சேலை கொடு. ஏன் அவளுக்கு மட்டும் வெள்ளைச்சேலை குடுக்கிருய். எல்லாருக்கும் பட்டு சேலை குடுக்கிரு. சின்ன அக்காளுக்கு மட்டும் வெள்ளைச்சேலை கொடுக்கிரு மூதேவி."

என்று திட்டிக்கொண்டே பையன் தாயாரின் சேலையைப் பற்றி இழுத்துக்கொண்டிருக்கிருன். பாயிற் கிடக்கிற 15 வயதுப் பெண் இவை யாவற்றையும் கேட்டுக்கொண்டே பொருமுகிறது. அதன் தலையணை கண்ணீரால் நனைந்துவிட்டது. வாஸ்தவந்தானே. வீட்டிலிருக்கும் கிழடுகளுக்குக்கூட பிள்ளை பெறக்கூடிய 'சான்ஸ்' இருக்கும்போது புது வாழ்வுக்குரிய புது மல

ரான இப்பெண்ணுக்கு என் வாழ்க்கை பறிபோக வேண்டும்? நினைத்துப்பார்த்தால் இது அநியாயமாக இல்லையா?

தாயார் அடுப்படிக்குச் சென்ருள். பையன் ஓடினுன். உள் வீடு திறந்திருந்தது. நுழைந்தான். புதிய பெங்களூர்ப்பட்டு ஒன் றிருந்தது. எடுத்துக்கொண்டு ஓடிவந்தான். அக்கா! அக்கா! இந்தா இதை உடுத்து. வெள்ளைச்சேலையை உடுத்தாதே. அதை உடுத்தினுல் சின்ன தங்கச்சி பிறக்கமாட்டாள். இதை உடுத்து. சின்ன தங்கச்சி பிறக்கும். அம்மா வாருள். உடுத்து உடுத்து. அவள் வந்தால் விடமாட்டா. உடுத்து உடுத்து என்ருன். பெண் என்ன செய்யும்? அதன் மனம் எப்படி இருந்திருக்கும். தாய் வந் தாள். "மூதேவி சனியனே இங்கேவா செருப்பாலே அடிக்கிறேன்" என்று பிசாசு ஆக்ட் செய்து பிள்ளையைப் பிடித்து ஒரு அறை கொடுத்தாள். பையனுக்குக் கோபம் வந்துவிட்டது. பண்டி நாயே சின்ன அக்காளுக்குமட்டும் நல்ல சேலை கொடுக்கமாட்டேனென் கிருள் குரங்கு கழுதை என்று திட்டிக் காறி மூஞ்சியிலே துப்பி னுன். அதற்குப் பலனுக இன்னும் இரண்டு அடி கிடைத்தது. இருந் தாலும் பையன் நல்ல சீலை கொடுக்காமலிரு பார்ப்போம் என்று சொல்லித் திட்டிக்கொண்டே நடுமுற்றத்திற் கிடந்து அங்குமிங்கு மாகப் புரண்டுகொண்டிருந்தான்.

எதிர்த்தவீட்டு ராமுப்பாட்டி நெருப்பெடுப்பதற்காக அங்கே வந்தாள். பையன் நடுமுற்றத்திற் கிடந்து புரள்வதைப் பார்த்து "அடே லண்டப்பலே என்னடா லண்டவேஷம் போடுருய்" என்று கேட்டுக்கொண்டே நெருங்கினுள். பையன் புரண்டதை நிறுத்தி "ஏ பாட்டி! உனக்கு தங்கச்சி பிறக்குமா?" என்ருன். "என்னடா சுட்டிப்பலே! எனக்குத்தான் எழுபது வயதுக்கு மேலே பிறக்கிறது?" என்ருள்.

பையன்:—உனக்குப் பிறக்குமா? பிறக்காதா சொல்.

பாட்டி:—எனக்குப் பிறக்காதிடா.

பையன்:—பட்டுச்சேலை உடுத்தினுல், பிள்ளை பிறக்கும் என்று அம்மா சொல்ருளே! சின்ன அக்காளுக்கு மட்டும் தங்கச்சி பிறக் காமே வெள்ளைச் சீலை குடுக்கிரு என்று சொல்லிக் கொண்டே புரண் டான்.

பாட்டிக்கு விஷயம் ஒருவாறு விளங்கிவிட்டது. ஏண்டிகனகம்! என்னடி உன் மகன் லண்டப்பயல் புரளுகிறான் என்றாள்.

கனகம்:—அதையேன் கேட்கிறீர்கள். சனியனாக இருக்கிறது. பீடை. காலையிலிருந்து அவனோடு தான் போராட்டமாக இருக் கிறது. நினைத்தால் துக்கம். சின்னவள் விதி இப்படி ஆனதைவிட இவன் பிடுங்கல்தான் பெரிதாக இருக்கிறது. அவளுக்கு தங்கச்சி பிறக்குமா? என்றான். அவனுக்கு, வேறே என்ன இழவைச் சொல் கிறது. வெள்ளைச் சீலை உடுத்துகிறவர்களுக்கு பிள்ளை பிறக்காது என்று சொன்னேன். இப்ப, பட்டுச் சேலை கொடுக்கிறாயா இல்லை யா என்று அழுகிறான். என்ன செய்கிறது. சாகக் கொடுத்ததை சற்றே மறக்கலாமென்றால் இவன் விடுகிறானில்லை. அவளும், உருகி உருகி அழுகிறாள் என்று கண்ணீர் வடித்துக்கொண்டு கனகம்மாள் சொன்னாள்.

"அம்மா சும்மா கொறத்தனம்பண்ணுறா. எல்லாருக்கும்பட் டுச்சீலை குடுக்கிறா. சின்ன அக்காளுக்கு மட்டும் வெள்ளைச் சீலை குடுக்கிறா. யாரும் வந்தா போ போ பாயிலே படு என்று சொல்றா. எல்லாருக்கும் நகை குடுக்கிறா. சின்ன அக்காளுக்கு ஒன்று கூடக் கொடுக்க மாட்டேனென்கிறா. மூதேவி, பிசாசு, கழுதை, நீ செத்துப் போ, ராத்திரிக்கு உறங்கிறபோது கல்லைத்தூக்கி உன் மண்டையிலே போட்டுக் கொல்றேன் பாரு" என்று பையன் திட்டிக்கொண்டே யிருந்தான்.

---

## ஊர் சிரிக்கிறதாம்!

குட்டிச்சாத்தன் A B C D E F etc.

ஊர் சிரிக்கிறதாம் எதற்கு? பெண்குழந்தைக்குக் கலியாணம் செய்தால்! ஐயா இந்த அனியாயத்தைக் கேளுங்கள்! ஒரு ஊரிலே ஒரு மனிதர் இருந்தார். இருந்தா ரென்ன! இருக்கிறார். அவருக் குப் பெண்டாட்டியு மிருக்கிறாள். பெண்டாட்டிக்குத் தமது 40வது வயதில் புட்டா மாவும் சோப்புக்கட்டியும் பர்மா சவுரி மயிரும்

ஜப்பான் சில்க்கும் வாங்கிக் கொண்டுவந்து கொடுக்கிறார். சரிதான் இதிலென்ன தகராறிருக்கிறது? அவர் மனைவிக்கு அவர் வாங்கிக் கொடுக்கிறார். அந்த அம்மாளும் நன்றாகத்தானிருக்கிறார்கள். எல்லா பெண்களும் அழகாக இருந்தால் ஊருக்கு ஒரு அழகு. தேசத்திற்கு அழகு. உலகத்துக்கே அழகு. பெண்கள் தலையை விரித்துப்போட்டுக் கொண்டு மூஞ்சி முகத்தைக் கழுவாமல் அழுக்குத் துணியைக் கட்டிக்கொண்டு மூக்கையும் வடியவிட்டுக் கொண்டு தலையைச் சொரிந்து தெருவில் போனால் நன்றாகவா இருக்கும்.? பெண்களைப் புருஷன்தானே பாராட்ட வேண்டும். அதிலே எனக்கு அபிப்பிராய பேதமில்லை. ஐயா பெரியவரே! உம்முடைய மனைவிக்கு நல்ல செருப்பும் குடையும் வாங்கிக் கொடுங்கள்! ஒரு வாட்ச் வாங்கிக் கொடுங்கள்! வில்வெட் மெத்தையில் படுக்கப் போடுங்கள்! ஆல்ரைட். இதெல்லாம் எனக்கு பரம திருப்தி. இனி ஊர் சிரிக்கிறதைச் சொல்கிறேன். இந்த நண்பருக்கு ஒரு அழகான பெண் இருக்கிறது. வயது 16 இருக்கும். அழகான பூங்கொம்பு. ஆனால் பூக்கள் உதிர்ந்த பூங்கொம்பு. பூச்செடி வைத்தால் அதில் பூக்கள் இருக்கவேண்டும். பூவாத செடியைப்பற்றிப் பேச்சென்ன? இது பூத்தசெடி. அதை உதிர்த்துவிட்டமாதிரி மொட்டையடித்து இந்தப் பதினாறு வயதுப் பசும்பெண்ணை வைத்திருக்கிறார். 40 வயது ஆசாமியை அலங்காரம் செய்யும்போது இந்தச் சிறுமியை ஏன் இந்தக் கொடுந்தண்டனைக்கு உட்படுத்தி வைத்திருக்கிறீர்கள் என்று கேட்டேன். என்ன செய்கிறது அதன் தலைவிதி என்றார். தலைவிதியை காமினியா ஆயிலைக் கொஞ்சம் விட்டு அழித்து விடுகிறதுதானே? என்றேன். அவருக்குக் கோபம் வந்து விட்டது. "கேலிசெய்ய வேண்டாம்; சிரிப்பாக இருக்கிறதோ?" என்றார். எனக்குள்ளே இருக்கிற கோபம் அவருக்குத் தெரியுமா? ஐயா சிரிப்பில்லை எரிப்புதான்! இப்படி இந்தப் பெண்ணை வைத்திருப்பது அனியாயமாக இல்லையா? பாவமாக இல்லையா? 40 வயது ஆள் புட்டாமா போடுவதைப் பார்த்துக் கொண்டு இந்தச் சிறுமி பொருமிக் கொண்டிருப்பது உங்கள் புத்தியில் தைக்கவில்லையா? என்று கேட்டேன். அவர் என்ன செய்வார் பாவம்! தழுதழுத்துப் போனார். கண்ணில் நீர்ததும்பி விட்டது. அவரென்ன?

கல்லா? மரமா? மனிதன்தானே! உள்ளே இரக்கமிருக்கிறதல்லவா? எல்லாருக்கும் இரக்கமிருக்கிறது. கருணை இருக்கிறது. வழக்கப் பாசி படிந்து புதைந்திருக்கிறது. வேறென்ன! ஐயா, இந்த வீண் அழுகையில் பசையில்லை. ஒரு மாப்பிளை பேசிக் கல்யாணம் செய்ய லாம் சம்மதமா? ஐப்பசி மாதம் கல்யாணம்! என்றேன் "நான் என்ன சொல்கிறது ஊர் சிரிக்குமே" என்று அழுதார். ஊர் சிரித் தாலென்ன அழுதாலென்ன. நியாயமென்று தோன்றுவதைச் செய்ய வேண்டியதுதான். இஃதிருக்கட்டும். இதற்குத்தான் ஊர் சிரிக்கும். நானொன்று கேட்கிறேன், இந்தப் பெண் மெதுவாக பட்டாடையை எடுத்து உடுத்திக் கொண்டது என்று வைத்துக் கொள்வோம் என்ன செய்வீர்கள்? என்றேன்.

நண்பர்:—அப்படி உடுத்திக் கொள்ளாது.

நான்:—அப்படி நினைக்க வேண்டாம். போன வாரத்தில் புதிதாகச் சங்கிலி போட்டுக்கொண்டமாதிரி ஒரு காதுக் கோட் டையும் போட்டுக்கொண்டால்................!

நண்பர்:—ஐயா! கலகம் செய்யாதீர்கள். என்ன செய்கிறது. பாவமாக இருந்தது. எல்லாருந்தான் சங்கிலி போட்டுக் கொள்ளு கிறார்களே என்று செய்து போட்டோம்.

நான்:—கலகம் செய்ய நான் வரவில்லை. அப்படியே என்னைப் போல ஒரு பெண் உபதேசித்ததென்று வைத்துக் கொள்ளலாம், பட்டுப் புடவை கட்டி தலையில் புஷ்பமும் வைத்துக் கொண்டால் என்ன செய்வீர்கள்?

நண்பர்:—அவள் தாயார் விடமாட்டாள்.

நான்:—விடாமல் என்ன செய்கிறது? அடிக்கிறதா?

நண்பர்:—ஆமா! பிடுங்கி எறிய வேண்டியதுதான். கேலி தாங்க முடியுமா? ஊர் சுட்டு விடாதா?

நான்:—ஐயா! கட்டுப்படாமல் வெளியேறிப்போய்விடுகிறது. அப்பால் என்ன செய்வீர்கள்?

நண்பர்:—ஓடவா. விடுவோமா? எந்த டில்லிக்குப் போனாலும் கொண்டு போனவனையும் சேர்த்துப் பிடித்துத் திருட்டுக் கேஸ் போட்டு தண்டித்து விடுவோமா? லேசில் விடுவோமா?

நான்:—திருட்டுக் கேஸ் போட்டாலும், தெண்டித்தாலும் பெண் கெட்டது கெட்டதுதானே! ஓடிப்போய் கெட்ட பெண்ணை அழைத்து வந்து வைத்திருக்கிறார்களென்று ஊரார் கேலி செய்ய மாட்டாதா?

நண்பர்:—அது முடியாது. எத்தனையோ ஆயிரம் அப்படியிருக்கிறது.

நான்:—ஐயா, யாரோ கூட்டிப்போய் விடுகிறான். பம்பாய் பக்கமோ, பர்மாவுங்கோ, தென்னாப்பரிக்காவுங்கோ போய் விடுகிறார்கள். அங்கேயிருந்து ஒரு பிள்ளையும் பிறந்து விடுகிறது. என்ன செய்வீர்கள்?

நண்பர்:—அப்படியெல்லாம் இந்தப் பெண் நம்பி வெளியே போகாது. தெய்வச்செயலாகப் போய்க் கெட்டுப்போனால் நாம் என்ன செய்கிறது. தலைவிதி யென்று இருக்கவேண்டியதுதான்.

நான்:—உங்களால் முடிந்தவரை உருப்படவிடமாட்டீர்கள். அதுவாக நடக்கவேண்டும். இருக்கட்டும். அப்படி ஓடிப்போய்விட்டால் ஊர் சிரிக்காதா?

நண்பர்:—சிரிக்கத்தான் செய்யும்! என்ன செய்கிறது. தலையைக் குனிந்துகொண்டிருக்க வேண்டியதுதான்.

இதுதான் இன்றையநிலை. விதவையை உண்டாக்கி வைத்திருக்கிற எல்லா சமூகத்திலும் கதை ஒன்றுதான். பலிச்சவரையில் பாதுகாப்பு. மேலே போனால் அரோகரா. ஊர் சிரிப்பதற்கு அளவு கிடையாது. பிள்ளைக்குக் கலியாணம்செய்ய தாமதப்பட்டால் ஊர்சிரிக்கும். கல்யாணச் செலவைக் குறைத்தால் ஊர் சிரிக்கும். கையிலில்லாமல் கடன் வாங்கிக் கல்யாணம் செய்துவிட்ட பிறகு கடன்காரன் மணியடித்தால் ஊர் சிரிக்கும். அவன் செத்துப், பெண் தாலியறுத்தால் பாழடைந்த வீடு என்று சொல்லி ஊர் சிரிக்கும். பெண்ணுக்கு மறுபடியும் கல்யாணம் செய்தால் ஊர் சிரிக்கும். கல்யாணம் செய்யாமல் வைத்திருந்து பெண் காதல் செய்தால் ஊர் சிரிக்கும். எல்லாவற்றுக்கும் ஊர் சிரிக்கும். எப்பொழுது சிரிக்காமலிருக்கப் போகிறது? நாம் எப்பொழுது உருப்படுகிறது! இத்தனை சிரிப்பில் எது செய்தால் நமக்கு நல்லதென்று பார்க்கவேண்டியதுதானே ஒழுங்கு. சிரிக்கிறதாம்!

# வைதவ்யக் கொடுமை!

செய்கோன்—அறிவானந்தன்.

அந்தி வானத்தில் அழகிய தோற்றத்தோடு கதிரவன் பொன்னிறத்தை யொத்த இளவெயிலை, செடிகளிலும், கொடிகளிலும் மலர் முகங்காட்டிப் புன்னகையோடு விரிந்துகொண்டிருக்கும் மலர்களிலும் வீசி, மக்களை வசீகரித்துக்கொண்டிருக்கிறான். வண்டுக் கூட்டங்கள், மெல்லென வீசும் மந்தமாருதத்தில் தங்கள் ரீங்காரத்தைச் சுதிசேர்த்து வீணாகானஞ் செய்துகொண்டிருக்கின்றன. பறவைக் கூட்டங்கள் பசிதீர உண்டுகளித்து, ஜோடி ஜோடியாக ஆடிக் குதித்துத் தத்தம் கூடுநோக்கிப் பறந்துகொண்டிருக்கின்றன. பக்கங்களிலுள்ள பலா, தெங்கு, கமுகு முதலிய மரங்களிலிருந்து வழிந்து பாயுந் தேறலோடு நிஷ்களங்கமாக அருவி நீர் ஓடிக்கொண்டிருக்கிறது. இன்னோரன்ன இயற்கைக் காட்சிகள் யாவும் ஒருங்கே நிறைந்த அழகிய பூங்காவனத்தில், ஓர் கட்டிளங் காரிகை மெல்ல மெல்லத் துவண்டு துவண்டு நடந்துகொண்டிருக்கின்றாள். இயற்கைக் காட்சிகளைக் கண்டதும் அப் பேடன்னம் போன்ற பொற்கொடியாளுக்கு இயற்கை உணர்ச்சி பீறிட்டெழுகிறது! அந்தோ! என்ன செய்வள்? அவள் ஓர் "விதவை"! தன்னிற்றானே அடங்காது பொங்கி யெழும் உணர்ச்சியைத் தாங்க மாட்டாதவளாய், அக்கம் பக்கங்களிலுள்ள பூக்களையும், வண்டுகளையும், பிறவற்றையும் நோக்கித் தம் கருத்தை வெளியிட்டுப் பிரலாபிக்கின்றாள்.

சோலை இருமருங்குஞ் சொர்னமய மாய்விளங்கும்
மாலை மலர்ந்த மலரினமே!—ஞாலமிதில்
எங்களைப்போல் வாடுகின்ற இன்பிழந்த வைதவ்யர்
எங்கேனு முண்டோ இசை!

வன்ன மலரணைந்து வண்டருந்தும் வண்டினங்காள்!
பன்னும் மொழிகேட்பீர் பார்மீது—பொன்மடவார்
தம்மை விதவையெனுந் தாள்பூட்டிக் கொல்கின்ற
செம்மை இதுசரியோ? செப்பு!

கூடிக் குலாவிக் குதித்தோடும் மானினங்காள்!
வாடித் துவண்டு வதங்குகின்றோம்—நாடிதனிற்
கைம்மை யெனுஞ்சொல்லாற் கட்டழுகி யார்நாங்கள்
அம்ம! இதுகொடுமை அன்றோ?

எல்லோர்க்கும் நன்னீதி யில்லாது ஓரினத்தைக்
கல்லாய் மதிக்குங் கயவர்தம்—பொல்லாத
இந்துமதம் சாகாதோ! எங்கடுயர் தீராதோ!
எந்தமதத் துண்டே இது?

---

# மாதர் மறுமணப் பிரசாரத்திற்கு உதவி.



பெண்மக்களை அடிமையாக்கி துயர்க்கடலில் கிடத்தியிருப்பதிலிருந்து நல் வாழ்க்கைக்கு உயர்த்தும் பணியில் ஈடுபடும் அன்பர்களுக்கு ஒரு விண்ணப்பம். பின்வரும் விஷயங்களை விசாரித்துக் கிடைத்தவரையும் அறிவிக்க வேண்டுகிறேன்.

1. தமிழ்நாட்டில் விதவாவிவாகம் செய்வதில்லையென்ற சமூகங்கள் எவை?
2. அவர்களின் ஜனத்தொகை (உத்தேசமாக) எவ்வளவிருக்கும்?
3. அந்த சமூகத்தார் எந்தெந்த தாலூகாவில் வசிக்கிறார்கள்?
4. அந்த சமூகங்களில் சீர்திருத்த விருப்பமுள்ளவர்களின் விலாசப்பெயர்.
5. இந்த சமூகங்கள் ஒவ்வொன்றிலும் புருஷன் இறந்தபின்னர் பெண்ணை விதவையாக்க என்னென்ன மாதிரியான சடங்குகள் செய்யப்படுகின்றன?
6. தமிழ்நாட்டில் விதவா விவாகம் செய்துகொண்டுள்ள தம்பதிகளின் போட்டோ, அவர்களின் வயது, கல்யாணம் நடந்ததேதி, அவர்களுடைய சுருக்கமான சரித்திரக்குறிப்பு ஆகியவை தேவை. கிடைத்தவரை அனுப்பித்தர வேண்டுகிறேன்.
7. புதிதாக புருஷனிறந்து விதவையாகிற செய்திகளையும், விதவா விவாகம் நடைபெறுகிற செய்திகளையும் தெரிவிக்க வேண்டுகிறேன்.

காரியதரிசி,
மாதர் மறுமண சகாய சங்கம், காரைக்குடி.

# எனக்கு ஒன்றுமில்லை!




இளம் பெண்ணை விதவையென்று ஜாதிக் கட்டுப்பாடென்னும் கயிற்றால் வைதீகம் எனும் மரத்தில் கட்டிப் போட்டிருக்கின்றனர். தமயனும் அவன் மனைவியும் கொஞ்சுகிறார்கள். அக்காள், பிள்ளைபெற்று விளையாடுகிறாள். தாய் ஒரு குழந்தையைப் பெற்று மடியில் வைத்துப் பாலூட்டி மகிழ்கிறாள்.

# பத்திராதிபர் குறிப்புக்கள்.

## பாரதியார் வாழ்க!

*கவி சுப்பிரமணிய பாரதியார் தமிழ் நாட்டில் பிறந்தது, தமிழ் மக்களின் நற்காலமென்பதில் ஐயமில்லை. நல்லதொரு சந்தர்ப்பத்தில் அவர் பிறந்து வாழ்ந்து அரிய பாக்களை நல்கினார். தேசீய உணர்ச்சி, ஒற்றுமை, மொழிப்பற்று, வீரம் முதலிய நறுங் குணங்களை உயிரில் பட்டு வீரமுறும்படி பாடியிருக்கிறார். இதுவரை உயர்ந்த இலக்கியம் பாடியவர்; கவி செய்தவர்; யாவரும் பாடாத மாதிரியில் பாரதியார் பாடியது ஒன்றுதான். அது பெண்ணுரிமையைப் பற்றியது. ஒரு ஆண் மகன்—தமிழ் நாட்டில் பிறந்த கவி "சரி நிகர் சமம்" என்று கூறும் பாக்கியத்தை பாரதியே கைப்பற்றிக் கொண்டார். அவருக்குப் பெண்ணுலகம் என்றுங் கடமைப் பட்டிருக்கிறது. பாரதியார் வாழ்க!*

## சாஸ்திரியார் தடுமாற்றம்.

*விவாகரத்து வேண்டுமா வேண்டாமா என்று ஒரு வாதம் கிறிஸ்தவ வாலிபர் சங்கத்தில் நடந்ததாம். அதில் T. R. வெங்கட்டராம சாஸ்திரியார் பேசிய விபரம் வருமாறு:—*

> *"விவாகம் தெய்வ சந்தர்ப்பத்தால் ஏற்படுகிறதென்று உயர்குடும்பத்தார் பலரும் நினைக்கிறார்கள். கணவன் உபயோகமற்றவனாக இருந்த போதிலும் அவனுடன் காலங்கழிக்க இஷ்டப்படும் பெண்கள் பலர் இருக்கிறார்கள். விவாகரத்தைப் பெரும்பான்மையோர் ஆதரிக்கவில்லை"*

*இந்த சாஸ்திரியார் அட்வகேட் ஜெனரலாகச் சிலநாள் இருந்தவர். பெண்கள், ஆகாயத்தில் கப்பலோட்ட முற்பட்டிருக்கிற காலத்தில், சாஸ்திரியார் இபபடித் தடுமாறுவது பரிதாபகரமானதாகும். உபயோகமற்றவனையா பெண்கள் விரும்புகின்றனர். இவரைப் போன்ற பின்னடைந்த மனப்பான்மையுள்ள பலர் சேர்ந்து ஒரு பெண்ணை மடக்கி, ஆட்டைக் கழுத்தறுப்பதுபோல், கிழவர்கட்கும், நோயாளிகட்கும் தாலிகட்டி விடுகின்றனர். பின்னர், அந்த விலங்கிலிருந்து கழட்டவே முடியவில்லை. ஜாதியார் விடுவார்*

களா? தப்ப வழியில்லாத படுவிலங்கு மாட்டப்படுகிறது. அதைக் கழட்டிக்கொண்டால் வேறு கல்யாணத்துக்கு மாப்பிள்ளேயும் அகப் படாது. தொழுவிலும் மாட்டி வெளியேறவும் விடாமல் அந்த அசட்டுக் கணவனிடம் அபிமானம் வைக்கிறுர்களென்று மேடை யேறிப் பிரசங்கமும் செய்ய முற்படுதல் வெட்கமில்லையா என்று கேட்க விரும்புகிறோம்.

## யுத்தமுனையில் பெண் சேனுதிபதி.

ஸ்பெயின் யுத்தமுனையில் ஒரு பெண் சேனை, சர்க்கார் தரப் பில் நின்று போர் புரிகின்றதாம். அச்சேனையின் அதிபதியாக இருந்து டோலோர்ஸ் இபாருரி என்றபெண் சேனைகளை நடத்து கிறுர். அந்த வீரப்பெண்ணின் பெயரைக் கேட்டால் கலகக்காரர் நடுங்குகின்றனராம். கலகக்காரர் ஷை பெண்ணைப் பிடித்துப் பலமான காவலுடன் சிறையில் அடைத்து வைத்திருந்தனராம் ஆனல் எப்படியோ தப்பித்துக் கொண்டு தன் சேனையுடன் சேர்ந்து மறுபடியும் யுத்தகளத்துக்கு வந்து அப்பெண் யுத்தம் செய்வதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. பெண்களுக்கு பலமில்லை; பயந்தவர் கள்; அடுப்படிக்குத்தான் லாயக்கு என்று கருதும் நம்நாட்டு மக் கள் இதனை நோக்குதல் வேண்டும்.

## பேயும் போச்சு; பிராணனும் போச்சு.

சிலோனிலுள்ள நீர் கொழும்பு என்னும் ஊரில் ஒரு பெண் ணுக்கு பேய் பிடிப்பதாகக் கூறி தூணில் கட்டிவைத்து சாட்டை யால் இரவு முழுமையும் மந்திரங்கூறி அடித்துக் கொண்டிருந்தன ராம். டோணு அம்போரியார் என்னும் அப்பெண் சமையல்வேலை செய்பவளாம். சிலநாளாக அப்பெண்ணுக்கு மனோநிலைமை சரி யாக இல்லாமல் வேலைக்குச் செல்வதில்லையாம். இதனைக்கண்ட ஒரு பூசாரி பேய் பிடித்திருக்கிறதென்றும் தான் ஓட்டிவிடுவதாகவும் கூறி இவ்வாறு செய்தானும். விடிகாலம் 4-மணிக்குப் பெண் மயங்கி விழுந்தாளாம். பூசாரிகள் போய்விட்டனர். பெண்ணும் இறந்து போய்விட்டாள். பெண்ணைப் பரிசோதிக்கும்போது 192 அடிகளின் சுவடு இருந்ததாம். போலீஸ் கோர்ட்டில் கேஸ் எடுக்கப் பட்டிருக்கிறது. பெண்ணைப்பேய் பிடித்தாலும் அதற்குள் பெண்

ணின் உயிர் ஒன்றிருக்கிற தென்பதை முட்டாள் பூசாரிகளும் உற வினரும் கருதாமற் போய்விட்டனர். உயிருடனிருக்கும் பெண்ணை அடித்துக் கொல்வதா? பாழும் மூடவழக்கம்—பேய்பிடிக்கிறதென்ற முட்டாள் கொள்கை கொலையில் முடித்து விட்டதே! பேயோட்டி கள் எத்தனை அருமையான பெண்களை இக்கதிக்காளாக்கி யிருக் கின்றனர்? படிப்பில்லாத நிலைமையினால் விளையும் பல துன்பங்களில் இதுவுமொன்றல்லவா?

## போலீஸ் அக்கிரமம்.

மக்களுக்குத் துன்பம் ஏற்படாமல் காப்பாற்றவே போலீஸ் ஏற்பட்டிருக்கிறது. பயிரை மாடு மேயாமற் போடும் வேலியா னது பயிரை மேய்வதுபோல் போலீஸ் இன்ஸ்பெக்டர் செய்த அட்டூழியம் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கிறது. வங்காள மாகாணத்தில் பாரிசால் பந்தாரியா போலீஸ் ஸ்டேஷனில் வேலை பார்த்த சப் இன்ஸ்பெக்டர் சரத்சந்திர சக்கிரவர்த்தி என்பவர் ஒரு இளம் விதவையின் வீட்டுக்கு இரண்டு ஆட்களுடன் நிறையக்குடித் துவிட்டுச் சென்று அப்பெண்ணைப் பலவந்தப்படுத்திக் கெடுத்தார் என்ற குற்றத்திற்காக பாரிஸால் செஷன்ஸ் ஜட்ஜினால் 7 வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறார். மற்ற இருவருக்கு 5 வருஷங்கள் வீதம் தண்டனை கிடைத்திருக்கிறது. ஐயோ! விதவை வாழ்க்கையே! விதவை யென்றால் புருஷனில்லாதவள். அவளை யாரும் விரும்பலாமென்ற கருத்து சப் இன்ஸ்பெக்டர் வரை ஏற் பட்டுவிட்டது. இந்த சப் இன்ஸ்பெக்டர் இப்படி எத்தனை அட்டூ ழியங்களைச் செய்தாரோ? சாதாரண மனிதர் 10–20 செய்தால்தான் ஒன்றில் அகப்படுவார். சப் இன்ஸ்பெக்டர் 100, 200 குற்றம் செய்தால் ஒன்றில் அகப்படுவார். வேலியே பயிரை அழிப்பது சகிக்க முடியாததாகுமன்றோ?

## வரதட்சிணைக்குத் தண்டனை

மாப்பிள்ளைக்குப் பணம் வாங்கும் இந்து விவாக முறையினால் ஏற்படும் சங்கடங்களைப்பற்றிச் சொல்லிமுடியாது. சர்வ சாதாரண மாக நடக்கவேண்டிய விவாக விஷயத்தை மலைபோலக் கடுமை யாக்கி எண்ணற்ற பெண் குடும்பத்தார்களின் வாழ்வை நாசமாக்

கும் வரதட்சிணைக் கொடுமையைப்பற்றிய பரிதாபமான செய்திகளை பத்திரிகைகளில் தினந்தோறும் படிக்கிறோம். வீட்டிலிருக்கும் கன்னிப் பெண்ணுக்கு வயதாகிவிட்டது. மணமாகவேண்டும். புருஷனோ கிடைக்கவில்லை. கிடைத்த புருஷன் 4000, 6000 வரதட்சிணை கேட்கிறான். கொடுக்க வழி கிடையாது. பெண்ணைப்பற்றிப் பொய்க் கதைகள் வேறு கட்டப்படுகின்றன. இந்நிலையில் பெண்ணின் கதியென்ன? பெற்றோரின் நிலை யென்ன? சகிக்க முடியாத இந்தக் கொடுமையைத் தவிர்ப்பதற்காக இந்திய சட்டசபையில் டாக்டர் என். பி. கேர் வரதட்சிணைத் தடை மசோதாவொன்று கொண்டு வந்திருக்கிறார். அந்த மசோதாவின்படி ஹிந்துக்கள் விவாக காலத்தில் வரதட்சிணை கொடுப்பதோ வாங்குவதோ கூடாது. மீறினால் ஒரு மாதக் காவல் தண்டனையும் 500 ரூ. அபராதமும் விதிக்க மசோதாவில் அதிகாரமளிக்கப்பட்டிருக்கிறது. தண்டனை சொற்பமாக இருந்தாலும் இச்சட்டம் மிகவும் அவசியமானதாகும்.

## அண்ணனின் அறவுரை.

சேலம் அக்கிரகாரத்தில் நடைபெற்ற ஆர்ய வைசிய வகுப்பு முதலாவது விதவா விவாகச் செய்தி, நிகழ்ச்சிப் பகுதியில் வெளியிடப்பட்டிருக்கிறது. அன்று அப்பெண்ணின் சகோதரர் கூறிய உரைகள் எவருக்கும் உருக்கத்தை யளிப்பனவாக இருக்கின்றன.

> "என்னுடைய சகோதரியை க்ஷேமத்தோடு காப்பாற்ற எங்களால் முடியும். என்றாலும் விதவைகளை வீட்டில் அடைத்து வைத்துக் கொண்டிருப்பதால் ஏற்படும் அபகீர்த்திக்கும், துயரத்திற்கும், கொடுமைக்கும் ஆளாவதைவிட விவாகம் செய்வதால் ஏற்படும் இன்னலை சகித்துக்கொள்ளலாம் என்ற எண்ணத்துடனும், பல பெரிய குடும்பங்களில் விதவைகளாலேற்பட்டுள்ள இழிவைப் போக்கவுமே எனது சகோதரி மணம் செய்துகொள்வதை நான் சம்மதித்தேன்"

என்று கூறியிருக்கிறார். இந்த நிலைமையானது விதவையை உண்டாக்கிக்கொண்டிருக்கிற எல்லா சமூகத்தாரிடத்திலும் நிகழ்வது தான். ஆனால் நண்பரைப்போல் பரிதாபகரமான நிலைமையிலுள்ள விதவைச் சகோதரிகளின் சகோதரர்க்குத் துணிவேற்படவேண்டும். ஏற்படுமானால் விதவைத்துயர் அன்றே ஒழியுமன்றோ! மற்ற சமூக வாலிபர்கள் இதனை நோக்குவாராக.

## ஓடும் ரயிலில் கொடுமை

சசிரேகா எனும் 17 வயதுள்ள பெண் புருஷன் படுத்திய துன்பம் பொறுக்காமல் மே-மீ 7-உ யன்று தாய் வீட்டுக்குப் புறப்பட்டாள். தாய் வீடு பர்லாகிமிடியிலிருக்கிறது. துணைக்கு உடன்வருவதாகக் கூறிய பெண் வரவில்லை. ஸ்டேஷன் அருகிலுள்ள கடைக்காரனிடம் தன் நிலைமையைக் கூறினாள். இரவு 9 மணிக்கு ஒரு கூட்ஸ் வண்டி வந்தது. அதிலுள்ள கார்டும் கரி தள்ளுபவரும் ஷை கடைக்கு வந்து தாகசாந்தி செய்து கொண்டனர். இப்பெண்ணின் பரிதாபத்தை ஷையார்களிடம் கடைக்காரன் தெரிவித்தான். கார்டும் கரி தள்ளியும் கூட்ஸ் வண்டியில் கூட்டிப்போய் பலாசா ஸ்டேஷனில் இறக்கி பஸ்ஸில் ஏற்றிவிடுவதாகச் சொல்லிப் பெண்ணை கார்டு வானில் ஏற்றிக்கொண்டனர். வண்டியில் அவ்விருவரும் இப்பெண்ணைப் பலவந்தம் செய்து கெடுத்தனர். சிறிது நேரத்தில் புருஷன் வீட்டார் தேடிவந்து தகவல் தெரிந்துஅடுத்த ஸ்டேஷன்மாஸ்டருக்குத் தந்திகொடுத்துப் பிடித்து வழக்கு நடத்தினர். ஜட்ஜ் கார்டுக்கும் கரிதள்ளிக்கும் தனித்தனி மூன்றுவருஷ கடுங்காவல் தண்டனை விதித்தார். பிரயாணிகளை ரயில்வே உத்தியோகஸ்தர்களே துராக்கிரகம் செய்கின்றனர். இப்படியானல் பெண்களின் மானத்தை எப்படிப் பாதுகாப்பது?

---

# விதவைப்பெண் தேவை.

(1) வயது 18, நல்லலக்ஷணம், போதுமான படிப்புள்ள சுமார்த்தப் பிராமண வாலிபனுக்கு விதவைப்பெண் தேவை. பெண் நாகரீகமுள்ளதாகவும், எழுதப்படிக்கத் தெரிந்ததாகவும் இருக்க வேண்டும். பிராமணப் பெண்ணாகத்தானிருக்க வேண்டுமென்பது கட்டாயமில்லை.

(2) வயது 30. 30 ஆயிரம் ரூபாய் சொத்துடையவர். நாட்டுக்கோட்டை செட்டியார். முதல் தார மனைவியில்லை. 24 வயதிற்கு மேற்படாத நாகரீகமுள்ள விதவைப்பெண் தேவை. சொற்ப படிப்பிருந்தாலும் போதும்.

இது சம்பந்தமான விஷயங்கள் யாவும் ரகசியமாக இருக்கும். நேரிலும் கடித மூலமும் தெரிவிக்கலாம்.

சோ. முருகப்பா,
காரியதரிசி, மாதர் மறுமண சகாய சங்கம், காரைக்குடி.

# :: நிகழ்ச்சிகள். ::

## ஆரிய வைசியர் குலத்தில் முதலாவது விதவாவிவாகம்.

சேலத்தில் ஆரிய வைசிய (கோமுட்டி) குலத்தினரான திரு. ராஜு செட்டியாருக்கும் திரு. நாகரத்தினத்திற்கும் செப்டம்பர் 11உ விதவா விவாகம் சிறப்பாக நடைபெற்றது. பெண்ணுக்கு வயது 13. நான்கு மாதங்கட்கு முன்பு கணவனை இழந்த கன்னிகை. மணமகனுக்கு வயது 30. சேலம் முதல் அக்கிரஹாரத்தில் விவாகம் நடைபெற்றது. ஏராளமான கனவான்கள் விஜயம் செய்திருந்தனர். பவானிசிங், ஆதிகேசவலு செட்டியார், சுப்பராவ், அனந்தாச்சாரியார் முதலியவர்கள் முதலாவதாகச் செய்யப்பெற்ற இவ் விவாகத்தைப் பாராட்டிப் பேசினர். மேளவாத்தியங்களுடன் கடைவீதி வழியாக ஊர்வலம் புறப்பட்டது. பெரிய மனிதர்களும் முனிஸிபல் கௌன்ஸிலர்களும் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். ஊரக்கரை சீதாராம ரெட்டியார் தலைமையில் ஒரு கூட்டம் நடைபெற்றது. பலர் பாராட்டிப் பேசினர். தலைவர் ரவிக்கை ஆடை முதலிய பொருள்களை மணப் பரிசாக நல்கினர்.

———

## காரைக்குடியில் கூட்டம்.

காரைக்குடி விவேகானந்த சங்க நிலையத்தில் நாளது ஆவணி மீ 25உ மாலை 5 மணிக்கு மாதர் மறுமண சகாய சங்கக் கூட்டம் ஆரம்பமாயிற்று. முனிஸிபல் கௌன்சிலரும், பொதுநலச் சங்கத்தின் தலைவருமான திருவாளர் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் தலைமைவகித்தார்கள். செட்டியார் நலவுரிமைச் சங்கத்தின் காரியதரிசி திருவாளர் பழ. நாச்சியப்ப செட்டியாரவர்களும், முனிசிபல் கௌன்சிலர் திருமிகு மு. மரகதவல்லி யம்மாளவர்களும், டாக்டர் ஆர். பீமசிங்கு அவர்களும், குமரன் ஆசிரியர் திரு. சொ. முருகப்பா அவர்களும் மாதர் மறுமணத்தின் அவசியத்தைப்பற்றி பல உதாரணங்களுடன் பேசினார்கள். தலைவரவர்கள் ஹாஸ்யத்துடனும் பொதிந்த பொருளுடனும் நீண்ட முடிப்புரை கூறினார்கள். பின்னர் மாஜிக்லாண்டர்ன் படக்காட்சி காட்டப்பட்டது. ஏராளமான வாலிபர்கள் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. இரவு 8-30மணிக்குக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

———

## பிள்ளையார் பட்டியில் கூட்டம்

புரட்டாசிமீ 4உ (19—9—36) மாலை 8 மணிக்கு சதுர்த்தி விழாவை முன்னிட்டு பிள்ளையார் பட்டியில் மாதர் மறுமண சகாயசங்கக் கூட்டம் ஆயுர்வேத வைத்தியசாலையில் கூட்டப்பட்டது. ஆண்மக்களும் பெண்மக்களும் ஏராளமாகக் கூடினர். மாதர் மறுமண சகாயசங்கத்தின் மாஜிக்லாண்டர்ண் படக்காட்சி மூலம் திரு. சொ. முருகப்பா அவர்கள் சுமார் ஒன்றரை மணி நேரம் உபந்யசித்தனர்.

———

## விஸ்வகர்ம வகுப்பில் விதவா விவாகம்.

கடியாபட்டி ஸ்ரீமான் டி. எ. ஆர். எம். அண்ணாமலை ஆச்சாரியின் மருமகள் ஸ்ரீமதி ஏகாம்பாள் அம்மாளுக்

கும் தஞ்சைஜில்லா அணவயல் பிர்மச்சாரி ஸ்ரீமான் வி. வீரப்ப ஆச்சாரியாருக்கும் எவ்வித மதச்சடங்குகளுமின்றி ஆகஸ்டு மீ 8உயன்று நார்த்தாமலை மாரியம்மன் கோவிலில் சீர்திருத்த விதவை மணம் சிறப்பாக நடைபெற்றது. இப்பகுதியில் இந்தத் திருமணம் முக்கியமானதாகும். மாப்பிள்ளைக்கு வயது 30 ஆகிறது. இதுவே முதலாவது மணம். பெண்ணுக்கு வயது 20 ஆகிறது.

---

## கோவிலூரில் விதவா விவாகம்.

காரைக்குடி என். பி. ஆர். எம். பிரதர்ஸ் சொந்தக்காரரும் கோவிலூர் வாசியுமான ஸ்ரீமான் நடராஜனவர்களுக்கும் லெட்சுமி என்ற பால்ய விதவைப் பெண்ணுக்கும் எந்தவிதமான சடங்கும் புரோகிதமுமில்லாமல் சீர்திருத்த முறையில் நாளது செப்டம்பர் மீ 13 உ கோயிலூரில் திருமணம் நடைபெற்றது.

---

## மானூரில் மறுமணம்

திருநெல்வேலி ஜில்லா மானூரைச் சேர்ந்த திரு. தெய்வக்கண்ணு ஆச்சாரியின் புதல்வி 24 வயதுடைய ஸ்ரீ ம தி. சொர்ணத்தம்மாளுக்கும், கெரம்பன்குளம் 28 வயதுடைய திரு. சுடலையாண்டி ஆச்சாரிக்கும் 11-9-36 தேதி வெள்ளிக்கிழமையன்று மானூரில் விதவா விவாகம் சிறப்பாக நடைபெற்றது. ஏராளமானவர்கள் வந்து மணத்தைச் சிறப்பித்தனர்.

---

## நாகர் கோயிலில் கலப்பு மறுமணம்

19—9—36-யன்று பகல் 10 மணிக்கு திரு. பொ. திருகூடசுந்தரம் பிள்ளையவர்கள் தலைமையில் நாகர் கோவிலையடுத்த கிருஷ்ணன் கோயிலில் தூத்துக்குடி ரங்கநாதபுரம் திரு. அ. ம. லெட்சுமணபிள்ளையவர்களின் மூத்த புதல்வரான திருவாளர் நாராயணபிள்ளை யவர்களுக்கும் ஆழ்வார் திருநகரியைச் சேர்ந்த நாயுடு விதவை ஸ்ரீமதி. ஆள்வார் அம்மாள் அவர்களுக்கும் சீர்திருத்த கலப்பு விதவா விவாகம் நடைபெற்றது. அன்பர்கள் பலர் ஆசி கூறினார்கள். பல இடங்களிலிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

---

## மகளைச்சுட்ட மாபாவி

சிலோனிலுள்ள கிரிமாதியா எனும் கிராமத்திலுள்ள கெய்யப்புவா என்பவன் தன்னுடைய பெண்குழந்தையைச் சுட்டுவிட்டானென்று மாத்தளை போலீசார் வழக்கெடுத்தனர். சுடுபட்ட பெண் பின்வருமாறு வாக்குமூலம் கொடுத்தாள். "ஆகஸ்ட் 12உ அடுத்த கிராமத்திலுள்ள கடைக்குச் சென்றேன். வந்தால் அடிப்பார் என்ற பயத்தால் அங்கே தங்கிவிட்டேன். மறுநாள் கேட்டதற்கு உள்ளதைச் சொன்னேன். என்னைப் பிடித்துக் கைகளைக் கட்டி ஒரு தூணில் கட்டி வைத்தார். கம்பால் அடித்தார். பின்னர் காலில் சூடு போட்டார். அவிழ்த்துவிட்ட பிற்பாடு தவழ்ந்து அருகிலுள்ள ஒரு வீட்டுக்குச் சென்றேன். அந்தவழியாகச் சென்ற போலீஸ்காரரிடம் நடந்ததைச் சொன்னேன்"

நீதிபதியானவர் இந்த வழக்கை விசாரித்து "இவ்வழக்கு மிகவும் மோசமானதென்றும் எதிரிமீது எவ்வித கருணையுங் காட்ட முடியாதென்றுங் கூறி தகப்பனுக்கு 6 மாத கடுங்காவலும், 6 மாத நன்னடக்கை ஜாமீன் கொடுக்கும்படியும் தீர்ப்பளித்தார்.

# "மாதர் மறுமணம்"
# அறிக்கை.

## முதலாவது பிரதிகள் தீர்ந்துவிட்டன.

"மாதர் மறுமணம்" முதலாவது (ஆவணிமாதம்) பிரதிகள் யாவும் பத்திரிகை வெளியான மறு தினத்திலேயே செலவாகிவிட்டன. பின்னர் சேர்ந்துள்ள சந்தாதார்கட்கு இரண்டாவது இதழிலிருந்து அனுப்பப்படும். தாமதித்து வந்த சந்தா ஆர்டருக்கும் முதல் இதழ் அனுப்ப முடியாமற் போய்விட்டது. அவர்கட்கும் இரண்டாவது இதழிலிருந்து அனுப்பப் படும். ஏஜெண்டுகட்கும் கேட்ட அளவு அனுப்ப முடிய வில்லை.

ஆவணிமாத இதழ் ஆவணி 26உ வெளியிடப்பட்டது. புரட்டாசி இதழ் (2-வது இதழ்) புரட்டாசி-மீ 10உ வெளிவருகிறது. அப்பால் ஒவ்வொரு மாதமும் மாத முதல்தேதியன்று வெளிவர ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது. ஒவ்வொருவரும் தாங்களும் சந்தாதாராகச் சேர்ந்து தங்கள் சிநேகிதர்களையும் சேரும்படி செய்யக் கேட்டுக்கொள்கிறேன். பத்திரிகை எவ்வளவு தூரம் பரவுகிறதோ அவ்வளவு வரை இயக்கம் பரவமுடியுமல் லவா! தவிர ஏராளமான சந்தாதார் இருந்தால் பத்திரிகை திறமையாக நடத்த இயலுமென்பதும் கவனிக்கத்தக்கது.

சோ. முருகப்பன்,

காரியதரிசி, மாதர் மறுமண சகாய சங்கம்,

காரைக்குடி.

# 'மாதர் மறுமணம்' பத்திரிகை விற்கும் ஏஜெண்டுகள்.

1. சுதேசமித்திரன் ஏஜெண்டு, காரைக்குடி.
2. T. K. சின்னப்பன், தினமணி ஏஜெண்டு, காரைக்குடி.
3. நாஷனல் நியூஸ் ஏஜென்ஸி, 89 சர்ச் ஸ்டரீட்.

ஸ்லேவ் அயலண்ட், கொழும்பு.

# உள்ளுறை.

# மாதர் மறுமணம்
## பத்திரிகைபற்றிய
## அபிப்பிராயங்கள்.

---

ராவ்பகதூர் எம். ஸி. ரரஜா எம் எல். ஏ. எழுதுவது:—

சிம்லா 21—9—36.

காரைக்குடியிலிருந்து தோன்றியுள்ள "மாதர் மறுமணம்" என்ற மாதப் பத்திரிகையின் முதல் (ஆவணி) இதழ் வரப்பெற்றேன். இதன் பெயருக் கேற்ப இது மாதர்மறுமண இயக்கத்தை வளர்ப்பதாகுமென்பதை அறிந்து மனமகிழ்ந்தேன்.

நமது அருமைத் தமிழ் நாட்டில் "பெண் ஜென்மம் புண் ஜென்மம்" ஆய்விட்டதே யென்று வருந்திக் கொண்டிருந்த எனக்கு, வீரமாது மரகத வல்லி அம்மையை ஆசிரியராகக் கொண்ட இந்தப் பத்திரிகை மிகுந்த தைர்யமளித்து விட்டது. பல்லாயிரக்கணக்கான தமிழ் பால்ய விதவை களின் நிலைமையை அறிந்த ஒவ்வொரு ஆடவனும், கனவானும் இத்தகைய பத்திரிகையை உவந்து வரவேற்கவேண்டுமென்று நான் மனமார்ந்து கேட் டுக்கொள்கிறேன். மகாத்மா காந்தியின் பொன்னுரையில் கண்டிருப்பது போல் கணவரை இழந்த பால்ய சிறுமிகளை 'விதவைகள்' என்று சொல் வதே பாபம். அவர் மணம் செய்து கொண்டால் அது மறு மணமல்ல. முதல் மணந்தான் என்று சொல்வேன். மாதர் மறுமணத்தின் அவசியத்தை விளக்கும் அரிய கட்டுரைகளும், கதைகளும், குறிப்புகளும் அடங்கிய இந் தப் பத்திரிகை நல்ல காகிதத்தில் அழகிய வடிவத்தில் விளங்குகிறது.

வருட சந்தா ஒரு ரூபாய்தான். இந்த இயக்கத்தின் நன்மைச்காக குறைந்த சந்தா ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. தமிழ்உலகம் இதனை ஆதரித்து ஹிந்து மதத்திற்கும் ஹிந்து சமூகத்திற்கும் ஓர் அரிய சேவை செய்யுமென நம்புகிறேன்.

வித்வான் திரு. அரு. சோமசுந்தரச் செட்டியாரவர்கள் எழுதுவது:—

5—10—36.

வருக! வருக!! மாதர் மறுமணமே வருக! உனக்கு நல்வரவு! உன் வளம் பெருகுக! உன் வாழ்நாள் செழிக்க! உன் தொண்டு சிறக்க! நீ நாற் றிசையினும் புகுந்து, நறுமணங்கமழ யாவர் கரங்களிலும் இனிதுபொலிக! நின் பொன்னிதழ் கண்டார் யாவரும் நீடூழிவாழ்கென வாழ்த்தி நின்னை இனிது வரவேற்பர். வெள்ளைக் கலைபுடுத்து வீண்கண்ணீர் வடித்து வாடி வருந்துவார்க்கு நின் புன்னகை ஆறுதலளிப்பதாம். நின் செவ்விய உரை கள் கல் நெஞ்சையும் கரைத்து உருக்கிப் பரிகொடுத்த மாதர்க்குதவி

*புரியத் தூண்டுவதாம். தமிழுலகுக்கு நீ புதிதாய்ப் பிறந்தனை. தமிழர்க்கு நீ புதிய விருந்தே! தமிழ் மணந்தழைக்கும் மாதர் மறுமணத்தையால்! நீ நனிசிறந்து வாழ்க! வாழ்க!*

அய்மேன் ஷண்முகானந்த சபைக் காரியதரிசி எழுதுவது:—

22—9—36.

*மிக்க ஆவலுடன் பல நாட்கள் எதிர்பார்த்திருந்த மாதர் மறுமணம் முதலிதழ் கிடைக்கப் பெற்றோம். எதிர் பார்த்த அளவுக்கு மேல் பத்திரிகை திகழ்கின்றது. மகாத்மாவின் பொன்னுரையும், ஏழை விதவையை அவர் ஆசீர் வதிக்கும் காட்சியும் எங்கள் மனத்தைப் பெரிதும் ஈர்த்துவிட்டன. கட்டுரைகளெல்லாம் ரொம்ப விசேடம் பொருந்தியவை. கவிதைகள் உருக்கம் நிறைந்தவை. குட்டிச்சாத்தன் கட்டுரை பலே தமாஷ்.*

*மாதர் மறுமணம் பத்திரிகையை எதிர் பார்த்ததைவிடப் பல கோடி மடங்கு அதிகமான ஆவலுடன் மாதர் மறுமணத்தையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். மகா கொடுமையான சமூகத்தளையைத் தகர்த்தெறிய எந்தப் பாக்யவதி முதன்மையாக வரப்போகின்றாரோ !*

பாகனேரி கிராம முன்னேற்ற சங்கத் தலைவர் திரு. சித. கண்ணப்பன் எழுதுவது:—

21—9—36.

*மாதர்களின் மறுமணத்தையே தன் முக்கியநோக்கமாகக் கொண்டுள்ளதும் இராமநாதபுரம் ஜில்லாக் கல்விக் கவுன்ஸில் அங்கத்தவரும், காரைக்குடி முனிஸிபல் உறுப்பினரும், செட்டிமார் நாட்டு மறுமண வழிகாட்டியுமான ஸ்ரீமதி. மு. மரகதவல்லியம்மையார் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளி வருவதுமான "மாதர் மறுமணம்" என்னும் மாதப்பதிப்பின் இதழ் ஒன்று வரப்பெற்றோம். ஒவ்வொரு கட்டுரையும் மிக அழகாக, ஆண், பெண் இருவகுப்பாரும் எளிதில் படித்துணரும் முறையில் வெளியிட்டது மிகவும் போற்றத்தக்கதாகும். ஒவ்வொருவரும் அதை ஆதரிக்க வேண்டுவது அவசியமாகும்.*

தனவணிகன், ரங்கூன்.

24—9—36.

*தனவணிக உலகில் சீர்திருத்த விதை விதைத்த 'குமரன்' ஆசிரியர் சொ. முருகப்பா அவர்களின் இல்வாழ்க்கைத் துணைவியாரும், காரைக்குடி முனிசிபல் உறுப்பினரும், இராமநாதபுரம் ஜில்லா கல்விச்சபை அங்கத்தினருமாகிய, திருமதி. மு. மரகதவல்லி அம்மை அவர்களால் ஆரம்பிக்கப் பெற்ற 'மாதர் மறுமணம்' எனும் மாதப் பத்திரிகை நமது பார்வைக்கு வரப்பெற்றோம்.*

பண்டைய பழக்க வழக்கங்கள் ஆழமாக வேரூன்றிய நம் நாட்டில், இத்தகைய பத்திரிகைகளுக்கு இன்னல்கள் சில விளையுமெனினும், தற் சமயம் தமிழ் நாட்டார் அனைவரும் இதனை அன்புடன் வரவேற்பார் என் பதை அறிந்து அகமிக மகிழ்கிறோம். தமிழ் நாட்டில் பொதுவாக மாதர் களுக்காகவும், சிறப்பாகக் கைம்பெண் களுக்காகவும், பத்திரிகை வாயி லாகத் தொண்டு செய்யவந்த அம்மையாரின் சீரிய பணி போற்றத்தக்கதே யாகும். இப்பத்திரிகையின் முகப்பில் உலகம் போற்றும் உத்தமப் பெரியா ராகிய நம் காந்தி அடிகள் ஓர் விதவைக்கு ஆசி கூறுவதே போன்று பொறித்திருக்கும் படம் இச் சஞ்சிகையின் கருத்தைச் செவ்வனே விளக்கு கிறது. அடிகளாரின் பொன்னுரை, வாசகர்களின் மனத்தகத்தில் ஆழ மாகப் பதியுமாறு, பொன்னெழுத்துகளால் பொறித்திருப்பது பாராட்டற் குரியதாகும். பாரதி தாஸரின் 'காதலைத் தீய்த்த கட்டுப்பாடு' எனும் பொருள் செறிந்து உணர்ச்சி ததும்பும் பாவானது வாசகர்களின் உள்ளத் தில் ஊடுருவிப் பாயும் எனச்சொல்லாமலே விளங்கும்.

நம் நாட்டில் இரண்டரைக் கோடி விதவைகள் உள்ளார் என அறிந்த ஒவ்வொருவரும் இப்பத்திரிகையை அன்புடன் வரவேற்பார். இதில் ஆராய்ச்சியாளர், சுந்தரர் கலப்புமணத்தைக்கொண்டு தமது காதல் மணக் கொள்கையை ஆதரிக்கும் கருத்து சாலச்சிறந்ததாகும்.

சுருங்கக்கூறின், அறிஞர்களின் அழகிய கட்டுரைகள், சீர்திருத்தப் பாக்கள், கதைகள், படங்கள் பல இதில் மிளிர்கின்றனவெனக் கூறலாம்.

நாம் இதை மனமுவந்து வரவேற்பதுடன், சீர்திருத்த நோக்கங் கொண்ட இப்பத்திரிகை தினே தினே வளர்ந்து, நந்தமிழ்நாட்டில் சீரிய தொண்டினைச் செய்யுமென எதிர்பார்க்கிறோம்.

தாருல் இஸ்லாம், சென்னை.

3—10—36.

இச் சஞ்சிகையின் முதலிதழ் கண்டோம். களி பேருவகை யுற்றோம். குழந்தை விதவைகளுக்கு அவசியம் மறுமணம் செய்யவேண்டுமென்ற மகாத்மாஜீயின் பொன்னுரை பொன் எழுத்துக்களில் பிரசுரிக்கப்பட்டிருப் பது நன்றாயிருக்கிறது. பாரதி தாஸன் எழுதியிருக்கும் "காதலைத் தீய்த்த கட்டுப்பாடு" கல்நெஞ்சையும் கரைத்துவிடும்படி பாடப்பட்டிருக்கிறது. இவ் விதழில், ஸ்வாமி சுத்தானந்த பாரதியும், சாமி சிதம்பரனாரும், ஸ்ரீமதி நீலாவதியும், புதுவை ராஜலட்சுமியும் எழுதியிருக்கும் கட்டுரைகளும் கவி களும் உள்ளத்திற்கோர் உணர்ச்சியை யூட்டுவனவாக இருக்கின்றன. பொதுவில் இந்தச் சஞ்சிகைக்கு நல்வரவு கூறுகிறோம். இதிலுள்ள ஒவ்

வொரு வியாசமும் ஒன்றை யொன்று மிகைத்தே நிற்கிறது. தெள்ளிய தமிழ் நடையில் உயர்ந்த கருத்துடன் விதவா விவாகத்தை வற்புறுத்தி நம் தமிழ் மக்களுக்கு அறிவூட்ட முனைந்திருக்கும் இதன் முயற்சி வெற்றி பெறுமாக.

## விஜயன், திருச்சி.

30—9—36.

இச் சஞ்சிகையின் முதல் இதழ் கிடைக்கப் பெற்றோம். இதன் ஆசிரியை குறிப்பில்; கைம் பெண்களின் கவலையைத் தீர்ப்பதற்காக "மாதர் மறுமணம்" வெளிவந்திருக்கிறதென குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதன் முகப்பில் மகாத்மா காந்தியடிகள், ஓர் கைம் பெண்ணை ஆசீர் வதிப்பது போன்ற இரு வர்ணப் படம் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. மகாத்மா காந்தியடிகளின் பொன்னுரை சேர்க்கப்பட்டிருப்பது போற்றத்தக்கதே.

இதில் தமிழ் நாட்டிலுள்ள பல சிறந்த எழுத்தாளர்கள் மாதர் மறுமணத்தைப் பற்றி எழுதியிருக்கிறார்கள்.

இதுவரை, தமிழ் நாட்டில் மாதர் மறுமணத்தை ஆதரிப்பதற்கென்று ஒரு தனிப் பத்திரிகை இல்லாதிருந்தது. அக் குறையைப் போக்க வெளிவந்த "மாதர் மறுமணத்"தைப் போற்றுகிறோம். மாதர் மறுமணத்தின் கொள்கைக் கேற்ப பல வியாசங்கள் எளிய நடையில் படிக்க இன்ப மூட்டும் வகையில் அமைந்திருக்கின்றன. இன்னும், சிறு கதைகள் மூலியமாக கொள்கையை நிலைநாட்ட முற்பட வேண்டும். பெண்கள் முன்னேற்றத்தைப்பற்றியும் இப் பத்திரிகை உழைக்குமென அறிந்து சந்தோஷிக்கிறோம். பொதுவாகத் தமிழ் நாட்டாரும், சிறப்பாக செட்டிமார் நாட்டாரும் இப் பத்திரிகையை ஆதரிக்க வேண்டுமென்பது நமது பேரவா.

## செட்டிநாடு, காரைக்குடி.

28—9—36.

காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்தின் ஆதரவில் வெளியிடப் பெறும் "மாதர் மறுமணம்" என்ற மாதப் பத்திரிகையின் முதல் இதழ் நமது மதிப்புரைக்குக் கிடைக்கப்பெற்றோம். ஸ்ரீமதி மு. மரகதவல்லி அம்மாளவர்கள் இதன் ஆசிரியராக இருக்கிறார்கள். டிம்மி 1-க்கு 8 அளவில் சுமார் 50 பக்கங்களில் அழகான முகப்புடன் நன்றாக அச்சிடப்பட்டிருக்கிறது. தென்னாட்டு சீர்திருத்தவாதிகள் அனேகர் மாதர் மறுமண அவசியம்பற்றி கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள். ஆண்களைப்போலவே பெண்களும் சம உரிமையுடன் வாழ வேண்டுமென நினைப்பவர்கள் இந்நாட்டில் அதிகரித்துவருகின்றனர். அவர்களுடைய முயற்சிக்கு இப்

பத்திரிகை ஒரு சாதனமாக விருக்கும். உண்மையில் மாதர் மறுமண முன்னேற்றத்தில் விருப்பமுள்ளவர்கள் இப்பத்திரிகையை ஆதரிப்பார் களென்று நம்புகிறோம்.

## ஜனமித்திரன், புதுக்கோட்டை.

25—9—36.

இது காரைக்குடி முனிசிபல் சபை அங்கத்தினரும் இராமநாதபுரம் ஜில்லாக் கல்வி சபை யங்கத்தவரும் குமரன் ஆசிரியரின் வாழ்க்கைத் துணை வியருமாகிய ஸ்ரீமதி மரகதவல்லியாரை ஆசிரியையாகக் கொண்டு, காரைக் குடியிலிருந்து வெளிவரும் ஓர் தமிழ் மாதப் பத்திரிகை.

மாதர் மறுமணத்தை வலியுறுத்துவதே இதன் நோக்கம். மறுமணம் கொண்ட ஒரு மாதரே ஆசிரியையாக அமைந்தது பொருத்தமே. மறு மணம்பற்றி மகாத்மாவின் மொழிகளும் சுவாமி சுத்தானந்த பாரதியார் எழுதிய ஓர் கதையும் மற்றும் பல பாட்டுக்களும் கதைகளும் ஓவியங்களும் உள்ளன.

## தக்ஷிணபாரதி (மலையாளம்) இரணியல்

3—10—36.

மதிப்புரைக்காக அனுப்பப்பட்ட காரைக்குடி மாதர் மறுமணம் பத்தி ரிகையின் இரண்டாவது இதழைப்பெற்று சந்தோஷப்படுகிறோம். பெண் களுடைய மறுமணத்தை வழக்கத்தில் கொண்டு வந்து சமூகத்தில் பிர பலப்படுத்த வேண்டுமென்பது இப்பத்திரிகையின் நோக்கம். ஆசிரியை ஸ்ரீமதி மரகதவல்லியம்மாள் ஒரு விதவை மாது ஆதலால் இதன் அவசியத் தை ஜனங்களுக்குத் தெரிவிப்பது சுலபமாகுமல்லவா? இன்றுள்ள விதவை கட்கு அவருடைய உபதேசம் மிகுந்த பிரயோஜனமாக இருக்குமென்பதில் சந்தேகமில்லை. பிரஸ்தாபப் பத்திரிகையில் பொதுவாக பெண்களுடைய துன்பங்களை அகற்றவும் சிறப்பாக விதவா விவாகத்தை நடப்பில் கொண்டு வரவும் அனுகூலமான பல அறிவாளிகளின் கட்டுரைகளும் மகாத்மா காந்திஜி போன்ற தேசீயத் தலைவர்களின் ஆசிச் செய்திகளும் அடங்கி யிருக்கின்றன. மாதர் மறுமணத்திற்கு சீர்திருத்தக்காரர்களின் பூரண ஆத ரவும் கிடைக்குமென்று நாங்கள் நம்புகிறோம்.

---

# துணையிழந்தாரை

# மணப்பது புண்ணியம்.

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| மலர் 1 | காரைக்குடி<br>தாது-ஹூ ஐப்பசி-மீ | இதழ் 3 |
|---|---|---|

## வாடும் பயிர்.

( காளவனப் புலவர். )

“ கரும்புத் தோட்டத்திலே ” என்ற மெட்டு.

(6) இறந்து தீயெரிந்தோன்—அவன்
எங்கோ பிறந்துயிர் வாழ்வது போலவும்
அறப்பெண் டும்மடிந்தே—பிறந்
தங்கே அவனுடன் சார்வது போலவும்
திறக்கப் பொய்யுரைத்தார்—அதைத்
தேர்ந்திட மாட்டாச் சிறுமையை என்றுமே
மறைக்கப் பாலதாமோ—உடன்
மாதர் மறுமணம் போற்றுதல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]

(7) முன்னே பெண்டிறக்க—ஆண்டு
முப்பதும் பத்தும் கழிந்தவன் செத்திடில்
பின்னே பிறந்தஅவன்—முந்திப்
பிறந்து பழுத்த கிழவியைக் கொள்வனோ?
என்ன பொருத்தமையா!—இதை
எப்படி நம்பிநாம் இன்னல் படுத்தினோம்
வன்னக் கிளிகளையோ!—உடன்
மாதர் மறுமணம் போற்றுதல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]

(8) கருத்துள் இல்லறத்தாள்—கொள்ளக்
‘கற்பென் றுரைப்பது சொற்றிறம் பாமை’ யென்

றருத்தஞ் சால்புறவே—நன்
கறைந்த துணர்ந்திட மாட்டாம லையகோ!
விருத்த மாகளண்ணி—நாட்டை
விதவையர் காடென வீழ்கதிக் காக்கிய
வருத்தம் போக்கிடவே—உடன்
மாதர் மறுமணம் போற்றுதல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]

(9) கொண்டவன் சொத்துரிமை—மனை
கொண்டிட வேண்டியிக் கோலமு மாயிட
அண்டிப் பிறந்தவீட்டில்—ஓர்
ஆசை உரிமையில் லாமலும் ஆக்கியே
நொண்டிக் கதைகள்சொன்னார் —மனம்
நொந்துநொந் தேசிறை சிந்துகண்ணீர்பெற
மண்டிக் கதறுகின்றார்—உடன்
மாதர் மறுமணம் போற்றுதல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]

(10) இந்திர ராகவானில்—அர
சேய்ந்தவ ரோகணக் கற்ற பெயர்களாம்
வந்த அவர்கட்கெலாம்—மனை
வாய்த்த தொருத்தி புலோமிசை மட்டுமாம்
அந்தர லோகஉண்மை—ஈ
தாயிடின் நம்மதி யீனப்பே யோட்டிட
மந்திரம் ஏதுக்கையா!—உடன்
மாதர் மறுமணம் போற்றுதல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]

(11) தந்தை தாயர்தம்மை—உற்ற
சகோதரர் மாரைத் தணந்தது மன்றியே
சந்ததியும் இன்றி—கொண்ட
தலைவனும் மாளஓர் சார்பிட மின்றியே
வெந்து புழுங்கிமாதர்—பலர்
விம்மி விம்மியழு தேங்குகின்று ரையோ!
மங்கையில் மாடோஅவர்?—உடன்
மாதர் மறுமணம் போற்றுதல் நன்றிந்தப்
[பாரத நாட்டினிலே]

# ராஜா ராம் மோகன் ராய்.

திருச்சி கே. வி. எஸ். வாஸ், பீ. ஏ. (ஆனர்ஸ்).

[A Series of sketches on the life and career of RAJA RAM MOHUN ROY specially compiled by the author for Mathar Marumanam.]

## அத்தியாயம். 2.

### பாலப்பருவமும் பெற்றோர்களும்.

வட இந்தியாவில், ஹூக்ளி நதி தீரத்திலுள்ள கிருஷ்ணநகருக்கு அருகாமையிலிருக்கும் ராதாநகர் என்ற ஒரு சிறு கிராமத்தில் சென்ற 1772-ம் வருடம் மேமாதம் இருபத்திரண்டாம் தேதியன்று நவ இந்தியாவின் சிருஷ்டிகர்த்தாவும், பிரம்ம சமாஜத்தின் ஸ்தாபகருமான ராஜா ராம் மோகன்ராய், ராம் காந்தராய் என்ற ஒரு அந்தணருக்கும் தாரிணி என்ற ஒரு கீழ் வகுப்பு பிராமணப் பெண்ணுக்கும் மூன்ருவது குமாரராக அவதரித்தார். அவருடைய குடும்பத்திற்கு ராய் ராய் என்ற பட்டம் ஒளரங்க ஜீப் என்னும் மொகலாய சக்கரவர்த்தியின் காலத்தில் உண்டாயிற்று. அப்பொழுது வங்காளத்தின் நவாபாக இருந்தவர் ராம் மொகனரின் பெரிய பாட்டனை கிருஷ்ணசந்திர பானர்ஜீக்கு மேற்படி பட்டத்தை வழங்கினுர். இப்பட்டமே பிற்காலத்தில் "ராய்" என்று மாறியது.

கிருஷ்ணசந்திர பானர்ஜீ அபாரமான அறிவும், செல்வாக்குமுடையவர். அவருக்கு ஹரிப்பிரஸாத், அமர்சந்திரா, பிரஜாபிந்தர் என்று மூன்று குமாரர்களிருந்தார்கள். பிரஜாபிந்தர் பெரிய தனவந்தர். அவர் சிறிது காலம் வரையில் வங்காள நவாப்ஸூராஜ் உத்தௌலாவிடம் சேவை செய்து வந்தார். ஆனல் அவருக்கும் நவாபிற்கும் ஏற்பட்ட மனக்கசப்பின் காரணமாக மூர்ஷிதாபாத் நகரை விட்டு ராதாநகர் கிராமத்திற்குத் திரும்ப வேண்டியதாற்று. அவருக்கு ஏழு குமாரர்களுண்டு. அவர்களுள் ஐந்தாவதான ராம்காந்தராய் அவர்களே நமது ராம் மோஹனரின் தந்தையாவார். ராம்காந்தராயின் திருமணத்தைப்பற்றி ஓர் விசித்திரமான கதை சொல்லப்பட்டு வருகின்றது. அதாவது ஒரு சமயம் பிரஜாபிந்தர் கங்கைக்

கரையில் சயனித்துக் கொண்டிருக்கையில் சீரம்பூர் வாஸியும் பிராமணகுலத்தில் கீழ்வகுப்பைச் சேர்ந்தவருமான சியாம பட்டாச்சார்யா என்பவர் அவரை அணுகி "ஸ்வாமிஜீ! நான் ஒரு பெரிய கஷ்டத்தில் அகப்பட்டுக் கொண்டு தவிக்கின்றேன்! நீங்கள் தான் என்னைக் காப்பாற்றியருள வேண்டும்!" என்று கண்ணீருடன் பிரார்த்தித்தாராம். அவருடைய பரிதாபகரமான நிலைமையைக் கண்டு மனமிரங்கிய பிரஜாபிந்தர், "நண்பரே! உங்களுக்கு நான் என்ன செய்யக் கூடும்? வாய்திறந்து சொல்லுங்கள்! என்னால் இயன்ற உபகாரத்தைச் செய்ய சித்தமாயிருக்கின்றேன்!" என்று பதிலளித்தார். "அந்தணச்ரேஷ்டா! அவ்வாறு வாக்களித்தால் போதாது! எனது கவலையையும் கஷ்டத்தையும் போக்குவதாக கங்கை சாக்ஷியாய்ப் பிரமாணம் செய்து கொடுங்கள்!" என்று சியாம பட்டாச்சாரி மேலும் வற்புறுத்திக் கேட்கவே பிரஜாபிந்தரும் அவ்வாறே செய்து கொடுத்தார். "ஸ்வாமிஜீ! தாரிணி என்றோர் பெண்ணிருக்கின்றாள். அவளுக்குத் திருமணம் செய்துவைக்க என்னிடம் ஐவேஜியில்லை. ஆகையால் உங்களுடைய குமாரர்களிலொருவருக்கு அவளை மணம் செய்து கொள்ளவேண்டும்!" என்று சியாம பட்டாச்சார்யா வேண்டினார். அதைக்கேட்டதும் பிரஜாபிந்தர் திடுக்கிட்டுப் போனார். சியாம பட்டாச்சாரி கீழ்குலத்தைச் சேர்ந்தவரென்பது அனேகமாக எல்லோருக்கும் தெரிந்த விஷயமாதலால் அவருடைய பெண்ணை மணம் செய்துகொள்ள தமது குமாரர்களுள் ஒருவரும் இணங்கமாட்டார்களென்று பிரஜாபிந்தருக்குத் தோன்றியது. ஆயினும், தமது சத்தியத்தைக் காப்பாற்றவேண்டுமென்ற எண்ணத்துடன் எல்லாப் பிள்ளைகளையும் ஒவ்வொருவராகத் தனிமையிலழைத்து நதிக்கரையில் நடந்த சம்பவத்தை எடுத்துரைத்தார். ஐந்தாவது குமாரரான ராம் காந்தாய் ஒருவரைத் தவிர மற்றவர்கள் பிரஜாபிந்தரின் விருப்பத்திற்கு இசையவில்லை. ராம் காந்தருக்கும் தாரிணிக்கும் முறையே திருமணம் நடந்தேறியது. அவர்களுக்கு ஒரு பெண்ணும் (பெயர் பதிவு செய்யப்படவில்லை) ஜகன்மோகன், ராம் மோகன் என்ற இரு பிள்ளைகளும் பிறந்தனர். ராம்காந்தருக்கு மற்றொரு மனைவி யுண்டென்றும், அவள் மூலம் ராம்லோசன் என்ற ஒரு பிள்ளை பிறந்ததென்றும் சொல்லப்படுகின்றது. ஆனால், இந்த

இரண்டாவது மனைவியைப்பற்றியோ அல்லது ராம் லோசனனைப் பற்றியோ சரித்திரத்தில் ஒரு ஆதாரத்தையும் காணோம்.

ராம் காந்த ராயின் வாழ்க்கையைப்பற்றி நமக்கு அதிகமான தகவல்கள் தெரியாது. அவர் ஸுராஜ்-உத்-தௌலாவிடம் சர்க்கார் (Sircar) பதவியைச் சிறிது காலம் வகித்துவந்ததாயும், பிறகு, பர்துவான் ராஜாவிற்குச் சொந்தமான சில கிராமங்களைக் குடிக்கூலிக்கு அமர்த்திக்கொண்டு சொந்த ஊருடன் வந்துவிட்டதாயும் தெரிய வருகின்றது. ராய் குடும்பத்திற்கும் பர்துவான் ராஜ வம்சத்திற்கும் பிற்காலத்திலேற்பட்ட பல தகராறுகளுக்கு இதுவே ஆரம்பமாகும்.

ராம்காந்தருக்கு அனுஷ்டான இந்து மதத்தில் அளப்பரிய பற்று உண்டு. மகாவிஷ்ணுவே மூலதெய்வமென்பதும், ஸ்ரீ இராகவன் அவருடைய அவதாரங்களில் முக்கியமானவரென்பதும் ராம்காந்தரின் நம்பிக்கை. அவர் அவகாசம் கிடைத்தபொழுதெல்லாம்

---

குறிப்பு:—மதப் பற்றிற்கும் மனோ திடத்திற்கும் தாரிணி பெயர்பெற்றவள். அவளிடம் அபாரமான நிர்வாகத்திறமையுமுண்டு. ராம் காந்தரின் மரணத்திற்குப் பின்னர் குடும்ப சொத்துக்களையும் அவை சம்பந்தமான சிக்கலான பல பிரச்னைகளையும் அவள் ஒருவளாகவே நிர்வகித்து வந்தாள். மத விஷயத்தில் அவளுக்கும் ராம் மோகனருக்கும் அடிக்கடி சச்சரவேற்படுவதுண்டு. இக்காரணத்தை முன்னிட்டே ராம்மோகனர் தமது பதினோராம் ஆண்டு நிறைவேறுவதற்குள் வீட்டைத் துறந்து வெளிச் செல்லவேண்டியதாயிற்று. எனினும் தாரிணி தனது மரணத்திற்குமுன் ராம் மோகனரை அருகில் வரவழைத்து "குழந்தாய்! நீ பிரசாரம் செய்வதெல்லாம் முற்றிலும் நியாயமானதே. உன்னுடைய சித்தாந்தங்களை நானும் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளுகின்றேன். ஆனால், அந்திய காலத்தில் பரம்பரையான பழக்க வழக்கங்களைத் திரஸ்கரித்துவிடவும் என் மனம் இடந்தரவில்லை!" என்று கூறியதாகச் சொல்லப்படுகின்றது. இதர இந்து மாதர்களைப்போல் தாரிணியும் மத சம்பிரதாயங்களில் பித்துக்கொண்டவள். அவள் தனது தள்ளாத வயதில் ஜகன்னாத தரிசனத்திற்காக பூரி க்ஷேத்திரத்திற்கு கால்நடையாக சுமார் 300 அல்லது 400 மைல்தூரம் யாத்திரை செய்தாள். தவிர, ஒரு வருட காலம் வரையில் ஜகன்னாதன் கோயிலைச் சுத்தி செய்வதிலும் சாணமிட்டு மெழுகுவதிலும் பக்தி சிரத்தையுடன் ஈடுபட்டிருந்தாளாம்.

துளஸிமணி மாலையைக் கரத்திலேந்தி ராம ஜெபம் செய்துகொண்டிருப்பார். அதைக் காண்கையில் நமது ராம் மோகனருக்கு வெறுப்பும் வரையற்ற கோபமுமேற்படும்.

ராம் மோகனர் தமது இளம் பிராயத்திலேயே வங்காள பாஷையில் வியப்புறத்தக்க தேர்ச்சியடைந்தார். அடுத்தாற்போல் அக்காலத்திய கோர்ட்டு பாஷையான பாரசீகத்தில் அவருக்குப் பயிற்சியளிக்கப்பட்டது. பிறகு அன்னையின் விருப்பப்படி அராபிக் பாஷையைப் படிக்க பாடலீபுரத்திற்கும், சம்ஸ்க்ருத பாஷையைப் படிக்க காசி க்ஷேத்திரத்திற்கும் அவர் சென்றார். பாடலீபுரத்திலிருக்குங்கால் அராபிக் பாஷையில் மொழி பெயர்க்கப்பட்ட ஈக்லிட், அரிஸ்டாட்டில் முதலிய கிரேக்கப் பெரியார்களின் நூல்களையும், இஸ்லாமிய வேத நூலான திரு குர்ஆனையும் அவர் ஊன்றிப் படித்தார்.

வாலிபப் பருவமுதல் விக்ரக ஆராதனையிலும் புராணப் பொய்க் கதைகளிலும் வெறுப்புக்கொண்ட ராம் மோகனர் பால்யத்திலே புராதனப் பழக்க வழக்கங்களிலும், குலதெய்வங்களின் பூஜையிலும் அளவு கடந்த நம்பிக்கை வைத்திருந்தார். அனுதினமும் பகவத் புராணத்திலிருந்து சில பகுதிகளைப் பாராயணம் செய்யாமல் ஜலம் கூட அவர் பருகமாட்டார். விஷ்ணுவின் அவதாரங்களிடமுள்ள பக்தியில், "மான் பன்ஜன்" என்ற நாடகத்திலே கிருஷ்ணன் இராதையின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு, பதறியழும் கட்டத்தைப் படிக்கையில் அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் மளமளவெனப் பெருகுமாம்!

ராம் மோகனருக்கு சிறுபிராயத்திலேயே மும்முறை மணம் நடந்துவிட்டது. முதல் மனைவி மணமான சில தினங்களுக்குள் மரித்துவிட்டாள். இரண்டாவது மனைவி வீட்டிற்கு வருகையில் ராம்மோகனருக்கு ஒன்பது வயதுதான். மறுவருடமே மற்றொரு பெண்ணும் அவருக்கு மணம் செய்துவைக்கப்பட்டாள். இக்காலத்

---

குறிப்பு:— ராம்மோகனரின் முதல் மனைவி இளமையிலேயே மரணமடைந்தாள். இரண்டாவது மனைவிதான் ராம்மோகனரின் குழந்தைகளுக்கெல்லாம் அன்னை. அவள் 1824-ல் காலமானாள். மூன்றாவது மனைவி கணவனுக்குப் பிறகும் ஜீவித்திருந்தாள்.

தில் ராம்காந்தரின் இச்சைக்கு மாருக நடக்கும் தைரியம் ராம் மோகனருக்குக் கிடையாது.

இவ்வாறே மேலும் இரண்டு மூன்று வருடங்கள் கழிந்தன. இடையில் ராம் மோகனருடைய அபிப்பிராயங்கள் சிறிது சிறிதாக மாறிக்கொண்டு வந்தன. பிராமண சம்பிரதாயத்திலுள்ள மூடப் பழக்கங்களை ஒவ்வொன்ருக அவர் திரஸ்கரித்துக் கொண்டு வந்தார். விக்ரக ஆராதனையிலிருந்த நம்பிக்கையை அவர் அடியோடு இழந்து விட்டார். தந்தையின் ஜெபமாலைகளையும், குல தெய்வங்களின் அலங்காரங்களையும் காண்கையில் அவருக்கு அருவருப்பும் கோபமும் ஏற்படலாயின. இந்த மாற்றத்தை ராம் காந்தரும் கவனியாமலில்லை. மதவிஷயமாக தந்தையும் தனயனும் அடிக்கடி கடுமையாக விவாதிப்பார்கள். ராம் மோகனர் எப்பொழுதும் அடக்கமாகவும் மரியாதையாகவுமே பேசுவார். ஆனல், அவருடைய நேர்மையான விவாதங்களைச் செவி கொடுத்துக் கேட்க ராம் காந்தருக்குப் பொறுமை யிருப்பதில்லை. இது காரணமாக தந்தைக்கும் மகனுக்கும் மனக்கசப்பு ஏற்பட்டு, அது நாளுக்கு நாள் அதிகமாக வளரலாயிற்று. இந்த விவாதங்களைப் பற்றி ராம் மோகனருடன் நெருங்கிப் பழகிய மிஸ்டர் ஆடம் என்பவர் 1879-ம் வருடத்தில் வெளியிட்ட ஒரு யாதாஸ்தில் பின் வருமாறு தெரிவிக்கின்ருர்:—

"ராம் மோகனர் தமக்கும் தமது தந்தைக்கும் நடைபெற்ற விவாதங்களைப்பற்றி என்னிடம் பிரஸ்தாபித்திருக்கிருர். அவருடைய வார்த்தைகளிலிருந்து, குடும்பத்தலைவர் என்ற ஹோதாவில் விவாதத்தைத் துவக்கும் சந்தர்ப்பத்தை தந்தைக்கே அவர் அளித்துவிடுவது வழக்கமென்று நான் ஊகித்தேன். ராம் காந்தர் தமது கக்ஷியை எடுத்துரைத்தபின் பிள்ளை சொல்வதைக் கேட்கப் பொறுமையுடனிருப்பாராம். ஆனல், அந்தப் பொறுமையை அவர் சிற்சில சந்தர்ப்பங்களில் இழந்து விடுவது முண்டு. தந்தை ஒவ்வொரு விஷயமாகச் சொல்லி முடித்துக் கொண்டிருக்கையில் "ஆனல், (கிம்து) இவைகளிலிருந்து நீங்கள் விரும்பும் வைதிகப் பழக்கவழக்கங்கள் சரியானவைகள்தா னென்பது ருசுவாகிவிட வில்லையே!" என்று

ராம் மோகனர் இடைமறித்துக் கேட்பார். அவர் அடிக்கடி "ஆனல், ஆனல்" (கிம்து, கிம்து) என்பதைக் கேட்க ராம் காந்தருக்குச் சீற்ற மேற்படும். ஒரு சமயம் "நான் என்ன சொன்னலும் உன்னுடைய கிம்துவும், விதண்டா வாதமும் உன்னைவிட்டகலப் போவதில்லை! எப்படியாவது தொலைந்து போ!!" என்று ராம் மோகனரின் தந்தை கோபத்துடன் மொழிந்தாராம். இதை ராம் மோகனர் புன்முறுவலோடு என்னிடம் கூறினர். ஆனல் அவருடைய வார்த்தைகளில் பிதாவிற்குரிய மரியாதை கொஞ்சமும் குறையவில்லை."

மேற்படி சம்பவத்திற்கு மேல் ராம் மோகனர் என்னசெய் தாரென்பதை டாக்டர். லாண்ட் கார்ப்பெண்டரின் (Dr. Lant Carpenter) வார்த்தைகளில் பின்வருமாறு நாம் சித்திரிக்கலாம்.

"தந்தையின் அதிகாரத்தை நிராகரிக்காமல் அவருடைய நம்பிக்கைகளுக்குரிய காரணங்களை அவரிடமிருந்தே ராம் மோகனர் கேட்டறிய விரும்புவார். ஆனல், தந்தையின் காரணங்கள் அவருக்கு சமாதானத்தையளிக்கவில்லை. கடைசியில் தமது பதினைந்தாவது வயது பூர்த்தியாவதற்குள்ளாகவே வீட்டை விட்டுப் புறப்பட்டு திபேத்திற்குச் சென்று புதிய சித்தாந்தமொன்றைப் பரிசீலனை செய்து பார்ப்பதென அவர் தீர்மானித்துக் கொண்டார். அவர் திபேத்தில் மூன்று வருட காலம் தாமதித்தார். லாமா என்பவரே—உயிரோடிருக்கும் ஒரு மனிதன்—சிருஷ்டி கர்த்தாவென்று திபேத்து வாஸி

குறிப்பு:—டாக்டர் லாண்ட் கார்ப்பெண்டர் மேற்படி விஷயத்தை வரைந்திருக்கும் பக்கத்தின்கீழ் ஒரு குறிப்பெழுதியிருக்கின்றார். அந்தக் குறிப்பில் அவர் தெரிவித்திருப்பதாவது:—மேற்படி தகவல் ராம்மோகன ரால் லண்டனிலும் பிறகு ஸ்டேபிள்டன் கிரோவ் (பிரிஸ்டலிலுள்ளது) என்ற இடத்திலும் சந்தித்த பொழுது என்னிடம் சொல்லப்பட்டது. இது அதி முக்கியமானதோர் தகவலாகும். ராம்மோகனரின் வாழ்க்கைச் சரித்திரத்தை அவருடைய மரணத்திற்குப் பிறகு எழுதிய எல்லா ஆசிரியர் களும், அவர் தமது தந்தையிடம் சண்டைபிட்டுக் கொண்டு வீட்டைவிட்டு வெளியேறியதாகச் சொல்கின்றார். இது ஆதாரமற்ற செய்தியென்பதற்கு மேற்படி தகவல் குறிப்பிடத்தக்கது.

கள் கூறிய சித்தாந்தத்தை ராம்மோகனர் ஏற்றுக்கொள்ள வில்லையாதலால் அவர்களுக்கிடையே விரைவில் மனக்கசப்பு ஏற்பட்டது. ஆனால், எல்லாக் குடும்பங்களிலும் மாதர்கள் ராம் மோகனரைக் கௌரவித்தார்கள். இக் காரணத்தை முன் னிட்டே ராம் மோகனருக்கு பெண்ணினத்திடம் மரியாதை யும், நன்றியும் எதிர்காலத்திலேற்பட்டதாகத் தெரிகின்றது.

ராம்மோகனர் இவ்வாறு எவ்வளவு ஆண்டுகள் வரையில் யாத்திரையிலீடுபட்டிருந்தாரென்பது நமக்குத் திட்டமாகத் தெரி யாது. ஆனால், மூன்று நான்கு வருடங்களுக்குள் ராம்காந்தர் பிள்ளையின் பிரிவாற்றுமையைச் சகியாது திரும்பி வந்துவிடுமாறு ஒரு கடிதமனுப்பினரென்றும், அக்கடிதத்தைப் பெற்றதும் ராம் மோகனர் தந்தையின் வீட்டிற்குத் திரும்பி வந்துவிட்டாரென்றும் தெரியவருகின்றது. எனினும், அவருக்கும் குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களுக்கும் அபிப்பிராய பேதம் அதிகமிருந்ததால் நீண்ட காலம் வரையில் அவர் வீட்டில் தங்கியிருக்கவில்லை யென்பதை எல்லா சரித்திர ஆராய்ச்சியாளர்களும் ஒப்புக்கொள்ளுகின்றார்கள். தவிர, ராம்மோகனரும் பர்துவான் வழக்கு ஒன்றில் வாக்குமூலம் கொடுக்கும்பொழுது தாமும் தமது தந்தையும் அபிப்பிராயபேதம் காரணமாகச் சேர்ந்து வசிக்கவில்லையென்று சொல்லியிருக்கின்றார். ஆனால், வீட்டைவிட்டு மீண்டும் வெளியேறிய அவர் அடுத்தாற் போல் எங்கு சென்றாரென்பதை எந்த ஆசிரியரும் பிரஸ்தாபிக்க வில்லை. ராம்மோகனரின் நண்பர்களிலொருவரான மிஸ்டர் வில்லி யம் ஆடம் என்பவர் 1826-ம் வருடம் எழுதிய ஒரு கடிதத்தில் "விக்ரக ஆராதனையை விட்டொழித்த ராம்மோகனர் உற்றார் உற வினர்களிடமிருந்து பிரிந்து காசி க்ஷேத்திரத்திற்குச் சென்று அங்கு சுமார் பத்துப்பன்னிரண்டு வருட காலம் தனித்து வாழ வேண்டியிருந்தது!" என்று குறிப்பிட்டிருக்கின்றார். ஒருக்கால், சம்ஸ்கிருதத்தில் பாண்டித்தியமடைவதற்கு காசியில் சகல வசதி

குறிப்பு:— ராம் மோகனர் தமது இளமைப்பருவ யாத்திரைகளைப் பற்றி "சம்பத் கௌமுதி" என்ற பத்திரிகையில் விரிவாக எழுதியிருந் தார். ஆனால், அந்த இதழ்களொன்றும் நமக்குக் கிடைக்காமற்போய் விட்டது விசனிக்கத்தக்கதே.

களுமிருந்தமையால், ராம்மோகனர் அந்த இடத்தைத்தமது வாசஸ் தலமாகக் கொண்டிருக்கக்கூடும். இது வாஸ்தவமானால், இந்துமத சாஸ்திரங்களில் அபாரமான ஞானத்தை அவர் திரட்டியது இக் காலத்தில்தான் இருக்கவேண்டுமென்று நாம் ஊகிக்கலாம்.

ராம் மோகனர் சொந்தச் செலவில் குடும்ப வாழ்க்கையை ஆரம்பித்தது 1800-ம் ஆண்டிற்கு முன்னிருக்க முடியாது. இவ் வருடத்தில் தான் (அவருடைய இருபத்தெட்டாவது வயதில்) அவருடைய மூத்த குமாரன் ராதா பிரஸாத் ஜனனமானான். ராம் மோகனர் தமது குடும்பத்தின் செலவுகளுக்கு என்ன செய்துவந் தாரென்பது ஒருவருக்கும் தெரியாது. அவர் வருமானம் வரத் தக்க ஒரே ஒரு உத்தியோகத்திலிருந்தது தான். (அதாவது கிழக் கிந்தியக் கம்பெனியில் ஸிவில் உத்தியோகம்) நமக்குத் தெரிந்திருக் கின்றது. ஆனால், அந்த உத்தியோகத்தையும் குடும்ப பாரத்தை ஏற்றுக்கொண்ட காலத்தில் அவர் வகித்திருக்க முடியாது. ஏனெ னில் 1796-ம் வருடத்திலிருந்துதான் அவர் ஆங்கில பாஷையைப் படிக்கவாரம்பித்தார். அதில் 1801-வது வருடத்திற்குமுன் அவ ருக்குப் பாண்டித்யமேற்பட்டுவிடவில்லை. ஆகையால் கல்விக் கழ கங்கள் மலிந்த காசி க்ஷேத்திரத்தில் பழைய ஓலைச் சுவடிகளுக்கு நகல்களை யெழுதிக்கொடுத்து அவர் சம்பாத்தியம் செய்திருக்கலாம். எப்படியாயினும் 1803-ம் வருடம் தமது தந்தை ராம் காந்தர் கால கதியடையும் வரையில் ராம்மோகனர் காசியைவிட்டு வரவில்லை யெனத் தெரிகின்றது. தந்தையின் சொத்துக்களையும் இதன்பிறகு அவர் அடையவில்லை. இரண்டாவது சகோதரனான ஜகன்மோகன னே எல்லா சொத்துக்களுக்கும் உரியவரானார். இதைப்பற்றி பர்து வான் வழக்கின் விசாரணையின் பொழுது "நான் எனது தகப்ப னாரிடமிருந்து அவருடைய ஜீவியகாலத்திலேயே பிரிந்து சென்ற வன். அவருக்கு சம்பந்தமில்லாமல் சொந்த முயற்சியினால் சம்பாத் தியம் செய்தவன்; அவருடைய மரணத்திற்குப்பின் அவரது சொத் தில் பாகம் பெறாதவன்." என்று ராம்மோகனர் வாக்கு மூலம் கொடுத்திருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

# பாரதத்தைப் பாருங்கள்.

"ஆராய்ச்சியாளன்"

மகாபாரதம் ஐந்தாவது வேதமென்று வைதீகர்கள் சொல்லு கிறார்கள். பெரிய இதிகாசங்களுள் பாரதமுமொன்று. அதில் வித வைகளைப்பற்றி என்ன சொல்லியிருக்கிறதென்று பார்க்கலாம்.

சந்தனு என்றொரு அரசன் சந்திர வம்மிசத்தில் பிறந்தவன். அவனுக்கு கங்காதேவியைக் கல்யாணம் செய்யப்பட்டது. அவள் வயிற்றில் பீஷ்மர் பிறந்தார். பின்னர் ஒருநாள் சந்தனு ராஜன் வேட்டைக்குச் சென்றார். அங்கே ஒரு செம்படவர் குலப் பெண் ணைக் கண்டார். காதல் கொண்டார். அவள் தகப்பனைக் கேட் டார். அவன் என்ன சொன்னான் தெரியுமா? உனக்கு முதல் தாரத்து மனைவிக்கு ஆண்குழந்தை இருக்கிறதே அவனுக்குத்தானே பட்டம் கிடைக்கும். என்மகளுக்குப் பிறக்கிற பிள்ளைக்கு என்ன கிடைக்கும்? இந்தப் பிள்ளைக்குப் பட்டம் கட்டுவதானால் மகளைத் தருகிறேன் என்றான். எப்படியிருக்கிறது அந்தக்காலத்து மீன் பிடிப்பவனுக்கிருந்த சுதந்திரம்! மகாராஜா மூச்சு விடாமல் வீட் டுக்குப் போய்விட்டார். இது அந்தக்காலத்து கலப்பு மணச் செய்தி. சில நாளாயிற்று. ராஜாவுக்குக் காதல்நோய் கண்டு விட்டதே! லேசானதா? பெண்ணின் காதல்! லேசில் விடுமா? வெதுப்பு கிறது. படுத்துவிட்டார். புத்திசாலியான பீஷ்மர் பார்த்தார். சாரதியை அழைத்து "வேட்டைக்குப் போனது முதல் மகாராஜா வின் சங்கதி வேறுமாதிரியாக இருக்கிறதே விஷயமென்ன?" என்று கேட்டார். நடந்ததைச் சொன்னான். உடனே பீஷ்மர் புறப்பட்டார். செம்படவனைக் கண்டார். எனக்குப் பட்டம் வேண் டாம், உன்மகளுடைய குழந்தைக்கே பட்டம். பெண்ணைக்கொடு என்று சொன்னார். இதனை வில்லிபுத்தூரார் அழகாகப் பாடுகிறார்.

கேட்டவக் கணத்திற் கடற்புறத் தரசைக்
கேண்மையோ டடைந்திள வரசும்
பாட்டன்நீ எனக்குப் பெற்றதாய் தானும்
பகீரதி யல்ல நின் மகளே

நாட்டமின் றுனக்கு யாதது நிலையிந்த
ஞாலமும் எம்பியர் ஞாலம்
நீட்டமற் றின்றே திருமண நேர்வாய்
நீதிகூர் நிருபனுக் கென்றுன்.

இப்படி ஆர்வத்துடன்கூறித் தான் கல்யாணம் செய்துகொண்டால் அதன் பயனுகப் பிறக்கும் குழந்தைக்குப் பட்டம் கொடுக்கும் விவகாரம் வரக்கூடுமென்று கருதி பீஷ்மர் தான் கல்யாணமே கொள்ளாமல் பிரம்மச்சாரியாக இருந்துவிட்டார். இப்படியாகச் சந்தனு ராஜன் கல்யாணம் செய்துகொண்ட பெண்தான் மச்சகந்தி யென்னும் பெண்ணுவாள். இவள் வயிற்றிற் பிறந்த மகனுன விசித்திர வீரியன் என்னும் அரசனுக்கு இரண்டு மனைவிகள். விசித்திர வீரியன் இறந்து போனுன். குழந்தை யில்லை. மனைவிமார் விதவைகளாயினர். பட்டத்திற்குப் பிள்ளையில்லையே என்ன செய்வதென்று யோசித்தார்கள். மச்சகந்தியாகிய கிழ விதவை, பீஷ்மாச்சாரியை அழைத்து, இந்தப் பெண்களுடன் சேர்ந்து குழந்தையை உண்டாக்க வேண்டுமென்றுள். அவர் தன்னுடைய பிரமசரிய விரதம் கெட்டுப்போகு மாதலால் முடியாதென்று சொல்லிவிட்டார். மனு தர்ம சாஸ்திரத்தில்,

"பிள்ளையில்லாமல் அந்தக்குலம் நசிக்கிறதாக இருந்தால் அப்போது அந்த ஸ்திரீ தன் கணவன் (கணவனில்லாவிட்டால்) மாமனுர் முதலானவர்களின் உத்திரவு பெற்றுக்கொண்டு தன் கொழுந்தன் அல்லது தன் கணவனுக்கு ஏழு தலைமுறைக்கு உட்பட்ட பங்காளி இவர்களோடு புணர்ந்து குலத்திற்குத்தக்கதான ஒரு பிள்ளையைப் பெற்றுக்கொள்ளலாம்". மநு 9-59.

என்று சொல்லப் பட்டிருப்பதைக் கொண்டுதான் மச்சகந்தியானவள் விதவையின் கொழுந்தனுன பீஷ்மரைக் கேட்டுக் கொண்டாளென்பது கவனிக்கத் தக்கது. அவர் முடியாதென்றதும் வேதத்தை வகுத்த வியாச முனிவரை அழைத்து விஷயத்தைச் சொன்னுர்கள். சரி தயார் என்ருர். அந்த வேதவியாசருக்கும் விதவைப் பெண்களில் ஒருத்தியான அம்பிகைக்கும் திரிதராட்டிரனும், மற்ருெருத்தியான அம்பாலிகைக்குப் பாண்டு ராஜனும் பிறந்தார்கள். திரிதராட்டிரன் போால் நூற்றுவர் பிறந்தனர். பாண்டுவின் போால் ஐவர் பிறந்தனர். இது பாரதம். விதவை

களின் பிள்ளைகள் ராஜாக்களாக இருந்து நாட்டை யாண்டனர். அதுதான் வேதமாக இன்று போற்றப்பட்டு வருகிறது. இந்த நூலி லிருந்து விதவையர் பிள்ளைப் பெறுவதும் அதைக் குலத்தாரும் ஊராரும் உலகத்தாரும் ஒப்புக்கொண்டு பட்டமுங் கட்டினர்க ளென்பதும் கவனிக்கத்தக்கனவன்றோ? சாஸ்திரத்தை ஒப்புக்கொள் பவர் விதவைக்கு ஏன் சுவீகாரம் செய்கின்றனர். பழைய சாஸ் திரவழி நிற்கவேண்டாமா? விதவையின் பிள்ளைகள் ஏன் குப்பைத் தொட்டிக்கும் சாக்கடைக்கும் வருகின்றன?

---

# தமிழ்நாட்டைக் குலுக்குங்கள்.

(அஞ்சா நெஞ்சன்)

"ஏ! தமிழ்நாட்டுப் பெண்மக்களே! எழுங்கள்! உங்கள் தடைகள் நீங்கிவிட்டன. கும்மியாட்டம் போடுங்கள். நீங்கள் அடி க்கிற அடியில் தமிழ்நாடு குலுங்க வேண்டும். எங்கே பார்க்கலாம். சேர்ந்து நில்லுங்கள்!" என்று பாரதியார் முழங்குகிறார். அனுபவ த்தில் தமிழ்நாட்டுப் பெண்கட்கு சுதந்திரம் கையில் வந்துசேரா விட்டாலும் பாரதியார் ஆர்டர் எழுதித் தபாலில் போட்டுவிட்டார். வந்து டெலிவரியாகாமலா போகப்போகிறது? பாரதியார் தமிழ்ப் பெண்களின் பிரதிநிதியாக நின்று அடிக்கும் கும்மியைப் பாருங்கள்!

கும்மியடி தமிழ் நாடு முழுதும்
குலுங்கிடக் கைகொட்டிக் கும்மியடி
நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோ மென்று கும்மியடி.

தமிழ்நாட்டைப் பிடித்த பிசாசு எத்தனை? தமிழ்நாட்டுப் பெண்ணைப் பிடித்த பிசாசுக்குக் கணக்குண்டா? "வஞ்சனைப் பேய்களென்பார், இந்த மரத்திலென்பார், அந்தக்குளத்தி லென்பார், துஞ்சுவது முகட்டிலென்பார்—மிகத் துயர்ப்படுவார் எண்ணிப் பயப்படுவார்" இப்படிப்பட்ட பிசாசுகளெத்தனை? காளியெத்தனை? கறுப்பனெத்

தனே? முனியன் பேச்சி நொண்டி எத்தனே! கிணற்றில் விழுந்தது குளத்தில் விழுந்தது தூக்குப்போட்டுக் கொண்டது நாக்கைப்பிடுங்கிக் கொண்டது. அப்படி எத்தனை மனிதப்பிசாசு! இவ்வளவும் பெண்களைத்தான் பிடிக்கின்றன. ஆண்மக்களைப் பிடிக்கிறதில்லை. அல்லவா?

இனிப் பெண்களைப் பிடித்திருக்கிற அறியாமைப் பிசாசு. அறியாமைப் பிசாசு பிடித்த ஆம்பிளையான் பிசாசு. மாமியாள் பிசாசு. நாத்தனார்ப் பிசாசு.' கொழுந்தன் பெண்டிர்ப்பிசாசு. அடுத்தவீடு அண்டைவீட்டுப் பிசாசு. ஊர்ப்பிசாசு உறன்முறைப் பிசாசு. ஆயிரம் பிசாசு. இவ்வளவும் சேர்ந்து ஒரு பெண்ணை சுகமாக வாழவிட மாட்டேனென்று உறுமுகின்றன அல்லவா? ஆகா இத்தனை பிசாசுகளுக்கும் இடையே ஒரு பச்சைக்குழந்தைப் பெண்—பருவம் அரும்பும் இளம் பெண் ஐயோ படும்பாடு எவவளவு? சீதனப் பணமிருக்கிறது. புருஷன் கூட நல்லவனாக இருக்கிறானென்று வைத்துக் கொள்வோம். சுகமாக வாழக்கூடிய நோயில்லாத உடம்பும் வாலிபமும் இருக்கின்றன. மகிழ்ச்சியோடிருக்க முடிகிறதா? எத்தனை கட்டுப்பாடு. எத்தனை வீண்செலவு. எவ்வளவு பொறுமை. எவ்வளவு கேலி. இவற்றுக்கிடையில் பெண்ணின் பெருமையும் சக்தியும் புதைபட்டுப் போய்க்கிடக்கின்றன. இதைக்கண்ட பாரதியார் அடிக்கிறார் ஒரு அடி.

ஏ பெண்ணே! எழுந்திரு! பெண்கள் கூட்டத்தைத் திரட்டு. சேர்ந்து நில்லுங்கள். கும்மியடியுங்கள்! நீங்கள் அடிக்கிற அடியில் தமிழ்நாடு முழுதும்—குலுங்க வேண்டும். என்று முழங்குகிறார். அடிமைத்தளை அறுந்தது. விடுதலை யெழுந்தது என்று அடிக்கும் போதே நம்மைப்பிடித்த பேய்கள்—பிசாசுகள் போயின என்று குமுறுங்கள் என்கிறார். "நன்மை கண்டோமென்று கும்மியடிக்க" வேண்டுமாம். நன்மை யெப்பொழுது வரும்? பிடித்த பிசாசுகள் ஒழிய வேண்டும். அப்பால்தான் நன்மையைக் காணமுடியுமென்பது கவனிக்கத்தக்கது.

புஸ்தகத்தைப் பெண்கள் தொடுவது தீமையென்று கருதி யிருந்தவர் தொகை மாண்டுபோய் விட்டது. வீட்டுக்குள்ளே பெண்க

களைப் போட்டுப் பூட்டிவைக்க வேண்டுமென்று கூறுகிற இரண்டாந்தரப் புத்திசாலிகள் தலையைத் தொங்கப் போட்டுவிட்டனர்.

ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்
றெண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார்
வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டிவைப்போ மென்ற
விந்தை மனிதர் தலைகவிழ்ந்தார்.

பெண்களைக் கோஷா வென்று சொல்லித் துணியைப் போட்டுக் கட்டிப் பார்சல் செய்து வீட்டினுள் அடைக்கின்றனர். விதவை யென்று முக்காடிட்டு மூலையில் பதுக்குகின்றனர். இப்படிச் செய்கின்ற மனிதர் வெட்கப்படுகிற காலம் வந்துவிட்ட தென்று கவி கூறுகிறார்.

மூன்றாவது கண்ணி வெகு ஷோக்காக இருக்கிறது. பெண்ணென்றால் அது என்ன? ஆண்மகனுக்கு ஒரு ஜோடியல்லவா? ஆண்மயிலுக்கு ஒரு பெண்மயில், ஆண்புறாவுக்கு ஒரு பெண்புறா, ஆண்குருவிக்கு ஒரு பெண்குருவி, சேவல் அன்னத்துக்கு ஒரு பெண் அன்னம். ஆண் ஆனைக்கு ஒரு பெண்யானை. ஆண்சிங்கத்துக்கு ஒரு பெண்சிங்கம்! அப்படித்தானே ஒரு ஆண்மகனுக்கு ஒரு பெண்மகள்! இந்த உண்மையை மக்கள் மறந்து விட்டார்கள். பெண் தாழ்ந்தவள்; பெண்குழந்தை மட்டம்; பெண் கழிபட்டது; பெண் அடிமை; பெண்மாடு; அது திட்டுவாங்க உரியது; உதைவாங்கத்தகுந்தது என்று ஆண்மக்கள் கருதிவிட்டனர். அதை ஏறவிட்டால் தங்கள் சாக்கு விலையாகா தென்று முடிவு கட்டிவிட்டனர். பெண்ணுக்கு அறிவுவளர்ந்தால் இவர்களுடைய விபசாரத்துக்கு ஆள் அகப்படுமா? அங்கே யிங்கே திரும்பிப்பார்த்த பெண்டாட்டியை உதைக்க ஆணுக்கு அதிகாரம் வைத்துக்கொண்டார்கள். நூறு பெண்களைக் கெடுக்கிற புருஷனைப்பற்றிச் சிந்தித்தால் வெதுப்புகிற தென்ற அதிகாரத்தையும் புருஷர்கள் வைத்துக் கொண்டார்கள். இப்படிப்பட்ட அட்டூழியத்தை நிலை நிறுத்துவதற்குப் பெண்களை மாடாக்க வேண்டி நேர்ந்தது. பெண்களுக்கு அறிவைக் கெடுத்துப் படிப்பைக் கெடுத்து உரிமையை யொழித்து மிருகமாக்கி விட்டார்கள். அந்த மிருகங்களிட மிருந்து ஆஹா! ஆண்மகன் சுகத்தை

யெதிர்பார்க்கிருன். கிட்டநெருங்கினுல் மூட்டுகிறது. இந்தப் பெண்களிடமிருந்துதானே மனிதர் பிறக்க வேண்டும், வளரவேண்டும். பிறந்தார்கள்! நீளமாக வளர்ந்தார்கள்! இந்திய மக்களின் அறிவு புதைந்து போனதற்குக் காரணம் புலப்படுகிறதா? முட்டாளான ஒரு தாயிடம் பிறந்த பிள்ளை—அவளால் வளர்க்கப்பட்ட குழந்தை எப்படி உயர்ந்த லட்சியத்தையடைய முடியும்? பாரதியார் கூறுகிருர்:—

மாட்டை யடித்துத் வசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டு வந்தே
வீட்டினில் எம்மிடம் காட்டவந்தாரதை
வெட்டிவிட்டோ மென்று கும்மியடி

மனிதர் மனைவியைத் தமக்குத்தகுந்த ஜோடியாக மதிக்கிருர்களில்லை. மதிக்க முடியவில்லை. பல ஆண்டுகளாக வைதீகர் பெண்ணை மிருகமாக்கி விட்டனர். ஆணுக்குத்தக்க ஜோடியாக அது அமையவில்லை. என்ன செய்கிறது? அதற்காகப் பெண் மரடா? இந்தவழக்கத்தைச் சீர்திருத்தவாளால் வெட்டிவிட்டோம் என்று முழக்குங்கள் என்கிருர் நமது கவிராஜர். பெண்மக்களே! எழுங்கள்! உங்களுடைய நேர்மையும் பெருமையும் வீரமும் தியாகமும் அறிவும் ஆற்றலும் தைரியமும் ஒன்ருகச் சேர்ந்து எழுந்து முழங்கட்டும். அடைபட்டுக் கிடக்கிற பெண்களுக்கு வெளிச்சத்தைக் காட்டுங்கள்! துணிவாக வெளியில் வரச்சொல்லி அழையுங்கள். பெண்மக்கள் விடுதலையே நாட்டின் விடுதலை. அடிமைப் பெண்ணிடம் கட்டுண்ட புருஷனுக்கு சக்தியேது? பாரதியார் சொல்லுகிற மாதிரி தமிழ்நாடு குலுங்கும்படி உலுப்பி விடுங்கள்! முக்காடுகளை விலக்குங்கள்! மூலையிற் கிடக்கிற கன்னியரின் கண்ணீரை மாற்றுங்கள்! சோர்ந்த முகத்தில் புன்னகை தோன்றச் செய்யுங்கள். வைதீகப் பாம்பின் வாய்ப்பட்டு ஒளிமழுங்கி யிருக்கும் இளம் பெண்களின் முகமானது பூரண ஒளியை யடைய, விடுதலை வழியைக் காட்டுங்கள். அழுகிற பெண்களெல்லாரும் மகிழ்கிற பெண்ணுகிற போதுதான் நாட்டில் நல்ல வாழ்வுக்கு இடமுண்டென்பதை உணருங்கள்.

---

# மங்களசக்தி.

சுவாமி சுத்தானந்த பாரதியார்.

இராகம் பியாகு—தாளம் திரையேகம்
"பந்தமுற்றெத்தனை நாள்" என்ற மெட்டு.

1 கண்கள் விழித்தெழுந்தோம்—மூடக்
கட்டைப் பிளந் தெறிந்தோம்!
பெண்கள் தலை நிமிர்ந்தோம்—அஞ்சும்
பேதைமை யைக்களைந்தோம்!

2 கோழைத் தனம் விடுத்தோம்—கொண்ட
கொள்கைக் குயிர் கொடுப்போம்
ஏழை, அடிமை யிடர்—கண்டே
எங்களுயிர் துடித்தோம்!

3 கொஞ்சிளமை வருத்துங்—கொடுங்
கோலை முறித்தெறிவோம்!
மஞ்சளுங் குங்குமமும்—என்றும்
மங்காது வாழ்ந்திடுவோம்!

4 கருத்துக்கு நல்லதொரு—தூய
காதலரை மணப்போம்
சரிநிகர் ஆண்பெண்ணென்றே—வீரச்
சங்கு முழங்கிடுவோம்!

5 கைம்பெண்மை யில்லையினி—மூலை
காக்குங் கொடுமையில்லை.
ஐம்புல வெங்கணைகள்—கூந்தல்
அற்றிடின் அஞ்சிடுமோ?

6 கல்வி பயின்றிடுவோம்—கலை
கற்று முன்னேறிடுவோம்.
நல்ல பொதுப்பணியில்—கூடி
நாட்டுத்தொண்டாற்றிடுவோம்!

7 மானிட வாழ்வினுக்குப்—பெண்கள்
மங்கள சக்தியன்றோ?
ஏனினி வேற்றுமைகள்? —கதிர்
இன்றி இரவியுண்டோ?

8 வீர வுறுதி கொண்டோம்!
விலங்குகளை யறுத்தோம்
பாரினிற் பாதி கொண்டோம்—எங்கள்
பாத்தியத்தைப்பெறுவோம்!

---

# காந்தா—மணீ
அல்லது
# கந்தஸ்வாமியின் கருணை.

(சீர்திருத்த நாடகம்.)

புதுவை, R. S. ராஜலக்ஷ்மி.
(All Rights Reserved.)

## காட்சி 1.

[திருச்சி—வரகநேரி அக்கிரகாரத்திலுள்ள கோபாலய்யரும் அவர் மனைவியும் சம்பாஷிக்கின்றனர்.]

கோபா:— ஏண்டி மீனு நம்ம காந்தா எவ்வளவு அதிர்ஷ்ட சாலி பார்த்தாயா? அவளுக்கு அமையப்போகும் ஆம்படையா னுக்கு அம்மா, அப்பா, அக்கா, தம்பி ஒத்தரும் இல்லை. நம்ம கொழுந்தை ஒரு கொடுமைக்கும் ஆளாகவேண்டாம்.

மீனு:—ஆமாம் மொட்டுப் பொலே பொங்கி போட்டுண்டு இருக்கலாம்.வயசுதான் (42)நாற்பத்திரண்டு நடக்கிறதாம். இருந்தா இன்ன?நிறையப் பணமிருக்கு என்ன குறை?

கோபா:—ஆமாண்டி நாளைக்கி நிச்சயதாம்பூலமாச்சே. எல் லாம் தயாராச்சா?

மீனு:—ஆச்சு. நம்ம மாப்பிள்ளை யிருக்காரே. இப்பவே காந்

தா கிட்டெ எவ்வளவு ஆசையாயிருக்கார். என்ன கோணம்? கல்யாணமானவுடனே கூட்டிண்டு போகப் போருர். சரி நீங்க வாருங்கோ. சாப்பிட நேரமாகலேயா?

(என்றிவ்வாறு பேசியபடியே இருவரும் சென்றனர்.)

காட்சி 2.

[காந்தாவும் அவள் தோழன் ரமணியும் சம்பாஷணை.]

ரமணி:—காந்தா உனக்கும்ஒருதாத்தாவுக்கும்கல்யாணமாமே. அந்த தாத்தா கொஞ்ச நாளிலே செத்துப்போயிடுவான். நீ நல்ல பெண் ஆயிற்றே. கிழவனுக்கா பெண்டாட்டியாயிருக்கப் போகிருய்? ஐயோ. (சிரிக்கிருன்)

காந்தா:—ரமணீ. எனக்குத் தெரியாதா? நம்ம பள்ளிக்கூடத்து பங்கஜம் கிழவனுக்கு வாக்கப்பட்டு இப்போ மொட்டையடிச்சுண்டு இருக்காளே. எனக்கும் அப்படித்தானே செய்வா?

ரமணி:—ஆமாம். நீ ஒங்க அம்மா அப்பாட்டெ சொல்லி அந்த தாத்தாவே போச்சொல்லு. இல்லாட்டா நீ பள்ளிக்கூடம், விளையாட்டு ஒன்றுக்கும் வாமுடியாது. தெரியுமா?

என்று 12 வயதுள்ள சிறுவன் 9 வயதுச் சிறுமியாகியகாந்தாவிடம் விளையாட்டாய்க் கூறினன். சிறுமி மிகவும் புத்திசாலி. அவள் இந்த மணத்தைத் தடுக்க எண்ணி விரைந்து வீட்டுக்கு ஓடினள். ரமணியும் தன் வீடு சென்றுவிட்டான்.

காட்சி 3.

[கோபாலய்யர் வீடு—நிச்சியதாம்பூல ஏற்பாடு நிகழ்கிறது. மண மாப்பிள்ளை உட்கார்ந்திருக்கிருர். காந்தா ஓடிவருகிருள். காந்தாவைக் கண்ட மீனு அவளையழைத்து தாத்தாவைக் காட்டி.]

மீனு:—என்கண்ணே இவர் தானம்மா உன் ஆம்படையான். நல்ல பணக்காரர். ராஜாத்தியாட்டமா யிருக்கலாம்.

காந்தா:—அம்மா எல்லாம் தெரிஞ்ச நீங்களே இந்தக் கிழவருக்கு என்னைக் கொடுக்கலாமா—நான் நன்னு படிச்சபிறகு பாத்துக்கலாமே, அம்மா இவரைப்பாத்தா குரங்குமாதிரி யிருக்கே (தாய்தந்தையர்க்கு கோபம் பொங்குகிறது. பல்லைக் கடித்து விட்டு கிழவர் முகத்தைப் பார்க்கிருர்கள்.)

கோபா:—அடி குட்டி அதிகம் பேசாதே. மீனு, காரியம் நடக்கட்டும்.

மீனு:—வாடி அதிகப்பிரசங்கி. கல்யாணம்வேண்டாம்பாளோ?

காந்தா:—ஐயோ இந்த கிழத்தைப்பண்ண சம்மதிக்க மாட்டேன். எனக் கென்னம்மா யிப்ப அவசரம்.

எப்போ மனமிரங்குமோ—என்ற மெட்டு.

இராகம்-முகாரி. தாளம்-ஆதி.

பல்லவி.

வேண்டாமம்மா மாமணம்
வெறுக்குதய்யோ என்மனம் (வே)

அனுபல்லவி.

காண்டாமிருகமென கருதிடத் தகுந்ததோர்
பாந்தமில்லா கிழத்தை பதியென அடைந்திட (வே)

சரணம்.

பெண்களுடநலன் யாவும் பெற்றவரைப் பொறுத்ததே
கண்களிருந்து மிவ்விதம் கழறுவது வெறுப்பதே
இதுதான் தர்மநெறியோ இசையா கிழவரையோ
வதுவை செய்குவாயென வழுத்துதலும் முறையோ (வே)

வசனம்:—அம்மா என் படிப்பெல்லாம் மூடியட்டுமே?

கோபா:—சீ— வாயை மூடு அந்த ரமணீ ராஸ்கலுடன் சேர்ந்து நீ ரொம்ப எதிர்த்துப் பேசுறாய்.

சிதம்பர தெரிசனமா—என்ற மெட்டு.

இராகம்-அசாவேரி. தாளம்-ஆதி.

பல்லவி.

அடியுனக் ககம் பாவமா பெற்றோர்கள்
அறிவுடன் கூறுவதை தடுத்துரை யாடுகின்றாய் (அ)

அனுபல்லவிகள்.

படிமிசை உனதுநல் பலனைக் கருதியன்றோ
பாவியே கடுங் கோபியே
பாராதே பதிற் கூறாதே நாங்கள்
பார்த்த கணவனுக்கு நேர்த்தியாய் மாலையிட (அ)

தானும் கணவன்தேடும் . தனிவழக்க முனக்கோ
சநிகாரி வீண் பழிகாரி
தையலே உன்மேல் மையலே கொண்ட
தகுமான மாப்பிள்ளையை அவமானம் செய்திடாதே (அ)

வசனம்:—குலத்தைக் கெடுக்கவந்த கோடாரிக் காம்பே! போ—தூர! [காந்தா அழுதவாறே செல்ல, நிச்சிய தாம்பூலமும் நடைபெற்று விட்டது. மாப்பிள்ளைக்கு ரொம்ப குஷி தான்.]

## காட்சி 4.

காந்தா மணக்கோலத்துடன் புதுச்சேரி முத்தியாலுப் பேட்டை சத்திரத்தில் இருக்கிறாள். திருமணம் விமரிசையில்லாத போனாலும் சுமாராக நடைபெற்றது. பலவந்த மணந்தானே! எப்படியிருந்தாலென்ன? காந்தா கழுத்தில் அடிமைத் தாலிக் கயிறு மாட்டப் பெற்றது. கிழவருக்குத் தான் என்ன ஆசைபாருங்கள்! இந்தவிதமான பால்ய மணம் கிழ மணம் முதலியவைகளைத் தொலைக்க எண்ணிறந்தோர் பாடுபடுகிறார்கள். மேலும் சாரதா சட்டம் அமுலுக்கு வந்திருக்கிறபடியால் அங்கிருந்தால் ஏதாவது தடைகள் வருமென்று தானே அந்த சட்டத்தின் கண்களில் மிளகாய்ப் பொடியைப் போட்டு விட்டு புதுச்சேரிக்கு வந்து ரகசியமாய் முடித்துக் கொண்டார்கள். இந்த யோசனை எல்லோருக்கும் வருமா? திருமணத்தை சுலபமாய் முடித்துக் கொண்டு கம்பியை நீட்டினார்கள். எங்கேதெரியுமா?

மணமகனும் மணமகளும் புதுக்கோட்டைக்கு. மற்றவர்கள் எல்லோரும் அவரவர்களிருப்பிடம்.

## காட்சி 5.

புதுக்கோட்டை ஆஸ்பத்திரியில் கிழவர் மாணப்படுக்கையில் இருக்கிறார். மணமாகி ஆறும்மாதத்தில் மாமனுரை சாப்பிட்டு விட்டு தானும் ஆஸ்பத்திரியில் வந்து படுத்துவிட்டார். புதிய மனைவியாகிய காந்தா தினமும் தன் தாயுடன் வந்து பார்த்துவிட்டுப் போவாள். தான் பிழைத்து எழுந்து காந்தாவுடன் சகல சுகபோகங்களும் அனுபவிக்க வேண்டுமென்று கிழவர் எண்ணியிருந்தார். என் செய்வது? விதி யாரைத் தான் விட்டது, மணமான மறுவருட மெல்லாம் கிழவனுகிய மணமகன் மறைந்துவிட்டார்.

காந்தா அடைந்த கவலைக்கு அளவில்லை. கிழவர் மடிந்தது அவளுக்கு சந்தோஷத்தைக் கொடுத்த தானாலும் தன் மாபினரின் தூற்றலுக்கும் சமூகக் கட்டுக்குமே பயந்து வருந்தினாள். சிறு பெண் ஆனாலும் மிக புத்திசாலியானதால் கணவன் மாண்ட ஞாபக சின்னங்களான மொட்டையடித்தல் வெள்ளை யுடுத்தல் முதலிய மூடப்பழக்கத்தையும் முட்டாள் கொள்கையையும் நிராகரித்து விட்டாள். தன் தாயுடன் புதுக்கோட்டையிலேயே தாமதித்து வந்தாள்.

## காட்சி 6.

பத்துவருடங்களுக்குப் பிறகு.

ஐயோ தெய்வமே இந்தப் பாழாய்ப்போன பிராமண ஜன்மமெடுத்து நான் படும் துன்பங்கள் கணக்கில்லை. என்ன ஏச்சு? என்ன பேச்சு? அன்றே என் பள்ளித்தோழன் ரமணீ எவ்வளவோ தடுத்துக் கூறினார். பெற்றோர்களாகிய பேய்கள் என்னைப்பிடித்திழுத்து பலவந்தமாய் கிழத்திற்குக் கொடுத்தார்கள். என் தந்தையும் ஆறு மாதத்தில் மடிந்தனர். கிழவனிட மிருந்து அவதிப்பட்டேன். அவரும் தொலைந்துவிட்டார். இப்பவோ சமூகத்தார் செய்யும் கொடுமையோ அப்பப்பா சொல்லமுடியாது. எங்கே கண்டாலும் ஏளனம் செய்கிறார்கள். இந்த சண்டாள சமூகக்கட்டு ஒழிந்து சமத்வம் என்று நிலையுறுகிறதோ அன்று தான் விதவை யுலகம் விடுதலை காணமுடியும் என்று காந்தா மிகவும் மனங்கசிந்துருகும் சமயம் அவள் தாய் மீனு அங்குவந்து,

என் கண்ணே காந்தா ஏன் கவலைப்படுகிறாய்? நாம் மீண்டும் திருச்சி நகர் செல்வோம் வா. இன்று நமதூர் சுப்ரமண்யர் ஆலயத்தில் உத்ஸவமல்லவா?

காந்தா:—ஆமாம். முருகப்பெருமானைக் கண்டாவது மனம் சற்று சாந்தியடையலாம். புறப்பட ஏற்பாடு செய்.

அன்றிரவு இருவரும் வாகனெரி முருகன் ஆலயத்திற்குச் செல்லப் புறப்பட்டனர்,

## காட்சி 7.

முருகன் ஆலயம். கோயிலுக்குள் ஜனசஞ்சாரமதிகமில்லை. நமது காந்தா தன் இரு கரங்களையும் கூப்பித் தொழுதுவிட்டு சுற்

றுப்பிரகாரத்தில் வலம் வரும் சமயம் இருபத்திரண்டு வயதுடைய அழகிய வாலிபன். காந்தாவைக் கண்டான். அவளது அடக்கத்தையும் உயர்வையும் கண்டு வியந்தான். அவ்வாலிபனின் மனம் நிலையில்லாது உழன்றது. வெளிப்புறம் வந்தான். ஒன்றும் தோன்றவில்லை. இமை கொட்டாமல் காந்தாவையே நோக்கிய வண்ணமாயிருந்தான்.

ஆ என்ன ரமணீகரம்.

தோடுடைய செவியன்—என்ற மெட்டு.

கண்ணிகள்.

மா மதிவ்தன மா திவள் தனைக்கண்டே
மனது மைய லாகினேன்
நே.மமுடனி வளார் அறிகிலேனே
நேமி புகழும் கந்தஸ்வாமி சன்னிதியில் (மா)

மின்னொளி நிகர்த்த பொன்னெழில் படைத்த
மெல்லியிவள் தனைக்கண்டே
என் மனதையிவட்கே பறிகொடுத்தேன்
இன்பம் பெருகிமனத் துன்ப மகன்றிடுமோ (மா)

வசனம்:—அதோ வருகின்றுள் அம்மாது. எம்பெருமானே என் எண்ணம் ஈடேறவேண்டும்.

கோயிலைச் சுற்றிவிட்டு காந்தாவும் வெளியில் வருகிருள். உடனே வாலிபன் காந்தாவை நோக்கி,

"இன்று இங்கு என்ன விசேஷம்? மிக அலங்காரமாகக் காணப்படுகிறதே. தயவு செய்து கூற முடியுமா?" என்று வினவ வாலிபன் வதனத்தை ஏறெடுத்துப் பார்த்தாள் காந்தா. அப்படியே திகைத்து நின்ருள். சுருங்கக் கூறின் காந்தா வாலிபனைக் காதலித்தாள். ஒருவாறு மனதை திடப்படுத்திக்கொண்டு இன்று சூரசம்காரம். ஏன் இது தெரியாதா? இவ்வொரே மொழிதான். வாலிபனுக்கோ அமுதம் வார்த்தது போலிருந்தது. மகிழ்ச்சியோடு மங்கையின் முகத்தைப் பார்க்க அதே தருணம் பால் போல.

விருத்தம்.

விண்ணொளிர் வெண்மதி விளங்கிடும் வேளையில்
மண்ணொளிர் தென்றலும் மகிழ்ந்தங்கு லாவிட
பெண்ணொடு மன்னவன் பேசியே யிருவரும்
கண்ணொடு நோக்கிடக் காதல் முதிர்ந்ததே.

காந்தாவின் குரல் வாலிபனுக்குப் பல உணர்ச்சியை எழுப்பியது. எங்கேயோ இக்குரலைத்தான் கேட்டிருப்பதாய் நினைத்து "அரிவையர்க் கணிகலமே தங்கள் குரலை நான் கேட்டிருப்பதாய் நினைவு வருகிறது. தங்கள் பேர் என்ன? இருப்பிடம் யாது? தயை செய்து தெரிவிக்க வேண்டுகிறேன்" என்றான்.

அதேபோல் காந்தாவும் வாலிபன் குரலைக் கேட்டு யோசனை செய்தாள். வாலிபனை உற்றுப் பார்த்தாள். இளவயதில் நிகழ்ந்தவைகள் தோன்றின. ஆம். என் பெயர் காந்தா. தாங்கள் ரமணியா? என ஆச்சரியமாய்க் கேட்டாள்.

என்ன? ஆம் நான்தான் ரமணி. என் அன்புள்ள காந்தா! உன்னைப் பார்த்து அனேக வருடம் கடந்து விட்டது. உன் அன்னை உன் கணவர் இவர்கள் க்ஷேமந்தானே. ஏன் உன் உடம்பு இப்படிப் போய்விட்டது.? என்று கேட்டான் ரமணீ.

ஐயோ. என்கதையை எப்படிச் சொல்வேன். அந்தக் கிழவர் மடிந்து பத்து வருடமாகிறது. அதற்குரிய அலங்கோலங்களை நான் அடையவில்லையென்று நம் சமூகத்தாரிடம் பட்ட பழிகள் கொஞ்சமல்ல. இப்பொழுது ஆதரவின்றி நாங்கள் அனாதைகளாக இருக்கிறோம். பொருளிருந்து என்னபயன்? என்று வருந்தினாள்.

காந்தா வருந்துவதைக் காண சகியாதவனாய்

அன்பே காந்தா கவலைப்படாதே. நான் உன்னை ஆதரிக்கிறேன். நீயார் என்பதை யறிவதற்கு முன்னமே என்மனம் உன் மீது நாடிவிட்டது. கண்ணே நான் உன்னைக் கைவிடேன். என் மொழிகளை நம்பு. தெய்வ சன்னிதானத்தின் முன்பு உதித்த தெய்வீகக் காதலை நிராகரித்து விடாதே என்றான்.

காந்தா:— நேசரே என்ன தாங்கள் பிதற்றுகிறீர்கள்? நானும்

தங்களைக் கண்டவுடன் காதல் கொண்டேன். அதனால் ஆகும் பிரயோசனமென்ன? ஒன்று மில்லை.

ரமணீ:—காந்தா என்னைநீ நம்பவில்லையா?

காந்தா:—ஐயோ என்மனதைக் கவர்ந்த மனோகரா! காதல் என்ற கனிக்கு சாதி சமூகம் என்ற இன்னல்கள் எல்லாம் இருக்கின்றன. மேலும்,

நாதா கேளும் நலமிதுதானோ—என்ற மெட்டு.

இராகம்-இந்துஸ்தான். தாளம்-ஏகம்.

பல்லவி.

காதலனே யிந்த பாதகிநானொரு
கைம்பெண் அல்லவோ.
நீதமுடன் எனை நீர் அடைந்தால்வரும்
நிந்தை சொல்லவோ கூறும் (கா)

அநுபல்லவி.

வேதனை யாகுது மனமது தானே
விளம்புவீர் துரிதமாய் மறுமொழி கோனே
வீண் மோகமே கொள்வ
தேன் சோகமே சொல்வீர் (கா)

ரமணீ:—கண்ணே. இந்த

வருத்த மகற்றி மனமகிழ்வடைவாயே
வனிதா மணியேநீ சீர்
திருத்தமணத்தையனு சரித்திடுவோம் மனம்
தேறுவாயே நீ வீணாய் (வ)

வசனம்:—காந்தா நான் மணந்து கொள்வதற்கு சற்றும் பின்னிடையேன். வேறு விதமாக நினைத்துவிடாதே. ஒருவனைக் காதலித்து அவள் ரகசியமாய்க் கருவுற்றாலும் சரி. சமூகத்தாரால் நிராகரித்து கஷ்டமுற்றாலும் சரி. வேறு எப்படியானாலும் சரி தன்னுடைய மிருக இச்சை பூர்த்தியாகி விட்டால் போதுமென்று கருதும் வாலிபர்களில் என்னையும் சேர்த்துவிட வேண்டாம். நான் அப்படிப் பட்டவனல்ல. பொது நலமும் சமூக திருத்தமுமே எனது நோக்கமாகும். கண்மணி நான் படித்து இப்பொழுது

மாதம் ஐம்பது ரூபாய் சம்பாதிக்கிறேன். உன் பொருட்டு நான் எதுவரினு மஞ்சேன். வைஷ்ணவ குலத்துதித்த நான் ஸ்மார்த்த விதவையாகிய உன்னை பகிரங்கமாய் மறுமணம் செய்து கொள் வேன் வருந்தாதே.

காந்தா:— ஆ. என் அன்பரே! இவ்வித வீரசிகாமணியாகிய தங்களை அடைய பாக்யம் செய்திருக்கிறேன்.

இதே சமயம் காந்தாவைத் தேடிக்கொண்டு அவளது தாய் அங்கு வரவே தன் அன்னையிடம் நடந்தவைகளைக் கூறினாள் காந்தா. தாயும் இதைக்கேட்டு அளவற்ற மகிழ்ச்சி யடைந்தாள். மூவரும் அவ்விடம் விட்டு காந்தாவின் வீட்டிற்குப் புறப்பட்டார்கள். ரமணி அடைந்த ஆனந்தத்திற்கு அளவில்லை.

காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்தார் ஆதரவில் காந்தாவிற்கும், அவள் காதலன் ரமணிக்கும், சீர் திருத்த மணம் நடைபெற்றது. பல பெரியோர்கள் தம்பதிகளைப் பாராட்டிச் சொற் பொழிவாற்றினார்கள். விவாகமும் முடிந்து விருந்து முதலியவை களும் நடைபெற்றன.

தம்பதிகள் எல்லோருக்கும் வணக்கம் புரிந்தனர்.

ரமணி தன் காதலியை நோக்கி, காந்தா! உன்போன்ற பால்ய விதவைகள் இன்னும் கோடிக் கணக்கானவர்கள் உளர். கந்தஸ் வாமியின் கருணையால் நாம் தம்பதிகளாகினோம். இதே போல் பால்ய விதவையர்களுக்கு மறுமணம் செய்ய உதவி புரிந்து அவர் களை இல்வாழ்க்கையில் புகுத்தி இன்பத்தைக் கொடுக்கும் இந்த மாதர் மறுமண சங்கத்தை மனப்பூர்வமாக வாழ்த்துவோம்.

காந்தா:— அப்படியே (இருவரும் சேர்ந்து வாழ்த்துகிறார்கள்)

ஜீவசிந்தா மணியே—என்ற மெட்டு

இராகம்-இந்துஸ்தான்-பியாக்-தாளம்-ஆதி.

பல்லவி.

மங்காப் புகழ் பெருகும் மாதர் மறுமண சங்கம் வாழ்கவே
சங்கம் வாழ்கவே மகிழ் எங்கும் சூழ்கவே (ம)

அநுபல்லவி.

மங்கையர் மனத்துயர் நீக்கும் நீங்கா

மகிழ்ச்சிதனை மிகவுண் டாக்கும் மிக
இங்கிதங்களை சேர்க்கும் அது
இத்தரை மீதினில் செப்பொணுகீர்த்தியை
என்றுமே வார்க்கும் உலகில் (ம)

தொகையரு.

அடிமையாய் வதிந்திடும் அமங்கலைகள் தன்துயரை
அகற்றியே உயர் வளிக்கும்
படிமிசை தனிலிதை பால்யவிதவைகள் பின்
பற்றிடில் மனங்களிக்கும்

(அநுபல்லவி எடுப்பு)

உத்தம சங்கமும் வாழ்க அதில்
உறையும் பல்அன் பர்களும் வாழ்க நாளும்
சித்தமே களிப் பாக
செப்பொணு சேவைகள் மிக்கபுரியும் முரு
கப்பா வாழ்கவே தாணியில் (மங்)

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக
சுபம்! சுபம்!! சுபம்!!!

---

## சுதந்திரம் கொடுங்கள்.

சிரம்பான், திரு. அ. பழ. பழனியப்ப செட்டியார் எழுதுவது.

நம் இந்திய நாட்டில் பற்பல சீர்திருத்தங்கள் செய்யவேண்டியது அவசியமாயிருப்பினும், எல்லாவற்றிலும் முதன்மையானதும் இன்றியமையாததுமாகியது மாதர்களுக்கு சுதந்திரம் வழங்குதலேயாம். மாதர்கள் நம் இந்திய நாட்டில் பிள்ளைப்பிராயத்தில் மிகச் செல்வமாக பெற்றோர்களால் வளர்க்கப்பட்டாலும், வயது வந்த காலத்தில் அவர்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளிலிருந்து பெற்றோர்கள் மிக வழுவிவிடுகின்றார்கள். பத்து அல்லது பன்னிரண்டு வயது நிரம்புவதற்கு முன் தங்கள் செல்வச் சிறுமிகளை பள்

ளியிலிருந்து அழைத்து வந்து, வீட்டு வேலைகளைப் பார்க்கவும் இன்னும் அவர்கள் பக்குவமடைந்துவிட்டால் மிகுந்த கண்காணிப்புச் செய்வதும், அவர்களின் சம்மதம் அறிந்துகொள்ளாது தம் இஷ்டம்போல் ஒரு மாப்பிள்ளைக்கு விவாகம் செய்விப்பதும் துர்அதிர்ஷ்ட வசத்தால் மாப்பிள்ளை இறக்க நேரிட்டால், விதவைக்கோலம் காண்பதும், உண்பது, உடுப்பது, முதலிய சாதாரண விஷயங்களில்கூட சுதந்திரமும், சுகமும் மறுத்து பல துன்பங்களுக்கு உள்ளாக்குவதும் மிகச் சாதாரண விஷயங்களாகவே இருந்துவருகின்றன.

இதற்கு மாருக, ஆண்கள் தங்கள் இஷ்டம்போல் ஆடை அணிவதும், பல சுகங்களைத் துய்ப்பதும், இன்னும் பலவற்றை சர்வ சுதந்திரத்துடனும் செய்கின்றார்கள். ஒரு ஆண் மிகக் கிழவனாயினும் இளம் பெண்ணை மணக்க இடமளிக்கப்படுகிறது. ஆனல், ஒரு இளம் பெண் தன் புருஷனை இழந்த பின்னர் மறு விவாகம் செய்துகொள்ள அநுமதிக்கப்படுவதில்லை. இது மிகவும் கொடிய பழக்கமேயாம்.

இந்திய சமூகத்தில் முக்கியமாய் உயர்ந்த சாதி இந்துக்களில், பல ஆயிரக்கணக்கான இளம் விதவைகள் வாழ்க்கை இன்பத்தை அனுபவிக்காமல் கஷ்டப்படுகிருர்கள். அவர்களுடைய துன்பத்தைத் துடைத்து, அவர்கள் இன்ப நிலையடைந்து, மற்றப் பெண்களைப்போல், உண்டு உடுத்து, கணவர்களுடன் சுகித்திருக்கச் செய்யுமாறு வேண்டுவன செய்யவேண்டியது ஒவ்வொரு இந்தியனின் கடமையாகும். நீண்டநாள் பழக்கத்தால் ஏற்பட்டிருக்கும் விபரீதங்களை நீக்க அச்சமில்லாது ஆண்களும் பெண்களும் முன்வந்து பணியாற்றவேண்டும். ஆண்கள் இளம் விதவைகளை மணக்க முன்வரவேண்டும். பெண்களும் முதல் மணத்திற்குத் தயாராவது போலவே மறுமணத்திற்கும் தயாராதல் வேண்டும். இளம் விதவைகள் கிளர்ச்சி செய்யவேண்டும். சும்மா இருந்தால் பிரயோஜனம் இல்லை. பெண்களைவிட ஆண்களே இம்முயற்சியில் ஊக்கம் காட்டி உதவி செய்யவேண்டும். ஒவ்வொரு ஆணும் எப்படி தான் மறுமணம் செய்ய நேரிடுங்கால் சந்தோஷத்துடன் ஏற்பாடுகள் செய்கிருரோ அதேபோல் விதவையாய் தத்தளிக்கும் தன் சகோதரிக்கும் ஊக்கத்துடன் தைரியம் சொல்லி மறுமணம் புரிய ஏற்

பாடுகள் செய்யவேண்டும். அதோடு ஒவ்வொரு பெண்ணும் தான் காதலிக்கும் புருஷனையே மணக்கும்படி செய்யவேண்டும். காதலில்லாமல் வாழ்க்கை பயன்படாது. நாகரிகம் மலிந்த மற்றைய நாடுகளில் பெண்கள் தங்கள் புருஷர்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுவதும் புருஷர்கள் இறந்தால் மறுமணம் செய்துகொள்ளுவதும் சர்வ சாதாரணமாய் நடக்கும் சம்பவங்களாம்.

இம் முயற்சியில் திருமதி, மரகதவல்லியாரும் திரு. சொ. முருகப்பாவும் முன் நின்று பணியாற்றுவது மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கிறது. அவர்களது சீரிய முயற்சிகள் வெற்றி பெறுக. இந்திய விதவைகள் விடுதலை பெற்றுத் தம் கருத்துக்கிசைந்த காளையர்களை மணந்து இன்புற்றிருப்பார்களாக.

---

# பெண்கள் தாழ்மையன்று, தாய்மை.

லேட்பட்டான்—இராஜ சரஸ்வதி அம்மாள்.

அன்பார்ந்த சகோதர சகோதரிகளே,

உலகின் கண்ணுதித்த ஜீவராசிகள் யாவும் உலகம் விருத்தியடைந்து நடைபெறும்பொருட்டு இயற்கையினால் ஆண் பெண் என இருஜாதியாக வகுக்கப்பட்டு நடந்துவருவது யாவருமறிந்ததேயாகும். இவ்விரு வகுப்பும் உலகமெனும் மடந்தைக்கு இரு கண்கள் என ஆன்றோர்கள் கூறிப்போந்தனர். இது முற்றிலும் பொருந்துவதே. இவ்விரு கண்களில் ஒன்று உயர்ந்தது என்றும், ஒன்று தாழ்ந்தது என்றும் கூறுவது எவ்விதம் பொருந்தும்? நம் நாட்டில் நம் சமூகத்தில் பெண்களை எவ்வளவு கேவலமாக எண்ணி நடத்தி வருகிறார்கள் என்பது கண்கூடு. நம் சமூகப் பெண்மணிகள் படுந்துயரம் ஏட்டில் எழுதுந்தரமன்று. நாவினால் நவிலும் தன்மையதன்று. இத்தொல்லைகளினால், குளத்தில் விழுந்தும், கிணற்றில் விழுந்தும், ஆற்றில் விழுந்தும், சுருக்கிட்டும், விஷமுண்டும், மற்றும் பலவகையினாலும் தற்கொலை செய்துகொள்ள முயன்றவர் எத்தனைபேர்? தற்கொலைபுரிந்துகொண்டவர் எத்தனைபேர்? மனநோயே

என்றும் மாறு நோயாகி மாண்டவர் எத்தனைபேர்? இன்னும் பல வற்றினாலும் தம் அருமையான உயிரை அகால மரணத்திற்குள் ளாக்கினோர் எத்தனைபேர்? போதாக்குறைக்கு காதலற்ற பாலிய மணங்களும் இத் தற்கொலைகளுக்குத் தாளம்போட இருக்கவே இருக்கின்றன.

ஆலோசித்தால் பெண்களே விரைவில் உலக வாழ்க்கையில் வெறுப்படைவார்களென்பது எனது அபிப்பிராயம். அனுபவித் தோரைக் கேட்டாலன்றோ அவர்கள் மனப்பாங்கு நன்கு தெரியும்.

கொடியது கேட்கின் நெடிய வெவ்வேலோய்
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினும் கொடிது இளமையில் வறுமை
அதனினும் கொடிது ஆற்றொணுக் கொடுநோய்
அதனினும் கொடிது அன்பிலாப் பெண்டிர்
அதனினும் கொடிது இன்புற அவர்கையி லுண்பதுதானே.

எனப் பாடிய, அரும் புலமைவாய்ந்த ஔவையார், இக்காலம் நம் சகோதரிகள் படுந்துயரங்களைக் கண்டிருப்பரேல்,

அதான்று,
கொடிதினுங் கொடிது கொடுந்துயர்க் குறையுளாம்
பெண்ணெனும் பிறவி பேசருங் கொடிதே.

எனப் பாடியிருப்பர். பத்துமாதம் சுமந்து பல துன்பங்களுக் காளாகி கருவுயிர்த்த தாயும், பிறந்தது பெண் குழந்தை என்றால் முகம் சுழித்துக்கொள்ளுகிறாள். எவ்வளவோ கஷ்டங்களை அனு பவித்து எவ்வளவோ தானதவம் புரிந்து குழந்தையை யீன்றும் பல னில்லையே என ஏங்கி நலிகிறார்கள். ஆண் குழந்தை பிறந்தால் தந்தி கொடு. பெண்குழந்தையானால் கடிதம் விடுத்தால்போதும் என்று கூறுபவர் எத்தனை பேர். அந்தோ இவர்கள் மதியீனத்தை என்னென்று கூறுவது! பிறகு அக்குழந்தைகள் இறக்கும் வரை யிலும் தாழ்வாகவே கருதி நடத்தப்பட்டு இன்னலுறுகின்றன. ஆண்குழந்தைகளை மட்டும் மேலாகக் கருதி நடத்துகிறார்கள். ஏன்? இருவரும் அவர்கள் குழந்தைகள் தானே, இருவரும் ஒரு வயிற் றில்தானே இடம்பெற்றார்கள். இருவர் உடம்பிலும் ஒரு இரத்தம் தானே ஓடுகிறது. ஒரு கண்ணைக்குத்திப் புண்ணாக்கிக்கொண்டு

ஒரு கண்ணுக்கு மை முதலானவைகளால் அலங்கரித்துக் களிப் படைவாருமுண்டோ?

பின்னும் அப்பெண்ணிற்கு மணமுடிந்து, பிறந்தகத்தினின் றும் நீங்கி, தான் முன் பின் அறியாத கணவன் வீடு சென்று வாழ நேர்ந்தாலோ, அவ்விடத்தில் மாமனார், மாமியார், நாத்தி முதலான வர்களிடம் படுந்துயரங்களோ கணக்கின்று. விவாகம் செய்யப்படு முன் எவ்வளவோ அன்பாகப் பேசிக் காரியத்தை முடித்துக்கொள் வர். காரியம் முடிந்தவுடன் அடிமைபோல் அப்பெண்ணைப் பாவிப் பர். அப்பெண் செய்வது தமக்குக் குற்றமாகத் தெரிந்தால் அறி யாத சிறுமிதானே ஏதோ தெரியாமல் செய்துவிட்டாள் என்று மனம் பொறுத்து நயமாகச் சொல்லிக்கொடுத்துத் திருத்தாமல் சர மாரியாய்க் கடுமொழி பல புகன்று அப்பெண்களைப் பலவிதத்தும் துன்புறுத்துகின்றனர். மூர்க்க குணமுள்ளவர்களும் அறிவிலி களும் இச் சச்சரவில் நியாயங்களை அறிய முயலாமல், மாதாவின் சொற்கேட்டு மனைவியையும், மனைவி சொற்கேட்டு மாதாவையும் துன்புறுத்தி பலரும் அறிந்து நகைக்கும்படி செய்துகொண்டு அல்ல லுறுகின்றனர். ஆதலால் பெண்கள் கணவன் வீட்டில் பெருந் துயரங்களை அனுபவிப்பவராகின்றனர். இன்னும் பெண்கள் குடும்பத்தில் அடையுந் துன்பங்கள் அனந்தம். அனுபவித்தோர் எவரும் இதை மறுக்க விசையார் என்பது திண்ணம்.

பெண்கள் விருத்தாப்பிய காலத்திலும் மருமகள் முதலானோ ராலும் கஷ்டங்களை அனுபவிக்கிறார்கள். அறிவீனர், தம்மை அன் புடன் ஈன்றளித்த அன்னை என்று கருதாமலும், தாயிற்சிறந்த தோர் கோயிலுமில்லை. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்னும் நீதிவாக்கியங்களை யுணராமலும், அவர்கட்குப் பல கொடு மைகள் புரிந்து வருவது யாவருமறிந்ததே. அவர்கள் தம் கண வரை யிழந்து கவலைமிகுந்து கண்ணீருடனிருந்தாலும், இப்புத்திர சிகாமணிகள் கவனிப்பதில்லை. பெண்கள் இளமையில் பெற்றோர் பாதுகாப்பிலும், வாலிபத்தில் கணவர் பாதுகாப்பிலும், முதுமை யில் புத்திரர் பாதுகாப்பிலும் இருக்கவேண்டுமென அறிஞர்கள் கூறிப்போந்தனர். அவ்வக்காலங்களில் ஆங்காங்கே இம்மூன்று பாதுகாப்பாளரிடத்தும் அல்லலுற்றழுங்கி அழிவது சொல்லுங்

தரமன்று. பெண்களை மேன்மையாக நடத்தும் சில இடங்களும் இல்லாமலில்லை. ஆயினும் பெரும்பான்மையாகப் பெண்ணுலகு படுந்தொல்லைகளை அளவிட்டுரைக்க இயலாது. அம்மம்ம எவ்வளவு சகோதரிகள் எத்துணைக் கொடுந்துயரங்களை அனுபவித்து அல்லலுறுகின்றனர். இவ்விஷயங்களைப்பற்றி இன்னும் எவ்வளவோ இருந்தாலும், அவையனைத்தையும் எழுத இயலாதென்றெண்ணியே இத்துடன் விடுத்தேன். கல்வியறிவில்லாமல் குறுகிய மாந்தரிடந்தான் இத்தகைய வழக்கமெனில் கற்றுணர்ந்தோரிடத்தும் இவ்வழக்கமிருப்பது மிகவும் விசனத்தை யளிக்கிறது.

நிற்க, பெண்கள் எவ்வாறு தாழ்ந்தவர்கள் என்பதைக் குறித்துக் கவனிக்கலாம். குடும்பத்தில் சகல வேலைகளையும் ஒரு வகுப்பாரே கவனிப்பது மிகவும் சிரமமான காரியம். ஆதலால் ஆண்கள் சில விஷயங்களிலுழைப்பதற்கும், பெண்கள் குழந்தைகளைப் பெறுதல் போஷித்தல் இன்னும் மற்ற குடும்ப காரியங்களைக் கவனிப்பதற்கும் இயற்கை நியதி ஏற்பட்டுள்ளது. இதில் எவ்வாறு ஒன்று உயர்ந்ததென்றும் மற்றொன்று தாழ்ந்ததென்றும் கூறலாகும்? அவ்வாறே வீட்டு விஷயங்களைக் கவனிக்கும் பெண் வகுப்பு எவ்விதம் தாழ்ந்ததாகும்? இரு விஷயமும் எவ்வளவு அத்தியாவசியமோ, அவ்வாறே இரு வகுப்பாரும் உலகிற்கு அத்தியாவசியமானவரே. உலக விருத்தியின்பொருட்டும், குடும்ப விருத்தியின் பொருட்டும், இன்னும் மற்ற பல சௌகரியங்களுக்காகவுந்தான் இரு வகுப்பாரையும் விவாகமெனும் பேரால் சேர்த்து வைக்கிறார்களென்பது யாவரும் நன்குணர்ந்ததே. அவ்விதம் இருவரும் இன்றியமையாதவராயிருக்க அதில் பெண்களை மாத்திரம் தாழ்மைப் படுத்துவதற்குக் காரணம் சற்றும் புலப்படவில்லை. சிலர் மனைவி, புருடனுக்கு ஏதாவது குற்றம் செய்துவிட்டால் உன் புருஷனுக்கு நீ பெண்ஜாதியா? உனக்கு உன் புருடன் பெண்ஜாதியா? என்று கேட்பதைக் கேள்விப்பட்டிருக்கிறேன். பெண்ஜாதி என்பதில் என்ன தாழ்மையான அர்த்தம் இவர்கட்குப் புலப்பட்டுவிட்டதோ தெரியவில்லை. மனைவி பெண்ஜாதி என்றால் கணவன் ஆண்ஜாதி, அவ்வளவுதானே! அவ்வாறே கணவன் மனைவி, துணைவன் துணைவி, இல்லான் இல்லாள், தலைவன் தலைவி, மனைக்கிழவன் மனைக்கிழத்தி, புருடன் பாரி, ஆளன் தேவி, காதலன் காதலி,

நாயகன் நாயகி, முதலான காரண சிறப்புப் பெயர்கள் இருபாலாருக்கும் ஒருவிதமே ஏற்பட்டுள்ளன. இம்முறையே பெண்பாலாரின் பெயர்களில் எது தாழ்மையைக் குறிக்கின்றது? மேலும் பெண்களைக் கன்னிகை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, ஏந்திழை, விளங்கிழை, வனிதை, மாதர், வல்லி, மெல்லி, நங்கை முதலான பல சிறந்த பெயர்களால் உலகினர் குறிப்பிட்டார்கள். குறிப்பிடுகின்றனர். இதனால் தாழ்மையைக் குறிப்பதற்கு இடமேதேனும் உண்டா? உலகமும் ஒருபாலாரால் நடக்குமோ? ஆணில்லையேல் பெண்ணில்லை. பெண்ணில்லையேல் ஆணில்லை என்பதை எவரேனும் மறுக்கத் துணிவரோ. தற்காலம் ஆண் சம்பந்தமில்லாமலே பெண்கள் இஞ்செக்ஷன் மூலமாக குழந்தைகளையடைகிறார்களென்பது கேள்வி. அவ்விதமிருக்க பெண்களைத் தாழ்ந்தவர்கள் என்று கூறுவது எங்கனம் பொருந்தும்?

மேலும் உலகங்களையும் எண்ணிறந்த உயிர்களையும் மற்றும் உலகிலுண்டான சராசரங்களையும் ஈன்றளிப்பதும், நாம் நம் வாழ்க்கையில் முன்னேற்றமடைவதற்கு அறிவை விருத்தி செய்யும் அழியாப் பொருளாகிய கல்வியை நல்குவதும், பொருளில்லார்க்கிவ்வுலகமில்லை, பணமில்லாதவன் பிணம், என்னும் ஆன்றோர் மொழிக்கிணங்க நமக்கு செல்வத்தை நல்குவதும் முறையே மலைமகளெனவும், கலைமகளெனவும், மலர்மகளெனவும், உலகினரால் கூறித் துதித்து வணங்கப்பெறுவோரும் பெண்களே. அஷ்ட ஐஸ்வரியங்களையும் நம்மையும் மற்றும் எண்ணிறந்த ஜீவராசிகளையும் சுமக்கும் நிலமும், நம் உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாததாகிய நீரும், (நதிகளும்) இயற்கையும், வீரமும், இரவும், பகலும், இன்னும் மற்றும் பல பொருள்களும் பெண்மை எனவே அறிஞர்கள் கூறிப்போந்தனர். கூறி வருகின்றனர். இது யாவருமறிந்ததேயாகும். இவற்றை எல்லாம் உய்த்து நோக்கினல் பெண்ணுலகு "தாழ்மையன்று அது தாய்மை" என்பது இனிது புலனாகும்.

பெண்மையே புருடர்களுக்குச் சக்தியெனவும், ஆக்குவதும் அளிப்பதுமாகிய இருதிறனும் பெண்மைக்குண்டு எனவும் அறிஞர்கள் கூறியிருப்பதும் காண்க. நம்நாடு முன்னேற்றமடைய எண்ணிறந்த பெண் தெய்வங்கள் சிறைபுகுந்ததை அறியாதார் யாரே.

நம் அரும் பெரும் பாரத அன்னை எனுந் தாய்நாட்டின் சிறைநீக்கத் துணிந்த நீங்கள், அவ்வன்னையின் அகட்டுதித்த அவர் தம் கண் நிகர் பெண்மக்களை அத்தாயின் மனங்கொதிக்க அவர்கட்கு அடிமைத்தளைபூட்டி வைத்திருப்பது எத்துணைக்கொடுமை. நாட்டைத் திருத்தத் துணிந்த நீங்கள் வீட்டையன்றோ முன்னர் திருத்த வேண்டும். வீணாக நம் அருமை சகோதரிகளின் கண்ணீர் பூமியில் சிந்தும்படி செய்யவேண்டாம். "ஏழையழுத கண்ணீர் கூரிய வாளொக்கும்" என்னும் உயர்மொழியை உய்த்துநோக்குவீர்களாக. பெண்கள் அடிமைகளாகப் பாவிக்கப்பட்டுக் கலங்கிக் கண்ணீர் பொழிந்து காலங்கழிக்கும்படி நம் இந்திய நாடல்லது வேறெந்த நாடு அடிமையில் ஆழ்ந்து அல்லலுறுகின்றது? பெண்கள் முன்னேற்றத்திற்குத் தற்போது அறிஞர் பலர் முயன்றுவருவது காண அகமகிழ்கின்றோம். எனினும் இவைபோன்ற சீர்திருத்த விஷயங்களில் இன்னும்பலர் ஏட்டுச்சுரைக்காயாய் இருந்துவருவது வருந்தத் தக்கதேயாகும். இல்லறத்தை நல்லறமாக நடத்தி மற்றும் பல நலங்களை எல்லாம் நல்கும். பெண்மக்களைக் கேவலம் பிள்ளைபெறும் இயந்திரங்களெனவும் மற்றும் பலவாறு தாழ்வாகவும் எண்ணாமல், அவர்களை அடிமையினின்றும் நீக்கி ஆனந்தமுறச் செய்வீர்களானால் அக்காலமே நம் நாடு முன்னேற்றமடையுமென்பதற்குத் தடையுமுண்டோ? ஆதலால் பெண்கள் விடுதலையில் யாவரும் பெரும் பணிபுரிவீராக.

---

## விதவா விவாகம்.

அய்மேன், ராம. மீனாட்சி சுந்தரம். வயது-13.

சமூகத்தில் சமூகப் பெரியோர்கள், இரக்கமற்ற சாஸ்திரிகள் சொல்லைக் கேட்டு விதவைகளைப் பெருக்கி விட்டார்கள். ஒரு பாவமும் அறியாத விதவைகள் பட்டுப்புடவை அணியக்கூடாதென்றும், நகை போடக்கூடாதென்றும், பல கொடுமையான காரியங்களையும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதன்படி சமூகத்தார் இன்றும் நடக்கிறார்கள். அவ்விதமாக நடக்கக் கூடாது. நடந்தால் கெடுதலே

ஒழிய நன்மையில்லை. ஏனென்றால், விதவைகளை இவ்விதமாக அடக்கி வைக்க வைக்க அவர்கள் நாளுக்கு நாள் கெட்டுப் போகிறார்கள். அவர்கள் ஒரு வழியில் கெடுவதில்லை: அனேகம் வழியில் கெடுகிறார்கள். எவ்விதமென்றால், விதவைகளில் சிலர் திருட்டுத்தனமாக வீட்டிலுள்ள வேலைக்காரருடனும், மோட்டார் டிரைவருடனும், இன்னும் மற்ற தொழிலாளிகளுடனும், உறவினருடனும் தவறி விடுகிறார்கள். அதில் கர்ப்பமுண்டாகிறது. இதைக் கண்டவுடன் டாக்டரிடம் போய் மருந்தைச் சாப்பிட்டுப் பழிக்குத் தப்பித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இல்லாவிடில் ஆபரேஷன் பண்ணி பிள்ளையை எடுக்கிறார்கள். அதில் அப் பெண் இறக்கிறாளோ, பிழைக்கிறாளோ என்ற தருணத்தில் இருக்கிறது. இன்னும் சில விதவைகள், தொழிலாளிகளைக் கூட்டிக்கொண்டு இதர தேசங்களுக்கோ, இதர ஊர்களுக்கோ ஓடி விடுகிறார்கள். ஏன் இவ்விதமெல்லாம் விதவைகள் செய்ய வேண்டும்? இதற்குப் பகிரங்கமாக விதவைகள் கலியாணம் செய்து கொண்டால் என்ன? சமூகத்திற்கும், ஊரார் தூற்றுதலுக்கும் பயந்தே ஒழிய வேறொன்றுமில்லை. விதவைப் பெண்கள் திடமாக முன் வந்தால் ஒன்றுக்குமே பயப்பட வேண்டியதில்லை. ஆண்கள் மாத்திரம் முதல் தாரம், இரண்டாந்தாரம், மூன்றாந்தாரமென்று வாலிப வயது முதல் கிழவனாகும் வரை ஆறு தாரங்கள் செய்துகொள்ளலாமா? பெண்கள் மாத்திரம் ஏன் இரண்டாந் தாரம், மூன்றாந் தாரமென்று ஆறு தாரங்கள்வரை செய்து கொள்ளக் கூடாது?

சாதாரணமாக நமது சமூகத்தில் ஒரு பெண்ணை ஒரு வாலிபனுக்கு கன்னிகாதெட்சணை ரூபாய் 10,000 வாங்கிக்கொண்டு கலியாணம் முடியப்போகிறதென்று வைத்துக்கொள்வோம். அது சமயம் இன்றைக்கோ நாளைக்கோவென்று மாணமடையப்போகிற ஒரு வயோதிகக் கிழவன் வந்து நான் கன்னிகா தெட்சணை ரூபாய் 30,000 தருகிறேன். எனக்குக் கலியாணம் செய்யுங்கள் என்றால் போதும். உடனே ரூபாயை வாங்கிக்கொண்டு சுறுசுறுப்பாய் கலியாணத்தை முடித்துவிடுவார்கள். கிழவன் கலியாணம் முடிந்ததும் கூடியசிக்கிரம் மரணகதியடைந்துவிட்டால் சுற்றத்தாரெல்லாரும் சேர்ந்துகொண்டு பெண்ணைப் பண்ணவேண்டிய கொடுமையெல்லாம் பண்ணிவிடுகிறார்கள். இக்கொடுமைகள் நிவர்த்தியாகும் பொருட்டு பாரதமாதாவைப் பிரார்த்திக்கிறேன். சகோதார்களே சகோதரிகளே விதவைப்பெண்களின் வாழ்க்கையை நல் வாழ்க்கைக்குக் கொண்டுவாருங்கள்.

---

# முகைதீன் பாட்டு.

எஸ். எஸ். முகைதீன் பிச்சை, ரங்கூன்.

(இராகம்—கமாஸ்)

"காந்திலண்டன் சேர்ந்தார்" என்ற மெட்டு.

பல்லவி.

1. மாதர் மறுமணம் மாண்புடன் புரிவீர்
மாண்புடன் புரிவீர் புரிவீர் புரிவீர் இன்றே (மா)

அனுபல்லவி.

2. நம்மன்னை பெண் துயரை
நம்நாட்டில் நின்றும் விரட்டி
நம்தேச மின்புறச் செய்குவீர்
செய்குவீர் செய்குவீர் செய்குவீர் இன்றே (மா)

3. விதவை யென்னும் பாவையை
மேன்மையா மண மியற்றி
விடுதலை யடையக் கோருவீர்
கோருவீர் கோருவீர் கோருவீர் இன்றே (மா)

4. அருந்துயரி லாழ்ந்த மாதை
ஐயமின்றி மணம்புரிய
ஐயர்களெல் லோரும் கவனிப்பீர்
கவனிப்பீர் கவனிப்பீர் கவனிப்பீர் இன்றே (மா)

5. ஆக்கமிழந்த நாட்டினை
ஆக்கம் பெறச் செய்திடுவீர்
ஆனமுஹைறதினிசை அறிவீர்
அறிவீர் அறிவீர் அறிவீர் இன்றே (மா)

# பெரியார் ஆதரவு.

மாதர் மறுமணத்தைப்பற்றி பூலாங்குறிச்சி, ஸ்ரீமான் வ. சோ. சோக்கலிங்கம் செட்டியாரவர்கள் எழுதுவது:—

மாதர் மறுமணத்தையும், அதற்கென்று ஒரு பத்திரிகை நடப்பதையும் நான் மனப்பூர்வமாக வரவேற்கின்றேன். நமது சமூகத்துக்கு இது முக்கியமான சீர்திருத்தமாகும். அவசியமான காரியமுமாகும்.

மாதர்களும் மறுமணம் செய்து கொள்ளலாமென்று பத்திரிகைகளிற் பிரசுரஞ் செய்வதால் மட்டும் பிரயோஜனமில்லை. கூடிய சீக்கிரம் நடைமுறையில் கொண்டுவரவேண்டும்.

புருஷன் இறந்து அந்தப் பெண்ணுக்குப் பிள்ளைகளில்லாதிருந்தாலும் பிறந்திறந்து போயிருந்தாலும் அத்தகைய பெண்கள் மட்டும் மறுமணஞ் செய்துகொள்ளலாமென்று ஒரு வரம்பிருக்க வேண்டுமென்பது என் அபிப்பிராயம்.

நமது பெண்கள் புருஷனை யிழந்து அதற்காக பந்தற்போடுங் காலத்தில் தாலியை வாங்கி வெள்ளைச் சேலையைக் கொடுக்காமல் பட்டுச் சேலைகளையே கட்டிவர அனுமதிக்கவேண்டும்.

ஒரு பெண் புருஷனை யிழந்துவிட்டால் மாப்பிள்ளை வீட்டார் செய்த நகை வகையறுக்களை மாப்பிள்ளை வீட்டாரே யெடுத்துக் கொள்வதென்றும் பெண்வீட்டார் கொடுத்த நகைகள், சாமான்கள் வகையறுவை பெண்வீட்டாரே வைத்துக்கொள்வதென்றும் ஏற்பாடு செய்துகொள்ளவேண்டும்.

மேற்கண்டபடி பிள்ளைகளில்லாதபெண்கள் மறுமணஞ்செய்து கொள்ளலாமென்பதையும் ஆக்ஷேபணையில்லாமல் ஒன்பது கோயில் வாசல்களிலும் ஒத்துக்கொண்டு அட்டவணை யெழுதிக்கட்டிக் கொள்ள வேண்டுமென்பதும் எனது அபிப்பிராயம்.

மாதர் மறுமணத்துக்கும் கோவிலில் பாக்கு வைத்து மாலை வாங்கி மணஞ்செய்தல் வேண்டும். இந்த நல்ல திருத்தத்தை நமது சமூகத்துச் செல்வர்களும் சாமான்யர்களும் ஒத்துக்கொண்டு கூடிய சீக்கிரம் அனுட்டிக்கவேண்டும்.

# உங்கள் நம்பர் என்ன?

குட்டிச்சாத்தன் A B C D E F etc.

ஆமா. "விதவைப் பெண்கட்கு விவாகம் செய்பலாமா கூடாதா?" அந்தக் கேள்வியை ராஜாராம் மோகன்ராய் பிறப்பதற்கு முன்பு கேட்கிறதில்லை. இப்படிப் பட்டகேள்வியைக் கேட்கும் யோசனையே ஏற்பட்டதில்லை. அப்பொழுது விதவைப் பெண்ணைத் தீயிற்போட்டுக் கொளுத்தியே தீரவேண்டு மென்று முடிவுகட்டியிருந்தனர். புருஷன் இறந்தானு! சரி.அவனுடன் சேர்த்துவைத்துக் கொளுத்து. இவ்வளவு தான் அக்காலத்து மக்களது தீர்மானம். இதை மீறி யாரோ இரண்டொருவருடைய உள்ளம் ஒரு கேள்வியை யெழுப்பியது. "விதவைப் பெண்ணுக்கு விவாகம் செய்யலாமா? கூடாதா?" என்ற கேள்வியைக் கேட்டதென்று நினைக்கிறீர்களா? இல்லை. அவர்கள் கேட்ட கேள்வியென்ன? "விதவைப் பெண்களின் உடம்பில் உயிர் இருக்கலாமா? அல்லது கொளுத்திக் கொல்லவேண்டியதுதானு?" என்பதேயாகும். இந்தச் சொப்பனத்திருவிழாவை எல்லா ஹிந்துக் குடும்பங்களிலும் பார்க்கலாம். என்னடா அனியாயம்! புருஷன் வந்தான். வாழ்ந்தான். செத்தான். இதற்காக ஒரு பெண்ணை—ஒரு மனிதப் பெண்ணை—உற்றார் உறவினர் அண்ணன் தம்பி பெற்றோர் முதலிய யாவரும் சேர்ந்து உயிருடன் நெருப்பில் போட்டுக் கொன்றார்கள். ஆஹா! என்ன இரக்கம்! என்ன கருணை! இந்த அத்தியாயம் முடிந்தது. அந்த ராஜாராம் மோகன். ஆம் அவன்தான் ராஜா. முயற்சி செய்தார். 1829-ல் சட்டம் தோன்றியது. ஒழிந்தது உடன்கட்டைப் பிசாசு. பெண்களின் உயிர் மிஞ்சியது. வைதீகர் அழுதுகொண்டு போயினர்.

ஜன சமூகம் வளர்கிறது. "விதவைக்கு விவாகம் செய்யலாமா? கூடாதா?" என்ற கேள்வி மெதுவாக ஆரம்பித்தது. அங்குமிங்குமாக ஒருவரிருவர் கேட்டுக்கொண்டிருந்தனர். சாஸ்திரங்கள் முக்கி முனங்கின. சாஸ்திரிகள் ஒப்பாரி துவங்கினார்கள். சீர்திருத்தம் தோன்றப் பார்த்தது. விழுந்தது ஒரு அடி. 1856-ல் சட்டம் பிறந்தது. விதவா விவாகம் சட்டசம்மதமென்றாய் விட்டது. இன்று 1936. சட்டம் பிறந்து 80

வருஷமாகிறது. ஜனங்களுக்குள் இந்தப் பேச்சு எழுந்து வருஷம் 100-க்கு மேலாய் விட்டது. "விதவைக்கு விவாகம் செய்யலாமா கூடாதா?" என்ற கேள்வி இப்போதுதான் மறைகிறது. விதவைக்கு விவாகம் செய்யக் கூடாதென்று யாரும் இப்பொழுது சொல்லவில்லை. சாஸ்திரம், சாஸ்திரிகள், வைதீர், செல்வர், மூடர். மூடர் யாவரும் சம்மதம் போட்டாய்விட்டது. இனி ஒவ்வொருவருடைய நம்பர்தான் பாய்ண்ட். யாரையாவது சந்தித்தால் "ஐயா! விதவா விவாக விஷயத்தில் உங்களுடைய நம்பர் என்ன?" என்ற கேள்விதான் இனிமேல் கேட்கவேண்டியது. இந்த நம்பருக்குள் வராமல் விதவைக்குக் கல்யாணம் கூடாது என்ற உழுத்துப்போன பழைய சாம்போதியை யாராவது ஆரம்பிக்கிறதாக இருந்தால் அவர்களை 1936 க்குத் தகுதியில்லை யென்று தள்ளவேண்டியது. 1829-க்கு முன் கொளுத்துகிற கம்பனி ராஜ்யம். 1854-க்கு முன் விதவைக்கு விவாகம் கூடாதென்ற கண்மூடி ராஜ்யம். 1936 ல் உயிரை வைத்துக்கொண்டு பழைய பசலிக்கதை பேசமுடியுமா? பேசினால் அந்தக் காலத்தில் பிறந்து சாகத் தவறிப்போன சாமான் இந்தக் காலத்தில் பிறந்து தவிக்கிறதென்று நினைத்துக்கொள்ளவேண்டும். வாஸ்தவந்தானே. முதன் முதலில் போர்டு கம்பனிக்காரர் ஒரு மோட்டாரைச் செய்தனர். அது குதிரைக் கோச் மாதிரி யிருந்தது. அதன் விலை 20,000 ரூபாய்க்கு மேலானது. 100 கோணல். விளக்கு கிடையாது. டாப் லொட லொடா? உருவையோ சொல்ல வேண்டாம். பார்த்தால் கண்ணைக் கழுவவேண்டும். அந்தச் சனியன் பிடித்த மோட்டார் வண்டியோடு 20,000 ரூபா தக்ஷிணை வைத்துக் கொடுத்தாலும் இப்பொழுது ஒருவன் அதில் ஏறிச்செல்ல விரும்பமாட்டான். ஐயா அந்தக் காலத்தில் அந்த மாடல்வண்டிகளிருந்த பிரியத்தினால் ஒரு பிரபு 20,000 முன் பணமனுப்பி ஆர்டர் கொடுத்தாரென்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது ஒரு மோட்டார் கார் அமெரிக்காவில் கப்பலேற்றப் பட்டதென்றும் வைத்துக் கொள்ளுங்கள். சரி கப்பல் புயல்காற்றில் அகப்பட்டுப் போனவிடம் தெரியவில்லை. 1936ல் அந்தக்கப்பல் திரும்பி சென்னைத் துறைமுகம் வந்து காரை இறங்கி போர்டு கம்பெனி ஷோரூமில் வைத்தால் அதற்கு எவ்வளவு மதிப்புண்டு. அவ்வளவுதான் 1936ல் விதவா விவாகம் செய்யக் கூடாதென்கிற

ஆசாமியின் கதியும். படைத்தவன் இந்த ஆளை 1829க்கு வேண்டிய சாமானைக்கொண்டு படைத்து போஸ்ட் பண்ணி விட்டான். அது இப்போதுதான் டெலிவரியாகி யிருக்கிறது. ஏன் சரிதானே!

இவர்களிருக்கட்டும். நம்பர் கண்டுபிடியுங்கள்!

1. பெரிய மனுஷியாகுமுன்பு விதவையான பெண்களுக்கு [மட்டும்.
2. பிள்ளை பெறாத விதவைப் பெண்களுக்குமட்டும்.
3. பிள்ளையில்லாத விதவைப் பெண்களுக்குமட்டும்.
4. 25 வயதுக்குட்பட்ட விதவைப் பெண்களுக்குமட்டும்.
5. கோத்திரம் தவறாமல் செய்யவேண்டும்.
6. சொந்த ஜாதியிலேயே செய்யவேண்டும்.
7. பாஷைக் கலப்பு கூடாது. தமிழ்ப் பெண்ணை தமிழனே செய்துகொள்ளவேண்டும்.
8. மனைவியை இழந்தவருக்குத்தான் விதவையைச் செய்ய வேண்டும்.
9. எப்படி நேருகிறதோ அப்படியெல்லாம் மணம் முடிக்க வேண்டும்
10. விதவை தீருகிறவரை கன்னிப் பெண்களை விவாகம் செய்துகொள்வதில்லை.

விளக்கெண்ணை அபிப்பிராயத்திலிருந்து மிளகாய்ப் பொடி அபிப்பிராயம்வரை இதில் அகப்பட்டிருக்கிறது. இதில் உங்கள் நம்பரென்ன?

---

ஒன்றே யுரைப்பல் ஒறுத்தீரே னும்பொறுப்பல்
என்றே மறுமணம்நம் ஏழைச் சிறுமியர்க்கு
மன்றேற்றிச் செய்து மகிழ்வாமே மற்றையர்போல்
அன்றேநாம் நாகரிகர் ஆவாமிஃ துண்மையரோ.

உற்றுரு நீருஞ்சேர்ந் துண்டுவந்தா டிக்களிக்கச்
சிற்றுடை சுற்றத் தெரியாத சிறுமியர்க்குப்
பொற்றாலி பூண்பிக்கும் புன் றொழிலா லன்னவர்நூல்
அற்றாலஃ தும்பிழையோ அன்றேல் விதிப்பயனோ?

---

# கதவைத் திறங்கள்!




சீர்திருத்தக் காரன்:— கதவைத் திறக்கமாட்டீர்களா? ஒரே வெட்டு. அடைப்பு தூளாகிறது. பாருங்கள்!

பெரியவர்:— விதவையை அடைத்துப்போட வேண்டுமென்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது.

சாஸ்திரி:— போச்சு சாஸ்திரம் மதம் ஜாதி யெல்லாம் முழுகிப் போச்சு.

---

# பத்திராதிபர் குறிப்புக்கள்.

## பெரியார் ஆதரவு.

"மாதர் மறுமணம்" முதலாவது இதழில் திருவாளர் முத்துப் பழனியப்ப செட்டியாரவர்களின் கடிதத்தை வெளியிட்டோம். இவ்விதழில் திருவாளர் வ. சொ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் கடிதத்தை வெளியிட்டிருக்கிறோம். திருவாளர் செட்டியாரவர்கள் அறுபதுக்கு மேற்பட்ட வயதுடையவர்கள். உயர்குடும்பத்தில் உதித்தவர்கள். நிறைசெல்வமும் செல்வாக்குமுடையவர்கள். இப்படிப்பட்ட தகுதியும் பெருமையும் வாய்ந்த இவர்களுடைய அழுத்தமும் ஆர்வமும் பொருந்திய ஆதரவு கிடைப்பது பரிதாபகரமான வாழ்வுக்குட் பட்டிருக்கும் பெண்கட்கு நல்வரமாகுமென்று கூறவேண்டுமா?

## மதமாற்றத்தில் உரிமை

சமீபத்தில் நடைபெற்ற இந்தியா சட்டசபையில் ஆரியசமாஜிகளின் விவாக அங்கீகார மசோதாவைப்பற்றிய விவாதம் நடந்தபோது பஜோரியா என்ற கனவான் "விவாகம் நடப்பதற்குக் குறைந்தபக்ஷம் ஒரு வருஷ காலம் ஆரியசமாஜத்தின் மெம்பராக இருக்கவேண்டும்" என்று ஒரு திருத்தப் பிரேரணையைக் கொண்டு வந்தார். எதற்காக? இஷ்டப் பட்டவுடன் சீர்திருத்த மணத்திற்காக ஆரியசமாஜத்தில் சேர்ந்துகொள்கிறார்களென்பதைத் தடுப்பதற்காகவே இந்தத் திருத்தம் சட்டத்தில் புகுத்த அவர் விரும்பியிருக்கிறார்போலும். இதற்கு சட்ட மந்திரி வெகு நயமாகப் பின் வருமாறு பதிலளித்தார்.

"ஒரு ஹிந்துப்பெண் தமது கணவனை விட்டு விலகிவிட எண்ணி இஸ்லாம் மதத்தைத் தழுவினார். கணவன் அவளுடன் இஸ்லாம் மதத்திற்கு மாறவில்லை. விவாகம் ரத்தாகி விட்டது. அப்பெண் மறுபடி ஹிந்து மதத்திற்கு மாறி வேறொரு ஹிந்துவை விவாகம் செய்துகொண்டாள். கோர்ட்டார் இந்த நடவடிக்கைகள் யாவும் சட்டரீதியானதாக உறுதிசெய்து விட்டனர். ஹைகோர்ட்டில் என்னவாகுமோ? விவாகத்துக்கு ஒன்று அல்லது

இரண்டு நாட்களுக்கு முன்பு இஸ்லாம் மதத்திற்கு மாறுபவ ரது விவாகம் சட்டரீதியான முஸ்லீம் விவாகமாக அங்கீகரிக்கப் படும்போது இதிலென்ன விருக்கிறது."

ஹிந்துவாக இதுவரை புருஷன் என்ன கொடுமை செய்தா லும் எதை முன்னிட்டும் விவாக ரத்துக்கு இடமில்லை; ஹிந்துப் பெண் துணிந்து முகமதிய மதத்தில் நுழைந்து திரும்பினால் விவாக ரத்தும் மறுமண உரிமையும் எளிதாகக் கிடைக்கின்றன வென்ப தற்கு இதைவிட வேறு சான்று தேவையில்லை! ஹிந்துக்களை ஹிந் துக்களாகவே வைத்து இந்த உரிமையை அவசியமான சந்தர்ப் பத்தில் கொடுத்தால் ஹிந்து மதத்திலுள்ளவர் மற்ற மதத்தில் புக இடமேற்படாதன்றோ?

## பெற்றமனம் பித்து.

"பெற்றமனம் பித்து பிள்ளைமனம் கல்லு" என்பது தமிழ் நாட்டுப் பழமொழி. மகாத்மா காந்தியின் மூத்தபிள்ளை அப்துல்லா காந்தியென வழங்கப்படுகிறார். அவருடைய நடத்தைகள் மிகவும் வெறுக்கத் தக்கனவா யிருக்கின்றன. அவரது அன்னை கஸ்தூரி பாய் காந்தி பின்வருமாறு கூறி வருந்துகிறார்.

> " ஒவ்வொருநாள் காலையிலும் நான் மிக பயத்தோடுதான் படுக் கையை விட்டு எழுந்திருக்கிறேன் இன்னும் என்னென்ன புதிய அவ மானமான சங்கதிகளை பத்திரிகைகள் கொண்டுவரப் போகின்றனவோ என்று. சிலசமயங்களில் நீ எங்கு இருக்கிறாயோ நீ எங்கே தூங்குகி றாயோ நீ என்ன சாப்பிடுகிறாயோ என்று ஆதங்கப்படுகிறேன். ஒரு கால் நீ விலக்கப்பட்ட ஆகாராதிகளை சாப்பிடுகிறாயோ என்னவோ என்ற சிந்தனையும், இன்னும் இதுபோன்ற மற்ற சிந்தனைகளும் உண் டாகி எனக்கு இராக்காலங்களில் தூக்கமே வருவதில்லை. உன்னை நேரிற் சந்திக்கின்றாற்போல பல தடவைகள் உணருகிறேன். ஆனால், உன்னை நான் எங்கு காண்பதென்று தெரியவில்லை. நீ எனதுமூத்த மகன். கிட்டத்தட்ட வயதும் உனக்கு 50 ஆகிறது.நீஎங்கே என்னைத் துன்புறுத்தி விடுவாயோ என்று உன் அருகில் வருவதற்குக்கூட பயமாக இருக்கிறது."

பிள்ளை மதம் மாறினாலும் தம்மைவிட்டுப் பிரிந்தாலும் ஒரு தொடர்பு மில்லாவிட்டாலும் பெற்றமனம் வருந்துகிறது. பிள்ளை

யின் போக்கு வயது ஐம்பதுக்கு மேலும் "மைனர்" திருவிழா வில் புகுந்திருக்கிறது! பாவம்!

## இளைப்பில்லை

செப்டம்பர் 27ல் அம்பா சமுத்திரத்திற் கூடிய செங்குந்த மாதர் மகாநாட்டில் தலைமை வகித்த திருநெல்வேலி ஸ்ரீமதி. மீனாக்ஷி யம்மையார் நிகழ்த்திய பேருரையின் பகுதி கவனிக்கத் தக்கது:—

"பழைய காலத்தில் பெண்கள் பல உரிமைகள் உடையவர்க ளாய் கௌரவமாக மதிக்கப்பெற்று வந்திருந்தார்கள். இடைக்காலத் தில் ஆடவர்களின் சுயநலங் காரணமாக நமக்குரிய சுதந்திரங்கள் மறுக்கப்பட்டு சாஸ்திரங்களும், வியாக்கியானங்களும் எழுந்தன. உல கத்திலுண்டாகும் எல்லாவித தீமைக்கும் பெண்களே காரணமென் றும், அவர்களே மிகக் கொடியவர்களென்றும் பலவாறு சொல்லப் பட்டு, ஆலகால விஷத்தையும் நம்பலாம், ஆற்றையும் பெருங் காற்றை யும் நம்பலாம், ஆனால் மாதர்களை மாத்திரம் நம்பலாகாது என்று பிர சாரஞ் செய்ய செய்யுட்களும் எழலாயின. பொருத்தமற்ற அவதூறான இக் கொள்கையைச் சிறிது ஆராய்வோம். குண ஒழுக்கங்களில் ஆண் களைக் காட்டிலும் பெண்கள் எவ்வகையில் பின்னடைந்திருக்கிறார் கள்? கற்பு, பொறுமை, சகிப்புத்தன்மை, கள்ளுண்ணாமை, சிக்கனம் முதலிய எல்லா நற்குணங்களுக்கும் உறைவிடமாயுள்ளவர்கள் பெண் மக்களே யன்றோ? அதனாலேயே பெண்கள் நல்லார் எனப்பட்டார். கட் குடித்தலும், வீணை லாகிரிப் பொருள்களை உபயோகித்தலும் ஆண்மக்களிடத்திலா? பெண்மக்களிடத்திலா? பலவித கஷ்டமும் தொந்தரவும் தரத்தகுந்த பல குழந்தைகளை வைத்து உற்சாகத் தோடு வளர்த்து வரும் சகிப்புத் தன்மை ஆண்மக்களுக்குண்டா? இப்படிப்பட்ட போற்றத்தகுந்த பல நற்குணங்களும் ஒருங்கே வாய்ந் துள்ள தாய்மார்களை ஆடவர்கள் இழித்துக்கூறுவதேனோ?"

பழங்காலத்தில் பெண்கள் உயர்வு பெற்று வாழ்க்கை நடத்தி யிருக்கின்றனரென்பதைப் பல நூல்களிலிருந்து காண்கிறோம். இடைக் காலத்தில்தான் இப்படிப்பட்ட வேற்றுமை உணர்ச்சியும், இழிபுணர்ச்சியுங் கொண்டிருக்கின்றனர். அதன் பயனைத்தான் நாமும் சுதந்திரமிழந்து இனிய வாழ்வுக்கும் பயன்படாமல் மனிதர்கள் உள்ளத்தில் இன்ப வாட்சி மிகுந்துவிட்டதென்று கூற

வேண்டியதில்லை. இப்பரிதாபகரமான நிலைமை மாறும் குறி தோன்றி வருகின்றது.

## பர்தா வழக்கம்.

ஹிந்துப் பெண்களின் உரிமை பல வகையில் பாதிக்கப்பட்டிருப்பதைப் போல் முஸ்லிம் பெண்கட்கு இல்லை யென்பது ஒரு புறமிருக்க, அவர்களுள் பெண்கட்குப் பர்தா முறை ஏற்பட்டிருப்பது மிகவும்வருந்தத் தக்கதும் ஒதுக்கத்தக்கதுமாகும். பெண்களின் உருவத்தை ஆண்மக்கள் பார்ப்பதால் அபாயமேற்படுமென்ற கருத்தில்தான் இம்முறை கையாளப்படுகிற தென்பதில் சந்தேகமில்லை. இதை ஆழ்ந்து யோஜித்தால் ஆண் மக்கள் மிகவும் அவமானப்படவேண்டியிருக் கிறதன்றோ? அழகான கிளியின் உண்மை உருவத்தை பூனைகளின் முன்பு காட்டக்கூடா தென்றால் அதன் கருத்தென்ன? ஆண் மக்கள் உயர்ந்த குணமுள்ளவர்கள்—ஒழுக்கமுடையவர்கள் என்ற நம்பிக்கை இல்லை யென்பதே இதற்குக் காரணமன்றி வேறென்ன? பர்தா முறையை ஒழிப்பதற்குப் பெருமுயற்சி யெடுக்கப்படவேண்டும். இதனால் பெண் மக்கள் ஆற்றாதபிறவி என்ற இழிபும் சூட்டப்பட்டிருக்கிறதென்பது கவனிக்கத்தக்கதாகும். இருபாலாருக்கும் இம்முறையில் பெருமை யேற்படுதற் கில்லையன்றோ? பெண்கள் முன்னேற்றமே இதனால் தடைப்படுகிறதென்று ஜனாப் முகமது காதர் ஹுசைனி என்னும் கனவான் சமீபத்தில் பின்வருமாறு கூறுகிறார்:—

"ஒரு மனிதன் இவ்வுலகத்தில் பிறந்தது முதற்கொண்டு அவனுக்குச் சரியான அறிவு வரும் வரை அவனுடைய குணத்திற்கும், கல்விக்கும் பெண்டிர்களே பெரும்பாலும் காரண பூதர்களாய் அமைந்திருக்கின்றனர். திருக் குர்ஆனிலும் பெண்களுக்கும் ஆடவர்களைப் போன்று உரிமைகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. இதுகாலை இஸ்லாமிய நாடாகிய துருக்கி முன்னேற்றமடைந்திருப்பதன் காரணம் அந்நாட்டுப் பெண்டிர்கள் கல்வியறிவு பெற்றவர்களாய் விளங்குவதே. இந்நாட்டுப் பெண்களுக்குத் தாய்மொழிப் பயிற்சி யளிப்பதோடு ஆங்கிலக்—கல்வி புகட்டுவதும் அவசியமாகும். பெண்கள் கல்வியறிவு பெறுவதற்கு முஸ்லீம் சமூகத்தில் கோஷாமுறை பெரிதும் தடையாக இருக்கின்றது. பர்தா முறையை அறவே ஒழிக்க மனமில்லா

விடினும் விவாகம் செய்துகொடுக்கப்பட்ட பின்னரேனும் தளர்த்தி விடலாம். அவ்வாறு செய்தால்தான் அவர்கள் மற்றவர்களுடன் கலந்து அவர்களுடைய அபிப்பிராயங்களை அறிந்து கொள்ளவும் இன்னவர்களின் அபிப்பிராயங்களைப் பிறர் அறிந்துகொள்ளவும் சௌகர்யம் ஏற்படும். அப்பொழுதுதான் பெண்களிடையே ஒற்றுமைத் தன்மை ஏற்படும்; பர்தா முறையினால் பெண்களின் சுகாதாரத்திற்குப் பெரிதும் பங்கம் விளைகிறது என்பதை நான் உறுதியாகக் கூறமுடியும்.''

முஸ்லீம் சகோதரர்களும் சகோதரிகளும் கவனித்தல் அவசியமாகும்.

---

## மாதர் மறுமணப் பிரசாரத்திற்கு உதவி.

பெண்மக்களை அடிமையாக்கி துயர்க்கடலில் கிடத்தியிருப்பதிலிருந்து நல் வாழ்க்கைக்கு உயர்த்தும் பணியில் ஈடுபடும் அன்பர்களுக்கு ஒரு விண்ணப்பம். பின்வரும் விஷயங்களை விசாரித்துக் கிடைத்தவரையும் அறிவிக்க வேண்டுகிறேன்.

1. தமிழ்நாட்டில் விதவாவிவாகம் செய்வதில்லையென்ற சமூகங்கள் எவை?
2. அவர்களின் ஜனத்தொகை (உத்தேசமாக) எவ்வளவிருக்கும்?
3. அந்த சமூகத்தார் எந்தெந்த தாலூகாவில் வசிக்கிறார்கள்?
4. அந்த சமூகங்களில் சீர்திருத்த விருப்பமுள்ளவர்களின் விலாசம்பெயர்?
5. இந்த சமூகங்கள் ஒவ்வொன்றிலும் புருஷன் இறந்தபின்னர் பெண்ணை விதவையாக்க என்னென்ன மாதிரியான சடங்குகள் செய்யப்படுகின்றன?
6. தமிழ்நாட்டில் விதவா விவாகம் செய்துகொண்டுள்ள தம்பதிகளின் போட்டோ, அவர்களின் வயது, கல்யாணம் நடந்ததேதி, அவர்களுடைய சுருக்கமான சரித்திரக்குறிப்பு ஆகியவை தேவை. கிடைத்தவரை அனுப்பித்தர வேண்டுகிறேன்.
7. புதிதாக புருஷனிறந்து விதவையாகிற செய்திகளையும், விதவா விவாகம் நடைபெறுகிற செய்திகளையும் தெரிவிக்க வேண்டுகிறேன்.

காரியதரிசி,

மாதர் மறுமண சகாய சங்கம், காரைக்குடி.

# நிகழ்ச்சிகள்

## பெண்ணின் துணிவு.

இங்கிலாந்திலிருந்து நியூஸிலாந்துக்குச் சென்றிருப்பவர்களைக் காட்டிலும் விரைவாகப் பறந்து சென்று பெயரை நிலைநாட்ட மிஸ் ஜீன்பாட்டன் என்ற பெண் முன்வந்திருக்கிறார். இந்த மாதரசி அக்டோபர் 7உ கராச்சியில் இறங்கி அடுத்தநாள் புறப்பட்டிருக்கிறார். 10,000 அடி உயரத்தில் ஆகாய விமானத்தில் பறந்து செல்கிறார். காற்று பலமாக இருந்ததால் கீழே இறங்கமுடியாமல் ஒரே அடியாக 1425 மைல் தூரம் பறக்க வேண்டியிருந்ததாம். அவர் ஒரு நிருபரிடம் பின்வருமாறு கூறியிருக்கிறார்:— "பஸ்ராவிலிருந்து அட்ரியாடிக் வழியாகப் பறந்து செல்லும் பிரயாணம் மிகச்சிரமமானது. நான் இதுவரையில் 63 மணி நேரம் பறந்திருக்கிறேன். லண்டனிலிருந்து பிரேஜிலுக்குப் பறந்துசென்ற விமானத்தில் இப்போது செல்கிறேன்"

## வீரப்பெண்

முதுகுளத்தூர் தாலூகா கண்ராஜபுரத்தில் ஒரு முஸ்லிம் மாதும் ஒரு நாடார் மாதும் வெல்லம் விற்கப்புறப்பட்டனர். தேவர் வகுப்பைச் சேர்ந்த ஒருவன் சந்தித்து அன்புடன் பேசிக் கொண்டு உடன் தொடர்ந்தான். அரவமற்ற ஒரு இடத்தில் திடீரென்று பாய்ந்து நாடார் பெண் காதிலிருந்த நகையைப் பிய்த்துக் கொண்டு ஓட ஆரம்பித்தான். காதில் ரத்தம் வழிவதையும் கவனிக்காமல் இரு பெண்களும் விரட்டிப்பிடிக்க முயன்றனர். மூன்று மயில்தூரம் விடாமல் ஓடினர். கரிசல் குளம் ஊர் நெருங்கியது. திருடன் நகையை எறிந்துவிட்டு ஓடிமறைந்து விட்டான். அவ்வழியாக வந்த மணி::காரர் நகைகளை எடுத்துப் பெண்களிடம் கொடுத்தார். "அந்தத் திருடனைப் பிடிக்காமல் அவிழ்ந்த தலைமயிரை முடிக்கப் போவதில்லை" என்று சபதமிட்டாள், நகையையும் வாங்க மறுத்து விட்டாள். உடனே அப்பெண் சாயல்குடிக்குச் சென்று அங்கு முகாம் செய்திருந்த ஜில்லா சூபரிண்டண்டிடம் தெரிவித்தாள். அவளுடைய துணிவைப் பெரிதும் பாராட்டினர். விசாரணை நடக்கிறது.

## விதவைகள் உபகார நிதி

சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் மனைவிமார் விதவையான பிறகு அவர்கட்கும் அவர்களது குழந்தைகட்கும் பாதுகாப்பு செய்ய சிலோன் சர்க்கார் ஒரு நிதி சேர்த்துவருகிறார்கள். சர்க்கார் சிப்பந்திகள் மட்டுமே இதில் பணம் போட அனுமதிக்கப்படுகின்றனர். இனி கொழும்பு நகரசபை சிப்பந்திகளின் மனைவிமாருக்கும் இவ்வசதியிருக்கும் பொருட்டு நகரசபையார் ஒரு நிதியைத் துவங்குவார்கள் என்று தெரிகிறது.

## தம்பதிகளுக்குப் பாராட்டு

3—10—36-ல் திருநெல்வேலி தாயம்மை பெண் பாடசாலையில், சமீபத்தில் கலப்பு விதவா விவாகம் செய்துகொண்ட தம்பதிகளைப் பாராட்டும் பொருட்டு ஒரு கூட்டம் நடந்தது. அதில் மணமகள் ஸ்ரீமதி பெ. ஆழ்வாரம்மாள் விதவைகளின் கஷ்ட நிலையை விளக்கி ஓர் பிரசங்கம் செய்தார்.

## இன்னுமா உடன்கட்டை !

ஆக்ராவில் ஹாரிபியாரி என்னும் பெண்ணின் கணவன் இறந்துபோனான். அவள் உடன்கட்டை ஏற்றப்பட்டாள். அந்தக் காட்சியைப் பார்க்க ஏராளமான ஜனங்கள் கூடிவிட்டனர். இறந்த கணவன் பிரேதங் கொண்டு போகப்பட்ட பாடையிலேயே அவளும் கட்டப்பட்டாள். சுடுகாட்டில் அவிழ்த்துபிணத்தினருகில் பெண்ணை உட்காரவைத்துத் தீயை வைத்துக் கொளுத்தினர். இதை ஒரு போலீஸ்காரன் கண்டு தடுத்தான். அவனைத் துரத்திவிட்டனர். உதவிக்குப் போலீஸகாரர் பலரை அழைத்துக் கொண்டு வருவதற்குள் பெண் சாம்பலாகி விட்டாள். இதற்குக் காரணராயிருந்த ஒன்பது பேர்கள்மீது வழக்குத் தொடரப்பட்டு 6 பேருக்கு 3 வருஷக் கடுங்காவல் தண்டனையும், 3 பேருக்கு 4 வருஷக் கடுங்காவல் தண்டனையும் விதிக்கப்பட்டன.

## மருமகளுக்குச் சூடு !

11-வயதுள்ள தனது மருமகளை பழுக்கக் காய்ச்சிய இரும்பினல் சூடு போட்டு மற்றும் பலவித கொடூரமான இம்சைகளைச் செய்த காரணத்தினல் ராஜீயபீபிஎன்றகல்கத்தாஸ்திரீக்கு 2½ வருஷக் கடுங்காவலும்உதவியாக இருந்தஅவளது புருஷனுக்கும்மகனுக்கும் 3½ மாத கடுங்காவலும் விதிக்கப்பட்டது. ராஜீய பீபியை அவளுக்கு விதிக்கப்பட்ட சிறைவாச காலத்திலே 3 மாத காலம் ஏகாந்த சிறைவாசம் அனுபவிக்கும்படி உத்தரவிடப்பட்டது.

---

## விதவைப் பெண் தேவை.

(1) வயது 18, நல்ல லக்ஷணம், போதுமான படிப்புள்ள சுமார்த்தப் பிராமண வாலிபனுக்கு விதவைப்பெண் தேவை. பெண் நாகரீகமுள்ளதாகவும், எழுதப்படிக்கத் தெரிந்ததசகவும் இருக்கவேண்டும். பிராமணப் பெண்ணாகத்தானிருக்க வேண்டுமென்பது கட்டாயமில்லை.

(2) வயது 30, 30 ஆயிரம் ரூபாய் சொத்துடையவர். நாட்டுக்கோட்டை செட்டியார். முதல் தார மனைவியில்லை 24 வயதிற்கு மேற்படாத நாகரீகமுள்ளவிதவைப்பெண் தேவை. சொற்ப படிப்பிருந்தாலும்போதும்.

இதி சம்பந்தமான விஷயங்கள் யாவும் ரகசியமாக இருக்கும் நேரிலும் கடித மூலமும் தெரிவிக்கலாம்.

சோ. முருகப்பா,
காரியதரிசி, மாதர் மறுமண சகாய சங்கம், காரைக்குடி.

---

## பிரதிகள் தீர்ந்துவிட்டன.

"மாதர் மறுமணம்" ஆவணி புரட்டாசி (1, 2) இதழ்கள் செலவாகிவிட்டன. இன்று முதல் சேருகிற சந்தாதார்கட்கு ஐப்பசி (3) இதழிலிருந்து அனுப்பப்படும்.

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| மலர் 1 | காரைக்குடி<br>தாது-௵ கார்த்திகை-௴ | இதழ் 4 |
|---|---|---|

## கைம்பெண் துயரம்.

(திருவாளர் வி. சுடலைமுத்துப் பிள்ளை.)

[தாய் தந்தையரை இளவயதிலேயே இழக்க நேர்ந்த ஓர் சிறுமி அநாதையாயினள். அவள் சிறிது காலத்திற்குப் பின் பக்குவமடைந்தாள். அவளை அவ்வூரவர்கள் செல்வந்தரான ஒரு கிழவருக்கு மணவினை செய்யத் தீர்மானித்து, அதற்கான ஏற்பாடுகள் பலவற்றையுஞ் செய்து முடித்தனர். கிழவருக்கு மணநாளின் தலைநாளே ஜுரம் கண்டிருந்தது. அது, பிற்றைநாளில் வலுக்கொண்டது. கலியாணம் நின்றுவிடுமோ என்று ஐயுறவுகொண்ட ஊரவர்கள், நடுக்கத்துடனிருந்த ஆசாரியரின் உபதேசத்தைக் கேட்டு அவசரத்தில் மணவினையை நடத்திவிட்டனர். திருமங்கல்யம் தரிக்கும் சமயத்திற்றானே கிழவரின் உயிரும் பிரயாணப்பட்டுவிட்டதால் அப்பொழுதே அம் மணமகரான கிழவருக்குப் பிணச்சடங்குகளெல்லாம் நடந்தன. ஒன்றும் அறியாத அப்பெண்ணும் பெருந் துக்கங்களுக்கெல்லாம் ஆளாயினள். ஆகவே அவள் நடந்தனவற்றை நினைக்குந்தோறும் சகிக்க ஏலாதவளாய் எடுத்துக் கூறுவதாகும் இப்பாடல்கள்.]

(1) 'கண்ணே கனிமொழியே கற்பகம்வாழ் பூங்கிளியே
வண்ணத் திருமணியே வாழ்க' வென வாழ்த்தின நீ
மண்ணோடு மண்ணாக மாண்டொழிய இந்நாளில்
புண்ணீர் விழிசொரிய—என் கண்ணம்மா !
புலம்பித் தவித்தேண்டீ !

(2) கன்னிப் பருவமதில் கலியாணம் பேசியென்னைப்
பன்னக் கிழவனுக்குப் பலிகொடுத்த நாள்முதலாய்
இன்னலும் ஒன்றிரண்டோ எத்தனையோ நான்அடைந்தேன்
தன்னந் தனியானேன்—என் கண்ணம்மா!
தழலாய் எரிந்தேனடீ!

(3) என்னைப் படைத்தவனே என்கை நழுவவிட்டால்
பின்னை மனிதர்துணை பேசுதற்கும் ஒன்றுண்டோ
துன்னும் பலகோடி துன்புகளுக் காளாகச்
சின்ன மனிதரிவர்—என் கண்ணம்மா!
செய்தபழி நீங்கிடுமோ!

(4) மாலை அளிக்கவந்த மாப்பிளையின் அங்கமெல்லாம்
சால நடுநடுங்கிச் சன்னியுறும் போதினிலே
நாலு பெயரவரை நன்கணைத்தே என்கழுத்தில்
தாலி முடித்தனரே—என் கண்ணம்மா!
சதிகாரப் பாவிகளே!

(5) தாலி கழுத்திலிட்டார் சவத்தையொரு கட்டிவிட்டார்
நாலுகைம் பெண்களெனை நாய்ப்பிடியாய்க் கட்டிலதன்
காலுக் கிடைகிடத்திக் கைகால் முடக்கிவைத்தே
ஓலமிட்டுத் தாலியினை—என் கண்ணம்மா!
ஒட்டஅறுத் தாரடியே!

(6) வயிறும் எரியுதடி வாயுலர்ந்து போச்சுதடீ
உயிருஞ் சுமையாக உலகுவேம் பாச்சுதடீ
வெயிலிற் புழுவானேன் வெந்து நூடித்தேனடீ
அயனார் விதியிதுவோ—என் கண்ணம்மா!
ஆர்செய்த பாவமடீ

(7) மனிதர் துணையெனக்கு வாய்த்ததெலாம் போதுமடீ
அநியாயம் இப்பிறப்பில் ஆர்க்குமே செய்தறியேன்
சனியா யுறவினர்கள் சதிசெய்த காரணத்தால்
மனமாழ இந்தஇடி—என் கண்ணம்மா!
வந்து விழுந்ததடீ!

(8) கடனைச் செயுமுறையோ! கரிதோயத் தும்பெரித்த
சுடுகாட் டருங்கோடித் துணியொன் றெனக்களித்தார்
உடையினை மாற்றிநகை ஒக்க உரிந்துவிட்டார்
சடைபின்னல் போச்சுதடீ—என் கண்ணம்மா!
தலைமொட்டை யாச்சுதடீ!

(9) பெற்றோர் சகிப்பாரோ பெண்பிறவி யானெடுத்து
வற்றாத்துயர்க் கடலுள் மனந்துடித்து மாழ்கின்றேன்
கற்றோர் விரும்பாத கண்ணொழிக்க இக்கொடுமை
தெற்றுதிந் நாடொழிந்தே—என் கண்ணம்மா!
சிறப்புறுவ தெந்நாளோ!

(10) யாரோ எனைமணந்தார்? யாருக்கே மாலையிட்டேன்?
சாரப் பிணமொன்றைச் சாத்திவைத்துத் தாலியதை
ஊரார் முடித்தற்கோ உடன்கட்டை ஏற்றாமல்
தீரா எரிவைத்தார்—என்றாயே!
தினமெரிய நின்றேனடீ!

(11) தந்தை யிழந்தெனது தாயிழந்து தங்குவதில்
சிந்தை கலங்குற்ற சிறியேனை ஊரவர்கள்
நிந்தைக் குறவாக்கி நேர்வழியில் முள்ளுமிட்டார்
நொந்து கழிந்தேண்டி—என் கண்ணம்மா!
நூலும் இழந்தேண்டி!

(12) நீடும் ஜநவாழ்வை நின்றுதலை தாங்குபவர்
ஆடவரும் பெண்டிரும் ஆவார் இருவருமாம்!
தேடரிய பெண்டிரும் செத்தொழிந்த பின்னெதற்கோ
ஆடவர்கள் அவ்வாழ்வை—என் கண்ணம்மா!
ஆக்கமுறக் கொண்டனரே!

(13) தஞ்ச மெனவிருக்குந் தையலரை ஆடவர்கள்
நெஞ்சிரக்கங் கொண்டு நிலைநிறுத்த எண்ணாரோ?
நெஞ்சிரக்கங் கொண்டு நிலைநிறுத்த என்னுவரேல்
வஞ்சத் தனிநீதி—என் கண்ணம்மா!
மங்கையர்க்குண் டாக்குவரோ!

(14) ஊருக் கமங்கலமாய் உள்வீட்டிற் பாதகியாய்
யாருக்கும் வேண்டாத இன்னல்பெறும் பாவியெனப்
பாரிற் பழிசுமந்து பதங்குலைய நின்றேனடீ!
தேரும் வழிகாணேன்—என்றுமே!
திகைப்புற்றுப் போனேனடீ!

(15) நால்வர் இளம்பெண்கள் நகையிட்டு வாழ்ந்திட யான்
வாலை யறுத்துவிட்ட வானரம்போல் நிற்பேனோ?
தோலில் மனிதருக்குத் தோன்றுணர்ச்சி யுண்டானால்
கேலித் தொழிலிதனை—என் கண்ணம்மா?
கேடுபெறக் கொள்வாரோ!

---

## ராஜா ராம் மோகன் ராய்.

திருச்சி கே. வி. எஸ். வாஸ், பீ. ஏ. (ஆனர்ஸ்).

[A Series of sketches on the life and career of RAJA RAM MOHUN ROY specially compiled by the author for Mathar Marumanam.]

### அத்தியாயம். 3.

### ஸிவில் சர்விஸில் ஸேவை.

தந்தையின் மனம் புண்படுமேயென்ற கவலையிலிருந்து விடுபட்ட ராம் மோகனர் ராம்காந்தரின் மரணத்திற்குப் பிறகு காசியைவிட்டு வங்காளத்தின் தலைநகரமான மூர்ஷிதாபாத்தை யடைந்து சமூகச் சீர்திருத்தப் பிரசாரத்தில் தீவிரமாக ஈடுபடவாரம்பித்தார். அவர் பாரஸீக பாஷையில் விக்ரக ஆராதனையைப் பலமாகக் கண்டித்து ஓர் வியாசத்தை வெளியிட்டார். அந்த வியாசம் ராம் மோகனரின் இளமைப்பருவ மனோபாவத்தைத் தனியாக எடுத்துரைப்பதால் அதி முக்கியமானதோர் தஸ்தவேஜாகும். அதன் சாராம்சம் வருமாறு:—

மண்ணுலக வாழ்க்கையில் இன்புற்றிருக்கவும், மானிடப் பிற

யியிலிருந்து விடுதலையடைந்து விண்ணுலகேகவும், குறிப்பான பல கர்மாக்களைச்செய்வதற்காகவுமே மனிதர்களைக் கடவுள்படைத்திருக்கின்றாரென்பது சில மதத்தினர்களின் அபிப்பிராயமாக இருக்கின்றது. தவிர, ஒவ்வொரு மதத்தினரும் தங்களுடையதுதான் உண்மையான மதமென்றும், இதர மதத்தைப் பின்பற்றுகின்றவர்களெல்லாம் இறுதியில் நரகத்தையே யடைவார்களென்றும் நம்புகின்றார்கள். மத சித்தாந்தங்களின் வேறுபாடுகளுக்குத் தகுந்தாற்போல் மனித வர்க்கம் அனேக பிரிவுகளாகப் பிரிந்திருந்தும், கருணைக்கடலான கடவுள் ஒளி, உஷ்ணம், பருவம், மழை, தேகாரோக்யம், முதலியவற்றை அனைவருக்கும் பொதுவாகவே அளித்திருக்கின்றார். இருள், குளிர், நோய், வலி, முதலியவற்றால் எல்லோருக்கும்சமமான அளவு துன்பங்களே ஏற்படுகின்றன. எந்த மதத்தைச்சேர்ந்தவராக இருப்பினும்உலகத்தின் சுகதுக்கங்கள் அனைவருக்கும் பொதுவாக இருக்க, பலவகை சித்தாந்தங்களினால் மனித வர்க்கம் பல சிறு கூட்டங்களாகப் பிரிவது பகையையும் பொறாமையையுமே கிளப்பிவிடுவதாயிருக்கின்றது.

பிராமணனாய்ப் பிறந்தவன் தான் செய்யும் ஒவ்வொரு கர்மாவும் ஆண்டவனால் ஆக்ஞையிடப்பட்டவைகளென்று நம்புகின்றான். அதுபோலவே இஸ்லாமியர்கள் திரு குர்ஆனை ஈச்வர வாக்காகக் கருதுகின்றனர். பிராமணர்கள் விக்ரக பூஜையைப் பிரதானமான மத அம்சமாகக் கொண்டிருக்க "விக்ரக பூஜையிலீடுபட்டிருப்பவர்களைக் கொல்லுங்கள்; அவர்களை மதப்போரில் வென்று கைதிகளாக்குங்கள்!" என்று திரு குர்ஆன் உரைப்பதாக இஸ்லாமியர்கள் சாற்றுகின்றனர். இந்தக் கட்டளையை நிறைவேற்ற இஸ்லாமியர்கள் இந்தியாவிலே தீவிரமான முறைகளையும் கையாண்டிருக்கின்றனர். ஒன்றுக்கொன்று முரணான மேற்படி இரு கொள்கைகளும் ஒரே கடவுளின் கட்டளையாக இருக்கமுடியுமா? அல்லது, மதத்தலைவர்களின் பித்தலாட்டமாக இருக்கவேண்டுமோ? திடசித்தமும் தூய்மையான இருதயமும் உடையவர்கள் இரண்டாவதையே கூறுவார்கள்.

பொதுவாக மனிதவர்க்கத்தை நான்கு பிரிவுகளாக நாம் பிரிக்கலாம். முதலாவது ஏமாற்றும் கோஷ்டியார். இவர்கள் ஜனங்

களைத் தங்கள் பக்கமாகச் சேர்த்துக் கொள்ளுவதன் நிமித்தம் பொய்யான சித்தாந்தங்களைக் கடவுளின் ஆக்ஞைகளெனச் சொல்லி வெளியில் பிரசாரம் செய்கின்றனர். இரண்டாவது கோஷ்டியார் ஏமாறுகின்றவர்கள். இவர்கள் முதல் கோஷ்டியாரின் பித்தலாட்டங்களை முழுவதும் நம்பி அவைகளைப் பின்பற்றுகின்றவர்கள். தாம் ஏமாற்றமடைந்ததுடன் நில்லாமல் பிறரையும் ஏமாற்ற முயற்சிப்பவர்கள் மூன்றாவது கோஷ்டியார். நான்காவது கோஷ்டியார் தான் கடவுளின் கடாக்ஷத்தினால் கண்மூடித்தனமான கொள்கைகளைக் கேட்டு ஏமாறாமலிருப்பவர்கள். அவர்கள் பிறரையும் ஏமாற்ற முயற்சிப்பவர்களல்ல!

ராம்மோகனரின் மேற்படிவியாசம் சமூகத்தில் பெருத்தகிளர்ச்சியை உண்டுபண்ணி விட்டது. அடுத்தாற்போல் "அனேக மதங்களைப்பற்றிய சிந்தனைகள்" என்ற தலைப்புடன் ராம் மோகனர் மற்றொரு வியாசத்தை வெளியிட்டார். அதில் முகமது நபி (ஸல்) அவர்களைப் பரிகாஸமாகத் தாக்கியிருந்தமையால் ராம் மோகனருக்கும் இஸ்லாமியர்களுக்கு மிடையே மனக்கசப்பு உண்டாயிற்று. இக்காரணத்தை முன்னிட்டே ராம்மோகனர் மூர்ஷிதாபாத்தை விட்டு கல்கத்தாவிற்குச் செல்லவேண்டிய தாயிற்றும். இதற்குப் பிறகு தான் ராம்மோகனர் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் சேவையில் ஈடுபட வாரம்பித்தது. அவர் எந்த வருடம் உத்தியோகத்திலமர்ந்தாரென்பது நமக்கு நிச்சயமாகத் தெரியாது. எனினும் அவரால் மொழிபெயர்க்கப்பட்ட "கேனோபநிஷத்" என்ற சிறு நூலை அவருடைய தலைமை உத்தியோகஸ்தராயிருந்த மிஸ்டர். ஜான் டிக்பி என்ற ஆங்கிலேயர் சீமையில் வெளியிட்ட பொழுது அதனுடைய முகவுரையில் பின்வருமாறு பிரஸ்தாபித்திருப்பதைக் கொண்டு நாம் ஒருவாறு ஊகிக்கலாம்:—

"ராம்மோகனர் வங்காளத்தைச் சேர்ந்த ஓர் கௌரவமான பிராமணர். அவருடைய ஞானம் அபாரமானது. சம்ஸ்க்ருதபாஷை ஒன்றில் மட்டுமின்றி பாரஸீகத்திலும், அராபிக் மொழியிலும் ஆச்சர்யப்படத்தக்க பாண்டித்ய முடையவர். எதையும் சீக்கிரமாக கிரகித்துக் கொள்ளும் சக்தி அவரிடம் அதிகமுண்டு. பிறமதத் துவேஷத்திலும் சொந்த ஜாதியிலுள்ள மூடப்பழக்க வழக்கங்களிலும்

இளமையிலிருந்தே அவருக்கு அருவருப்பு ஏற்பட்டு விட்டது. அவர் தமது இருபத்திரண்டாம் பிராயத்தில் ஆங்கிலம் பயில வாரம்பித் தார். ஐந்துவருடங்களுக்குப் பிறகு [1801-ல்] அவரை நான் சந்தி த்த பொழுது பொதுவிஷயங்களைப்பற்றி பிறர் அறிந்துகொள்ளக் கூடிய அளவு சுமாராக ஆங்கிலத்தில் பேசக் கற்றுக்கொண்டிருந் தார். நான் கலெக்டராக இருந்த ஜில்லாவில் வரிவசூல் செய்யும் பிரதம சுதேசி உத்தியோகஸ்தராக [திவானக] ஐந்து வருட காலம் அவர் சேவைசெய்தார். என்னுடைய கடிதப் போக்குவரத்துகளை கவனமாகப் படித்தும், பல ஐரோப்பிய கனவான்களுடன் நேரி லும் கடிதமூலமாகவும் பழகியும், ஆங்கிலத்தில் அவர் அபாரத் தேர்ச் சியடைந்து விட்டார். அவர் ஆங்கிலப்பத்திரிகைகளை அடிக்கடி சிரத்தையுடன் படிப்பதுண்டு.

ராம் மோகனருக்கும் மிஸ்டர் டிக்பிக்கும் எழுத்து மூலமாக ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டிருந்த தென்றும், அந்த ஒப்பந்தத்தில் ஐரோப்பிய ஸிவில் உத்தியோகஸ்தர்களி லொருவரும் ராம்மோக னரை நிற்கவைத்துப் பேசலாகாதென்று (இந்திய ஸிவில் உத்தி யோகஸ்தர்கள் ஐரோப்பிய ஸிவில் உத்தியோகஸ்தர்களிடம் மரி யாதையாக நின்றுகொண்டே பேசவேண்டுமென்பது இக்காலத் திய வழக்கமாக இருந்தது. இந்தியர்களுக்கு ஐரோப்பியர்களின் முன்னிலையில் ஆசனங்கள் கொடுக்கப் படுவதில்லை) குறிப்பிடப் பட்டிருந்ததென்றும் சொல்லப் படுகின்றது. ஆனல், இந்த ஒப் பந்தத்திற்கு ஆதாரங்களொன்றையும் காணேம். எனினும் மிஸ்டர் டிக்பி ராம்மோகனரை மிகுந்த மரியாதையுடன் நடத்தி வந்தா ரென்பதற்கு வேறு பல அத்தாட்சிகள் நமக்குக் கிடைத்துள்ளன.

ராம் மோகனர் ரங்பூரிலிருந்து கொண்டு ஐந்துவருட காலம் ஸிவில் சேவை செய்தார். இங்குதான் அவர் தமது கக்ஷிக்கு சகாக்களைத் திரட்ட வாரம்பித்தது. அவர் விக்ரக ஆராதனையைக் கண்டித்து அடிக்கடி ரங்பூரில் பிரசங்கம் செய்வார். அதைக் கேட்க திரளான ஜனங்கள் கூடுவது வழக்கம். ராம்மோகனருக்கு விரோதமாக கௌரீகாந்த பட்டாச்சார்யா என்ற (இவரும் ஸிவில் உத்தியோகத்திலிருந்த ஒரு பிரமுகர். சம்ஸ்க்ருதத்தையும் பாரஸீகத்தையும் கசடறக் கற்றவர்) ஒரு நிபுணரைத் தலைவராகக்

கொண்டதொரு கோஷ்டி கிளம்பியது. ஆனால் இந்த கோஷ்டிக்கு ராம் மோகனரைப் போல் பொது ஜனங்களிடையே செல்வாக்குக் கிடைக்கவில்லை.

ராம் மோகனருக்கு மற்றெல்லோரையும்விட பெற்றதாயாரே பெரிய சத்துருவாக இருந்தாள். நாம் ஏற்கனவே பிரஸ்தாபித்திருந்தபடி ராம் காந்தரின் மரணத்திற்குப் பின் (அதாவது 1803ம் ஆண்டில்) அவருடைய மூத்தகுமாரரான ஜகன்மோகன் குடும்ப சொத்துக்களுக்கு உரியவரானார். அவரும் 1811-ம் ஆண்டில் கால கதியடையவே, சொத்துக்களை அடுத்த வாரிசான ராம்மோகனரையடைந்தன. அவைகளைக் கைப்பற்றுவதற்காக தாரிணி வெகுதூரம் வரையில் முயற்சி செய்து பார்த்தாள். மதாசாரங்களை யனுஷ்டிக்காத பிள்ளைக்கு ஹிந்துமதச் சட்டங்களின்படி குடும்பசொத்துகளில் பாத்யதை கிடையாதென்றும், ஆகவே, ராம்காந்தரின் சொத்துகளெல்லாம் தன்னையே நியாயமாகச் சேரவேண்டுமென்றும் சொல்லி அவள் ஒரு வழக்குத்தொடர்ந்தாள். அந்த வியாஜ்ஜியத்தில் அவள் தோல்வியடைந்தாளே யாயினும் அவளால் அனுபவிக்கப்பட்டுவந்த நிலங்களை ராம் மோகனர் உடனே பிடுங்கிக் கொண்டுவிடவில்லை.

ராம் மோகனர் தன்னைப் பகைத்துக் கொண்ட தாயிடம் அளவு மிக்க பக்தியும் பிரியமும் வைத்திருந்தார். ஒரு சமயம் தாரிணியை ராம் மோகனர் நமஸ்கரித்த பொழுது "என் முகத்தில் விழிப்பதானால் ராதையையும், கோவிந்தரையும் நமஸ்கரித்துவிட்டு வா!" என்றாளாம். அன்னையுடன் பேசவேண்டுமென்ற ஆசையில் அவர் தமது கொள்கையையும் சிறிது மறந்து, குல தெய்வங்களான மேற்படி இரு விக்ரகங்களையும் வணங்கினாராம். இது ராம்மோகனரின் போனால் பிற்காலத்தில் சொல்லப்பட்ட கதைகளிலொன்று. இது எவ்வளவுதூரம் வாஸ்தவமானதென்பதை நம்மால் நிர்ணயித்துக் கூற முடியாது. இதேபோல், ஒரு சமயம் வியாதியினால் வருந்தியபொழுது ஆட்டு மாமிசம் கலந்த ஔஷதமொன்றை ராம் மோகனர் உட்கொண்டாரென்றும், "இவன் கிறிஸ்தவப் பயலாகிவிட்டான்! இவனால் குலமே நாசமடைந்து விடும்! கிராமத்தை விட்டு வெளியில் துரத்தி விடுங்கள் அவனை!" என்று தாரிணி கூப்

பாடிட்ட-தாகவும் மற்ருேர் கதை சொல்லப்பட்டு வருகின்றது. இவைகளிலிருந்து ரங்பூரில் உத்யோகம் வகித்து வரினும் ராம்மோகனர் பர்துவானுக்கு வருவதுண்டென்றுமட்டுமே நாம் ஊகிக்கலாம்.

ராம் மோகனர் தமது பத்து வருட சிவில் சேவையில் வருடந்தோறும் 10,000 ரூபாய் வருமானம் கொடுக்கத்தக்க நிலங்களை வாங்கும் பொருளைத் திரட்டினர். இது சம்பந்தமாகப் பிரஸ்தாபிக்கையில், பாபு கிஷோரி சந்திர மித்ரா என்பவர் 1845-வது வருட டிஸம்பர் மாதம் "கல்கத்தா ரெவ்யூ" என்ற பத்திரிகையில் வரைந்த ராம் மோகனரின் சரிதையில் "ராம் மோகனர் நீதியைப் பணத்திற்கு விற்ருர்!" என்று எழுதியிருக்கிருர். இவர் மேற்கண்டவாறு எழுதியதற்கு திவான் சேவையிலுள்ள ஒருவர் நீதி தவருது நடந்திருந்தால் பத்துவருட காலத்திற்குள் ஏராளமான பொருளைத் திரட்டியிருக்க முடியாதென்ற அபிப்பிராயமே மூலகாரணமாகும். இந்த அபிப்பிராயத்தை திரு. லியோனர்ட் என்பவர் தாம் எழுதிய "பிரம்ம சமாஜ சரிதை" என்ற நூலில் பலமாகக் கண்டித்திருக்கிருர். "மிஸ்டர் டிக்பியின் திவான் குற்றஞ் சாட்டப்படுவதைப் போல் லஞ்சம் வாங்கிப் பொருள் திரட்டியிருந்தால் நீதி தவருதவரென்னும் நற்பெயர் மிஸ்டர் டிக்பிக்கு ஒருக்காலும் கிடைத்திராதென்று!" திரு. லியோனர்ட் விவாதிப்பது குறிப்பிடத்தக்கது.

மிஸ்டர் டிக்பி 1814-வது வருடத்தில் இந்தியாவை விட்டு இங்கிலாந்திற்குச் சென்ருர். அதேவருடம் ராம்மோகனரும் ரங்பூரைவிட்டுக் குடும்பத்துடன் கல்கத்தாவிற்கு வந்துசேர்ந்தார். கல்கத்தாவை யடையுமுன்னர் அவர் சிலகாலம் ரகுநாதபுரத்தில் தங்கியிருந்தார். அங்கு தமது இல்லத்தின் முன்புறத்தில் ஒரு மேடையை அமைத்து அதன் நாற்புறங்களிலும் (1) ஓம் (ஹிந்துமத மும்மூர்த்திகளையும் பக்திசிரத்தையுடன் குறிக்கும் ஒரு சம்ஸ்க்ருதப் பதம்.) (2) தத்ஸத் (அதுவே ஸத்தியம்; அதாவது மும்மூர்த்தியாக இருக்கும் ஒரு கடவுளே உண்மை) (3) ஏகமே வாத்வைதம் (இணையில்லாத ஒரே பரம்பொருள்) என்ற உபநிஷத் பதங்கள் மூன்றையும் அவர் எழுதிவைத்திருந்தார். இந்த மேடையினருகில்தான் ராம் மோகனர் அனுதினமும் மும்முறை கடவுளை வணங்குவதுவழக்கம்.

2

ஒரு நாள் அவருடைய கடைசி மனைவியான உமை "உலகில் அநேக மதங்களிருக்கின்றன. அவைகளுள் சிறந்தது எது?" என்று வினவினாளாம். அந்தக் கேள்விக்கு ராம்மோகனர் பின்வருமாறு விடையளித்ததாகச் சொல்லப்படுகின்றது.

"பசுமாடுகளில் பல நிறங்களிருக்கின்றன; ஆனால் எல்லா மாடுகளும் வெண்மையான நிறமுடைய பாலைத்தான் அளிக்கின்றன. இதே போல், அநேக மதத்தலைவர்கள் அநேக விதமான சித்தாந்தங்களை வெளியிட்டுச் சென்றிருக்கின்றனர். ஆனால் எல்லா சித்தாந்தங்களுடைய சாரமும் ஒன்றுதான். அதுவே நேர்மையான வாழ்க்கையெனப்படுவது!"

ராம்மோகனர் வாழ்க்கையின் முற்பகுதியில் நிகழ்ந்த மற்றோர் முக்கியமான சம்பவம் இங்கு குறிப்பிடத்தக்கதாகும். ராம்மோகனரின் மூத்த சகோதரனை ஜகன்மோகன் 1811-வது வருடம் மரணமடையவும் அவருடைய மனைவி அக்கால சம்பிரதாயப்படி உடன்கட்டையேறிவிட்டாள். அவளை அவ்வாறு செய்யாதிருக்கும்படி தடுக்க ராம்மோகனர் வெகுதூரம் பிரயாசைப்பட்டாராம். ஆனால் அவருடைய முயற்சிகள் பலியாமற் போய்விட்டனவாம். ஜகன்மோகனின் மனைவி தீயில் பொசுங்கிச் சித்திரவதைக்கு உட்பட்டபொழுது கட்டையை விட்டுத் தப்பிவர முயற்சித்தாளென்றும், அவளை வைதீகர்கள் தடியினால் தாக்கித் தீயினுள் தள்ளிச் சாகும் வரையில் பார்த்துக்கொண்டிருந்தார்களென்றும், அவளுடைய கூக்குரல் பிறர் செவியில் விழாமலிருக்கும்படிச் செய்ய அநேக வாத்தியங்கள் மயான பூமியில் முழுங்கப்பட்டனவென்றும் சொல்லப்படுகின்றது. இக்கொடுமையைப் பிரத்தியக்ஷமாகக் கண்டுகொண்டிருந்த ராம் மோகனர் "உடன்கட்டையேறும் வழக்கத்தை அடியோடு ஒழித்த பிறகே நிம்மதியான வாழ்க்கையை நான் நாடுவேன்!" என்று சபதம் செய்தாராம். அந்தச் சபதம் அடுத்த பதினெட்டு வருடங்களுக்குள் பூர்த்தியாகிவிட்டது. 1829-வது வருடம் டிஸம்பர் மாதம் 4-ம் தேதியன்று உடன்கட்டையேறுவதைச் சட்டவிரோதமான செயலெனச் சர்க்கார் பிரகடனம் செய்துவிட்டார்கள்.

---

# தனவணிகரும் விதவா விவாகமும்.

So. இராமநாதன், ஷண்முகநாதபுரம்.

செல்வஞ் சிறந்த செட்டிமார் நாட்டில், தனவணிக சமூகத்தில் பெரியோர்கள் பண்டைக்கால வழக்கத்தையும், இரக்கமற்ற புராண வைதிகர்களின் பேச்சையும் கேட்டு விதவைப் பெண்களை எண்ணிக்கையில் அதிகமாக்கிக் கொண்டே வருகிறார்கள். தற்போது தனவணிக சமூகத்தினர் இனிமேல் விதவைகளுக்கு மறுமணஞ் செய்யாமல், இன்னமும் வைதீகம், புராணம், சாஸ்திரம், சமூகக்கட்டு என்றுகூறி வீண்காலங் கடத்தி வருவார்களேயானால், கண்டிப்பாக முடிவில் சமூகத்திற்கே இதுவோர் கெட்ட பெயராக நேருமென்பதில் கிஞ்சிற்றும் ஐயமில்லை.

உதாரணமாக எனக்குத் தெரிந்த வரையில் தனவணிக இளம் விதவைகளில் மூவர் மறுமணம் செய்து கொள்ள முடியாத காரணத்தால் தங்களுக்குகந்த காதலர்களுடன், வீடு, வாசல், உற்றார், உறவினர், யாவரையும் துறந்து, காம இச்சையின் பொருட்டு வெளியேறி விட்டனர் என்றால் இந்த அவமானம் யாருக்கு? ஓடிப்போன பெண்களுக்கல்ல. ஆனால், தனவணிக சமூகத்திற்கே உரியது. ஏன்? ஒவ்வொரு ஊரிலுமுள்ள, நகரக் கோவில்களில், அவ்வூர் நகரத்தார்கள் கூடி இவ்வூரிலுள்ள தனவணிக சமூகத்தில் இருக்கும் விதவைகள், இஷ்டப்பட்டால், எவ்வித தடையுமின்றி மறுமணஞ் செய்து கொள்ளலாமென்று பேசுவார்களேயானால், பேசிய, ஒரு மாதத்திற்குள்ளாகவே விதவா விவாகத்தை நாம் செய்கையில் காணலாம். அதல்லாது விதவைகள் தேவை, விதவைகளை மணந்துகொள்ள வாலிபர்கள் தேவை என்று கூறுவதில் விசேஷ பயனேற்படப் போவதில்லை என்பது எனதபிப்பிராயம். மேலும், இதற்குமுன் விதவா விவாகமென்று, சொன்னால் உடனே வர்புக்கு வந்து விதவைகளுக்கு மறுமணஞ்செய்யலாகாதென்றும், எதிர்கட்சி பேசிவரும் வைதீகப் பழக்கங்களில் சிலர்கள் இப்போது அதே வார்த்தைக்கு ஒன்றும் பேசாதிருந்து

வருகிறார்கள். ஏன் காலம் மீறிவிட்ட தென்பதை அறிந்து கொண்டனர்.

சென்ற மாதம் வெளிவந்த மாதர் மறுமணம் பத்திரிகையில் அய்மேன் ராம. மீனாட்சி சுந்தரம் எனும், 13 வயது பாலகன் விதவா விவாகம் என்ற ஓர் கட்டுரையை எழுதியிருக்கிறார். அதில் விதவைகள் கெடுவதைப் பற்றியும் அவர்கள் நிலைமையைப் பற்றியும் சொல்லியிருப்பது முற்றிலும் உண்மையே. இன்றும் நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். தனவணிகர் நாட்டில் விதவைகளைப் படுத்தும் கொடுமை கொஞ்சமன்று. கணவனிறந்ததும், காரிகையை பலவந்தமாய்ப் பிடித்து பந்தலுக்குள் வைத்து, தாலியை அறுத்து, தலையில் முக்காடு போட்டு, பட்டுச்சேலையைப் பறித்து வெள்ளைச்சேலை கொடுத்து, மூலையையில் வைத்து மூதேவிபோல் இருக்கச் செய்து, அழுகையெனும், சங்கீதத்தால் வருகிறவர்களுக் கெல்லாம் அருமையாக அழச்செய்து, இனி ஆடவர் முகத்தைப் பார்க்கக் கூடாதென்றும், அலங்காரமான வஸ்துக்களை அணியலாகாதென்றும், மூன்று வருடம் வரை வீட்டைவிட்டு வெளியே வரக்கூடாதென்றும், கூறி பாழும் சமூக கட்டுப்பாடு, எனும் விலங்கைப் பூட்டி கொடுமைப் படுத்தி வருகிறார்கள். விதவையான ஒரு பெண் தன் கணவன் இறந்து விட்டதற்காக அழமாட்டாள். ஆனால், இனிமேல் வைரக்கண்டசரமும், கொண்டை வில்லையும், பாடி ரவிக்கையும், பட்டுச் சேலையும், அணிய முடியாதே யென்று ஏங்கி அதை நினைத்தேதான் அழுவாள். உதாரணமாக ஒரு பெண் ஒப்பாரி வைத்ததை கவனித்தபோது அவள்,

"ஒரு கோடி தங்கநகை உருவிவைக்க சம்மதித்தேன், அரைக் கோடி தங்க நகை அவிழ்த்துவைக்க சம்மதித்தேன், கால் கோடி தங்க நகை கழட்டிவைக்க சம்மதித்தேன், கும்ப கோணம் கண்டாங்கி கொய்தால் கலகலங்கும், கோடோ மினுமினுங்கும் கோதையற்கு ஒத்திருக்கும், மாயவரம் கண்டாங்கி மடித்தால் கலகலங்கும் மயிலினுக்கு ஒத்திருக்கும்,"

என்று அழுவதைப் பார்த்தால் அவள் கணவனிறந்ததற்காக அழவில்லை என்றும், தான், இனிமேல், மற்ற சில பெண்களைப் போல் திருட்டுத்தனமாக சிற்றின்ப சுகத்தை அடைந்தாலும்

(சகோதரிகள் மன்னிக்கவும்.) எவ்விதத்திலும் ஆபரணங்களை அணியமுடியாதே என்றுதான் வருந்துகிருள். இதையெல்லாம் நோக்க விதவைகளுக்கு மறுமணம் செய்யவேண்டியது மிகவும் அவசியமாயும் நியாயமாயும் இருக்கின்றது.

## விதவைச் சகோதரிகளுக்கு ஓர் வேண்டுகோள்.

அறிவிற் சிறந்த சகோதரிகளே,

இந்த பாழும் இந்தியா தவிர உலகில் மற்ற எல்லா தேசங்களிலும், பெண்களுக்கு பூரண சுதந்திரம் கொடுத்து வருகிருர்கள். ஆனால் இந்தியாவிலோ? பெண்களை இன்னும் எந்த வகையில் அடிமைப் படுத்தலாமென்று, அறிவற்ற சில ஆடவர்கள் ஆராய்ச்சி செய்து வருகிருர்கள். அதில் விதவைப் பெண்களாகிய நீங்கள் எல்லோரும் தீண்டப்படாதவர்களைப் போலும், ஜாதியிலிருந்து நீக்கப்பட்டவர்களைப் போலும், விதவை யெனும் கொடும் பட்டத்தினல், விலங்கிடப் பட்டிருக்கிறீர்கள். அவ்விதம் விலங்கிடப் பட்ட நீங்கள் அப்பாழும் விலங்கிலிருந்து விடுபட வேண்டுமானல், அதற்கு உற்றதோர் துணையாயுள்ள திருவாளர், சொ. முருகப்பா, ஸ்ரீமதிகள் திரு. மரகதவல்லியார், திரு. நீலாவதியார் இவர்களிடம் நீங்கள் மறுமணம் செய்துகொள்ள சம்மதப்படுவதாக நேரிலோ, அல்லது கடிதமூலமாகவோ தெரிவிப்பீர்களேயானல், உங்களது எண்ணம் கூடிய விரைவில் கைகூடி உங்களுக்கு இருக்கும் கொடிய சமூக விலங்கு உடைக்கப்பட்டு உங்கள் பெற்றோர்களின் சம்மதியின் பேரிலேயே உங்கள், மனதிற் குகந்த மணளனை மறுமணஞ் செய்து கொள்ளலா மென்பது முற்றிலும் திண்ணம்.

மேலும், தனவணிகப் பெண்கள் நினைத்த காரியங்களை இது வரை எதுவும் முடிக்காதிருந்ததில்லை: உடையிலும், நகையிலும், செய்கையிலும், அவர்கள் எந்தவிதம் செய்யவேணுமென்று எண்ணுகிருர்களோ கண்டிப்பாக, அந்தவிதமே செய்து காட்டிவிடுகிருர்கள். ஆனல் இந்த விதவா விவாகத்தில் மட்டும் ஏன் வாளாவிருக்கிருர்களோ தெரியவில்லை.

ஆனல் கணவனைக் காளைபோல் வைத்துக் கொண்டிருக்கும் பெண்கள் மட்டும், கர்நாடக வழக்கத்தை விட்டு, நவ நாகரீகத்

தில் தங்கள் சில பெரியோர்களின் வார்த்தைகளையும் உதறித்தள்ளி தற்போது நடைமுறையில் செய்து வரும் காரியங்களைச் சொல்லு கிறேன் கேளுங்கள். முற்காலம் போல் இப்பொழுது,

1. மூக்குத்தி போடுவதில்லை.
2. கால் மோதிரம் அணிவதில்லை.
3. அட்டிகை போடுவதில்லை.
4. தலையை அள்ளி முடிப்பதில்லை.
5. முழங்கைவரை ரவிக்கை போடுவதில்லை.
6. முகத்தில் மஞ்சள் பூசுவதில்லை.
7. தலையைப் பிச்சடாப் போட்டு அதில் கனகாம்பரம் வையாமலிருப்பதில்லை.
8. முகத்தில் ரோஸ் பவுடர் போடாமலிருப்பதில்லை.
9. கையில் கை குட்டையும் மடியில் மணிப்பர்சும் இல்லாம லிருப்பதில்லை.
10. ட்ருமாவுக்கோ சினிமாவுக்கோ தனிமையாகப் போவ தற்கு அஞ்சுவதில்லை.
11. காபி கிளப்புகளில் ஆண்களுடன் கூடஇருந்து சாப் பிடுவதற்கு சொல்ல வேண்டியதில்லை.
12. தன் கணவருடன் கப்பலேறி அன்னியநாடு செல்வ தற்கு தயங்கவில்லை.
13. சீர்திருத்த மணம் (புரோகித னில்லாத) திருமணம் செய்வதற்கு பின்னடையவில்லை.
14. ஆர்மோனியமும், ஆங்கிலமும், படியாதிருப்ப தில்லை.
15. ஆடவர்கள் மத்தியில் வருவதற்கு அஞ்சுவதில்லை.
16. பதிவிரதா தர்மம் என்பதைப் பார்த்ததேயில்லை.

இன்னும் இதுபோன்ற நவ நாகரீகங்களை யெல்லாம் கைக் கொண்டு நடத்திவரும் இக்காலத்தில், விதவா விவாகத்தை மட் டும், மனந்துணிந்து செய்வதற்கு பயப்படுவதேனோ; துணைவி யரை அயல் நாட்டுக்கு அழைத்துச் சென்றால் ஜாதியை விட்டு விலக்கி விடுவோமென்றும், 6-நாள் கல்யாணத்தை ஒரு நாளில் செய்தால் அது, நகரக்குற்றம் வருமென்றும், மிரட்டி வீண் ஜம்

பம்பேசிய மேதாவிகள் அவைகள் இரண்டும் நடந்தபின் என்ன, செய்தார்கள்? ஏன் ஜாதியை விட்டு விலக்கி நகரக்குற்றத்தைக் கொண்டு வருகிறதுதானே? அதுபோல் விதவா விவாகத்திற்கும் செய்யப் போகும்போது, பெண்ணை விலைக்கு விற்கும், பேமானிகள் விதவா விவாகத்தை செய்ய விட்டுவிட்டால் நம்மள் பெண்ணிற்கு பணம் வராதேயென்று எண்ணி ஏதும் கலாட்டாக்கள் செய்தாலும் செய்யலாம். அதைப் பொருட் படுத்தாமல் முன்செய்துள்ள இரண்டு காரியங்களைப்போல் இவ்விதவா விவாகத்தை விரைவில் முடிக்கவேண்டியது மிகவும் முக்கியம்.

ஆனதால் விதவைச் சகோதரிகளே? நீங்கள் சில ஆண்டுக்கு முன் கழுத்தில் ஓர் சிறு பவழ மாலையைப் போட்டிருந்தீர்கள். அப்பால் கொஞ்சநாள் சென்று கையில் ஒரு தங்க மோதிரம் மட்டும் போட்டீர்கள். இப்போது கழுத்தில் 10-பவுன் சங்கிலியைப் போட்டிருக்கிறீர்கள்! அத்துடன் காரைக்கால் வெள்ளைப் பட்டுச் சேலையையும் கட்ட ஆரம்பித்திருக்கிறீர்கள். நீங்கள் இவ்விதம் கொஞ்சங் கொஞ்சமாக சீர்திருத்தத்தில், முன்னேறி வந்ததை யாரும் ஆக்ஷேபித்தார்களா? இல்லை. ஆனால் உங்கள் சகோதரிகளாகிய இன்னொரு பகுதியார்கள் தங்கள் கணவர்மார்களையும் வைத்துக் கொண்டே மேற்கூறிய 16 லக்கத்தின் சீர்திருத்தங்களையும், கைப்பிடித்தார்களே? அதற்கும் யாராவது எதிர்த்தார்களா? அதுவுமில்லை. ஆகையால் இனியும், ஐயோ ஊர் தூற்றுமே, எல்லோரும் கேலிசெய்வார்களே, என்று பயந்து கொண்டிராமல், நான் செய்து கொள்ளுகிறேன் என்று எந்த விதவை முன் வந்து முதன் முதலில் மறுமணஞ்செய்து கொள்ளுகிறாளோ அன்னவரை எல்லோரும் போற்றிப் புகழ்வதோடு, பின்னால் மறுமணஞ் செய்து கொள்ளும் விதவைகளுக்கெல்லாம் ஓர் வழிகாட்டியாகவும், தனவணிக சமூகத்திற்கே ஓர் சீர்திருத்த பொக்கிஷமாகவும் அவரைக் கொண்டாடப் படுமென்பதில் கிஞ்சிற்றும் சந்தேகமில்லை. ஆனதால் இதில் தனவணிக சீர்திருத்தப் பெரியோர்களும் விதவைச் சகோதரிகளும் முன்னின்று வாழ்வற்ற விதவைகளுக்கு வாழ்வு உண்டு என்ற சொல்லை நமது சமூகத்தில் உண்டாக்கவேணுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன். பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

---

# கண்மணி "கமலம்"

லெ. கருப்பஞ் செட்டியார், பைஞ்சலோ.

மாலை நேரம், சந்திரன் தன் கிரணங்களை மேற்றிசையில் செலுத்திக்கொண்டிருக்கிறுன். தென்றற் காற்று யாவருடைய மனத்தையும் இன்பத்திலாழ்த்திக் கொண்டிருக்கிறது. புள்ளினங்கள் தத்தம் இருப்பிடங்கட்குத் தன் இனிமைக் குரல்களுடன் ஆனந்தமாகப் பாடிக்கொண்டு செல்லுகின்றன. பூங்காவனத்திலுள்ள புஷ்பங்களின் வாசனை கம கம வென நறுமணத்தைப் பரப்புகின்றன.

இவ்வித ஆனந்தமயமாய் உள்ள இடத்திலிருந்து, ஒரு பெண்ணின் பெருமூச்சும் அழுகையொலியும் சிற்சில (வருந்தும்) வார்த்தைகளும் என் செவியில் வீழ்ந்தன. உடனே அவ்விடத்திற்கு விரைந்தேகினேன். கண்ணுற்றேன். அந்தோ, பரிதாபம்!

பொன்னிறமுள்ள சுமார் பதினெட்டு ஆண்டைக் கடவாததோர் பெண் அழகுப் பெட்டகம், அரிவையர் திலகம்போல் விளங்கும் அப்பெண் கூந்தல் கலைந்த அலங்கோலத்துடன் பரதேசி வெண்சேலை விபரீதப்பட்டு மேலேக் கிடப்பதையும், முகம் வேறுபட்டு உயிரற்ற சவம்போல் (பூங்காவனத்திலுள்ள விநாயகர் ஆலயத்தின் முன்) சாய்ந்து தத்தளித்துக் கிடந்ததைப் பார்த்து யான் ஒன்றும் தோன்ருவாறு சிறிதுநேரம் பதுமைபோல் நின்றேன். அப்பெண் கொஞ்சம் மயக்கம் தெளிந்து சற்று கண் திறக்க, யான் எதிர் நிற்கக்கண்ட அக்கட்டழகி கலங்கி வெறுண்டு வெறுண்டு விழித்து வியப்புடன் என்னைப் பார்த்தாள்.

யான் (அவ்வணங்கைப் பார்த்து) அன்புள்ள சோதரி, எதற்காக என்னைப்பார்த்து அஞ்சுகிறீர், பயத்தை யொழித்து நீர் யாவரென்பதைச் சிறிது விளக்கத்துடன் கூறவேண்டும் என்றேன்.

அவ்வணங்கு ஓர் பக்கமாகத் திரும்பித் தலைகுனிந்து நாணத்தால் விழுங்கப்பட்டு நிற்பதைக் கண்டு நான் உனது உண்மை சகோதரனென்று நினைத்து நிகழ்ந்ததைச் சொல்லவேண்டும் என்று கனிந்த பரிதாப மொழியில் கூறினேன். அப்பை

ங்கிளி, (கண்ணீர்வடிய) கூறலானாள் "அன்புடை அண்ணலே, எனது வாழ்நாளில் நடந்து வருவதை விவரிப்பதானால் பல நாட்களாகும். தங்களுடைய வினவிற்கு விடைதர மறுக்கவும், என்மனம் துணியவில்லை. ஆகவே, துர்ப்பாக்கிய வழியான, என் வரலாற்றில் ஒரு பகுதியை மட்டும் இங்கு குறிப்பிடுகிறேன். அதற்காக என்னை மன்னிக்க. யான் தேவ நகரென்னும் இவ்வூரில் தனவணிக மரபில் திருப்பதிசெட்டியாரின் ஏகபுதல்வி. என்னை, "கமலம்"என்று அழைப்பார்கள். என் தாய்தந்தையர் ஆரம்பத்தில் ஒரு பெரும் தனவந்தராக இருந்து வந்தபடியாலும், அவர்கட்கு, யான் ஒரே புதல்வியானமையாலும் உயிருக்குயிராக நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தார்கள். இவ்விதமான நற்காலத்தில் துரதிர்ஷ்டத்தின் விளைவால் என்தாயை யமன் வந்தழைத்தேகி விட்டான். அன்றே என் மனம் நிம்மதியற்று விட்டது. அதுவுமன்றி என் தந்தை செய்த தொழிலில் அதிக நஷ்டமேற்படவே சகல பொருள்களும்போய் குடியிருக்கும் வீடும், ஏலத்திற்கு வந்து விட்டது. ஏலமும் ஆய்விட்டது. அத்துடன், அக்கடன் தொலையவில்லை. இது இவ்விதமிருக்குங் காலத்தில், எனக்குப் பன்னிரெண்டாவது ஆண்டு நடக்கும்போது என் பெற்றோரின் வறுமையை என்னைவிற்று நிவர்த்திசெய்து கொள்ள மாப்பிளைதேடப் பலவிடங்கட்குச் சென்றதில், பணநெருக்கடியான காலமாகையால், எவரும் வருகன் 4-க்கு ரூ 14000த்திற்கு மேல் தர ஒத்துக்கொள்ள வில்லை. 60-ம் ஆண்டு சாந்தி செய்துகொள்வதற்காக திருமணம் செய்துகொள்ள விரும்பும் பெரும் தனவந்த "தாத்தா" ஆறுமுகம் செட்டியாருக்கு "நான்காம்" தாரமாகத் தரரும்சேர்த்து வருகன் 10-க்கு ரூ 35000, எனப்பேசி முடிவு செய்து வாங்கிக்கொண்டு (என் சம்மதமில்லாமல்) கட்டாயக்கலியாணம் செய்து வைத்தார்கள். என் பெற்றோர்களின் பணநெருக்கடி என்மூலமாகத் தொலைந்தது.

யானும் பதினான்காம் ஆண்டிற் பருவமடைந்தேன். எனது கணவரெனச் சொன்ன கிழவரும் தனது 62-ம் ஆண்டில் மண்ணுலகை விட்டு விண்ணுலகைச் சேர்ந்து விட்டார். சமூக பழக்க வழ

க்க மென்ற கொடிய அம்பை, என்மேல், எய்யவந்து குழுமி விட்டார்கள்.

பட்டாடை அணிகலன்கள், சடைப்பின்னல், திலகமிடுதல், வாசனைதிகள் யாவும் அற்றி, வெறும் வெண்சேலை ஒன்றைக் கட்டி, மூக்காடிட்டு மூதேவி விதவை என்ற பெயரிட்டு மூலையில் கிடத்தப்பட்டேன் அன்றிரவு கடந்தகாலத்தின் (கணவனற்றிருந்தாலும்) கன்னிகைக் கனவு என் அகக்கண் முன்னே படக்காட்சி போன்று, ஒன்றன் பின்ஒன்றாய் ஞாபகத்திற்கு வந்து அல்லற்படுத்தியது.

என்னே! என் பெற்றோர்களின் வறுமையின் கொடுமை! என் மேல் விழுந்து என் கண்ணைக் கவரும் காட்சிகளையும் ஆனந்தத்திற்குரிய அணிகலன்கள் பட்டாடை பருவகாலம் கூடிய இன்பம் எல்லாம் ஒருங்கே பாழாயின.

நான் இனி ஏன் இரக்கமற்ற இவ்வுலகில் இறுதிக்காலம் வரை வாழ்நாளை வீண் நாளாகக் கழிக்கவேண்டும்? சமநீதியற்ற இவ்வுலகினின்றும் ஒழியவேண்டியதே. மரணமென்ற மருந்தைக் கொண்டு இன்பமென்ற வழியை நாடுவேன்; நாடுகின்றேன்; நாடிவிட்டேன்!

ஆ ஈசனே! கபடமுள்ள இவ்வுலகையும் கருணையற்ற எனது தனவணிகச் சமூகப் பெரியோர்களையும் விட்டு விடுதலையடைகின்றேன். இனியே யான் பாக்கியசாலி. என் எண்ணம் பூர்த்தியடையப் போகிறது என்று மொழிந்துகொண்டே அவள் எதை விரும்பினாளோ, அவ்வழியை, அவ்விடத்தை நாடிவிட்டாள். நாடிச் சென்றுவிட்டாள்.

என் செய்வது! இனி வருந்திப் பயனென்ன, "கமலம்," "கமலம்" கண்மணி கமலம் எனக் கதறினேன். மாண்டார் வருவரோ!



# விதவைகளும் காதல் மணத்தின் அவசியமும்.

( கண்டி V. E. முத்துப்பழனியப்ப செட்டியார் )

விதவைக் கொடுமைக்கு இலக்காகித் தவிக்கும் பாரத சகோதரிகளே! இதுகாலை நீங்கள் எத்திசை நோக்கினும் ஆங்காங்கே சில தேசங்களில் பெண்கள் சர்வ சுதந்திரமாய் வாழ்வதையும், இன்னும் சில தேசங்களில் உலக விவகாரங்கள் அனைத்திலுமே முன்னேறிக் கொண்டு வருவதையும், சுருங்கக் கூறுமிடத்து ஆண்களையே வேலையில்லாத் திண்டாட்டத்தை நாடி ஆடும்படி விரட்டுவதையும்தான் காண்கிறீர்கள். ஆனால் நமது பாரத கண்டத்திலோ வெனின், நமது முன்னோர்களும் பெரியோர்களும் சாஸ்திரங்களையும் அதனை நம்பி இருக்கும் சாஸ்திரிகளையுமே கதிமோக்ஷத்திற்குரிமைப்பொருள் என்று கருதி நமது பாரததேவியின் மக்களில் ஒரு பகுதியினரைப் பிறப்பால் தாழ்ந்தோரென ஒதுக்கிவைத்திருக்கும் கொடுமை போதாதென்று கணவனைப் பறிகொடுத்த உங்களுக்கு விதவை யென்ற நாமத்தைச் சூட்டி, சகல உரிமைகளையும் பறித்து ஒன்றுக்கும் உதவாதவர்கள் என்று தள்ளிப்போட்டார்கள். கொடுமை! கொடுமை! பிற நாடுகளில் வதியும் சகோதரிகளைப் போன்று உங்களுக்கு உங்களது வாழ்க்கைத் துணைவர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமைகள் நல்காது போனாலும், பெற்றோர்களால் குடி மணம் செய்விக்கப் பெற்றீர்கள். அதனால் உங்கள் வாழ்க்கையில் முற்றிலும் துக்கமோ அல்லது சிறிதளவு சுகமோ அனுபவித்தீர்கள். அந்தோ! காலன் உங்கள் கணவனைப் பிரித்தான். சுற்றத்தார் கூடினார்கள்; சமூகத்தின் பேரால் உங்களுக்கு "விதவை" என்னும் கொடிய விலங்கைப்பூட்டினார்கள். உங்கள் வாழ்வுத்திரை வீழ்ந்தது. என்னேமதியீனம்! உண்மையில் நீங்கள் உங்கள் பதியை இழக்கச் சித்தமாயிருக்க வில்லை, ஆயினும் காலன் குறுக்கிட்டான். அவன் செயலுக்கு யாரைத் தண்டிப்பது? உங்களையா? வெட்கம்! வெட்கம்!

பாரத யுவர்களே! நமது விதவைச் சகோதரிகளின் நிலைமையை உன்னிப்பார்க்குங்கால் ஒவ்வொரு இளைஞனின் ரத்தமும் கொதிக்

கவே செய்யும். சமூக கட்டுப்பாடுகளால் அவர்கள் அனுபவிக்கும் இன்னல்களை விவரிக்கின் விரியும். யோசிக்கு மிடத்து இக்கொடிய தண்டனைக்குள்ளாவதைப் பார்க்கிலும், அஞ்சா நெஞ்சன் ராஜா ராம் மோகன்ராய் அவதரித்ததற்கு முன்பிருந்த உடன்கட்டை யேறும் அநாகரீக முறையையே பெரிதும் விரும்புவார்களென்பது தெற்றெனப் புலப்படும். நமது சாஸ்திரிகளும் பெரியோர்களும் இதை இனிமேலும் உணராமல் இருக்கப் போகிறார்களா? உண்மையில் நமது சாஸ்திரங்களுக்கு மட்டும் இருதயம் இருக்கும் பக்ஷத்தில், நமது அனாதை விதவைச் சகோதரிகள் உதிர்க்கும் கண்ணீரை சகிக்கும் சக்தியற்று அவை வெடித்திருக்குமென்றே நம்புகிறேன். இந்த இருபதாம் நூற்றாண்டிலும் ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கொரு நீதி என்ற முறையிலேயே வாழ்ந்து வருவது வெறுக்கத் தக்க விஷயம். வீர இளைஞர்களே! எழுங்கள்! சர்வ காரியங்களிலும் நமது மாது சிரோமணிகள் சுதந்திரம் பெறும்படி உதவி புரியுங்கள்! பெண்களுக்கு சுதந்திரம் வழங்காத எந்த நாடும் முன்னுக்கு வந்ததில்லை. உலக சரித்திரம் இடித்துக் கூறும் இவ்வுண்மையை உணருங்கள்!

சகோதரிகளே! உங்களின் முன்னேற்றத்திற்கு ஆண் மக்களையே முற்றிலும் நம்பி இருப்பதிற் பயனில்லை. சாஸ்திரம், சமூகம் போன்ற பல இக்கட்டுகளால் மக்களில் ஒரு சாராராகிய நீங்கள் கல்வி கற்கும் உரிமையை இழந்தீர்கள்; காதல் மணம் துறந்தீர்கள்; ஆண் மக்களின் எடுப்பார் கைப்பிள்ளை யானீர்கள். கணவனை இழந்த நமது இளஞ் சகோதரிகளுக்கு மறுமணம் இன்றியமையாதது. விரும்பின் ஒவ்வொரு விதவைச் சகோதரியும் மறுமணம் காண்பது சாலச் சிறந்தது. மாதர்களாகிய நீங்கள், ஆங்காங்கே முன்னேற்ற சங்கங்கள் தோற்றுவிக்க வேண்டும். கூட்டம் கூட்டமாக ஒன்று சேரவேண்டும். விதவைச் சகோதரிகளைத் திரட்ட வேண்டும். வீர முழக்கம் செய்யும் மாது சிரோமணிகள் வாய்ச் சொற்களால் உங்கள் விடுதலைக்கு ஆதரவாயிருக்கும் உலகோரின் அபிப்பிராயத்தை அறிய வேண்டும். அப்பொழுதுதான் உங்களுக்கு தைரியம் பிறக்கும். கருமத்தில் கண்ணுயிருப்பீர்கள். காரிய சித்தி யடைந்தே தீருவீர்கள். விதவைச் சகோதரிகளுக்கு மட்டும்

ஓர் வார்த்தை! பெற்றோர் செய்த மணத்தால் நீங்கள் ஒரு முறை இல்வாழ்க்கை என்னும் இரதத்தை கரடு முரடான பாதைகளில் செலுத்தியது போதும். இனிமேலாவது உங்களது வாழ்க்கைத் துணைவர்களை நீங்களே தேர்ந்தெடுங்கள். இரதம் இராஜ பாட்டை களிலேயே செல்லும். அதனால் அடையும் இன்பத்தை காதலின் பரிசாகக் கொள்ளுங்கள். நமது வீரக்கவி பாரதியார் சொல்லியிருக் கிறார்:—

> "நாடகத்திற் காவியத்திற் காதலென்றால்
> நாட்டினர் தாம் வியப்பெய்தி நன்றாமென்பர்;
> ஊடகத்தே வீட்டினுள்ளே கிணற்றோரத்தே
> ஊரினிலே காதலென்றால் உறுமுகின்றார்,
> பாடைகட்டி யதைக் கொல்ல வழி செய்கின்றார்,
> பாரினிலே காதலெனும் பயிரை மாய்க்க
> மூடரெலாம் பொறாமையினால் விதிகள் செய்து
> முறை தவறி யிடரெய்திக் கெடுகின்றாரே."

அதே போன்று நமது பெற்றோர்கள் காதல் நடவா வண்ணம் குறுக்கே நிற்பார்கள். அவர்கள் நோக்கத்திற்கு இடம் கொடா மல் தைரியமாய் முன்வாருங்கள். உங்கள் மனதிற்குகந்த கண வனையே தேர்ந்தெடுங்கள். இன்ப வாழ்க்கை நடாத்துங்கள். முடிவு இன்றி வளர்ச்சி யடைந்து வரும் விதவைகளின் எண்ணிக் கைக்கு முற்றுப்புள்ளி வையுங்கள். உலகப்பெரியார் மகாத்மா காந்தியடிகள் ஆதரவும், வாலிப உலகத்தின் ஆதரவும் உங்கள் பக் கமே இருக்கின்றன.



## மனைவி இறந்தால்
## விதவையைக் கொள்.



# கோடி இன்னல்.

சொர்னவல்லி என்னும் தனவணிகப் பெண்ணுக்கு வயது 10 ஆகும்போது அவள் தகப்பனுன உழக்குருட்டி நாராயணன் செட்டியார் பெருந்தொகையைவாங்கிக் கொண்டு ஒரு பாடாவதிப் பயலுக்குக் கல்யாணம்செய்துவிட்டார். கல்யாணம் செய்து கொடுத்த சில மாதங்களில் ஷ்டி மைனர்மாப்பிள்ளைசெத்துப்போனுன். ஏற்கெனவே இந்த சொர்னவல்லிப் பெண்ணின் பள்ளித் தோழனும் உண்மைக் காதலனுமான மாணிக்கம் என்ற வாலிபன் பர்மாவிலிருந்தான். சொர்னவல்லிக்குக் கல்யாணமரன செய்தி கேட்டதும் மாணிக்கம் இறந்து போய்விட்டான் என்று தகவல் வந்தது. அச்செய்தி கேட்ட அவனுடைய சீர்திருத்த நண்பர்கள் கூறிய பாட்டுகள் வருமாறு:—

பொல்லாத தந்தைதமர் நல்லாரை
விற்றுவரும் புலைவழக்கால்
கல்லாத புல்லனுக்குச் சொர்னவல்லி
பெண்டான கதையைக் கேட்டு
எல்லையிலாத் துயரடைந்தாய் வெறுப்புற்ருய்
இன்னுயிரை ஈந்தாய் காதல்
வல்லவனே மாணிக்கா மறைந்தனையோ
மற்ெருருகால் வருவாய் கொல்லோ

தான் பெற்ற பிள்ளைகளைப் பொருளுக்காகப் படு கிடங்குகளில் தள்ளிவிடப் பெற்றோர் சம்மதிப்பது நம் நாட்டின் துரதிருஷ்டமென்றே சொல்ல வேண்டும். பொல்லாத தாய் தந்தையரும், சுற்றத்தாரும் சேர்ந்து கேடு கெட்ட ஜாதிப் பழக்கத்தால் நல்ல பெண்களை விற்று விடுகின்றனர். அந்தப்படி, படித்த—அறிவுள்ள பச்சிளம் பெண்ணுன சொர்னவல்லி, கல்வியில்லாதவனும், பரம அயோக்கியனுமான ஒருவனுக்குக் கொடுக்கப்பட்டாள். அதையறிந்த காதலனும் பரிசுத்தமானவனும் பேரறிஞனுமான மாணிக்கம் இறந்து போனுனென்ருல் நண்பர்கள் மனம் துடி துடிக்காமல் என்ன செய்யும்?

கோவா முத்தாம் சொர்ணவல்லிக்
கொடியிவ் வுலகில் ஒன்றறியார்

பூவாதிருந்த காலமதில் புல்லர்
பலபேர் சேர்ந்தொரு நாள்
ஆ ஆ என்றே உண்டொழிக்க
அலறிக்கூடிக் கல்யாணம்
போவா வென்றே பிடித்துவைத்துப்
பொன்னால் விலங்கைப் பூட்டினரால்

கோர்க்கப்படாத முத்துப் போன்ற சொர்னவல்லியாகிய பூப்படையாத சிறு சொர்னவல்லிக் குழந்தையை சொந்தக்காரரென்ற பாடாவதி மனிதர்கள் பலபேர் சேர்ந்து ஆ ஊ என்று ஆட்டம் போட்டு எட்டுநாள் சாப்பிட்டு விட்டுப் பெண்ணின் கழுத்தில் கழட்டவாத ஒரு தாலியை மாட்டி விட்டுப் போய்விட்டார்கள்.

விலங்கு பூட்டும் கொடுஞ்செயலால்
விளையும் பயனென் றென்றுண்டோ
கலங்கி வீரன் உயிர்நீத்தான்
கன்னி வாழ்வும் ஒழிந்தது காண்
பலங்கொண் டின்று பாழ்வழக்கம்
பற்றி ஈறிப் பசுங்குழந்தைக்
குலங்கொன் றின்ப நலங்கொன்று
கோடி இன்னல் விளைத்திடுதே.

ஊர் ஜனங்களும், உற்றார் உறவினரும் சேர்ந்து பெண் விரும்பாத இடத்தில் கட்டாயத் தாலிகட்டுவதால் ஏதாவது நல்ல பயன் உண்டாகிறதா? இந்தப் பெண்ணின்பால் தன் அன்பையும், உயிரையும் செலுத்தி வந்த மாணிக்கம் கலங்கி உயிரை விட்டான். கன்னியான சொர்னவல்லியின் வாழ்வும் போய் விட்டது. பாழாய்ப் போன வழக்கம் பலமடைந்து நிற்கிறது. அந்த வழக்கப் பிசாசு பச்சைப் பசுங் குழந்தைகளைப் பிடித்துக் கடித்து ஈறிக் கொல்கிறது. ஆஹா! இப்படி எத்தனை இளம் பெண் குழந்தைகள் காலிகட்குக் கலியாணம் செய்து கொடுக்கப்பட்டும் விதவையாகி வாழ்வைப் பறிகொடுத்தும் கண்ணீர் வடித்துக்கொண்டும் கிடக்கின்றனர்! இவர்கட்கு விமோசனமெப்பொழுது? வாலிபர்களே! பெண் மக்களே! எழுங்கள்! இக் கொடுமையை ஒழியுங்கள்!

# மறுமண கீதம்.

ஸ்ரீமதி N. S. ஜானகி அம்மாள்.

கந்தா காருண்யனே — என்ற மெட்டு

மாதர் மறுமணமே
பெறுவீர் பூமணமே

(கஜல்)

கணவனிழந்த காரிகைகள்
கதறியழும் வேளையில்
மணவன் தங்கை, மாமி கொடுமை
மனங் கொள்ளாமல் மூலையில்
பிணங்கு மாதர்க் குரிமைநல்கும்
பெருமையான நாளையில்
அணங்குகள் அயர்ந்திடாமல்
ஆக்கம் பெருகும் காலையில் — மாதர்

கண் கலங்கும் மாதர்களே
களிப்புடனிதை நாடுவீர்
நன்மஹான் நவிலு மொழியை
நலமெனக்கொண் டாடுவீர்
சின்ன வயதில் விதவையாகி
சீர்கெடா வாழ்வு சூடுவீர்
நன்னய ஜானகி கீதம்
நலமுடனே பாடுவீர் — மாதர்

(பாட்டு)

பெண்கள் ரெத்தினமே
பேணும் இத்தினமே.

# மாதர் மறுமண சகாய சங்கம்
# காரைக்குடி.

பவ-யுவ — யுவ-தாது

## 2, 3-வது ஆண்டு அறிக்கை.

இச் சங்கம் ஸ்ரீமுக ஆவணி 28உ காரைக்குடியில் ஆரம்பிக்கப்பட்டது. பால்ய வயதிலேயே விவாகம் செய்யப்பட்டு ஒரு பயனுமறியாமல் விதவைக் கொடுமைக்கிரையாகித் தவிக்கும் பெண்கள் நம் நாட்டில் பெருகி வருகின்றனர். இக் கொடுமைக்கு விமோசனம் தேடுவதற்குப் பெரியார் பலர் வழிகோலி யிருக்கின்றனர்.

பூலோகத்திலுள்ள எல்லாத் தேசங்களிலும் வசிக்கும் மக்கள் சுமார் 200 கோடியாகும். இவர்களுள் கட்டாய விதவைக்கோலம் ஏற்படுத்தும் வழக்கத்தை நமது ஹிந்து மக்கள் தாம் கொண்டிருக்கின்றனர். நமது இந்திய நாட்டில் உள்ள மொத்த ஜனத் தொகை சுமார் 36½ கோடியாகும். இவர்களுள் மகமதியர் கிறிஸ்தவர் முதலிய மற்ற மதத்தினரை நீக்கிப் பார்க்கும் போது ஹிந்துக்களின் தொகை சுமார் 26 கோடி. இதில் தாழ்த்தப்பட்டவர்களும், பிற பல வகுப்பாரும் புருஷனை இழந்த பெண்களை விதவைக் கோலத்துக்குட்படுத்துவதில்லை. அவர்களையும் நீக்கிப் பார்த்தால் கட்டாய விதவைகளை உண்டாக்கும் வழக்கமுள்ள உயர் ஜாதி ஹிந்துக்களின் தொகை 15 கோடிதானிருக்கக்கூடும். இவர்களுள் சுமார் 7½ கோடி ஆண்மக்களை நீக்கினால் பெண் மக்கள் தொகை 7½ கோடியென்று மதிப்பிடலாம். இவர்களுள் இரண்டரைக் கோடி பேர் விதவைகளாக இருக்கின்றனரென்று இந்திய அரசாங்கத்தின் 1931ஹு ஜன கணிதம் கூறுகிறது. இதைப் பார்க்கும்போது தேசப் பற்றும், ஒழுக்கமும் உடையவர்களது மனம் பதறுமென்று கூற வேண்டுமா? உலகிலுள்ள 200 கோடி ஜனங்களுள் 15 கோடி உயர் ஜாதி ஹிந்துக்கள் மட்டும் இந்தக் கட்டாய விதவைக் கொடுமை வழக்கத்தை வைத்து வளர்த்து வருகின்றனர். பாக்கியுள்ள 185 கோடி மக்கள் விதவைத் துயரத்தைக் கையாளவில்லையென்பது கவனிக்கத்தக்கது.

## விதவைகளின் நிலைமை

ஹிந்து விதவைகளைப் பற்றிய விவரம் வருமாறு:—

| | | | | |
|---|---|---|---|---|
| 1 வயதுக்குட்பட்ட விதவை | | | | 1,515 |
| 1 வயதுக்கு மேல் 2-வயது வரை | | | | 1,785 |
| 2 | ,, | 3 | ,, | 3,485 |
| 3 | ,, | 4 | ,, | 9,076 |
| 4 | ,, | 5 | ,, | 15,019 |
| 5 | ,, | 10 | ,, | 1,05,482 |
| 10 | ,, | 15 | ,, | 1,85,339 |
| 15 வயதுக்குட்பட்ட மொத்தம் | | | | 3,21,701 |

இதை ஊன்றி நோக்க வேண்டும். இவ்வளவு பெண்கள் பரிதாபகரமான நிலைமையில் விதவைகளாக இருந்து கண்ணீர் விட்டுப் புலம்பித் தவிக்கும் நிலைமையில் இருப்பது நன்மை தரத் தக்கதாவென்பது கவனிக்கத்தக்கதன்றோ? வங்காளம், பாஞ்சாலம், ஆந்திரம் ஆகிய மாகாணங்களில் விதவா விவாகத்திற்கும், விதவைகளின் பாதுகாப்பிற்கும் அதிகமான முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. பிரம் சமாஜமும், பல தனிச் சங்கங்களும் வங்காள மாகாணத்தில் திறம்பட வேலை செய்கின்றன. பாஞ்சாலத்தில் ஆரிய சமாஜமும், பல சங்கங்களும் இத்துறைக்கு கூனுகூலம் புரிகின்றன. லாகூர் விதவா விவாக சகாய சங்கத்தார் பெரு முயற்சி செய்து விவாகங்களை நடத்தி வருகின்றனர். சென்ற 20 வருஷங்களில் 49,242 விவாகங்களை நடத்தியிருக்கின்றனர். இந்தச் சங்கமானது 1915-ம் வருஷத்திலிருந்து விதவா விவாகம் செய்து வைப்பதற்கு முற்பட்டது. அதனபிவிருத்தி பின் வருமாறு ஏற்பட்டு வருகிறது.

| 1915 | 1916 | 1917 | 1918 | 1919 | 1920 | 1921 | 1922 |
|---|---|---|---|---|---|---|---|
| 12 | 13 | 31 | 40 | 90 | 220 | 317 | 453 |

| 1923 | 1924 | 1925 | 1926 | 1927 | 1928 | 1929 | 1930 |
|---|---|---|---|---|---|---|---|
| 892 | 1603 | 2663 | 3172 | 4206 | 4339 | 5403 | 5029 |

| 1931 | 1932 | 1933 | 1934. |
|---|---|---|---|
| 5484 | 5493 | 5202 | 4580. |

ஷை சங்கமானது ஆரம்ப காலத்தில் எவ்வளவு சிரமத்துடன் வேலை செய்ய முற்பட்டிருக்கிறதென்பது இந்தக் கல்யாணக் கணக்கிலிருந்து தெரிய வரும். 1915-ம் வருஷத்தில் 12 கல்யாணங்களே நடைபெற முடிந்தது. 1934-ல் 4580 கல்யாணங்கள் நடைபெற்றிருக்கின்றன. இந்தக் கல்யாணங்களில் மாகாணவாரியாக எந்தெந்த மாகாணத்தில் எவ்வளவு விதவை மணங்கள் நடைபெற்றிருக்கின்றன வென்பதையும் அந்த மாகாணத்திலுள்ள பால்ய விதவைகள் எவ்வளவு என்பதையும் சில மாகாணங்கட்கு மட்டும் இதன் கீழே தருகிறோம்.

| மாகாணங்கள் | 25 வயதுக் குட்பட்ட மொத்த விதவைகள் | 1933ல் நடந்த கல்யாணங்கள் | 1934ல் நடந்த கல்யாணங்கள் |
|---|---|---|---|
| 1. பஞ்சாப் | 40,757 | 2353 | 1514 |
| 2. ஐக்கிய மாகாணம் | 1,92,133 | 928 | 1089 |
| 3. பீகார்—ஒரிசா | 2,25,938 | 163 | 205 |
| 4. வங்காளம்—அசாம் | 2,05,895 | 825 | 1004 |
| 5. ராஜபுதானா | 44,489 | 302 | 199 |
| 6. பம்பாய் | 1,43,258 | 175 | 204 |
| 7. மத்ய மாகாணம் | 67,689 | 423 | 340 |
| 8. சென்னை | 2,39,316 | 43 | 25 |

இதிலிருந்து நமது சென்னை மாகாணம் எவ்வளவு பிற்போக்காக இருக்கிறதென்பதைப் பார்க்கலாம். விதவைகளையும் ஆண்டுதோறும் பெருக்கி வருவதுடன் கல்யாணம் செய்யவும் வழிவிடாமல் அசட்டுப் பிடிவாதத்திற்கிடமாகி நிற்கின்றது. லாகூரில் தோன்றி நடைபெற்றுவரும் ஷை விதவா விவாக சங்கத்திற்கும் அதனைச் சார்ந்துள்ள பிற ஸ்தாபனங்கட்குமாக சுமார் 46 லட்சம் ரூபா மூலதனமிருக்கிறது. ஒரே ஒரு கனவான் சர் கங்காராம் என்ற வள்ளல் 50 லட்சம் ரூபாயை நன்கொடையளித்துள்ளார். நமது தமிழ்நாட்டு ஜனங்கள் இப்படிப்பட்ட சீர்திருத்தத் துறையில் மிகவும் பிற்போக்காக இருக்கின்றனர். இந்நிலை மாறவேண்டியது மிகவும் அவசியமாகும்.

விதவையாக இருக்கும் பெண்கள் ஆடையாபரணங்களை யணிந்து சுதந்திரமாகவும் சந்தோஷமாகவும் வாழ ஆசைப்படுகின் றனர். என்றாலும் ஜாதிக்கட்டுப்பாட்டை மீறத்துணிவில்லை. பெற் றோர்கள் தங்கள் பெண் அனுபவிக்கும் துபரத்தைக் கண்டு வருந்தி யழுகின்றனர். என்றாலும் துணிந்து கல்யாணம் செய்துகொடுக் கச் செயலற்றிருக்கின்றனர்.

## பிரசார வேலை.

இந்நிலையை மாற்றுவதற்கு பிரசார வேலை திறம்பட நடை பெற வேண்டியதவசியமாகும். ஊர்தோறும் உபந்யாசங்கள் நடத்த விரும்பி ஆரம்பித்தோம். முதலாவது ஆண்டில் 4 உபந்யா சக் கூட்டந்தான் நடத்த முடிந்தது. பலமான எதிர்ப்புகளுமிருந் தன. கண்டவராயன்பட்டி, புதுப்பட்டி, கூழிபிறை, வேந்தன் பட்டி ஆகிய நான்கு ஊர்களில் வெற்றிகரமாகவே கூட்டம் நடை பெற்றது. எதிர்ப்பிருந்ததால் ஜனங்கள் அதிகமாக வந்து குழுமி யிருந்தனர். இரண்டாவது மூன்றாவது ஆண்டுகளில் கூட்டங்கள் நடைபெற்றன. பாகனேரி, புதுவயல், கீழச்சிவற்பட்டி, கடியா பட்டி, கண்டவராயன்பட்டி, தேவகோட்டை, காரைக்குடி ஆகிய ஏழு ஊர்களில் ஒன்பது பிரசங்கக்கூட்டம் நடத்தப்பட்டது. எந்த ஊரிலும் கூட்டம் நடத்துவதென்பது பெரும் பிரயாசையாகவே இருந்தது. இடம் கிடைப்பதில்லை. அபிமானமுள்ளவர்களும் வீடு விட முற்படுவதில்லை. ஒருவரும் எதிர்க்காவிட்டாலும் வீடு விடுவ தற்கு நடுங்குகின்றனர். உபந்யாசம் புரிபவர் கூட இவ்வியக்கத் திற் கலந்து பேசுவதில், கூடியவரை பின்னடைந்தனர். முத லாவதாகக் கண்டவராயன்பட்டியில் கூட்டத்தை ஆரம்பிக்கிற போது 20 பேர்தான் கூட்டத்திற்கு வந்திருந்தனர்.

## மாஜிக்லாண்டர்ன்

படக்காட்சி மூலம் பிரசங்கம் புரியும் முறை யுவ மார்கழி-மீ 18உ புதுவயலில் நடைபெற்ற கூட்டத்தில்தான் முதலாவதாகக் கையாளப்பட்டது. படக்காட்சியை யொட்டியே அதுமுதல் உபந் யாசக் கூட்டம் நிகழ்கிறது. ஜனங்கள் ஏராளமாகக் கூடுகின்றனர். பெண் மக்களும் சிறுவர் சிறுமியரும் பெரும்பான்மை விஜயம் செய் கின்றனர். ஜனப்பஞ்சம் இதிலிருந்து ஒழிந்துவிட்டதென்னலாம்.

## துண்டுப்பிரசுரங்கள்

முதலாவதாண்டில் போடப்பட்ட நான்கு வகை 20,000 பிரசுரங்கள் செலவழிக்கப்பட்டன.

## புத்தகங்கள்

முதலாவதாண்டில் வெளியிடப்பட்ட "கைம்பெண்ணின் கண்ணீர்" "இரண்டு கட்டுரைகள்" எனும் இரு புத்தகங்கள் ஒவ்வோரணா விலையில் விற்கப்பட்டு வருகின்றன.

## அங்கத்தினர்

இரண்டாவதாண்டில் 15 அங்கத்தினர்களும் மூன்றாவது ஆண்டில் 49 அங்கத்தினர்களும் இருந்தனர். தானாக அங்கத்தினர் சேர்வதென்பதில்லை. நேரில் சிபார்சு செய்தால் சிலர் சேர்கின்றனர். அவர்களே அடுத்த ஆண்டுகளிலும் தொடர்ந்து இருந்து வருவரென்று கருதவும் இடமில்லை.

## ஆதரவு

முதலாவதாண்டில் சம்மதிப்போருடைய கையொப்பம் வாங்கப்பட்டது. பல அன்பர்கள் இப்பணியை ஆர்வமுடன் செய்தனர். சுமார் 2000 கையொப்பங்கள் கிடைத்தன. அவை குமரனில் அவ்வப்போது வெளியிடப்பட்டிருக்கின்றன. பொதுஜன அபிப்பிராயம் இவ்வியக்கத்துக்கு சாதகமாக இருக்கிறதா என்று பார்ப்பதற்காகவும் அவ்வபிப்பிராயம் வெளிப்படுவதற்குமே அம்முயற்சி செய்யப்பட்டது. முதல் வருஷத்திலேயே அம்முயற்சி வெற்றியளித்துவிட்டதால் பிந்திய ஆண்டுகளில் மேலும் கையொப்பம் வாங்க முயலவில்லை. ஊர் தோறும் உபந்யாசக் கூட்டங்கள் நடத்துதற்கு இடமளித்து உதவி புரிய அன்பர் ஒவ்வொருவரும் முயற்சி செய்தால் மிகவும் பிரயோஜனகரமாக இருக்கும்.

## மாதப்பதிப்பு

எங்கும் மாதர் மறுமண இயக்கம் பரவும்பொருட்டு "மாதர் மறுமணம்" என்ற பெயருடன் மாதாந்திர பத்திரிகையொன்றை வெளியிட முயன்றோம். தாது ஆவணி 26உ யன்று அதன் முதல் இதழ் வெளியிடப் பெற்றது. திருமதி மு. மரகதவல்லியார் ஆசிரியராக இருந்து வருகிறார்கள். அதற்கு அறிஞர் பலருடைய

ஆதரவு கிடைத்துள்ளது. மிகுந்த கஷ்டத்திற் குட்பட்டு சிபார்சு செய்தே சந்தாதார் சிலர் சேர்க்கப் பட்டிருக்கின்றனர். பலஅன் பர்கள் சிரமத்தைப் பொருட்படுத்தாமல் சந்தாதார்களைச் சேர்த்துக் கொடுத்தனர். 1000 சந்தாதாராவது முன்பணம் செலுத்திச் சேர்ந்த பிறகுதான் பத்திரிகை வெளியிட வேண்டுமென்று எண்ணியிருந் தோம். தைமீ முதல் பலபேர் கஷ்டப்பட்டு ஆவணிவரை 400 சந்தாதாரைத்தான் சேர்க்க முடிந்தது. இன்னும் தாமதித்து சந்தா சேர்க்க நினைத்தால் சேர்ந்திருப்பவர் "பத்திரிகை யெங்கே பணத்தை வாங்கிக்கொண்டு பத்திரிகை போடாமலிருக்கிறுயா?" என்று நெருக்கிவிட்டனர். எப்படியோ ஒருவாறு பத்திரிகையை வெளியிட்டு விட்டோம். இன்னும் பலமான உதவி யெதிர்பார்க்கப் படுகிறது.

## பொருளுதவி.

முதலாவதாண்டில் ஐவர் 95-0-0 ரூபாய் நன்கொடை யுதவி னர். குமரன் ஆபீசில் ரூ 154-14-0 கடன் பெற்று முதலாவ தாண்டு முடிந்தது. இரண்டாவதாண்டில் காரியதரிசியின் மாலாய் நாட்டுப் பிரயாணம் நிகழ்ந்தது. மலாய் நாட்டுச் சங்கங்கள் பல இதற்கு உதவிசெய்ய இஷ்டப்படவில்லை. ஆங்கேயுள்ள இளைஞர் கள் சிலர் தெரிந்தும் மறைந்தும் சிறு சிறு தொகையாக ரூ 183-4-0 நல்கினர். மூன்ருவதாண்டில் காரியதரிசியின் பர்மா பிர யாணம் சிறிது நல்ல குறிகாட்டியது. பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கத்தாரும் பலவூர் நகரத்தார்களும் அன்பர்களு மாக ரூ 998-0-0 அளித்துதவினர். அதைக்கொண்டு பிரஸ்தாப ஆண்டு நிகழ்ச்சிகள் சிறப்புற நடைபெற்றன. நிகழ்ந்த இரண் டாண்டுகளிலும் நமது தாய்நாட்டு மக்கள் நன்கொடையாக ஒரு சல்லிகூடத் தரவில்லை யென்பது கவனிக்கத்தக்கது. எத்தனை வழி களில் பணம் செலவாகிறது? இந்த ஒப்பற்ற சீர்திருத்த முயற் சிக்கு உதவி கிடைக்கவில்லை. எத்தனை செல்வர், எத்தனை சீர்திருத் தக்காரர், எத்தனை தேசபக்தர் எல்லாருமிருந்தாலும் இவ்வியக்கம் கஷ்ட நிலைமையில் நடைபெறவேண்டி யிருப்பது கவனிக்கத்தக் கது. பொதுவாகத் தாமாகப் பணஉதவி செய்யும் சுபாவம் நமது ஜனங்கட்கு ஏற்படுவதில்லை யென்பதை இந்த நிகழ்ச்சி வலியுறுத்து கிறது. இவ்வியக்கத்திற்கு இனிமேலாவது மலாய்நாட்டிலுள்ள சங்கங்களும் நகரத்தார்களும் தாய்நாட்டிலுள்ள செல்வமுடைய வர்களும் சீர்திருத்த ஆர்வமுடையவர்களும் இயன்ற அளவு உதவி செய்யக் கூடுமென்று நம்புகிறோம்.

## தாது ஆவணி 30௳ வரை கணக்கு.

| வரவு. | முதல் வருஷம் | | | 2வது 3வது வருஷம் | | |
|---|---|---|---|---|---|---|
| முன் வருஷ இருப்பு | — | — | – | 6 | 4 | 0 |
| அங்கத்தினர் சந்தா | 42 | 0 | 0 | 131 | 6 | 0 |
| நன்கொடை | 95 | 0 | 0 | 1181 | 4 | 0 |
| குமரன் ஆபீஸ் | 154 | 14 | 0 | — | — | – |
| மொத்தம் | 291 | 14 | 0 | 1318 | 14 | 0 |
| **பற்று.** | | | | | | |
| குமரன் ஆபீஸ் (முன் பாக்கிக்கு) | — | — | – | 154 | 14 | 0 |
| சாமான் கொள் முதல் (மாஜிக்லாண்டர்ண் செட்) | 118 | 3 | 0 | 252 | 4 | 0 |
| ஷை (அமைச்சூர் சினிமா) | — | — | – | 500 | 12 | 0 |
| அச்சுக் கூலிச் செலவு | 41 | 13 | 0 | 48 | 9 | 6 |
| உபந்யாசச் செலவு | 41 | 13 | 6 | 61 | 0 | 0 |
| ஸ்டாம்புச் செலவு | 23 | 9 | 3 | 9 | 3 | 0 |
| பிரயாணச் செலவு | 1 | 10 | 0 | 35 | 13 | 0 |
| சில்லரைச் செலவு | — | — | – | 4 | 11 | 0 |
| சிறுகூடல்நகர் குப்பான் அவர்கள் பற்று | — | — | – | 22 | 8. | 0 |
| கட்டுரைப் பரிசு | 10 | 2 | 0 | — | — | – |
| துண்டுப் பிரசுரச் செலவு | 19 | 13 | 0 | — | — | – |
| புத்தகங் கொள் முதல் | 28 | 10 | 3 | — | — | – |
| இருப்பு (பாங்கியில்) | 6 | 4 | 0 | 229 | 3 | 6 |
| மொத்தம் | 291 | 14 | 0 | 1318 | 14 | 0 |

# நன்கொடை அளித்தவர்களின் விபரம்.

### முதலாவதாண்டு.

திருவாளர் மெ. சாமிநாதன் செட்டியாரவர்கள் கல்லுப்பட்டி, 20—0—

திருமிகு மு. மரகதவல்லி அம்மாளவர்கள்,
முனிஸிபல் கௌன்ஸிலர், காரைக்குடி. 10—0—0

| | | |
|---|---|---|
| வத்துப்பகார் நகரத்தார் | ... | 5—0—0 |
| திருவாளர் சுப. அ. அண்ணுமலை செட்டியாரவர்கள், டெலுக்கான்சன். | | 50—0—0 |
| திருவாளர் ஆ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள், காரைக்குடி. | | 10—0—0 |
| | ஆக ரூ. | 95—0—0 |

## இரண்டாவதாண்டு.

(மலாய்நாட்டில்)

| | | | | $ cts. |
|---|---|---|---|---|
| திரு. | ராமநாதன் செட்டியாரவர்கள், ஈப்போ. | | ... | 10—00 |
| ,, | சொ. வீரப்பன் அவர்கள், காரைக்குடி. | | ... | 10—00 |
| ,, | சோம. மாணிக்கம் அவர்கள், தேவகோட்டை. | | ... | 5—00 |
| ,, | அழ. கரு. கருப்பையா பிள்ளை அவர்கள், திருப்பத்தூர். | | | 5—00 |
| ,, | ராம. மலையாண்டி செட்டியாரவர்கள், பினங்கு. | | ... | 1—00 |
| ,, | சி. மு. சுப்பிரமணியன் அவர்கள். | ஷை | ... | 1—00 |
| ,, | ராம. ராம. ராமநாதன் செட்டியாரவர்கள் | ஷை | ... | 2—00 |
| ,, | வீர. ராம. ராமநாதன் அவர்கள் | ஷை | ... | 2—00 |
| ,, | மு. துரைசாமி அவர்கள் | ஷை | ... | 2—00 |
| ,, | பெ. வீ. சீனிவாசன் அவர்கள் | ஷை | ... | 2—00 |
| ,, | அரு. வீர. அருணசலம் செட்டியாரவர்கள் | ஷை | ... | 2—00 |
| ,, | அரு. வினைதீர்த்தான் செட்டியாரவர்கள் | ஷை | ... | 2—00 |
| ,, | மு. நாராயணன் செட்டியாரவர்கள் | ஷை | ... | 2—00 |
| ,, | கு. பழ. பெரியணன் செட்டியாரவர்கள் | ஷை | ... | 1—00 |
| ,, | வெ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் | ஷை | ... | 1—00 |
| | ஒரு அன்பர் | ஷை | ... | 2—00 |
| | அபிமானிகள், கின்னான். | | ... | 7—00 |
| ,, | குப. நல்லகுமாரு செட்டியாரவர்கள், வேந்தன்பட்டி. | | | 10—00 |
| ,, | ராம. வீர. மு. சாம்நாதன் செட்டியாரவர்கள், சிங்கப்பூர். | | | 5—00 |
| ,, | அரு. அண்ணுமலை செட்டியாரவர்கள், கடியாபட்டி. | | ... | 10—00 |
| ,, | மு. நடராஜன் செட்டியாரவர்கள், காரைக்குடி. | | ... | 10—00 |
| ,, | சுப. க. அ. கிருஷ்ணன் செட்டியாரவர்கள், சோழபுரம். | | | 10—00 |
| ,, | ராம. ச. | சுங்குரும்பை | ... | 2—00 |
| ,, | சுப. ராம. | ஷை | ... | 3—00 |
| ,, | வெ. ராம. அழ. | ஷை | ... | 2—00 |
| ,, | சி. மு. சொ. | ஷை | ... | 2—60 |
| ,, | வி. சுப. | ஷை | ... | 2—00 |

| | | | |
|---|---|---|---|
| ,, | ஒரு அன்பர் ஷை | ... | 1—00 |
| ,, | சித. ராமசாமி அவர்கள், சிங்கப்பூர். | ... | 5—00 |

ஆக நிங்கி 119-க்கு ரூ. 183—4—0

## மூன்ருவதாண்டு.

(பர்மாவில்)

| | | | |
|---|---|---|---|
| திரு. | அரு. அரு. அழ, காசிச்செட்டியார் அவர்கள், தக்கி. | | 5—0—0 |
| ,, | மு. சித. மு. முத்தையா செட்டியார் அவர்கள், லேப்பட்டான். | | 3—0—0 |
| ,, | அ. வீர. அ. சிட்குவின். | ... | 10—0—0 |
| ,, | முரு. பழ. பெரி. ஷை | ... | 5—0—0 |
| ,, | மு. லெ. ஷை | ... | 5—0—0 |
| ,, | அருணுசலம் செட்டியாரவர்கள், காரைக்குடி. | ... | 5—0—0 |
| | மீன்லா நகரத்தார். | ... | 25—0—0 |
| | சூப்பிங்கான் நகரத்தார். | ... | 25—0—0 |
| | சீக்கோன் நகரத்தார். | ... | 31—0—0 |
| | நந்தலீன் நகரத்தார். | ... | 31—0—0 |
| ,, | ராம. கோவிந்தன் அவர்கள், நந்தலீன். | ... | 10—0—0 |
| ,, | மு. வீ. அ. அண்ணுமலே செட்டியாரவர்கள், நந்தலீன் | | 5—0—0 |
| ,, | கூ. கண. நா. சொ. கண்ணப்ப செட்டியார் அவர்கள், நந்தலீன். | | 5—0—0 |
| ,, | பழ. ப. மெய்யப்ப செட்டியார் அவர்கள், சீக்கோன். | | 5—0—0 |
| ,, | ராம. மு. ராம. முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள், தேக்கோன். | | 5—0—0 |
| | புரோம் நகரத்தார், | ... | 21—0—0 |
| ,, | ப. ராம. நாகப்ப செட்டியாரவர்கள், அவுக்கான். | ... | 5—0—0 |
| ,, | பூ. க. முத்துக்குமாரசாமி அவர்கள், ஈந்தட்டா. | ... | 5—0—0 |
| | சூம்பியோ நகரத்தார். | ... | 21—0—0 |
| | சவுங்கோம் நகரத்தார். | ... | 11—0—0 |
| | ஜமனில் பல அன்பர்கள். | ... | 23—0—0 |
| ,, | அ. க. அ. சித. அழ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள், அய்மேன். | | 10—0—0 |
| | ஒரு அபிமானி, மாந்தளே. | ... | 10—0—0 |
| ,, | காந்திதாஸன், பிரான்மலே. | ... | 25—0—0 |
| ,, | மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள், மெக்டிலா. | | 25—0—0 |

5

| | | |
|---|---|---|
| ,, | மெ. வ. வள்ளியப்ப செட்டியார் அவர்கள், மெக்டிலா. | 15—0—0 |
| ,, | Bhimsen somshanker Yenaungyan. ... | 11—0—0 |
| | தோங்குவா நகரத்தார். ... | 15—0—0 |
| | வாக்குமா நகரத்தார். ... | 85—0—0 |
| | சூமங்கை நகரத்தார். ... | 24—0—0 |
| | ஒரு அபிமானி, மூப்பின். ... | 20—0—0 |
| ,, | தெ. வி. சொ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள், நாச்சியார்புரம். | 15—0—0 |
| ,, | பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கம், ரங்கூன். | 400—0—0 |
| ,, | எவுண்டம் வகையறு நகரத்தார். ... | 51—0—0 |
| ,, | தீ. க. வெ. சேவுகன் செட்டியாரவர்கள், கீமெந்தான். | 3—0—0 |
| ,, | வி. சா. காசிச்செட்டியாரவர்கள், டேரியா. ... | 10—0—0 |
| ,, | மெ. ராம. சுப. முத்தையா செட்டியாரவர்கள், டேரியா. | 3—0—0 |
| ,, | நா. சிதம்பரம் செட்டியாரவர்கள், ரங்கூன். ... | 15—0—0 |
| | ஆக ரூ | 998—0—0 |

## குறிப்பு

இந்த ஆண்டுகளில் பணம் உதவியும், உபந்யாசம் புரிந்தும், யோசனைகள் சொல்லியும், துண்டுப் பிரசுரங்களைப் பெற்று வழங்கியும், உபந்யாசம் புரிய இடமளித்தும், வந்து கேட்டும் பிறவழிகளாலும் உதவிபுரிந்த எல்லாஅன்பர்கட்கும் நன்றி செலுத்துகிறோம்.

## வேண்டுகோள்

மாதர்க்கு உரிமை நல்குவதில் ஆர்வமுள்ள பெரியோர்களே! வாலிபர்களே! உதவி செய்யுங்கள்! துணிபு கொள்ளுங்கள்! லட்சங்கணக்கான துண்டுப் பிரசுரங்களை வெளிவரச் செய்யுங்கள்! எண்ணற்ற உபந்யாசங்கள் புரிய ஏற்பாடு செய்யுங்கள்! புத்தகங்களும் படங்களும் வெளிவர உதவி புரியுங்கள்! விதவையாகக் கிடந்து வருந்தும் சகோதரிகளின் கண்ணீரைத் துடையுங்கள்! அவர்களுக்குக் கல்வியும் தொழிலும் நல்க முயலுங்கள்! "ஒன்றே செய்யவும் வேண்டும்; ஒன்றும் இன்றே செய்யவும் வேண்டும்" நாளை நாளை என்பதில் பயனில்லை யென்பதை உணருங்கள்! ஆண்மையுடன் தொண்டாற்ற முயலுங்கள்! வெற்றிமாலை சூடுங்கள்!

சோ. முருகப்பன்,

காரியதரிசி, மாதர் மறுமண சகாய சங்கம்.

# வியாழநோக்கம்.

குட்டிச்சாத்தன், A B C D E F etc

ஆண் குழந்தைக்கானாலும் பெண் மகவுக்கானாலும் சரி சிறிது வயது ஏறினால் சோதிடரைக் கூப்பிட்டு சாதகத்தைப் பார்க்கச் சொல்கிறார்கள். எதற்காக? கல்யாணம் எப்பொழுது வருமென்று. படிக்கிற ஜாதியார் பரீக்ஷையில் தேறுவானா என்று சோசியம் பார்ப்பதுபோல் பணக்கார ஜாதியார் கல்யாணம் எப்பொழுது கைகூடுமென்று கேட்க ஆரம்பிக்கின்றனர். கல்யாணம் வருவதற்கு முதலில் தேவையாக இருப்பது வியாழன் நோக்கம். ஐயரைக் கண்டவுடன் "நம்ம பயலுக்கு எப்பொழுது வியாழநோக்கம் வருகிறது? பாருங்கள்" என்ற குரலை எங்குங் கேட்கலாம். இந்த வியாழநோக்கம் திரிந்து சீரழிந்து பெண்கள் வாயில் "சாளமோக்கம்" என்று வருவதைப் பல இடங்களில் காண்கிறேன். வியாழன் நோக்கினால் கல்யாணம் வருமென்று சோதிடர்கள் கூறுகிறார்கள். "யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே" என்ற மாதிரி கல்யாணத்துக்கு முன்னாலே இந்த வியாழநோக்கந்தான் முன்னறிவிப்பாக இருக்கிறது. இதை லேசாக நினைக்கப்படாது. இதுவரை நடந்திருக்கிற கல்யாணங்கள் யாவும் வியாழநோக்கம் வந்துதான் நடந்திருக்கிறது. வியாழன் நோக்கம் ஆணுக்குத்தான் வருமென்று கருதவேண்டாம். பெண்ணுக்கும் வருகிறது. முதல் தாரத்துக்கு மட்டுந்தான் வருமென்று கருதுகிறீர்களா? இல்லை. மறுதாரம் மூன்றாந்தாரம் முப்பதாந்தாரம் வரை ஒவ்வொன்றுக்கும் வந்துதான் தீருகிறது. வியாழன் நோக்கம் இல்லாமல்தான் கலியாணம் நடக்கமுடியாதே! எத்தனை தாரம் செய்தாலும் ஒவ்வொரு கல்யாணத்துக்கும் வியாழநோக்கம் வந்துதானே ஆகவேண்டும்! ஆல்ரைட். சோசியரைக் கேட்டேன். வியாழநோக்கம் விதவைப் பெண்ணுக்கு வருமா வாதா! ஐயர் விழிக்கிறார். சந்திரனை வியாழன் பார்ப்பதுதான் வியாழன் நோக்கம். வியாழன் ஒரு வருஷத்திற்கொருதரம் வீடு பெயர்கிறான். 5, 7, 9 பார்வை ஸ்தானங்கள். எப்படியும் சாதகமென்று இருந்தால் 12 வருஷத்தில் மூன்று வருஷம் வியாழநோக்கந்தான். விதவைப்பெண் ஜாதகத்தைத் தள்ளி

நடக்க முடியாது. என்ன சார்! ஜோசியரவாள்! "விதவைப் பெண்ணுக்கு வியாழநோக்கம் வருமா? வராதா?" பாவம்! ஐயர் என்ன செய்வார். சாஸ்திரம்விதவைக்கு சாதகம்! ஐயர் அபிப்பிராயத்துக்கு சாதகம்! இவர்வாய் ஒழுங்காகத் தீர்ப்புச் சொல்லவில்லை.

இரவு, ஜாதகாலங்காரம், சாதக சிந்தாமணி, ஜாதக சந்திரிகை, சுந்தரசேகரம் ஆகிய புத்தகங்களில் நான் முன் படித்தது படிக்காதது எல்லாவற்றையும் பொருக்கினேன். படுக்கையில் படுத்தபடியே பார்த்துக்கொண் டிருந்தேன். கதவு தட்டும் சப்தம் கேட்டது. திறந்தேன். அடர்ந்து நீண்டு சுருண்டு வெளுத்த தாடியும் வழுக்கைத் தலையும் பூநூலும் கமண்டலமும் தடிக்கம்பும் தாங்கிய கிழவர் ஒருவர் எதிரே நின்றார். புன் சிரிப்புடன் நீ தீர்க்காயுஷாக இருக்கக் கடவாய் என்றார். தங்களைத் தெரியவில்லையே என்றேன். நான்தான் தேவகுரு; வியாழன்; பிரகஸ்பதி யென்றும் சொல்வார்கள் என்றார். "நான் தீர்க்காயுஷாக இருக்கிறேன்; நல்ல சமயத்தில் வந்தீர்கள்; விதவைப் பெண்களுக்கு உங்கள் நோக்கம் ஏன் கிடைக்கிறதில்லை?" என்று கேட்டேன். என் கையைப் பிடித்துக் கொண்டே வந்து விரித்துக்கிடந்த பிரப்பம்பாயில் உட்கார்ந்தார். நானும் உட்கார்ந்தேன். அவர் சொல்கிறார்:—தம்பி என்மேல் ஆத்திரப்பட வேண்டாம். நாங்கள் நடப்பதில் பிசகு கிடையாது. மழை பெய்கிறதே அது விதவைகளைத் தள்ளிவிட்டு மற்றவருக்கு மட்டுமா பெய்கிறது? வெயில் விதவைகளுக்கு விலக்காகவா எரிக்கிறது? காற்று விதவைகளுக்கு இன்பமளிக்க மறுக்கிறதா? இயற்கையும் கடவுளும் அறிஞரும் எல்லாரிடத்திலும் ஒரே மாதிரிதான் கருணை காட்டுவார்கள். நான் மட்டும் முட்டாளா? அக்கிரமக்காரனா? எனக்கு யாருடைய தயவு தேவை? தம்பி! சாந்தமாகக் கேள்! என்னுடைய நோக்கமிருக்கிற காலத்தில்தான் கல்யாணம் நடக்குமென்று சோதிட சாஸ்திரம் கூறுவது வாஸ்தவம். மனிதராகப் பிறந்த யாவருக்கும் என்னுடைய நோக்கம் பஞ்சமில்லாமல் கிடைக்கிறது" என்றார். இந்த மழுப்பலில் காரியமில்லை. எல்லோருக்கும் கல்யாணம் ஆவானேன். விதவைக்கு மட்டும் ஆகாமல் போவானேன் என்றேன். அவர் என்ன சொன்னார் தெரியுமா? விதவைப்பெண்கட்கும் வியாழநோக்கம் வருகிறது. கூறைபோட்ட

நிலம் மாதிரி போய்விடுகிறது. மழை எங்கும் பெய்கிறது. ஆனால் வயலின் மேலே கூரையைக் கட்டி வைத்தால் அது யாருடைய் குற்றம்? மழையின் குற்றமா? அது மாதிரி என் நோக்கம் இருக் கிறது; அதைக் கல்யாணமாகச் செய்துகொள்ளவேண்டும். அப் படிச் செய்யாமல் இழவாய்ச் செய்துகொள்கிறார்கள். இருந்தாலும் என் பார்வை வீணாவதில்லை. கன்னிப் பெண்ணின்மேல் என் பார்வை விழுந்தால் ஏற்றுக்கொண்டு கல்யாணம் செய்கிறார்கள். விதவைப்பெண்ணின் பேரில் என் பார்வை விழுந்தால் கவனிக்கிற தில்லை. ஆகவே பகிரங்க மணமாக நடக்காமல் ரகசிய மணமாக நடக்கிறது. காந்தர்வ மணமாக நடந்துவிடுகிறது. ஜாதியார் தடுக் காமலிருந்தால் பேஷாக்க் கல்யாணம் நடக்கும். கூரையைப் பங்கா வாகக் கட்டி வைத்துக்கொண்டு "என் நிலத்தில் மழை பெய்ய வில்லையே" என்று புலம்புவதில் பலனேது? கூரையைப் பிரி! வயல் விளையும்! என்றார் கிழவர். நியாயந்தானே! எத்தனையோ ஆயிரம் வாலிபர் இருபது வயதுக்கு மேலாகியும் கல்யாண மில்லாமலிருக்கிறார்களே! இவர்கட்கு வியாழநோக்கம் வந்து வந்து போகிறதே! இவர்களுடைய உள்ளம் நெருப்பாகத்தானே பற்றி யெரிகிறது. இவர்களுடைய உள்ளத்தில் எரியும் ஆசை யெனும் நெருப்பு விதவைப் பெண்கள்மேல் வியாழன் நோக்கம் விழாமல் தடுக்கிற கூரையில் பிடித்து சாம்பலாக்கினால்? விதவையா கிய வயல் விளையுமல்லவா? வாலிபர்களே! கிளம்புங்கள் என்று எழுந்தேன். என் மனைவி விடிந்து எட்டு மணி ஆகிவிட்டது. இன் னும் தூங்குகிறீர்களே! யாரோ ஒரு பையன்வந்து காத்துக்கொண் டிருக்கிறான் என்றாள். சரி சரி. இவ்வளவு சங்கதியும் கனவா?

---

## கருணை உள்ள இடத்தில் — — — விதவை இல்லை.

# பெண் சக்திக் கும்மி

சுவாமி சுத்தானந்த பாரதியார்

விண்ணமுதம்பொழி வெள்ளி நிலாவில்,
விடுதலைக்கும்மி யடித்திடுவோம்.
பெண்ணமு தங்களின் பிறப்புரிமையைப்
பேசிக்கும்மி யடித்திடுவோம்!

பாலிற்கலந்த பசுந்தமிழ்த்தேனெனப்
பண்களிசைத்து நடித்திடுவோம்.
காலிற் சிலம்பு கலீரெனப் பொன்மலர்க்
கைக ளடித்துக் குதித்திடுவோம்!

கட்டுகளை முட்டுக் கட்டுகளை வெட்டிக்
காலப்பயிருக் குரம்போட்டோம்;
தட்டுத்தடைகளில் லாத சுதந்திரத்
தங்கக்கனிவளம் பொங்கிடவே!

தண்ணீர்சுமக்கவும் சமைத்துப்போடவும்
கணவன் அடியளாய் வாழ்ந்திடவும்
பெண்பிறந்தது, கற்றல் பிழையெனப்
பேசும் பழம்பொய்யை யேசிடுவோம்.

கற்பது பெண்ணுக்குக் கற்பென்போம்—தெய்வக்
கலைமகளும்மொரு பெண்ணன்றோ?
அற்புதமாம் அறி வாற்றல்கள் யாவையும்
ஆண்களுக் குள்ளது பெண்களுக்கும்.

வீட்டுக்குள்ளே யடை பட்டுக்கிடந்தநம்
வீரங் குமுறுநின் றூர்கலிபோல்,
நாட்டுக்கு நல்ல பணி செய்வோம்—நாட்டு
நலமும் வீட்டு நலமென்போம்.

பொருத்த மில்லாத பொம்மை மணம்—வீட்டைப்
பொட்டலடிக்கும் வாசுல்நம்.
அருத்த மற்ற சடங்குகள் யாவையும்
அள்ளிப் பழுங்குழி தள்ளிடுவோம்.

கதிமுடிந்த கணவனுக் காகநம்
காய்க்கும் இளமையை மாய்த்திடவோ?
விதியென் றுயுள் விதவைசெய்—மூட
விதியைக் காலால் மிதித்தெறிவோம்!

இயற்கை யழகைச் சிரைத்து முக்காடிடல்
என்ன பயித்தியமோ பாலமடீ?
அயலவர்பரி காசஞ்செய் மோசுனர்—
ஆண்பெண் சமத்துவக் காலமடீ—இது
ஆண்பெண் சமத்துவக் காலமடீ!

அல்லியைப் போலா சாண்டிடுவோம்—அருள்
ஔவையைப்போற்கவி பாடிடுவோம்!
வள்ளியைப்போல மனங்கொண்ட காதல்
மணாளனை யின்புறக் கூடிடுவோம்!

தலை நிமிர்ந்தனம் சமவுரிமைகள்
தர்மநியாயமாய்த் தாவென்போம்!
விலையடிமையைப் போலினி வாழ்கிலோம்;
வெற்றிபெற வழி பெற்றுவிட்டோம்!

பெண்ணுங் கணவனுங் கண்ணுங் கதிரும்போல்
போழ கன்பறி வாற்றலுடன்
தண்ணூர் தரையென தர்மப்பயிர்செய்து
சக்தி சிவனென வாழ்ந்திடுவோம்—சுத்த
சக்தி சிவனென வாழ்ந்திடுவோம்!

# இரண்டு ஜோடிகள்.

இவர்களைப் பிரித்துச் சேர்ப்பதுதான் சரியென்று உங்களுக்குத் தோன்றுகிறதா?





அப்படியானால் விவாகப் பிரிவினையும், மாதர் மறுமணமும் தேவை!

# பத்திராதிபர் குறிப்புகள்

## மகாத்மா புத்திமதி

குஜராத்திய இலக்கிய மகாநாட்டில் மகாத்மா காந்தி பேசும்போது, "மாதர்களைப்பற்றி புத்தகம் எழுதும்போது கலக்கமான செய்திகளை எழுதவேண்டாமென்றும், பெண்கள் மனிதர்க்கு முதலில் தாய்மார்களாகவும், பின்னரே மனைவிமார்களாகவும் விளங்குவதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்" என்று கூறியிருக்கின்றார். தமிழ்க் காவியங்களிற் பல ஆணும் பெண்ணும் கூடியிருந்து படிக்கமுடியாதபடி ஆபாஸமாக எழுதப்பட்ட பகுதிகளைக் கொண்டு விளங்குகிற தென்பது இங்குகுறிப்பிடத்தக்கதாகும். இனி உண்டாக்கப்படும் நூல்களில் இம்மாதிரியான அசிங்கங்கட்கு இடம் கொடுக்கா திருக்கவேண்டுமென்று மகாத்மா எடுத்துரைப்பது மிகவும் மகிழ்ச்சிக்குரிய தன்றோ? பழய நூல்களைப் புதிதாகப் பதிப்பிப்போர் இவ்விஷயத்தில் கவலை யெடுப்பதும் இன்றியமையாதது.

## இரு பெண்மணிகள்

லாகூரில் நடைபெற்ற அகில இந்திய மாதர் மகாநாட்டில் ஸ்ரீமதி. சோண்டி எனும் பெண் தலைமை வகித்தார். இவர் சமீபத்தில் ஜெர்மெனியில் நடைபெற்ற ஒலிம்பிக் காட்சிக்குச் சென்று திரும்பியவர். இவர் பேசும்போது, "ஜெர்மனியில் பெண்கள் வீட்டு வேலைகளைச் சரிவரக் கவனிப்பதில் காலங் கழிக்கின்றார்களென்றும், உத்தியோகங்களில் பெண்கள் அமர இடமில்லையென்றும், அதனையே இந்தியப் பெண்களும் பின்பற்ற வேண்டுமென்றும், இப்போதே ஆண் மக்கள் வேலையில்லாமல் திண்டாடுகின்றார்களென்றும்" பேசியிருக்கின்றார். வட்டமேஜை மகாநாட்டுக்கு இந்தியப் பிரதிநிதியாகச் சென்றிருந்த ஸ்ரீமதி. பீகம்ஷா நவாஸ், "இந்தியாவுக்கும் ஜெர்மெனிக்கும் சம்பந்தமேயில்லையென்றும், அவர்கள் சித்தாந்தம் சந்தோஷமாக இருப்பதும் குழந்தை பெறுவதுந்தானென்றும், இந்தியாவின் ஜனத்தொகை இப்போதே ஏராளமாக இருக்கிறதென்றும், பெண்கள் சர்க்கார் உத்யோகங்களைக் கைப்பற்றிப் பணம் சம்பாதிக்க வேண்டுமென்றும் பதில் இறுத்திருக்கின்றார்.

சீமைக்குப் போனாலும் சிலருக்குப் பழய மயக்கம் தெளியவில்லை. என்ன செய்கிறது. வைதீகர் அடித்த ஆணி அவ்வளவு ஆழத்திற்கு இறங்கியிருக்கிறது.

## ஹைதராபாத்

அக்டோபர் 30-ந் தேதியன்று ஹைதராபாத் ஸ்திரீகள் 10-வது மகாநாடு நடைபெற்றது. அதில் தலைமை வகித்த இராஜ குமாரி துருஷேவார் பேசியதின் ஒரு பகுதி வருமாறு:—

உலகத்திலுள்ள ஸ்திரீகள் தங்களுடைய பொறுப்பு இன்ன தென்பதை உணர ஆரம்பித்துவிட்டபிறகு இந்திய ஸ்திரீகள் பின் வாங்காமல் மனித சமூகத்திற்குச் சேவை செய்வதில் முன்னணி யில் நிற்கவேண்டும். ஹைதராபாத் எவ்வளவு சிறியதாயிருந்த போதிலும் அறிவையும் வித்தையையும் பெருக்குவதில் அது தன் னுடைய பங்கைச் செய்திருக்கிறது. அநேக சமஸ்தானங்களில் ஸ்திரீகள் கலாசாலைகள் கிடையா. ஆகவே ஸ்திரீகளுக்காகவென்று ஏற்பட்டிருக்கும் ஒஸ்மேனியா சர்வகலாசாலைக் காலேஜைப்பற்றி நான் குறிப்பிடும்பொழுது எனக்கு திருப்தியும் சந்தோஷமும் உண் டாகிறது.இலவச ஆரம்பக் கல்வியை வெகுவிசாலமாகப்பரவச்செய் யவேண்டியது அத்தியாவசியம். இப்பொழுதிருக்கும் முறை பரிசீ லனை செய்யப்பட்டு, திருத்தியமைக்கப்படவேண்டும். இது சம் பந்தமாக ஹைதராபாத் சமஸ்தான கல்வி விசாரணைக் கமிட்டி சீர் திருத்தங்களைச் செய்ய ஏற்கனவே நடவடிக்கை எடுத்துக்கொண் டிருப்பதை நான் மிகவும் பாராட்டுகிறேன்.

குழந்தையின் முதல் உபாத்தியாயர் அல்லது போதகர் தாயா வாள். ஆகவே தாய்மார்கள் நல்ல அறிவைப் பெற்று உயர்ந்த குணுதிசயங்களையும், கொள்கைகளையும் அடைந்தாலொழிய வரப் போகும் சந்ததிகளை முன்னேறச் செய்ய அவர்களால் முடியாது. இந்தியா வெகு முக்கியமாகக் கவனிக்கவேண்டிய மற்றொரு பிரச்னை யென்னவென்றால் ஸ்திரீகளின் பொருளாதார சுதந்திரமே. கவுரவமான வாழ்க்கையை நடத்தி தம்மைக் காப்பாற்றிக்கொள் ளும் நிலைமை ஒவ்வொரு ஸ்திரீக்கும் ஏற்படவேண்டும்.

### கோச்சி மகாநாடு

நவம்பர் 1உ எர்ணுகுளத்தில் நடைபெற்ற கொச்சி மா.தர்மகா நாட்டின் தலைவர் ஸ்ரீமதி கௌரியம்மா பேச்சில் குறிப்பிடத்தகுந்த உரை நிரம்பியிருந்தது. அவர் "பண்டை நாளில் பெண்கள் உயர்வாக மதிக்கப்பட்டனர். பின்னர் தாழ்த்தப்பட்டனர். மேனாட்டு நாகரீகத்தின் தொடர்பால் நிலைமை சற்று மாறியிருக்கிறது. பெண்களிடையே கல்வியறிவைப் பரப்ப வேண்டும். சுகாதாரம் நன்கு போதிக்கப்படவேண்டும். வயது வந்தவர்கட்கு அவசியம் கல்வி கொடுக்க வேண்டும். உடல் வலிமை யில்லாத பெண்கட்கு கர்ப்பத்தடை முறையைப்பற்றிய போதனை மிகவும் அவசியமாகும்." என்று பேசியுள்ளார். இவை செய்யப்படுமானால் பெண்ணுலகு சிறப்புறும். அதன் பலனை ஆண்மக்கள் பெறலாமன்றோ?

### சட்டத்தைப் பயன்படுத்தவேண்டும்

அக்டோபர் 31உ மத்தியமாகாண ஸ்திரீகள் மகாநாடு சானோரில் நடைபெற்றிருக்கிறது. அம்மகாநாட்டுத் தலைவியின் பேச்சில் "தீரத்துடனும் உற்சாகத்துடனும் சமூகத்திலுள்ள கேடான பழக்கங்களைப் போக்கப் பாடுபடா விட்டால் சட்டசபைகளில் சமூக சீர்திருத்தச் சட்டங்களை நிறைவேற்றுவதால் பிரயோசனமில்லை" என்று பேசியிருக்கிறார். நமது நாட்டில் விதவா விவாகம் செய்யலாம் என்று சட்டமியற்றி 80 ஆண்டுகளாகின்றன. பயனென்ன? அனேகருக்கு அப்படியொரு சட்ட மிருப்பதாகவே தெரியாது. நம்முடைய தொண்டுக்கு சட்டத்தை உதவியாகக் கொள்ள வேண்டுமே யன்றி சட்டமே சகலத்தையும் செய்து விடுமென்று நம்ப ஒன்றுமில்லை. ஆங்காங்குள்ள பெண்மக்களும் பிறரும் துணிந்து தீவிரமாக முயற்சி செய்தல் அவசியமாகும்.

**விதவை கண்ணீர் — —**

**— — வீட்டை அழிக்கும்.**

## :: நிகழ்ச்சிகள் ::

### பதிவான விதவா விவாகங்கள்

இந்தியாவில் 36ஞு ஜுலைமாதத்தில் நடந்த விதவா விவாஹங்கள்:—

| | |
|---|---|
| பஞ்சாப் மாகாணம் | 112 |
| ஐக்ய மாகாணம் | 114 |
| மத்ய மாகாணம் | 15 |
| பம்பாய் மாகாணம் | 13 |
| பெங்கால் மாகாணம் | 110 |
| பீகார் போலீஸார் மாகாணம | 26 |
| | 390 |

ஆகஸ்டு மாதத்தில் இந்தியாவில் நடந்த மறுமணங்கள் :—

| | |
|---|---|
| பஞ்சாப் மாகாணம் | 51 |
| ஐக்கிய மாகாணம் | 93 |
| மத்ய மாகாணம் | 16 |
| பம்பாய் மாகாணம் | 5 |
| சென்னை மாகாணம் | 1 |
| வங்காள மாகாணம் | 69 |
| பீகாரும் ஒரிஸாவும் | 6 |
| ராஜபுதனம் | 4 |
| | 245 |

1936-ல் செப்டம்பர் மாதத்தில் இந்தியாவில் நடந்த மறுமணங்கள்.

| | |
|---|---|
| பஞ்சாப் மாகாணம் | 49 |
| ஐக்ய மாகாணம் | 118 |
| மத்ய மாகாணம் | 22 |
| பம்பாய் மாகாணம் | 4 |
| வங்காள மாகாணம் | 80 |
| பீகார் ஒரிஸா | 19 |
| மொத்தம் | 292 |

### இரண்டு மறு மணங்கள்

மூல்தான்யாவிலுள்ள ஸர். கெங்காராம் விதவா ஆச்ரமத்தில் நாளது சூலைமீ 27உ மஞ்சேவாலா (பஞ்சாப்) ஜில்லாவிலுள்ள ஸ்ரீமதி. வீராம்பாய் பேவாலால் கிஷன்ஸந்த் என்பவருக்கும், பாயிகலூ ராம்மூலாஜும் என்பவருக்கும் விவாகம் நடைபெற்றது. அகமத்பூரிலுள்ள ஸ்ரீமதி. பகவான் தேவிக்கும், தீனுப்பூரிலுள்ள லாலா லேக்க ராஜாவுக்கும் ஷை இடத்தில் விவாகம் நடைபெற்றது.

அச்சமயம் ஆண்களும், பெண்களுமாக ஏராளமான மக்கள் கூடியிருந்தார்கள். விவாகச் சடங்கு முடிந்ததும் சிற்றுண்டி வழங்கப்பட்டது. கடைசியில் மஹ்தா வாசுதேவர் என்னும் பெரியார் மணமக்களை அறிமுகப்படுத்தி வைத்து விதவா விவாகத்தின் அவசியத்தை எடுத்துக் கூறினர்.

### லூதியானுவில் கலப்பு மறுமணம்

லூதியானுவிலுள்ள லாகூர் வாசிகளின் தர்ம சாலையில் 15-7-36 ப்ரம் மண வகுப்பைச் சேர்ந்த பண்டிட் ரூபலால் என்பவருக்கும், காயஸ்த வகுப்பைச் சேர்ந்த பீபீ கெங்காதேவி என்பவருக்கும் அதி விமரிசையாக விவாகம் நடைபெற்றது. ஆண்களும் பெண்களுமாக 500 பேருக்கு மேற்பட்ட முக்யஸ்தர்கள் விஜயஞ் செய்திருந்தது குறிப்பிடத்தக்கது. முக்கியமாக லாகூர் விதவா விவாக சகாய சங்கக் காரியதரிசி வந்திருந்து நடவடிக்கைகளில் கலந்து கொண்டது பெரிதும் சந்தோஷகரமானது. மணமகனைத் தேர்ந்தெடுப்பதற்காக 3 கூட்

டங்கள் நடைபெற்றன. மணமகளாகிய பீ பீ கெங்காதேவி தானுகவே பண்டிட் ரூபலாலைத் தேர்ந்தெடுத்துக்கொண்டார்.

அடிஷனல் டிஸ்ட்ரிக்டு மாஜிஸ்ட்ரேட் முன்பு மணமக்கள் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தார்கள். பண்டித விஷ்ணுதத்தர் வேத மந்திரங்களால் கல்யாணத்தை நடத்தி வைத்தார்.

பிறகு கிஸோர்லாலும் விஜயஞ்செய்திருந்த உபகாரியதரிசியும் ருசிகரமான பிரசங்கம் செய்தார்கள். இதனல் ஜனங்களிடத்தில் பெரியதொரு உற்சாகம் காணப்பட்டது. பிறகு வந்திருந்தோரனைவருக்கும் சிற்றுண்டி வழங்கப்பட்டது. மணமகனின் தந்தையார் ஹூதியானவிலுள்ள லாகூர் தர்மசாலைக்கு ரூ. 50ம், இதர சபைகட்கு ரூ. 16ம் இனமாகக் கொடுத்தார். வந்தனத்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

## பாலம்பூரில் விதவா விவாகம்

காங்கடா ஜில்லாவிலுள்ள பாலன்பூரில் 5-6-36ல் விதவைப் பெண்ணுன ஸ்ரீமதி. சுத்தியென்பவளுக்கும், வந்தலாவிலுள்ள லாலா க்ருபாலால் என்பவருக்கும் பூர்ணமான வைதீக முறைப்படி விவாகம் நடைபெற்றது. விவாஹச் சடங்கை பண்டிட் ராமச்சந்திர சாஸ்திரியும், விமலானந்தரும் நடத்தி வைத்தார்கள். பண்டிட் விமலானந்தர் விதவா விவாகத்தைப்பற்றி மக்களிடையே பெரியதோர் உணர்ச்சி உண்டாக்கும்படி ரஸமான பிரசங்கம் செய்தார்.

## விதவா விவாஹம் சரியானதே

மீரட் ஜில்லாவிலுள்ள பில்குவாவில் 12-8-36ல் வைசியர்களின் சமூகக் கூட்டத்தில் ஏகமனதாக விதவா விவாகத்தை ஒப்புக்கொண்டு தீர்மானஞ் செய்திருக்கிறுர்கள். இதற்கு முன் மறுமணம் காரணமாக ஜாதியை விட்டு நீக்கப்பட்டவர்களும் கூட இப்பொழுது சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறுர்கள். பிறகு, லாலா ஸ்ரீராம் வீட்டில் நடைபெற்ற நிலா விருந்திற்கு இதுவரை விலக்கப்பட்டு இப்போது புதிதாகச் சேர்த்துச்கொள்ளப்பட்டவர்களும் கலந்துகொண்டார்கள். அவ்வூரிலுள்ள பெரிய குடும்பத்தைச் சேர்ந்த பலரும் விருந்துக்கு விஜயம் செய்திருந்தார்கள்.

## பம்பாயில் விதவா விவாகம்

பம்பாயிலுள்ள மாதோ ஆஸ்ரமத்தில் செப்டம்பர் 3உ பிராமண விதவைப்பெண்ணுன ஸ்ரீமதி லீலாவதிக்கும், டாக்டர் மாதவராவ் ரெங்காச்சார்ய ரெட்டி அவர்களுக்கும் மணமகளின் தகப்பனர் கிருஷ்ணராவ் அவர்களின் தலைமையில் மறுமணம் நடைபெற்றது. பண்டிட் டாகுர் தத்தர் பிரேமி என்பவரும், உகேல் சாஸ்திரி என்பவரும் வேத சாஸ்திரத்தின் மூலமாக விவாகத்தை நடத்தி வைத்தார்கள். இவ் வைபவத்திற்கு ஆண்களும், பெண்களுமாக பலபேர் வந்து சிறப்பித்தனர்.

## நிசவுலில் விதவா விவாகம்.

பிராமண குலத்தைச் சேர்ந்த 22-வயதுள்ள ஒரு விதவைப் பெண் கெட்ட நடத்தையில் இறங்கும் சமயத்தில் நிசவுல் ஆர்ய சமாஜத்தின்

பிரமுகரான பண்டிட் பகவாத்பிரசாத் என்பவர் அந்தப் பெண்ணை கெட்ட நடத்தையில் இறங்குவதிலிருந்து தடுத்து தன்னுடைய மகளைப் போல் வளர்த்து வந்தார். 9-8-36ல் இந்தப் பெண்ணைவாகத்லாவாசியான 36 வயதுள்ளபண்டிட் தனுஷ்தாரிபாண்டே என்பவருக்குவைதீக முறைப்படிவிவாகம் நடத்தி வைக்கப்பட்டது. பகவாத் பிரசாத் என்பவர் தன் சக்திக்குத் தகுந்தபடி பெண்ணுக்குச் சீதனங்களும் கொடுத்தார். இவ்வமயம் நடந்த விருந்தில் அனேக பிரமுகர்கள் கலந்து கொண்டார்கள்.

## ஜைனருக்குள் விதவா விவாகம்

ஜைன விதவா ஆஸ்ரமத்தின் மூலமாக 12-9-36ல் மாலையில் குஜராத் வாசியான சேட் சிமன்லால்ஸ்வேதாம்பர் என்ற ஜைனருக்கும் ஸ்ரீமதி. குமாரி சாந்தாபாயிதிகம்பர் என்ற ஜைனர்க்கும் அதிக விமரிசையாக விவாகம் நடந்தது. அந்தக் கல்யாண ஊர்வலத்தில் அநேக பிரமுகர்கள் கலந்து கொண்டார்கள். அவ்வமயம் கஸ்தூர்சந்த என்ற ஜைனர் பிரசங்கம் செய்தார்.

## தூத்துக்குடியில் விதவா விவாகம்

தூத்துக்குடி சர்க்கார் ஆஸ்பத்திரியில் லேடி டாக்டராக இருக்கும் ஸ்ரீமதி கே. ஏ. அமிர்தராஜ் எஙபவருக்கும் திரு. செல்வநாயகம் என்பவருக்கும் தூத்துக்குடியில் விதவாவிவாகம் நடைபெற்றதை முன்னிட்டு அவர்கட்கு தூத்துக்குடி மெடிகல் அசோஸியேஷன் அங்கத்தினர்கள் அக்டோபர்-மீ 30உ ஓர் விருந்து நடத்தினர்.

## மூன்று வருஷம்

விருத்தாசலம் தாலூக்கா மாத்தூரிலிருக்கும் கந்தசாமி படையாச்சி என்பவன் அவ்வூரிலிருக்கும் யௌவன விதவையான மாரிமுத்து அம்மாளிடம் நேசம் கொள்ள ஆசைப்பட்டு ஒரு நாள் இரவு அந்த பாலிய விதவையை அணுகித் தன்னுடன் கூடத் திருவிழாப் பார்க்க வரும்படி அழைத்தான். இவனுடைய துர் எண்ணத்தை அறிந்த அவள் வர மறுத்துவிட்டாள். அதனால் ஆத்திரம் அதிகமாகி அவளுக்குத் தக்க பாடம் கற்பிக்க வேண்டுமென்று எண்ணங் கொண்டு சுமார் 8 வயதுப் பையனைத் துணையாகக்கொண்டு ஷை விதவையின் வீட்டிலுள்ள உப்புப்பானையில் விஷமுள்ள செந்தூரமொன்றைப் போடச் செய்ததாகவும் அந்த உப்பை சாப்பாட்டுக்கு உபயோகித்த மாரிமுத்து மயக்கமடைந்ததாகவும் சிகிச்சைக்குப் பிறகு மயக்கந் தெளிந்ததாகவும் பிறகு போலீசுக்குப் பிராது கொடுக்க போலீசார் விசாரணை செய்து வழக்குத் தொடுத்ததாகவும் தெரிகிறது. ஜட்ஜ் விசாரணை செய்து எதிரியைக் குற்றவாளி யெனத் தீர்மானித்து மூன்று வருடங் கடுங் காவல் தண்டனை விதித்தார்.

## ஆத்தங்குடியில் பிரசாரம்

மாதர் மறுமண சகாய சங்கத்தின் பிரசாரம் ஆத்தங்குடியில் ஐப்பசி 1உ 17-10-36 நடைபெற்றது. அன்று மாலை சுமார் 6 மணிக்கு அ. ப சொ. பழய வீட்டில் கூட்டம் ஆரம்பமாயிற்று. ஊழியன் ஆசிரியர் திரு. ராய.சொக்கலிங்கன் அவர்கள் தலைமை வகித்தார். திருவாளர்களான பிச்சப்பா சுப்பிரமணியன், வீரகேசரி

ஆசிரியர் பெ. பெரி. சுப்பிரமணியன் செட்டியார், வித்வான் அரு. சோம சுந்தரம் செட்டியார், மு. மரகதவல்லி அம்மாள் ஆகியோர் உபந்யசித்தனர். மாஜிக்லாண்டர்ன் படம் காட்டப்பட்டது. நகரத்தார் சார்பாக திரு. அழ. அருணாசலம் செட்டியாரவர்கள் வந்தனங் கூறினார்கள்.

## நாச்சியார்புரம்

ஐப்பசி 3உ ஞாயிற்றுக்கிழமை மாலை 5மணிக்கு நாச்சியார்புரம் செந்தமிழ் வாசகசாலையின் முன்பு அமைக்கப்பட்டிருந்த காவணத்தில் கூட்டம் ஆரம்பமாயிற்று. பள்ளிமாணவர்கள் பாட்டுகள் பாடினர். பல வகுப்பினருமாக சுமார் 600 ஜனங்கள் கூடியிருந்தனர். சிறுகூடல் நகர் குப்பான் அவர்கள் சுமார் 30நிமிஷங்கள் வரை மாதர் மறுமணத்தைப்பற்றிப் பேசினார்கள். பின்னர் மாதர்மறுமணம் ஆசிரியர் மரகதவல்லி அம்மாளவர்கள் சுமார் ஒருமணி நேரம் பேசினர். பின்னர் திரு. சொ. முருகப்பா அவர்கள் 30 நிமிஷம் பேசினார்கள். அப்பால் மாஜிக் லாண்டர்ன் மூலம் படங்கள் காட்டப்பட்டன. ஜனங்கள் பெரிதும் குதூகலமாகக் கடைசிவரை இருந்து கேட்டனர். பெண்மக்கள் மிக அதிகமாக விஜயம் செய்திருந்தனர். இரவு 8-30-க்குக் கூட்டம் இனிது முடிவுற்றது.

## அ. சிறுவயல்

ஐப்பசி 8உ சனிக்கிழமை பிற்பகல் 5-30க்கு அரண்மனை சிறுவயல் நகர மடத்தில் கூட்டம் ஆரம்பிக்கப்பட்டது. மாணவன் பாட்டுக்கள் பாடினர். குமரன் உதவியாசியர் வி. பரமசிவன் அவர்கள் "சீர்திருத்தம் என்பது குறித்துச் சிறிது நேரம் பேசினர். "மாதர் மறுமணம்" ஆசிரியர் மு. மரகதவல்லி அம்மாள் அவர்கள் "காலப் போக்கும் மாதர் மறுமணமும்" என்பதுபற்றிப் பேசினார்கள். பின்னர் திரு. சொ. முருகப்பா அவர்கள் மாதர் மறுமணத்தின் அவசியம் பற்றி உபந்யாசித்தார்கள். இரவு 7 30க்கு படக்காட்சி ஆரம்பிக்கப்பட்டது. ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தனர். குழந்தைகளும் பெண்மக்களும் அதிகமாக வந்திருந்தனர். இரவு 9-மணிக்குக் கூட்டம் நிறைவெய்தியது.

## வெற்றியூர்

ஐப்பசி 9உ மாலை சுமார் 6-30 மணிக்கு வெற்றியூர் "காந்தி சதுக்கத்தில்" பொதுக்கூட்டம் ஒன்று நடந்தது. கூட்டத்திற்கு அரண்மனை சிறுவயல் மு. லெக்ஷ்மணன் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். தலைவர் முகவுரைக்குப் பின், "மாதர் மறுமணம்" ஆசிரியரும், முனிஸிபல் கௌன்சிலருமான ஸ்ரீமதி மு. மரகதவல்லியம்மாள் அவர்கள் பொதுவிஷயமாகச் சிறிது பேசிய பின்னர், குமரன் ஆசிரியர் சொ. முருகப்பா அவர்கள், கல்வியின் அவசியத்தைக் குறித்தும், மூட வழக்க பழக்கங்களைக் குறித்தும், வைதவ்யக் கொடுமை பற்றியும், மாதர்களுக்கு மறுமணம் நடத்திவைக்கவேண்டியது ஒவ்வொரு இந்தியனுடைய கடமை என்றும், மிக விரிவாகப் பேசி ஜனங்களின் மனதை உருகும்படியாகச் செய்தார்கள். பின்னர் சுமார் 8 மணிக்கு ஸ்ரீமான் மா. மெய்யப்ப செட்டியாரவர்கள் வீட்டில் மாஜிக்லாண்டர்ன் படம் காட்டப்பட்டது. ஜனங்கள் வீடுகொள்ளாமல் நிறைந்திருந்தார்கள். சுமார் 9-30 மணிக்கு கூட்டம் வெற்றிகரமாக நிறைவெய்தியது.

## சிறுகூடற்பட்டி

ஐப்பசி 14௳ வெள்ளிக்கிழமை மாலை 5-30க்கு சிறுகூடற்பட்டி திருவாளர் சு. வீர. கரு. கருப்பஞ் செட்டியார் பங்களாவில் கூட்டம் ஆரம்பமாயிற்று. பள்ளிக்கூட மாணவ மாணவிகள் தேசீய கீதங்கள் பாடினர். சிராவயல் திருவாளர் மு. காசிவிஸ்வநாதன் செட்டியார் அவர்களும், மாதர் மறுமணம் ஆசிரியர் மு. மரகதவல்லியம்மாளவர்களும், குமரன் ஆசிரியர் சொ. முருகப்பா அவர்களும் மாதர் மறுமணத்தின் அவசியத்தை வற்புறுத்திப் பேசினார்கள். திரு. ப. மு. திருப்பதிசெட்டியாரவர்கள் B. A. வந்தனங் கூறினார்கள். ஆண், பெண் மக்களும், சிறுவர் சிறுமியரும் ஏராளமாகக் கூடியிருந்தனர். மாஜிக்லாண்டர்ன் படம் காட்டப்பட்டது. இரவு 9-மணிக்குக் கூட்டம் இனிது முடிந்தது.

## கல்லுப்பட்டி

ஐப்பசி 15௳ சனிக்கிழமை மாலை 6 மணிக்கு கல்லுப்பட்டி சிவனடியான் செட்டியார் ஊரணிக் கரையில் புதிதாக அமைத்திருந்த கொட்டகையில் கூட்டம் ஆரம்பமாயிற்று. மாணவர்கள் பாட்டுகள் பாடினர். திரு. மரகதவல்லி அம்மாளவர்களும், திரு. சொ. முருகப்பா அவர்களும் "மாதர் மறுமணம்" என்பதுபற்றிச் சொற்பொழிவாற்றினர். பின்னர் படங் காட்டப்பட்டது. இரவு 9-30-க்குக் கூட்டம் முடிவுற்றது. இக் கூட்டத்திற்கு சுமார் 800 ஜனங்கள் வரை கூடியிருந்தனர்.

## ஒ. சிறுவயல்

ஐப்பசி 16௳ ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்கு உய்யகொண்டான் சிறுவயலில் வெ. அ. வீட்டில் கூட்டம் ஆரம்பமாயிற்று. பாகனேரி கிராம புனருத்தாரண சபைத் தலைவர் திரு. சித. கண்ணப்ப செட்டியாரவர்களும் திரு. மு. மரகதவல்லியம்மாளவர்களும் சொ. முருகப்பா அவர்களும் கணவனிழந்த பெண்கட்கு 'மறுமணம் செய்ய வேண்டியது இன்றியமையாததென்பதை வற்புறுத்திப் பேசினர். பெண்களும் ஆண்களும் சிறுவர்களுமாக சுமார் 350 பேர் குழுமியிருந்தனர். படங்காட்டப்பட்டது.

---

## பழைய பிரதிகள் இல்லை.

அவணி, புரட்டாசி, ஐப்பசி மாத "மாதர் மறுமணம்" இதழ்கள் முற்றும் தீர்ந்து விட்டன. புதிதாகச் சேரும் சந்தாதார்கட்கு கார்த்திகை (4வது) இதழிலிருந்து அனுப்பப்படும்.

காரியதரிசி,
மாதர் மறுமண சகாய சங்கம்.

# உள்ளுறை.

# கார்த்திகை மாத அதிர்ஷ்ட நிர். 6558



ஷை நம்பரையுடைய பத்திரிகைக்காரர் தாது தை 15-வுக்குள் ஷை பத்திரிகையை நமது காரியாலயத்துக்கு அனுப்பினுல் பரிசுத்தொகை ரூ 10 அவர்கட்கு அனுப்பப்படும்.

# உங்களுக்கு அதிர்ஷ்டம்.

ஒவ்வொரு மாதத்து "மாதர் மறுமணம்" இதழிலும் அதிர்ஷ்டநம்பர் முன்பக்கத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது. கீழ்க் குறிப்பிடப் பெற்றிருக்கும் கனவான்கள் முன்னிலையில் இந்த நம்பர்கள் குலுக்கப்படும். முதலில் வரும் நம்பருக்கு ரூ. 10 பரிசளிக்கப்படும். அந்தந்த மாதத்தில் பரிசு விழுந்த நம்பர் அடுத்த மாத இதழில் இதேபக்கத்தில் குறிக்கப்பட்டிருக்கும். அந்த நம்பர் பத்திரிகைக்குரியவர்கள் பத்திரிகையையனுப்பிப் பரிசுத்தொகையைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

ஆகையால் நீங்கள் வைத்திருக்கும் "மாதர் மறுமணம்" இதழ் 10 ரூ. பெறுமானமுள்ளதாகும். ஆகவே அதைப் பத்திரமாக வைத்திருங்கள். அடுத்த இதழில் அதிர்ஷ்ட நம்பரை எதிர்பாருங்கள்!

கனவான்கள்.

1. திருவாளர் ஆறு. ஆ. ராம. சோக்கலிங்கம் செட்டியார் அவர்கள், முனிஸிபல் கௌன்ஸிலர்.
2. திருவாளர் சி. முரு. நாராயணன் செட்டியாரவர்கள், ஹானரரி மாஜிஸ்டிரேட்.
3. டாக்டர் தாமஸ் வர்கீஸ் அவர்கள்.
4. திருவாளர் K. R. ஸ்ரீநிவாசய்யரவர்கள், B. A. L. T. சரித்திராசிரியர் S. M. S. ஹைஸ்கூல்.

மானேஜர்,
" அதிர்ஷ்ட எண் போட்டி "
மாதர் மறுமணம் ஆபீஸ்,
காரைக்குடி

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| மலர் 1 | காரைக்குடி<br>தாது-ஹூ மார்கழி-மீ | இதழ் 5 |
|---|---|---|

## எங்களிஷ்டம்

பாரதி தாஸன்.

(இந்தப் பாட்டைப்பாடும் ராகம் உங்கள் இஷ்டம்)

தென்றல் விளைந்தது, முல்லை மலர்ந்தது,
தீங்குரற் பக்ஷிகள் பாடின.
குன்று நற் சோலை விநோத மலர்க்குலம்
கோலம் புரிந்தன எங்கணும்.
நின்றிருந் தான் தனி யாய்ஒரு வாலிபன்
நேரிலொர் தாமரைப் பூவிலே
அன்புறு காதலி யின்முகங் கண்டனன்;
ஆம்பலில் கண்டனன் அவள் விழி!

கோதை இடைதனைப் பூங்கொடி தன்னிலும்,
கோவைப் பழத்தினில் இதழையும்,
காதலன் கண்டனன்; கங்கைப் பெருக்கெனக்
காதற் பெருக்கிற் கிடந்தனன்!
சீதள மென்மலர் தன்முக மீதினில்
சில்லென் வீழ்வது போலவே
காதலி அக்கணம் பின்புற மேவந்து
கண்களைப் பொத்தினள் செங்கையால்!

கையை விலக்கித் திரும்பினன் காதலன்
காதலி நிற்பது கண்டனன்!
தூய்யவன் நெஞ்சும் உடம்பும் சிலிர்த்தன

சுந்தரி தன்சிரிப் பொன்றினால்!
கொய்மலர் மேனியை அள்ளிடுவான்—அவள்
கோபுரத் தோளில் அழுந்துவாள்!
செய்வது யாதுபின்? இன்பமாற்கேணியிற்
சேர்ந்தனர்; தம்மை மறந்தனர்!

காதலர் இவ்விதம் இங்கிருந்தார் இதைக்
கண்டனர் கேட்டனர் ஊரினர்!
"ஏதுவிடோம்" என அத்தனைபேர்களும்
எட்டி நடந்தனர் சோலைக்கே.
பாதி மனிதர்கள் கோபத்திலே தங்கள்
பற்களை மென்றனர் பற்களால்!
மீதி யிருந்தவர் கத்தி நற் கேடயம்
வேலினைத் தூக்கி நடந்தனர்!

நின்றதொர் ஆல மரத்திடை வீழ்தினை
நேரிற் பிணைத்ததொர் ஊஞ்சலில்
குன்றுயர் தோளினன் வீற்றிருந் தான் அந்தக்
கோல நிலாமுகப் பெண்ணுடன்!
சென்றனர் கண்டனர் காதலர் தங்களைச்
சீறினர்! பாய்ந்தனர் சிற்சிலர்.
கொன்று கிடத்திட வேண்டுமென் றே சிலர்
கோலையும் வேலையும் தூக்கினர்.

"பொய்தவிர் காதல்" எனப்படும் காம்பினில்
பூத்த அப்பூக்கள் இரண்டையும்
கொய்து சிதைத்திட ஓடினர் சிற்சிலர்!
குன்றிட வைதனர் சிற்சிலர்!
வையக மீதினில் தாலி யிழந்தவள்
மையல் அடைவது கூடுமோ?
துய்ய மணாளன் இறந்தபின் மற்றவன்
தொட்டதை வைதிகம் ஏற்குமோ?

என்றிவை கூறினர் ஊரினர் யாவரும்!
இங்கிவை கண்டனர் காதலர்
குன்றினைபோல நிமிர்ந்தனர்! கண் ஒளி
கூர்ந்தனர்! அச்சம் தவிர்ந்தனர்!
இன்றுளதேசம் புதுத்தே சம், மணம்
எங்களிஷ் டம் எனக் கூறியே
அன்னதொர் ஊஞ்சலை உந்தி உயர்ந்துயர்ந்
தாடினர்; ஊரினர் ஓடினர்!

---

## சர். கங்காராம்

### 50 லட்சம் நன்கொடை அளித்த வள்ளல்

ஒரு வயதுகூட நிரம்பாத பால்குடிக்கும் பருவமுதல் ஆயுள் வரையும் மீளாத கொடுந் தண்டிப்புக் குட்பட்டுக் கண்ணீருதிர்க்கும் விதவைக் கூட்டத்தின் தரித்திரத்தை நீக்கி நல்வாழ்வு வாழ உதவி புரிந்த வள்ளல் சர் கங்காராம் ஆவர். வறுமைக்கும் கொடுமைக்கும் உட்படுத்தப்பட்ட விதவைப் பயிருக்கு செல்வ மழை பொழிந்த அந்தக் கொண்டல் சர். கங்காராம் சரித்திரத்தை மக்கள் யாவரும் அறிந்திருக்கவேண்டியது அவசியமன்றோ? இந்த மகானுடைய உருவப்படம் இம்மாத இதழில் முதற் பக்கத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது.

சர். கங்காராம், பாஞ்சால தேச (Punjab) த்திலுள்ள ஷெய்க்புரா ஜில்லாவில் மாங்கதன்வாலா என்ற ஊரில் அகர்வால் வைசிய குலத்தில் உதித்தவர். ஸ்ரீமான் எல். தௌலத்ராம் என்பவரின் குமாராக 1851-ம் வருஷத்தில் பிறந்தார்.

சர். கங்காராம் அவர்கள் இளம் பிராயத்தில் ஆரம்பக்கல்வியை அமிர்தசரஸில் முடித்துக்கொண்டு, பிறகு லாகூரில் அரசாங்க கல்லூரியில் சேர்ந்தார். ரூர்க்கியிலுள்ள தாமாசன் இஞ்சினீயரிங் கல்லூரியில் படித்து சிவில் இஞ்சினீயரிங் பரீக்ஷையில் வெற்றிபெற்ற பிறகு 1873-ம் வருஷத்தில் பஞ்சாப் பப்ளிக் ஓர்க்ஸ் டிபார்ட்மெண்டில்

வேலையில் அமர்ந்தார். அதற்குச் சில நாட்களுக்குப் பின்னர் இஞ்சினீயரிங்கில் அதிகப் படிப்பிற்காக அரசாங்க போஷகராக இங்கிலாந்து தேசத்திற்கு அவர் அனுப்பப்பட்டார். படிப்பை முடித்துக் கொண்டு இந்தியாவிற்குத் திரும்பி வந்தபொழுது லாகூரில் உள்ள எய்ட்சிசான் சீப்ஸ் கல்லூரி, லாகூர் மியூசியம் சீப் கோர்ட்டு (இப்பொழுது ஹைகோர்ட்) இன்னும் பப்ளிக் கட்டிடங்களையும் அவர் நிர்மாணித்தார். லாகூர் மேலமால்ரோடும்கூட இவரால் பிளானிடப்பட்டது. லாகூர் முனிசிபாலிடியில் அவர் ஒரு எக்ஸ் அபிஷியோ மெம்பராகவிருந்தார். அவர் வேலையினுலும் அவருக்குண்டான புகழினுலும் தோற்றத்தினுலும் 1877-ம் வருஷத்தில் அவர் டெல்லி இம்பீரியல் அசெம்பிளி காரியங்களின் சூப்பரிண்டெண்டாக நியமிக்கப்பட்டார். 1894-ம் வருஷத்தில் ராவ்பகதூர் என்ற பட்டம் அரசாங்கத்தாரால் அவருக்கு வழங்கப்பட்டது. 1903-ல் அப்பொழுதிருந்த கவர்னர் ஜெனரலும் வைசிராயுமான லார்டு கர்ஜான் அவர்கள் டெல்லி காரனேஷன் தர்பார் ஒர்க்ஸின் சூப்பரிண்டெண்டாக அவரை நியமித்தார். பிறகு அதில் அவரின் மெச்சத்தகுந்த வேலைத்திறனைக்கண்டு அவருக்கு ஸி. ஐ. இ. பட்டமும் அளிக்கப்பட்டது. அவர் உத்தியோகத்திலிருந்து பிரிந்த பிறகு பாட்டியாலா சமஸ்தானத்தில் சீப் இஞ்சினீயராக நியமனம் பெற்ருர். மறுபடியும் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் டெல்லி காரனேஷன் தர்பாரில் அவருடைய சேவையை விரும்பியபொழுது, அதாவது 1911 வரை இருந்துவந்தார். அங்கே அவருடைய மெச்சத்தகுந்த வேலைத்திறனுக்காக எம். வி. ஒ. என்ற பட்டமும் அவருக்கு அளிக்கப்பட்டது.

மறுபடி வேலையி லிருந்து ரிட்டயர் ஆன பிறகும் அவருடைய உற்சாகம் தளர்வடையவில்லை. ஆனுல், விவசாய இஞ்சினீயரிங் முறைகளை ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார். அவர் பெரிய முறைகளை நினைத்து அவைகளை மிகவும் ஆச்சர்யப்படும்படியும், மிக வெற்றிகரமாகவும் செய்து முடித்தார். அவருடைய விருத்தாப்பிய வயதில் பார்ப்பவர் பிரமிக்கும்படி கடுமையான வேலை செய்து வந்தார். அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட திறமையுள்ள உத்தியோகஸ்தர்களால் தண்ணீர் சப்ளை செய்து செழிப்பாக்க முடியாத வரண்ட நிலங்களை இவருடைய போற்றத் தகுந்த புத்தித் திறனுல்

செழிப்புள்ள வயல்களாக மாற்றினர். "ரினலா ஹைடிரோ எலக்டிரிக் ஓர்க்ஸா"னது அவருடைய அரிய இஞ்சினீயரிங் திறனின் அறிகுறியாக இப்பொழுதும் இருக்கின்றது. மேலும் தேசத்திற்காகச் செய்த முயற்சிகளை மெச்சி அவருக்கு 1922ல் கீர்த்தி வாய்ந்த நைட் (Knight) என்ற பட்டமுமளிக்கப்பெற்றது. தவிர காசி ஹிந்து யூனிவர்சிட்டியின் ஆலோசனை இஞ்ஜினீயராக இருந்தார்.

1925ல் இம்பீரியல் பாங்க் ஆப் இந்தியாவின் கவர்னராக நியமிக்கப்பட்டார். 1926-ல் இந்தியாவின் ராயல் கமிஷன் விவசாய இலாகா உத்தியோகஸ்தராக நியமிக்கப் பட்டார். 1927-ம் வருஷம் ஜூலை மாதம் 10-ந் தேதி கமிஷனுடு இங்கிலாந்திற்கு சென்றார். லண்டன்மா நகரில் 1927ம் வருஷம் ஜூலை மாதம் 10ந் தேதி காலை 5-30 மணிக்கு காலஞ் சென்றார். அவருடல் லண்டனில் கோல்டர்ஸ் கிரீன் என்னுமிடத்தில் தகனம் செய்யப்பட்டது.

அவருடைய மூத்தகுமாரர் ராய்பகதூர் எல். சிவாக்ராம் அவர்கள் கூடச் சென்று இந்துமுறைப்படி கிரியைகளைச் செய்து அவருடைய சாம்பலை இந்தியாவிற்குக் கொண்டுவந்தார். 1927ம் வருஷம் ஆகஸ்ட்டு மாதம் 14-ந் தேதி யன்று அச்சாம்பலை ஹரித்துவாரத்தில் உள்ள கங்காநதியில் விட்டார்கள். அவைகளில் ஒரு பகுதியை, அவருடைய சமாதியில் வைப்பதற்காக 1927-ம் வருஷம் ஆகஸ்டுமீ 15ந் தேதி பிற்பகல் 12-30 மணிக்கு அங்கு கூடியிருந்த ஆயிரக்கணக்கானவர்களின் முன்னிலையில் ஒரு சிமிழில் எடுத்து வைக்கப்பட்டது. அவரால் ஸ்தாபிக்கப்பட்ட அப்பாஜ் என்னும் ஆஸ்ரமத்தினருகே ராவிரோட்டில் அவருடைய ஞாபகத்தை ஒட்டி ஒரு சமாதி எழுப்பப் பெற்றது.

சர் கங்காராம் அவர்கள் மூன்று பிள்ளைகளை விட்டுச் சென்றார். அவர்கள் 1. ராய்பகதூர் லாலா சிவாக்ராம் அவர்கள் M. L. C. 2. லாலா பாலக்ராம் அவர்கள் பார்–அட்-லா, 3. லாலா ஹரிராம் அவர்கள் L. Ag.,

சர். கங்காராம் ஏராளமான பணத்தை சம்பாதித்தார். நாட்டில் பெண் மக்கள் குழந்தைகள் படும் இன்னல்கள் அவரால் தாங்கமுடி

யாதனவாக இருந்தன. அறிவுத்திறமும் உடலுறுதியும் விடாமுயற்சியும் பொருளீட்டும் திறமையும் அவரிடம் காணப்பட்டதுபோலவே இரக்கமும் அன்பும் தயாளமுமுடையவராக இருந்தார். விதவைப் பெண்கள் படுந்துயரம் அவர் கண் முன் பட்டது. "சர். கங்காராம் ட்ரஸ்ட் சொசைட்டி" என்ற பெயருடன் ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தினர். அதற்காக 30,00,000 ரூபாயை நன்கொடையளித்தார். அவர் இறக்கும்போது மேற்கொண்டு 20,00,000 எழுதி வைத்தார். அந்த சொசைட்டியானது இப்போது ஏழு இலாகாக்களாக வேலே செய்து வருகின்றது. 46,00,000 ரூபா இப்போது மூலதனமாக இருக்கிறது.

1. ஹிந்து விதவைகளின் மறுமணத்திற்காக பாடுபடும் விதவா விவாக ஸகாயசபை.

விதவா விவாக சகாய சபையின் சார்பில் சென்ற வருஷத்தில் சுமார் 5,000 விதவா விவாகங்கள் செய்யப்பெற்றிருக்கின்றன. விதவா விவாக சம்பந்தமான பிரசாரத்திற்காக ஹிந்தியிலும், உருதுவிலும் இரண்டு மாதப் பத்திரிகைகளே நடத்தி வருகின்றனர்.

2. ஜாதி மதம், நிறம், அந்தஸ்து முதலிய வேறுபாடில்லாமல் ஏழைகளுக்கும், மிகவும் துன்பத்திலாழ்ந்திருப்போருக்கும் பாதுகாப்பளிக்கும் சர். கங்காராம் அவர்களின் தர்மவைத்தியசாலே.

3. வேலேகளுக்காகப் படிக்கும் ஏழை ஹிந்துமாணவர்களுக்கு கடன் கொடுத்துதவும் ஹிந்து மாணவர்களின் வாழ்க்கை ஸ்தாபனம்.

4. கைத்தொழில், கல்வி அபிவிருத்தி, வியாபாரம் முதலிய துறைகளில் வாலிபர்கள் முன்னேறுவதற்கு வழிகாட்டியாக இருக்க சர். கங்காராம் அவர்களின் பிசினஸ் பீரோ & லேப்ரேரி.

5. உதவியற்று, பந்துத்வமில்லாத வயதான வேலேச் செய்ய முடியாத ஆண் பெண் இருபாலாருக்கும் உதவியளிப்பதற்காக அபஹாஜ் ஆஸ்ரமம்.

6. ஏழை ஹிந்து குடும்பங்களில் செய்யப்பட்டதும் விதவை

களினால் செய்யப்பட்டதுமான சாமான்களை விற்பனை செய்யவும், அவர்களுக்கு இன்னும் இதர வழிகளில் உபகாரம்செய்யவும் தகுந்த கைத்தொழில் கடை.

7. சர். கங்காராம் அவர்களின் பிறந்த இடமாகிய (ஷெய்க்கு பூரா ஜில்லாவில்) மாங்தான்வாலா குர்தாவாரா என்னுமிடத்தில் ஏழை ஹிந்துக்களின் பாதுகாப்பு நிதி.

தவிர கீழ்க்கண்ட மூன்று ஸ்தாபனங்களின் கட்டிடங்கள் சர். கங்காராம் அவர்களால் கட்டப்பட்டு அவைகளுக்கு வேண்டிய சேமிப்புடன் அரசாங்கத்தாரிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஏதாவதை அரசாங்கத்தார் நடத்தாமல் விட்டுவிட்டால் அவைகள் இந்த டிரஸ்டுக்கு திரும்ப வாங்கி நடத்தப்படும்.

(a) ஹிந்து விதவைகளை உபாத்தியாயினிகளாகவும், கைத்தொழில், கல்வி முதலியவைகளில் அவர்களைப் பழக்கி அவர்களுக்காக சம்பாதித்துக் கொள்ளும்படி செய்யவும் ஹிந்து விதவைகளின் ஆச்ரமம்.

(b) ஜாரிமோரி, லாகூரிலுள்ள ஹிந்து, சீக்கிய பெண்களுக்கும் பெண்குழந்தைகளுக்கும் லேடிமைனார்ட் கைத்தொழில் பள்ளிக்கூடம்.

(c) வியாபாரம், பாங்கு சம்பந்தமான வழியில் வாலிபர்களைப் பழக்குவதற்காக ஹேய்லி கமர்ஷியல் காலேஜ்.

அவர் இறந்தபொழுது அவரால் அதிகமான தர்மங்களினால் பயன்பெற்ற மாணவர்களும் அனாதைகளும், விதவைகளும், கஷ்டப்படும் ஏழை ஜனங்களும், சிநேகிதர்களும், சுற்றத்தார்களும், பிள்ளைகளும் தாயைப்பிரிந்த கன்றுகளாகத்துன்புற்று வருந்தினர். பஞ்சாப் கவர்னர், சர் மால்கோம் ஹேய்லி Kt. அவருடைய 1927ம் வருஷம் ஏப்ரல் 4-ந் தேதிய பிரசங்கத்தில் சர் கங்காராம் அவர்களைப்பற்றி கீழ்க்கண்டவாறு புகழ்ந்துரைத்திருக்கிறார்:—

"தனது வாழ்க்கையில் ஒரு வீரனைப்போல் வெற்றிபெற்றார். ஒரு சந்நியாசியைப் போல் காலத்தைப் போக்கினார்"

இப்புண்ணிய புருஷரைப் போல் தென்னாட்டுச் செல்வர்கள்

மனங்கனிந்து செல்வத்தை நல்குவாரானல் மக்கள் துயர் எளிதில் நீங்குமன்றே? அத்தர்மத்தால் செல்வம் பெற்றவர் நீங்காப்புக ழுக்கும் ஆளாவாரல்லவா? தென்னாட்டுச் செல்வர்களே! சர் கங் காராமைப் பின்பற்றுங்கள்?

---

## தொழிற்சாலையை நிறுத்துங்கள்!

அஞ்சாநெஞ்சன்.

விதவைகளென்ற கூட்டம் ஹிந்துக்களுள்தான் இருக்கிறது. அதிலும் உயர்ந்த ஜாதி மகான்களிடம்தான் உண்டு. இந்த ஜாதி உண்டாக்கிவிட்டிருக்கிற விதவையோ 2-கோடிக்கு மேல், மொத் தப் பெண்கள் உயர் ஜாதி ஹிந்துக்கட்குள்ளே எவ்வளவு தெரியுமா? சுமார் $7\frac{1}{2}$ கோடி. இதில் $2\frac{1}{2}$ கோடி விதவை. வெகு நயம் மூணத்தொன்று வெள்ளைப் புடவை. இந்த விதவைகளை யெல் லாம் கல்யாணப் பெண்ணாக்க வேண்டுமென்று மலையைக் கல்லுகி ரும். இதற்கிடையில் ஒரு 144 போட்டாகவேண்டியிருக்கிறது. பேசப்படாதென்று 144. தண்ணீரை வாயக்காலில் பாய்ச்சப் படாதென்று 144. சாமி தூக்காதே என்று 144. தேங்காய் உடையாதே காளாஞ்சி கொடுக்காதே என்று 144. வைத்த சுவ்ரை நிறுத்து என்று 144. இன்னும் எத்தனைக்கோ 144 போட்டுத் தடுத்துவிடுகிறார்களே!

இந்த 144 கொஞ்சம் நம்மள் பக்கம் வேலைசெய்ய மாட்டதா? இருக்கிற விதவைகட்குக் கல்யாணம் செய்வதும் புடவை மாற்று வதும் நடக்கட்டும். இருக்கிற மூட்டையை வெளியேற்றப் பாடுப டும் போது புதுமூட்டை வந்து குவிந்து கொண்டிருந்தால் வேலை எப்பொது முடிகிறது? ஐயா! அந்த 144 காரரிடம் சொல்லி புதி தாக விதவை வருகிற வழியை அடைக்க வேண்டாமா? விதவை யுண்டாகிற தொழிற்சாலைகளை மூடுங்கள்! புது விதவைகளை உற்ப த்தி செய்ய வேண்டாம்! நிறுத்துங்கள்!

---

# ராஜா ராம் மோகன் ராய்.

திருச்சி கே. வி. எஸ். வாஸ், பீ. ஏ. (ஆனர்ஸ்).

## அத்தியாயம். 4.

## விக்ரஹ பூஜையை ஒழிக்கப் பிரசாரம்.

கடைசியாக, 1814-வது வருடம் தமது நாற்பத்திரண்டாவது வயதில் ராஜாராம் மோகன்ராய் கிராமாந்திரங்களையும் சிற்றூர்களையும் விட்டு இந்தியாவின் தலைநகரமாயிருந்த கல்கத்தாவிற்கு வந்து சேர்ந்தார். அங்கு அவருக்கு இரண்டு வீடுகள் இருந்தன. அவற்றுள் மாணிக் தோலாவிலுள்ள வீட்டிலும் தோட்டத்திலுமே அவர் அதிககாலம் வசித்துவந்ததாகத் தெரிகிறது. அது ராம்மோகனருக்காகஅவருடைய உறவினர்களுள் ஒருவரான ராம்லோசன்ராய் என்பவரால் கட்டிக் கொடுக்கப்பட்டதாகும்.

கல்கத்தாவையடைந்த பிறகுதான் ராம்மோகனர் தமது வாழ்க்கை இலட்சியத்தை மும்முரமாகச் செய்யத் தொடங்கினர். இந்து மதத்தின் சீர்குலைவிற்கு விக்ரகபூஜையே மூலகாரண மென்றும், ஆகையால் முதன் முதலாக அதை ஒழிக்கப் பிரயாசைப்பட வேண்டுமென்றும் அவர் தீர்மானம் செய்துகொண்டார். புராதன நூல்களைக் கவனமாகப் பரிசீலனை செய்து பார்த்ததிலிருந்து அனுஷ்டானத்திலிருந்து வரும் ஹிந்துமதம் வெகு நவீனமான தென்றும், அதற்கும் பரிசுத்தமான பூர்வீக இந்து மதத்திற்கும் இடையிலுள்ள பேதம் பெரிய சமுத்திரத்தைப் போன்ற தென்றும் அவருக்குத் தோன்றியது. தன்னந் தனிமையாகவே, அதிகமான எதிர்ப்பு இருக்கமுடியாத மார்க்கத்தைப் பின்பற்றி தேசமக்களைச் சீர்திருத்துவ தென்று அவர் முடிவுசெய்து கொண்டார். புராதன மதத்தின் மேன்மையையும், அனுஷ்டானத்திலுள்ள மதத்தின் தீமைகளையும் சநாதனிகளுக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுவதன் நிமித்தம் மறுக்க முடியாதவைகளும் மதப்பற்றுடையவர்களால் வெகு புனிதமாகக் கருதப்படுகின்றவைகளுமான சில வேதாந்த சூத்திரங்களை வங்காள பாஷையில் அவர் மொழிபெயர்த்து வெளியிட்டார். இதன்

சாராம்சத்தை 1816-ம் வருடம் ஹிந்துஸ்தானியிலும் ஆங்கிலத்தி லும் அவர் பிரசுரம் செய்தார். வேதாந்த சூத்திரங்களனைத்தையும் பழக்கத்திலுள்ள பாஷையில் மொழிபெயர்க்க வேண்டுமென்பது அவருடைய ஆவல். ஆனல், இந்த ஆவல் முழுதும் பூர்த்திபெற வில்லை. கனோபநிஷத், ஐஷோப நிஷத் இவ்விரண்டின் மொழிபெயர்ப் பும் 1816-ம் வருடம் வெளியிடப்பட்டன. கதோப நிஷத், மண்டூ கோப நிஷத், மாண்டுக உபநிஷத் ஆகியவைகளை 1817-ம் வருடத் தில் ராம்மோகனர் மொழிபெயர்த்து வெளியிட்டார். மாண்டுக உப நிஷத்தைத்தவிர, மற்றவைகளெல்லாம் ஆங்கிலபாஷையிலும் மொழி பெயர்த்து வெளியிடப்பட்டன. இவைகளின்முகவுரையில் ஹிந்துமத த்தின் தற்கால நிலைமையையும், அதைச் சீர்திருத்தம் செய்வதற் கான மார்க்கங்களையும் ராம்மோகனர் தெளிவாகச் சுட்டிக்காட்டி யிருந்தார். மேற்படி புஸ்தகங்களெல்லாம் தேச மக்களிடையே இல வசமாகவும் ஏராளமாகவும் பரிமாறப்பட்டன. ராம்மோகனர் எத் தகைய மனோபாவத்துடன் மேற்படி பிரசாரத்தை ஆரம்பித்தா ரென்றறிய 1816-ம் ஆண்டில் வரையப்பட்ட பின்வரும் குறிப்பு ஒன்றை நேயர்கள் ஊன்றிக் கவனிப்பார்களாக.

"இந்து மதஸ்தர்கள் செய்யும் விக்ரக பூஜையும் அது சம்பந்த மாக நடத்தும் சடங்குகளும் சமூகத்தைச் சீரழிப்பதோடு நில்லா மல் ஒரு மனிதனுக்கு பிற மனிதனிடம் அன்பும் கருணையும் இல்லா மற்போகும்படியும் செய்துவிடுகின்றன. எனவே, எனது தேச மக் களுக்கு அவர்களுடைய மத நூல்களை அறிமுகப்படுத்தி, அவை களின் மூலம் தவறைப் புலப்படுத்தி இயற்கையின் இறைவன் ஒரு வன்தானென்பதை உணருமாறு செய்வது என் கடமையாக இருக் கின்றது. பிராமண குலத்தில் பிறந்திருக்கும் நான் மனச்சாக்ஷி இட் டுச்செல்லும் பாதையின் வழியே நடப்பதனல், எனது பந்துக்க ளின் பகைக்கும், தூஷணைக்கும், புகார்களுக்கும் ஆளாகியிருக்கின் றேன். ஆயினும் எனது அபிப்பிராயங்களை எதிர்காலத்திலாவது நியாய புத்தியுடன் ஜனங்கள் நோக்குவார்களென்னும் எண்ணத்தில் இப்பொழுது நான் ஆறுதலடைகின்றேன். எனது கருத்துகளைப் பிறர் எவ்விதமாகக்கொண்ட பொழுதிலும் அவை ஆண்டவனுக் குச் சம்மதமானவைகளென்று நான் திடமாக நம்புகின்றேன்.

தாராள சிந்தையுடைய ஐரோப்பியர்கள் விக்ரக பூஜைக்கு ஒரு சமாதானம் கூறுகின்றனர். அதாவது விக்ரகங்கள் ஆண்டவனின் குணாதிசயங்களையே குறிக்கின்றனவென்றும், அந்த குணங்களைத் தான் இந்துக்கள் விக்ரகங்களின் மூலமாக வணங்குகின்றார்களென்றும் சொல்லுகின்றார்கள். இதைச் சரியான சாக்காகக்கருதும் ஆங்கிலம் பயின்ற இந்துக்களும் விக்ரக பூஜையை நிந்திப்பவர்களுக்கு இதே சமாதானத்தை எடுத்துரைக்கின்றனர். ஆனால், இது சரியான சமாதானமாகமாட்டாது. இத்தகைய தவறான அபிப்பிராயங்களைத் திருத்தம் செய்யவேண்டியது அவசியமாக இருப்பதால் கீழ்க்கண்ட விஷயங்களை பிரஸ்தாபிக்கின்றேன்.

விக்ரகங்கள் கடவுளின் குணாதிசயங்களையே குறிக்கின்றன வென்பதையும், வணக்கம் தெரிவிப்பது அந்த குணாதிசயங்களுக்கே யன்றி விக்ரகங்களுக்கல்ல வென்பதையும், பெரும்பாலான இந்துக்கள் மறந்துவிட்டார்கள். அவர்கள் கற்களாலும் உலோகங்களாலும் செய்யப்பட்டுள்ள சிலைகளுக்கு உயிரும், தெய்வீகத் தன்மையுமிருப்பதாகவே நம்பிக்கொண்டிருக்கின்றனர். புதிதாக ஒரு விக்ரகம் செய்யப்பட்டவுடன் அதற்கு பிராணப் பிரதிஷ்டை என்று ஓர் சடங்கு நடத்தப்படுகின்றது. இந்தச் சடங்கினால் அதற்கு உயிரும் தெய்வீகத் தன்மையும் ஏற்பட்டுவிடுவதாகக் கருதப்படுகின்றது. (கடவுள் மனித உருவை மண்ணினால்செய்து அதற்கு உயிர் கொடுக்கின்றானென்பது 'வேதவாக்கு; அப்படியிருக்க மனிதன் கடவுள் உருவைச்செய்து அதற்கு உயிர் கொடுப்பதாக நினைத்துக்கொள்வது நகைக்கத் தக்கதல்லவா?) பிறகு உயிர் கொடுக்கப்பட்ட விக்ரகம் ஆணாக இருந்தால் அதற்கும் உயிர் கொடுக்கப்பட்ட (சடங்குகளின் மூலம்!) மற்றோர் பெண் விக்ரகத்திற்கும் ஏராளமான பணச் செலவில் திருமணம் செய்து வைக்கப்படுகின்றன. சிற்சில சந்தர்ப்பங்களில் ஒரு ஆண் விக்ரகத்திற்கு [ஆண்கள் பல பெண்களை மணம் செய்துகொள்வதைப் போல்] பல பெண் விக்ரகங்களை மணம் செய்து வைப்பதுமுண்டு. இப்படிச் செய்விக்கப்பட்ட ஆண் பெண் விக்ரகங்கள் மனித வர்க்கத்தின் மண்ணுலக-விண்ணுலக வாழ்க்கைகளை நிர்ணயிக்கும் சக்தியுடையவைகளாக ஹிந்துக்கள் நம்புகின்றார்கள்.

மனிதத் தன்மையும், ஈசுவரத் தன்மையும் ஒன்றோடொன்று நேர் எதிரிடையான இருவகைக் குணங்கள். ஆனால், மேற்படி விக்ரகங்களிடம் இவ்விருவகை குணங்களும் ஒருங்கே பொருந்தியிருப்பதாகக் கருதப்படுகின்றது. மனிதனைப்போல் இந்தக் கடவுள்களுக்கும் தினந்தோறும் ஸ்நானம் செய்விக்கப்படுகின்றது; உணவு கொடுக்கப்படுகின்றது; பிறகு பெண் விக்ரகங்களும் ஆண் விக்ரகங்களும் பட்டு மெத்தைகளில் சேர்ந்தாற்போல் படுக்கப்போட்டு உறங்க வைக்கப்படுகின்றன!

இத்தகைய பழக்க வழக்கங்களை நினைக்கும்பொழுதெல்லாம் நான் விசனியாமலிருந்ததில்லை. எனது தேச மக்கள், கண்மூடித் தனமான அசட்டுக் கொள்கைகளிலிருந்து விடுபட்டு சர்வேச்வரன் ஒருவன்தானென்பதை யுணர்ந்து, அவனைத் தொழவேண்டுமென்னும் நோக்கத்துடன் வேத நூல்களிற் சிலவற்றை இங்கு மொழி பெயர்த்துக் கொடுக்கின்றேன்."

மேற்கண்டவாறு பிரசாரம் செய்கையில் ராம்மோகனர் தம்மைச் சுற்றி சில சகாக்களைச் சேர்த்துக்கொண்டார். 1815-ம் ஆண்டில் ஆத்மீய சபா அல்லது நண்பர்களின் சங்கம் என்ற நாமதேயத்துடன் ஒரு ஸ்தாபனம் கல்கத்தாவில் நிறுவப்பட்டது. அது வாரத்திற்கொரு முறை கூடும். அந்தக் கூட்டங்களில் ராம்மோகனரால் தயார் செய்யப்பட்ட ஸ்தோத்திரங்கள், அவரால் சம்பளத்திற்கு அமர்த்தப்பட்டிருந்த சிவப்பிரஸாத மித்ரா என்னும் பண்டிதரால் படிக்கப்படும். இதில் ராம்மோகனரும், அவருடைய சகாக்களான துவாகாநாத் தாகூர், கோபிமோகன் தாகூர், பிரஸன்னமோர் தாகூர், நந்தகிஷோர் போஸ், பதன்சந்திர ராய், சந்திர சேகர தேவ், தாக்கி ஜமீன்தார் முதலியோர்களும் பிரசன்னமாயிருப்பது வழக்கமில்லை. ஆனால், கூட்டங்கள் அவர்களுடைய ஆதரவில்தான் நடைபெறும்.

ராம்மோகனரின் நண்பர்களுள் இருவர் குறிப்பிடத்தகுந்தவர்கள். ஒன்று ஹரிஹரானந்த தீர்த்தஸ்வாமி, மற்றொன்று மிஸ்டர் டேவிட் ஹேர். இவ்விருவரும் ராம்மோகனரின் சமூகச் சீர்திருத்தப் பிரசாரத்தில் வெகு தீவிரமாக ஈடுபட்டிருந்தவர்கள்.

விக்ரக பூஜையை ஒழிப்பதற்காக ராம்மோகனர் ஒரு பொதுக் கூட்டம் நடத்திய பொழுது டேவிட் ஹேர் அழைப்பில்லாமலே அதற்கு விஜயஞ் செய்திருந்தார்.

ராம்மோகனரின் சீர்திருத்தப் பிரசாரங்கள் ஹிந்து மதத்தின் காப்பாளர்களென்னச் சொல்லிக்கொள்ளுகின்றவர்களுக்கு இடையே பெருத்த பரபரப்பை உண்டுபண்ணியது. 1816ம் வருடம் டிசம்பர் மாதம் சென்னை சர்க்கார் கல்லூரியின் பிரதம ஆங்கில ஆசிரியரான சங்கர சாஸ்திரி என்பவர் "மெட்ராஸ் கௌரியர்" என்ற பத்திரிகையில் ராம்மோகனரைக் கண்டித்து ஓர் வியாசம் எழுதியிருந்தார். அடுத்தாற்போல், கல்கத்தா சர்க்கார் கல்லூரியின் பிரதம பண்டிதரான மிருத்யுஞ்சய வித்யாலங்காரர் என்பவர் "வேதாந்த சந்திரிகை" என்ற தலைப்புடன் மற்றோர் கண்டனத்தை வெளியிட்டார். இதே நாட்டின் நாலுபாகங்களிலிருந்தும் ராம் மோகனரின் பிரசாரங்களுக்கு பலத்த கண்டனங்கள் வெளி வந்து கொண்டிருந்தன. அவைகளுக்கெல்லாம் துண்டுப் பிரசுரங்களின் மூலமாகவும், மேடைப் பிரசங்கங்களின் மூலமாகவும் ராம் மோகனர் தக்கபடி விடையளித்துக் கொண்டுவந்தார். அவருக்கு சிறிது சிறிதாக வெற்றி யேற்பட்டுக்கொண்டு வந்தது. 1920-ம் வருட ஆரம்பத்தில் ஒரு இந்தியர் ஓர் வழக்கு சம்பந்தமாக சாக்ஷிக் கூண்டிலேற்றப்பட்டு "நீ சொல்லப் போவதெல்லாம் உண்மையே தவிர பொய்யில்லை யென்பதற்கு கங்கை ஜலத்தை ஸ்பர்சித்து பிரமாணம் செய்!" என்று கேட்கப்பட்டபொழுது அந்த இந்தியர் "நான் ராம் மோகனரின் கொள்கையைப் பின் பற்றுகின்றவன்; கங்கையைப் போன்ற ஆறுகளுக்குப் புனிதத் தன்மை யிருப்பதாகச் சொல்லப்படுவதை நம்பாதவன்! ஆகையால் கங்கை ஜலத்தை ஸ்பர்சித்து பிரமாணம் செய்யமாட்டேன்!" என்றுகூறி மறுத்துவிட்டார். ராம் மோகனரின் பிரசாரம் இந்தியர்களிடையே வெற்றியடைந்து வந்ததென்பதற்கு மேற்படி உதாரணம் குறிப்பிடத்தக்கதாகும்.

அடுத்தாற்போல் சதி என்னும் கொடிய வழக்கத்தை நிறுத்துவதற்காக ராம் மோகனர் பிரசாரம் செய்யவாரம்பித்தார். அதை ஆதரிப்பவர்களுக்கும் ஆக்ஷேபிப்பவர்களுக்கு மிடையே கடுமை

யான விவாதம் நடைபெறுவதைப் போல் சம்பாஷணை நடையில் அவர் ஒரு புத்தகத்தை வெளியிட்டார். இது 1818-ம் வருடத்தில் பிரசுரமாகியது. இரண்டு வருடங்களுக்குப் பின்னர் இதே விஷயமாக மற்றொரு புத்தகத்தையும் ராம் மோகனர் வெளியாக்கினர். இவ்விரு நூல்களையும்பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்வதன் முன்னர் சதியைப்பற்றி இடையில் சில விஷயங்களைக் குறிப்பிடுவது அவசியமாக இருக்கின்றது.

"சதி" என்பது ஒரு வடமொழிப்பதம். இதற்கு "கற்புள்ள மங்கை" அல்லது "கணவனிடம் உண்மையான பக்தி விசுவாசமுடைய பெண்மணி" என்பதுதான் சரியான தாத்பர்யம். ஆனால் "மரித்த கணவனுடன் கட்டை யேறித் தீயில் பொசுங்கி மடியும் பதிவிரதை" என்ற குறுகியபொருள் நாளடைவில் இதற்கு ஏற்பட்டு விட்டது.

"சதி" என்னும் மேற்படி சடங்கு இந்தியாவிலே வெகு சகஜமாக அனுஷ்டிக்கப்பட்டு வந்ததேயாயினும், எந்தக்காலத்திலும் நாட்டுமக்கள் அனைவருடைய ஆதரவையும் அது ஒருங்கே பெற்றிருந்தது கிடையாது. தவிர, இவ்வழக்கத்தை வேதங்களும் அனுமதிக்கவில்லை.

பிற்காலத்தி லேற்பட்ட மனுதர்ம சாஸ்திரத்தையும் அதைப் போலொத்த இதர புராண இதிகாசங்களையும் விட்டு, மிகமிகப் பழமையானதும் புனிதமானதுமான அதர்வண வேதத்தைப் புரட்டிப் பார்த்தால், அதில் கைம்பெண்கள் சிற்சில நிபந்தனைகளுக்கிடையே மறுமணம் செய்துகொள்ளலாமென்று திட்டமாகச் சொல்லப்பட்டிருப்பதை நாம் காணலாம். அப்படியிருந்தும் சதி யென்னும் சடங்கு இந்தியாவிலே தொன்றுதொட்டு அனுஷ்டிக்கப்பட்டு வருவது வியப்புறத்தக்கதே. கிரேக்க வீரனை மகா அலெக்ஜாண்டர் பாரத நாட்டின் மீது படையெடுத்து வந்த காலத்தில் பஞ்சாபிய மக்களிற் சிலரிடம் இவ்வழக்கத்தைக் கண்டதாக எழுதிவைத்திருக்கிறார். தவிர ம்ரஹத்வதா என்னும் புராதன காவ்யமொன்றிலும் இதற்குப் பல ஆதாரங்கள் கிடைத்துள்ளன. இவ்வழக்கத்தை முதன்முதலாக இராணுவ வகுப்பினர் மட்டுமே அனுஷ்டித்து வந்தார்களென்றும், காலக்கிரமத்தில் இது பொது வழக்கமாக

மாறிவிட்டதென்றும் நவீன ஆராய்ச்சியாளர்கள் அபிப்பிராயப் படுகின்றார்கள்.

அடுத்தாற்போல், மொகலாய மன்னர்களின் ஆட்சி காலத்தில் அவர்கள் இந்துக்களின் மனதைப் புண்படுத்தாத வகையில் இவ்வழக்கத்தைத் தடுக்க முயற்சித்தார்களென்று ஸர் ஜான் மால்கோம் என்னும் ஆங்கிலேயர் மத்திய இந்தியாவைப் பற்றிய தமது யாதாஸ்துகளொன்றில் குறிப்பிட்டிருக்கிறார். அக்பர் சக்ரவர்த்தியும் பிற்காலத்தில் தோன்றிய பீஷ்வாக்களும் இதை நிறுத்த எவ்வளவு தூரம் பிரயாசைப்பட்டிருக்கிறார்களென்பது சரித்திரமறிந்த உண்மை. பிறகு வந்த பிரிட்டிஷ்காரர்களுக்கும் இவ்வழக்கம் மகா கொடுமையானதாகத் தென்பட்டது. ஆனால் கம்பெனியின் ஆட்சிக்கு பங்கமேற்பட்டுவிடுமோ வென்ற பயத்தினால் அவர்கள் தீவிரமான நடவடிக்கைகளை யெடுத்துக்கொள்ள வெகுகாலம் வரையில் விருப்பமில்லாதிருந்தனர். ஜீவகாருண்ய சிந்தையுடைய பல இந்தியர்களும் ஆங்கிலேயர்களும், இந்தியாவிலும், இங்கிலாந்திலும், பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபைகளிலும் மும்முரமாகக் கிளர்ச்சி செய்யத் தலைப்படவே, கடைசியாக 1821-ம் ஆண்டில் இதைப் பற்றி ஓர் யாதாஸ்து வெளியிடப்பட்டது. 1789-வது ஆண்டிலேயே ஷகாபாத்தின் கலெக்டராக இருந்த மிஸ்டர் எம். எச். புரூக் என்பவர் உடன்கட்டை யேறும் வழக்கத்தை யனுஷ்டிக்க அனுமதியளிக்க முடியாதென்று மறுத்ததாகத் தெரிகிறது. அதே வருடம் ஜனவரி மாதம் 28-ம் தேதியன்று மேற்படி கலெக்டர் இந்திய வைஸிராய் லார்டு காரன்வாலிஸுக்கு சதியைப் பற்றி ஒரு கடிதமெழுதியிருந்தார். அதற்கு வைஸிராயிடமிருந்து கிடைத்த பதிலின் சாராம்சம் பின்வருமாறு:—

"உடன்கட்டை யேறுவதற்கு அனுமதியைக் கோரிய மனுவை நீங்கள் நிராகரித்தது பற்றி சர்க்கார் சந்தோஷமடைகின்றார்கள். ஆயினும், அடக்குமுறையின் மூலமாகவோ அல்லது உத்தியோக தோரணையிலுள்ள அதிகாரத்தைக் கொண்டோ இவ்வழக்கத்தை நிறுத்துவதற்கு உங்களுக்கு அதிகாரமளிக்க சர்க்கார் விரும்பவில்லை. சதியை மதச்சடங்காக இந்துக்கள் கருதுகின்றனர். இவ்விஷயத்தில் இந்திய மன்னர்களெவரும் பலாத்கார முறையில் அவர்

களைத் தடைசெய்தது கிடையாது. தவிர, பகிரங்கமாகவும் பொது வாகவும் தடையுத்திரவுகளைப் பிறப்பிப்பது இவ்வழக்கத்தை அதி கரிக்கச் செய்யுமேயன்றி குறைக்கமாட்டாது."

இந்த சம்பவம் நடந்த பதினாறு வருடங்களுக்குப் பின்னர், அதா வது 1805-ம் வருட ஜனவரி மாதத்தில் பீஹார் மாகாணத்தைச்சேர் ந்த திரு. ஜெ. ஆர். எல்பின்ஸ்டோன் என்னும் மற்றொரு கலெக்டர் திரு. புருக்கைப் பின்பற்றி நடந்து, அப்பொழுது வைஸிராயாக இரு ந்த வெல்லெஸ்லி பிரபுவிற்கு ஓர் கடிதமெழுதினார். அதற்குக்கிடைத்த பதிலில், சதியைப்பற்றி பண்டிதர்களின் அபிப்பிராயங்களைத் திரட்டி யனுப்புமாறு கோரப்பட்டிருந்தது. 1805-ம் வருட ஜூன் மாதம் 5-ம் தேதியன்று பிரபல பண்டிதர்கள் பலரின் அபிப்பிராயங்களும், அவைகளை வைத்துக்கொண்டு சர்க்கார் எத்தகைய நடவடிக்கை களையெடுத்துக்கொள்ளலாமென்றும் வைஸிராயிக்கு அறிவிக்கப்பட் டிருந்தன. ஆனால், அடுத்த ஏழு ஆண்டுகள் வரையில் இது விஷய மாகச் சர்க்காரின் அபிப்பிராயம் திடப்படாமலேயிருந்தது. 1812-ம் ஆண்டில் பண்டுலீட் என்ற இடத்தைச் சேர்ந்த ஒரு மாஜிஸ்ட்ரேட் இதே விஷயமாக மறுபடியும் வைஸிராய்க்கு எழுதவே, "உடன்கட் டையேறும் பெண் பதினாறு வயதிற்கு உட்பட்டோ, கர்ப்பிணியாக வோ, அல்லது மரணமடைவதற்கு விருப்ப மில்லாமலோ இருந் தால் மாஜிஸ்ட்ரேட்டுகள் தடையுத்திரவுகளைப் பிறப்பிக்கலாம்" என்று 1813-ம் வருட ஜனவரி மாதம் பதில் கிடைத்தது. இதே போல் பற்பல சந்தர்ப்பங்களில் பற்பல நிபந்தனைகள் பிறப்பிக்கப்பட் டன. பிறகு 1817-ம் ஆண்டில் எல்லா நிபந்தனைகளையும் ஒன்றாகச் சேர்த்து சகல மாகாணங்களுக்கும் சர்க்கார் அனுப்பிவைத்தார்கள், 1815-ம் வருட முதல் 1818-ம் வருடம் வரையில் முக்கியமான சில பிராந்தியங்களில் நிகழ்ந்த சதிகளின் விவரம் பின் வருமாறு:—

## கல்கத்தா பகுதியின் விவரங்கள்.

| நகரங்கள். | 1815 | 1816 | 1817 | 1818 |
|---|---|---|---|---|
| பர்துவான் | 50 | 67 | 98 | 132 |
| கட்டாக்கிலும் பால்ஸூரிலும் | 9 | 9 | 14 | 11 |
| ஹூக்ளிபிராந்தியம் | 72 | 51 | 112 | 141 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஜெஸ்ஸூர் | 7 | 13 | 21 | 23 |
| மிட்னூபூர் | 4 | 11 | 7 | 22 |
| கல்கத்தாவின் சுற்றுப்புறங்கள் | 25 | 40 | 39 | 43 |

மேற்படி இடங்களையும், கல்கத்தாவைச் சேர்ந்த மற்றும் பல ஸ்தலங்களையும் சேர்த்து 1815-ம் ஆண்டில் 253 சதிகளும், 1816ல் 289ம், 1817ல் 442ம், 1818ல் 544ம் நடந்திருக்கின்றன. இதே போல் டாக்கா, மூர்ஷிதாபாத் முதலான இடங்களின் விவரங்கள் பின்வருமாறு:—

| ஸ்தலங்கள் | 1815 | 1816 | 1817 | 1818 | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| கல்கத்தா | 253 | 289 | 442 | 544 | 1528 |
| டாக்கா | 31 | 24 | 52 | 58 | 165 |
| மூர்ஷிதாபாத் | 11 | 21 | 42 | 30 | 104 |
| பாட்னு | 29 | 29 | 49 | 57 | 155 |
| காசி | 48 | 65 | 103 | 137 | 353 |
| பெரில்லி | 15 | 13 | 19 | 14 | 60 |
| மொத்தம் | 378 | 441 | 707 | 839 | 2365 |

மேற்படி புள்ளி விவரங்களிலிருந்து முக்கியமான மூன்று விஷயங்கள் புலப்படுகின்றன.

(1) சதியின் அனுஷ்டானம் எல்லா ஸ்தலங்களிலும் ஒரே விதமாக இல்லை. சில பிராந்தியங்களில் வெகு மும்முரமாகவும், சிலபிராந்தியங்களில் சாதாரணமாகவு மிருப்பதாய்த் தெரிகின்றது.

(2) கல்கத்தாவில் மாத்திரம் சதியின் தொகை பயங்கரமான அளவிற்குப் பெருகியிருக்கின்றது.

(3) 1815-ம் ஆண்டிற்குப் பின் சதியனுஷ்டானம் பொதுவாக எல்லா பிராந்தியங்களிலும் அதிகரித்திருக்கின்றதே யன்றி குறைந்திருப்பதாகத் தோன்றவில்லை. 1815-ம் ஆண்டைக் காட்டிலும் 1818-ம் ஆண்டில் சதியின் தொகை இரட்டித்திருக்கின்றது.

---

# மங்களமாகப் பொங்கல் பொங்குக.

ஸ்ரீமதி இராஜ சரஸ்வதி அம்மாள், லேட்படான்.

இத் தை மதி முதல் தேதியன்று பொங்கற்றிருநாள். அன்று உத்தராயண புண்ய காலமும் ஆரம்பமாகிறது. பொங்கற் பண்டிகை கொண்டாடுதலைக் குறித்து பொதுவாகப் பல காரணங்கள் கூறப் படினும், குடியானவர்களின் மகிழ்ச்சியே சிறப்பாகக் கொள்ளப்படும். கடந்த ஆறுமாத காலங்களாகத் தம் உடம்பினூடே ஊறிச்செல்லும் உதிரச் சாற்றையே பிழிந்து குத்தி வளர்த்தாலென, தேகமெங்கணும் வியர்வை ஊற்று சுரந்து ஆற்று நீர் போல் பெருக்கெடுத்தோடி நிலத்தில் பாய, இரவும் பகலும் தன்னல முற்றுந்துறந்து, கண்களை இமையன்ன, குழந்தையைக் காக்கும் தாயே போல், உணவும் துயிலும் நீத்து அரும்பாடுபட்டு உழைத்துவந்த குடியானவர்கள் தம் உழைப்பு பலன் தந்த காலத்தில், அப்பலனைத் தாங்கள் அநுபவிக்க நேர்ந்த காலத்தில், "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச் சான்றோனெனக் கேட்ட தாய்" என்ற அருங் கவியின்படி புத்திரர்களால் பலனடைந்த தந்தை தாயர்க் கொப்ப அவர்கள் (குடியானவர்கள்) அடையும் மகிழ்ச்சியின் பெருக்கை அளவிடக்கூடுமோ! ஆதலால் அன்று அவர்கள் அடைந்த ஆனந்தத்தின் பெருக்கால், தம் முயற்சியும் உழைப்பும் வீண் போகாமல் தமக்கு அம் மேழிச் செல்வத்தையருளுதற்கு— தாம் அடைந்த ஆனந்தப் பெருக்கின் காரண பூதமாய் நின்ற அவ் வாதித்தனையும் மறந்துவிடாமல், தமக்குக் கிடைத்த தானியங்களைக் கொண்டு பாற் பொங்கலிட்டு முதன் முதலில் அப்பகவானுக்குப் படைப்பித்துவிட்டுத் தாமும் உண்டுகளித் தின்புறுவர்.

அன்று வீதிகளெல்லாம் மாவிலை முதலான பலவித தோரணங்கள் அழகுற அணியப்பெற்றும், வீடுகளெல்லாம் புது மண்ணிடப் பெற்றும், சுண்ணமும், மற்றும் செவ்வர்ணம் முதலான பலவித வர்ணங்களும் பூசப்பெற்றும், மஞ்சள், சந்தன, குங்குமங்கள் இடப் பெற்றும், பலவித கோலங்கள் போடப்பெற்றும், மற்றும் பலவிதமாய் கவின்பெற அலங்கரிக்கப்பெற்று ஆனந்தமயமாய் இலங்கும்.

அன்று விருத்தர் முதல் பாலர் வரையில், செல்வர் முதல் வறியர் வரையில், யாவரும் மங்கள ஸ்னானம் செய்து புத்துடை தரித்து, நறுமண மலர்கள் சூடி வாசனைகள் திமிர்ந்து இன்னும் மற்றும் பலவிதமாய் களியாட்டயர்ந்து தத்தம்மால் இயன்றவாறு விழாக் கொண்டாடி மகிழ்ந்தின்புறுவர். அன்று உலகமே ஆனந்தக்கடலில் ஆழ்ந்திருப்பது போற் றேன்றினும், இப்பொங்கல் விழாவான மங்கல நாளன்று துயரமே உருவெடுத்தாற்போல் கண்ணீர் பொழிந்துகொண்டிருப்போரும் இல்லாமலில்லை. என்னே! இத்துணையோரும் இத்துணை களியாட்டங்களில் திளைத்துக்கொண்டிருக்க, அதிற் கொஞ்சமும் சந்தோஷத்தை அனுபவிக்காமல், கண்ணீர் உகுத்து வருந்திக்கொண்டிருக்கும் ஒரு பகுதியும் இருக்கிறதென்றால் இது எத்துணை வருந்தத்தக்கது. இப்பகுதியினர் யாவரென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? மற்றவர்களைப்போல் தாமும், மங்கள ஸ்நானம் புத்தாடையுடுத்தல், மலர்சூடல், முதலான மங்கல காரியங்களில் கலந்துகொண்டு ஆனந்தம் அனுபவிப்பதற் கில்லையே யெனக் கோடிக்கணக்கான விதவைப் பெண்மணிகளின் மனம், இப்பெருவிழாவிற் கொதித்துக் கொண்டிருக்கிறது. கொதிக்காமல்தா னிருக்குமா? இப்பொங்கற் றிருநாளில் பால் பொங்குதலைவிட இளம் விதவையரின் மனத்துயரங்கள் தான் அமிதமாகக் கொதித்துப் பொங்கி வானின்றிழியும் மாரிபோலும், மடைதிறந்த வெள்ளம் போலும் கண்களின் வழியாக வழிந்து, பெரு நதிபோலும் பெருக்கெடுத் தோடுகின்றது.

பாரதத்தில் மச்சகந்தி விவாகமாவதற்கு முன், பராசரர் மூலமாக வியாசரையும், விசித்திர வீரியன் இறந்தபிறகு அவனது மனைவியரிருவரும் வியாசர் மூலமாக திருதராட்டிரன் பாண்டு முதலானவர்களையும், குந்தி விவாகமாவதற்கு முன் சூரியனிடத்தில் கர்னனையும், விவாகமான பிறகு கணவன் இருக்கும் போதே குந்தியும் மாத்திரியும், யமன், வாயு, இந்திரன், தேவமருத்துவர்கள், முதலானவர்களிடம் முறையே மற்றவர்களையும் பெற்றார்களெனக் கூறப் பட்டிருக்கிறது. ஆனல், அவைகள் எல்லாம் குற்றமாகக் கருதப்படவோ கூறப்படவோ இல்லை. தர்மசந்தான மெனவும் அவ்வாறு அடைவது நியாயமே யெனவும் சமாதானம் கூறப்பட்டிருக்கிறது.

திரௌபதிக்கோ ஒன்றிரண்டன்று, கணவன் மரித்த பிறகு மன்று. ஏககாலத்திலேயே ஐந்து கணவன்மார் வகுக்கப்பட்டிருக்கின்றனர். இவைகளை எல்லாம் கற்பிழந்ததாகவோ மற்றபடி இழிவாகவோ கருதப்பட்டோ பழிக்கப்பட்டோ வரவில்லை. இத்துடன் திரௌபதியை "ஐவருக்கும் மனைவி அழியாதபத்தினி" என உலகினர் போற்றித் துதிப்பதுந்தவிர, பத்தினிக் கடவுளாகவுங் கொண்டு, கோயில் கட்டுவித்து, வழிபாடு புரிந்தும் வருகின்றனர். இங்கன மெல்லாமிருக்க, கணவன் இறந்தபிறகு துணையிழந்து வாடும் இளம் பெண்களுக்கு மறுமணம் புரிவித்தால் மட்டும் குற்றமா? இவ்வாறு செய்வித்தால் கற்பு குறைந்து விடுமா? அல்லது ஓடித்தான் போய் விடுமா? இவ்வாறு கூறுவதும் எத்துணையறியாமை! திரௌபதியுடன் அகலிகையும், தாரையுங்கூட பஞ்சகன்னிகைகளில் சேர்க்கப் பட்டும், ஐந்தில் இரண்டு பழுதில்லை என உலகினரால் ஒருவகையாகக் கூறப்பட்டும் வருகின்றனர். இவற்றிற் கெல்லாம் இடந்தந்த சாஸ்திரத்தில் பாலிய விதவைப் பெண்மணிகளின் மறுமணத்தை ஆதரிப்பதற்கு மட்டும் இடமில்லையா? இவற்றை எல்லாம் போற்றியுரைக்கும் நம் இந்துசமூகம் மாதர்களின் மறுமணத்திற்கு மட்டும் ஏன் அஞ்சி மறுக்கிறது.

நம் முன்னோர்களின் காலத்தில் பாலிய மணங்களே இருந்திரா வென்பதைத் துணிந்து கூறலாம். இக்காலத்தில் குலவழக்கத்திற்கும், வாதகூஷணைக்கும் அஞ்சி பருவமடையு முன்பே விவாகம் செய்வித்து விட வேண்டுமென, சாரதா சட்டத்தினர்க்கு ஒளிந்து ஒளிந்து ஒன்றிரண்டு வயதிற்குள்ளாகக் கூட, ஒன்று மறியாத பாலர்களை மணமுடித்துவைக்கும் பிராமண வகுப்பாரிடத்துங் கூட அக்காலம் பாலிய மணங்கள் சற்றும் காணப்படவில்லை யென்பதற்கு அக்கால முனிவர்களின் இல்லறமே எடுத்துக்காட்டாகும். மேலும் அக்காலம் காதல் மணங்களே பெரிதும் கமழ்ந்திருந்ததென்பதும் கவனிக்கத்தக்கது. ஆதலால் அக்காலம் பாலிய விதவைகளும் இருந்திராரென்பது திண்ணம். மேலும் உடன்கட்டையேறும் வழக்கமும் அக்காலமிருந்ததன்றோ? ஆதலால் அக்காலம் மாதர் மறுமணத்தைப் பற்றியே பேசவேண்டிய அவசியமு மில்லையாயிற்று. பாலிய மணங்களும் பாலிய வித

வைகளும் இல்லாதிருந்த அக்காலத்தில் கூட சில சூழல்களுமில்லாமலில்லை என்பதற்கு பண்டைக்கால புராணங்களிலேயே அறியக் கிடக்கிறது. அங்ஙனமிருக்க விதவைகளின் எண்ணிக்கையும், குழந்தை மணங்களும், காதலற்ற பலாத்கார மணங்களும் பெருகிக் களிநடம் புரியும் இக்கால நிலைமையைப் பற்றிக் கூறவும் வேண்டுமா? ஆதலால் இக்காலம் மாதர்களின் மறுமணம் அத்தியாவசியத்தினும் அத்தியாவசியமன்றோ? முற்காலத்திலேயே பல கணவர்களையும், கணவனிருக்கும்போதே மற்றவர்களிடத்தில் குழந்தைகளையும் அடைந்து வரும் வழக்கமிருக்க, இக்காலம் உலகமறியாத குழந்தை விதவைகட்குக் கூட மறுமணம் செய்விப்பதை உலகினர் ஏன் குற்றமாகக் கருதிப் பின்னடைகின்றனர். கணவனிருக்கும்போதே மற்றவர்களிடம் குழந்தைகளை அடைவது தர்மசந்தானமென நியாயம் கூறப்படும்போது, பிரபஞ்ச சாகரத்தில் தன்னந்தனியாக வாழ்க்கைப்புணையைச் செலுத்திக்கொண்டு தத்தளிக்கும் இளம் விதவையர்க்கு ஒரு துணையாக மறுமணம் புரிவித்து வைப்பதும் எத்துணை நியாயம். பரோபகாரத்தினும் பரோபகாரமன்றோ இது. பலவிதத் தீங்கிற்கும் இடமாக நிற்கும் இவ்விதந்துத்வத்தை ஒழிப்பதினும் மேலான தருமமுண்டோ!

"பாழே மடக்கொடியில்லா மனை" என்றார் கவியரசியாரும். வீட்டின் அழகும் தேவதையும் பெண்மக்களே. குறிப்பாக மங்கல விழாக்களில் பெண்மணிகள் இல்லையேல் அவ்விழா சிறப்புற்று விளங்கா. பொங்கல் பல்லோராலும் மகிழ்வுடன் கொண்டாடப் பெறும் மங்கல விழா. இவ்விழாவன்று எண்ணிறந்த இளம் விதவையர்கள் மனம் ஏங்கிக் கொதித்துக் கொண்டிருந்தால், இம் மங்கல விழா பூரண சந்தோஷத்தை எவ்வாறு அளிக்கும். கணக்கற்ற விதவையர்கள் மனம் வருந்திக் கண்ணீர் பொழிந்துகொண்டிருக்க அவர்களின் துயரத்தைப் போக்குதற்கு மார்க்கந் தேடாமல், நாம் மட்டும் உண்டு களியாட்டயர்ந்து இன்புறுவது அறியாமையும் விசனிக்கத்தக்கது மாகுமன்றோ. கொடுமையினும் கொடுமையன்றோ இது. முப்பழம் பாலன்னமுடன் நாமுண்ணும் போது அதில் சிறிது அசுத்தம் சேர்ந்துவிட்டால், அல்லது அவ்வசுத்தங்களை அருகிற் கண்டால்கூட உடனே அத்திவ்ய போஜனத்

தினல் நாம் அடையவேண்டிய இன்பத்தை எல்லாம் அறவே இழந்துவிடுகிறோம். இதைப் போன்றே இப்பெரும் மங்கல விழாவில் இளம் பெண்கள் மாரிபோற் கண்ணீர் பொழிந்து மனம் பொருமிக்கொண்டிருக்க, அதனிடையே நாம் அனுபவிக்கும் இன்பமும் குதூகலமும், எத்தகைய சந்தோஷத்தை அளிக்கக்கூடுமென்பதை எண்ணிப்பாருங்கள்! மங்கல விழாவின் திருவான பெண்கள் இப்புண்ணிய தினமாகிய பொங்கல் நாளன்று இவ்வாறு கண்ணீர் சிந்திக்கொண்டிருப்பதால் இம்மங்கல விழா பெரும் மாசு அன்றோ அடைகிறது. இப்பொங்கல் விழா பேருக்குமட்டும் மங்கல விழாவாக இருந்தால் போதுமா? இப்பொங்கல் நன்னாள் புனிதமடையுமாறு முயற்சியுடனும் துணிவுடனும் முன்வந்து நம் விதவைச் சகோதரிகட்கு மறுமணம் புரிவித்து, அவர்களின் கண்ணீரை மாற்றி, அவர்கட்கு மகிழ்வுண்டாகச் செய்வீராக.

---

# புது மலர்ச்சி

"சாமு"

சினிமா படத்தொழிலில் பயிற்சி பெறவேண்டி ஐந்து வருஷங்களுக்கு முன் ஜப்பான் சென்ற சுந்தரம் அன்றுதான் தன் ஊருக்குத் திரும்பி வந்திருந்தான். அந்த ஐந்து ஆண்டுகளாய்ப் பிரிந்திருந்த பெற்றோர், உற்றார், உறவினர்களைக் கண்டு குதூகலமடைந்தான்.

இரவு எல்லோரும் போஜன மருந்தியபின் பேசிக் கொண்டிருக்கும் போது, "ஏனம்மா! அடுத்தவீட்டு மீனாள் வரக்காணோமே! நான் வந்திருப்பது அவளுக்குத் தெரியாதோ?" என வினவினான் சுந்தரம்.

"இல்லையடா, அப்போது என்னிடம் உன்னைப்பற்றிக் கேட்டாள். நீ வருவதற்கு முன்கூட எப்போது வருவாயென அடிக்கடி கேட்டுவந்தாள். பாவம், அவளைப்பிடித்த பொல்லாத காலம் இந்த

வயதிலேயே தாலியறுத்து விட்டாள்" என வருத்தத்துடன் பகர்ந்தாள் அவன் தாய்.

சுந்தரம் அதைக்கேட்டதே திடுக்கிட்டு விட்டான்! அவன் மேல் இடிவிழுந்தது போலிருந்தது "என்ன! அவளுக்கு விவாகமாய் விட்டதா?" என ஆச்சர்யத்துடன் கேட்டான்.

"ஆமடா, விவாகமாகி ஒருவருட மாகிறது. கணவனிறந்து ஆறுமாதமே யாகிறது. அந்தக்கிழவனை மணக்கமாட்டேனென்றாள்! அவள் பெற்றோர் பிடிவாதமுடன் அவ்வயோதிகனுக்கே அவளைக் கட்டிவிட்டார்கள்" என்றாள்.

"உம்............சரி! நேரமாகிறது; தூங்கச் செல்லுகிறேன்" எனச் சுந்தரன் எழுந்துபோய் விட்டான்.

மன அமைதியை யிழந்துவிட்டான். துக்கம் நெஞ்சைப் பிளந்தது. படுக்கையில் புரண்டு கொண்டே பல பல வெண்ணினன். சிறு பிராயத்தில் மீனாளும் அவனும் ஒன்றாய் விளையாடியதும், தோட்டத்திலிருந்த மாமரத்தில் இருவரும் ஊஞ்சலாடியதும், அவன் அவளுடன் சண்டையிட்டுக்கொண்ட காலத்தும் அதைப் பொருட்படுத்தாது களங்கமற்ற மனதுடன் அவள் அவனுடன் அன்பாய் அன்யோன்யமுடன் பேசியதும், கடைசியாக அவன் ஜப்பான்செல்லும் காலத்தில் அவனைப்பிரிய மிக வருந்தி அவள் கண்ணீருகுத்ததும் அவனது அகக் கண்முன் தோன்றி அவனை வருத்தியது.

நிம்மதியின்றியே அவ்விரவைக் கழித்தான்.

மறுநாள் மாலை. ஏதோ யோசித்தவண்ணம் தன் வீட்டுப் பின்புறத்திருந்த தோட்டத்தில் அங்குமிங்குமாக உலாவிக்கொண்டிருந்தான் சுந்தரன். தற்செயலாக அவனது கண்கள் அடுத்த தோட்டத்தை நோக்கின; உடனே பிரமித்து கல் ஸ்தம்பமாய்விட்டான். ஏனென்றால் அங்கு ஒரு பெண்பாவை பூஞ்செடிகளுக்குத் தண்ணீர் வார்த்துக்கொண்டிருந்தாள்.

அவளுக்கு வயது பதினாறுக்கு மேலிராது. கலைவாணியென வெண் கலையுடுத்தி குறுநடை பயின்று தன் வேலையில் ஆர்வமுடனிருந்தாள். அவள் புன்னகை புரிந்து நெடுநாளாய்விட்டதென அறிய அவள் முகம் கவலையுற்றிருந்தது.

ஆம், அவள்தான் மீனாள்! அவளைக் கண்ட சுந்தரத்திற்கு ஓர் புத்துணர்ச்சி உண்டாயிற்று. ஐந்து வருடத்திற்கு முன் கண்ட மீனாள் தெய்வரம்பையாக மாறிவிட்டாளென வெண்ணினான். ஆனால் ஆபரணமற்று வெள்ளையணி யுடுத்த அவள் கட்டாயப்படுத்தப்பட்டிருப்பதுகண்டு கலங்கினான்.

அவளைக் கூப்பிடலாமாவென முதலில் நினைத்தான். ஆனால் யாரும் காணும்படி நேர்ந்தால் விஷயம் விபரீதமாய்விடுமே யென அஞ்சி வாளாவிருந்துவிட்டான். அவளாவது ஒரு முறையேனும் தன் பக்கம் திரும்பமாட்டாளாவென ஏங்கி நின்றான். ஆனால் அவள் எப்பக்கமும் திரும்பாது அம்மலர்ச்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுவதிலேயே கவனமாய் நின்றாள். அப்புஷ்பச் செடிகள்தாமே அதுகாறும் அவளுக்கு ஆறுதல் கூறி இன்பமூட்டிவந்தன; அவைகள்தாமே அவளுக்கேற்ற தோழர்களாய் திகழ்ந்தன; ஆகவே அவளது கவனத்தை அவைகள் ஈர்ப்பது இயல்புதானே.

சுந்தரன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய் வீட்டிற்குள் சென்று, ஒரு சித்திரப் புத்தகத்தை யெடுத்து அதனுள் ஒரு குறிப்பையும் வைத்து, ஜப்பானிலிருந்து அவளுக்கெனத் தான் கொண்டு வந்ததாக, அப்புத்தகத்தை மீனாளுக் கனுப்பிவைத்தான்.

அதை பெற்ற மீனாள், தன் மேலிருக்கு மன்பினால் சுந்தரம் அதுவரை தன்னை மறவாதிருப்பதுகண்டு மகிழ்ச்சியும், அவன் ஏமாறும்படி யாய்விட்டதே யெனச் சஞ்சலமும் ஒருங்கே கொண்டாள். புத்தகத்துள்ளிருந்த குறிப்பில் தன்னை அன்றிரவு பதினொரு மணிக்குத் தோட்டத்திற்கு வரும்படி கேட்டிருப்பது கண்டு, சுந்தரத்தை தனியே சந்திக்கப்போகும் பாக்கியத்தை நினைந்து உளம் பூரித்தாள்.

* * *

குறிப்பிட்டபடி இரவு மணி பதினொன்றிருக்கும். சுந்தரம் பின்கட்டு வழியாகத் தோட்டத்தை மெதுவாக அணுகினான். இரு வீட்டிற்கு மிடையேயுள்ள கட்டைச் சுவர் ஓரமாக, அடுத்த தோட்டத்தில் ஒரு வெள்ளை வஸ்து நிற்பதைக் கண்டான். சுவற்றின் மீதேறி மறுபக்கம் குதித்து, மெதுவாக அதனண்டை சென்று, "வந்து ரொம்ப நேரமாய்விட்டதோ?" என்றான்.

"இல்லை இப்போதே வந்தேன்"

"சரி! என்னை ஏமாற்றி விட்டாயல்லவா?"

அதைக்கேட்டதே அவள் கண்களிலிருந்து கண்ணீர் மள மள வென ஒழுக ஆரம்பித்துவிட்டது. கைகளால் கண்களைப் புதைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதபடி, "இல்லை! இல்லை! நான் ஏமாற்றவில்லை! ஆனால்....! ஆனால்! என் பெற்றோர் தம் சுயநலங் கருதி விடாப்பிடியாய் என்னைப் படுகுழியில் தள்ளிவிட்டனர்!" என்றாள்.

"எப்படியிருப்பினும் எனதாசை வீணாய்விட்டதல்லவா?"

"என் குற்றமில்லை! தங்கள் பால் நான் வகித்த எனது அன்பும் ஆத்மாவும் இந்நேரம் வரை சிறிதும் மாற்றமடையவில்லை! இது சத்தியம்!"

"இனி என் செய்வது? காரியம் முடிந்துவிட்டது! இருவரும் துரதிர்ஷ்டசாலிகளாய் விட்டோம்! இனி நாம் ஒன்றி வாழ முடியாதுதானே?"

"ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்? நானிது வரை உயிர் தரித்திருந்தது உங்களை நம்பித்தான்! நானினி இருப்பதும் இறப்பதும் உங்கள் கையிலேதான்!"

"அதென்ன என் கையிலிருப்பது? உன் வாழ்க்கைதான் பாழ்பட்டு விட்டதே!"

"தாங்கள் நினைத்தால் என் வாழ்க்கையில் ஓர் புது மலர்ச்சியை உண்டுபண்ணக்கூடும்!"

"அதெப்படி முடியும்? நீ நினைப்பதற்குச் சமூகம் இடந்தருமா?"

"இந்தச் சமூகம் காதலர் விருப்பை நிறைவேற்றி வைக்கிறதா? அன்றி நன்மை தீமை யறிந்துதான் நடக்கிறதா? அதன் நீதியற்ற கட்டுப்பாட்டிற்கேன் தயங்கவேண்டும்? ஒரு இள நங்கையின் வாழ்க்கையை அப்படியே துவம்சம் செய்யும் இச்சமூகத்தை நம்பலாமா? உண்மையிலேயே என்மீது தங்களுக்கு அன்பிருக்குமானால் இதற்கெல்லாம் தயங்கமாட்டீர்கள்!"

"அப்படியானால் எல்லோரையும் பகைத்துக்கொள்ள நேரி

டுமே! அன்பாகப் பெற்று வளர்த்த பெற்றோரையும் வஞ்சிக்க லாமா?"

"ஆமாம்! எல்லாம்தான் உண்டாகும். நன்மை தீமை நன்கு ஆலோசியுங்கள். எனது புனிதக்காதல் சிதறிவிடுமேல் நான் இனி உயிர் வாழ்வதில் பிரயோஜனமில்லை. தங்களையே அன்றும் நம்பி னேன், இன்றும் நம்புகிறேன். பெற்றோர் உற்றோர் அனைவரும் தாங் களே எனக் கருதும் என்னை, தாங்களும் வெறுப்பீர்களானால் உயிர் மாய்ப்பதே எனக்கேற்ற வழி!" எனக் கண்ணீர் விட்டாள் மீனா.

"சரி! மீனா! எனக்குத் தலை கிறு கிறுவென்று வருகிறது. தூங்கப் போகிறேன். நேரமாகிறது. நீயும் போ. மற்றவை பேச நாளை இந்நேரம் இங்குவா" என்று மனங் குழம்பியவனாய் அவ ளைப் பிரிந்தான்.

சுந்தரனுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. அவனது மனதில் கடல் அலைகள் போன்று பற்பல எண்ணங்கள் குமுறி எழுந்தன. தன்னைப் பெற்று அத்துணை காலம் அன்பாய்ப் போஷித்து வளர்த்த பெற்றோர் வாஞ்சையை யேற்று அதன்படி நடப்பதா? அன்றித் தன்னையே கதியென நம்பியிருக்கும் மீனாளை ஏற்றுக்கொள்வதா? இவ்விரண்டிலெதை ஆதரிப்பதென்பதுபற்றி ஆழ்ந்து சிந்தித்தான்.

"மீனாள் பால்யவயது முதல் என்னை நேசித்துவருகிறாள். என் மீது வைத்துள்ள அன்பும் ஆதரவும் இதுவரை சிறிதும் மாற வில்லையெனச் சத்தியம் செய்கிறாள். அவளுக்குக் கனவு போன்று ஒரு கணவன் தோன்றிமறைந்து போயிருந்தும் அவளது இளமை யுள்ளம் புத்தம்புதிதாகவே இருக்கிறது. அவளை வலுவந்தப்படுத் திக் கட்டாய மணம் செய்திருக்கின்றனர். ஆம்! அது அவளது குற்றமல்ல. நான் கைவிடின் உயிர்விடுவதைத் தவிர வேறுவழியில்லை யென்கிறாள். சமூகத்திற்குப் பயந்தால் ஒரு இளம் பெண்ணைக் கொன்ற பாவியாகி விடுவேன். அவள் அன்பை நான் என்றும் மறக்கமுடியாது. இப்பொழுதும் அவளை உள்ளன்போடு காதலிக் கிறேன். அவளை ஈன்ற பெற்றோர்களே அவளுக்குத் துரோகிக ளாகி விட்டபோது, ஆம்! நான் தான் அவளுக்குக்கதி. எங்கள் இலக்ஷியம் இனிது நிறைவேற வேண்டுமானால் இவ்விரக்கமற்ற கட் டுப்பாட்டிற்கு உடன்படலாகாது. சமூகத்திற்காக மீனாளைப் பலி

கொடுத்து என் வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொள்ளமாட்டேன்! பெற்ரோர்கள் என்னை அன்பாய் நேசித்தாலும், எங்கள் விருப்பை நிறைவேற்ற ஒரு போதும் ஒத்துக்கொள்ளும் நோக்கமாயில்லை. எனவே அவர்களை வஞ்சிப்பதன்றி வேறென்ன செய்யவியலும்? சரி! இதுதான் முடிவு!" என தன் மனத்துள் திடப்படுத்திக் கொண்டான்.

மறுநாளிரவு. அதே இடத்தில் இருவரும் சந்தித்தனர். வெகு நேரம் ஏதேதோ சம்பாஷித்தனர், ஆழ்ந்து யோசனை பண்ணினர்; இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தவர்களாய் இருவரும் பிரிந்தனர்.

இதற்கிடையில் மாதமொன்று மறைந்தது. கல்கத்தாவிலுள்ள புகழ்பெற்ற பார்வதி சினிடோனில் புதிதாக வேலைக்கமர்ந்த நல்ல அனுபவம் வாய்ந்த இளைஞர் ஒருவர் புதிய படமொன்றிற்கு வேண்டிய சில இயற்கைக் காட்சிகளை அன்று மாலை படம் பிடித்த பின், ஸ்டுடியோவிலிருந்து தன் வீட்டிற்குச் சென்ருர்.

வீட்டை யடைந்ததும் "மீனு..........!" என அழைத்தார். உடனே ஒரு அழகிய பெண்ணுருவம் வந்து கதவைத் திறந்து புன்னகை ததும்பிய முகமலர்ச்சியுடன் அவரை வரவேற்றது.(வந்தவர் நம் கதாநாயகனே எனவாசகர்கள் இதற்குள் யூகித்துக்கொண்டிருக்கலாம். சுந்தரனும் பார்வதி ஸினிடோனில் உயர்ந்த சம்பளத்தில் படம் பிடிப்பவனுய் அமர்ந்தானென்பதை யான் கூறித் தெரிய வேண்டுவதில்லை!)

சுந்தரம் நாற்காலியி லமர்ந்ததும், மீனுள் விரைந்து உள்ளே சென்று தேநீர் கொண்டுவந்து, "இந்தாருங்கள்! இதையருந்துங்கள்! அதிக களைப்பாயிருக்கிறீர்கள்!" என்ருள் அன்பொழுக. புன்னகை பூத்தவண்ணம் அவளிஷ்டப்படி அதைப்பருகினுன் சுந்தரன்.

"மீனு! கண்ணுடியைப் பார்! இப்பொழுது எவ்வளவு வனப்புடன் காணப்படுகிருய்! நீ தரித்திருக்கும் கலர்ப் புடவையும், நெற்றியிலிட்டிருக்கும் திலகமும், பின்னலிட்ட கூந்தலில் சொருகியிருக்கும் ரோஜாமலர்களும், கையிலணிந்திருக்கும் தங்க வளையல்களும் உன் இயற்கையழகை எத்துணை மிகைப்படுத்திக் காண்பிக்கின்றன தெரியுமா! என்னமோ ஊர்வசி, திலோத்தமை, ரம்பை என்கிருர்

க்ளே, அவர்களெல்லாம் உன்னைக் கண்டால் வெட்கித் தலைகுனிய வேண்டாமா?"

"அப்பா! எவ்வளவு புகழுரை! இந்தப் பெருமை யெல்லாம் காரண கர்த்தாவாயுள்ள உங்களையல்லவோ சேரவேண்டும்? ஒதுக்கப்பட்ட என்னைத் துணிந்து காதல் மணம் செய்துகொண்டு, என் வாழ்க்கையில் புத்தப்புது மலர்ச்சியை யுண்டுபண்ணிப் புனிதப்படுத்திய புண்ணியம் யாரைச் சார்ந்தது?"

---

## விதவையர் படுந் துயர்.

சிரம்பான் அ. பழ. பழநியப்ப செட்டியார் எழுதுவது.

நமது இந்து சமூகத்தாரிடத்தில் குடிகொண்டுள்ள கொடிய விதவைப் பரிதாப நிலையை ஒவ்வொரு ஆணும், பெண்ணும் ஆழ்ந்து யோசித்து அம்மங்கையின் துயரைப் போக்க முன் வாருங்கள், முன் வாருங்கள். பால் மணம் மாறு பச்சிளங்குழவியை விவாகஞ் செய்விக்கின்றனர். அந்நங்கையின் கட்டாயத்துணைவர் அகால மரணமெய்திவிட்டால் அவர்கள் கதி அதோகதிதான். அந்தோ! பரிதாபம்! பரிதாபம்! இப்படியே பழக்க வழக்கம் என்று சொல்லி வரும் அந்தக்கொடிய சட்டத்தை அறவே அறுத்துத் தள்ளி ஒவ்வொரு சகோதரரும் விதவைகளின் துயரத்தைப் போக்கி அவர்களுக்கு மறுமணம் செய்விக்க முன்வாருங்கள். அப்படிச் செய்தால் நமது பாரத நாடு விரைவில் முன்னணிக்கு வந்துவிடும். ஒவ்வொரு ஆணும் பெண்ணும் இப்பணியில் ஈடுபட்டு எவ்வித இடையூறும் செய்யாது, மறுமணத்தை ஆதரித்து மணங்கள் செய்ய முன்வாருங்கள். இம்மணத்தை தடைசெய்யாது தாராளமாக மறுமணம் செய்துகொள்ளலாம் என்று பாரதநாட்டுப் பெரியார்கள் மகாத்மாஜியும், சுவாமி சுத்தானந்த பாரதியாரும் மிக அழகாகப் பொன் எழுத்துக்களில் வரைந்திருக்கிறார்கள். அப்பெரியார்களின் ஆசீர்வாதத்தை ஏற்று இனியாகிலும் தாராளமாக முன் வந்து பல விதவை மணங்கள் நடைபெற வேண்டுமென்று ஒவ்வொரு இந்திய சகோதர சகோதரிகளையும் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

# கைம்மையர் விடுதலை.

திருச்செந்தூர், மு. கிருஷ்ண சர்மா பாடியது.

'கரும்புத்தோட்டத்திலே' என்ற இசை.

(1) அன்புறு சோதரர்காள்—சிறி
காத்திரம் இன்றி அடியன் சொல் வாய்மொழி ஆவலிற் [கேட் டருள்வீர்
இன்பசெய் மாதர்க்கு நீர் செயும்
இன்னலைச் சொல்லினர் பாரதமாதமவை ஏட்டிலடங்கிடுமோ.

(2) தேன் நிகர் இன்மொழியார் மிகு
செம்மை நிறைந்த மனமுடையார் இளஞ் செந்தளிர் [மேனியினர்
தாய் நிகர் அன்புடையார் அவர்
தம்மொடும் ஆடவராகிய உங்கட்கு வந்திடு செற்றமென்னே.

(3) பிள்ளை பெறா விடினும் குறை
பேசி யன்னாரை விலக்கிடுவீர் எழில் வாய்ந்திலாயிடினும்
தள்ளி அகற்றிடுவீர் சிறு
சண்டை வந்தாலும் பிறபல காரணத் தாலும் விலக்கிடுவீர்.

(4) நீவிர் வெறுத்திடினும் அன்றி
நிந்திப் பினும் வெறி நாயையடிப்பது போல அடித்தாலும்
ஆவிதுடிக்கும் அன்னார் உமக்கு
அஞ்சிஎம் காதல ரென்றுமக் கேவலும் செய்திட வேண்டுங்கொலோ.

(5) நல்ல ஒழுக்கத்தினால் மறு
காரிகை யாரொடு நட்புற்றுநீர்பிணி கொண்டுவந்தாலும் [உம்மேல்
உள்ளம் வருந்தாது மகிழ்
வுற்றுநும் நோயை யகற்றிப் பணிபல ஆற்றிடவேண்டுங்கொலோ.

(6) நுங்கள் விருப்புள தேல் பல
நூற்றுவ ராயினும் மாதர்கள் தம்மை மணந்திடுவீர்
தங்கண வன்மரித்தால் கொள்ளத் [போலும்
தக்கஓர் காதலன் றன்னைமணக்க மறுத்துரைப்பீர் போலும்!

(7) நன்று நன் றுங்கள் முறை எந்த
நாட்டிலும் இந்தக் கொடுவழக் குண்டுகொல் நாணமுமக்
சென்றது செல்குக வே இனிச் [கிலேயோ
சேயிழை யார்க்கு மறுமணம் செய்யலுர் காலும்
மறுத்துரையீர்.

(8) ஆங்கிலர் ஒவ்வொரு கால் கடிது
ஆயஇ ராணுவச் சட்டமியற்றிடில் ஆ னொடிதென்
நீங்கள் பல் லூழிதொட்டு நல்ல [றுரைப்பீர்
நேரிழை யார்க்குச் செயுங் கொடுஞ் சட்டத்தை நீக்குநர்
ஆருளரோ.

(9) நங்கைய ரையடக்கும் சட்டம்
நன்றெனும் உங்கட்கு மற்றையர் சட்டங்கள் தீங்கென
சங்கை யொன் றில்லாமே இனித் [நாவுமுண்டோ.
தாழ்குழ லாரை யடக்கிடும் சட்டம் தகர்த்துத்
தகர்த்தெறிவீர்.

(10) இத்தகைத் தீமையெலாம் இனி
எட்டுணை யெனும்நம் நாடுபொறுகது நிச்சயம் ஓர்ந்திடுவீர்,
எத்தனை ஏதுவினல் அந்த
ஏழையர் தம்மை விலக்குவீர் அத்துணைக் காரணத்
தாலும் இனி

(11) உம்மைய ன்னோர்விலக்கி நல்ல
உத்தம ராகிய ஆடவர் தம்மைநும் கண்முனப்பே மணப்பார்
செம்மை நெறியு ரைக்கும் எனச்
செப்பி டும்உம்மறை நூலேயோர் காலும் படித்துணர்ந்
தாய்ந்துளிரோ.

(12) கண்டறி யீர்எனினும் அது
கற்றவர் தங்களைக் கேட்டறிந்தாலும் நம் கன்மனமுங்
பெண்டிர்கள் தங்களுக்கு மறை [கரையும்
பேசும்மறுமண நீதிகள்யாவையும் யாமுரைப்போம் கேளீர்.

(13) கொண்டவன் மாய்ந்திடினும் சிறைக்
கூடம்புகுந்தன னேலும் ஒழுக்கம் வழுக்கிவிழுந்தாலும்
கண்டறியாத் தேயம் சென்ற
காலேயும் பேடிஎன்றுலும் மறுமணம் பேசினர் அல்லாதும்,

(14) மாதர் மறுமணத்தைச் செயும்
மற்றைய நாட்டினராகிய ஆங்கிலர் வேறுபல்
தீதறி யாச்சீனர் வலி [வெண்ணிறத்தார்
சேர்ந்த ஜப் பானியர் பாரசி கத்தர்அ ராபியர் கிரேவர்.

(15) தெற்கு வடக்கினிலும் உள்ள
சீரமரிக்கையில் வாழ்சிவப்பிந்தியர் ஆப்பிரிக்கர் முதலாம்
பற்பல் குலத்தவரும் சிறு
பைந்தொடி யார்க்கு மறுமணம் செய்தத னாற்குறை யாதுடையார்.

(16) மற்றவர் தாழ்ந்திலரால் அவர்
வாழ்ந்திடுபூமி பிளந்தில வானும் இடிந்தங்கு வீழ்ந்ததில்லை
குற்றமொன் றில்லாமல் அங்குக்
கோதையர் கற்பொடு வாழ்ந்திட ரின்றிக் குலத்தைப் பெருக்கிடுவார்.

(17) வஞ்சக் கருவு முறூர் பெற்ற
மக்களைக் கேணியில் கள்ளியிற் சாக்கடைநீரில்
நஞ்சினை யுண்டிறவார் உடல் எடுத்தெறியார்
நான்றிட நீண்மர மீதினிற்றூங்கிநல் லின்னுயிர் நீங்குகிலார்

(18) ஏனைய நாட்டார்கள் தமை
ஏசிஇகழ்ந்து வெறுந்தலர் தூற்றிடச் சற்றும் இடங்
ஆனத னல் நீரும் நமது [கொடுக்கார்
அங்கனை மார்களுட் கைம்மையர் தம்மை மணந்திடத் தூண்டிடுவீர்,

(19) கோடி ஜவாஹர்கள் தாம் வந்து
கூடினும் ஆங்கிலர் தாமும் இணங்கினும் மாதர்
நாடி இயற்றும் வரை உங்கள் [மறுமணத்தை
நாடு சுதந்தரம் பெற்றிடு மென்றொரு காலும் கனாக்காணீர்.

(20) பாரினுள் மக்களுள்ளே சரி
பாதிக்கு மேற்பெரும் பாலினராகிய பாசிழையார் உரிமை
சேரவிலாக்காலை எங்கள்
தேயம் சுதந்தரம் பெற்றுள தென்றுசொல் பேதையர் யாவரையும்.

(21) பேணி அரசியலார் பெரும்
பித்தர் மருத்துவச்சாலையுள் ளேகையும் காலும் பிணித்
தூணளவாக்கொடுத்து மருள் [தடக்கி
ஒடும்படிச்செய்த றிவுற்ற பின்வெளி யேற்றுதல்
வேண்டுமரோ.

(22) வள்ளுவர் எம்தமிழர் பெரு
வானிலும் ஏழுல கத் தினுமேபெரி யாரென வாழ்த்திடுநீர்
தெள்ளிய நீதிசொலும் அவர்
செப்பிய வாறுல கத்தினைடொட்டல் கடைப்பிடித்
துள்ளீரே.

(23) மேலைநன் னாட்டுலகம் ஒளிர்
வெய்யவன் றேன்றிடு கீழைநன் னாடெனும் வீரஜப்
சாலவும் செல்வரெனப் புவி [பான்சீனம்
சாற்றிய சீரமரிக்கர்கள் வாழுல கென்னும் இவற்றினுள்ளே.

(24) கைம்மையர் என்றுசொல்லி இரு
கால்பிணித் தாலெனக் காரிருள் மூலையிற் கட்டி
பொய்மை விதிகள்செய்து நறும் [யடக்குவித்துப்
பூங்குழ லார்க்கிடுக்கண் செய்யும் நாட்டினைப் பூவினிற்
கண்டதுண்டோ.

(25) கன்னி என்னும் மேயோ இங்குக்
கண்ட அநீதியும் குற்றமும் சொல்லினும் கண்சிவந்
சொன்னதும் உண்மை எனில் உடன் [தாடுவிர்கள்
துண்ணென் றெழுந்துநம் மக்கள்தம் மாசு துடைத்துக்
திருத்துகிலீர்.

(26) ஊரென ஒன்றிருப்பின் கைம்மை
யுற்றவர் தம்தொகை ஆயிரமாயிர மாகஅங் குள்ளனவேல்
சீரென ஒன்றுபெறத் தவம்
செய்யினும் நம்முடை நாட்டவர் தக்கவர் ஆதல் முயற்
கொம்பே.

(27) சர்மனி நாட்டாரின் சன
சங்கையிற் பாதிநம் கைம்மையர் தம்தொகை ஆமெனில்
கர்மமி தென்றுரைக்கும் கருங் [யார்கொதியார்
கன்மனப்பாதகர் தங்களைக் கண்ணுற்றிற் காறியுமிழ்ந்திகழ்வீர்.

(28) ஆதரவால் நீரும்அறி
யாதுநம் நைம்மைச் சகோதரிய ர்க்கிது காறும்செய்தீங்க
காதலினுல் அவர்தாம் மணம் [கற்றி
கண்டும கிழ்ந்துல கின்பநுகர்ந்திடக் கங்குல்பகல் முயல்வீர்.

## மறுமணம் செய்திருந்தால்...?

[ப. நீலகண்டம்]

கமலாவுக்கு வயது பதினைந்து இருக்கும். நல்ல அழகுவாய்ந்தவள். தூய வெண்மை ஆடையுடையுடன், பொடிக் கலர் ஜாக்கெட் அணிந்து சிவந்த மேனியில் கருப்புப் பொட்டிட்டு காட்சியளிக்கும் கமலாவைக்கண்டு யார்தான் அழகியில்லையென்று சொல்லமுடியும். கள்ளங்கபடமற்ற அவளுடைய சிரித்த முகத்தோற்றம் யாவரையும் வசீகரிக்கத்தக்கதாயிருந்தது.

கமலா ஒன்பதாவது வகுப்பில் வாசித்துக்கொண்டிருக்கிருள். கமலாவின் வீட்டிற்கு அடுத்த வீட்டில் வசிக்கும் ராமநாதன் பத்தாவது படிக்கிருன். ராமநுதனின் குடும்பத்தாரும், கமலாவின் வீட்டாரும் மிகவும் சினேகமுள்ளவர்கள். அதேபோன்று ராமநாதனும் கமலாவும் சிறுவயது முதற்கொண்டே ஒன்ருகப் பள்ளிக்குச் சென்று ஒன்ருக விளையாடியவர்கள்.

* * *

ராமநாதனும், கமலாவும் வயதில் உயர்ந்துகொண்டு வந்தது போன்று அவர்களுடைய நேசமும் வளர்ச்சியடைந்துகொண்டே வந்தது. அக்காலத்தில் சிறுவர்களின் மனப்பான்மைக் கேற்றவாறு ஒருவர்மீதொருவர் கொண்ட நேயம் இன்று பருவகாலத்திற்கேற்ப காதலாக மாறியது.

* * *

ஒரு நாள் மாலை. கமலாவும் அவளுடைய தாயார் அம்புஜம் அம்மாளும் உட்கார்ந்திருந்தார்கள்.

கமலா:—அம்மா! நான் ஒன்று கேட்கவேண்டும், கேட்கட்டுமா?

அம்புஜம்:—நன்ருகக் கேளேன்.

கமலா:—ஏனம்மா? எனக்கு இன்னும் கலியாணம் செய்யாமலிருக்கிருய்? நம்முடைய பிராமண ஜாதியில் இவ்வளவு வயதுவரை கலியாணம் செய்யாமல் இருக்கலாமா?

கமலா கேள்விகேட்டு இரண்டு நிமிடங்களாகிவிட்டன. அம்புஜம் பதில் சொல்லவில்லை. நிசப்தமாக இருந்தது. அம்புஜம் தன்னுடைய முகத்தை மறு பக்கமாகத் திருப்பினுள். கமலா தன் தாயின் காத்தைப்பற்றி "அம்மா! ஏன் பேசாமலிருக்கிருய்?" என்று சிறிது படபடப்போடு கேட்டாள்.

அம்புஜம் பதில் சொல்லவில்லை. ஆனுல் அவளுடைய கண்களிலிருந்து நீர் முத்துமுத்தாக விழலாயிற்று. அதைப் பார்த்ததும் கமலா மிகவும் பயந்துவிட்டாள்.

"ஐயோ! அம்மா! என்னம்மா செய்தேன்? சொல்லு" என்று கேட்டாள். கமலாவின் கண்கள் கலங்கின. நீர் கீழே விழத் தயாராயிருந்தது. அம்புஜம் கமலாவின் தலையைத் தடவியவாறு, "கண்ணே! என்னடி சொல்லப்போகிறேன்" என்ருள்.

கமலா:—அம்மா! நான் என்னம்மா செய்தேன்.

அம்புஜம்:—நீ ஒன்றும் செய்யவில்லையடி கண்ணே!............ உனக்கு............கலியாணமாகிவிட்டதடி.

கமலா:—என்ன? கலியாணமாகிவிட்டதா?—என்று ஆச்சரியத்தோடு கேட்டாள். எங்கும் நிசப்தம். தலைகவிழ்ந்துகொண்டிருந்த கமலா நிமிர்ந்து பார்த்தாள். அம்புஜம் அம்மாள் சிறு குழந்தையைப் போல தேம்பித்தேம்பி அழுதுகொண்டிருந்தாள்.

கமலா:—அம்மா! அழாதேயம்மா! எனக்கு மாங்கல்யம்கூட இல்லையே. என் கணவரெங்கேம்மா? அழாமல் சொல்லு.

அம்புஜம்:— கமலா! உனக்கு உனக்கு........ ஏழாவது வயதில் கலியாணமாயிற்று. பின் ஆருவது மாதத்தில் அந்தப் பையன் குளிக்கப்போன இடத்தில்........ ஆற்றில் விழுந்து இறந்தான். கமலா! கமலா! இதை ஏனடி கேட்டாய்?

கமலா:—அம்மா அழாமல் நடந்ததைச் சொல். அழுவதால் என்னபயன்?

அம்புஜம்: —பின்பு எல்லோரும் நம்முடைய ஜாதி ஆச்சாரப்படி உன் தலையை மொட்டையடிக்கவேண்டு மென்றார்கள். உன் அப்பா அதை வேண்டாமென்று சொல்லி உன்னைப் படிக்கவைத்தார். நீ எவ்வளவுதூரம் படிக்கப் பிரியப்படுகிறாயோ அவ்வளவுதூரம் படிக்கவைப்பதாக எண்ணம். அப்பொழுதாவது இவ் விஷயத்தைப்பற்றிய நினைப்பு உண்டாகாமலிருக்குமென எண்ணினேன்—என்றாள். கமலாவின் முகம் வெளுத்து சிறிது பயங்கரமாக இருந்தது. அவளால் அங்கு உட்கார்ந்திருக்கமுடியவில்லை. எழுந்து தளர்ச்சியடைந்த நடையாக அறைக்குள் சென்று படுக்கையில் வீழ்ந்தாள்.

மிகமிக பயங்கரமான விஷயத்தைக் கேட்டவள்போல அவளுடைய நெஞ்சம் துடிதுடித்தது. இன்னதென்று கூறமுடியாத குழப்பமடைந்த உள்ளத்தோடு புரண்டுகொண்டிருந்தாள்.

* * *

மறுநாள். ராமனாதன், வீட்டு வாயிலில் கமலாவின் வரவிற்காக காத்துக்கொண்டிருந்தான். வழக்கத்திற்கு மாறாக கமலா அன்று சிறிது நேரம் பொறுத்தே வந்தாள். இருவரும் பள்ளிக்கூடத்திற்குப் புறப்பட்டனர். ராமனாதன் கமலாவைப் பார்த்து "என்ன? உன் முகம் இவ்வளவு சோர்வுற்று காணப்படுகிறதே?" என்றான்.

கமலா:—என்னுடைய வாழ்க்கையில் நடந்த சம்பவமொன்று தங்களுக்குத் தெரிந்திருந்தும் என்னிடம் சொல்லாதிருந்தீர்களே?

ராமனாதன்:—என்ன? உன்னுடைய வாழ்க்கையில் நடந்தது உனக்குத் தெரியவில்லையா.

கமலா:—ஆமாம்! நான் விதவையல்லவா?

ராமனாதன்:—சிறுவயதில் நடந்துபோன சம்பவம் உனக்கு ஞாபகமிருக்குமென்றெண்ணினேன். உனக்குத் தெரியாதிருந்தாலும் இப்பொழுது கூறவேண்டிய அவசியமில்லை யல்லவா? அதை நினைத்துக்கொண்டு நீ இப்பொழுது வருத்தப்படுவதென்றால் அதைவிட முட்டாள்தனமான செய்கை வேறொன்றுமில்லை.

கமலா:—நான் அதுகுறித்து வருத்தப்படவில்லை. சாதாரணமாகத்தான் கேட்டேன்—என்றாள்.

பிறகு இருவரும் அவரவர்கள் வகுப்பிற்குள் சென்றார்கள்.

* * *

வருடப் பரீட்சை நடப்பதற்கு இன்னும் பத்தே தினங்கள் தான் இருக்கின்றன. மழை "சோ"வென்று பெய்கிறது. என்ன காரணத்தாலோ கமலா உடல்நலம் குன்றி படுத்தபடுக்கையாய் கிடக்கிறாள். கமலாவின் தந்தைக்கும், அம்புஜம் அம்மாளுக்கும் மிக மனக்கவலை ஏற்பட்டுவிட்டது. அவ்வூருக்கு சமீபத்தில் வந்திருக்கும் டாக்டரை கமலாவின் தந்தை அழைத்துவந்தார்.

டாக்டர் கமலாவின் உடலை சிறிது நேரம் பரிசோதித்துவிட்டு "கர்ப்பநாடி ஓடுகிறது. மழையில் நனைந்ததால் ஜுரம் அடிக்கிறது. வேறொன்றுமில்லை, இந்த மருந்தைக் கொடுங்கள்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

(கமலா விதவை என்று டாக்டருக்குத் தெரியுமா? தெரிந்தாலும் உண்மையை மறைப்பதில் என்ன பயன்?)

டாக்டரின் வார்த்தை தாய் தந்தையர்களின் இருதயத்தில் வட்டித்த ஈட்டியைக் குத்துவதுபோல் இருந்தது. தந்தை அசைவற்றுக் கற்சிலைபோலானார். அம்புஜம்மாள் கமலாவின் கையைப்பற்றி "கமலா! மோசம்செய்தாயே? குடும்பத்தைக் கெடுக்கவந்த கோடரிக் காம்பே" என்று சொல்லிக்கொண்டு அவளைப் பிடித்தாட்டினாள். கமலாவின் உடல் அசைத்த பக்கம் துவண்டது. அதைக்கண்ட அம்புஜம் அம்மாள் மிகவும் பயந்தவளாய் கமலாவின் மூக்கில் கை வைத்தாள். மூச்சு வருவதாகத் தெரியவில்லை. "ஐயோ கமலா!" என்று சப்தமிட்ட வண்ணம் கீழே விழுந்தாள் அம்புஜம்.

அப்பொழுதே தன் சுய உணர்வையடைந்த கமலாவின் தந்தை வெளியில் சைக்களுக்குக் காற்றடித்துக்கொண்டிருந்த டாக்டரை அழைத்து வந்தார். டாக்டர் கமலாவை மறுபடியும் சோதித்துப் பார்த்தார்.

"ஐயோ பாவம்! அதிக பயத்தால் இருதயத் துடிப்பு நின்றுவிட்டது" என்றார். தாய் தந்தையர்களின் துயரை விவரிக்க வேண்டுமோ?

"உடல் இச்சை எல்லோருக்கும் பொதுதானே! மறுமணம்

செய்திருந்தால் ஊர் அபவாதத்திற்காளாகாமல், கண்ணுங்குங் கண்ணான கமலாவை இழக்கவேண்டியதில்லையே" என்ற எண்ணம் தாய் தந்தையர்களின் உள்ளத்தில் உதித்திராதா? இனி உதித்து என் செய்வது?

---

# வாழ்த்துக் கும்மி.

திரு. ச. சி. ச. சு. மணியன், கண்டரமாணிக்கம்.

1. கும்மியடி பெண்காள் கும்மியடி இந்த
குவலயம் போற்றிட கும்மியடி
இம்மையில் கைம்பெண்க ளில்லையென் றேதினம்
ஏற்றியே பாடிக் களியுங்கடி (கும்மியடி)

2. மாநிலம் புகழ மாதர் மறுமண
மாதாந்த நூலையும் ஏற்படுத்தி
ஞானத்தை ஊட்டியே ஊனத்தை நீக்கிய
நங்கை யரைக்கண்டு மகிழ்வோமடி (கும்மியடி)

3. கணவனை யிழந்து கண்ணீ ருதிர்த்திடும்
கன்னி யரைக்கரை யேற்று தற்கு
குணமுடன் முன்வந்த கூட்டத்தா ரைக்கண்டு
கும்பிட்டுக் கூடி மகிழ்வோமடி (கும்மியடி)

4. கணவ னிறந்தபின் கைம்பெண்க ளென்பதைக்
கனவிலு மெண்ணு திருக்கும்படி
மணமக ளாகவே வாழ்ந்திடச் செய்திட்ட
மாகத வல்லியைக் காண்போமடி (கும்மியடி)

5. பெண்களின் பொதுநலம் கருதி யுழைத்திடும்
பெயர்பெற்ற மரகத வல்லிதனை
அன்போடு ஆண்டவன் எந்நாளும் காத்திட
ஆசீர்வா தம்பெற வாருங்கடி (கும்மியடி)

---

# வந்ததே காலம்.

குட்டிச்சாத்தன் A B C D E F etc.

"வந்ததே காலம்" என்ற பல்லவி எல்லாருடைய காதுக்கும் புதிதல்ல. கேட்டுக் கேட்டுப் புளித்துப் போனது. தாலியைப் பறி கொடுத்தவர்கள் இதனைத்தான் சொல்லி ஒப்பாரி தொடங்குகிறார்கள். பெரிய புராணம் பாடுவதற்கு பரமசிவன் "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுத்தாராம். அப்படிச் சொல்கிறார்கள். சுந்தர மூர்த்திக்கு "பித்தா" என்று தொடங்கிப் பாடு என்று கடவுள் உத்திரவிட்டாராம். நமது விதவைச் சகோதரிகட்கு "வந்ததே காலம்" என்று ஆரம்பிக்கும்படி எந்தப் புண்ணியாத்மா உச்சிக் குடுமி உலகளந்தான் அடியெடுத்துக் கொடுத்தானோ தெரியவில்லை. வந்ததே காலம். என்ன காலம்? தாலி பறிகொடுத்த காலம்! சேலை பறிபோன காலம்! நகைகள் கொள்ளைபோன காலம்! சகுனத் தடை வீட்டுக்குள் வந்து குடிபுகுந்த காலம்! இந்தப் பாழாய்ப் போன காலம் வந்ததே அன்று முதல் இல்லற வாழ்க்கையில் நஞ்சு கலந்தது. சுகமே கிடையாது. பெண்ணைப் பிசாசாக்கி விட்டனர்.

இந்தக்காலம் வந்தது. பெண்களும் நல்லகாலம் வந்தது என்று வரவேற்கவில்லை. அவசரம்! ஆச்சரியம்! ஆனந்தம்! அழுகை! ஆகிய சந்தர்ப்பங்களில் வினை முன்னால் நிற்கும். காலம் வந்தது என்று சொல்ல வருமா? வந்ததே காலம் என்று வயிற்றெரிச்சலில் ஏகாரத்தை ஏற்றிப் பெண்கள் அழுதனர். அந்தக் காலத்தையா நான் வரவேற்கிறேன். இல்லை. அந்த நாசகாலத்தை ஒழிக்கிற காலம் வந்ததே என்றுதான் கூறுகிறேன். வந்ததே பொல்லாத காலமென்று வருந்தி யழுதார்கள். ஆனால், வந்ததே நல்லகாலமென்று அவசரமாகச் சொல்ல முற்பட்டேன்.

அந்தக் காலம் பெண்ணைச் சிறையிட்டகாலம்! பெண் டூரிமைக்கு விஷப்புகையிட்ட காலம்! பெண்ணை அடக்கி யொடுக்கி அடுப்பங்கரைக்கு இரையிட்ட காலம்! படிப்பை யொழித்து தஞ்சாவூர் காளைக்குக் கொம்பு தீய்க்கிற மாதிரி பெண்ணின் அறிவைக் கிளம்ப விடாமல் தீய்த்த காலம்! பூத்த கொடியைக் காய்க்க விடாமல்

கட்டுப் படுத்திய கேடு காலம்! பருவமுறாத் தனிக் குதலைப் பாலப் பெண்களைப் பரிதாபப் படுத்திய காலம்! கம்பன் கூறும் நீலோற்பல நறுமலரான நங்கையர் கண்களைக் கசக்கி அழச் செய்த கடை கெட்ட காலம்! அந்த அழுகின காலத்தைத்தான் வந்ததே காலம் என்று பெண்கள் ஏங்கி யழுதார்கள். அந்தக் காலத்தைப் போக்க வகை தெரியாமல் இருவரை மாதர் கண்ணீர் வழிந்தோடிக்கொண் டிருந்தது.

சுந்தரமூர்த்தி எப்படி "உலகம் நகும் வழக்கை நன்மையாய்ப் புணர்ந்தாரோ?" அப்படியே பெண்கள் அழ ஆரம்பிக்கும் "வந்ததே காலம்" என்பதையே அவர்கள் மகிழ்ச்சியின் ஆரம்பமாக்க வேண் டுமென்பது என்கருத்து. வந்ததே காலம்! என்ன காலம்? பெண் களின் கண்ணீரை வராமல் செய்யுங்காலம்! ஆணும் பெண்ணும் இன்ப வாழ்வு ஆரம்பிக்கும் காலம்! விதவை சகுனம் ஒழியுங் காலம்! சரி இதிருக்கட்டும்.

கார்த்திகை மாதம் 15உ எப்போதும் ஞாபகமிருக்கவேண்டும். அது ஒரு நல்ல நம்பர். "நாட்டுக்கோட்டைச் செட்டிப்பிள்ளைகள் மகா வைதீகர்கள்; சிவபக்தர்கள்; தர்மிஷ்டர்கள்" என்று புகழப் பட்டிருந்தார்கள். கார்த்திகை 15-க்குப் பிறகு "பெரிய சீர்திருத் தக்காரர்கள்; இரக்கமுடையவர்கள்; குடும்ப வாழ்வில் இன்பங் காணுபவர்கள்! கல்யாணச் சிக்கலை ஒழித்துக்கொண்டவர்கள்" என்ற பெருமை தோன்றிவிட்டது. ஆஹா! அந்த 15-ந்தேதி, ரங் கூனில்—பசுமந்தானில்—நகர மடத்தில் என்ன காட்சி! எவ்வ ளவு ஊக்கம்! பகல் மணி ரெண்டு. அங்கு கூடியிருந்த சுமார் 1000 நகரத்தார்! மனிதர்கள் ஊக்கம் நிறைந்திருந்தார்களா? ஊக்கம் மனித உருக்கொண்டு கூடியிருந்ததா? சமூக சீர்திருத்தத் தில் இவ்வளவு ஆர்வம் இருக்கிறதென்பது அங்கேதான் தெரிந்தது. நாட்டுக்கோட்டையார் குலத்தில் விதவை இருப்பதை சகிக்க வில்லை. திருகின இரண்டொருவரும் சேர்ந்துகொண்டனர். நியா யந்தானே! பரிதாபமான விதவைப் பெண்களுக்கு விமோசனம் செய்யவேண்டுமென்று 1000 பேர் ஒரே அடியாகச் சொல்லும் போது இரண்டொருவர் கோணலாமா? ஆஹா ஒரே முகம்! ஒரே ஆர்வம்! ஒரே கருத்து! ஒரே தீர்மானம்! விதவைகளின் வாழ்வைப்

பிரித்த காலன் ஒழிந்தான்! தோன்றிற்று விடுதலை! பர்மா நகரத்தார் மனங்கனிந்தனர். பழைய காலம் போயொழிந்தது. நல்லகாலம் வந்தது. இருட்டு போயிற்று; காலை மலர்ந்தது; மூடிய கண்கள் திறந்தன. மலர்கள் மலர்ந்திருக்கின்றன. இஷ்டப்பட்ட விதவைகள் எடுத்து அணிந்துகொள்ளலாம். விதவைச் சகோதரிகளே! அலமாரி நிறையப் பட்டுப் புடவைகள் ஜிலு ஜிலுக்கிறது; இரும்புப் பெட்டியில் வயிர நகைகள் கழட்டி வைத்தபடியிருக்கின்றன. காது மூக்குகளில் போட்ட தமிர் தூர்ந்து போகவில்லை. நகைகளை எடுத்து மாட்டுங்கள். பட்டுப் புடவைகள் உங்கள் உடம்பை அலங்கரிக்கட்டும். கூடாதென்ற தடை ஒழிந்தது. நகரத்தார் வழியை வெட்டி விட்டனர். எழுங்கள்! எழுங்கள்! ஒழிந்துபோன பழைய அழகு திரும்பி வரட்டும். அதை உலகம் கண்டு மகிழட்டும்.

---

## மாதர் மறுமணப் பிரசாரத்திற்கு உதவி.

பின்வரும் விஷயங்களை விசாரித்துக் கிடைத்தவரையும் அறிவிக்க வேண்டுகிறேன்.

1. தமிழ்நாட்டில் விதவாவிவாகம் செய்வதில்லையென்ற சமூகங்கள் எவை?
2. அவர்களின் ஜனத்தொகை (உத்தேசமாக) எவ்வளவிருக்கும்?
3. அந்த சமூகத்தார் எங்கெந்த தாலூகாவில் வசிக்கிறார்கள்?
4. அந்த சமூகங்களில் சீர்திருத்த விருப்பமுள்ளவர்களின் விலாசம்பெயர்?
5. இந்த சமூகங்கள் ஒவ்வொன்றிலும் புருஷன் இறந்தபின்னர் பெண்ணை விதவையாக்க என்னென்ன மாதிரியான சடங்குகள் செய்கின்றனர்?
6. தமிழ் நாட்டில் விதவா விவாகம் செய்துகொண்டுள்ள தம்பதிகளின் போட்டோ, அவர்களின் வயது, கல்யாணம் நடந்த தேதி, அவர்களுடைய சுருக்கமான சரித்திரக்குறிப்பு ஆகியவை தேவை. கிடைத்தவரை அனுப்பித்தர வேண்டுகிறேன்.
7. புதிதாக புருஷனிறந்து விதவையாகிற செய்திகளையும், விதவா விவாகம் நடைபெறுகிற செய்திகளையும் தெரிவிக்க வேண்டுகிறேன்.

காரியதரிசி,

மாதர் மறுமண சகாய சங்கம், காரைக்குடி.

---

# வளர்ந்தது மோதிரமா உடம்பா?

மிஸஸ். ஜானகி எழுதுவது.

இந்தக் கேள்வியைக் கண்டவுடன் முடிவு கூறிவிடக்கூடாது. உடம்புதான் வளரும்; மோதிரம் வளராதென்று முடிவுகட்டி விடக்கூடாது. என்றால் எலும்பைப் பெண்ணாகவும் கல்லைப் பெண்ணாகவும் செய்த அற்புதமான தேசமல்லவா நமது தேசம்? இந்தியா தேசத்தில் நடவாத அற்புத மெல்லாம் நடைபெறும். ஆதலால் மோதிரம் வளர்ந்திருக்குமென்று நம்பவேண்டும். முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ? கடவுள் அருள் இருந்தால் மோதிரம் வளர்வது ஒரு பெரியகாரியமா?

சாயுங்காலம் 7 மணி இருக்கும். கண்ணம்மாள் சமைத்துக் கொண்டிருக்கிறாள். ஒரு அடுப்பில் சோறு வேகிறது. மற்றொரு அடுப்பில் குழம்பு கொதிக்கிறது. கண்ணம்மாளின் கண்கள் நீரைப் பெருக்குகின்றன. மாமியாள் சொல்கிறாள்:—"ஒன்றுக்கும் உதவாத கழுதையை என் மகனுக்குக் கலியாணம் செய்து வீணாய்ப் போய்விட்டது. சனியன்! விடியா மூஞ்சி! வேலைதவறாமல் தின்னத்தான் தெரிகிறது. வீட்டிலுள்ளதை யெல்லாம் தின்றுவிட்டுப் பன்றிமாதிரி பெருத்துப் போனாள். இந்த முண்டை தொலைந்தால் என் மகனுக்கு வேறே ஒரு பெண்ணைக் கொள்ளலாம்". என்று திட்டிக்கொண்டேயிருந்தாள். மாமனார் தன் மனைவியைப் பார்த்து "ஏன் இப்படி ஊரார் வீட்டுப் பெண்ணைத் திட்டி அழிந்துபோகிறாய்? அது ஏதாவது யேசுகிறதா? தெய்வமே என்று வேலையைப் பார்த்துக்கொண்டிருக்கிறது. காலையில் 5 மணிக்கு எழுந்தால் அரை மணிநேரமாவது உட்காரவிடுகிறாயா? இன்று காலையில் இவ்வளவு பழைய கஞ்சிப் பட்டமிளகாயைத் தொட்டுக் கொண்டு குடித்தது. அப்பால் மத்தியானம் அஞ்சாறு சோறு, இரவு 9-க்கு மேல் ஏதாவது மிச்சங்கிடந்தால் உண்டு. இதிலே வேறே அந்தப்பயல் எச்சிலிலையில் பெண்டாட்டிக்காக வாங்கிவைத்தானென்று அவனைத் திட்டுகிறாய். அவன் பயந்து இலையை அடியோடு வழித்துநக்கிவிட்டுப் போகிறான். அந்தப் பெண் வரவா மெலிந்துபோய்விட்டது. இந்தப் பாவமெல்லாம் அனுபவிக்க

வேண்டும்! சும்மாபோகாது!" மாமியாள் இதைக் கேட்டவுடன் புருஷன் பக்கம் திரும்பினாள்:—"சரி, சரி மருமகளுக்குக் கிழவன் ஏவல் கேட்கிறதைப் பாருங்களேன். ஏது சங்கதி. இத்தனை நாளு மில்லாமல் மருமகளிடத்தில் என்ன இப்பொழுது இவ்வளவு பிரியம் வந்துவிட்டது. எனக்கென்ன? நான் வேண்டுமானால் வெளியே போகிறேன். நீங்களும் அவளுமாக நன்றாக இருங்கள்! மாமியாள் என்றிருந்தால் மருமகளைத் திட்டாமல் இருக்கமுடியுமா? என் மாமியாள் என்னைச் சும்மா விட்டாளா? நன்றாகத் தின்றுவிட்டுக் கொழுத்துப்போனாள் என்று சொல்லாமல் இருக்க முடியுமா? இதற்கெல்லாம் ஆண்பிள்ளைகள் பேசவரக்கூடாது! பெண்கள் இப்படித்தான் பேசிக்கொள்வார்கள். வீட்டுச் சங்கதி ஆண்பிள்ளைகட்கு விளங்காது. நீங்கள் பேசாமல் இருங்கள்!"

இந்த சமயத்தில் கண்ணம்மாளின் தாயும் தகப்பனாரும் வருகிறார்களென்று சின்னப்பையன் ஓடிவந்து சொன்னான். மாமியாளின் வாய் அடங்கியிருந்தது. வந்தவர்களை வீட்டுக்காரரிருவரும் வரவேற்றனர். கண்ணம்மாளின் கண்ணீர் அதிகமாயிற்று. நன்றாகத்துடைத்தாள். என்ன சமாதானஞ் சொன்னாளோ தெரியாது. இரண்டு நிமிஷங்களுக்குள் கண்ணீர் முற்றும் நின்றுவிட்டது. முகத்தையுங் கண்களையுங் கழுவினாள். சின்னப் பையன் வந்து "உன்னை அம்மா அழைக்கிறாள்" என்றான். கண்ணம்மாள் வந்தாள். அங்கே தன் தாயாரும் மாமியாளும் இருப்பதைக்கண்டு ஒருபுறமாக நின்றாள். சிறிது நேரம் யோகக்ஷேமங்களை விசாரித்துக்கொண்டனர். தன் கையில் போட்டிருந்த மோதிரத்திலிருந்து கல் ஒன்று விழுந்துவிட்ட செய்தியைத் தன் தாயாரிடம் கண்ணம்மாள் சொன்னாள். எடுத்துவரச் சொல்லி அதைச் சீர் செய்து அனுப்புவதாகத் தாயார் வாங்கிக்கொண்டாள். மோதிரத்தைக் கொஞ்சம் சிறிதாகச் செய்தால் போட்டுக்கொள்ளலாமென்று கண்ணம்மாள் சொன்னாள். "என் அளவுபார்த்துத் தானே செய்தது. உடம்பு மெலிவாகத்தானிருக்கிறது. ஏதாவது நூலைச் சுற்றிக்கூடப் போட்டுக்கொள்ளலாம்" என்று சொல்லிக்கொண்டே கண்ணம்மாள் கைவிரலில் போட்டுப்பார்த்தாள். ஒன்றரை விரல் அதில் நுழையும்போலிருந்தது. "நூல் சுற்றிப் போடவேண்

டாம். இனி எங்கே உடம்பு பெருக்கப்போகிறது" என்று கண்ணம்மாளின் வாய் சொன்னதும் அவளுடைய கண்களிலிருந்து நீர் ஆறுகப் பெருகிவிட்டது. பத்து நாள் நம் வீட்டிலிருந்து விட்டுவரலாமென்று தாயார் சொன்னுள். வரலாம், திரும்பி இங்கேதானே வரவேண்டும். அதனுல் இன்னும் அதிக கஷ்டந்தான் உண்டாகும் என்று கண்ணம்மாள் சொன்னுள். மோதிரத்தை எடுத்துக்கொண்டு தயாரும் தகப்பனும் சென்றுவிட்டார்கள்.

இந்த நடவடிக்கைகளை எல்லாம் நான் வெளியிலிருந்து பார்த்தேன். ஒரு விரலில் போட்டிருந்த மோதிரம் ஒன்றரை விரல் நுழையும்படியாகிவிட்டது. மாமியாளோ பெண்ணின் உடம்பு பெருத்துவிட்டதென்கிருள். எது உண்மை என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். மாமியாளின் அபூர்வ சக்தியால் மோதிரம் வளர்ந்திருக்கவேண்டுமென்றுதான் வைதீகர்கள் நம்புவார்கள். மோதிரம் தங்கத்தால் செய்யப்பட்டிருப்பதால் அதற்கு உணர்ச்சி கிடையாது. ஆதலால் அது வளர்ந்திருக்க முடியாது. பெண்தான் இளைத்திருக்க வேண்டும் என்று ஆராய்ச்சிக்காரர்கள் முடிவுகட்டுவார்கள்.

---

## பத்திராதிபர் குறிப்புகள்.

### துருக்கி மாதர்

துருக்கி தேசத்துப் பெண்கள் முக்காடிடக்கூடாதென்று கமால்பாஷா உத்திரவிட்டுத் தடுத்துவிட்டார். அந்நாட்டு கல்யாணமாகாத இளம் பெண்கள் பலரை ஐரோப்பிய தேசங்கள் பலவற்றுக்கனுப்பிக் கல்வி பயிலவும் செய்தனர். இப்போது அத்தேசத்து மங்கையரை ராணுவத்தில் சேர்க்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதென்ற செய்தி கிடைத்திருக்கிறது. இனி அவர்கள் போர் முனையிலிருந்து யுத்த காரியங்களைப் பார்த்துவருவர். பல பெண்கள் ஆகாய விமானங்களை ஓட்டி பயிற்சிபெற்றுவருகின்றனர்.

### அசிங்கமான விளம்பரங்கள்.

சென்னையில் கூடிய மாதர் மகாநாட்டில் ஒரு முக்கியமான

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பத்திரிகைகளிலும் நோட்டீஸ்களிலும் படங்கள் மூலமாகவும் அசிங்கமான விளம்பரங்களைச் செய்யக்கூடாதென்றும் அப்படிச் செய்யாமலிருக்க அச்சுச் சட்டத்தைப் பலப்படுத்தவேண்டுமென்றும் தீர்மானித்திருக்கின்றனர். அசிங்கமான விளம்பரங்கள் ஜனங்களை வசியப்படுத்துகின்றனவென்று விளம்பரம் செய்பவர் கருதுவதே இதற்குக் காரணமாகும். பொதுஜனங்கள் அசிங்கத்தை வெறுக்கும்படி பயிற்றப்படுவதற்குப் பதிலாக அசிங்கத்தை விரும்பும் மனப்பான்மையைப் பெற்றிருப்பது வருந்தத்தக்கதாகும். ஆபாஸமான விளம்பரங்களால் மக்கள் நாளடைவில் கெட்டுப் போகநேருமென்பதில் சந்தேகமில்லையல்லவா?

## சரியான பிரதிநிதிகளை அனுப்புங்கள்.

சென்னை மாதர் மகாநாட்டுக்குத் தலைமை வகித்த ஸ்ரீமதி பி. ராமதாஸ் பின் வருமாறு குறிப்பிட்டார்:—

"இப்பொழுது மாதர்கள் பலருக்கு ஓட்டுரிமை வழங்கப்பட்டிருக்கிறது. மாதர்கள் தங்கள் ஓட்டுகளைச் சரியான பிரதிநிதிகளுக்குக் கொடுத்து சட்டசபைகள் மூலம் வரக்கூடிய நன்மைகளைப் பெறவேண்டும். கலியாணத்தைப்பற்றிய சட்டங்கள். விவாகரத்து சட்டம் முதலிய பல சட்டங்கள் ஸ்திரீகளுக்கு நலத்தைக் கொடுக்கும்படி மாற்றப்படவேண்டியனவா யிருக்கின்றன. உதாரணமாக புருஷர்கள் பல முறை விவாகம் செய்துகொள்ளலா மென்றும் ஸ்திரீகளுக்கு விவாக ரத்து உரிமை கிடையாதென்றும் சட்டங்களிருக்கின்றன. இவை யெல்லாம் ஸ்திரீகளின் நன்மையைக் கருதி சரியாக மாற்றப்பட வேண்டுமானல் ஸ்திரீகள் சரியான பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து சட்டசபைகளுக்கு அனுப்பவேண்டும்." ஓட்டுள்ள மாதர்கள் ஏராளமாக இருக்கின்றனர். அவர்கள் நேரான வழியில் தகுதிவாய்ந்த பிரதிநிதிகட்கு ஓட்டளிக்க வேண்டியதவசியமாகும். சமூக சீர்திருத்த நெறியில் பெண்மக்கள் உரிமை இழந்து அடிமைப்பட்டுக் கிடக்கின்றனர். பெண் உரிமைக்குக் குழி தோண்டுபவர் பலரும் பெண்களின் அபிவிருத்தியை நஞ்சாகக் கருதுபவரும் சட்டசபைகளை நாடுகின்றனர். அவர்கள் தலையி

லடித்து உட்காரவைத்துத் தகுந்த பிரதிநிதிகளை யனுப்பப் பெண் மக்களின் ஓட்டுப் பயன் பெறவேண்டுமென்று விரும்புகிறோம்.

## தாத்தாவுக்கு இரண்டு வருஷம்.

மலாய் நாட்டில் 60 வயதுச் சீனக் கிழவன் 16-வயதுள்ள சீன மாதை விரும்பினான். அவளுக்குக் கிழவனைப் பிடிக்கவில்லை. கிழவன் பெண்ணைத் தூக்கிக்கொண்டுபோய் பூமியின்கீழ் ஒரு குகை செய்து அதற்குள் 4 வருஷ காலம் அடைத்து வைத்துவிட்டான். பெற்றோர் பெண்ணைத் தேடினர். இப்போது கண்டு பிடிக்கப்பட்டு குவாந்தான் மாஜிஸ்டிரேட்டால் 2-வருஷ கடுங்காவல் தண்டனையை தாத்தா பெற்றிருக்கிறார். நம் நாட்டிலும் தாத்தாக்கள் இளம் பெண்களைக் கண்டு வாயை மெல்லுகின்றனர். பணத்தைக் கொடுத்து விலைக்கும் வாங்கி விடுகின்றனர். பெண்களின் வாழ்க்கை புண்பட்டுப் பாழாவதைப் பார்த்துக்கொண்டேயிருக்கிறோம். சில இடங்களில் பெருக்கிய குப்பையை வெளியில் கொட்ட வருதலும், தண்ணீரெடுக்க குளங்கட்குச் செல்வதும் பருவமடைந்த பெண்கட்கு அபாயமாக இருப்பதைப் பலரும் அறிவர். பல அயோக்கியர் இள வயதுப் பெண்களைக் குறிவைத்துப் பருந்துகளைப்போல் வட்டமிட்டுக் கொடுமை செய்வதை ஆண்மைமிக்க இளைஞர்கள் தடுக்க முயல வேண்டும். ஒழுக்கம் பாது காக்கப்படாத இடம் சுடுகாட்டுக்கு நிகராகுமென்பது பெரியார் கருத்து.

## கர்ப்பிணியை அடித்துக் கொன்றான்.

விசாகபட்டணம் கோர்ட்டில், பெத்தகாமன்னு என்பவன் தாமதமாக சாப்பாடு கொண்டுவந்தாள் என்பதற்காக கழியால் அடித்துக் கொன்றதாக வந்த வழக்கின் முடிவில் ஜட்ஜ் பின் வருமாறு ஜட்ஜ்மெண்டில் குறிப்பிட்டிருக்கிறார்:—

“ஒரு கணவன் தன் மனைவியை சட்டப்படி அடிக்கலாமா என்பதைப் பற்றி சமீபத்தில் கோர்ட்டிலும் வெளியிலும் உபயோகமற்ற முறையில் பேச்சுக்கள் நடைபெற்றன. இந்து சட்டப் படியாவது ஆங்கிலோ இந்திய சட்டப்படியாவது கணவன் தன் மனைவியை எக்காலத்திலும் அடிப்பதற்கு அனுமதியே கொடுக்க

வில்லை. அதிலும் ஒரு கர்ப்பவதியான மனைவியை மூர்க்கத்தன மாக காலை சாப்பாடு இரண்டு மணி நேரம் கழித்துக் கொண்டு வந்த தற்காக காரணத்தை விசாரிக்காமல் அடிப்பது மிருகத்தனமே யாகும்"

இந்த நிகழ்ச்சி நாள்தோறும் நாழிகை தோறும் நடந்து கொண்டுதானிருக்கிறது. புருஷன் அடிக்கலாம். பெண் பெற்றுக் கொள்ளலாம் என்ற மனப்பான்மை இருபாலாருக்குமிருந்து வரு கிறது. அடி வாங்க மறுத்தால் வேறு போக்கிடங் கிடையாதே! கழட்ட வராத தும்பல்லவா இந்துமதத் தாலி! அடி வாங்கிச் சாகும் பெண்கள் தொகையும் குறைவன்று. ஆனால் கேசுக்கு வருவது மிகச் சொற்பம். இதனால்தான் பெண் ஜென்மம் புண் ஜென்மமென்று ஹிந்துக்கள் கூறுகின்றனர்.

---

## :: நிகழ்ச்சிகள் ::

### ஓர் விதவர விவாகம்

சென்ற நவம்பர் மீ 11வ நாகர் கோவிலைச் சேர்ந்த உண்ணாமுலைக் கடை என்னும் ஊரில் ஓர் விதவா விவாகம் மிகச் சிறப்பாக நடந்தேறி யது. மணமகன் எஸ். சுப்பய்யாவும் மணமகள் ஏ. உமையபார்வதி யம்மா ளும் பட்டாரியர் சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள். இச்சமூகத்தார் இது காறும் விதவா விவாகத்தை அனுஷ் டித்ததில்லை. எனினும் தம்பதிகளின் சுற்றத்தாரும் ஊராரும் பூரண சம் மதத்துடன் வந்திருந்து மணமக்களை ஆசீர்வதித்தனர். மணத்தின்போது உள்ளூர்ப் பிரமுகர்களும் அயலூர் நண்பர்களும் ஏராளமாக விஜயம் செய்திருந்தனர். திருமணம் முடிந்த தும் ஒரு குரூப் போட்டோ எடுக்கப் பெற்றது. பின் தோழர் ஆர். ராமலிங் கம் அவர்கள் தலைமையில் ஒரு பாராட் டுக் கூட்டம் நடைபெற்றது. அன்பர் கள் பலர் பேசினர்.

### காரைக்குடியில் விதவா விவாகம்

காரைக்குடி ஸ்ரீமான் சிதம்பர ஆச் சாரி அவர்களின் புதல்வர் திரு. சித. சுப்பையா அவர்களுக்கும் ஸ்ரீமான் சுப்பையா ஆச்சாரி அவர்களின் புதல் வியும் விதவையுமான ஸ்ரீமதி எஸ். காமாட்சி யம்மாள் அவர்களுக்கும் நா. புதூர் மாந்தாதா சுந்தரப் புத்தர் அவர்கள் இல்லத்தில் 13-12-36வ ஞாயிற்றுக்கிழமை மாலை 3 மணிக்கு விதவா விவாகம் சிறப்பாக நடை பெற்றது. தேவகோட்டை அட்வ கேட் திரு. ஏ. ரங்கசாமி அய்யங் கார் அவர்கள் தலைமைவகித்தார்கள். தம்பதிகள் மாலை மாற்றிக்கொண்ட னர். தலைவர் முடிவுரையாக விதவா

விவாகத்தின் அவசியத்தை விளக்கிப் பேசினூர். பின்னர் ஸ்ரீமான் பிச்சப்பா சுப்பிரமணியம், வக்கீல் M. R. கிருஷ்ணசாமி அய்யங்கார், வி. பரம சிவன், எல். ராஜமாணிக்கம், தி. ம. நடராஜன் ஆகியோர் தம்பதிகளைப் பாராட்டியும் விதவாவிவாகத்தின் அவசியத்தையும் குறித்துப் பேசினர். குரூப் போட்டோ ஒன்று எடுக்கப் பெற்றது. தமிழர் சீர்திருத்த சங்க (காரைக்குடி கிளை) காரியதரிசி ஸ்ரீமதி திருநெல்லை யாச்சியவர்களா லும், திருநெல்வேலி கிளைச் சங்கக் காரியதரிசி திரு. கே.என். தங்கவேலு அவர்களாலும் நன்றி தெரிவிக்கப் பெற்றது. பெண்ணின் பெற்றோர் களும் இத்திருமணத்தில் உற்சாக மாக கலந்துகொண்டது குறிப்பிடத் தக்கது

## போக்ராவில்
### விதவா விவாகம்.

போக்ரா நகரில் காயிலதாசி என்ற 18 வயது விதவைப் பெண்ணுக்கும் லோயிர் என்ற கிராமத்தில் கன்சாப ணிகா சமூகத்தைச் சேர்ந்த இராம கிருஷ்ண செட்டி என்பவருக்கும் சாஸ்திர முறைப்படி விதவா விவாகம் சிறப்பாக நடைபெற்றது. பல பகுதி களிலிருந்தும் வாழ்த்துத் தந்திகள் வந்திருந்தன. பிரபலஸ்தர்களும், உத் தியோகஸ்தர்களும் ஏராளமாக விஜ யஞ்செய்திருந்தனர். விவாகத்தின் போது ஏதேனும் சச்சரவு ஏற்படக் கூடுமென்று மணப் பெண் சந்தேகப் பட்டு சாதரா சப் டிவிஷனல் மாஜிஸ் டிரேட் முன்னர் ஒரு மனு தாக்கல் செய்திருந்தார். சப் கலெக்டர் பாது காப்புடன் விவாகம் நடைபெற்றது.

---

# வரன் தேவை.

1. வயது பதின்மூன்றரை. குழந்தை விதவை. வேளாள ஜாதி. 6-வது வரை தமிழ் படித்திருக்கிறது. ஹிந்தியும் மலையாள மும் பேசத் தெரியும். கண்ணியமான மணமகன் தேவை.

2. விஸ்வகர்ம வகுப்பு. ஐந்துவயதில் விவாகமாகி மனுஷி யான மறு வருஷமே விதவையான பெண். வயது 16. ஆறுவது பாரம் வரை படித்திருக்கிறது.

3. ஜாதி ஹிந்து கன்னிப்பெண். நல்ல லக்ஷணம். நல்லபடிப்பு. வயது 15. அழகும் செல்வமும் உள்ள ஜாதி ஹிந்து வரன்தேவை.

4. மாத்வ பிராமணவகுப்பு. வயது 23. வரன் தேவை. பிரா மண வகுப்பானாலும் சரி வேறு உயர் ஜாதி ஹிந்துவானாலும் பாதக மில்லை.

5. வேளாள வகுப்பு. நாகரிகமான பெண். கலப்புமணம் செய்ய வேண்டுமென்பதே நோக்கம். வயது 16. தமிழில் நல்ல படிப்பு. ஆங்கிலமும் சிறிது தெரியும். தையல், பின்னல், சித்திர மெழுதுதலிலும் பயிற்சியுண்டு. சங்கீதப் பயிற்சி போதிய அளவு பயிற்றப்பட்டிருக்கிறது. நல்ல செல்வமும் நாகரிகமுமான முதல் தார மணமகன் தேவை.

# பெண் தேவை.

1. நாட்டுக்கோட்டைச்செட்டியார். வயது 30. மனைவியில்லை 30 ஆயிரம் ரூபாய் சொத்துள்ளவர். விதவைப்பெண் தேவை. சொற்ப படிப்பிருந்தாலும் போதும். வயது 24-க்குள் இருக்க வேண்டும்.

2. நாட்டுக்கோட்டைச் செட்டியார். வயது 21. தமிழும் ஆங்கிலமும் படித்தவர். போதிய பொருள் வசதியுள்ளவர். விதவைப் பெண் தேவை. பெண் எழுதப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டும். இருபது வயதுக்குள் இருத்தல் அவசியம்.

3. நாட்டுக்கோட்டைச் செட்டியார். வயது 23. நல்ல அழகு உள்ளவர். சுமார் 25,000 பொருள் உண்டு. பெண் எழுதப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டும். 22-வயதுக்குட்பட்ட விதவைப் பெண் தேவை.

4. நாட்டுக்கோட்டைச் செட்டியார். வயது 28. சுமார் 70,000 ஆஸ்தியுள்ளவர். மாற்றார் அல்லாத மற்றைய கோயிலில் செட்டியார் விதவைப் பெண் தேவை. பெண் அழகாகவும், சிறிது படிப்புடனும் இருக்க வேண்டும்.

5. கவுரவ நாயுடு வகுப்பு. வயது 32. தாரமிழந்தவர். கவர்ன்மெண்டு உத்தியோகத்தில் மாதம் 90 ரூபா சம்பளத்திலுள்ளவர், கவுரவ நாயுடு வகுப்பிலாவது வேறு வகுப்பிலாவது விதவைப் பெண் தேவை. பெண்ணுக்கு வயது 23-க்கு மேல் போகக் கூடாது. சிறிது படிப்பிருந்தாலும் போதும்.

6. ஆரிய வைசியர். வகுப்பு வயது 23. பத்திரிகைகட்கு விஷயதானம் செய்பவர். போதிய வரும்படியுள்ளவர். விதவைப் பெண் தேவை.

7. உயர் ஜாதி ஹிந்து. வயது 29. எலிமெண்டரி ஹயர் கிரேடு பாஸ்செய்து வாத்தியாராக இருக்கிறார், மாத வரும்படி 30 ரூபாய். சிறிது நிலம் உண்டு. முதல்தாரமில்லை. விதவைப் பெண் தேவை.

8. யாதவகுலம். மனைவி யிழந்தவர். வயது 35. மாத சம்பளம் 30 ரூபாய். நிலங்களும் வீடும் உண்டு. விதவைப் பெண் தேவை.

இது சம்பந்தமான நடவடிக்கைகள் ரகசியமாக வைக்கப்படும்.

சோ. முருகப்பா,

காரியதரிசி, மாதர் மறுமண சகாய சங்கம், காரைக்குடி.

# உள்ளுறை.

# மார்கழி மாத அதிர்ஷ்ட நிர். 9023

ஷை நம்பரையுடைய பத்திரிகைக்காரர் தாது மாசி 15-உக்குள் ஷை பத்திரிகையை நமது காரியாலயத்துக்கு அனுப்பினுல் பரிசுத்தொகை ரூ 10 அவர்கட்கு அனுப்பப்படும்.

## உங்களுக்கு அதிர்ஷ்டம்.

ஒவ்வொரு மாதத்து "மாதர் மறுமணம்" இதழிலும் அதிர்ஷ்டநம்பர் முன்பக்கத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது. கீழ்க் குறிப்பிடப் பெற்றிருக்கும் கனவான்கள் முன்னிலையில் இந்த நம்பர்கள் குலுக்கப்படும். முதலில் வரும் நம்பருக்கு ரூ. 10 பரிசளிக்கப்படும். அந்தந்த மாதத்தில் பரிசு விழுந்த நம்பர் அடுத்த மாத இதழில் இதேபக்கத்தில் குறிக்கப்பட்டிருக்கும். அந்த நம்பர் பத்திரிகைக்குரியவர்கள் பத்திரிகையையனுப்பிப் பரிசுத்தொகையைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

ஆகையால் நீங்கள் வைத்திருக்கும் "மாதர் மறுமணம்" இதழ் 10 ரூ. பெறுமானமுள்ளதாகும். ஆகவே அதைப் பத்திரமாக வைத்திருங்கள். அடுத்த இதழில் அதிர்ஷ்ட நம்பரை எதிர்பாருங்கள்!

கனவான்கள்.

1. திருவாளர் ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள், முனிஸிபல் கௌன்ஸிலர்.
2. திருவாளர் சி. முரு. நாராயணன் செட்டியாரவர்கள், ஹானரரி மாஜிஸ்டிரேட்.
3. டாக்டர் தாமஸ் வர்கீஸ் அவர்கள்.
4. திருவாளர் K. R. ஸ்ரீநிவாசய்யரவர்கள், B. A. L. T. சரித்திராசிரியர் S. M. S. ஹைஸ்கூல்.

மானேஜர்,
" அதிர்ஷ்ட எண் போட்டி "
மாதர் மறுமணம் ஆபீஸ்,
காரைக்குடி.

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| | | |
|---|---|---|
| மலர் 1 | காரைக்குடி<br>தாது-௵ தை-௴ | இதழ் 6 |


## பெண்ணின் கண்ணீர்.

சுவாமி சுத்தானந்த பாரதியார்.

(கண்ணிகள்)

பத்துமா தஞ்சுமந்து, பாலூட்டிப் பொன்மடியில்,
வைத்தும்மை யன்புசெய்த வான்கருணை பெண்ணன்றோ? 1.

பெண்ணென்றால் வெங்கானப் பேயும் இரங்கிடுமே!
கண்ணிருந்தும் எங்களிடர்க் கண்ணீரைக் காணீரோ? 2.

படிப்பெமக்கு வேண்டாமோ? பாமரராய், பொங்கும்
அடுப்பங் கரைப்புகைக்கே யாளாய் மடிவோமோ? 3.

காதலன்றி யுள்ளக் கலப்பின்றி யீடின்றிச்
சாதகத்தைப் பார்த்தெமக்குத் தாலிவிலங் கிட்டிடுவீர்! 4

நன்குவிவ ரந்தெரிந்து, நாடிவருங் காதலரை
மங்கலமாய்க் கூடி மணவாழ்வு வாழோமோ? 5.

கொண்க னிறந்தால் கொழுந்திளமை யின்பத்தைப்
புண்ணாக்கி மண்ணாக்கிப் புன்கொடுமை செய்குவதேன்? 6.

அலங்கோல மாக்கி யழகைச் சிறையடைப்பீர்
விலங்குகளைப் போலெம்மை வீட்டடிமை யாக்குகிறீர்! 7.

முட்டாக்குப் போட்டிருட்டு மூலையிலே காவல்வைத்தால்
கட்டுக்கடங் காதமனக் கள்வன் அடங்குவனோ? 8.

ஆணுக்கொரு நீதி யரிவையருக் கோர்விதியோ?
பூண்வேறு பொன்வேறோ? பூவேறு தேன்வேறோ? 9.

யாவருஞ்ச மானமென்றே ஆரணங்கள் பேசிடுவீர்;
பூவயரை யேனோ புகழொடுக்கிப் புன்மைசெய்வீர் ? 10.

நொந்தழிந்த மேனி நுடங்கித் தவித்திறக்க
எந்தலையில் யாவன் எழுதியவன் ஐயாவே ! 11.

கண்விழித்தோம், பெண்கள் கலங்கோம் தலைநிமிர்ந்தோம் !
புண்ணிழைத்த பொய்க்கதைகள் பொய்யாகத் தொண்டு
செய்வோம். 12.

---

# ராஜா ராம்மோகன் ராய்.

திருச்சி கே. வி. எஸ். வாஸ், பி. ஏ. (ஆனர்ஸ்)

## அத்தியாயம் 5.

### சதியும் சர்க்காரும்.

சதி சம்பந்தமான பல சட்டதிட்டங்க ளடங்கிய ஒரு சுற்றறிக்கையை 1817-ம் வருட ஜூன் மாதத்தில் இந்திய சர்க்கார் எல்லா மாகாணங்களுக்கு மனுப்பிவைத்தார் களென்று ஏற்கனவே பிரஸ்தாபித்திருக்கின்றோம். இந்த அறிக்கையை அவர்கள் இலகுவில் வெளியிட்டு விடவில்லை. சர்க்கார் தலையீட்டிற்குப் பிறகு சதியின் தொகை பயங்கரமான அளவிற்குப் பெருக அது விஷயமாக நடவடிக்கை யெடுத்துக் கொள்வது விரும்பத்தக்கதல்ல வென்றே அவர்கள் நினைத்தார்கள். அவர்களது கட்டளைக் கிணங்க தாழ்ந்த பிரதேசங்களின் தற்காலீக போலீஸ் சூப்பிரன்டென் டெண்டாயிருந்த திரு ஈவர் என்பவர் அனேக வினாக்களடங்கிய ஒரு சுற்றறிக்கையைத் தமது பிராந்தியத்தில் வெளியிட்டார். அந்த அறிக்கைக்கு பல பிரமுகர்களிட மிருந்து விடைகள் கிடைத்தன. அவற்றுள் ஹூக்ளியின் நீதிபதியாயிருந்த திரு. எச். ஒக்லியின் விடை விசேஷமானதாகும். அதன் சாராம்சம் பின்வருமாறு:—

எனது பிராந்தியத்தில் சதியின் தொகை வெகுவாக அதிகரித்திருக்கின்றது. இதன் காரணத்தைக் கண்டறிய நான் ரொம்பவும்

பிரயாசைப்பட்டேன். ஹுக்ளி பிரதேசம் கல்கத்தாவின் அருகாமையிலிருப்பது ஒரு காரணமாக இருக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது. கல்கத்தாவிலும் அதன் சுற்றுப்புறங்களிலு முள்ளவர்கள் ஒழுங்கீனமான வாழ்க்கைக்குப் பெயர்பெற்றவர்கள். கள்ளர்களுக்கும் குடியர்களுக்கும் குலதெய்வமான காளிபூஜை கல்கத்தாவில் வெகு அதிகம். இந்த வகுப்பார் உடன்கட்டை யேறுவதை களியாட்டமாகக் கருதுகின்றனரே யன்றி, அதை ஒரு மதச் சடங்காகப் பாராட்டுவதில்லை. கல்கத்தாவிலும், பர்துவான் உள்பட, அதன் சுற்றுப்புறங்களிலுமுள்ள இதர ஜில்லாக்களிலும், சதிகள் மலிந்திருப்பதற்கு இந்த வகுப்பாரே மூலகாரணமென்று நான் அபிப்பிராயப்படுகின்றேன்.

தவிர, சதிகளின் அதிகரிப்பிற்கு மற்றொரு காரணமும் புலப்படுகின்றது. அதுதான் சர்க்கார் கட்டுப்பாடு. 1813-ம் ஆண்டிற்கு முன்பாக உடன்கட்டை யேறும் விஷயத்தில் போலீசாருக்குத் தலையிட அதிகாரமில்லாமலிருந்தது. அப்பொழுது, கணவனையிழந்த பெண்கள் சட்டப்படியோ அல்லது சட்ட விரோதமாகவோ, சமயத்திற்குகந்தபடி தீக்கிரையாக்கப்பட்டு வந்தனர். ஆனால், இதை சர்க்கார் வெறுப்போடு நோக்குகின்றார்க ளென்பதையும், இவ்வழக்கத்தை அடியோடு நிறுத்த அவர்கள் எத்தகைய நடவடிக்கைகளை வேண்டுமானாலும் கையாளுவார்க ளென்பதையும் இந்துக்கள் அறிந்திருந்தார்கள். இப்பொழுதோ நிலைமை மாறிவிட்டது. உடன்கட்டை யேறும் வழக்கம் சாஸ்திர ரீதியாக நடைபெறுகிறதா அல்லவா என்பதைக் கண்டறிய போலீஸ் உத்தியோகஸ்தர்கள் அனுப்பப்படுகின்றனர். சாஸ்திர ரீதியாக நடப்பின் அதைப் பூர்த்திசெய்து வைக்கும்படியும் போலீசார் கட்டளையிடப் படுகின்றனர். இதன் விளைவு, விதவைகளை எரிக்கச் சாஸ்திரங்கள் அனுமதியளிப்பதாகச் சொல்லப்படுவதுடன், சர்க்காரும் அனுமதியளிப்பதைப் போன்றதாகுமே தவிர வேறல்ல. எனவே சாஸ்திரங்களோடு சர்க்காரின் அனுமதியும் சுலபமாகக் கிடைத்து விடுவதால் சதியின் தொகை இரட்டித்திருப்பது வியப்புறத்தக்க விஷயமல்ல.

இவ்விஷயத்தில் எனது சொந்த அபிப்பிராயத்தை வெளியிட நான் கொஞ்சமும் அஞ்சவில்லை. சதியை ஒழிப்பதற்காக சிருஷ்டி

செய்யப்படும் சட்டம் அந்த வழக்கத்தின் மூலம் இலாபமடைகின்ற வார்சுக்காரர்களாலும், அதைக் களியாட்டமாகக் கருதுகின்றவர்களாலும் பலமாக எதிர்க்கப்படுமென்பதில் சந்தேகமே கிடையாது. எனினும், இதற்கு அனுமதிகொடுக்கும் வழக்கத்தை சர்க்கார் தாமதமின்றி ரத்து செய்யவேண்டு மென்று நான் அபிப்பிராயப்படுகிறேன்.

திரு. ஈவர் தமது சுற்றறிக்கைக்குக் கிடைத்த பதில்களின் சாராம்சத்தை கவர்னர் ஜெனரலுக்கு அனுப்பிவைத்து திரு. ஒக்லியின் அபிப்பிராயத்தை யொட்டிய தமது கருத்தையும் வெளியிட்டிருந்தார். அதன்மீது கவர்னர் ஜெனரல் 1817-வது வருடத்திய சுற்றறிக்கையை மனமில்லாமல் எல்லா மாகாணங்களுக்கு மனுப்பிவைக்க உத்திரவிட்டார். ஆனால் அதற்கு மேற்பட்ட நடவடிக்கைகளைத் தற்காலீகமாக அவர் நிறுத்திவைத்துக் கொண்டார்.

இதற்கிடையில் கவர்னர் ஜெனரலுக்கு இரண்டு மனுக்கள் அனுப்பிவைக்கப்பட்டன. அனேக பிரமுகர்களின் கையொப்பங்களடங்கிய அம்மனுக்களில், சதி சம்பந்தமாகச் சர்க்கார் பிறப்பித்திருந்த கட்டளைகளை ரத்துசெய்ய வேண்டுமெனக் கோரி பண்டிதர்களால் அனுப்பப்பட்டிருந்த மனுக்கள் காருண்ய சிந்தையுடன் நிராகரிக்கப்பட வேண்டுமென்று பிரார்த்திக்கப்பட்டிருந்தது. இந்த மனுதாரர்கள் தங்களது விண்ணப்பத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்கள்:—

"இளங் கைம்பெண்கள் அவர்களுக்கு அடுத்தாற்போலுள்ள வார்சுக்காரர்களால் உடன்கட்டை யேறும்படி பலவந்தம் செய்யப்படுவதை நாங்கள் பிரத்யக்ஷமாக அறிவோம். சில பெண்கள் தங்களது கணவன்மார்களின் மரணத்தருவாயில் சோக மிகுதியினாலும், சிந்தனை செய்யாமலும் உடன்கட்டையேறப் போவதாகச் சொல்லிவிடுகின்றனர். இதை அவர்களுக்கு அடுத்த வார்சுக்காரர்கள் ஒரு சாக்காக வைத்துக் கொள்ளுகின்றனர். மேற்படி பெண்கள் மரித்த கணவன்மார்களின் பிரேதங்களுடன் பலமாகவும் பலவந்தமாகவும் பிணைக்கப்படுகின்றனர். தீயில் எறியப்பட்டவுடன் உஷ்ணம் அவர்களது உடலில் விஷம் ஏறுவதைப் போல் விரைவாக ஏறுகின்றது. அவர்களைக் கட்டியிருக்கும் கயிறுக்கள் தீக்கிரையானவுடன்

ஜதையைவிட்டு (பிரேதத்தைப் பொசுக்குவதற்காக அடுக்கப்படும் கட்டைகளை ஜதை என்பார்கள்) வெளியேற முயற்சிக்கின்றார்கள். அப்பொழுது அவர்களுடைய உறவினர்கள் மூங்கில் தடிகளினால் தடை செய்கின்றனர். அதையும் மீறிக்கொண்டு வந்துவிடும் பெண்கள் அடித்துக் கொல்லப்பட்டு மீண்டும் தீயில் எறியப்படுகின்றனர். சர்வ சாஸ்திரங்களின்படியும், மனிதனின் பகுத்தறிவின்படியும், மேற்படி செய்கைகள் கோரமான கொலைகளாகுமேயன்றி ஈசுவர ப்ரீதியாகமாட்டா.

சதி சம்பந்தமான பொது விஷயங்களை இத்துடன் நிறுத்திக் கொண்டு ராம் மோகனரின் தடைப் பிரசாரங்களைச் சிறிது கவனிப்போம். அவருடைய மூத்த சகோதரன் ஜகன்மோகனரின் மனைவி உடன்கட்டையேறி மடிந்தாளென்றும், அந்தக் கோரக் காட்சியைப் பிரத்யக்ஷமாகப் பார்த்துக்கொண்டிருந்த ராம்மோகனர் சதியை அடியோடொழித்துவிட விரதம் பூண்டாரென்றும் ஏற்கனவே பிரஸ்தாபித்திருப்பதை நமது வாசகநேயர்களறிவார்கள். ராம்மோகனர் சதி நடைபெறும் ஸ்தலங்களுக்கெல்லாம் நேரில் சென்று தீக்குளிக்கும் கைம்பெண்களிடமும் அவர்களுடைய சுற்றத்தார்களிடமும் மனிதத் தன்மையை இழக்காமலிருக்க வேண்டுமென்று மன்றாடுவார். பண்டிதர்களையும், மற்றும் பல பிரமுகர்களையும் கூட்டி வைத்துக்கொண்டு சதி செய்வது சாஸ்த்ரீயமானதா வென்பதைப் பற்றி விவாதிப்பார். நகரின் நாலாபுறங்களுக்கும் சென்று உடன்கட்டை யேறுவது ஈசுவர சம்மதமல்லவென்றும், அது படுகொலைக்குச் சமானமானதென்றும் பயங்கரமான வார்த்தைகளில் பிரசாரம் செய்வார். 1818-ம் வருட நவம்பர் மாதம் சதியை ஆதரிக்கும் சனுதனிக்கும் ஆக்ஷேபிக்கும் சனுதனிக்குமிடையே கடுமையான வாக்குவாதம் நடைபெறுவதைப்போல் சம்பாஷணை நடையில் அவர் ஒரு புத்தகத்தை வெளியிட்டார். முதலில் வங்காள பாஷையிலே பிரசுரம் செய்து, வங்காள நாட்டில் இலவசமாக வழங்கப்பட்ட இந்நூல் பிறகு ஆங்கிலத்திலும் மொழிபெயர்க்கப்பட்டது. அடுத்தாற்போல் 1820-ம் வருடம் பிப்ரவரி மாதம் 20-ம் தேதியன்று சம்பாஷணை நடையிலேயே மற்றொரு புத்தகத்தையும் ராம்மோக

னர் வெளியாக்கினர். இது அப்பொழுதைய வைஸிராயான ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் மனைவிக்கு அர்ப்பணம் செய்யப்பட்டது. அச்சீமாட்டியின் தூண்டுதலினாலேயே ஹேஸ்டிங்ஸ் பிரபு சதியின் விஷயத்தில் சிந்தை செலுத்தவாரம்பித்தார். மேற்படி இருநூல் களும் சனாதனிகளிடையே பெருத்த கிளர்ச்சியை உண்டுபண்ணின.

மேற்படி இரு நூல்களிலும் உடன் கட்டையை ஆதரிப்பவர் சதி செய்யும் பெண்கள் சுவர்க்கமடைகின்றனரென்பதற்கு சாஸ்திர ரீதியான சில தத்துவங்களைச் சூட்டிக்காட்டுகிறார். அவைகளுக்கு சதியைக் கண்டிப்பவர் "நண்பரே! நீங்கள் சொல்வதெல்லாம் வாஸ்தவம்தான்! ஆனால், சாயுஜ்ய பதவியைப் பெறுவதன் நிமித் தம் மண்ணுலகில் நிகழ்த்தப்படும் கர்மாக்களை நமது மத சித்தாந் தங்கள் பாராட்டவில்லையென்று பணிவுடன் கூற விரும்புகின்றேன். தயவு செய்து காந்தோப நிஷத்தைப் புரட்டிப் பாருங்கள். அதில் இருவகையான கர்மாக்கள் சுட்டிக் காட்டப்பட்டிருக்கின்றன. அவற்றுள் ஆண்டவனிடம் ஐக்கியமாவதற்காகவே அவனையே ஸ்மரித்துக்கொண்டிருப்பது ஒன்று; சுவர்க்கமடைவதற்காகச் சடங்குகளைச் செய்வது மற்றொன்று; இவைகளுள் முதலாவது கர்மாவையே காந்தோப நிஷதம் சிலாகிக்கின்றது. ஏனெனில், நிரந்தரமான சுகம் இந்தக் கர்மாவை அனுஷ்டிப்பவனுக்குத்தான் கிடைக்கின்றது. சடங்குகளின் மூலம் சுகம் பெற விரும்புகின்றவர் கள் நிரந்தரமான சுகத்தைப் பெறுவது கிடையாது. அவர்களு டைய புண்யத்திற்குத் தக்க சுகம் அனுபவிக்கப்பட்ட பின்னர், மீண்டும் மண்ணுலகில் ஜனிக்கவேண்டியவர்களாகிவிடுகின்றனர். சுவர்க்கத்தில் தற்காலிக சுகத்தைப் பெற விரும்பும் பெண்களையே சாஸ்திரங்கள் உடன்கட்டை யேறச் சொல்லியிருக்கின்றன. நிரந் தரமான சுவர்க்கத்தைக் கோரும் கைம் பெண்கள் தங்களது கண வன்மார்களின் மரணத்திற்குப் பின்னர் சுத்தமான சத்—வாழ்க் கையிலீடுபட்டிருக்க வேண்டுமென்று மனு முதலான பல பெரி யார்கள் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றனர்!" என்றுவிடையளிக் கின்றார். அதன்மீது சதியை ஆதரிப்பவர், "நண்பரே! நீங்கள் எடுத் துக் காட்டும் சாஸ்திர ஆதாரங்களை நான் ஒப்புக்கொள்ளுகின் றேன். ஆனால், பதியைப் பறிகொடுத்த பாவையர்கள் ஸத்—வாழ்க்

கைக்குத் தகுதியுடையவர்களல்ல. பேதைமைப் பெண்களின் அணி கலன் என்பதை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? அவர்கள் கெட்டழியாமலிருக்க வேண்டுமாயின் கணவனுடன் தீயில் விழுந்து உயிர் நீத்து விடுவதே உசிதமானது. பெண்களுக்கு ஆண்களைக் காட்டிலும் காம இச்சை அதிகமாகக் காணப்படுகின்றது. ஆகையால், கைம் பெண்களிடம் கற்பையும், சுத்தமான வாழ்க்கையையும் நாம் எதிர்பார்க்கவே முடியாது!" என்று விவாதிக்கிறார். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் சதியைக் கண்டிப்பவர் வாயிலாக, முகல் அத்தியாயத்தில் ஏற்கனவே நாம் பிரஸ்தாபித்துள்ளபடி, பெண்ணினத்தின் பெருமையையும், அவர்களது அபார சக்தியையும் ராம் மோகனர் விளக்குகின்றார். அவருடைய பலதிறப்பட்ட சேவைகளுள் மற்றொன்றை இடையில் பிரஸ்தாபிப்பது அவசியமாயிருக்கின்றமையான் சதி சம்பந்தமான பிரசாரங்களைச் சிறிது நிறுத்திக் கொள்வோம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலே சர்க்கார் பிரசுரங்களையும், மேல்நாட்டவர்களால் கிறிஸ்தவ மதப் பிரசாரத்தின் பொருட்டு ஆரம்பிக்கப்பட்ட சில பத்திரிகைகளையும் தவிர இந்தியர்களுக்குச் சொந்தமானதும் இந்தியர்களால் நிர்வகிக்கப்பட்டதுமான பத்திரிகை ஒன்றுகூட கிடையாது. அக்காலத்தில் பத்திரிகைச் சட்டங்களும் அதிதீவிரமாக இருந்தன. ஹேஸ்டிங்ஸ் பிரபு கவர்னர் ஜெனரலாக வந்த பிறகுதான் இச் சட்டங்களின் அமுல் சிறிது தளர்த்திவிடப்பட்டது. இது இந்தியர்களிற் சிலரை பத்திரிகைகளைத் துவக்குமாறு தூண்டுவதற்கு ஆதாரமாயிருந்ததென்றும் கூறலாம். 1821-ம் வருடம் திரு. பக்கிங்ஹாம் என்பவரால் நடத்தப்பட்டு வந்த "கல்கத்தா ஜர்னல்" என்ற பத்திரிகையில் வங்காளம் ஆங்கிலம் ஆகிய இரு பாஷைகளிலும் "சம்பத்-கௌமதி" என்ற பெயரோடு இந்தியர்களிற் சிலர் ஒரு புதிய வாரப் பத்திரிகையை ஆரம்பிக்க உத்தேசித்திருப்பதாயும், அது சமூகப் பொருளாதார அரசியல் விஷயங்களில் நாட்டின் நன்மையை நாடி உழைக்குமென்றும் விளம்பரம் செய்யப்பட்டிருந்தது. இந்த வாரப் பத்திரிகையின் முதல் இதழ் அதே வருட டிஸம்பர் மாதம் நான்காம் தேதியன்று வெளியாயிற்று. இந்தியாவில் சுதேசி

களால் சுதேச பாஷையில் ஆரம்பம் செய்யப்பட்ட முதல் பத்திரிகை இதுவேயாகும். அதே ஆண்டில் 'சம்பத் கௌமதி'யைத் தொடர்ந்து "ஜமி ஜீஹன் ந்யூமா" "சமாசார் சந்திரிகா" ஆகிய இரு பத்திரிகைகளும் தோன்றின.

இந்தியச் சமூகத்தைச் சீர்திருத்தம் செய்வதற்காகவும், இந்தியர்களின் அரசியல் உரிமைகளுக்காகப் போராடும் நோக்கத்துடனும் சம்பத் கௌமதியை ராம்மோகனர் ஆரம்பம் செய்தார். இந்தியாவிலே பத்திரிகைத் தொழிலுக்கு முதன் முதலாக விதை போட்ட பெருமை அவரைச் சேர்ந்ததேயாகும். அவர் தமது பத்திரிகையை எவ்வாறு நடத்தினரென்பதற்கு அதனுடைய ஆரம்ப இதழ்களிற் சிலவற்றின் பொருளடக்கத்தைக் கீழே கொடுக்கின்றோம்.

இதழ் I

வங்காள மக்களுக்கு ஒரு விண்ணப்பம்—கௌரவமான குடும்பங்களைச் சேர்ந்த ஏழைக் குழந்தைகளுக்கு இலவசமாகக் கல்வி போதிக்க சில பள்ளிக்கூடங்களை நிறுவ வேண்டுமென்று சர்க்காருக்கு ஒரு வேண்டுகோள்—உலோபித் தன்மை வாய்ந்த ஒரு இளவரசனின் வாழ்க்கை வரலாறு.

இதழ் II.

பத்திரிகைகளைப் படிப்பதனால் பொது ஜனங்களுக்கு ஏற்படக்கூடிய நன்மைகளைப்பற்றி சில குறிப்புகள்—சித்பூர் ரஸ்தாவில் ஜல வசதிகளை யேற்படுத்த பண வசூல் செய்ய வேண்டுமென்று ஒரு கடிதம்—பிதிரார்ஜித சொத்துக்களை ஸ்வீகரிக்கும் வயது 15-க்குப் பதிலாக 22-ஆக இருக்க வேண்டுமென்று ஒரு யோசனை—உயிருடனிருக்கையில் உலோபியாக வாழுகின்றவர்களுக்குச் செத்தபின் ஏராளமான செலவிலே சடங்குகள் நடத்தப்படுவதைப்பற்றி பரிகாசமாக ஒரு வியாசம்—தாலுக்கா கோர்ட்டுகளிலும் ஜூரி முறை விசாரணை வேண்டுமென்று சர்க்காருக்கு ஒரு விண்ணப்பம்.

இதழ் III

வங்காளத்தில் உற்பத்தியாகும் அரிசி அயல்நாடுகளுக்கு ஏராளமாக ஏற்றுமதி செய்யப்படுவதைத் தடைசெய்ய வேண்டுமென்று சர்க்காருக்கு ஒரு விண்ணப்பம்—நடுத்தர வகுப்பு சுதேசிகளுக்கு

ஐரோப்பிய வைத்திய சிகிச்சை வேண்டும்—கிறிஸ்தவ கனவான்கள் தங்களுடைய வண்டிகளை அலட்சியமாகக் கூட்டங்களில் ஓட்டிச் சென்று பல சுதேசிகளுக்கு காயமிழைப்பதையும், வழியில் நிற்கும் சுதேசிகளை மிருகங்களாகக் கருதி சவுக்கினால் அடித்து அப்பால் நகரச் செய்வதையும் மாஜிஸ்ட்ரேட்டுகள் தடைசெய்ய வேண்டு மென்று ஒரு வேண்டுகோள்.

இதழ் VI

சர்க்காரினால் சிவில், இராணுவ உத்தியோகஸ்தர்களுக்கு நிவாரணமளிக்கவும் அவர்களது விதவைகளுக்குப் பணஉதவி செய்யவும் ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்தப்பட்டிருப்பதைப் பொது ஜனங்களும் பிரத்யேக ஹோதாவில் விதவைகளை ஆதரிக்க ஒரு நிதியை ஏற்படுத்த வேண்டுமென்று சுதேசி தனவந்தர்களுக்கு ஒரு விண்ணப்பம்.

இதழ் VIII

சமூகம் பல்வேறு வகுப்புகளாகப் பிரிந்திருப்பதால் ஏற்படும் தீமைகளையும், ஜாதிக்கட்டுப்பாடுகளை ஒழிக்கவேண்டிய அவசியத்தையும்பற்றி ரஸமான ஒரு வியாசம்.

இவ்வாறு சம்பத்கௌமதி சமூகத்தின் பல துறைகளிலும் புகுந்து அருந்தொண்டாற்றியது. இப்பத்திரிகை சாதாரண மக்களுக்கென்று ஆரம்பம் செய்யப்பட்டதால் அதனுடைய வியாசங்கள் எளிய இனிய நடையில் சுலபமாக கிரகித்துக்கொள்ளத் தகுந்தவாறு எழுதப்பட்டு வந்தன. படித்த சுதேசிகளுக்கென்று "மீரத் அல் அக்பர்" என்ற பெயருடன் ராம் மோகனர் மற்றொரு வாரப் பத்திரிகையை ஆரம்பம் செய்தார். இதன் பாரஸீக பாஷாப் பதிப்பு வெள்ளிக்கிழமைகளிலும் வங்காளப் பதிப்பு செவ்வாய்க் கிழமைகளிலும் வெளியிடப்பட்டுவந்தன. இதன் 1822-ம் வருட அக்டோபர் மாதம் 11-ம் தேதி இதழில் "அயர்லாந்து மக்களின் குறைகளைப்பற்றி" ஓர் அழகான வியாசம் வரையப்பட்டிருந்தது குறிப்பிடத்தக்கது.

ஐயர்லாந்தைச் சேர்ந்த பிரமுகர்கள் தங்களது வாழ்க்கையின் பெரும்பாலான பாகத்தை இங்கிலாந்தில் கழிக்கின்றனர். பெரிய பெரிய பட்டங்களையும், அரசரின் பிரியத்தையும் பெறவேண்டு

மென்னும் நோக்கத்தோடு இங்கிலாந்தில் ஏராளமான பணத்தை விரயம் செய்கின்றனர். இதனால் இங்கிலாந்தின் வர்த்தகம் செழிக்கின்றது. ஐயர்லாந்தின் செல்வமோ அனுதின மும் சுரண்டப்படுகிறது. ஐயர்லாந்துப் பிரமுகர்கள் இங்கிலாந் திற்குச் சென்றுவிடுகின்றமையால் அவர்களது நிலங்கள் கங்காணி மார்களின் நிர்வாகத்தின் கீழ் விடப்பட்டு விடுகின்றன. இந்தக் கங்காணிகள் தங்களது சுயநலத்தையும், எஜமானர்களின் பிரியத் தைச் சம்பாதிப்பதையும் கருதி ஏழைக் குடி ஜனங்களின் குடிக் கூலியை அதிகரிக்கின்றனர். இதனால் பொது மக்களின் கஷ்டமும் குறைகளும் நாளுக்குநாள் அதிகரிக்கின்றன.

இவ்வாறு அரசியலையும், சமூகப் பொருளாதார விஷயங்களை யும் பற்றி ராம்மோகனர் தமது பத்திரிகைகளில் தாராளமாக எழுதி வந்தார். ஆனால், 1822-ம் வருட முதல் தமது எழுத்துக் களை கட்டுப்படுத்திக்கொள்ளவேண்டிய அவசியம் அவருக்கு ஏற் பட்டுவிட்டது.

---

## சட்டம் என்ன சொல்லுகிறது?

விதவைப் பெண்களுக்கு மறுபடியும் கல்யாணம் செய்து வைப்பதைப்பற்றிப் பலர் பலவிதமான சந்தேகங்களைக் கொள்கின் றனர். சட்டப்படி விதவை மறுமணத்திற்கு எவ்வளவு ஆதர விருக்கிறதென்பது பலரறியவேண்டியதொன்றாகும். புத்தமதம் கிறிஸ்து, யூதம், முகமதிய மதம் முதலிய ஏனைய மதஸ்தர்களில் "கட்டாய விதவை" என்பது கிடையாது. மனைவியிறந்தால் எப் படி மறுமணம் செய்துகொள்ளலாமோ அப்படியே புருஷனை இழ ந்த பெண்ணும் மறு புருஷனை மணக்கலாம். ஹிந்து மதத்தின ரிடத்தில் மட்டுமே விதவைக்கொடுமையிருக்கிறது. ஹிந்து மதத் தினரிடையிலும் கீழ் வகுப்பாரிடத்திலில்லை. உயர் வகுப்பின ரிடையேதா னிருந்து வருகிறது. இந்த அநீதியையொழித்து வித

வைப்பெண்கட்கு உரிமை கொடுக்கும் நோக்கத்துடன் 1856-ம் வருஷம் ஜூலை-மீ 25உயில் "ஹிந்து விதவை மறுமணச் சட்டம்" என்ற சட்டத்தை இந்திய அரசாங்கத்தார் இயற்றியுள்ளனர். ஆனால் அச்சட்டம் ஒன்று இருக்கிற சங்கதியே நமது ஜனங்கட்குத் தெரிய சந்தர்ப்பமில்லாதபடி காரியங்கள் நடந்துகொண்டு வருகின்றன. இப்போது அச்சட்டத்தின் கருத்தைப் பொதுஜனங்கள் அறியும்பொருட்டு இங்கே மொழிபெயர்த்து வெளியிடுகின்றோம்.

## 1856-ஆம் வருஷத்திய 15-வது சட்டம்.

கிழக்கிந்தியக் கம்பெனிக்குச் சொந்தமான ராஜியங்களிலும், அதன் ஆட்சிக்குட்பட்ட பிரதேசங்களிலும், ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் சிவில் நீதிஸ்தலங்களில் நிர்வகிக்கப்படும் சட்டப்படி சில வகுப்பினரைத் தவிர்த்த மற்ற எல்லா ஹிந்து விதவைகளும், ஒருமுறை விவாகம் செய்துகொண்ட காரணத்தால், இரண்டாவது முறையாக விவாகம் செய்துகொள்ள முடியாதவர்களாக விருக்கிறார்கள் என்றும், இரண்டாந்தடவையாக விவாகம் செய்துகொள்ளும் அத்தகைய விதவைகளுக்குப் பிறக்கும் குழந்தைகள், முறைகேடான நிலைமையிற் பிறந்தவையென்று மதிக்கப்படுகின்றன வென்றும், அக் குழந்தைகளுக்குக் குடும்ப சொத்தில் வாரீஸ் உரிமை கிடையாதென்று கொள்ளப்படுகிறது என்றும் தெரிகிறபடியாலும்,

இங்ஙனம் சுமத்தப்பட்ட சட்ட அசௌகர்ய அநுஷ்டானம் நெடுங்காலமாய் நிலைத்துவரும் வழக்கத்திற்கொத்ததாய் இருப்பினும், அது அவர்களுடைய மதக் கோட்பாடுகளின் உண்மையான உரை பொருளுக்கேற்றவாறு இல்லையென்று அநேக ஹிந்துக்கள் நம்புவதாலும், தத்தம் சொந்த மனச்சாட்சிகள் தங்கள் தங்களுக்குக் கூறுவதற்கிணங்க, பிறிதொரு வழக்கத்தை மேற்கொள்ள விரும்பும் ஹிந்துக்களை நீதிமன்றங்களால் பிரயோகிக்கப்பட்டுவரும் 'சிவில்' சட்டம் அங்ஙனம் செய்யக்கூடாதென இனி தடை செய்யலாகாது என்று அவர்கள் விரும்புவதாலும்,

அத்தகைய சட்டானுஷ்டானப் பிரதிகூலத்தைப்பற்றி முறையிட்டுக்கொள்ளும் எல்லா ஹிந்துக்களுக்கும் பரிகாரமளிக்கவேண்டியது நியாயமாக விருப்பதாலும்,

ஹிந்து விதவைகளின் விவாகத்திற்கேற்பட்டிருக்கும் சட்டத் தடைகள் விலக்கப்படுவதால் நல்ல ஒழுக்கங்களின் அபிவிருத்திக்கும், பொதுஜனங்களின் க்ஷேமத்திற்கும் ஏது உண்டாகக்கூடுமாதலாலும், கீழ்க்கண்ட சட்டங்கள் செய்யப்பட்டிருக்கின்றன:—

1. ஹிந்து விதவைகளின் விவாகம் சட்ட சம்மதமானதாகும். ஹிந்துக்களில் ஒருவருக்கொருவர் செய்துகொள்ளும் விதவா விவாகம் சட்ட விரோதமானதாகாது. அத்தகைய விவாகங்களால் பிறக்கும் குழந்தைகள் சீர்கேடான ஒழுக்கமுறையில் பிறந்தவையெனக் கொள்ளப்படமாட்டா. ஹிந்து சட்டத்திற்கு விரோதமான எவ்வித உரைபொருள் விளக்கப்பட்டாலும், அதற்கு விரோதமாக எவ்வித வழக்க சாட்சியம் இருப்பதானாலும் பெண்ணுக்கு ஏற்கனவே விவாகமான காரணத்தை முன்னிட்டும், அவளை மணப்பதற்கென்று நிச்சயிக்கப்பட்ட ஒருவன் அவளுடைய விவாக காலத்தில் இறந்துபோய்விட்டான் என்ற காரணத்தை முன்னிட்டும், ஒரு ஹிந்து விதவையின் விவாகம் செல்லுபடியாகாததாய்விடாது.

2. ஒரு விதவை மறுமணம் செய்துகொண்டால், அவளுடைய இறந்துபோன புருஷன் சொத்தில் அவளுக்கு இருந்த பாத்தியங்கள் இல்லாமற் போய்விடும். சம்ரக்ஷணையின்பொருட்டோ அல்லது தன் புருஷனுடைய சொத்துக்குத் தான்பெற்ற வாரீஸ் பாத்தியத்தின் பொருட்டோ, அல்லது தன் வழித் தோன்றியவர்களின் சொத்துக்குத் தான் பெற்ற வாரீஸ் உரிமையின்பொருட்டோ, அல்லது ஏதேனும் ஒரு மரண சாஸன இலாபத்தின் பொருட்டோ, அல்லது தனக்குக் கிடைக்கக்கூடிய ஒரு மரண சாஸன சகாய நிலைமையின்பொருட்டோ, தன் இறந்துபோன புருஷனுடைய சொத்தில் தனக்கிருந்த எல்லா உரிமைகளும், மற்றும் அவளுடைய மறுமணத்தால் இல்லாதொழிந்து விடுகின்றன. அவள் அப்போது இறந்துபோனால் என்ன வாரிஸ் நிர்ணயம் ஏற்படக்கூடுமோ, அதே முடிவே ஏற்பட்டுவிடும். அவளுடைய இறந்துபோன புருஷனுக்கு அடுத்த வாரீசாக வரக்கூடியவரோ, அல்லது அவளுடைய மரணத்தால் யாருக்குச் சொத்துரிமை கிடைக்கக்கூடுமோ அவரே அச்சொத்திற்குப் பாத்தியமுடையவராவர். விதவைக்குத் தன் இறந்

துபோன கணவனால் ஏற்பட்ட எவ்வித சொத்துரிமைகளும், அவளுடைய மறுமணத்தை வெளிப்படையாக அநுமதிக்காதிருந்தாலும் அல்லது அச் சொத்துரிமைகள் பிறருக்கு மாற்றப்படத்தக்கவை யல்லவாயினும், அவை அவளுடைய மறுமணத்தால் இல்லாதொழிந்துபோம். அவள் மறுமணஞ் செய்துகொள்ளும்பொழுது இறந்துபோனால் உரிமைகள் எப்படி நிர்ணயிக்கப்படுமோ அப்படியே பின்பு நிர்ணயம் ஏற்பட்டுவிடும். இறந்துபோன அவளுடைய புருஷனுக்குள்ள அடுத்த வாரீஸ்களுக்காவது, அல்லது அவள் மரணத்திற்குப் பின், அவளுடைய சொத்துக்கு உரிமை கொண்டாட பாத்தியம் பெறக்கூடிய வேறு எவராவது, அவள் சொத்துக்கு வாரீஸ்தார்களாவார்கள்.

### 3. விதவை மறுமணத்தின் பின், இறந்த புருஷனுடைய குழந்தைகளின் பராமரிப்பு.

ஒரு இந்து விதவையின் மறுமணத்தின் பின், இறந்த புருஷனுடைய இஷ்ட சாஸனத்தின் மூலமாகவோ, அல்லது அவனுடைய மரணசாஸனப் பத்திரப்படியோ, வெளிப்படையாக அந்த விதவையோ, அல்லது வேறு எவரோ, அவனுடைய குழந்தைகளுக்குப் போஷகராக (கார்டியனாக) ஏற்படுத்தப்பட்டிராவிட்டால், இறந்துபோன கணவனுடைய தந்தையாவது, அல்லது தந்தை வழிப் பாட்டனாவது, அல்லது தாயாவது, அல்லது தந்தை வழிப் பாட்டியாவது, அல்லது இறந்த கணவனுடைய உறவின்முறையைச் சேர்ந்த எந்த ஆடவனாவது, தலைமை உயர்தர நீதிமன்றத்திற்கு மனுச்செய்து, மேற்சொல்லப்பட்ட குழந்தைகளுக்குச் சரியான போஷகரை நியமிக்கும்படி விண்ணப்பித்துக் கொள்ளலாம். அத்தகைய விண்ணப்பம், அப் புருஷன் இறந்துபோகும்போது எந்தவிடத்தில் குடியமர்ந்திருந்தானோ, அந்தவிடத்தின் சிவில் வழக்குகளின் முதல் விசாரணை அதிகார எல்லையைச் சேர்ந்த தலைமை உயர்தர நீதி ஸ்தலத்திற்குச் சமர்ப்பிக்கப் படலாம். அதன்பேரில் மேலே சொல்லப்பட்ட கோர்ட்டார் உசிதம் என்று நினைத்தால் அத்தகைய போஷகரை அவர்கள் நியமிப்பது சட்ட சம்மதமாகும். அங்ஙனம் நியமிக்கப்பட்ட போஷகர் மேலே சொல்லப்பட்ட குழந்தைகளையோ அல்லது அக் குழந்தைகளில் யாரையேனுமோ

அவர்களுடைய வயது வராப் பருவத்தின் போது, அவர்களுடைய தாயாரின் ஸ்தானத்திலிருந்து பாதுகாத்துச் சம்ரக்ஷிக்கும் பொறுப்புக்குப் பாத்தியப்பட்டவராவர். இத்தகைய நியமனம் செய்யப்படும்போது, தம் பெற்றோர்களை இழந்த குழந்தைகளின் போஷக நியமனம் சம்பந்தமாக அமுலில் இருக்கும் சட்டதிட்டங்களின் படியே, அவசியத்திற்குகந்தவரையில் கோர்ட்டார் நடவடிக்கை எடுத்துக்கொள்வார்கள்.

மேலே சொல்லப்பட்ட குழந்தைகள் தங்களுடைய சம்ரட்சணைக்கும் சரியான கல்விக்கும், தங்களுடைய வயது வராப்பருவகாலத்திலிருக்கும்போது போதுமான அளவுக்குச் சொந்த சொத்து பெற்றிராவிட்டால், மேலே கூறப்பட்டபடி போஷகர் நியமிக்கப்படமாட்டார்கள். அத்தகைய போஷகர் நியமனத்திற்குத் தாயார் தன் சம்மதத்தைக் கொடுக்கவேண்டியது அவசியமாகும். இதுவிஷயமாகத் தாயார் சம்மதத்திற்குப் புறம்பாக எதுவும் நடைபெறாது. நியமனத்திற் கேற்பட்டிருக்கும் போஷகர் குழந்தைகள் வயதடையாப் பருவத்திலிருக்கும்போது, அவர்களுடைய சம்ரக்ஷணைக்கும் தகுதியான கல்விக்கும் உத்தரவாதம் கொடுப்பதானல் அவர் போஷகராக நியமிக்கப்படலாம்.

4. குழந்தை இல்லாத விதவைகளுக்கு சொத்துரிமை வருவதற்கு எதுவுமிந்த ஆக்டிலில்லை. இந்த ஆக்ட் உண்டாக்கப்படுவதற்கு முன்பு ஒரு விதவை, தனக்குக் குழந்தையில்லாக் காரணத்திற்காகத் தன் புருஷனுடைய சொத்துக்கு உரிமை பெறமுடியாதிருப்பாளானல், அவன் இறக்கும்போது, அவனல் வைக்கப்பட்டுப்போன சொத்துக்குக் குழந்தையில்லாத அவனுடைய விதவை உரிமை பெறலாமென்பதாக அர்த்தம் தரத்தக்கது இந்த ஆக்டில் எதுவுமில்லை.

### 5. 2, 3, 4 ஆவது சேக்ஷன்களில் சொல்லப்பட்டிருப்பதன்படியல்லாமல், மணஞ் செய்துகொள்ளும் விதவையின் உரிமைகளின் பாதுகாப்பு.

மேலே சொல்லப்பட்ட மூன்று செக்ஷன்களின்படி யன்றி, ஒரு விதவை தன் மறுமணத்தின் காரணமாக, எந்த சொத்தையோ

அல்லது அம்மறு மணத்தால் வேறு வகையில் தனக்குக் கிடைக்கக் கூடிய எந்த உரிமையையோ இழக்கமாட்டாள்.

மறுமணம் செய்துகொள்ளும் ஒவ்வொரு விதவையும், தன் மணம் முதல்தடவையாக ஏற்பட்டதாக இருந்தால் எவ்வித வாரீஸ் உரிமைகளைப் பெற்றிருக்க முடியுமோ, அதே உரிமைகளைப் பெற்றவளாவாள்.

## 6. விதவையின் புனர் விவாகத்தை மற்ற விவாகத்தைப்போலவே செல்லத்தக்கதாகச் செய்வதற்கான சடங்குகள்.

ஏற்கனவே விவாகம் செய்து கொள்ளாத ஒரு இந்துப் பெண் தன் முதல் விவாகத்தின் போது, அதைச் செல்லத் தக்கதாகச் செய்யப் போதுமானதாக விருக்கும் பொருட்டு, உச்சரிக்கப்படும் வார்த்தைகள் எவை எவையோ, நடத்தப்படும் சடங்குகள் எவை எவையோ அல்லது செய்துகொள்ளப்படும் வாக்குத் தத்தங்கள் எவை எவையோ, அவைகளை ஒரு இந்து விதவை, தன் மறுமணத்தின் போது உச்சரித்தாலும், நடத்தினாலும், அல்லது செய்தாலும் போதும். விதவா விவாக விஷயத்தில் அப்படிப்பட்ட வார்த்தைகள், சடங்குகள், அல்லது வாக்குத்தத்தங்கள் பொருத்தமாகா என்ற காரணத்தால், அத்தகைய எந்த விவாகமும் செல்லத்தக்கதல்ல வென்று உறுதிப்படுத்த முடியாது.

## 7. வயது வராத (மைனர்) விதவையின் மறுமண சம்மதம்.

மறுமணம் செய்துகொள்ளும் விதவை, வயது வாரதவளாயிருந்து, தன் கணவனுடன் கலவி யென்பதில்லாதிருந்து தன் மணத்தைப் பூர்த்திசெய்து கொள்ளாதிருந்தால், அவள் தன் தந்தையின் சம்மதமின்றி மறுமணம் செய்துகொள்ளக் கூடாது; அவளுக்குத் தந்தை இல்லாதிருந்தால், அவள் தன் தந்தையுடைய தந்தையின் சம்மதம் பெறவேண்டும்; அவளுக்கப்படிப்பட்ட பாட்டனரில்லாதிருந்தால், அவள் தன் தாயின் சம்மதம் பெறவேண்டும்; அவர்களில் யாரும் இல்லையானல், அவள் தன் தமயனுடைய சம்மதம் பெறவேண்டும்; சகோதரர்களும் அவளுக்கு இல்லையானல் அவளுடைய அடுத்த ஆண் உறவினருடைய சம்மதத்தை அவள் பெறவேண்டும்.

## இந்த செக்ஷனுக்கு விரோதமாக விவாகத்தை ஆதரித்தால் ஏற்படக்கூடிய தண்டனை.

இந்த செக்ஷனில் சொல்லப்பட்டிருக்கும் நிபந்தனைகளுக்கு விரோதமாக, ஒரு விவாகத்திற்குத் தெரிந்துகொண்டே ஆதரவளிக்கும் யாவரும் ஒரு வருஷத்திற்கு மேற்படாத காவல் தண்டனைக்கோ, அல்லது அபராதத்திற்கோ, அல்லது இரண்டிற்குமோ உட்பட்டவராவார்கள்.

## அத்தகைய கலியாணத்தின் பலன்

இந்த செக்ஷனில் சொல்லப்பட்ட நிபந்தனைகளுக்கு விரோதமாகச் செய்யப்படும் எல்லா விவாகங்களும் செல்லத்தக்கவை யல்லவென்று ஒரு சட்ட நீதி ஸ்தலம் உறுதிசெய்து விடலாம்.

இந்த செக்ஷனில் சொல்லப்பட்டிருக்கும் நிபந்தனைகளுக்கு விரோதமாகச் செய்யப்படும் ஒரு விவாகம் செல்லத்தக்கதாகுமா என்ற கேள்வி பிறக்கும்போது, மேலே கூறப்பட்டபடி அந்தப் பெண் சம்மதம் பெற்றவளாகவே அனுமானித்துக்கொள்ளப்படுவாள். அவள் அத்தகைய சம்மதம் பெறவில்லை யென்று கூறப்படும்போது, அது ருசுப்படுத்தப்பட வேண்டும். அவள் சட்டப்படி சம்மதம் பெறவில்லை யென்று ருசுப்படுத்தப்படுகிற வரையில் அவள் சட்டப்படி சம்மதம் பெற்றவளாகவே கருதப்படுவாள். அத்தகைய விவாகம் கலவி சம்பந்தத்தால் பூர்த்திசெய்யப்பட்டுப் போன பிறகு, அதைச் செல்லத்தக்கதல்ல வென்று உறுதி செய்யமுடியாது.

## வயது வந்த (மேஜர்) விதவையின் மறுமண சம்மதம்.

பூரண வயது வந்த ஒரு விதவையின் விஷயத்திலாவது அவளுடைய விவாகம் கலவி சம்பந்தத்தால் பூர்த்தி செய்யப்பட்ட நிலைமையிலாவது, அவளுடைய மறுமணத்தைச் சட்ட சம்மதமானதாகவும், செல்லத்தக்கதாகவும் செய்ய, அவளுடைய சொந்த சம்மதமே போதுமான சம்மதமாகும்.

---

# ஸ்ரீரங்கத்து ஜெம்பகவல்லி.

(ஸ்ரீமதி N. S. ஜானகி அம்மாள்
பண்டிதை B. I. S. கிளப் ஸ்கூல், லேட்படான்.)

கொடியது விளம்பில் குமரியின் துன்பம்
கொடிது கொடிது மணாள னின்மை
அதனிலும் கொடிது அணி தாலி பறித்தல்
அதனிலும் கொடிது தலைமுடி யெடுத்தல்
அதனிலும் கொடிது விதவையென நாமம் சூட்டல்
அதனிலும் கொடிது அழகினைக் குறைத்தல்
அதனிலும் கொடிது சகுனத் தடையெனல்
அதனிலும் கொடிது உற்றார் கொடுமை
அதனிலும் கொடிது காமுகர் தொல்லை
அதனிலும் கொடிது ஆசையின் பெருக்கம்
அதனிலும் கொடிது ஆசையால் அழிவுறல்
அதனிலும் கொடிது மறுமணமின்றென மறுத்தல்தானே

என்றபடி விதவைகளின் பரிதாபம் பெரிதாக இருக்கிறது. இவ்வளவு ஹிம்சையும் அனுபவிக்கும் விதவைகளின் துயரத்தைக் கேட்டால், தட்சணமே நம் கடின மனமும் கனிந்துருகும் என்பதில் ஐயமுண்டோ? ஐயோ! உலகில் பெண்மணி யென்னும் கண்மணிகளாகப் பிறந்து இப்பேர்ப்பட்ட கஷ்டங்களைக் கடவுளால் கொடுக்கப்பட்ட அறிவு என்னும் தூண்டுகோல் இருந்தும் அனுபவிப்பதென்றால் சொல்லவும் நாவெழவில்லை.

உதாரணமாக, நம் தென்னாட்டிலுள்ள திருச்சி ஜில்லாவைச் சேர்ந்த ஸ்ரீரெங்கம் என்னும் ஒரு பட்டணத்தில் ஏழ்மையான ஒரு வடகலை அய்யங்கார் இருந்தார். அன்னவருக்கு இரண்டு பெண்களும் இரண்டு பிள்ளைகளும் இருந்தனர். தகுந்த வயதில் ஒரு பெண்ணுக்கும் இரண்டு ஆடவர்க்கும் விவாகத்தை முடித்துவிட்டார். இந்த ஏழ்மை திசையில் மேலே சொல்லிய மூன்று விவாகங்களை முடித்துவிட்டபடியாலும் ஜெம்பகவல்லி என்னும் மற்ற பெண்ணுக்கு எதிர் ஜாமீன் என்னும் கொடிய பணப்பேய் கொடுக்க இல்லாமையாலும், ஒன்பது வயதுள்ள அப்பெண்ணை தஞ்சை

ஜில்லாவைச் சேர்ந்த திருக்காட்டுப்பள்ளி என்னும் கிராமத்தில் ஏக போக மிராசுதாராய் இருந்த 40 வயதுள்ள தன் இனத்தாரில் ஒரு வருக்கு இரண்டாந்தாரமாக, பணத்திளுசையினாலும் வறுமையா லும் விவாகம் செய்து கொடுத்தார்கள்.

மணம் முடிந்த 4-வது மாதம் மணமகன் எமனுலகிற்கேகி னன். மணமகன் இறந்த 10 தினங்களும் மத வழக்கப்படி கர்மங் களை முடித்து 11-வது தினத்தன்று பூ மலரும் வேளையில் அவள் அணிந்திருந்த எல்லா ஆபரணங்களும், மாங்கல்யமும் மற்ற விதவைகளால் கழற்றப்பட்டு, விதவை என்னும் நாமத்தைச் சூட்டி விடுகிறார்களன்றோ? உலக வாழ்க்கை யென்னும் உணர்வு தெரி யாத அப்பெண் யாவற்றையும் இழந்தாள். இப்படியே வாழ்க்கை யின் மர்மங்கள் தெரியாமல் சிலகாலம் கழிக்கலானாள். அவளது 13-வது வயதில் பருவமடைந்தபின் ஒருநாள் தனக்குத் தன் வீட் டார் ஏன் பூச்சூட்டவில்லையென்று என்னைக் கேட்டாள். நான் எல்லாவற்றையும் எடுத்துச் சொன்னேன். நிற்க அவள் வீட்டில் சகோதரன் தன் மனைவியோடும் சகோதரி தன் கணவனோடும் கொஞ்சிக் குலாவுவதைப் பார்த்து இவர்களைப்போல் தானும் இருப் பதற்கு இல்லையே என்றழுதுகொண்டு மன வருத்தத்தோடு சில காலம் கழிக்கலானாள். இருந்தபோதிலும் அவள் மனம் அப்படி யிருக்க இடங் கொடாததால் உலக வாழ்க்கையில் மனத்தைப் புக விடலானாள். அதனால் வீட்டில் ஒருவரும் இல்லாத சமயத்தில் தன் வீட்டின் ஜன்னலின் வழியாய் வெளியே பார்த்தபொழுது அங்கே தெருவில் சென்ற காமப்பிரமுகர்கள் இப்பெண்ணைப் பார்த்து கண் ஜாடை செய்யத் துவங்கினார்கள். இவர்கள் செய்கைகளெல்லாம் குடும்பத்தாருக்குத் தெரிந்து மதக்கட்டு என்னும் கயிற்றால் கட்டி னார்கள். ஆனாலும் ஜெம்பகவல்லி அக்கட்டுப்பாட்டிற்கு இணங்காமல் யாவருமில்லாத தருணத்தில் தனக்கிசைந்த காதலரை வீட்டிற்கு அழைப்பதிலேயே இருந்தாள். காமப் பிரமுகர்கள் பித்தும், ஜெம்பக வல்லியின் இச்சையும் விட்டபாடில்லை. இப்படி இருக்கையில் ஒரு நாளிரவு தன் இச்சைக் காதலருடன் ஒருவரும் அறியாமல் தன் இல்லத்தை விட்டு வெளிப்புறப்பட்டாள். பிறகு உண்ண உணவு இல்லாமலும் கட்டத் துணியில்லாமலும் மதக் கட்டுப்பாட்டினால்

மறுமணம் செய்யாததினாலும் அந்தோ பரிதாபம்! கற்பென்னும் ஆபரணத்தை இழந்து அந்தகாரமான இருளில் தனியே ஏகி இச்சண்டாளகரமான ஜாதிக் கட்டுப்பாட்டிலீடுபட்டுழலும் சமூகத்தின் வாழ்வை வெறுத்தவளாய் சமீபத்திலிருந்த தனிக்கேணியில் மூழ்கி தனது மண்ணுலக வாழ்வை மறந்து விண்ணுலகேகினாள்.

அப்பப்பா! இத்தகைய ஜாதிப்பேய் சூழ்ந்துள்ள நம் பாரத நாட்டில் தான் பெண்களை அடிமையிலும் கேவலமாக மதித்துத் துன்புறுத்தலினால் நம் நீர்வளம் நிலவளமிகுந்து நீட்சியான நாடு அடிமைக்குழியில் விழுந்து தத்தளிக்கின்றது. பிற நாடுகளில் தத்தம் ஆடவர்களுக்கு உள்ள சுதந்திரத்தைப் பெண்களும் சரிபாகமாகப் பெற்றிருப்பதால் அந்நாடுகள் முன்னேற்றமடைந்து வந்து கொண்டிருப்பதை நமது நேயர்கள் நோக்குக.

சகோதர சகோதரிகளே,

பெண்புத்தி பின்புத்தியென்னும் முதுமொழிக்கிணங்க, இன்றுகாறும் ஏமாற்று நிலைமையில் இருந்து இன்பத்தைப் போக்கித் துன்பத்தையடைந் துழன்று, பின்போக்கில் பேதைவாழ்வைக் கொண்டது போலிராமல் இனிமேலாகிலும் எங்களுக்கு இறைவனால் ஈயப்பெற்ற இந்திர ஒளி காட்டு மிந்திர மணிபோன்ற இன்றியமையாத சுதந்திர தீபத்தை யேற்றினோமென்றெழுந்து இன்ப வாழ்வு வாழக் கடவீர்கள் என்றும், இதுவரை அடிமைக் கட்டில் கிடத்திய இந்து சமூகத்தாரும் இடையூறன்றி பால்ய விவாகம் என்னும் நஞ்சை யொழித்து பக்குவ மணம் என்னும் அமிர்தத்தை அளித்து பாவையர்கள் மனமொத்த காதலரைப்பற்றிப் பரவச வாழ்வைப் பெற வழிவிடுவீர்களென்றும் பரமன் திருவடிகளைப் பணிகிறேன்.

---

## மாதர் மறுமணத்துக்கு வாழ்த்து.

லே. மணி, கண்டரமாணிக்கம்.

மாதர் மறுமண மாதரந்த சஞ்சீவி
தீதனைத்தும் நீக்கி தீண்டாதார்க்—காதரவாய்
நன்மை பலபுரிந்து நங்கையரைக் காப்பாற்றும்
உண்மையை யோதுமோர் நூல்.

# செய்வீர் மறுமணம்.



திரு. உ. அரு. அருணாசலம் செட்டியாரவர்கள்.

கட்டளைக் கலித்துறை.



வீட்டை விளக்கிடும் வேல்விழி
நல்லாரை வீண் சொலாலே
கேட்டை விளைத்துக் கேவல
மேசெய்யுங் கீழ்மதியீர்
நாட்டைப் பிடித்த நலிவெலா
மின்றே நகர்வதற்குத்
தேட்டைத் தருநற் றெரிவையர்
வாழ்வுதான் தேடுவீரே (1)

நல்லார் பலர்மிக நன்னீதி
செய்தபொன் நாடிதனில்
அல்லார் சிலர்புகுந் தாணுக்குப்
பெண்கள் அடிமையெனப்
பல்லாரை வாட்டிப் பணிமிகவே
கொள்ளும் பாமரரை
எல்லாரும் சேர்ந்தே இதுபோதே
ஓட்ட எழும்புவீரே (2)

ஆண்களைப் போல அணங்குகள்
தாமணம் ஆற்றிடினே
காண்கலா மிங்கு கணக்கிலாச்
செல்வமுங் காளையரும்
தூண்போல் மதியுடைச் சூரரே
இன்னமும் தூங்கிடாமல்
மாண்புடன் செய்திடும் இன்றேநன்
மாதர் மறுமணமே. (3)

# குறச் சிங்கி

நாகை, என். பாலசுப்ரமண்யம்.

அந்தச் சௌந்தர்ய திலகத்தின் பெருமை இந்த வையத்தில் யாருக்குத் தெரிகிறது ? மலர்களின் நறுமணம் கம்மென்று பரிமளித்து மெல்லிய இளங்காற்றேடு மருவி, மன்மத ராஜனின் அதிகார வீச்சு நிறைந்த அந்திப் பொழுதிலே அலருகின்றது. அத்தகைய மந்தகாசமான நேரத்தில் தருக்களின் அரச வம்சமாகிய மலர்களின் தோற்றம் எப்படியிருக்கும்! மலர்களின் வரிசைகளை அழகு படுத்துவதற்கு அங்கே ஒருத்தி நிற்கிருள். பங்கய மலர்களின் இனிய வனப்பை அவள் முகங்கொண்டிருப்பதால் அவளுடைய நாமம் கமலாவதி என்ருகுமோ? கமலாவதியின் நெஞ்சின் வாயிலாக வரும் உணர்ச்சிகளை அவளுடைய நெஞ்சின் களங்கமற்ற முகம் ஒளிக்கத் தெரியாமல் வெளியிலே கக்கி விடுகிறது. காதலின் இன்ப வுணர்ச்சி எவ்வளவு அற்புதமாக வெளிப்படுகிறது! அவளுடைய மனத்திலே ஒரு பெரிய திறந்த மகாவெளி. அங்கேதான் அவளுடைய காதலன் புன்னகை யரும்ப உலாவி வருகின்ருன். பாவம் ! அவனுக்கு வேறு வீடு கிடைக்கவில்லை போலும் ! ஆமாம் அதுதான் முழுவிடத்திற்கு முப்பது ரூபாய் குடிக்கூலி கேட்கிருர்களே, இருதயத்திலே குடியிருக்காமல் வேறு எங்கு போவான் ? அந்தக் குறும்புக்காரன் கமலாவதியின் நெஞ்சத்தை வாசஸ்தலமாக வைத்துக்கொண்டதிலிருந்து அவளுக்கு மாளாத மனக்கலக்கமுண்டாகிவிட்டது. அவ்வளவு பெரிய ஆசாமியை மார்பிலே சுமந்திருக்க யாராலாகும்? ஐயோ ! அவன் போய்விடப் போகிருன் ; இருதயத்திலேயே இருக்கட்டும் ; அவன் இல்லாவிடில் இன்பப் பொங்கலும், இனிய வுணர்ச்சியும் அற்றுப்போய் விடுமல்லவா ? ஹிட்லர் ஆட்சியைப்போல மன்மதனின் சர்வாதிகார ஆட்சியும் மகா கொடுமையாகவிருக்கும் போலிருக்கிறது ! ஐயோ பாவம் அந்தப் பேதையின் நெஞ்சத்திலும் ஒரு மலர்க்கணையை எய்துவிட்டான். சுவாசங்கூட விடமுடியவில்லை ; திணறுகிருள். நல்லவேளை! குறத்தி வருகிருள்.

“ என்னு ஒரு மாதிரியாய் மூஞ்சியை வச்சுக்கிட்டிருக்கையே?

உன் மனசிலே உள்ளதைச் சொல்லு ; என்னம்மே காளி அதைத் தீர்த்து வைப்பாள்" என்று குறத்தி சொல்லிக்கொண்டே கூடையையும் குறிக்கோலையும் கீழே போட்டுவிட்டு அமர்கிறாள்.

"ஐயோ! குறச் சிங்கி, அதையேன் கேட்கிறாய்? இந்தப் பேதை மனம் கட்டுப்பட மாட்டேனென்கிறது! மதத்தின் பாசக் கயிற்றையும், ஜாதி வழக்கத்தின் இருப்புச் சங்கிலியையுங்கூட இந்த மனம் அறுத்துக்கொண்டு விரைந்தோடுகின்றது. மதக் கயிறும், ஜாதிச் சங்கிலியுமா வாயு ரூபமான மனத்தைக் கட்டிவிடப் போகிறது? விதவைக் கன்னியாகிய எங்கள் குறை கொஞ்சமா சொல்வதற்கு?" என்ற பீடிகையுடன் கமலாவதி ஆரம்பிக்கின்றாள்:-

1. எங்கள் குறை யெடுத்துரைக்க யாராலே ஆகுமடி
ஏங்கிக் கலங்குகின்றோம்—குறச்சிங்கியே
எங்குமித் தீமையில்லை.

2. ஏதுக்குப் பெண்பிறவி எடுத்தோமிப் பூமிதனில்
எச்சலுண் இழிநாய்போல—குறச் சிங்கியே
ஈனம்மிகத் தான்படவோ.

3. பேதையென் றேசுகின்றார் பெரும்பாடு படுத்துகின்றார்
பீய்த்துப் பிடுங்குகின்றார்—குறச் சிங்கியே
பேதமைகள் செய்கின்றாரே.

4. ஒன்றும் வயதுமுதல் உயர்தங்கத் தாலிசெய்வார்
அன்றே யறுத்தெறிவார்—குறச் சிங்கியே
அறுதலி முண்டையென்பார்.

5. பாலின்மணம் மாறுமுன்னே பதிதம்மைப் பறிகொடுப்
பார்த்துக் களிப்புறுவார்—குறச் சிங்கியே [பார்
பொங்குதுயர் எய்திடாரே.

6. மோகன ரூபம்வளர் மூவைந்து பிராயமதில்
மாங்கல்ய மற்றொழிந்தார்—குறச் சிங்கியே
மாமடவார் நான்கு லட்சம்.

7. பாஞ்சாலம் ஐக்யமெனும் பாரத பூமிதனில்
பன்னிரு லட்சமடி—குறச் சிங்கியே
பதிமாண்ட பாவையர்கள்.

8. மாலை நிலவுதனில் மதனியொடு சோதரர்கள்
முத்தம் இனிதாடுவார்—குறச் சிங்கியே
மெத்தமனங் குன்றுதடி.

9. கொங்குங் குவளைகளும் கோத்தொளிரும் காவினிலே
கொஞ்சிக் குலவை செய்வார்—குறச் சிங்கியே
குமுறுதடி எங்கள்மனம்.

10. துஷ்டமதன் தோளசைத்து தொடுத்தொறுக்கும் [பாணமதால்
கஷ்டஞ் சகியோமடி—குறச் சிங்கியே
காதலர்தான் கிட்டுவரோ?

11. ஊணில்லை உடைகளில்லை ஊர்க்காட்சி தாமுமில்லை
உற்றார் சிறப்புமில்லை—குறச் சிங்கியே
உடல்மெலிவ தாகுதடி.

12. கண்டேனொருஇளைஞர் காதல்மிகக் கொண்டேனடி
கொண்டென்னை ஆள்வாரோடி—குறச் சிங்கியே
குறிபார்த்துச் சொல்வாயோடி.

[குறத்தி இவைகளைக் கேட்டு மனம் வெம்பி வருந்தினாள். குறிக்கோலையெடுத்து காளிமகாதேவியை வேண்டிக்கொண்டு கமலாவதிக்குக் கூடிய சீக்கிரம் சங்கத்தில் சேர்ந்து மறு கல்யாணம் நடக்குமென்று சொல்லி அவளுடைய மனத்தைத் தேற்றினாள்.]

---

# பிள்ளை வரம்.

N. S. S. தாஸ், ஷண்முகநாதபுரம்.

## I

துப்பறியும் சங்கரன் கையில் ஒரு பேப்பருடன் அங்குமிங்கு மலைந்துகொண்டிருந்தான். "என்ன ஏமாற்றம்? பெண்களுக்கு கல்வி இல்லாததினாலேயே இவ்வளவு எளிதில் இவ்வேமாற்றத்திற் குட்பட்டுவிடுகின்றனர்" என்று வாய்விட்டுக் கூறினான்.

"எந்தப் பெண்ணப்பா அப்படி ஏமாந்தது?" என்று கேட்டுக்

கொண்டே அறையினுள் பிரவேசித்தான் அவனின் நண்பன் தினகரன்.

"யாரது? ஓ! தினகரனு? வா வா எந்தப் பெண்ணென்று கேட்கிருய்? ஒருமையல்ல, பன்மை. இதோ பார்" என்று அன்றைய தினசரியில் வெளியாயிருந்த ஓர் விஷயத்தைக் காண்பித்தான். தினகரன் பேப்பரை வாங்கிப் படித்தான்.

"ஜோதியானந்தர்"

இந்நகரில் ஒரு வாரமாக ஜோதியானந்தர் என்ற யோகி மேட்டுத் தெருவிலுள்ள ஓர் மடத்தில் தங்கி இருக்கிருர். அவர் செம்பை பொன்னுக்குகிருராம். குழந்தை இல்லாதவர்களுக்கு குழந்தை வரம் அளிக்கிருராம். நீண்ட நாட்களாக கர்ப்பம் தரியாதவர்கள் அவரிடம் சென்று முறையிடவேண்டுமாம். அவர் வரச்சொல்லும் நாளில் சென்று ஸ்நானம் செய்து பின் இரவு பூசை முடியும் வரை அவர் எதிரில் அமர்ந்திருக்கவேண்டுமாம். பின் பூஜை முடிந்ததும் அவர் கொடுக்கும் ஜபிக்கப்பட்ட துளசித் தண்ணீரை அருந்தவேண்டுமாம். இவ்விதம் மூன்று இரவுகள் செய்தால் கண்டிப்பாக அப்பெண் கர்ப்பம் தரித்துவிடுவாளாம். பிள்ளைப்பேறில்லாத பெண்மணிகள் ஏராளமாக ஒவ்வொரு நாளும் வந்து செல்கின்றனர்."

என்றிருந்த விஷயத்தைப் படித்த தினகரன் ஆச்சரியத்துடன் "மிஸ்டர் சங்கர்! ஆச்சரியமான விஷயமாயிருக்கிறதே" என்ருன்.

"ஆச்சரியமா? என்ன ஆச்சரியம்? ஆச்சரியப்படும்படி பரப்பப்படுகிறது.

அப்படியானல்... ....இது வெறும் ஹம்பக் என்று நினைக்கிருய்?

"ஆம் அதிலென்ன சந்தேகம்? இது வெறும் ஏமாற்றத்தைத் தவிர வேறில்லை. இதன் உண்மையைக் கண்டுபிடிக்க வேண்டிய தவசியம்."

"எவ்விதம் ?"

"ஓ! அதற்கு வழி இருக்கிறது" என்று கூறி ஒரு கடிதத்தில் ஏதோ எழுதி அவனிடம் கொடுத்து பின் அவனிடம் ரகசியமாக ஏதோ கூறினன் சங்கரன்.

அவன் கூறியவற்றைச் செவியுற்ற தினகரன் தான் அவ்விதமே செய்வதாகக் கூறி விடைபெற்றுச் சென்ருன்.

II

இரவு மணி 7. மேட்டுத் தெருவிலுள்ள ஜோதியானந்தரின் ஆஸ்ரமம் தீபங்களால் அலங்கரிக்கப்பட்டு ஓர் தேவாலயம்போல் விளங்கிக்கொண்டிருக்கிறது. நூற்றுக்கணக்கான பெண்கள் அவரவர்களின் மனக்குறைகளை அகற்றிக்கொள்ள தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, சூடம், சாம்பிராணி முதலியவைகளடங்கிய தட்டுகளை ஏந்தி நிற்கின்றனர். பூஜை ஆரம்பமாகிவிட்டதற்கு அறிகுறியாக மணியும் அடிக்கப்பட்டது. வெளியே நின்றுகொண்டிருந்த பெண்களெல்லாம் நான் நீ என்று தள்ளிக்கொண்டு உள்ளே சென்றனர்.

ஜோதியானந்தர் ஓர் பீடத்திலமர்ந்து நிஷ்டையிலாழ்ந்திருக்கிறார்.

உள்ளே சென்ற பெண்மணிகளிடம் தலைக்கு 5 ரூபாய் வீதம் பாத காணிக்கை வசூலிக்கப்பட்டது.

பெண்களெல்லாம் பயபக்தியுடன் தாம் கொண்டுவந்திருந்த தாம்பாளங்களைச் சாமியார் முன் வைத்துப் பணிந்து நின்றனர். நிஷ்டை கலைந்து கண்விழித்து நோக்கினார் ஜோதியானந்தர். அங்கிருக்கும் நூற்றுக்கணக்கான பெண்களில் ஜோதியானந்தரின் விழிகள் 25 வயது மதிக்கத்தக்க ஓர் அழகியின்மீது வீழ்ந்தது. அப்பெண்ணை நோக்கி "பெண்ணே! உன் மனோபீஷ்டம் கூடிய விரைவில் நிறைவேறும், கவலையுறாதே, இதோ இத்தீர்த்தத்தை அருந்து, இன்று முதல் மூன்று தினங்கள் வரை இச்சந்நிதானத்திலே இருந்து ஈஸ்வரியின் நாமத்தை ஜெபித்திருப்பாயாயின் உன் எண்ணம் கைகூடும்" என்று கூறி துளசித்தண்ணீரைக் கொடுக்க அப்பெண்ணும் பணிந்து அதை வாங்கி அருந்தினாள்.

பின் ஜோதியானந்தர் மற்ற பெண்களுக்கும் சில நாட்களைக் குறிப்பிட்டு அன்று வரும்படி கட்டளையிட அவர்களும் சிரம் வணங்கிச் சென்றனர்.

அங்கிருந்த ஏனையோர்களெல்லாம் சென்றுவிடவே, அன்றைய முறைப்பெண் மட்டும் தனித்து நின்றாள்.

ஜோதியானந்தர் அப்பெண்ணை நோக்கி "பெண்ணே! நீ சில

காலமாக பிள்ளையில்லையே என்று வருந்திக்கொண்டிருப்பதை நாமறிவோம். உனது மனக்குறை நீங்கி மகிழ்வடையும் காலம் சமீபத்திலிருக்கிறது. இதோ வடபாரிசத்திலுள்ள முதல் அறையிருக்கிறதே அங்கு சென்று, அவ்வறையில் போடப்பட்டிருக்கும் ஆசனப் பலகையின் மேலமர்ந்து ஈஸ்வரியின் நாமத்தை ஜெபித்துக்கொண்டிரு. ஒருங்கால் ஈஸ்வரி இன்றே உனக்கு காட்சியளிக்கவும் கூடும். மணி 12 அடித்ததும் ஓர் பிரகாசம் தோன்றும், இந்த அறிகுறியைக்கண்டு பயந்துவிடாதே. அப்பிரகாசம் மறைந்ததும் ஈஸ்வரி இளம்பெண்ணுருவில் தோன்றிக் காட்சியளிப்பாள். நீ அப்பொழுது வெகு ஜாக்கிரதையாகவும் பணிவுடனும் நடந்துகொள்ளவேண்டும்'' என்று கூறினர்.

அப்பெண்ணும் அவர் கூறியவற்றைக் கேட்டு தான் அவ்விதமே நடந்துகொள்வதாக கூறிப் பணிந்து அவ்வறையை நோக்கிச் சென்றுள்.

## III

இரவு மணி 12 அடித்தது. அப்பெண்மணி இருந்த அறையில் ஓர் ஜோதி தோன்றி மறைந்தது.

“ஹே! புத்திரி! நீ நம்மிடம் கொண்டிருக்கும் ஆழ்ந்த பக்தியைக் கண்டானந்தமடைகிறோம். உன் மனக்குறையை யறிவோம். கூடிய விரைவில் ஓர் ஆண்மகவைப் பெறுவாய். எங்கே வா! என்னருகில் வா, உன் அன்னையை ஆலிங்கனம் செய்துகொள்'' எனக் கூறியவொலிப்பதை யுணர்ந்து அப்பெண்மணி எழுந்து சென்று பெண்ணுருவில் தோன்றி நிற்கும் ஈஸ்வரியின் அருகில் நின்றுள்.

ஈஸ்வரி அப்பெண்ணைக் கட்டியணைத்து எண்ணற்ற முத்தமீந்தாள்.

அப்பெண் ஈஸ்வரியின் அணைப்பிலிருந்து விடுபட எவ்வளவோ முயன்றும் முடியாது தவித்தாள். ஈஸ்வரியின் அணைப்பிலிருந்து விடுபடுவது சிரமமென்றறிந்த அப்பெண் தன் முழுப் பலத்தையும் உபயோகித்துத்தள்ளவே ஈஸ்வரி அவ்வறையின் ஓர் மூலையிற் போய் விழுந்தாள்.

அவள் எழுந்து வருவதற்குள், அப்பெண், தன் மடியிலிருந்த

ரிவால்வரை எடுத்துக் கையில் பிடித்தவண்ணம் "ஈஸ்வரி அம்மை யாரே அவ்விடத்தை விட்டு அசைந்தால் மூளை சிதறிவிடும்" என்று கூறிக்கொண்டே, அவளின் தலைமயிரைப் பிடித்திழுக்கவே அது கையுடன் வந்தது. ஈஸ்வரி ஜோதியானந்தானுர். தான்பெரிய ஆசாமிகளை எல்லாம் ஏமாற்றிவந்து கடைசியில் ஓர் பெண் கையிலா அகப்படுவது என்று நினைத்துக் கோபமடைந்தான். நினைப்பதாலோ, கோபமடைவதாலோ என்ன பிரயோசனம்? துப்பாக்கி முனைக்கு முன் அவனுல் என்ன செய்யமுடியும்?

IV.

மறுநாள் கீழ்க்கண்ட செய்தி பேப்பரில் வெளிவந்து மக்களிடையே பெரும் பரபரப்பை உண்டுபண்ணியது.

ஜோதியானந்தர் பிடிபட்டார்

"துப்பறியும் சங்கரன் பெண்ணுருவில் சென்றுராம்"

ஜோதியானந்தரைப்பற்றி முன் மணியில் பிரசுரமாகியிருந்த விஷயத்தைப் படித்த துப்பறியும் சங்கரன் இதில் ஏதோ சூதிருக்கிறதென சந்தேகமுற்று பெண்வேஷத்துடன் ஜோதியானந்தரின் ஆஸ்ரமத்திற்குச் சென்று நேற்றிரவு 1 மணிக்கு கைதுசெய்தாராம். இதன் முழுவிபரமும் நாளைய மணியில் வெளிவரும்.

---

## என்ன வேண்டும்?

(புதுவை R. S. ராஜலக்ஷிமி)

(சிவபெருமான் கிருபை வேண்டும்—என்ற மெட்டு)

பல்லவி,

விதவை துயர் ஒழிய வேண்டும் அவர்
விடுதலை பெற வேண்டும் வேறென்ன வேண்டும்?

(அனுபல்லவி)

இதமாயுலகினிலே என்றும் மறுமணங்கள்
எங்கும் நடக்கவேண்டும் வேறென்ன வேண்டும்?

(தொகையறு)

பால்ய மண மொழிந்து வளர் பருவ காலத்திலே
பகர்மண முடிக்கவேண்டும்
வாலைப் பருவத்தில் வாழ்நாளை வீணாக்காமல்
வன்மையுடன் வாழவேண்டும்

(அனுபல்லவி எடுப்பு)

ஆற்றொணாத்துயருறும் அமங்கலைகளினுள்ளம்
ஆனந்தம் பெறவேண்டும் வேறென்னவேண்டும்?

(தொகையறு)

இழிவாக விதவையரை பழிபாவஞ் செய்திடும்
இடர்தானொழிய வேண்டும்
வழிதானறிந்து இள வனிதையர்கள் நல்வாழ்க்கை
வையகத்திலே ஓங்கவேண்டும்

(அனுபல்லவி எடுப்பு)

விதவைக் கொடுமைதனை விரட்டி சமவுரிமைக்
கதவு திறக்க வேண்டும் வேறென்னவேண்டும்?

(தொகையறு)

நரைத்த படுகிழவனுக்குப் பெண் கொடுத்துப் பொருள்வாங்கும்
நலிந்த முறை யொழியவேண்டும்
பொருத்தமற்ற மணங்களதை நிகழ்த்திப் பின் வருந்திடும்
பொல்லாமை தொலையவேண்டும்

(அனுபல்லவி எடுப்பு)

சகுனத்தடை யென்றேசும் சனாதனிகளின் மூட
சாகசம் ஓட வேண்டும் வேறென்னவேண்டும்?

(தொகையறு)

காதல் கலப்பு மணம் நிறைவேறி கைம்பெண் என்ற
கடுஞ் சொற்கள் மறைய வேண்டும்
பூதலத்தில் பெண்கள் புகழ் பெற்று மகிழ்வுற்றுப்
புனிதமாய் விளங்கவேண்டும்

(அனுபல்லவி எடுப்பு)

கிழ மணம் ஓட வேண்டும் மறுமணம் நாட வேண்டும்
கீர்த்தி பெருக வேண்டும் வேறென்னவேண்டும் [வித

# தாயும் மகளும்.

ஸ்ரீமதி SP. திருநெல்லையாச்சி, ஹானரரி மாஜிஸ்திரேட்.

தாய்:—(கிழவி வேதவல்லி ஆச்சி) இது என்னடி இழவு. சங்கம், சங்கம் என்கிறார்களே அது என்ன சங்கம். தாலியறுத்தவர்களைப் பிடித்து தாலிகட்டுகிற சங்கமாமிலோ. இப்படியும் அநியாயம் கேட்டதுண்டா, பார்த்ததுண்டா?

மகள்:—(குமுதவல்லி) ஆமாத்தா! நேற்று நடந்த சங்கக்கூட்டத்திற்கு எங்கள் சோமய்யா அப்பச்சி கூட போய்வந்தார்கள். அங்கே தங்கச்சி சுகுணவல்லியைப் போல் கணவனிழந்த பெண்களுக்கெல்லாம் கட்டாயக் கல்யாணம் செய்யவேண்டுமென்ற தீர்மானம் வந்ததாம். அந்த தீர்மானம் எந்த ஆக்ஷேபனையுமில்லாமல் ஏகமனதாக நிறைவேறியதாம். நல்லதுதானே?

தாய்:—ஏண்டி? அவர்களாய் தீர்மானம் செய்து ஏட்டிலே எழுதி வைத்துக்கொண்டு என்ன செய்கிறது? எந்தப் பெண்ணு வந்து நட்டமே நிற்கிறது? வீடு, வாசல், நகை பகை, பணம் காசு, சொத்து சுகம், சொந்தக்காரர் சுகிர்த்துக்காரர் எல்லாவற்றையும் விட்டுவிட்டு எந்தப் பயித்தியக்காரியாவது கலியாணம் பண்ணிக் கொள்ள வருவாளா? அப்பறம் யாரு முகத்தில் முழிக்கிறது?

மகள்:—இல்லை ஆத்தா. பணக்காரர்கள் எல்லாம் சமதர்மத்திற்கு அஞ்சி நடுங்கும் இக்காலத்தில் இயற்கைக்கு மாறாக பாழுங் குழியில் விழுந்து சாகலாமா? நம்மள் சுகுணவல்லியை இப்படிவெள்ளைச் சீலையைக் குடுத்து வெளியில் போகவிடாமல் தனியே வைத்து நம்மைப்போல நாலு பிள்ளைகளைப் பெற்று வாழுகிறவர்களைக்கண்டு பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்க நாம் பார்த்துக் கொண்டிருப்பது தர்மமா? ஞாயமா? கொண்டவன் செத்துவிட்டால் அவளின் கட்டழகும் கன்னிப் பருவமும் எங்கே செல்லும். மனித உணர்ச்சிக்கும், உரிமைக்கும் மாறான சமூகக் கட்டுப்பாடெனும் விலங்கால் விளையும் பயனென்ன? வியபிசாரமும் வீண் தூற்றுதலுமேயாம். மானங்காத்த ஜாதியாரென்றால் மறுமணம் கட்டாயம் நிகழ வேண்டுவது அவசியமல்லவா? "மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் பெருமையில்லை." நம்மவ

ரில் சிலர் கைம்பெண்களோடு காதல் வாழ்க்கை நடத்துகிறார்களே! கண்ணுக்கினிய கணவர்களைக் கூட்டிக்கொண்டு மறைவாக ஓடுகிறார்களே அது ஞாயமா? அப்படி அவர்களுக்கு பிறக்கும் குழந்தைகள் கூட்டத்தில் வர நாணமடையாவா? அல்லது அவர்கள் அப்போதே கலியாணமாகச் செய்துகொண்டிருந்திருந்தால் இழுக்குண்டாகுமோ? இந்த சங்கங்களும், பிரசங்கங்களும், துண்டுப் பிரசுரங்களும், எதற்காக வேண்டும்? இப்போது பிள்ளை கூட்டுகிறோமென்று ஆண்பிள்ளை கூட்டுகிறார்களே அதுவும் தேவையா? தாயே யோசித்துப்பாருங்கள். ஆதலால் நாமாவது தைரியமாக வெளிவந்து தங்கச்சி சுகுணவல்லியை கலியாணம் பண்ணிக்கொடுத்தால் பெருமையும் பெரும் புண்ணியமும் கிடைக்கும்.

தாய்—என் அருமை மகளே! நீ சொன்னதெல்லாம் ஞாயமாகத்தானிருக்கிறது; உன் தங்கை சுகுணவல்லிக்கு கூடிய சீக்கிரம் கலியாணம் செய்யத்தான்வேண்டும். அவளுக்கும் ஆசைதான். எதற்கும் அவளையும் ஒருமுறை கேட்போம். உங்கள்ப்பச்சி வரட்டும். அவள் வீட்டு சாமான் சட்டு, சீதன பூதனம், கழுத்துரு முதலானதுகளை முன்னடியே ஒழுங்குபண்ணிக்கொள்ளச்சொல்லி அப்புறம் மாப்பிள்ளை பார்த்து செய்துகொடுப்போம்.

மகள்:—ஆத்தா! மெத்தச் சந்தோஷம், தங்கச்சியிடம் வா போய்க் கேட்போம்.

தாய்:—ஆத்தா! சுகுணவல்லி உனக்கு மறு கல்யாணம் செய்வதாக நானும் ஆச்சியுமாய் யோசித்துக்கொண்டிருக்கிறோம். உன் சம்மதம் தெரிந்து உங்களப்பச்சிக்கு சொல்லவேணும்.

சுகுணவல்லி:—வாஸ்தவந்தான். நம்மை ஆளுகிற சக்கிரவர்த்திகூட மனித உணர்ச்சிக்கும், உரிமைக்கும் மாறுபாடில்லாது ஆடவரிருவரைக் கைவிட்ட அயல்நாட்டு மாதொருத்தியின் காதலுக்காக மணிமுடி வேண்டாது "காதல், காதல், காதல் போயிற் சாதல் சாதல்" என்ற நமதுகவி பாரதியார் வாக்கை மெய்ப்பித்தார் என்றால் என்னையும் கேட்கவாவேண்டும்?

குமுதவல்லி:—சரி வருகிறோம். அப்பச்சியிடம் சொல்லி வருகிற தை மாசம் கலியாணத்தை முடிப்போம்.

தாய் வேதவல்லி ஆச்சி:—ஆமாம் அப்படியே முடிப்போம்.

# நமது கடமை.

பாகநேரி ஸ்வாமி சோமசுந்தரன் இயற்றியது.

(மோசக்கார தாசி—என்ற மெட்டு.)

விதவையர் துயரொழிப்போம் இனி
மேதினிதனில் களிப்போம் பாழும்
மத வைதீகத்தைப் பழிப்போம் ஜாதி
வழக்கத்தைவே ரோடொழிப்போம் செழிப்போம். (வித)

தோகையரு.

வாய்வீரமே பேசும் வைதீகர் விதவையரை
மறைவாக மருவவில்லையோ
மானமே பெரிதென்று மங்கையர்கள் கெர்ப்பமதை
மருந்துண் டொழிப்பதில்லையோ
தாய்வாழ மகள்மூலைதனி லிருந்தழுதழுது
தவிப்பதொரு பாபமில்லையோ
தாரணியில் மறுமணம் செய்திடும் சோதரர்கள்
சவுக்யமாய் வாழவில்லையோ.

பாட்டு.

மறுமணத்தினில் நோக்கம் கொள்ளும்
மாந்தருக்குநல் லூக்கம் வேறு
திருமணத்தினி லாக்கம் தனைச்
செலவழித்திடு மூர்க்கம் போக்கும். (வித)

தோகையரு.

மனைவியை யிழந்தவொரு புருஷர்கள் விவாகத்தை
மறந்து வாழ்ந்திடுவாரானல்
மாதர்களு மந்தமார்க் கத்தினைக் கைப்பற்றி
வாழுவது நீதியாகும்
வினைகருமம் விதிபொது வலாதொரு வருக்கென
விளம்புவது உண்மையானல்
மேதினியின் மீதிதையநீதி எனவேதள்ள
வேண்டுவது ஞாயமாகும்.

பாட்டு:

பாலிய மணத்தை வெறுப்போம் ஜாதிப்
பாகுபாட்டைக்கரு வறுப்போம் யாரும்
கேலிசெய்தாலுமே பொறுப்போம் இனிக்
கெட்ட வழக்கங்கிட் டாமலே மறுப்போம். (வித)

---

## மாதர் விமோசன வாக்கு.

கல்லல், A. ராமநாதன், லேட்டான்.

---

என் அன்பார்ந்த கமலம்! பக்குவமான நீ, தக்க நாயகனொருவனைத் தழுவு முன், முக்காடிட்டு மூலையிலிருக்கும் விந்தை யாது?

எனது ஆசை அகிலம்! நாம் இளமை முதல் பள்ளியில் படித்து வருங்கால், மேல் படிப்பினிமித்தம் உனது பெற்றோர்களால் நீ பட்டணம் அனுப்பப்பட்டதின் பிறகு, எனது பெற்றோர்களால் நான் படிப்பை நிறுத்திவிட்டு, சின்னாட்கள் இல்லத்தின் வேலைகளைக் கவனித்து வந்ததுமன்றி, இரவில் தானாகவே, கல்வியைக் கற்றும் காலச்சக்கரம் சுழல்வதை கண்காணித்தும் வாலானேன்.

அங்ஙனமிருந்து வரும் ஞான்று, அறிவென்னும், அமிர்த ரசத்தை அகற்றி, பொருளென்னும் பொற்பேயைப் பிடித்துழலும் பேதைப் பெற்றோர்கள் சுமார் 50 ஆண்டை நிறையப்பெற்றவரும் ஏறக்குறைய 70, 80 ஆயிர ரூபாய் ஆஸ்தியுடையவருமான ஒரு விருத்தருக்கு என்னை இல்லக்கிழத்தியாக்க இசைந்தனர். எழுதப் பட்ட முகூர்த்தச் சீட்டுப்படி ஏராளமான ஜனங்கள் குழுமி நிறைந்துள்ள மணப்பந்தலில் மணமக்களிருவரும் வந்தமர்ந்தோம். ஆனால் எனது விதியின் பயனை நினைந்துருகி எனக்கேற்பட்ட மண்ணுறுத்தல் வேகமாய் மறைவது போல், வேதனைப்பட்டு உழன்றேன். எனினும் ஒருவாறாக மனதை உற்சாகப்படுத்தி உட்கார்ந்தபடியே நாணித் தலைசாய்த்தவண்ணமிருந்தேன்.

அகிலம்:—அதற்கப்புறம்.

கமலம்:—சொல்கிறேன் கேள் பெண்ணாய்ப் பிறந்த ஜென்மத்தின் பேதைத்தனத்தை. உடனே பிராமணோத்தமர்கள் ஓமத்தை வளர்த்து உபதேசங்கள் ஓதி நிறைவேறியதும், மணமகனின் இரு கரங்களையும் மாறிப்பிணைத்து அதில் தேங்காயையும், தெர்ப்பைப்புல்லையும் இணைத்து வேதபாராயணத்தை விளம்பியவாறே வேதியர் விருத்தரை என்பாலளிக்க இயம்பினர். வயதுமுதிர்ந்தும், வயதுமாதரை மணக்கத் துணிந்த வயோதிகன் கரங்களை நீட்டி எம் கரத்தைப் பற்றுவதற்குள் தாமாக வாய்வு எனும் கருணையாளன் மனமற்ற மணத்தை நோக்கி மனம் சகியாதவனாய், மண்ணுலகில் இவ்வயோதிகக் கட்டைக்கு வாழ்வு எற்றுக்கு என்ன அநியாயம், எல்லாம் நிலையற்ற உடமையின் காரணத்தாலன்றோ இளம் மாதரின் இன்புறும் வாழ்வை எரிக்கிறார்களென, இரக்கமும் ஆர்வமும் கொண்டவனாய் யமனுலகிற்கு இரண்டே நிமிஷத்தில் அனுப்பலானான். எனின், அஞ்ஞான்று அவ்விடத்தில் ஜனங்களுக்கிடையே இந்து சமூகத்தில் பிறந்ததின் பயனாய்த் தன் வாழ்வைப் பாழாக்கிக் கொண்ட இப்பாவி என்ன நிலையிலிருந்திருப்பேன் என்பதை நீயே அறிந்துகொள்!

அகிலம்:—(பெருமூச்சோடு) சரி பின்னர் என்னநடந்தது. நீயடைந்த பேற்றைப் புகல்வாய்!

கமலம்:—பொறு, வஞ்சமறியா மகளிர் பஞ்சுபடும்பாடு பட்டுத் தவிப்பதில் நானொருவளென்பதை நன்கு கேட்டு இதிலிருந்தாவது எம்மைப் போலுற்ற (இந்து சமூகத்தில் ஜெனித்த) நீங்கள் தம்மெண்ணம்போல் சுயேச்சை பெற்று சுதந்தர வாழ்விற் கலந்து சுகமாய் வாழவேண்டுமென்பதே இவ்வடியாள் வேட்கை. மற்றும், நான் அடைபட்ட கதை சொல்லத்தரமன்று, எனினும் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேள். எனது மணத்திருநாளைப் பார்த்து மகிழ்வெய்து முகத்தான் போந்திருந்த உறவினர் மாப்பிள்ளை பிணக்கோலத்தைப் பார்த்து பிரேமையுற்று, காலதாமதமின்றி செய்யவேண்டிய கடன்களை அம் மணப்பந்தலிலேயே என்னை வைத்து நிறைவேற்றிய தெங்ஙன மெனில்;

மணவணி யணிந்த மகளிராங்கே
பிணவணி யணிந்துதங் கொழுநரைத்தழீஇ

உடுத்தவாடை கோடியாக
முடித்தகூந்தல் விரிப்பினும் விரிப்பர்.

என்ற வெற்றி வேற்கையின் விரிவுரைப்படி நான் உடுத்திருந்த இடை வஸ்திரத்தை எடுத்துக் கழுத்திலிட்டு மல்லிகைப் புஷ்பங்களை வாரியணிந்திருந்த மாபெருங் கூந்தல் மண்ணில்படிய அவிழ்த்துத் தொங்கவிட்டு அமங்கலியாய் அறையில் புகுந்து, அன்றுமுதல் இன்றுவரை அரும்சிறையிலடைபட்டுத் துர்ப்பாக்கியமான நிலைமையில் துன்புறுகிறேன். இதுதானம்மா நானெடுத்த ஜென்மத்தின் சிறப்பு (எனத் தேம்பிக் கண்ணீர் உகுத்தாள் கமலம்.)

அகிலம்:—என்ன கொடுமை, பாழும் நெஞ்சிரக்கமற்ற வஞ்சக சமூகத்தில்.

குன்றத்தனையிரு நிதியைப்படைத்தோர்
அன்றைப்பகலே அழியினும் அழிவர்

என்பது போல இப்பற்றில்லாப் பணப்பித்துப் பிடித்து பாவையர்களுக்கேற்ற பர்த்தாவைப்பற்றி பரமானந்தமாய் வாழ நினைக்கும் பாங்கைப்பறித்து பக்குவ மங்கையரைத் திக்குமுக்காடச் செய்து பரலோகத்திற் கனுப்புமிப்பாதக சமூகம் என்றைக்கு மங்குமோ, பரிதவிக்கும் மாதரின் சுதந்திரம் என்றைக்குத் தங்குமோ, தெரிகிலோம். ஏன் தங்கமாட்டாது? நம்மதியின்மையா லேற்பட்ட மாறுபாட்டிற்கு விமோசன காலம் விரைந்து கூடிவிட்டது. ஆதலின் சுதந்திரமே நமது பிறப்புரிமை, அதை அடைந்தே தீருவோமென்ற கங்கணத்தைக் கட்டிக்கொண்டு அக்கைங்கரியத்தை அதிசீக்கிரத்திலடைந்து ஆனந்த நர்த்தனமாடவே நாம் உழைத்துத் தேறுவோம்; அஞ்சாதே, அஞ்சாதே, (என ஆர்வத்தோடு கூறி அந்நேசியிடம் விடைபெற்றுச் சென்றனள்.)

தாய்நாட்டில் பிறந்து சரிபாக சுதந்திரத்தை இழந்து தவிக்கும் சகோதரிகளே, நுங்களின் அபாயநிலைக்கு அபயாஸ்தங் கொடுத்து மிளிர்ந்துழைக்கும் "மாதர் மறுமண" ப்பத்திரிகையின் வசனத்தை மனதிலிருத்தி மட சமூகங்கள் பால் மன்றாடி வாழ்க்கையின் லட்சியத்தில் பங்கெடுத்து மாதர்கட்கு சுதந்திரத் தீபம் சுடர்விட்டெரிகின்றதெனத் தூண்டி எழுமின் விழிமின், கருதிய கருமம், கைகூடும்வரை சலியாதுழைமின்.

வாழ்க, வாழ்க, மாதர்மறுமணம்.

# மறுமணத்தின் அவசியம்.

தோழர், ப. கந்தையா, கொழும்பு.

செல்வஞ் சிறப்போங்கி வளர்ந்துவரும் தென்னிந்தியாவில் ஹிந்து சமயத்திலுள்ள ஒவ்வொரு சமூகத்திலும் கொஞ்சமும் நெஞ்சிரக்கமற்ற வைதீக விஷப்பூச்சிகளின் வார்த்தைகளைக் கேட்டு "விதவை" சிரோமணிகளை எண்ணிக்கையில் மிக மிக அதிகப்படுத்திக் கொண்டே வருகிறார்கள். அந்தோ! பரிதாபம்! ஹிந்து சமூகத்தினர் இனிமேலும் "விதவை" சகோதரிகளுக்கு மறுமணம் செய்யாமலும் வயோதிகர்களின் பேச்சைக்கேட்டு வாலிப இளஞ்சிங்கங்கள் வீண்காலம் கடத்துவார்களானல் உறுதியாக இறுதியில் நமது ஹிந்து சமூகமே ரொம்பவும் சீரழிவான நிலைமையில் கீழ்நோக்கிக் கொண்டுபோகும் என்பதை அச்சுறுத்திக் கூறுவேன்.

குறிப்பாக ஹிந்து சமயத்தில் எனக்குத் தெரிந்தவரை வாலிப விதவைகள் ஒரு சிலரே விதவாவிவாகத்தை நடத்தி இருக்கிறார்கள். இன்னும் நூற்றுக்கணக்கான விதவைகள் கண்ணீர் வடித்துக் கொண்டு இருக்கிறதையும் கண்கூடாகப் பார்க்கிறோம். ஐயோ! என்ன அறிவீனம்! விதவைக் கஷ்டத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஹிந்து சகோதரிகளே! நீங்கள் எத்திசையை நோக்கினும் அங்கே ஒரு சில ஊர்களில் பெண்கள் சுகிர்தமாய் வாழ்ந்துவருவதையும் மற்றும் சில ஊர்களில் முன்னேறிக்கொண்டு வருவதையும், சுருங்கக் கூறுமிடத்து வாலிபர்களையே தொழிலில்லாத்திண்டாட்டத்தை காடி ஆடும்படி விரட்டுவதையும்தான் காண்கிறீர்கள். நமது பாரததேவியின் மக்களில் ஒரு சிலரை பிறப்பால் தாழ்ந்தோரென புறம்பாக வைத்து இருக்கும் கொடுமை போதாதென்று புருஷரைப் பறி கொடுத்த உங்களுக்கு "விதவை" என்ற பெயரைக் கட்டி ஒரு வகைக்கும் ஆகாதவர்களென ஒதுக்கிவைத்துவிட்டார்கள். அந்தோ, பாவம்! பாவம்!! அயல் தேசங்களில் வசித்துவரும் சோதரிகளைப்போல் உங்களுக்கும் உங்கள் வாழ்க்கைத் துணைவர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமைகளை நல்காது போனாலும், உங்களை யீன்றெடுத்தவர்களால் கடிமணம் செய்யப் பெற்றீர்கள். உங்கள் வாழ்

க்கையில் முற்றிலும் துக்கமோ அல்லது கொஞ்சச் சுகமோ அநுபவித்தீர்கள்.

ஐயோ! எமன் உங்கள் கணவனைப் பிரித்தான். சுற்றத்தார் குமுறினார்கள். ஜனங்கள் பேரால் உங்களுக்கு 'விதவை' என்னும் கொடிய பட்டத்தைத் தரித்தார்கள்! உங்கள் வாழ்வுத் திரை வீழ்ந்தது! என்னே மதியீனம்! உறுதியாய் நீங்கள் உங்கள் பதியை மறக்கச் சித்தமாயிருக்கவில்லை. ஆயினும் எமன் குறுக்கிட்டான். அவன் செய்கைக்கு யாரைக் கோபிப்பது? உங்களையா? இல்லை!

சகோதரிகளே! உங்களின் முன்னேற்றத்திற்கு ஆண்களையே நம்பி இருப்பதில் பயனில்லை. நீங்கள் கல்வி கற்பதை மறந்தீர்கள். காதல் மணம் துறந்தீர்கள். தூக்குவார் கைப்பொம்மையானீர்கள். கணவனை இழந்த இளஞ் சகோதரிகளுக்கு மறுமணம் இன்றியமையாதது என்பதை உணருங்கள்! சோதரிகளே! மாதர் மணத்தி னிதழில் கூறி வரும் ஒவ்வொரு கட்டுரையையும் நீங்கள் கட்டாயம் படிக்கவேண்டும். அதோடு உங்கள் (விதவை) சிநேகிதிகளுக்கு வாசிக்கக் கொடுப்பதோடு—நம் வயோதிகர்களுக்கு இவ்விஷயத்தை எடுத்துச் சொல்லி சமூக ஒற்றுமை யென்றால் இதுதான் என்று விளக்கிக் காட்டுங்கள். பின்னர் உங்களுக்கு விருப்பமிருந்தால் மறுமணம் செய்துகொள்ள முன் வாருங்கள்! 'மாதர் மறுமண' ஆசிரியர் ஸ்ரீமதி மு. மரகதவல்லியம்மாள் முதலிய சீர்திருத்தக்காரர்கட்குத் தெரிவித்த அன்னவர்களை தங்கள் இல்லத்திற்கு அழைத்துவந்து ஆடம்பரச் செலவை விடுத்து (விதவா விவாகத்தை) மாதர் மறுமணத்தை நடத்தும்படி கேட்டால் உடனே வந்து நடத்தித்தரச் சித்தமாயிருக்கிறார்கள். வீட்டு மூலையில் குந்திக் கிடக்கும் விதவைச் சகோதரிகளே! மூலையைவிட்டெழுந்து முன் வாருங்கள்! உடன் வந்து மாதர் மறுமணத்தைப் பாருங்கள்! உலகை கண் விழித்து நோக்குங்கள்! உடனே உங்கள் ஹிருதயத்தில் மாதர் மணத்தின் அவசியம் புலனாகும்.

---

# பூத்த கொடி காய்க்கட்டும்.

குட்டிச்சாத்தன் A B C D E F etc.

நானிருக்கிற ஊரில் ஒரு செல்வமான குடும்பமிருக்கிறது. அந்த வீட்டிலுள்ள தலைவருக்கு வயது 65 இருக்கும். அந்தக் கிழவர் நல்ல மனிதன், தர்ம சிந்தையுமுடையவர்; பெரிய குடும்பம்; பிள்ளை குட்டி பேரன் பேத்தி நிறைய இருக்கின்றனர். அவருக்கு இவ்வளவு செல்வமிருந்தாலும், கொல்லையில் காய் கறி பயிர் செய்வதில் மிகுந்த விருப்பமுடையவரா யிருக்கிறார். சென்ற ஆடிப் பட்டத்தில் நான்கு புடலங் குழியைப் பயிர் செய்தார். உயர்ந்த விதைகள். வெகு ஊட்டமாகச் செடிகள் தோன்றின. நல்ல மண். நல்ல உரம். நல்ல கண்காணிப்பு. செடிகள் வளர்ந்தன. கொழு கொம்பு நடப்பட்டது. செடி கொடியாயிற்று. கொடி வளர்ந்தோடியது. பேஷான காவணம் போட்டார்கள். நான்கு காவணங்கள்; புடலங்கொடி நாலுபுறமும் பற்றிப்படர்ந்தது. புடலையின் மணம் வெகு குளுமையானது. மென்மையான இலை. அதிலும் இளந்தளிர் மிக மென்மையானது. தொட்ட கை ஒரு மணி நேரம் மணக்கும். ஆஹா என்ன இயற்கை! என்ன அழகு! என்ன மணம்! இயற்கையிலேயே மணமுள்ள இவ்வழகிய பசுங் கொடியானது பருவத்தில் பூக்க ஆரம்பித்தது. ஆகா பூத்த கொடி காய்க்கவில்லை. ஒரே சூராவளி. பெருங்காற்று சுழற்றி அடித்தது. ஒரே நிமிஷம்; கம்புகள் ஒடிந்தன. கட்டிய கயிறு அறுந்தது. கொடியிலுள்ள சில இலைகளும் சிதைந்தன. காவணம் முறிந்து விழுந்தது. சுழட்டியடித்த காற்று நின்றது. மூன்று காவணங்கள் பிழைத்தன. ஒன்றுதான் விழுந்தது. விழுந்த காவணத்தின் கம்புகளைப் பொறுக்கி நெருப்பெரித்துவிட்டனர். அந்தக் கொடி—அழகிய இளங்கொடி தரையிற் கிடக்கிறது. மண் படிகிறது. ஆனாலும் பூக்கிறது. வீண் பூப் பூக்கிறது. பிஞ்சும் தெரிகிறது. வளர்வதில்லை. வீட்டிலிருக்கிறாரே அந்தக் கிழவர் பிஞ்சு தெறிக்க விடுகிறாரில்லை. இந்தச் செடியில் காய் காய்க்கக் கூடாதென்று ஒருதலைக்கு நிற்கிறார்.

மற்ற கொடிகள் சீறிப்படர்கின்றன. பூக்கின்றன. காய்க்கின்

றன. பழுக்கின்றன. பல்குகின்றன. மூன்று கொடிக்கு வந்த வாழ்வென்ன? இதற்குமட்டும் வந்த தாழ்வென்ன? சூறாவளிக் காற்று அடிக்கடி சுழற்றியடித்தது. ஆனால் மற்ற காவணங்கள் விழவில்லை. ஆடியசைந்து தப்பித்துக்கொண்டன. ஆனால் இந்த ஒரு காவணம் மட்டும் விழுந்தது. இதற்கு அந்தச் செடியையே பாழாக் கிவிட்டனர். கிழவருடைய பேரனுக்கு இதுபிடிக்கவில்லை. தாத்தா விடம் சென்றான்; வெகு வணக்கமாக "ஒன்று இந்தக் கொடியைக் காய்க்க விடுங்கள்; இல்லையானால் வேரோடு பிடுங்கிக் கொன்று தொலைத்துவிடுங்கள். இது பெரிய அநியாயமாக இருக்கிறது. மூன்று செடி ஓடிவிளையாடிக் காய்ப்பதும், ஒன்று கட்டுப்பட்டுத் தரையிற் கிடந்து மண்ணைக் கவ்வுவதும் சரியல்ல" என்றான். கிழ வர் காதிலேயே இவை நுழையவில்லை

நல்ல மனிதர் நாலுபேரைக் கூட்டி வைத்தான் பையன். இந்த அநியாயத்தைச் சொன்னான். கிழவரை என்ன பதி லென்று கேட்டார்கள். தாத்தா சொல்கிறார்:—

'நீங்கள் எல்லோரும் சிறுபிள்ளைகள். மிகப் பெரிய சாஸ்திரியார் ஒருவர் இங்கே இருந்தார். அவர் சாஸ்திரக் கடலைக் கரைகண்டவர். படர்ந்த கொடி காவணத்தை யிழந்தால் மறு காவணம் போடக் கூடாது என்றுசொல்லியிருக்கிறார். அந்தச் செடியைக் காய்க்கவிடப் படாது என்றும் சொன்னார்' என்றார். "அதில் காய்க்கிற புடலங்காய் கசக்குமோ?" என்றான் பேரன். எல்லோரும் வந்து செடியைப்பார்த் தார்கள். ஆஹா எப்படிச் செடி! மூன்று செடிகள் வந்த பழத்தின் விதைதான் அந்தக் கீழே கிடக்கிற செடியும்! அல்லவா? அதே மண்ணில் அதே குழியில்தான் இதுவும் முளைத்தது. ஆனால், துணைக்காகப் போட்ட காவணம் போயிற்று. இன்னுமொரு காவ ணம் போட்டால் பேஷான காய் காய்க்கும். ஏன் அப்படிச் செய் யக் கூடாது? பேஷாகச் செய்யலாமென்றனர். இம்மாதிரி சந்தர்ப் பத்தில் யாருக்குத்தான் இந்த அபிப்பிராயம் வராது. ஊர் முழுமை யும் கூட்டிவந்து பையன் காட்டினான். நன்றாகச் செய்யலாமென்றே எல்லோரும் சொன்னார்கள். பையன் காவணத்துக்குக் கம்பு கயிறு பார்த்துத் திரிகிறான். கிழவர் முனங்குகிறார்.

வாசகர்களே! என்ன சேதி? உங்களூரில் யார் வீட்டிலா

வது இப்படிக் காவணம் போன புடலங் கொடிகள் மண்ணில் கண்ணீரில் கிடக்கிறதா? காவணம் போட வழிபாருங்கள். புடலங் காய் சவுத்துப் போகும். விலை மலியும்.

இந்தப் புடலங்கொடி மாதிரி இரண்டரைக் கோடி பெண் கொடி காவணமில்லாமல் மண்ணிற் கிடப்பதாக 1931ம் வருஷத்து அரசாங்கக் கணக்கு சொல்கிறது. இந்தப் பூத்த கொடிகளைக் காய்க்க விடுங்கள். உங்கட்குப் புண்ணியம்!

---

## சமத்துவம் வேண்டும்.

அகமதாபாத்தில் கூடிய அகில இந்திய பெண்கள் மகாநாட்டில் தலைமைப் பிரசங்கத்தை மிஸஸ் மார்காரட் கஸ்ஸின்ஸ் செய்திருக்கிறார். அதன் சாரம் வருமாறு:—

பெண் கல்வி

"சென்ற 20 வருஷங்களிலும் இந்தியப் பெண்கள் கல்வி பயின்றவர்கள் 100-க்கு 2 அல்லது 3-க்கு மேலான புள்ளி விகிதம் கிடைக்கவில்லை. இந்திய வருமானத்தில் தற்காலத்தில் அரசாங்கம் 100-க்கு 8 விகிதமே கல்விக்குச் செலவழிக்கின்றது. 35 கோடி ஜனங்களுக்கு 8 கோடி ரூபாய் ஆரம்பக் கல்விக்கு இந்தியாவில் செலவழிக்கப்படுகிறது. இங்கிலாந்தில் 4 கோடி ஜனங்களுக்கு 86 கோடி ரூபாய் கல்விக்காக செலவழிக்கப்படுகிறது. இந்த சிறு தொகை இந்தியாவில் செலவழிக்கப்பட்டு வருவதிலும் இந்தியப் பெண்கள் கொஞ்சங்கூட சிரத்தை எடுத்துக்கொள்ளவில்லை. 20 வருஷத்தில் ரஷ்யாவில் யாவரும் படித்தவர்களாக யிருப்பார்கள் என்று ரஷ்யா முறை தெரிவிக்கின்றது."

தேர்தல் போட்டி

"தேர்தல் விஷயங்களில் வயதுவந்தவர்களுக்கு ஓட்டுரிமை கொடுக்கவேண்டுவது அவசியமாகும். காங்கிரஸ் தலைவர் அதிகமாக பெண்களை பொது ஸ்தானங்களுக்கு நிறுத்திவைக்கவேண்டும் என்றுகூறியிருந்தும் பெண்களை ஒன்று இரண்டு ஸ்தானங்களுக்கே நிற்கவைப்பது வருந்தத்தக்கதாகும். ஜாதி வித்தியாசத்தை அறவே

ஒழிக்கவல்ல அபேட்சகருக்கு ஓட்டு கொடுப்பதுதான் ஒழுங்கான தாகும்."

### எதிர்கால வேலைகள்

"எல்லா வேலைகளிலும் பெண்கள் அதிகமாக ஈடுபடவேண்டும். கிராமத்தொழில், தொழிற்சாலை, விவசாயம், பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி, ஹரிஜன சேவை முதலிய பல பொது வேலைகளில் திறமையாக பெண்கள் உழைக்க முன்வரவேண்டும். இங்குள்ள சமூக சீர்திருத்தம் முன்னேற்றமடைந்து விளைபொருள்களை அதிகமாக்கி ஒவ்வொருவரும் தினம் அளவில் க்ஷேமமாக வசிக்கும்படி செய்ய பெண்கள் உழைக்க முன் வந்தால்தான் முடியும். அபபொழுது கிடைக்கும் லாபங்களை யாவரும் சமமாகப்பங்கிட்டுக்கொள்ளலாம்"

### பெண்கள் உரிமை

"பெண்கள் கல்யாணத்தின் மூலமும் அதன் பின்னரும் பொருளாதார சுயேச்சை பெண்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டியது அவசியம்" என்று போன வருஷம் நமது தலைவர் திருவாங்கூர் மகாராணி கூறியதை உங்களுக்கு நான் ஞாபகமூட்டுகிறேன். கல்யாணம் செய்துகொண்ட ஒவ்வொரு பெண்ணும் குடும்பத்தைப் பாதுகாப்பதில் சம உரிமை உடையவளாக யிருத்தல் வேண்டும். புருஷன் இறந்துவிட்டால் அவர் சொத்தில் சரியாக ஓர்பாகம் பெண்களுக்குக் கொடுக்கும்படி செய்யவேண்டும். புருஷனுக்கு ஓர்வித சொத்தில்லாமல் இறந்துபோயிருந்தால் சமஸ்தானம் ஒரு பென்ஷனை விதவையான பெண்ணுக்கு கொடுத்தும் அவளது ஒவ்வொரு குழந்தைக்கும் 16 வயது அடையும் வரை ஜீவனச் செலவும் கொடுத்துவர ஏற்பாடு செய்யவேண்டும். இவ்வாறு செய்தால் தான் பெண்கள் வீடுகளில் செய்த வேலைக்குப் பொருளாதார மதிப்பைக்கொடுப்பதாகும். இதைக் கொடுக்காமல் விதவைகளுக்கு சொத்துரிமை முதலியவைகளைக் கொடுப்பது பலன் தராது. ஏனெனில் பொருளாதார உரிமையில்லாமல் ஒருவரிடமிருந்து பெருமானவைகள் எல்லாம் ஒருவர் தயவை எதிர்பார்த்து நடப்பதாகும். ஆகவே பொருளாதார நிலையில் பெண்களும் சமத்துவம் அடைய எல்லோரும் பாடுபடவேண்டும். ஆண்களுக்கும் பெண்களுக்கும் எவ்விதத்திலும் ஏற்றத்தாழ்வுகள் இருக்கக்கூடாது."!

# பத்திராதிபர் குறிப்புகள்.

## மானிடப் பெண் பறவை.

ஸ்ரீமதி மார்யிஸ் பேஸ்டி என்னும் பிரான்சு தேசத்துப் பெண் டாக்ரா எனுமிடத்திலிருந்து காலே 4-35 க்குப் புறப்பட்டு மாலே 4-30 க்கு தென்னுபிரிக்காவிலுள்ள நேட்டால்வந்து சேர்ந்தாராம். தென் அட்லாண்டிக் சமுத்திரத்தை வெகு வேகமாக 70 நிமிஷத்தில் தாண்டினர். ஒரு மணி நேரத்திற்கு 168 மைல் வேகத்தில் விமானம் சென்றிருக்கிறது. "எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண் இளேப்பில்லே காணென்று கும்மியடி" என்று பாரதியார் பாடுகிருர். இந்த பிரெஞ்சுப் பெண் ஆகாசத்தில்—நீண்ட வானத்தில் பறந்து திரியும் சுதந்திரத்தைப் பெற்றிருப்பது எவ்வளவு மகிழ்ச்சிக்குரியதாகும்.

## விசை எங்கேயிருக்கிறது?

ஸ்ரீமதி பீகம்ஷா நவாஸ் லாகூர் ரோடரிக் கிளப்பில் ஒரு உபந்யாசம் செய்யும்போது பின்வருமாறு குறிப்பிட்டார்:—

'இந்தியாவின் முன்னேற்றத்திற்கான விசை அதன் ஸ்திரீகளின் கையில்தான் இருக்கிறதென்று ஸைமன் கமிஷன் ரிபோர்ட் கூறுகிறது. ஆனல் நான் இன்னும் ஒரு படி மேல் போவேன். உலக முன்னேற்றத்திற்கும் சமாதானத்திற்குமான விசையே ஸ்திரீகள் கையில்தானிருக்கிற தென்று நான் சொல்வேன்'

மணியோசை மாதிரி இந்த அம்மையார் பேசியிருக்கின்றனர். உண்மை இதுதானே! விசையைக் கையில் வைத்திருக்கிற மானுமிகள் முட்டாள்களாக்கப்பட்ட தேசக் கப்பல் சுகமாகச் செலுத்தப்படுமா?

## என்ன கொடுமை!

பெல்கிரேட்டிலிருந்து ஒரு கொடிய சம்பவச் செய்தி வெளியாகியிருக்கிறது. அச் செய்தி வருமாறு:—

ஷாண்டர்விர்க் என்பவன் தனது மனேவியின் மூக்கை அறுத்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டு, ஆறு மாதச் சிறைவாச தண்டனே

விதிக்கப்பட்டான். அம்மங்கை ஒரு பேரழகி. அவளது தோற்றம் மற்ற ஆடவர்களை வசீகரிப்பது கண்டு அவளது கணவன் பொறாமை கொண்டு மிக்க வேதனையுற்றான். கணவன் வேதனையைக் காண மனைவிக்குச் சகிக்கவில்லை. தனது மூக்கை அறுத்துத் தன் அழகைக் குலைத்துவிடுமாறு கணவனைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். அவன் அங்ஙனமே செய்தான். கோர்ட்டில் அம்மங்கை தனது வேண்டுகோளின் பேரிலேயே தனது மூக்கை அவன் அறுத்ததாகச் சொல்லியும் கோர்ட்டார் எதிரிக்கு மேற்குறிப்பிட்டவாறு தண்டனை விதித்தார். இப்படிப்பட்ட சம்பவங்கள் பல எங்கும் நடைபெறுகின்றன. ஆனால் கோர்ட்டேறி வெளிப்படும் சந்தர்ப்பம் 100-க்கு ஒன்றிரண்டேயாகும். இதிலிருந்து புருஷனின் கொடுமைக்குரிய உரிமையும், பெண்களின் சகிப்புக்குரிய அடிமைத் தன்மையும் எளிதிற் புலனாகும். எத்தனை அட்டூழியம் செய்யும் புருஷனுக்கும் பரிசுத்தமான தன் மனைவியைச் சந்தேகித்துத் தண்டிக்கும் உரிமை நாட்டிலிருக்கிறது. இந்நிலையில் நல்வாழ்வுக்குப் பஞ்சமேற்படாமல் என்ன செய்யும்?

## பெண்கட்கு சமவுரிமை!

கோட்டப்பத்தாறு சமூக மகாநாடுநடைபெற்றபோது தலைமை வகித்த திரு. ஜீ. சுப்பையாத் தேவர் பின்வருமாறு தமது உரையில் குறிப்பிட்டிருக்கிறார்:—

நம் பெண் வர்க்கத்திற்கு—நமது எதிர்காலத் தாய் வர்க்கத்திற்குச் சம உரிமையை அளித்தல் அத்யாவசியமானதே. அத்துடன் பால்ய விவாகத்தைத் தடை செய்வதுடன், விதவா விவாகத்தை ஆதரிக்க வேண்டும். இப்பணியில் இன்னல்களேற்படின் சாந்தத்தைக் கைவிடாது அன்பால் வெற்றிபெற முயலவேண்டும். நம் குல முன்னேற்றத்திற்குப் பெண் கல்வியே அடிப்படை. பெண் கல்வியே தூண். பெண் கல்வியே அணி. நம் ஜாதியாருக்கு ஏற்பட்ட குறைகளை நீக்க நம் சமூகத்தை முன்னுக்குக் கொண்டுவர வேண்டியது நமது முக்கிய கடமையாகும். இதற்குப் பொருள் வேண்டியது அத்யாவசியமாகும். அது எங்கே இருக்கிறது என்று கூறிக் கையை விரிக்காதீர்கள். உங்கள் குலத்தில் பிரபுக்கள், ஜமீன்தாரர்கள் இல்லையா? அவர்களெல்லோரும் நிரம்ப பொருளுதவ

முன் வரவேண்டும். "முயற்சியுடையோர் இகழ்ச்சியடையார்" என்பது முதுமொழியன்றோ!

சமூக சீர்திருத்தமானது எங்கே கூட்டங் கூடினாலும் அங்கெல்லாம் பிரஸ்தாபிக்க வேண்டியதாகஇருக்கிறது. ஏனென்றால் சமூக வாழ்வில் அவ்வளவு சிக்கலும் அறியாமைப் பழக்கங்களும் மலிந்துவிட்டன. மகாநாடுகளில் தலைமை வகிப்போர் வைதீகர்களுக்குப் பயந்து மழுப்ப நினைக்கக்கூடாது. இம்மகாநாட்டுத் தலைவர் பெண்கள் துயரமறிந்து பேசியிருப்பது குறிப்பிடத்தக்கது.

## ஐந்து லட்சம் வீர மாதர்.

ரஷ்யாவின் தலைநகரான மாஸ்கோவில் ரஷ்ய ராணுவ அதிகாரிகளின் மனைவிமார்கள் ஒரு மகாநாடு கூடினர். சென்ற ஐந்து வருஷ காலத்தில் ரஷ்யா தேசத்தில் ஐந்து லட்சம் பெண்களுக்கு மேல் ராணுவப் பயிற்சி பெற்றிருப்பதாக அறிவிக்கப்பட்டது. அங்கே ராணுவ இலாகா மந்திரி பின்வருமாறு கூறியிருக்கிறார்:—

சமாதானம் வேண்டுமென்பதே நமது நீடித்த கொள்கை. (கரகோஷம்) ஆனால் நம் சுதந்திரத்தைக் காக்க நாம் போராடத் தயார். யுத்தமேற்பட்டால், சத்ருக்கள், நமது வீரம் செறிந்த இராணுவப் படைகளின் எதிர்ப்பை மட்டுமின்றி அவர்களது தாய்மார், மனைவிமார், சகோதரிகள் இவர்களுடனும் போராட வேண்டியிருக்கும்."

கீழ்ப் பிரதேசத்திலிருந்து வந்திருந்த ஓர் பெண் பிரதிநிதி எழுந்து, "ஜப்பானியர் எச்சமயத்தில் படை எடுத்தாலும் சரி ஆயிரக்கணக்கான பெண்கள் ஆயுதபாணிகளாக எதிர்க்கத் தயாராக இருக்கிறோம்" என்றாள்.

ஓர் பெண் விமானி எழுந்து "எங்கள் புருஷன்மார்களின் பக்கத்தில் நின்று, சத்ருக்களை அவர்கள் பிரதேசத்திலேயே முறியடிப்போம்" என்றார்.

பெண்கள் அடுப்பூதத்தான் ஆவார்களென்று கருதும் மனிதர்கள் இச்செய்தியைக் கூர்ந்து படிக்கவேண்டும். நமது தேசத்தில் பண்டைத் தமிழ் மறக்குல மாதர்களும் ரஜபுத்ரப் பெண்மணிகளும் வீரத்திற்கு ஒரு நிலைக்களமாக இருந்திருக்கின்றனர். ஆனால் அடிமைக் குழியில் ஆழ்த்தப்பட்டதன் பயனாகத் தமிழகப்பெண்கள்

இன்று ஒளி மங்கிப் போயிருக்கின்றனவென்பது எவ்வளவு வருத்தத்தை யளிக்கின்றது! ரஷ்யப் பெண்கள் வாழ்க!

## பெண்கட்கு ஸ்தானங்கள்.

நமது நாட்டில் நடைபெறும் தேர்தல்களைக் கவனிக்கும்போது பெண் மக்கட்கு உரிமை கட்டுப்படுத்தப்பட்ட நிலைமையிலிருப்பதை யாவரும் அறிவர். சட்டசபைகள் ஸ்தல ஸ்தாபனங்கள் முதலியவைகளின் அங்கத்தினர் பதவிகள் ஆண்பாலாருக்கேயிருந்துவந்தன. சமீபமான சில நாளாக பெண்கட்கு என்று மிகச்சில ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டன. தேர்தல் முடியும்போது பார்த்தால் பெரும்பாலும் ஒதுக்கிவைக்கப்பட்ட ஸ்தானங்களில் தான் பெண்கள் வரமுடிகின்றது. மற்ற பொது ஸ்தானங்கள் ஆண்கட்கும் பெண்கட்கும் பொதுவாக இருந்தாலும் முழுதும் ஆண்களாலேயே கைப்பற்றப்படுகின்றன. இதைக் கவனிக்கும்போது ஆண்கள் இணங்காதபோதுதான் பெண்மக்கட்கு ஒன்றிரண்டு ஸ்தானங்களை விடுவார்களென்றும் அந்தஸ்தானங்களை ஒதுக்கும் பெருமையும் பொது ஜனங்கட்கு இல்லையென்று நாம் கருத இடமேற்படுகிறதன்றோ? இந்நிலைமையைப்பற்றி அகில இந்திய காங்கிரஸ் மகா சபைத் தலைவர் ஜவஹர்லால் பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

ஸ்திரீகளுக்கு அளிக்கப்பட்டிருக்கும் பக்ஷபாதமான பிரதிநிதித்வத்தையும் அவர்கள் ஆட்சேபித்துள்ளனர். இதை தேசம் மிகப் பாராட்ட வேண்டியதாகும். இதனால் அவர்களுக்குப் பிரதிகூலங்கள் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். ஆதலால் அவர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் ஒதுக்கப்பட்ட ஸ்தானங்களைத் தவிர, பொது ஸ்தானங்களுக்கும் அவர்களைக் கூடிய அளவு நிறுத்தி வைக்கவேண்டும். இம்மாதிரி செய்வதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்யப்படுமெனத் திடமாய் நம்புகிறேன்.

## மிஸஸ் ஜெயராமன்.

இப் பெயர்கொண்ட சமூக சீர்திருத்த நாவல் நமது பார்வைக்குக் கிடைத்தது. இதன் ஆசிரியர் தோழர் ராம. ராமநாதன் அவர்களாவர். ஜமன் ஷண்முகாநந்த சங்கத்தார் வெளியிட்டுள்ள

னர். கதையின் அமைப்பு தமாஷாக இருக்கிறது. காதல் மணம் களவு மணத்திற்குத் தற்காலத்திலேற்பட்டுள்ள கஷ்டங்களையும் தடைகளையும் விளக்கி நிற்பதுடன் சாதுர்யமாகவும் துணிவுடனும் அவைகளைச் சமாளித்துக் காரிய வெற்றியடையும் வழியைத் திறமையாக ஆசிரியர் காட்டியிருக்கிறார். நகரத்தார் சமூகத்தைக் குறிக்கொண்டு இக்கதைநிகழ்ச்சியிருக்கிறது. என்றாலும் தமிழ மக்கள் யாவருக்கும் பொருந்தும். எழுச்சியுள்ள தமிழ் நடை. ஆண் பெண் இருபாலாரும் படிக்கவேண்டிய புத்தகம் இது. விலை அணா 5. தபாற்கூலி வேறு. கிடைக்குமிடம்:—Secretary, Shanmugananda Sangam, Eime. Burma.

---

# :: நிகழ்ச்சிகள் ::

## சிறு பெண்ணுக்கு ஏன் கலியாணம்?

9 வயது முஸ்லீம் பெண்ணை 12 வயதுப் பையனொருவனுக்கு மணம் செய்துகொடுத்ததாகக் குற்றஞ்சாட்டி 6 பேருக்கு தலா ஒருவார சிறை வாசத் தண்டனை விதிக்கப்பட்டது. சிசு விவாகத் தடை சட்டத்தின் கீழ் மேற்படி தண்டனை விதிக்கப்பட்டது. இதேமாதிரி குற்றஞ்சாட்டப்பட்ட ஒரு வயதான ஸ்திரீக்கு 20 ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது.

## விதவா விவாகம்

தசாணி கிராமத் தாசில்தாரான பண்டித ராம்ரகாமாவின் புத்திரியாகிய விதவைச் சாவித்திரிக்கும், பண்டித ஜெகத்ராம் என்பவருக்கும் ஹாஜிப்பூரைச் சேர்ந்த சுஹா என்ற ஊரில் சநாதன முறையில் விவாகம் சிறப்பாக நடைபெற்றது. பல பிரபலஸ்தர்களும், உத்தியோகஸ்தர்களும் விஜயம் செய்திருந்தார்கள். சாவித்திரிக்கு வயது 16தான் என்று அறிவிக்கப்படுகிறது.

## உருக்கமான பேச்சு

வடக்கு ராமனதபும் ஜில்லா போர்டு அங்கத்தினராக சென்னை சர்க்காரால் நியமனம் செய்யப்பட்டிருக்கும் ஸ்ரீமதி குப. சிவ. அழகம்மை ஆச்சி அவர்களுக்குநடைபெற்ற பாராட்டுக்கூட்டத்தில்தலைமைவகித்த முத்துப்பழனியப்ப செட்டியார் அவர்கள் J. P.பேசியதின் ஒருபகுதி வருமாறு:-

இந்த சந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். எனக்கு வயது 65. இரண்டாந்தார மனைவிக்கு வயது 27. அழகான கட்டிலிலே தினம் விளையாடுகிறோம். பிள்ளை பிறந்துகொண்டே இருக்கிறது. என் மகளுக்கு வயது 18. நல்ல பருவ காலம். விதவையாக இருந்து வாடுகிறாள். எங்களுடைய இன்ப வாழ்வைத் தினம் பார்த்துக்கொண்டே இருக்கிறாள். இரண்டும் ஒரே

வீட்டில் நடக்கிறது. இந்த நிலைமையை யோசித்துப் பாருங்கள். வீடு தோறும் இப்படித்தான் இருக்கிறது. இந்த அநியாயத்தை நீங்கள் எப்படி பொறுத்துக் கொண்டிருக்கிறீர்கள். உண்மையாக நான் சொல்லுகிறேன். உங்கள் குலத்தை நீங்கள் காப்பாற்ற விரும்பினால் இந்த வெள்ளைச்சீலையை இப்பொழுதே மாற்றுங்கள். இல்லையானால் 1, 1¼ டாக்டரிடம் கொடுத்து ஒரு ஊசியைப் போட்டாவது கொன்றுவிடலாம். வேறு நான் உங்களுக்கு அதிகமாகச் சொல்வதற்கில்லை.

## குவாலியர் சமஸ்தானம் பெண்கள் மகாநாடு

குவாலியர் சமஸ்தானம் பெண்கள் 6-வது மகாநாடு அக்டோபர் 11, 12 தேதிகளில் உஜ்ஜெயினியில் நடந்தது. அந்த மகாநாட்டில் விதவா விவாக சம்பந்தமாக கீழ்க்கண்ட தீர்மானம் ஏகமனதாய் நிறைவேற்றப் பட்டது:—

"குவாலியர் தர்பார் சமூக சீர்திருத்த சம்பந்தமான சட்டங்கள்—உதாரணமாக, விதவா விவாகச் சட்டம், இளமை மணத் தடைச் சட்டம் முதலியவைகளை நிறைவேற்றியிருப்பதை இந்த மகாநாடானது இதயபூர்வமாக ஆதரிப்பதுடன் இன்னும் இதைப்போன்ற பல சீர்திருத்த சட்டங்கள் நிறைவேற்றவேண்டுமென கேட்டுக்கொள்ளுகிறது"

## மூல்டான் ஜில்லாவில் விதவை மணம்.

விதவா விவாக சகாய சங்கத்தின் ஆதரவில் நவம்பர்-மீ 6உ காலஞ்சென்ற முபராபாத் பண்டோபன் தாசின் மனைவியும், பண்டிதசலாபத் ராயின் புத்திரியுமான ஸ்ரீமதி மோகன் தேவிக்கும், முசாபராபாத் ஊரைச் சேர்ந்த பண்டித கோதிலால் என்பவருக்கும், விவாகம் சிறப்பாக நடந்தேறியது. நகர முக்கியஸ்தர்களில் பலர் விஜயம் செய்திருந்தார்கள். ஸ்ரீமான் வாசுதேவ் தம்பதிகளை வாழ்த்தினர். மணமக்கள் புஷ்கர பிராமண வகுப்பைச் சேர்ந்தவர்கள்.

## மாதம் இரண்டில் நடந்த மறுமணங்கள்.

1936 அக்டோபரிலும் நவம்பரிலும் லாகூர் விதவா விவாக சகாய சபையின் ஆதரவில் நடைபெற்றுள்ள விதவா விவாகத்தின் கணக்கு வருமாறு:—

| மாகாணவாரியாக:— | அக்டோ | நவம்பர் |
|---|---|---|
| பஞ்சாப் | 67 | 67 |
| ஐக்கியமாகாணம் | 89 | 74 |
| மத்தியமாகாணம் | 17 | 81 |
| பம்பாய் | 9 | 8 |
| வங்காளம் | 69 | 35 |
| பிகார் ஒரிசா | 17 | 13 |
| மத்திய இந்தியா | | 2 |
| | 268 | 280 |

## காஷ்மீரில் விதவா விவாகச் சட்டம்

ஸ்ரீநகர் சமஸ்தானத்திலுள்ள சீர்திருத்தவாதிகள் விதவா விவாகச் சட்டமும், விவாக ரத்துச் சட்டமும் ஏற்படுத்த வேண்டுமென்று கிளர்ச்சி செய்ய ஆரம்பித்திருக்கிறார்களென்று ஒரு செய்தி கூறுகிறது.

## கடியாபட்டியில் மாதர் மறுமணப் பிரசாரம்

தாது மார்கழி-மீ 10உ யன்று மாலை 5 மணிக்கு கடியாபட்டி நரிப்பிச்சன் குண்டு அம்மன் கோவிலில் காரைக்குடி மாதர் மறுமண சகாய

சங்கத்தின் சார்பில் ஒரு பொதுக்கூடடம் நடைபெற்றது. திரிவாளர் சு. பழனியப்பா அவர்கள் தலைமை வகித்தார்கள். ஸ்ரீமதி ப. சௌந்திரம், வி. பரமசிவன், குமரன் ஆசிரியர் சொ. முருகப்பா அவர்கள் ஆகியோர் விதவைகளின் துயரம் குறித்தும் அதை நீக்க வேண்டுவதின் அவசியம் குறித்தும்நீண்டசொற்பொழிவுகளாற்றினர்.

பின்னர் திரு. அ. அள. ராம. அவர்கள் இல்லத்தில் திரு. சொ. முருகப்பா அவர்களால் மாஜிக்லாண்டர்ன் படக்காட்சி காட்டப்பெற்றது. திரளான மக்கள் கூடியிருந்தனர்.

## நச்சாந்துபட்டியில்

தாது மார்கழி 17உ யன்று மாலை 5-30 மணிக்கு நகரப் பள்ளிக்கூடத்தில் கூட்டம் ஆரம்பமாகியது.குமரன்-ஆசிரியர் திரு. சொ. முருகப்பா, திரு சு. பழனியப்பா, குமரன் உதவி ஆசிரியர் வி. பரமசிவன் ஆகியோர் விதவா விவாகத்தின் அவசியம் குறித்து உபந்யாசம் புரிந்தார்கள். இரவு 8 மணிக்கு மேல் மாஜிக்லாண்டன் படக்காட்சி காட்டப்பட்டது. 800பேர்களுக்குமேல் கூடியிருந்தனர்.

## விரையாச்சிலேயில்

மார்கழி 18உயன்று அரயத்தூரணி நகர மடத்தில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. வி. பரமசிவன், கடியாபட்டி சு, பழனியப்பா, குமரன் ஆசிரியர் திரு. சொ. முருகப்பா அவர்கள் ஆகியோர் விதவா விவாகத்தின் அவசியம் குறித்து உபந்யாசங்கள் செய்தார்கள். இரவு 7மணிக்கு படங் காட்டப்பட்டது. சுமார் 1000 ஜனங்கள் வந்திருந்தனர்.

---

# வரன் தேவை.

1. வயது பதின்மூன்றரை. குழந்தை விதவை. வேளாள ஜாதி. 6-வது வரை தமிழ் படித்திருக்கிறது. ஹிந்தியும் மலையாளமும் பேசத் தெரியும். கண்ணியமான மணமகன் தேவை.

2. விஸ்வகர்ம வகுப்பு. ஐந்து வயதில் விவாஹமாகி மனுஷியான மறு வருஷமே விதவையான பெண். வயது 16. ஆருவது பாரம் வரை படித்திருக்கிறது.

3. ஜாதி ஹிந்து கன்னிப்பெண். நல்ல லக்ஷணம். நல்ல படிப்பு. வயது 15. அழகும் செல்வமும் உள்ள ஜாதி ஹிந்துவரன் தேவை.

4. மாத்வ பிராமணவகுப்பு. வயது 23. வரன் தேவை. பிராமண வகுப்பானுலும் சரி வேறு உயர் ஜாதி ஹிந்துவானுலும் பாதகமில்லை.

5. வேளாள வகுப்பு. நாகரிகமான பெண். கலப்புமணம் செய்யவேண்டுமென்பதே நோக்கம். வயது 16. தமிழில் நல்ல படிப்பு. ஆங்கிலமும் சிறிது தெரியும். தையல், பின்னல் சித்திர மெழுதுதலிலும் பயிற்சியுண்டு. சங்கீதப் பயிற்சி போதிய அளவு பயிற்றப்பட்டிருக்கிறது. நல்ல செல்வமும் நாகரிகமுமான முதல்தர மணமகன் தேவை.

# பெண் தேவை.

1. நாட்டுக்கோட்டைச்செட்டியார். வயது 30. மனைவியில்லை 30 ஆயிரம் ரூபாய் சொத்துள்ளவர். விதவைப்பெண் தேவை. சொற்ப படிப்பிருந்தாலும் போதும். வயது 24-க்குள் இருக்க வேண்டும்.

2. நாட்டுக்கோட்டைச் செட்டியார். வயது 21. தமிழும் ஆங்கிலமும் படித்தவர். போதிய பொருள் வசதியுள்ளவர். விதவைப் பெண் தேவை. பெண் எழுதப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டும். இருபது வயதுக்குள் இருத்தல் அவசியம்.

3. நாட்டுக்கோட்டைச் செட்டியார். வயது 23. நல்ல அழகு உள்ளவர். சுமார் 25,000 பொருள் உண்டு. பெண் எழுதப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டும். 22-வயதுக்குட்பட்ட விதவைப் பெண் தேவை.

4. நாட்டுக்கோட்டைச் செட்டியார். வயது 28. சுமார் 70,000 ஆஸ்தியுள்ளவர். மாற்றார் அல்லாத மற்றைய கோயிலில் செட்டியார் விதவைப் பெண் தேவை. பெண் அழகாகவும், சிறிது படிப்புடனும் இருக்க வேண்டும்.

5. கவுரவ நாயுடு வகுப்பு. வயது 32. தாரமிழந்தவர். கவர்ன்மெண்டு உத்தியோகத்தில் மாதம் 90 ரூபா சம்பளத்திலுள்ளவர். கவுரவ நாயுடு வகுப்பிலாவது வேறு வகுப்பிலாவது விதவைப் பெண் தேவை. பெண்ணுக்கு வயது 23-க்கு மேல் போகக் கூடாது. சிறிது படிப்பிருந்தாலும் போதும்.

6. ஆரிய வைசியர். வகுப்பு வயது 23. பத்திரிகைகட்கு விஷயதானம் செய்பவர். போதிய வரும்படியுள்ளவர். விதவைப் பெண் தேவை.

7. உயர் ஜாதி ஹிந்து. வயது 29. எலிமெண்டரி ஹயர் கிரேடு பாஸ்செய்து உபாத்தியாயராக இருக்கிறார். மாத வரும்படி 30 ரூபாய். சிறிது நிலம் உண்டு. முதல்தாரமில்லை. விதவைப் பெண் தேவை.

8. யாதவகுலம். மனைவி யிழந்தவர். வயது 35. மாத சம்பளம் 30 ரூபாய். நிலங்களும் வீடும் உண்டு. விதவைப் பெண் தேவை.

இது சம்பந்தமான நடவடிக்கைகள் ரகசியமாக வைக்கப்படும்.

சோ. முருகப்பா,

காரியதரிசி, மாதர் மறுமண சகாய சங்கம், காரைக்குடி.

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| மலர் 1 | காரைக்குடி<br>தாது-ஹு மாசி-மீ | இதழ் 7 |
|---|---|---|

## கைம்பெண் துயரம்.

(திருவாளர் வி. சுடலைமுத்துப் பிள்ளை.)

(16) வெளியிறங்க லாகாதாம் வீதிவர லாகாதாம்
வழியெதிர லாகாதாம் வாய்திறக்க லாகாதாம்
புளிய மரத்தடிவாழ் பொல்லா இசக்கியோ நான்
ஒழிய நிறுத்துவதேன்—என்கண்ணம்மா!
உண்மை யறியேண்டீ!

(17) ஏனோ எனையிந்த இடருக்குள் ஆக்கிவிட்டார்?
ஊனார் எனதுடலை ஒருவர்கை தொட்டதுண்டோ?
யானே ஒருவர்பா லிச்சையதும் வைத்ததுண்டோ?
ஈனவழக்கமதால்—என்கண்ணம்மா!
இக்கோலம் ஆனேண்டீ!

(18) தேருந் திருநாளுஞ் சிறப்புற்ற காட்சிகளும்
பாரில் எனைப்போல்வார் பார்ப்பதுவும் பாதகமாம்
பாரில் எனைப்போல்வார் பார்த்துவிடில் அப்பொழுதே
பார இடிவீழ்ந்து—என்கண்ணம்மா!
பல்லுயிர்கள் மாண்டிடுமோ!

(19) பட்டுப் புடவைகளும் பாவாடை சாரியும்வெல்
வெட்டு ரவிக்கைகளும் விரும்பி எனைப்போல்வார்
கட்டித் திரிவாரேல் காண்பவர்கள் கண்களெலாம்

பொட்டித் தெறித்திடுமோ—என்கண்ணம்மா!
புவிமூழ்கிப் போய்விடுமோ?

(20) கண்ட சரங்கோவை காஞ்சி மணிவளையும்
தண்டை சதங்கைகளும் சன்னத் தலைப்பணியும்
கொண்டைத் திருகுகளும் கொள்ளளமைக் கண்டவர்கள்
மண்டை வெடித்திடுமோ—என் கண்ணம்மா!
வானிடிந்து வீழ்ந்திடுமோ?

(21) 'ஆராரோ' என்றம்மை ஆட்டிவிட்ட தொட்டில்மொழி
நேராம் மொழியானல் நீணிலத்தே மாண்டவர்க்காய்
சோராப் பழிமுடித்துத் தொல்லைபெற எம்முடனே
போராட்டங் கொள்வாரோ—என்கண்ணம்மா!
புவியாள வல்லவரே!

(22) மல்லிகை பிச்சியொடு மருக்கொழுந்து ரோஜாவும்
முல்லை ஜெவந்தியும்யாம் முடித்தினியும் வாழ்வதுண்டோ!
எல்லொழிந்த வானகம்போல் இன்பொழிந்த மங்கையரால்
அல்லல்பெறும் இந்தியத்தாய்—என்கண்ணம்மா!
அரசுவந்தும் நிற்பாளோ?

(23) வீடுகள் தோறும் விதவையர்கண் ணீர்வடித்து
நீடு பெறஇருந்து நெட்டுயிர்ப்பு விட்டனரே!
நீடு பெறஇருந்து நெட்டுயிர்ப்பு விட்டனரேல்
கேடு பெறநாடும்—என் கண்ணம்மா!
கீழ்மையுற்றுத் தாழாதோ!

(24) மந்திர சூனியங்கள் வைத்தவகை வேறுமுண்டோ?
நைந்தே இளம்பெண்கள் நலிந்துவிட்ட கண்ணீரால்
இந்தியத் தாயும் இரங்கி வருந்தாளோ!
வெந்து புழுங்காளோ!—என் கண்ணம்மா!
விதிநினைந்தும் நோகாளோ!

(25) அணைந்த திருவிளக்கை அன்பாய் மறுபடியும்
பணிந்தே ஒளியேற்றிப் பயன்பெறுவ தில்லையோடீ!

பணிந்தே ஒளிபெற்றிப் பயன்பெறுவ துண்டானால்
துணிந்து தெரிவையரை—என் கண்ணம்மா!
துன்புறுத்தல் நன்றாமோ?

(26) தீண்டாமைக் காயிரங்கித் தேசத் திருத்தொண்டை
பூண்ட கடனாகப் போற்றாரோ புண்ணியரே!
பூண்ட கடனாகப் போற்றுமந்தப் புண்ணியர்கள்
ஆண்டமனை தோறுமிந்த—என்கண்ணம்மா!
அமங்கலங்கண் டேங்காரோ!

(27) பால மணந்தடுத்தீர்! படுகிழவர் தம்மணமும்
ஞாலத்தில் நீர்தடுத்து நாரியர்க்கு மறுமணத்தைச்
சீலமுற ஆதரித்தால் சீரழிந்த இந்தியத்தாய்
கோலுங் கரமொளிர—என்கண்ணம்மா!
நோவிருந்து வாழாளோ!

(28) கூடும் அமங்கலமோர் குடிசையிலுந் தங்காமல்
காடோதுக்கும் மந்திரத்தால் காந்திமகான் ஓட்டுவரோ!
காடோதுக்கு மந்திரத்தால் காந்திமகான் ஓட்டுவரேல்
நீடுபெற இந்தியத்தாய்—என் கண்ணம்மா!
நிறைவிருந்து வாழாளோ!

(29) படிமேல் விதவையர்கள் பரிந்தொழுக்குங் கண்ணீரை
கடமையினால் காந்திமகான் கைதுடைக்க வாராரோ!
கடமையினால் காந்திமகான் கைதுடைத்துச் சாந்திசெயில்
அடிமைகொளும் இந்தியத்தாய்—என்கண்ணம்மா!
அரசிருந்து வாழாளோ!

(30) மாலை யிருணீக்கும் மாமதிபோல் காந்திமகான்
கோல மடவாரின் குறையை யகற்றுவரோ?
கோல மடவாரின் குறையகற்றில் இந்தியத்தாய்
சோலைக் கிளிபோலே—என் கண்ணம்மா!
சுதந்திரமாய் வாழாளோ!

---

# ராஜா ராம்மோகன் ராய்.

திருச்சி கே. வி. எஸ். வாஸ், பி. ஏ. (ஆனர்ஸ்)

## அத்தியாயம். 6.

### பத்திரிகைத் தொழிலும் கல்விக்கொள்கையும்

இந்தியாவின் ராஜப்பிரதிநிதியாக இருந்த ஹேஸ்டிங்ஸ் பிரபு 1822-ம் வருடம் இங்கிலாந்திற்குத் திரும்பினர். அவருக்கு அடுத்தாற்போல் ராஜப்பிரதிநிதி பதவியை வகிக்கவேண்டிய அம்ஹர்ஸ்ட் பிரபு இந்தியாவிற்கு வந்து சேருமளவும் அந்த ஸ்தானம் ஜான் ஆடம்ஸ் என்ற ஒரு ஆங்கிலேய உத்தியோகஸ்தருக்கு தற்காலிகமாக அளிக்கப்பட்டிருந்தது. அற்பத்திற்கு பவிஷு வந்தால் அர்த்த ராத்திரியில் குடைபிடிக்குமென்று நாடோடியாக ஒரு வசனம் சொல்லப்படுவதுண்டு. அதைப்போல் ஒரு சாதாரண உத்தியோகஸ்தருக்கு கவர்னர் ஜெனரல் பதவி கிடைத்துவிட்டால் அவர் வாளாவிருப்பாரா? முதன்முதலாக பொது ஜனங்களின் உரிமைகளையும், ஹேஸ்டிங்ஸ் பிரபுவினல் பத்திரிகைகளுக்கு தாராள மனதுடன் வழங்கப்பட்டிருந்த சுதந்திரத்தையும் அவர் ஒடுக்க வாரம்பித்தார். அவருடைய தீவிரமான நடவடிக்கைகளைச் சுட்டிக்காட்ட, 1822-ம் வருட பெப்ரவரி மாதம் "மீரத்" பத்திரிகையில் பிரசுரம் செய்யப்பட்டிருந்த ஒரு செய்தியை இங்கு குறிப்பிடுகின்றோம்:—

> சிறந்த அறிவாளியும், ஸ்காட்லாந்தின் புதிய தேவாலய பிரதம குருவுமான டாக்டர் பிரைஸ் என்பவர் கிழக்கிந்தியக் கம்பெனியில் ஒரு குமாஸ்தா உத்தியோகத்தை ஏற்றுக் கொண்டு இந்தியாவிற்கு வந்தார். அதைப்பற்றி திரு. பக்கிங் ஹாம் தமது கல்கத்தா ஜர்னலில் பிரஸ்தாபிக்கும்பொழுது பிரதம குருவாயிருந்த ஒருவர் குமாஸ்தா பதவியை ஏற்றுக் கொண்டு வந்திருப்பது இழிவான செய்கையென்று நேர்முகமாயும் மறைமுகமாயும் வரைந்திருந்தார். இக்காரணத்தினல் கல்கத்தா ஜர்னலைப் பறிமுதல் செய்யும்படியும், திரு. பக்கிங் ஹாமை இரண்டுமாத காலத்திற்குள் இந்தியாவைவிட்டு வெளி

யேறும்படியும் தற்காலீக கவர்னர் ஜெனரல் உத்திரவு பிறப்பித்தார். 1923-ம் வருட இறுதியில் மேற்படி பத்திரிகையின் உதவி ஆசிரியராயிருந்த திரு. அர்னட் என்பவரும் கைதுசெய்யப்பட்டு இங்கிலாந்து செல்லும் ஒரு கப்பலில் ஏற்றியனுப்பப் பட்டார்.

திரு. பக்கிங்ஹாம் இந்தியாவிலிருந்து வெளியேற்றப்பட்ட அதே வருடம் மார்ச்சு மாதம் 14-ம் தேதியன்று தற்காலீக கவர்னர் ஜெனரல் அதிதீவிரமான அச்சுச் சட்டங்கள் சிலவற்றை சிருஷ்டி செய்து "பொது ஜனங்களுக்கு சர்க்காரிடம் வெறுப்பு ஏற்படத்தக்க வகையிலும், சமூகத்தின் அமைதியைக் கெடுக்கத்தக்க வகையிலும் பத்திரிகைகளில் செய்திகள் வெளியாகிவருகின்றன. ஆகையால், இவ்விஷயத்தில் அதிதீவிரமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று சர்க்கார் அபிப்பிராயப்படுகின்றார்கள்" என்று சொல்லி அவைகளைப் பிரகடனம் செய்தார். இச்சட்டங்கள் அமுலுக்கு வந்தவுடன் புதிய பத்திரிகைகளையோ அல்லது மாதாந்திர சஞ்சிகைகளையோ வெளியிடுகின்றவர் பிரதமக் காரியதரிசியின் கையொப்பத்துடன் கூடிய கவர்னர் ஜெனரலின் அனுமதியை முன்னதாகப் பெறவேண்டியது அவசியமாகிவிட்டது.

அக்காலத்தில் புதிய சட்டங்கள் சிருஷ்டியானவுடன் அமுலுக்கு வந்துவிடுவதில்லை. அவை சுப்ரீம் கோர்ட்டு கட்டிடத்தின் முன்புறத்தில் சகலரும் பார்க்கக்கூடிய ஒரு இடத்தில் இருபது தினங்கள் வரையில் ஒட்டிவைக்கப்பட்டிருப்பது வழக்கம். இந்த இருபது தினங்களுக்கிடையே புதிய சட்டங்களை எவராவது ஆக்ஷேபிப்பார்களாயின் அவர்களுடைய ஆக்ஷேபனை நியாயமானதாவென்பதைக் குறித்து கோர்ட்டார் விசாரணை நடத்துவார்கள். ஆக்ஷேபனைகள் ஏற்படாவிடில், அந்தச் சட்டங்கள் இருபத்தோராவது தினத்தன்று பதிவு செய்யப்பட்டு அமுலுக்கு கொண்டுவரப் படும். இதே சம்பிரதாயத்தைப் பின்பற்றி தற்காலீக கவர்னர் ஜெனரலின் புதிய அச்சுச்சட்டங்கள் மார்ச்சு மாதம் 15-ம் தேதியன்று சுப்ரீம் கோர்ட்டில் ஒட்டப்பட்டன. அது சம்பந்தமான ஆக்ஷேபனைகளை விசாரணை செய்ய தற்காலீக பிரதம நீதிபதி ஸர் பிரான்ஸிஸ் மக்னட்டன் மார்ச்சு மாத 31-ம் தேதியைக் குறிப்பிட்

டார். மேலும், புதிய சட்டங்களை ஆக்ஷேபிப்பவர்கள் தங்களது காரணங்களை மகஜர்களின் மூலம் சர்க்காருக்கு அறியப்படுத்துவது உசிதமானதென்றும் அவர் யோசனை சொல்லியிருந்தார். அந்த யோசனையையொட்டி பலர் சர்க்காருக்கு மகஜர்களை சமர்ப்பித்திருந்தனர். அவைகளுள் ராம்மோகனரின் மகஜர் ஒரு தனி விசேஷம் பொருந்தியதாயிருந்தது.

மிகுந்த பலம்பொருந்திய எதிரியிடம் ஒரு காரியத்தை சாதித்துக் கொள்ள வேண்டுமானால், அவனைத்தங்க வகையில் கட்டிக் கொடுக்கவேண்டுமென்பது பஞ்சதந்திரங்களுள் ஒன்று. இந்த தந்திரத்தையே ராம் மோகனர் தமது மகஜரில் கையாண்டிருந்தார். பிரிட்டிஷ் ஆட்சி மிக மிகச் சிறந்ததென்றும், அதனிடம் சுதேசிகள் அபாரமான நம்பிக்கை வைத்திருக்கிறார்களென்றும், அந்த நம்பிக்கைக்கு சர்க்கார் துரோகம் செய்யாமலிருக்க வேண்டுமென்றும் அவர் தமது மகஜரின் முற்பகுதியில் குறிப்பிட்டிருந்தார். அடுத்தாற்போல் அனேக விதமான நன்மைகளைச் செய்திருக்கும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு பங்கமேற்படத்தக்க வகையில் சுதேசிகள் நடந்துகொள்ளத் துணியாரென்றும், சுதேசிப் பத்திரிகைகள் ராஜத்துவேஷமான செய்திகளை இதுவரையில் வெளியிட்டதே கிடையாதென்றும், அங்ஙனமிருக்க, புதிய அச்சுச் சட்டங்களை இயற்றுவது அனவசியமானதென்பதுடன், அவை சர்க்காருக்கும் ஜனங்களுக்கு மிடையிலுள்ள பரஸ்பரமானநம்பிக்கையையும் பாதிக்கத்தக்கவைகளாகிவிடுமென்று ராம்மோகனர் பிரஸ்தாபித்திருந்தார். அவர் மேலும் தெரிவித்திருந்ததாவது:—

1. புதிய சட்டங்களின் பிரகாரம் பத்திரிகையைத் துவக்குகின்றவர்கள் கோர்ட்டார் முன்னிலையில் ஆஜராகி "நாங்கள் சர்க்காருக்கு விரோதமாக ஒன்றும் எழுதமாட்டோம்" என்று பிரமாணம் செய்யவேண்டியிருக்கின்றது. ஆனால், இந்துக்கள் சத்தியம் செய்வதை முழுமனதுடன் வெறுப்பவர்கள். அவர்களுக்கு இதைக்காட்டிலும் வேறு பெரிய அவமானம் கிடையாது.

2. புதிய சட்டங்கள் குறிப்பான ஒருவகை முன்னேற்றத்தையும், பிரிட்டிஷ் ஆட்சியின் சிறப்பை அனைவரும் அறிந்துகொள்ளு

மாறு செய்யவேண்டு மென்ற அறிவாளிகளின் ஊக்கத்தையும் தடைசெய்கின்றன.

3. இச்சட்டங்களினால் நிர்வாக உத்தியோகஸ்தர்களின் தவறுகளை சர்க்காருக்கு எடுத்துக்காட்டும் உரிமை பொதுஜனங்களிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்டு விடுகின்றது. ஆகையால் பிரிட்டிஷ் ஆட்சி எவ்வளவு உயர்வாகக்கருதப்பட்டதோ, அவ்வளவு தாழ்வாகக் கருதவேண்டிய நிலைமைக்கு இவை ஜனங்களைக் கொண்டு வந்து விடுகின்றன.

மேற்படி மகஜரும் மற்றும் பல மகஜர்களும் சுப்ரீம் கோர்ட்டில் படிக்கப்பட்டன. ராம்மோகனரின் கோரிக்கைகளை திரு. பர்கூஸான், திரு, டர்ட்டன் ஆகிய இரு வழக்கறிஞர்களும் கோர்ட்டில் விவாதித்தார்கள். ஆனால், பிரதம நீதிபதி ஸர். பிரான்ஸிஸ் மக்னுட்டன் சுதேசிகளின் மகஜர்களைச் சட்டை செய்யாமலே சர்க்காருக்கு சாதகமாக புதிய அச்சுச்சட்டங்களை ஆதரித்துத் தீர்ப்புக் கூறிவிட்டார். அதன் மீது ராம்மோகனரும் மற்றும் பல சுதேசிகளும் பிரிட்டிஷ் மன்னருக்கு அப்பீல் செய்துகொண்டார்கள். ஆனால் அந்த மகஜர்களையும் கல்கத்தா ஜர்னலின் ஆசிரியரான திரு. பக்கிங்ஹாம் சமர்ப்பித்த மகஜரையும் பிரிவி கவுன்சிலர்கள் 1825-ம் வருட நவம்பர்மாதம் நிராகரித்து விட்டார்கள். இதையொட்டி ராம்மோகனர் தமது "மீரத்" பத்திரிகையின் பிரசுரத்தை நிறுத்திவிட்டார். அப்பொழுது "அவமானகரமான புதிய சட்டங்களின் மீரத் பத்திரிகையை வெளியிட அதன் ஆசிரியர் விரும்பவில்லை. ஜனங்களின் அறிவு வளர்ச்சிக்கு தொடர்ந்து சேவை செய்ய முடியாமற் போய்விட்டதற்காக அவர் விசனிக்கிறார்" என்று ராம்மோகனர் எழுதியிருந்தார். ஆனால் சம்பத் கௌமதியை அவர் நிறுத்தவில்லை. இந்தப்பத்திரிகை அவருக்குப் பிறகு கூட சிலகாலம் வரையில் நடந்துவந்தது.

ஜனங்களுக்கு அறிவைப் புகட்டுவதற்காக ஆரம்பம் செய்யப்பட்ட பத்திரிகைத் தொழில் அவரை மற்றும் பல துறைகளிலும் இழுத்துச் சென்றது. ஏற்கனவே பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளபடி ஸர். ஈ. எச். ஈஸ்ட், திரு. டேவிட் ஹேர் ஆகியோர்களின் கூட்டுறவைக்கொண்டு ஹிந்துக் கல்லூரியை அவர் ஸ்தாபித்தார்.

அதையடுத்து, சுதேசி மாணவர்களுக்கு ஆங்கிலம் பயிற்றுவிப்பதற்காக 1822-ம் வருடம் சொந்தச் செலவில் ஒரு பள்ளிக்கூடத்தை அவர் ஆரம்பித்தார். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் நாட்டின் கல்விக் கொள்கையைப்பற்றி பலத்த விவாதம் ஏற்படலாயிற்று. இந்தியாவின் கல்வி யபிவிருத்திக்காக பிரிட்டிஷ் சர்க்கார் குறிப்பிட்ட ஒரு தொகையை வழங்கத் தீர்மானித்தார்கள். அந்தத் தொகையை சம்ஸ்க்ருத பாஷையின் அபிவிருத்தியைக்கோரி புதிய பாடசாலைகள் நிறுவுவதால் பயன்படுத்த வேண்டுமென சனாதனிகள் வாதம் செய்தனர். ஆங்கிலமறிந்த சுதேசிகள் "இந்தியா முன்னேற்றமடைய வேண்டுமாயின் அங்கு மேல்நாடுகளைத் தழுவிய கல்விக் கொள்கை அனுஷ்டிக்கப்படவேண்டுமென்றும், சம்ஸ்க்ருத பாஷையை அபிவிருத்தி செய்வதனுல் நாட்டிற்கு ஏற்படக்கூடிய நன்மை பூஜ்யமென்றும்" வாதாடினார்கள். இந்த இரண்டாவது கோஷ்டிக்கு ராம் மோகனர் தலைவராயிருந்தார். ஆயினும் சர்க்காரின் அபிப்பிராயம் சனாதனிகளை ஆதரிப்பதாயிருந்தது. சில தினங்களுக்குப் பிறகு கல்கத்தாவில் ஒரு சம்ஸ்க்ருதக் கல்லூரியை ஸ்தாபிக்க உத்தேசித்திருப்பதாயும் சர்க்கார் பிரகடனம் செய்துவிட்டார்கள்.

ராம்மோகனருக்கு, அச்சுச் சட்ட ஆக்ஷேபணை மனுவைச் சர்க்கார் நிராகரித்த காலத்திலேயே அளப்பறிய துக்கமேற்பட்டிருந்தது. இப்பொழுது மேல்நாட்டுக் கல்வி முறையை இந்தியாவிலும் நுழைக்க சர்க்கார் விரும்பவில்லையென்பது தெரிந்ததும் அவர் ஆத்திரமடைந்தார். சுதேசிகளுக்கு ஆங்கில பாஷா ஞானம் எவ்வளவு அவசியமானதென்பதையும், புதிய சம்ஸ்க்ருதக் கல்லூரியை நிறுவுவதானுல் மக்களிடையே எவ்வளவு தூரம் மனக்கசப்பும், அதிருப்தியுமேற்படுமென்பதையும் காரமான சொற்களில் சித்தரித்து கவர்னர் ஜெனரலுக்கு அவர் ஒரு கடித மெழுதினர். அதில் குறிப்பிட்டிருந்தவைகளின் சாராம்சம் பின்வருமாறு:—

இந்தியாவில் சம்ஸ்க்ருத ஞானம் போதுமான அளவு இருக்கும்பொழுது அதன் அபிவிருத்திக்காகப் பணத்தைச் செலவிடுவது குட்டையில் கிடந்து உழலும் மக்களைக் கூலி கொடுத்துக் கிடக்கச் சொல்வதற்கொப்பாகும். சம்ஸ்க்ருத பாஷை அதனுடைய கடின பதங்களின் காரணமாக அறிவு

வளர்ச்சிக்கு வெகுகாலமாய் தடை செய்து வந்திருக்கிறது. சனுதனிகளைத் திருப்தி செய்வது சர்க்காரின் விருப்பமாயின் ஏற்கனவே நிறுவப்பட்டிருக்கும் சம்ஸ்க்ருத பாடசாலைகளுக்கு மான்யம் வழங்கி தங்களது எண்ணத்தைப்பூர்த்தி செய்து கொள்ளலாம். இதற்காகப் புதிய கல்லூரியை நிறுவ வேண்டியது அவசியமேயில்லை. இந்தியா இப்பொழுது கோருவது மேல் நாட்டுக் கல்வி முறையேயன்றி பழைய கல்வி முறையின் அபிவிருத்தியையல்ல. இவ்விஷயத்தை சர்க்கார் சிரத்தையுடனும், தாராள நோக்கத்துடனும் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும்.

மேற்படி கடிதம் அம்ஹர்ஸ்ட் பிரபுவிற்கு அனுப்பிவைக்கப் பட்டதும் சர்க்காரின் பழைய தீர்மானம் உடன் திருத்தம் செய்யப்பட்டது. சம்ஸ்க்ருதக் கல்லூரியை நிறுவுவதாயிருந்த ஸ்தலத்தில் மேல் நாட்டு முறையில் கல்வி பயிற்றுவிக்க ஹிந்துக் கல்லூரியின் அஸ்திவாரக்கல் அதே ஆண்டில் நாட்டப்பட்டது. அதன் பக்கத்திலேயே சம்ஸ்க்ருத பாஷையின் வளர்ச்சிக்காக மற்ெருரு கல்லூரியைக் கட்டவும் சர்க்கார் அஸ்திவாரக்கல் நாட்டினார்கள்.

மேற்படி சம்பவம் நிகழ்ந்த மறு வருடம், சம்ஸ்க்ருதக் கல்லூரியின் ஸ்தாபனத்தை ஆக்ஷேபித்த ராம்மோகனர், சொந்தத்தில் ஒரு வேதாந்தக் கல்லூரியை நிறுவினர். அதில் பிரசித்திபெற்ற பல பண்டிதர்களை ஆசிரியர்களாக நியமித்து ஹிந்துமத அத்வைத சித்தாந்தத்தையும் கிறிஸ்தவ அத்வைதத்தையும் பயிற்றுவிக்க ஏற்பாடு செய்தார். இக் கல்லூரியில் வங்காளமும் சம்ஸ்க்ருதமும் தவிர வேறு பாஷைகள் உபயோகிக்கப்படலாகாதென்று அவர் கட்டுப்பாடுகளேற்படுத்தியுமிருந்தார்.

சமஸ்க்ருதக் கல்லூரி வேண்டவே வேண்டாமென்றும், இளைஞர்களுக்கு வேதாந்த ஞானம் அனுவசியமானதென்றும் விவாதித்த ராம்மோகனர் சொந்தத்தில் வேதாந்தக் கல்லூரியை ஏன் நிறுவவேண்டுமென்று வாசக நேயர்கள் வியப்புறுவார்கள். இதற்கு ஓர் முக்கிய காரணமுண்டு. அக்காலத்தில் வேதாந்த நூல்கள் வெவ்வேறு மதத் தலைவர்களால் வெவ்வேறு வகையில் போதிக்கப்

பட்டு வந்தன. அதன் காரணமாக, சமூகம் பற்பல சிறு வகுப்புகளாகப் பிரிந்து பகையையும், பிறருடைய ஏளனத்திற்கு சந்தர்ப்பத்தையும் அதிகரித்துக்கொண்டிருந்தன. ஒரு கடவுளைத் தொழுகின்றவர்களும், பல தெய்வங்களைப் பூஜிப்பவர்களும், விக்ரக பூஜை, உடன்கட்டை யேறுதல், அர்த்தமற்ற கர்மாக்களை நடத்தல் முதலியவற்றை ஆதரிப்பவர்களும், ஆக்ஷேபிப்பவர்களும், மற்றும் பல முரணான கொள்கையுடையவர்களும் ஒரே வேதாந்த தத்துவத்தைத் தங்கள் தங்கள் விருப்பம் போல் திரித்துப் பயன்படுத்தி வந்தார்கள். இதனால் வேதாந்த சூத்திரத்தின் உண்மையான தத்துவம் ஒருவருக்கும் தெரியாமலே போய்விட்டது. தவிர வெவ்வேறு வகுப்பார் வெவ்வேறு தெய்வங்களை பூஜிப்பதைக் காணும் வெள்ளையர்களுக்கு, இந்தியா மதவளர்ச்சி பெறுத நாடென்றும், அங்கு பல கடவுள்களைப் பணியும் பண்டை நாகரிகமே இன்னமும் இருந்து வருவதாயும், தவறான அபிப்பிராயங்களேற்பட இடமளித்தும் வந்தது. எனவே, வீழ்ச்சி யடைந்துகொண்டிருக்கும் இந்து மதத்தைப் பாதுகாக்க, உண்மையான வேதாந்த தத்துவங்களைச் சமூகத்தில் பிரசாரம் செய்ய வேண்டுமென்று ராம்மோகனர் கருதினர். ஆனல், சர்க்கார் ஸ்தாபிக்க நினைத்த சமஸ்க்ருதக் கல்லூரி இந்த நோக்கத்திற்கு பயன்படாதென்றும், அது ஏற்கனவே ஏற்பட்டிருக்கும் சமூகப் பிளவுகளை விரிவுபடுத்துவதாகவே இருக்குமென்றும் அவர் திட்டமாக அபிப்பிராயப்பட்டார். ஆகையால் தான் சர்க்காரின் யோசனையை அவர் பலமாகக் கண்டித்து, கவர்னருக்கும் மகஜர் அனுப்பினர். ஹிந்துக் கல்லூரியின் ஸ்தாபனத்தால் ராம் மோகனரின் இரு நோக்கங்கள் சித்திபெற்றன. ஒன்று சர்க்காரின் மான்யம் முழுவதும் குறுகிய கொள்கைகளை வளர்க்கும் சமஸ்க்ருதக் கல்லூரியின் ஸ்தாபனத்திற்கு செலவிடப்படாமலிருக்கவேண்டுமென்பது; மற்றொன்று, மேல்நாட்டுக் கல்வி முறை கீழ்நாட்டிலும் புகுத்தப்பட வேண்டுமென்பது. இந்து மதத்தின் களங்கங்களை நீக்கி, அதைப் பரிசுத்தமாக்க வேண்டுமென்பது ராம் மோகனரின் மூன்றாவது நோக்கம். இது சர்க்கார் உதவியினல் சித்தி பெருதென்பதை அவர் நன்கறிவார். ஆகையால்தான், கற்பனை அம்சங்களில்லாத வேதாந்த ஞானத்தைப் போதிக்கவும், விக்ரக பூஜையில்லாத அத்வைத சித்தாந்தத்தைப் பிரசாரம் செய்யவும்

"வேதாந்தக் கல்லூரி" என்ற பெயரோடு புதியதொரு ஸ்தாப னத்தை அவர் நிறுவினர். இது வங்காள பாஷையின் அபிவிருத் திக்கும் பெரிய உதவியாயிருந்ததென்பது குறிப்பிடத்தக்கது.

இதற்கிடையில் சமூகச் சீர்திருத்தப் பிரசாரத்தை ராம்மோக னர் மறந்துவிட வில்லை. இத்துறையில் சம்பத் கௌமதி அதிதீவி ரமாக உழைத்து வந்தது. அதில் வெளியிடப்பட்ட காரமான பல கட்டுரைகளின் காரணமாக சதிவிஷயத்தில் சர்க்கார் தலையிடுவது உசிதமானதல்ல வென்று ஆலோசனை கூறிய நீதிபதி திரு. லெஸ் டர் கூட டாக்டா, மூர்ஷிதாபாத், பெரில்லி, பட்டஹ்பூர், பண்டல் கண்ட், கால்பி ஆகிய தமது பிராந்தியங்களில் 1821-ம் வருடத் திய சதித்தடை நிர்ப்பந்தங்களை அமுல் செய்ய வாரம்பித்தார். சதியை அடியோடு ஒழிக்கச் சில சட்டங்களை சிருஷ்டித்து அவை களை ஹூக்ளி ஜில்லாவில் பரீக்ஷார்த்தமாக அமுல் நடத்தவேண்டு மென்றும், அவைகளுக்கு பொதுஜனங்களின் எதிர்ப்பு சமாளிக்க முடியாதபடி இல்லாதிருப்பின், பிறகு இதர ஜில்லாக்களிலும் அமுல் செய்யலாமென்றும் திரு. டோரின் என்னும் மற்றோர் நீதிபதி சர்க் காருக்கு யோசனை கூறினர். ஆனல், சதியை அடியோடு நிறுத்து வதோ அல்லது பரீக்ஷார்த்தமாகச் சில ஜில்லாக்களில் மட்டும் அடி யோடு நிறுத்த முயற்சிப்பதோ வைஸிராய் ஹேஸ்டிங்ஸ் பிரபுவிற்கு உசிதமாகத் தோன்றவில்லை. இவ்விஷயத்தில் தீவிர நடவடிக்கை களை யெடுத்துக்கொள்ள இன்னும் சிறிதுகாலம் கழிய வேண்டு மென்றே அவர் நீதிபதிகளுக்கெல்லாம் பதிலளித்து வந்தார்.

இக்காலத்தில், சொத்துரிமை சம்பந்தமாகச் சில புதிய திருத் தங்களைச் செய்யவேண்டியது ராம்மோகனருக்கு அவசியமாகத் தோன்றியது. வேதப்பிரமாணங்களின்படி, குடும்பகர்த்தாவின் மரணத்திற்குப் பிறகு அவனுடைய சொத்துக்களில் அவன் மனைவி க்கும் குமாரர்களுக்கும் சமதையான பாகமுண்டு. ஆனல், பிற்கால த்தில் பெண்களுக்கு சொத்துரிமை அடியோடு இல்லாமற் போய் விட்டது. பெண்கள் தங்களுடைய கணவன்மார்களின் மரணத்தி ற்குப்பின் குமாரர்களை அண்டி வாழவேண்டிய நிலைமைக்கு வந்து விட்டார்கள். இதை ராம்மோகனர் பலமாகக் கண்டித்தார். தமது சம்பத் கௌமதியில் இதுவிஷயமாக அவர் எழுதியதாவது:—

கணவன் மரணமடைந்துவிட்டால், அதன் பிறகு கைம்

பெண்ணாகும் மாது மூன்றே மார்க்கங்களைத்தான் பின்பற்றி நடக்கக்கூடும். ஒன்று பிள்ளைகளிடம் தஞ்சமடைந்து, அவர்களது மனைவிகளின் கொடுஞ்சொற்களைச் சகித்துக்கொண்டு கேவலமான நிலைமையில் வாழ்க்கையை நடத்தவேண்டும். இன்றேல், ஒழுக்கம் தவறி கற்பையும் மானத்தையும் பொருளுக்கு விற்று சௌகர்யங்களைத் தருவித்துக்கொள்ளவேண்டும். இவ்விரண்டிலும் விருப்பமில்லாத பெண்கள் கணவன்மார்களுடன் கட்டையேறி தீயில் மடிந்தொழியவேண்டும். இதுதான் இன்றைய நிலைமை. பண்டைக் காலத்திலோ, பெண்கள் கணவன்மார்களின் மரணத்திற்குப் பின்னர் குடும்ப சொத்தில் பிள்ளைகளுக்குச் சமதையான பாகத்தைப் பெற்று சுதந்திரமாக வாழ்ந்துவந்தார்கள்.

இவ்வாறு, பெண்களின் சொத்துரிமைக்காக ராம்மோகனர் பல காரணமான கட்டுரைகளை வரைந்தார். தவிர, ஒரு ஆண் ஒரே சந்தர்ப்பத்தில் பல பெண்களை மணந்துகொள்வதையும் அவர் பலமாகக் கண்டனம் செய்தார். வங்காளத்தில் பெண்களின் தற்கொலை அதிகமாயிருப்பதற்கு, ஒரு ஆண் பல பெண்களை மணம் செய்துகொள்வதே காரணமென அவர் நம்பினார். இவ்வாறு நினைக்கும்படி சொந்த வாழ்க்கையே அவரைத் தூண்டியது. அவருக்கு இளமையிலேயே இருமுறை மணம் செய்துவைக்கப்பட்டது. ஒருவள் மணமான சில தினங்களுக்குள்ளாகவே மரணமடைந்தாள். மற்றொருவளும், மதசம்பந்தமான காரணங்களினால் மனக் கசப்படைந்து, கணவனை விட்டுப் பிரிந்துவிட்டாள். எனவே, இல்லறவாழ்க்கையின் இன்பமே ராம்மோகனருக்கு இல்லாமற் போய்விட்டது. ஒரே பெண்ணை மணந்திருந்தால் அவளைத் தன் வழிக்கு சுலபமாகத் திருப்பிவிடலாமென்றும், இல்லறத்தின் இன்பத்தைக் குறைவின்றி அனுபவிக்கலாமென்றும் அவர் பல சந்தர்ப்பங்களில் எண்ணியதுண்டு.

பல பெண்களை மணக்கும் விஷயத்தில் ராம்மோகனருக்கு

---

ராம்மோகனர் மும்முறை மணம்செய்துகொண்டதாகவும் சிலர் சொல்லுகின்றார்கள். எப்படியோ, அவர் ஏகபத்தினி விரதரல்லவென்பதால் போதுமானது.

எவ்வளவு வெறுப்பிருந்ததென்பதைச் சுட்டிக்காட்ட அவருடைய மரண சாஸனமொன்றே போதுமானதாகும். அவர் தமது சொத்தில் பிள்ளைகளுக்கு ஒரு சிறு பாகத்தைக் கூட கொடுக்கவில்லை. பல பெண்களை மணம் செய்து கொண்டுள்ள பந்துக்களுக்கும் பாகம் கொடுக்கவில்லை. சமூகக் கொடுமைகளை உணர்ந்து, சீர்திருத்த நோக்கத்துடன் வாழ்க்கையை நடத்துகின்ற சொந்தக்காரர்களுக்கே அவர் தமது சொத்துக்களை எழுதிவைத்தார். தவிர, தம்மைப் போலவே மற்றவர்களையும் செய்யும்படி அவர் தூண்டிவந்தார்.

இத்துடன், சதியொழிப்புப் பிரசாரத்தையும் அவர் நிறுத்திவிடவில்லை. ஆனால், சதியின் தொகை வருடா வருடம் பயங்கரமான அளவிற்கு அதிகரித்து வருவதைக் கண்டு அவர் கலவரமடைந்தார். அவரைப் போலவே, சர்க்காரும் கலக்கமடைந்தார்கள். ஆனல் சில நீதிபதிகள் மட்டும், "சதியைத் தடுப்பதானல் தீவிரமான நடவடிக்கைகளைக் கையாடியே தீரவேண்டும்; மீசைக்கும் ஆசை; கூழுக்கும் ஆசை என்பதைப் போல் சதியொழிப்புப் பிரசாரத்தில் வெற்றியையும் சனாதனிகளின் திருப்தியையும் ஒருங்கே பெறுவது அசாத்யமானது. ஒரு சிறு கூட்டத்தாரின் பகையைப் பெறுவதாயிருப்பினும், மனிதத்தன்மையற்ற இக்கொடுமையை நிறுத்த வேண்டியது நமது முதற்கடமை; இவ்விஷயத்தில் சர்க்கார் இனியும் அசட்டையாயிருக்கலாகாது" என்று வற்புறுத்தி வந்தார்கள். 1815-ம் ஆண்டிற்கும் 1818-ம் ஆண்டிற்குமிடையே கல்கத்தா, டாக்கா, மூர்ஷிதாபாத், காசி, பெரில்லி ஆகிய இடங்களில் நடந்த சதிகளின் புள்ளி விவரங்களை ஏற்கனவே கொடுத்திருக்கின்றோம். இங்கு 1819-ம் ஆண்டிற்கும் 1826-ம் ஆண்டிற்கு மிடையில் நிகழ்ந்த சதிகளின் விவரங்களைக் கொடுக்கின்றோம்:-

| ஸ்தலங்கள். | 1819 | 1820 | 1821 | 1822 | 1823 | 1824 | 1825 | 1826 |
|---|---|---|---|---|---|---|---|---|
| கல்கத்தா | 421 | 370 | 393 | 328 | 340 | 373 | 398 | 324 |
| டாக்கா | 55 | 51 | 52 | 45 | 40 | 40 | 40 | 65 |
| மூர்ஷிதாபாத் | 25 | 21 | 12 | 22 | 13 | 14 | 21 | 8 |
| பாட்னு | 40 | 42 | 69 | 70 | 49 | 59 | 47 | 65 |
| காசி | 92 | 93 | 114 | 102 | 121 | 76 | 55 | 48 |
| பெரில்லி | 17 | 20 | 15 | 16 | 12 | 10 | 17 | 8 |
| மொத்தம் | 650 | 597 | 655 | 583 | 575 | 572 | 638 | 518 |

# விதவைகள் க்ஷேமம்!

பாரதிதாஸன்.

தேவகி பால்ய விதவை. 20 வயதுடையவள். அவள் பேருக்கு நல்ல வரும்படியுள்ள வீடுகள், விளைச்சல் நிலங்கள் உண்டு! ரொக்கம் வேறு. அவள் தனி, ஆதலால் அவள் உற்றார் சிலர் அவளுக்கு ஆதரவாக, உடனிருந்துவந்தார்கள். தேவகி படித்த பெண்.

சுந்தரம் அவளுக்கு எட்டிய பந்து; இங்கிலீஷ் படித்தவன்; தேவகிக்கு பத்திரம் படித்துக்காட்ட—வக்கீலிடம் வேலை வாங்க—சுந்தரம் தேவை; வருவான் போவான்; இப்படிச் சில வருஷங்கள் நூதனமில்லாமல் கழிந்தன.

## II

வேலைக்காரி தேவகிக்கு விசிறிக்கொண்டிருந்தாள்; தோட்டத்து முல்லைக் கொடிகள் புஷ்பித்திருந்தன. நல்ல மணம்; கோடை தணியும் மாலை நேரம், தென்றல் மனோகரமாயிருந்தது. வழக்கம் போல் "தனது தன்னந்தனி" "தனது துரதிர்ஷ்டம்" இவை ஞாபகத்துக்கு வந்தன. திடுக்கிட்டாள்! கலங்கினாள். இது புதிதல்ல. ஆனால், அதே சமயம் அவசரமாகச் சுந்தரம் அங்கு வந்தது மாத்திரந்தான் அன்று புதிய சம்பவம். அவனை அவள் அன்றுதான் உற்றுக் கவனித்தாள்.

கைமாற்றாகச் சுந்தரன் கேட்ட தொகை கிடைத்தது. போய் விட்டான்.

## III

அக்கம்பக்கத்து சிநேகிதைகள் வந்துபேசியிருந்தார்கள். மணி இரவு 7 ஆயிற்று. நாயகர் வருவார் என்றும், மாமி வைவாள் என்றும் அவர்கள் பேச்சை முடித்துப் பிரிந்தார்கள். தேவகி பெருமூச்சுவிட்டு எழுந்து அறைக்குள் சென்றாள். அங்கிருந்தமேசையின் அடியில், சுந்தரன் 4 நாட்களுக்குமுன் தேவகிக்கு எழுதிய கடிதம் கேட்பாரற்றுக் கிடந்தது. எடுத்தாள், பிரித்துப் படித்தாள். சென்னையில் இருக்கும் சுந்தரனுக்கு 100 ரூபாய் மிக்க அவசரம். அனுப்பினால், பிறகு நிலம்விற்றுப் பூராவையும் கொடுத்துவிடுகிறேன், என்பது அந்தக் கடிதத்தின் கருத்து.

நான்கு நாளாகியும் வீட்டிலிருந்தவர்கள் அவளிடம் கவனமாக அதைக் கொடுக்கவில்லை. பணம் அனுப்ப அவசரப்பட்டாள். இன்னொரு முறை வாசித்தாள். முத்துப்போன்ற எழுத்துக்கள். மூக்கும் விழியும் பொறுக்கி யமைந்தது போன்ற அவன் உருவம் அந்த எழுத்துக்கள் ஒவ்வொன்றிலும் தோன்றின.

அவனுக்குப் பணம் அவசரம். இதை—அவளைக் கொளுத்தும் காதலுக்கு மத்தியிலும் மறக்கவில்லை. அதை அவள் அவனுக்கு அனுப்பப் பறந்தாள். யாரிடம் கொடுத்தனுப்புவது போஸ்டாபீசுக்கு? இன்னொருமுறை கடிதத்தை ஆசைதீர வாசித்தால் தேவலை அவளுக்கு. வேலைக்காரன் வந்தான் பிறகு.

அன்புள்ள மைத்துனி தேவகிக்கு........இதற்குப் பதில் ஒன்று எழுதவேண்டும். நாணினாள். அன்புள்ள அத்தானுக்கு என்று எழுதினால் அதில் என்ன நூதனம்? அவன் உள்ளத்தைத் தொட்டுப் பார்ப்பதுபோல் ஒரு வார்த்தை தேடிப்பிடித்தாள்.

## IV

சுந்தரன் திருப்தியை விளக்கி ஒரு பதில் எழுதினான். தேவகி சுவைத்தறியா சுவை கருதி வீறிட்டழுதாள் பிறர் அறியாமல்! பறந்தாள் எடுத்தடிவையாமல்! காதலரே இவ்விடம் க்ஷேமம் என்று தொடங்கி "விரைவில் வருக" என்று எழுதினாள், க்ஷேமம் சிறிதுமில்லாத தேவகி!

## V

சென்னையிலிருந்து சிங்கப்பூருக்குப் போய் உத்தியோகத்தை ஒப்புக்கொண்டு விட்டான் சுந்தரம். மறுவருடம் இந்தியாவுக்கு வரவிருந்தவன் விஷ சுரத்தால் பாதிக்கப்பட்டான். அங்கு வாடும் தேவகிக்குத் தன் கடிதத்தால் உயிர்த் தண்ணீர் வார்த்துவந்தான். சுந்தரனின் பெற்றோர் வேறுபிள்ளை யில்லாதவர்கள். ஐந்தாண்டு பல்லைக் கடித்துக்கொண்டு இந்தியாவில் இருந்தார்கள். பிறகு சிங்கப்பூருக்குப்போய் பிள்ளையுடன் தங்கினார்கள். 10 வருடங்களுக்குப் பின்னும் சுந்தரன் கனவு பலிக்கவில்லை.

## VI

தேவகிக்குச் சுந்தரனிடமிருந்து இத்தனைகாலமாகக் கிடைத்த நூற்றுக் கணக்கான கடிதங்களில் ஒன்றாவது வெளிக்குத் தெரியா

திருக்குமா? தெரியாது. அந்தக் கடிதக் கட்டுகளை தேவகி மார்போ டணைத்துப் புலம்புவது தனிமையில்! படுக்கையில் அவள் விடியும் வரை அவற்றைப் படிப்பது பிறர் அறிய வழியில்லை.

“சுந்தரன் வருவான்”—இந்த நம்பிக்கையால் உயிர் வாழ் கின்றாள். 36 வயது ஆய்விட்டது அவளுக்கு! உடலில் சதை யில்லை. கொஞ்சம் உயிரும், அவ்வுயிரால் சுமக்க முடியாத காதலும் உடையவள். காதல் உலகில் எதிர்பார்த்த இன்ப விசேஷங்களை எண்ணி எண்ணி இதயம் சிவந்தது போலும். அதனால்தான் உள்ளே விளக்கெரியும் கண்ணாடிப் பதுமைபோல் விளங்கினாள். அவள் உள்ளத்தில் ஒரு மின்னல் நான் சிங்கப்பூருக்குப், போவே னென்று மின்னி, அதே இடத்தில் “நான் விதவை” யென்று மறையும்.

நண்பரே! இவ்விடம் க்ஷேமம். உயிர் நீர். உடல் நான். தாம திக்க வேண்டாம். ஒரு காரணத்தை ஏற்படுத்திக் கொள்வது. அதைப் பெற்றோரிடம் சொல்லி என்னிடம் வருவது. இது அரு மையா? நான் சாகின்றேனே! என்று கடிதம் எழுதினாள். இதன் பின் சில நாட்கள் உயிரோடிருந்தாள். கடிதம் வரவில்லை.

ஒரு நாள் உறவினர்—பெண்டிர்கள்—வந்து ‘நீ பலநாள் சாப் பிடவில்லை’ என்று வழக்கப்படி ஞாபகப்படுத்தினார்கள். ‘டாக்டரை யாவது கூப்பிட்டு உடம்பைக் காட்டுவதுதானே’ என்றாள் மற் றொருத்தி.

‘நானிருந்து ஆவதென்ன’ என்று கூறித் தேவகி அத்தனை பேரையும், அடக்கிப் போட்டாள்.

## VII

ஒரு நாள் இரவு மஞ்சத்தில் புழுப்போல் துடித்த நிலையில் இறுதிக் கடிதம் எழுத ஆரம்பித்தாள். நண்பரே! இவ்விடம் க்ஷேமம்............

சொந்தக்காரி—சாப்பிடலையா? சுந்தரன் கிராமத்துக்கு வந்து தங்கியிருக்கிறானாம். அவன் பிள்ளைக்கு உடம்பு அசௌக்யமாம் என்று கூறினாள்.

ஏது குழந்தை? என்றாள் சுந்தரி.

அவனுக்கு கல்யாணம் ஆய்விட்டது. நாலைந்து குழந்தைகள் அவனுக்கு என்று பதில் சொன்னாள் சொந்தக்காரி. இதன் பின் அந்தச் சொந்தக்காரிக்கு அடுத்த கூடத்திலிருந்து ஓர் அழைப்பு வந்தது. போய் விட்டாள்.

## VIII

விடிய 4 மணி. சுந்தரன் தேவகி தூங்கும் கூண்டறையைத் தெருவிலிருந்து தட்டினான். இல்லை. கதவு தட்டப்பட்டது. சொந்தக்காரி திறந்தாள். எங்கே தேவகி என்று கேட்டான் சுந்தரன்.

அவளுக்கு உடம்பு மிக்க அசௌக்யம், அதோ தூங்குகிறாள் பார்! தூங்கட்டும் எழுப்பாதே. ஒரு வைத்தியரை அழைத்துக் காட்டினால் நல்லதாயிருக்கும் என்றாள் சொந்தக்காரி. சுந்தரன் சமீபத்திலிருந்த டாக்டரை அழைத்துவரப் போனான்.

## IX

டாக்டருடன் சுந்தரன் வந்தான். தேவகிக்கு உடம்பு தத்துக் குத்தல் என்பது தெரிந்ததும், அக்கம் பக்கத்தாரும் வீட்டில் நுழைந்தார்கள்.

தேவகி! தேவகி!!—ஐயோ இறந்தாளே! என்னசெய்வோம் என்றுசொந்தக்காரர் கதறினார்கள். பரிதாபப் பேச்சுகள்! கூச்சல்கள்! குழப்பங்கள்!

"நண்பரே, இவ்விடம் க்ஷேமம்"—என்றதோடு நிறுத்தப் பட்டிருந்த தேவகி கடிதம் கிடைத்தது. டாக்டர் இந்தக் கடிதம் யாருக்கு எழுதியது என்று விசாரித்ததில், சுந்தரனுக்குத் தான் என்று தெரிந்தது. தேவகி உடம்பு அசௌக்யத்துக்குக் காரணம் காதல்!—சுந்தரம் கலியாணம் செய்துகொண்டார் என்று ராத்ரி அவள் காதில் விழுந்ததும், அவளுக்கு மரணம் சம்பவித்தது. நண்பர் சுந்தரம், உமக்கு இதற்கு முன் கடிதங்கள் தேவகி எழுதியிருக்கவேண்டுமே என்றார் டாக்டர்.

சுந்தரம் சொல்லுகிறான்:—கடிதம் போடுவதுண்டு. காதற் கடிதம் அன்று, அவள் ஓர் விதவை! காதல் எங்கிருந்துவரும்! அவள் கடைசியாய் எழுதியிருக்கும் கடிதத்தைப் பாருங்கள்—"நண்பரே இவ்விடம் க்ஷேமம்"

இதற்குள் தேவகிக்கு ஏற்கனவே சுந்தரன் எழுதிய கடிதங்கள் நூற்றுக்கணக்கில் வெளிவந்தன.

டாக்டர், நமது நாட்டிலுள்ள விதவைகள் அனைவரும், நமது சுந்தரன் சொல்லுவதுபோல்—வெளிப் பார்வைக்கு க்ஷேமமாகவே இருக்கிறார்கள் என்று சொல்லிக் கண்ணீரோடு சென்றார்.

---

# பின்பற்றுங்கள்!

"ரமணீகரன்"

"அம்மா நாளை புனிதநாளாகிய ஆடிபதினெட்டல்லவா? எவ்வளவு ஜனங்கள் அம்மாள் மண்டபப்படித்துறைக்குச் சென்று நீராடுவார்கள்; ஆதலின் நாமும் விடியற்காலமே யெழுந்து காவிரிக்குச் சென்று நீராடித் திரும்புவோம் அம்மா" எனக் கொஞ்சும் மொழிகளால் கூறினாள் 12-வயதும் நிரம்பாத சிறுமியாகிய சரோஜா.

"கண்ணே சரோஜா நீயோ கணவனை யிழந்து கைம்பெண்ணாகி விட்டாய். உன் புருஷன் இறந்து இன்னும் ஒரு வருடங்கூட ஆகவில்லையே. ஆகையால் உன்னை வெளியே அழைத்துக் கொண்டு போனால் ஊரார் இகழ்வார்களே! அவர்களது பழிச்சொல்லுக்கு ஆளாக வேண்டுமே என்றுதான் நான் அஞ்சுகிறேன்." என்று கண்ணீர் பெருக்கிக் கொண்டு பதிலளித்தாள், சரோஜாவின் தாயும் 40-வயது விதவையுமாகிய ருக்மணியம்மாள்.

"அம்மா! கணவன் இறந்து போய்விட்டால் என்னம்மா? வேறு ஒருவரை மணந்து கொண்டால் போகிறது! எனது சிறிய மாமா கூட இரண்டாம் முறையாக விவாகம் செய்து கொள்ளவில்லையோ? மற்றும் அன்று பேப்பரில் தாரமிழந்த இரண்டு பெண்கள் மறுமணம் செய்து கொண்டார்கள் என்று போட்டிருந்ததை நான் வாசிக்கவில்லையா? நானும் அப்படி செய்துகொண்டால் ஊர் ஜனங்கள் என்னைமட்டும் ஏன் பழிக்க வேண்டும்?" எனச்சாற்றினாள் உலக அனுபவம் சிறிதுமில்லாத சிறுமி சரோஜா.

"என் அருமைக்கண்ணே இந்துமதத்தில் ஆண்கள் எத்தனை தடவைகளேனும் மறுமணம் நிகழ்த்திக் கொள்ளலாம். ஆனல் பெண்களுக்கோ அச்சுதந்திரம் கிடையாது. என்ன கொடுமை! கணவன் இறந்துபோனல் தலையைக்குறைத்து, மூக்காடிட்டு, முடங்கிக்கிடப்பதே அவர்களது முக்கிய கடமையாய் மாறிவிட்டது. இது முன்னேர்கள் வைத்தசட்டம்; இதைமாற்ற நம்மில் ஒருவராலுமாகாது."

ருக்மணியம்மாளின் நேர்மையற்ற சமாதான வார்த்தைகள் சரோஜாவுக்கு திருப்தியளிக்கவில்லை. உலக அனுபவம் சற்றேனும் கிடையாத சரோஜா தன் தாயை பலவினுக்களுக்குள்ளாக்கினள். அவளது கேள்விகளை வரையறுக்க முடியவில்லை. அவளது கேள்விகளொவ்வொன்றும் சிறுபிள்ளையினது கேள்விகளைப்போல் காணப்படவில்லை.

சிறு பெண்ணின் கேள்விகளுக்குத் தகுந்த விடையளிக்க முடியாது தவித்தாள் ருக்மணியம்மாள். சரோஜாவின் ஒவ்வொரு கேள்வியும் ஏககாலத்தில் ஆயிரம் அம்புகள் பாய்ந்தது போன்று ஸ்ரீமதி அம்மாளின் மனதை ஊடுருவிச் சென்று மிகுந்த இடரை விளைவித்தன. அவள்மனம் ஒரே நிலையில் கற்காது புயல்வயப்பட்ட மரக்கலம் போன்று தத்தளித்துக் கொண்டிருந்தது. கடலில் தோன்றும் அலைகள் போல அவளது மனத்தில் பலவித எண்ணங்கள் தோன்றி மறைந்தன. "ஏன் நாம் அச்சிறு பிராயத்தில்-கணவன் கல்யாணம் என்ற வார்த்தைகளுக்குக்கூட பொருள் தெரியாத இளவயதில் ஒன்றுமறியாக் குழந்தையாகிய சரோஜாவுக்கு மணம்புரிவித்தோம்" என்று நினைந்து நினைந்து மனம் கசிந்துருகினள்.

தாயின் சமரசப் பேச்சுகள் சரோஜாவின் தீர்மானத்தை வெல்லமுடியாது போய்விட்டது ஓர் வியப்பல்ல. "உயிரே போவதாயிருப்பினும் நான் நாளைக்கு ஆற்றுக்குச் சென்றேவருவேன்" என்ற அவள் உறுதிமொழியை தாயால்மாற்ற முடியவில்லை. இறுதியில் சரோஜாவே வென்றுவிட்டாள். இருவரும் ஐந்துமணிக்கே எழுந்திருந்து நதிக்குச் சென்று தலைமுழுகி வருவதென தீர்மானித்தனர். இவர்களது முன்னைய வாலாற்றை நேயர்கள் அறிவது அவசியமாதலின் அதனை சுருக்கிக் கூறுகிறேன்.

இந்துக்களின் புராதன க்ஷேத்திரங்களில் ஸ்ரீரங்கம் எனப்பட்ட திவ்வியஸ்தலமும் ஒன்ருகும். அந்நகர் கல்வித்துறையிலும் மற்றெவ்வித விஷயங்களிலும் மற்றெந்த நகருக்கும் சற்றும் இளைத்த தல்ல. பள்ளிகொண்டு பலருக்கும் காட்சியளிக்கும் அரங்கநாதனை சேவிக்க மாந்தர் ஆண்டுதோறும் பல ஜில்லாக்களினின்றும் வருவர். இத்தகைய ஸ்தலத்திலே "முதலாவது வைதீகர் மகாநாட்"டின் திறப்பாளரும் அக்கிராசனருமாகிய சடகோபராமானுஜய்யங்காரை அறியாதவர் ஒரு சிலரேயாவர். மற்றும் பிரபல காங்கிரஸ் வாதி யோருவர் தம் நகருக்கு விஜயஞ்செய்து "தீண்டாமை" என்னும் விஷயத்தைப்பற்றி பிரசங்கம் செய்தபொழுது, இவர் தான் தம் குழாங்களோடு கருப்புக்கொடி ஏந்திநின்று எதிர்ப்பிரசாரம் செய்தார் என்ருல் நேயர்கள் ஆச்சரியப்பட மாட்டார்கள்.

பல்வகைச் சிறப்புகளிருந்தும் புத்திரப் பேறின்மையால் ஐயங்காரும் அவர் மனைவி ருக்மணிஅம்மாளும் பெரிதும் விசனப்பட்டனர். இறுதியில் ருக்மணியம்மாள் தமது 28-வது வயதில் ஓர் பெண்குழந்தையை ஈன்றெடுத்தார். குலத்துக்கு ஓர் விளக்கு போன்ற குழந்தை பிறந்ததைக் கண்டு ஐயங்கார் அடைந்த ஆனந்தத்துக்கும் ஓர் அளவுண்டோ? தமது குழந்தைக்கு சரோஜினி என்று பெயரிட்டு ஆர்வமுடன் வளர்த்தார்கள். குழந்தை சரோஜாவுக்கு வயது 7 நிரம்பிவிட்டது. ஐயங்கார் படுத்த படுக்கையாக வியாதியுற்றுக் கிடக்கிருர். வைத்தியர்களும் ருக்மணி அம்மாளிடம் இனி ஐயங்கார் பிழைப்பது அரிதெனக் கூறிவிட்டனர். என் செய்வாள் ருக்மணியம்மாள்! பாவம்!!

ருக்மணியம்மாள் தன் கணவரையணுகி "நாதா! இனித்தாங்கள் பிழைப்பது துர்லபமென டாக்டரும் கூறிவிட்டார். சோதிடர்களும் அப்படித்தான் பலன் கூறுகிருர்கள். ஆதலின் தங்களது கண்முன் சரோஜாவுக்குக் கல்யாணம் செய்துவைக்கக் கோருகிறேன்; அதையேனும் கண்டுகளியுங்கள்" என மொழிந்தாள். அய்யங்காரும் "ருக்மணி! நானும் அப்படித்தான் நினைத்தேன் ஆயினும் நமக்கியைந்த மாப்பிள்ளையைத் தேடவேண்டாமா?" என்று மறுமொழி பகர்ந்தார். அதற்குள் ருக்மணியம்மாள் "நாதா,

கோபாலய்யங்காரது பிள்ளையாகிய சீனிவாசனுக்கு நம் சரோஜினியை மணமுடிக்க தீர்மானித்து விட்டேன்."

"சரி கோபாலய்யர் மிகுந்த பணக்காரர் தான். அதிலும் ஒரே ஒரு ஆண்குழந்தை. ஆதலின் அவனுக்கு முடிக்கவே என்மனமும் முடிவுகட்டுகிறது. ஆயினும் கோபாலய்யங்காரது உள்ளக்கிடக்கையை நாம் அறிதல் வேண்டுமல்லவா?"

"நாதா, நான்முதலிலேயே அவர்களது சம்மதத்தைப் பெற்று விட்டேன்; முக்கால்பாகக் கல்யாண காரியங்கள் முடிந்துவிட்டன. இனித் தாலிகட்டவேண்டிய தொன்றுதான் பாக்கி" எனக்கூறி முடித்தாள். ருக்மணியம்மாள் முன்னின்று நடத்த மணம் பல்வகை சிறப்புக்களுடன் விமரிசையாக ஓர் சுபமுகூர்த்தத்தில் இனிது முடிந்தது.

மணமுடிந்த ஒரு மாதகாலத்திற் கெல்லாம் திரு. ஐயங்காரவர்கள் இவ்வுலக வாழ்வை நீத்தார். அதைக் கண்ணுற்ற ருக்மணியம்மாள் கண்ணீர் விட்டாள். மார்பிலடித்துக் கொண்டாள். "குழந்தை சரோஜாவின் திருமண வைபவத்தைக் கண்டுகளிக்கும் பாக்கியம்பெற்ற அவர் தமது பேரப்பிள்ளையின் மழலைச் சொற்களைக் கேட்டுமகிழ பாக்கியம் இல்லாது ஒழிந்துவிட்டதே" எனக்கதறியழுது கண்ணீர் பெருக்கினள். அழுது புரண்டாலும் மாண்டார் மீண்டும் வருவரோ?

காலச்சக்கரம் சுழலாமலா விருக்கின்றது? நாட்கள் பறந்து சென்று வருடங்கள் கழிந்தன. தான் இனி சந்தோஷமாய் தன்மகளையும் மருமகனையும் பார்த்து இனிது வாழலாம் எனவும், தன் அருமைச் செல்வி சரோஜாவுக்கு ஐந்தாறு ஆண்டுகளில் குழந்தை பிறக்கும் காலத்தைக் கண்டு களிக்கலாமெனவும் மனக்கோட்டை கட்டினள். அவளது மனக்கோட்டை "விதி" யென்னும் கொடிய அரக்கனால் தகர்த்தெறியப்பட்டு விட்டது; இப்பொழுது மிகுந்த துக்ககரமான—ஏன்—அவளது கணவனது இறப்பைவிட மிகவும் துக்கத்தைத் தாக்கூடிய சம்பவம் நடைபெறப் போகின்றது. அது என்ன? ஆ! அதை எழுத நம் கை கூசுகின்றதே!—ஆ! ஆ! அதுதான் சரோஜினி தனது 12-வது வயதில் தன் கணவனை இழக்க நேரிட்ட சம்பவமே யாகும்.

தனது மறுமகனை சீனிவாசன்-15-வயது பையன்-மலேரியா சுரத்துக்கு இரையானசெய்தி ருக்மணி அம்மாளுக்கு மிகுந்த இன்னலை விளைவித்தது. தன் மகளைக் கட்டியணைத்து "ஆ! என் செல்வமே உன்னைப்பாழும் நரகத்தில் தள்ளிவிட்ட கொலைப்பாதகி யல்லவா நான்? நான் உனக்குத் தாய் என்று எவ்வகையில் கூறிக்கொள்ள முடியும்; உனக்கு யமனாக வல்லவோ நான் தோன்றினேன், பெண் புத்தி பின்புத்தி யென்பார்களே! அதற்கு நானும் இலக்காகி விட்டேன் போலும்! "கண்ணே சரோஜா உன்னை நான் கொல்லாமல் கொன்றுவிட்டேனே? என் எண்ணமெல்லாம் பகற்கனவிற்கு ஒப்பாய் முடிந்துவிட்டனவே? ஒன்றுமறியாப் பருவத்தில் கல்யாணம் என்னவென்று அறியாத அச் சிறு பிராயத்தில் சிறிதும் ஆராயாது மணமுடித்து உன் வாழ்க்கையையே சீர்குலையச் செய்த என் செயல்களை என்னென்றியம்புவேன்" என தழுதழுத்த குரலில் கூறினாள். பேதை சரோஜா மேலும் கீழும் விழித்தாள். சீனிவாசன் இறந்து ஒன்பது மாதங்களேயாகின்றன. இச் சமயத்திற்றான் நம் கதையும் ஆரம்பமாகிறது.

விடியற்காலம் நான்கு மணியிலிருந்து கால் நடையாகவும், கார், துவிச்சக்கர வண்டி முதலிய வாகனங்களிலும் ஜனங்கள் திரள் திரளாக படித்துறையை யடைந்தவண்ணமாகவே இருக்கின்றனர். "வைகறைத் துயிலெழு" என்ற பழமொழியின் கருத்தை ஜனங்கள் அன்றுதான் உணர்ந்தார்களோ என்னவோ?

பள்ளிப் பிள்ளைகள் வெகு குதூகலமாக ஆற்றில் நீராடவரும் காட்சியும், நீராடித் திரும்பும் வைதீக பிராமணர்கள் அக் கும்பலில் பிறர் எங்கு நம்மைத் தீண்டிவிடப்போகிறார்களோ என்ற அச்சத்துடன் வேஷ்டியைச் சுருட்டிமடக்கி நடக்கும் விநோதமும், பெண்கள் குடஞ்சகிதமாய்க் தேர் அசைவதுபோல் ஆடிக்கொண்டு அன்ன நடையுடன் ஆற்றை நெருங்கும் தோற்றமும் கண் கொள்ளாக் காட்சியாக விளங்கின.

ஒரு வேளை கஞ்சிக்குக்கூட திக்கற்ற ஏழை ஜீவன்கள் தலை முழுகிச் செல்லும் மாந்தரிடம் காசுபெறவேண்டி கையைநீட்டி யிரந்தவண்ணமாயிருக்கின்றனர். ஸ்நானம் செய்யும் சந்தோஷத்தில் பணத்தை யிழந்து பரிதவிப்பவர் பலர்; தமது உடைகளை

வைத்தவிடந் தெரியாது தவிப்பவர் சிலர்; அலையால் மோதுண்டு தத்தளிப்பவர் பலர்; சில பக்தர்கள் தமது விபூதி சம்புடத்தையும் மற்றும் சிலர் தமது குங்குமப் பெட்டியையும் பறிகொடுத்துநின்ற தோற்றம் அவ் விஷயத்தில் கல்நெஞ்சம்படைத்த எனக்கே பரிதாபகரமாயிருந்த தென்றால்!

இவ்விதமாக ஸ்ரீரங்கம் அம்மாள் மண்டபப்படித் துறையில் பலவித லீலாவினோதங்கள் அரங்கேற்றப்பட்டன.

குழப்பத்தி னிடையே ஓர் குரல். திண்ணம், அது அபாயகரமான குரல்தான்.

"ஐயோ! ஐயோ! தண்ணீர் ஒரு பிள்ளையை அடித்துக்கொண்டு போகிறதே! அதோ தலை தெரிகின்றது. பெண்பிள்ளைபோ லிருக்கின்றதே!" என்றான் ஒரு வாலிபன். திடீரென்று ஓர் மாது திக்பிரமை கொண்டவள்போல் மிகுந்த ஆவேசத்துடனும், பரபரப்புடனும் 'கண்ணே சரோஜா! சரோஜா! இப்படியுமா உன் தலைவிதி முடிந்தது. ஏ ரெங்கநாதா! தீனதயாளா! ஆபத்பாந்தவா! அனுதைரக்ஷகா! உன் துணை யல்லாது வேறுதுணை யறியேன். கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்பார்களே! இறைவா! என்மீது இரக்கங்கொள்ள லாகாதா? ஏ-ஜனங்களே! என் புத்திரியை மீட்க மாட்டீர்களா? எனக்குற்ற துணைவர் வேறொருவருமில்லையா? கண்ணே! கண்ணின் கருவிழியே! சரோஜா!' எனக் கூக்குரலிட்டபடியே கீழே விழுந்து மூர்ச்சையானாள். அவள்தான் ருக்மணியம்மாள் என்பதை நேயர்களுக்குக் கூறவேண்டுமா?

"புருஷனை இழந்த பவிஷுக்கு ஆற்றுக் குளியல்வேறா? இந்த அக்கிரமம் கடவுளுக்கு ஏற்கவில்லை. அதனால்தான்........"

அவ்வளவு பெரிய கூட்டத்தில் ஒருவரும் அப் பெண்ணை—ஏன் நம் சரோஜினியை மீட்க மனந் துணிந்து முன்வரவில்லை என்றால் அவரது கோழைத்தனம் நன்கு வெளியாகவில்லையா? வீண் பேச்சு பேசுபவரே மலிந்து கிடக்கின்றனர். 'பாவம் பெண்பிள்ளை, அதிலும் அபலை' என்றார் ஒருவர். 'என்செய்வது கடவுள் சித்தம் போலும் இது? விதியை வெல்ல முடியுமா?' என்று சாஸ்திரம் பேசினார் பிறிதொருவர். இவ்விதமாக ஒவ்வொருவரும் ஒவ்வொரு

விதமாய்ப் பேசிக் காலத்தை மடித்தனரே யொழிய அவளை மீட்கத் தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவில்லை.

இன்னும் சிறிதுநேரம் தயங்கியிருப்பரேல் அவள் அன்று இறந்துபட்டிருப்பாள். அப்பொழுதுதான் கட்டுறுதியுள்ள தேகத்தை உடையவனும் காளைப்பருவத்தை எய்த சமயங்கோரியிருப்பவனும் ஆகிய யுவன் ஒருவன் ஒரேப் பாய்ச்சலாகப் பாய்ந்து, வெகு திறமாக அவளைக் கைக்கொண்டு கரையேறினன். இவனன்றோ ஆண்மகன்! சிறந்த வீரன்! அப்பொழுதுதான் அவன் மனங் குளிர்ந்தது. பிறர் அவனை வியந்தவண்ணமாக, அவனது பருத்துவளர்ந்திருந்த தோள்களையும், அழகிய வடிவத்தையும், விஜயனுக் கொப்பான ஆண்மையையும் பலப்படக் கூறினர்.

வெள்ளத்தினின்றும் மீட்டுவரப்பட்ட சரோஜாவுக்குத் துணையாக விருந்த ருக்மணியும் மறு இரு வருடங்களில் தன் மகளின் கதியை நினைக்குந்தோறும் நெக்குநெக்குருகி உயிர்நீத்தாள். விதவைத் துயரால் வாடும் அவளுக்குத் தேர்தல் கூறிவந்தது தனது அன்னையின் தேன்மொழியேயாகும். அவளது மதிமுகம் மறைந்த பின்பு புவனமே இருள் அடர்ந்துவிட்டதுபோ லிருந்தது சரோஜாவுக்கு. கண் ஒளி இழந்தவள்போல் கதறினள்.

வயது நிரம்பாத, அதிலும் பால்ய விதவையாகிய சரோஜா போன்றவர்கள் சூதும், வஞ்சகமும் நிறைந்த நகரங்களில் தனி வாழ்க்கை நடத்துவதென்றால் அது இலேசான காரியமா? சரோஜா பால்ய வரம்பைக் கடந்து மங்கைப்பருவத்தை எய்தினள். இல்லறம் என்னும் இன்பப் பொழிலுட் பிரவேசித்து இன்ப வாழ்க்கை என்னும் தென்றலை அனுபவிக்கவெண்ணிய சரோஜாவுக்கு சமூகம் தடை உத்தரவு பிறப்பித்துவிட்டது.

சமூக இலாகாவின் தடை உத்தரவை நினைக்கும்போதெல்லாம் கண்ணீர் சிந்தினள். அத் தடை யுத்தரவை மீறி தன்னிஷ்டப்படி வாழ்க்கை நடத்த அவள் மனந் துணியவில்லை. "ஏ சமூகமே! உனக்கேன் இப்படிப்பட்ட பாரபக்ஷம்? ஆண்களுக்கு எவ்வளவு முறையேனும் விவாகம் செய்துகொள்ள அனுமதிக்கும் நீ, பெண்களுக்கும் அவ்வுரிமை வழங்க ஏன் தயங்குகிறாய்? பெண்களிடத்தில் சற்றுவது இறக்கங் காட்டலாகாதா? வைதீக வெறிபிடித்த

பெற்றோர்களே! சமூகாயக் கொள்கை' எனக் காரணத்தைச் சுட்டி உலக விஷயங்களையே ஒன்றுமறியாத பால்ய வயதில் விவாகம் செய்வித்ததின் பலனன்றோ இது? சமூகத் தலைவர்களே! உங்களைத்தான். பால்ய விதவைகளை மறுமணம் செய்துகொள்ள அனுமதிப்பதால், அவர்கள் கற்புக்குப் பங்கம் எற்படுகிறதென்று நினைக்கிறீர்களா? ஒரு பெண், தான் உண்மையாகக் காதலித்த காதலனை இழந்துவிட்டால்தானே அவளது கற்பிற்கு ஹானி உண்டாகும்? மற்றபடி அது எவ்விதத்தில் பொருந்தும்? பால்மணம் மாறாப் பச்சிளங் குழந்தைகளுக்குக் காதல் உணர்ச்சி உண்டோ? ஆதலின் தலைவர்களே! எங்களுக்கு அனுமதி கொடுங்கள், எங்களுக்கியைந்த கணவர்களோடு கூடிக் குலாவ.

“விதவை என்னும் அரக்கனுக்கு அடிமைப்படுத்தப்பட்டிருப்பவர்கள்—அம்மம்மா! கோடிக்கணக்கானவர் என்று கேட்ட பின் பாவது உங்கள் நெஞ்சு கரையவேண்டுவதில்லையா? அவ் விரண்டரைக்கோடி விதவைகளால் உலகினுக்கு ஓர்வித நன்மையாவது உண்டா? ஆதலின் பெரியோர்களே! இன்றே எங்களுக்கு அனுமதி தாருங்கள்” என்று தன் மனத்திடம் முறையிட்டாள்.

சரோஜாவினது உள்ளத்தில் இன்னதென்று விவரிக்க வியலாத ஒரு கவலை உருக்கொண்டு அவளை வதைத்துக்கொண்டிருந்தது. உலகமே வஞ்சகம் நிறைந்த, நீதி, நியாயமற்ற இருட்டு நிரம்பிய பாசறை என்று அவளுக்குத் தோன்றிற்று. இவ்வளவு கஷ்டங்களிலும் அவ் வுத்தமனின்—தன் உயிரைக் காத்த சுந்தரனின் அழகிய வதனம் மட்டும் அவளுக்கு அடிக்கடி காட்சியளித்து வந்தது. அவ்வின்முகம் அவள் அகத்தைவிட்டு அகலவேயில்லை. அல்லது அவள்தான் அதை எப்படி மறக்கமுடியும்? இவள் வீட்டிற்கெதிரே வாசுதேவன் என்றொரு வாலிபர் வசித்துவந்தார். நுண்ணிய அறிவும் சிறந்த அழகும் கொண்டு அவர் விளங்கினர்.

தன்னுடைய வாழ்க்கையைப் பகிர்ந்துகொள்ள அவ் வாலிபரே பலவிதத்திலும் தகுதியுடையவர் எனக் கண்டுகொண்ட சரோஜா அவரிடம் அளவற்ற மையல்கொண்டுவிட்டாள். அது நாளடைவில் காதலாக மாறிக் கொழுந்துவிட்டெரியலாயிற்று.

அவ் வாலிபரைக் காண நேர்ந்தபொழுதெல்லாம் அவரை

அவள் கூர்ந்து கவனிப்பாள். "என்ன அழகு! என்ன அங்க அமைப்புகள்! என்ன வசீகரம்! என்ன ஆண்மை! வீரம்!! அவர் முகம் அவரது களங்கமற்ற தன்மையைப் பளிங்குபோல் எடுத்துக் காட்டுகிறதே" என்று தனக்குத்தானே கூறிக்கொள்வாள். சமூகக் கட்டுகளை உடைத்தெறிந்து விட்டு வாழ்க்கை அரங்குள் பிரவேசிக்க அவள் எண்ணினுள். அதற்குக் காதலர் இருவரும் ஒருப்பட்டு வெளியேறினுற்றானே, பிறமதத்தில் சேர்ந்தோ அல்லது தனித்தோ வாழ்க்கை நடத்த முடியும்?

தான் காதலித்த யுவனிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்து அவனது சம்மதத்தைப் பெற விரும்பினுள் அவள். ஆனுல் பெண்களுக்கு இயற்கையாகவுள்ள நாணம் அவளை அவ்வாறு செய்யவொட்டாமல் தடுத்து விட்டது. இன்னும் கொஞ்ச நாட்களில் அவளுக்குப் பைத்தியம் பிடித்து விடும்போலிருந்தது. தனது லக்ஷியத்தை அடைவதற்காக, தன்னுல் மனமாரக் காதலிக்கப்படும் வாலிபரைப் பெறுவதற்காக எவ்விதத் தியாகமும் செய்யக் காத்திருந்தாள். ஆனுல் அவனே? யார் கண்டார்!

5

இரண்டு மாதங்களில் சரோஜா எலும்பும் தோலுமாகிவிட்டாள். நடக்கவும் நகரவும் சக்தியற்ற உயிர்ப்பிணமாகக் கிடக்கிருள். அவளுக்கு உதவி செய்வார் ஒருவருமில்லை. பெரிய பெரிய உத்தியோகங்கள் வகிக்கும் உறவினர்தான் இவ்வபலையைக் கவனிப்பவரா?

எதிர்பாராத விதமாக அவளுக்குப் பணிவிடை செய்யக் கிடைத்தாள் சாரதா வென்னும் இளமங்கை. அவள் சரோஜாவினிடம், தானும் ஓர் பால்ய விதவை யென்றும், தனக்கு உறவினர் ஒருவருமில்லை யென்றும் சாற்றினுள். சரோஜா அடிக்கடி அவ் வாலிபனின் பெயரை உச்சரிப்பதை அப்பணிப்பெண் அவ்வப்போது கவனித்து வந்தாள்.

6

அதே ஆடி 18உ மாலை மணி 6. தோழி சாரதாவும் வீட்டிலில்லை. சரோஜா மட்டும் கட்டிலில் தனியாய்ப் புரண்டுகொண்டிருந்

த்தாள். மாலைக்காலம் அவளுக்கு இன்பத்தையூட்டவில்லை. அவளுடைய எண்ணங்கள் நிமிடத்துக்கு நிமிடம் மாறிக்கொண்டிருந்தன. மனதைப் பறிகொடுத்த அவளுக்கு மன நிம்மதி யேது? காதலரே! என் விருப்பத்தைப் பூர்த்தி செய்யலாகாதா? உமது திரண்ட தோள், முகம் இவற்றைக் கண்ணுறும்பொழுதெல்லாம் உண்டாகும் அன்பிற்கு ஓர் அளவுண்டோ? நீரும் சாதிக் கட்டுப்பாட்டிற்கு அஞ்சுகிறீரா? நன்கு கற்றுணர்ந்த நீரே இங்ஙனம் யோசிக்கலாமா? நீரும் மாதர் மறுமண சங்கத்தின் உறுப்பினரன்றோ? காதலா! உண்மையான தெய்வீகக் காதலுக்கு என்றும் அழிவில்லை. நான் உம்மீது அழிவில்லாத காதலைக் கொண்டுவிட்டேன். இப்பிறப்பில் கிட்டாவிட்டாலும் மறு பிறப்பிலாயினும் நான் உம்முடன் கூடிவாழ விரும்புகிறேன்" என்று கண்ணீர் பெருகக் கதறினாள்.

அடுத்த நிமிடத்திற்கெல்லாம் கதவு திறக்கப்பட்டது. சாரதாவும், வாசுதேவனும் உள்ளே நுழைந்தனர். "கண்ணே! காதலி! சரோஜா! நீ அனுப்பிய லிகிதம் கிடைக்கப்பெற்றேன். என் மீது கோபமோ? ......பயப்படாதே சீக்கிரம் குணமாகிவிடும்................

புன்னகை ததும்பிய முகத்துடன் சரோஜா எழுந்திருந்து கடைக்கண்ணால் நோக்கினாள். வைத்தியர்களாலும் கைவிடப்பட்ட அவளுக்கு உற்சாகத்தையும் தேக பலத்தையும் ஊட்டிய காதலின் வேகந்தான் என்னே!

அவளது முழுமதியன்ன முகத்தையும், ரோஜா மலரை நிகர்த்த மெல்லிய அதரங்களையும், கருாஞ்சு போன்ற கூந்தலையும், பிறைச் சந்திரன் போன்ற நெற்றியையும்,வில்லினை யொத்த புருவங்களையும், எள்ளின் மலர் போன்ற நாசியையும், புன்னகை தவழும் பவள வாயையும், மானிற மேனியையும், பூங்கொடிபோன்று குறுகித் துவளும் இடையையுங் கண்டு அவற்றில் லயித்தபடியே அரை நிமிஷ நேரம் அசைவற்றுப் பதுமை போல் ஸ்தம்பித்து நின்றான்.

சரோஜாவுக்கும் வாசுதேவனுக்கும் விவாகம் நிறைவேறிவிட்டதென்றும், வாசுதேவனே அவளது உயிரைக் காத்த புண்ணி

யவானென்றும், சாரதா வாசுதேவனின் சகோதரியே என்றும் பின் விசாரித்ததில் தெரியவந்தது.

அது எவ்வாருயினும் மாதர் மறுமணம் என்ற கொள்கைக்கு வழிகாட்டியாகி விட்டாள் சரோஜா.

ரங்கநாதனும் இவர்களுடைய விவாகத்தை ஏற்றுக்கொண்ட தற்கறிகுறியாகப் புத்திரப் பேற்றை அருளியிருக்கிருரென்று கேள்வி.

---

## மாபேறளித்திடும் மாதர் மறுமணமே

(உ. அரு. அருணுசலம் செட்டியார்)

### நேரிசை ஆசிரியப்பா.

உலக மதனில் உற்றிடு பிறவியில்
மலர்மன முடைய மக்கட் குழுவினர்
சிறந்தோ ரென்றே செப்பினர். மேலும்
பிறந்த மக்களிற் பிற்போக் குடையோர்
விலங்கா மென்றே விலக்கினர். அதனில்
கலங்கா தெதற்கும் கருத்துடன் நாடித்
தனக்கென வாழ்தலும் தன்னலங் கருதலும்
மனத்தினும் கொளாது மற்றவர்ப் பேணலே
தொண்டா யேற்பவர் தூயோர். பிறரிற்
கொண்டிடு வினையின் குறிப்பிற் கேற்பத்
தன்னலம் பேணித் தகவுடன் பலர்க்கு
நன்னலம் புரிவோர் நடுத்தகை யாளர்.
மற்றவர் கடையர் மதியிலா மடையர்
குற்றமுள் விலங்கினுங் கொடியர் என்றே
பிரித்திட் டார்கள். பெற்றியை யுணர்ந்த
பெரியீர்! இதனிற் பிரிந்துள விதத்தில்
எந்நல் வகையை ஏற்றிட லாகும்

சொந்தப் பற்றைத் துறப்பது நம்மில்
சிலர்க்கே பொருந்தும். சீரியோ ரெல்லாம்
பலர்க்கிதம் புரிந்தும் பாரினிற் றன்னலம்
பேணுந் தகைமை பெற்றிடல் ஆமே.
ஆணும் பெண்ணும் அறிந்தே இதன்படி
இல்லற நடத்தினு லியாவரு மின்றே
நல்லற வாழ்வும் நலமும் அடைவோம்.
இல்லற மென்பது யாதெனக் கிளரில்
பல்லறஞ் செறிந்த பாவைய ராடவர்
இருவரு மொன்ருய் இயல்புடன் கூடியே
ஒருமனங் கொண்டு உலகினில் வாழ்வைப்
பெருகிடச் செய்து பிரானடி பெறுதலே.
இருவரில் யார்மேல்? யார்கீழ்? என்றிடின்
ஒருவருக் கொருவர் உறுதுணை இன்றேல்
பெருகுமிவ் வுலகினிற் பிள்ளைப் பேறும்
அன்பின் பெருக்கமும் அனைவரும் ஒன்ருய்
இன்பம் துய்த்தலு மெங்ஙனம் கூடும்?
உணர்ந்திடி னிருவரில் உயர்வு தாழ்விலே.
குணந்தெரி யாதுளக் கோதுள சிலபேர்
ஆணுக்குப் பெண்கள் அடிமைகள் என்றே
வீணுக்கு வம்புகள் விளைத்திட் டார்கள்.
சேயிழை யாரைத் தெருவினிற் றிரியும்
நாயினுங் கடையாய் நம்பியே வீட்டிற்
புதைத்துப் பற்பல புன்சடங் கதனுல்
வதைத்து, மக்களை வழங்கிடு கருவியாய்
செயிர்த்திடு தீமைகள் செய்தனர். இவரை
உயிர்க்கிதம் புரிவோர் உத்தமர், மற்றவர்
மத்திமர் அதமர் மாக்கள் என்றே
இத்தனை பிரிவுகள் இயம்பிய வதனில்
எத்தகை யினராய் ஏற்பது? இதனை
உத்தமர் உணர்ந்து உலகினிற் பெண்களும்
ஆண்களும் ஒன்றே ஐயமி லேயென
மாண்புகள் செய்தனர். மங்கைய ரதனுல்

இன்றுள நிலையை ஏற்றனர். இன்னும்
ஒன்றே அவரை உய்த்திடா வகையில்
தடுத்து நிற்பதும் தன்னைக் கெடுப்பதும்.
எடுத்து இன்னமும் இயம்பிட வேண்டுமோ ?
இந்துச முகத்தில் யாரோ சிலரால்
வந்த வினையால் மங்கையர்க் கேதனி
விதவைப் பட்டம் விளைத்து, ஆடவர்
விதவித மணங்கள் விரும்பிச் செய்திட
இணங்கிடும் ஒன்றே. இதுதான் ஞியாயமோ ?
அணங்கைப் பார்க்கினும் ஆண்தான் சிறப்போ ?
ஆண்களின் உளமோ அலைகடற் காற்றால்
காண்குந் திசைசெலுங் கப்பலே போல
நிண்ணய மற்று நீள்வினை யாற்றும்
எண்ணமியக்க எங்குமே சென்று
அலைந்திடும். அதனை அறத்துறைக் குடாவில்
நிலைபெற நிறுத்து நேர்நங் கூரமாய்
நிற்பது பெண்களின் நிகரிலாத் தொண்டே.
அற்ப உளத்தால் அறியா மனிதர்,
பொற்புறு மாதரைப் புறக்கணிக் கின்றார் !
கற்பெனும் பெயராற் கட்டிவைக் கின்றார் !
சாத்திரம் பேசிவீண் சழக்களிக் கின்றார் !
கோத்திரஞ் சொல்லிநற் குடிகெடுக் கின்றார் !
விதவைப் பெயரால் வீடடைக் கின்றார் !
புதல்வப் பேற்றின் புகழழிக் கின்றார் !
அணிகலன் அழகை அபகரிக் கின்றார் !
பணியா ளரைப்போற் பறக்கடிக் கின்றார் !
பூசந்தன மெலாம் போக்கடிக் கின்றார் !
வாசந்தரு பொருள் வறட்சியாக் கின்றார் !
வெள்ளைப் புடவை விருந்தளிக் கின்றார் !
எள்ளைச் சோற்றில் இட்டளிக் கின்றார் !
மூலை முடுக்கில் முடக்கவைக் கின்றார் !
வேலை யிலார்போல் வீணாக்கு கின்றார் !
மங்கள மதனில் மறைத்தொதுக் கின்றார் !

தங்கள் வாழ்வெலாம் தகர்த்தெறி கின்றார்!
என்னே மடமை! என்னே விந்தை!
முன்னோர் கண்ட முடிபிது தானோ?
வல்லார் காட்டிய வழியிது இல்லை·
அல்லார் கூட்டிய அநீதம் இதனால்
வில்லார் புருவ வேல்விழி விதவை
நல்லார் பாரத நாட்டினில் இன்று
இரண்டரைக் கோடி என்றுமே கணக்குகள்
திரண்டு பெருகுது தீங்குகள் விளையுது.
அந்தோ! இந்த அநீதியை உணர்ந்து
இந்துக் களெலாம் எற்றுவது எந்நாள்?
ஆண்களைப் போலவே அணங்குகள் மணஞ்செயக்
காண்குவ தொன்றே களிப்பை அளித்திடும்.
அதுவே அவர்க்குறும் அல்லலைப் போக்கிடும்.
ஒதுக்கி வைத்ததீ உளமா சகற்றிடும்.
பிறர்க்கிதம் புரிவதே பெற்றியென் றேற்றுநற்
சிறப்பறம் பலசெயுஞ் சீரிய குணமுளீர்!
நமக்கினி தாகவே நலந்தரு நாரியர்
தமக்குநாம் தகாத தண்டனை விதிப்பது
பொருந்துமோ? இதனைப் பொறுக்குமோ அறமும்?
பொருவறு பெண்களைப் போற்றி வளர்த்திடின்
திருவருள் கூடிடும். செல்வமும் ஓங்கிடும்.
கருமிக வளர்ந்திடும். கவலை ஒழிந்திடும்.
நாடுகள் செழித்திடும் நலமெலாம் கிடைத்திடும்.
நாடுவீர் இன்றே நாரியர் வாழ்வே.
ஆடவர் மணம்போல் அணங்குகள் மறுமணம்
கூடவே செய்தாற் றுவலயம் ஓங்கிடும்.
மன்றங் களதனால் மாதர் மறுமணம்
இன்றே இயற்றிட எல்லா இந்துவும்
கூடியே நல்லார் குணம்பெறத்
தேடிடு வீரே! செகமெலாம் ஓங்கவே!

சரித்திரக் கதை.

# விதவையை மணந்த வேந்தன்.

'ஏயஸ்'

விதவை மணத்தை நமது முன்னோர்கள் ஆதரித்திருக்கின்றார்கள் என்பதற்கு நமது புராணங்களிலும் சாஸ்திரங்களிலும் பல ஆதாரங்கள் காணக் கிடக்கின்றன. சரித்திரமும் இவ் விஷயத்தில் பின் வாங்கவில்லை.

வீரத்தில் சிறந்த ராஜபுத்திர மன்னர்கள் ஆண்ட மீவார் தேசத்தில், பூர் அரசன் விதவையை மணந்து, அவளது உதவியால்தான் இழந்த நாட்டை மீட்டிப் பேரும் புகழும் பெற்ற விவரம் இந்திய சரித்திரத்திற்குச் சிறந்த அணிகலனாகத் திகழ்கின்றது.

மீவார் தேசத்தின் தலைநகரம் சித்தூர். அதற்கு உரிய அரசன் ஹமீர் ஆவர். அலாவுதீன் சித்தூர்மீது படையெடுத்து அதைச் சிதைத்த பிறகு, மால்தேவ் எனும் வேறொரு சிற்றரசன் வசம் அதன் ஆட்சி ஒப்புவிக்கப்பட்டது. உரிமை பெற்ற அரசனான ஹமீர் நாட்டைவிட்டு மலைப்பிரதேசத்தில் அரண் அமைத்து ஓர் சிற்றரசை ஸ்தாபித்தான். மால்தேவும் ஹமீரும் ராஜபுத்திர வீரர்கள்தாம். மால்தேவ் அலாவுதீனால் நியமனஞ் செய்யப்பட்ட அரசன். பலாத்காரத்தால் ஹமீரின் ராஜ்யம் மால்தேவிடம் மாற்றப்பட்டது. எனினும் மால்தேவ் எச்சமயத்தும் சமாதானத்துடன் ஆட்சிபுரியமுடியவில்லை. நாட்டைச் சுற்றியுள்ள விளைநிலங்களெல்லாம் ஹமீரால் பாழ்பட்டன. கோட்டை கொத்தளங்களுக்குச் செல்லும் ராஜ பாதைகளெல்லாம் மனிதப் போக்குவரத்துக்குத் தகுதியற்றனவாகச் செய்யப்பட்டன. இதனால் நாட்டுமக்கள் சதா பயத்துடன் வாழ்ந்துவந்தனர். விவசாயம் ஒழுங்காக நடைபெறவில்லை.

பக்கத்தில் விரோதியை வைத்துக்கொண்டு மால்தேவால் காலங்கடத்த முடியவில்லை. ஹமீரை சமாதானப்படுத்தும் வழியொன்றைக் கண்டுபிடித்தான். தனது புத்திரியை மணஞ் செய்து தருவதாக ஹமீருக்குச் சொல்லி அனுப்பினான். செய்தி கேட்டதும் இவ்விதமாகவாவது தனது முன்னோர் ஆண்ட நாட்டைப் பெற

லாமா என்று ஹமீர் சிந்தித்தான். மணத்திற்குச் சம்மதித்தான். சுமார் ஐநூறு குதிரைவீரர்களுடன் சித்தூர் நோக்கிப் புறப்பட்டான்.

புகழ்பெற்ற சித்தூர்க் கோட்டையை அணுகியதும், வாயிலில் எத்தகைய அலங்காரமும் செய்யாதிருந்தது அவனுக்குச் சந்தேகத்தைக் கொடுத்தது. நண்பர்கள் முன்னரே எச்சரிக்கை செய்திருந்தனர். மால்தேவ் கல்யாணம் என்று சொல்லி ஏதாவது சூழ்ச்சி கருதியிருக்கக்கூடுமென்று அவர்கள் நினைத்தனர். ஆனால் ஹமீர் சலிக்கவில்லை. ஒரு சுத்தவீரன் ஏன் பயப்படவேண்டும்? சிறிது தூரத்தில் மால்தேவின் புத்திரர்கள் மாப்பிள்ளையை எதிர்சென்று வரவேற்றனர். ஹமீர் மாளிகைக்குள் அழைத்துச் செல்லப்பட்டான். மால்தேவும் அவனது படைத் தலைவர்களும் மாப்பிள்ளையை வரவேற்றனர். மணப் பெண்ணும் அழைத்துவரப்பட்டாள். எவ்விதச் சடங்குமின்றி மணம் நிகழ்ந்தது.

இவ்விதமாக வழக்கத்துக்கு விரோதமான முறையில் திருமணம் நிகழ்ந்ததற்குரிய காரணத்தை விளக்கியதுமணப்பெண்தான். அவள் ஒரு விதவை! இதுதான் ரகசியம். இந்த ரகசியத்தை வெளிப்படுத்தியதும் அந்த விதவைப் பெண்தான்! ஹமீருக்கு இதைக் கேட்டதும் அளவுமீறிய கோபம் பொங்கியது. ஆனால் இம்மணத்தின் மூலம் எதிர்பாராத உதவி கிடைக்கப்போகின்றது என்று அறிய அந்தக் கோபமெல்லாம் மகிழ்ச்சியாக மாறியது.

சித்தூரைத் திரும்பவும் பெறுவதற்கு அவ்விதவை மணப்பெண் ஓர் தகுந்த உபாயத்தைச் சொல்லிக்கொடுத்தாள். அது வெற்றிபெறக்கூடிய உபாயமே யென ஹமீரும் ஒப்புக்கொண்டான்.

மணப் பெண்ணுக்குச் சீதனமாகப் பல பொருள்களைக் கொடுப்பது வழக்கம். இவற்றுள் அவளிஷ்டம்போல் அவள் கேட்கும் ஒரு பொருளையும் கொடுக்கவேண்டும். சித்தூரில் ஜால் என்னும் பெயருடைய ஸிவில் அதிகாரியிருந்தார். அவரையும் சீதனமாகக் கேட்குமாறு ஹமீர் தூண்டப்பெற்றுள். விதவை மனைவியுடனும் ஜாலுடனும் ஹமீர் தன் மலைநாடு திரும்பினன்.

சில வருஷங்களில் ஹமீருக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது.

சித்தூரிலிருக்கும் தேவதையிடம் குழந்தையைக் கொண்டுசெல்ல வேண்டுமென ஹமீரின் மனைவி வேண்டிக்கொண்டாள். இவ் வேண்டுதலை நிறைவேற்ற தகப்பனுன மால்தேவும் சம்மதித்தான். ஆனல் மால்தேவ் ஊரிலில்லாத சமயம்பார்த்து இதற்கு நாள் குறிப்பிடப் பட்டது.

மால்தேவ் தன் படைகளுடன் தூரதேச மொன்றிற்குச் சென்றிருந்தான். அச் சமயம் ஹமீரின் மனைவி தன் குழந்தையுடன் ஜாலைக் கூட்டிக்கொண்டு சித்தூர் போய்ச் சேர்ந்தாள்.

படைத் தலைவர்கள்மீது ஜாலுக்கு அதிகச் செல்வாக்கு உண்டு. அவன் தன் செல்வாக்கை உபயோகித்து படைகளை ஹமீர் பக்கம் சீக்கிரத்தில் திருப்பிக்கொண்டான். கோட்டைவாசல் திறக்கப் பட்டது. ஹமீரும் தன் வீரர்களுடன் எதிர்ப்பின்றி உள்ளே புகுந்தான். கோட்டை கொத்தளங்களெல்லாம் ஹமீர் வசமாயின. எதிரிக்கு இடங்கொடுத்த மால்தேவ் திரும்பிவந்தபொழுது நடந்த விஷயத்தை அறிந்து மகமதிடம் ஓடிப்போனுன். அலாவுதீனுக்குப் பிறகு டில்லியில் ஆண்டது மகமது எனும் பெயருடைய மன்னனுகும். மகமதும் மால்தேவும் சேர்ந்து ரஜபுத்ர பிரபல ஸ்தானமான சித்தூரைத் தாக்கினர். மகமது கைதியாகி பிணையாகச் சில தேசங்களை விட்டுக் கொடுத்ததன்மேல் விடுதலையானுன்.

இந்தியாவிலேயே சுதந்திரமுள்ள ஹிந்துமன்னனுக ஹமீர் விளங்கினுன், இதர சிற்றரசர்களெல்லாம் அவர் குடைக்கீழ் வந்து சேர்ந்தனர். எதிர்த்தவர் அடக்கி ஒடுக்கப்பட்டனர். மீவாரில் ஒரு சிறந்த அரசனுக ஹமீர் பல ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான். ஒரு விதவைப் பெண்ணின் உதவியாலேயே, ராஜபுத்திர வம்சம் விடுதலை பெற்றது என்பது விதவைகளுக்கே பெருமையளிக்கும் விஷயமாகு மல்லவா?

---

விதவை கண்ணீர் — — — — வீட்டை அழிக்கும்.

# ஓர் வேண்டுகோள்.

(ராதன், ஜமன்.)

விதவை மணம் புரிய வேண்டியதுதான் என்று எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய நிலைக்கு சமூகம் இன்று வந்துவிட்டது. சமூக சீர்திருத்தம் பற்றிப் பேசும் எந்தப் பிரசங்க மேடையிலும் விதவா விவாகத்தைப் பற்றியே முதலில் பேசப்படுகிறது. நல்ல பிரசங்கி ஒருவர் விதவா விவாகத்தைப் பற்றி வாசாமகோசரமாய் வெளுத்து வாங்குகையில் எல்லோரும் வாயைப் பிளந்துகொண்டு மகா உருக்கமாகக் கேட்கின்றோம். விதவா விவாகத்தை ஆதரிப்ப வர் கையெழுத்துப் போடுங்கள் என்றால் 'இதோ நான் தயார்' என்று போட்டி போடுகின்றோம்.

விதவா விவாகப் பிரசாரம் ஏற்பட்டு பல வருடங்களாகி விட் டன. மாதர் மறுமண சகாய சங்கத்தாரும் இடைவிடாது உழைத்து வருகின்றனர். பத்திரிகையும் தோன்றிவிட்டது. இன் னும் பயனைக் காணவில்லை. சமூக சீர்திருத்தக்காரர்களின் ஆசை இன்னும் நிறைவேறவில்லை.

“முதலில் நாலு கல்யாணம் நடக்கவேண்டும். பிறகு விர் விர் ரென்று ஏராளமான கல்யாணங்கள் நடந்துவிடும்” என்று சில சித் தாந்திகள் கூறுகின்றனர். (ஒன்று இரண்டு கூடப் பத்தாதாம்! முதலில் நான்கு கல்யாணங்கள் நடக்கவேண்டுமாம்!) நாலு கல் யாணம் எப்படி நடப்பது?

மறுமணம் புரிந்து கொள்ள ஆசையுள்ள பெண்கள் முன்வர வேண்டும். அவர்களைச் சேர்ந்த சீர்திருத்த உறவினர்கள் அவர் களுக்கு பக்கபலமளிக்க வேண்டும். இவ்வளவுக்கு தைரியம் இன் னும் ஒருவருக்கும் உண்டாகவில்லை. ஏராளமான பெண்களுக்கு மனதுக்குள்ளேயே ஆசை குமுறிக்கொண்டிருக்கிறது. வெளியே சொல்ல பயம், திகில், கூச்சம், என்ன நேரிடுமோ என்ற ஏக்கம். ரகசியமாகக் குற்றம் புரிய ஆரம்பித்து அதனால் பல தோஷங் களுக்கு ஆளானாலும் ஆகின்றனர்களே யன்றி எல்லோரும் போற் றக்கூடிய விதவா விவாகத்திற்குத் தைரியமாக முன்வர இன்னும் அவர்களுக்குத் தோன்றவில்லை.

விதவா விவாகத்தை ஆதரித்து மேடையிலே பேசும் அன்பர்களாவது தங்களைச்சேர்ந்த அத்தகைய பெண்களிருந்தால் அவர்களுக்கு உதவியளித்து முன்கொண்டுவரலாம். அந்த நிலைமையும் இன்னும் ஏற்படவில்லை. மேடைப் பிரசங்கமேன்றால் நோக்கும் நேக்குமாசொன்னேன்? ஊருக்கல்லவோ சொன்னேன்" என்ற கதையில் முடிந்து விடுகிறது.

ஆகவே, எப்படியாவது விவாகம் விரைவில் நடப்பதற்கு ஒரு வழிசெய்து ஆகவேண்டும். ஆரம்பத்தில் தாய் தந்தையர்கள் முன் வந்து விதவையைக் கட்டிக்கொடுப்பார்களென்று கனவிலும் கருதுவதற்கில்லை. பெண்களுக்கும் வாலிபர்களுக்கும் உண்டாகின்ற துணிவில்தான் விஷயம் முடியவேண்டும்.

எனவே, கீழ்க்கண்ட முறைகளைக் கையாளுவது நன்மை பயக்கக்கூடியதாயிருக்கலாம் எனக் கருதுகிறேன்.

(1) வெளிநாடுகளிலுள்ள பிரபலமான சமூக சங்கங்கள் முதல் விதவா விவாகம் புரிந்துகொள்ளும் பெண்மணியைப் பாராட்டி அவருடைய வீரத்துக்காகவும், துணிவுக்காகவும், சமூக சேவைக்காகவும் பெருந்தொகை மதிப்பாயுள்ள ஓர் பொருளை அவருக்கு சன்மானமாக அளித்தல்.

(2) சில பெண்கள் மறுமணம் செய்துகொள்ள ஆசையிருந்தும் தாய் தந்தையர்களுக்குப் பயந்து கல்யாணம் செய்துகொண்டால் என்னென்ன துன்பங்கள் நேரிடுமோ, வாழ்க்கை நடத்தப் பொருள் கஷ்டம் ஏற்படாமல் இருக்குமோ என்றெல்லாம் கவலைப் படலாம். அவர்கள் மணந்துகொள்ளப்போகும் வாலிபர்களில் பொருள் வசதியில்லாதவரும் இருக்கலாம். இத்தகைய நிலைமையில் அவர்கள் இருந்தால் பொருள் கஷ்டத்தை நினைத்துத் தயங்காமல் அவர்கள் தீவிரமாக முன்வருவதற்கு ஓர் சாதனமாக குறிப்பிட்ட ஒரு தொகையை மேற்கண்ட சங்கங்களிலிருந்து நன்கொடையாக அளித்தல்.

தாய் நாட்டிலுள்ள செட்டியார்களைக்காட்டிலும் வெளிநாடுகளிலுள்ள தனவணிகர்கள் தங்கள் சங்கங்களின் மூலமாக சமூகத்திற்குப் பெரும்பணியாற்றி வருகின்றனர். பொருளை லட்சியம் பண்

ஞமல் பதினுயிரக்கணக்கில் வாரியிறைத்து வியாபாரத் துறையில் நன்மைபெறவும் சமூகத்துறையில் தீவிரமான முன்னேற்றங்காண வும் அரும்பாடுபட்டு வருகின்றனர். விதவா விவாகமானது பெரும் நன்மை பயக்குமென்ருல் அதற்காகக் குறிப்பிட்ட சில தொகை யைச்செலவழிப்பதற்கு அவர்கள் பின்வாங்கமாட்டார்கள்.

நேயர்கள் இவ்விஷயம்பற்றித் தங்கள் கருத்துக்களை 'மறுமணம்' பத்திரிகை வாயிலாகத் தெரிவிக்கவேண்டுமென்று கேட்டுக்கொ ள்வதோடு வெளிநாடுகளிலுள்ள நமது சங்கத்தார்களும் இதுபற்றி சிரத்தையுடன் ஆலோசிக்கவேண்டுமென்று மிகவும் வேண்டிக் கொள்கிறேன்.

---

## பழமை விரும்பும் வாலிபர்களுக்கு ஓர் வேண்டுகோள்

ராம. அண்ணுமலை

சகோதரர்களே, உங்களுக்குப் பழைய முறையை, பழைய கட்டுப்பாடென்ற ஜாதிக் கட்டு சமையக் கட்டை, போதிக்கும் வயோதிகர்களில் பலர், இந்துமத புராண இதிகாச வேதங்களில் பாண்டித்தியமுடையவர்களாகவும், காலத்தை வீணுக்காமல் அவ் வாராய்ச்சியிலே காலத்தைக் கழித்தவர்களாகவும் கழித்துக் கொண்டு வருகிறவர்களாகவும் இருக்கிருர்கள். மதாசாரத்தில் அவர்கள் மனம் வாக்குக் காயங்களால் செலுத்தப்பட்ட அன்பா னது பக்தி என்ற விருக்ஷத்திற்கு செழிப்புறப் பாய்ந்து அது பூத் துக் காய்த்துப் பழுத்துக் கனிந்து கசிந்து ஒழுகி ஆருய்ப் பெருக, அப்பிரவாகத்தில் மூழ்கி ஆனந்தக் கூத்தாடி கிடந்து புரளும் மகா பரம பக்த சிகாமணிகளாகிய பழமை விரும்பும் வைதீக மகான் களை ஒன்று கேளுங்கள்! இப்பூவுலகின்கண் நம்மால் பார்க்கப்படும் சகலவிதமான ஜீவஜந்துக்களையும் ஆக்கப்பட்ட கடவுள் ஒன்று உண்டா? அதில் அரிதினும் அரிதாகவுள்ள மானிட ஆக்கையைப் பெற்ற நாமும் அவ் வழியில் வந்தவர்கள்தானு? எந்த வஸ்துவை

எவன் உண்டாக்குகிருனே அந்த வஸ்துவுக்குத் தந்தையும் தாயும் அவன்தானல்லவா? அப்படியாளுல் ஆண் பெண் இருபாலாரும் அனைத்துயிரையும் ஈன்று காத்தாளும் அப்பன் என்று சொல்லப் பட்ட கடவுளின் மக்களல்லவா? கடவுள் நமக்குத் தாயும் தந்தையுமாகிறபோது ஆண் பெண் இருபாலாரும் ஆத்ம சகோ தார்களல்லவா? ஒரு குடும்பத்தில் உள்ள சகோதரர்களில் வாயாடி யாக உள்ளவன் மற்றவர்களின் பொருள்களை நயவஞ்சக சூழ்ச்சி யால் அபகரித்துக்கொண்டு, அனுபவித்து வந்தால், அவனின் தந் தையும் அதிகாரிகளும் அந்த நயவஞ்சக கொடியை பாதகனைத் தகுந்தபடி தண்டிப்பார்களல்லவா? அது உண்மையாளுல் சகல சம்பத்துக்கும் பெண்களே காரணகர்த்தாக்கள் என்று சொல் லும்படியாக சத்தி சரஸ்வதி லெட்சுமி என்றும், தனலெட்சுமி தானிய லட்சுமி விஜய லெட்சுமி வீரிய லட்சுமி என்றும், இச்சா சத்தி கிரியாசத்தி ஞான சத்தி பாரசக்தி யென்றும், ஆகாயவாணி பூமாதேவி கங்காதேவி என்றும் சொல்வதோடல்லாமல் இல்லாள் என்றும் சொல்லப்படுகிறது. ஒரு வீட்டில் பெண்பால் இல்லாவிட் டால் அது வீடாகாது என்பது பிரத்தியக்ஷம். இவ்வளவு மகத் துவம் பொருந்திய ஆத்ம பந்துவாகிய தாய்மார்களுக்கு—நம் உடன் பிறந்த சகோதரிகளுக்கு ஏற்பட்டிருக்கும் கொடிய தண்டனையான கைம்மை என்ற கஷ்டத்தில் நின்று அவர்கள் கண்ணீரைத் துடை க்க, பெண்ணென்ருல் பேயுமிரங்குமென்ற வாக்கியத்தைக் கருத்தி லிருத்தி, பழைய பழக்க வழக்கமெனும் பேயின் ஆதிக்கத்தை விவேகம் என்ற ஆயுதந்தாங்கி எதிர்த்துத் துரத்த முன்வாருங்க ளென்று கேளுங்கள். அவ் ஆயுதம் அவர்களிடம் இல்லையே என்றஞ்சினுல், சீர்திருத்த ஆர்வங்கொண்ட வாலிப உணர்ச்சியுள்ள ஒவ்வொருவரும் விவேகம் என்ற வாளைத் துருப்பிடிக்கும்படி மூலை யில் போட்டு விடாமல் தினந்தோறும் தீட்டி தைரியத்துடன் கையிலேந்தி உங்களை எதிர்க்கும் அப் பேயை வெட்டி வீழ்த்தி முன்னணியில் வாருங்கள். உங்கள் பின் அவர்களும் தைரியங் கொண்டு வருவார்கள்.

---

# அணைந்த திருவிளக்கு

குட்டிச்சாத்தன் A. B. C. D. E. F. Etc

வீடு பெரிது, ஒரே இருட்டு; பயங்கரமாக இருக்கிறது. கதவுந் தெரியாமல் சுவருந் தெரியாமல் திண்டாடுகின்றனர். வெகுநாள் இப்படி கஷ்டப்பட்டதன்மேல் விளக்கேற்றப்பட்டது. திருவிளக்கை ஏற்றினவுடன்தான் வீடு நிறைந்தது. கண் இருந்தாலும் வெளிச்சமில்லாவிட்டால் என்ன பயன்? இருட்டில் ஏழாயிரம் கண்களிருந்தாலும் ஏதாவதுபிரயோஜனமுண்டா? எல்லாரும்கண்களைத் திரு திரு என்று விழித்தாலும், விளக்கில்லாத போது என்ன தெரியும்? ஆஹா அந்தப் படு இருட்டு; ஒன்றும் விளங்காத அந்தகாரம். அந்தக் கடும் இருட்டை ஒருவிளக்கு ஓட்டியது. கண்ணும் தெரிந்தது. இருக்கிற பொருள்களுந் தெரிந்தன. பாழ்வீடாக இருந்த அக்கட்டிடமானது ஒரு விளக்கேற்றியவுடன் லட்சுமீகரமான இன்பமாளிகை யாகிவிட்டது. விளக்கின் பெருமையே பெருமை; சுவர், தூண், கதவு, ஜன்னல் முதலியன நன்குகத் தெரிந்தன. ஒருவரோடொருவர் முட்டிக்கொள்ள வில்லை.

நல்ல பித்தளை விளக்கு, நிலைவிளக்கைத் தெய்வமென்று பலர் கொண்டாடுகின்றனர். நல்ல கண்ணிருப்பவர்க்கும் ஒளியை நல்கி இருட்டைத் தொலைத்து இன்பமளிக்கும் விளக்குக்கு மேற்பட்டது எதுதானிருக்கிறது? உயரமான நல்ல திருவிளக்கு. அதில் வீட்டுப் பெண் எண்ணெயை நிறைய ஊற்றினாள். பெரிய திரியையும் போட்டாள். ஏற்றினாள், உயர்ந்து எரிந்தது அந்த ஜோதி; அந்த வெளிச்சத்தில் உண்டனர், உடுத்தனர், பாடினர், படித்தனர், ஆடினர், பேசினர், எழுதினர், இன்புற்றனர். இந்த ஆனந்தமும் இன்பக் களரியும் சிறிது நேரம் தானிருந்தது. ஒரே சூருவளிக்காற்று சுழற்றியடித்தது. பெருங்காற்று. சுழல்காற்று. திறந்தவீடு. திறந்த வெளி. பரிதாபமான காட்சி. வீடு முழுமையும் ஒளிவீசிய ஒற்றைவிளக்கும் அணைந்து போய்விட்டது. எல்லாம் இருள். எங்கும் இருள். கண் இருந்தபடி இருக்கிறது. ஒன்றுந் தெரியவில்லை. எல்லா சாமான்களும் வீடு நிறைய இருக்கின்றன. சுவர், நிலை, கதவு, ஜன்னல் யாவு மிருக்கின்றன. கண்ணுமிருக்கிறது. விளக்கு மிருக்கிறது.

ஆனல் ஒன்றும் விளங்கவில்லை. கண் தெரியாமல் ஒருவரோடு ஒருவர் முட்டிக்கொள்கின்றனர். வாசலென்று சுவரில் முட்டுகின்றனர். தூணென்று ஆளைப்பிடிக்கனர். படியென்று முற்றத்தில் விழுந்தனர். மாடத்தில் கையை வைத்தவர் தேள் கொட்டியதென்று துள்ளிவிழுகிருர். தூணில் முட்டிக்கொண்டேன், ரத்தம் கொட்டுகிறதென்கிருர் ஒருவர். வீடு முழுமையும் கூச்சலும் கூப்பாடும் அழுகையும் அக்கப்போருமாக இருக்கிறது. விளக்கை யேற்றுகிறேன் என்று நெருப்புப் பெட்டியை எடுத்தான் ஒரு வாலிபன். எழுந்தான் ஒரு வயோதிக மனிதன். "அடே! விளக்கை ஏற்ருதே! அணைந்தவிளக்கை ஏற்றக்கூடாது; அது பாவம்" என்ருர். இன்னொரு மூலையிற் கிடந்த கிழவி "அடேயப்பா! அது யாதது! விளக்கு ஒருதரம் அணைந்து போனல் மறுபடி ஏற்ற நினைக்கலாமா? அதன் தலைவிதி அவ்வளவு தான்! தொடப்படாது" என்ருள். மற்ருெருவர் "ஏற்றிய விளக்கு அணைந்தது; கடவுளுக்கே சம்மதமில்லை; இனி நாம் ஏற்றக்கூடாது; அணைந்த விளக்கை ஏற்றக்கூடாது என்று சாஸ்திர மிருக்கிறது" என்ருர்.

என்ன அநியாயம்! விளக்கு இருக்கிறது. எண்ணெயு மிருக்கிறது. திரியும் நன்கு சமைந்திருக்கிறது. எரிந்து கொண்டிருந்த இன்பவிளக்கு அணைந்காலென்ன? இயற்கையாக எண்ணெ முழுமையும் வற்றிப் போய் திரியும் கருகி அது நிற்கவில்லை. ஏற்றினல் இப்போதே கொழுந்து விட்டு எரியும். நெருப்புப் பெட்டியும் தயாரிலிருக்கிறது. வாலிபனெருவன் ஏற்றிவைக்கத் தயாரிலிருக்கிருன். இந்தச் சனியன்கள் விடமாட்டேனென்கின்றனவே என்ருன் மூலையிலிருந்த ஒரு ஆசாமி. யார் கத்தி என்னபயன்? விளக்கு ஏற்றத்தாமதந்தான். ஒரே இருட்டு; கண்ணிருந்தும் யாவரும் குருடராகக் கிடந்து புலம்பினர்.

நண்பர்களே! இப்படித்தான் நமது இளம் விதவைச் சகோதரிகளின் நிலையிருக்கிறது. பச்சைப் பசுங்குழந்தைகள். 10 வயதிலும், 15 வயதிலும் விதவைக்கோலத்துக் குட்படுகின்றன. கால்ரு, பிளேக், காய்ச்சல், வைசூரி எனும் சூருவளிக் காற்றில் அவர்களின் புருஷன் போய்விட்டான். அவனேடு அவர்களுடைய வாலிபம் போய்விட்டதா? ஆசை போய்விட்டதா? அழகு போய்

விட்டதா? ஒன்றுகூட இறந்த பயலுடன் போகவில்லை. யோசித்துப்பாருங்கள்! மனைக்கு விளக்காக இருப்பவர் மடவார்! ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு குடும்பத்தின் மணிவிளக்கல்லவா? குத்துவிளக்கு குல விளக்காக இருக்கும் இன்ப மயமான பெண் விளக்கு எப்படிக் கிடக்கிறதென்று பாருங்கள்! எண்ணையுடன் திரியுடன் ஏற்றுவாரற்றுக் கிடக்கின்றன. ஏற்றினுல் ஒளி வீசாதா? ஒரு முறை அணைந்த விளக்கில் மறுபடி தீ பற்ருதா? யோசித்துப்பாருங்கள்! அணைந்த திருவிளக்கை ஏற்றுங்கள்! இன்புறுங்கள்!

---

# பத்திராதிபர் குறிப்புகள்.

## விஸ்வகர்ம மாதர்கள்

விசுவகர்ம வகுப்பு மாதர்களின் மகாநாடொன்று சேலத்தில் ஜனவரி 9, 10 தேதிகளில் நடைபெற்றிருக்கிறது. அதில் தலைமை வகித்த ஸ்ரீமதி சுவர்ணம்பாள் அம்மையார் பின்வரும் குறிப்பைத் தமது தலைமையுரையில் குறிப்பிட்டுள்ளார்:—

> நமது பூர்வீகர்கள் எல்லாத் துறைகளிலும் சிறப்புற்றிருந்தார்கள். கல்வி, சித்திரம், சங்கீதம் இவைகளில் இவர்கள் அடைந்திருந்த தேர்ச்சி அபாரமானது. தற்போது நமது நிலைமையோ மிகவும்மோசம். சிறுதொழில்களை வீட்டில் செய்து பழகவேண்டும். குழந்தைகளுக்கு ஆபாசமான பெயரிடக்கூடாது. குடும்பத்தில் சிக்கனம் வேண்டும். மாதர்களுக்கு தனிச் சங்கங்கள் வேண்டும். நாகரிகம் கொண்ட பிற ஜாதி சகோதரிகள் பல சங்கங்களை ஏற்படுத்தி தங்கள் குறைகளைப் போக்கிக்கொள்வதுடன் சமூக அபிவிர்த்தியிலும், அரசியல் துறையிலும் கூடி உழைக்கின்ருர்களே அவர்களைப் பின்பற்றி நம் மாதர்களும் நடக்கவேண்டும். அப்படி செய்யாத வரையில் இத்தகைய மகாநாடுகள் கூடுவதால் எவ்வித பிரயோஜனமும் இல்லை. மாதர் சங்கங்கள் வாசகசாலைகள் விஷயத்தில் மகாநாடு அதிகமாக கவனம்செலுத்தவேண்டும்.

அம்மையார் குறிப்பிடுவது அடிப்படையான அபிவிருத்தி மார்க்கமாகும். குல தெய்வப் பெயரென்று சில நாமங்கள் விட்டு

விலகுவதாக இல்லை. ஒரு ஆளின் பெயரைக் கேட்கும்போதே ஒரு பிரியமேற்படுமாறு பெயர் அமைதல்வேண்டும். பெயரைக்கேட்கும் போதே எரிப்பாகவும் பயங்கரமாகவும் இருப்பது வாழ்க்கைக்குப் பலவிதமான பாதகத்தை அனுவசியமாக அளிப்பதாக இருக்கிறது. எனவே இத் திருத்தம் மிக அவசியமேயாகும். ஒவ்வொரு சமூக மாதர்களும் சமூக சீர்திருத்த நெறியிலும் அரசியல் நெறியிலும் ஈடுபட்டுழைக்க முற்படுவது இன்றியமையாததெனும் உரை பொன்போற் போற்றத்தக்கது.

## உபசரணைத் தலைவியுரை.

ஷை மகாநாட்டில் உபசரணைக்கழகத் தலைவி உரையில் நடை உடை ஆபரணங்களில் திருத்தம் செய்யப்படவேண்டுமென்று கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. சேலைக்கட்டு தற்காலத்துக்கேற்ப நாகரிகமாகத் திருத்தமடையவேண்டும். நத்து மூக்குத்தி புலாக்கு கள் போன்ற கர்நாடக நகைகள் நாகரிகத்தைக் குறிப்பனவாக இல்லை. ஒவ்வொரு சமூகப் பெண்மணிகளும் கூடியவரை நகைகளைச் சுமக்காமல் நாகரிகமாக வாழப் பார்க்கவேண்டியது அசிய மாகும்.

## மொட்டையடிக்க வேண்டாம்.

விதவைகள் சிகையெடுக்கும்படியான அநாசாரத்தையும், நகை புஷ்பம் முதலியவற்றை அகற்றி அவலட்சணமாக்குவதையும் கண்டிப்பதாக தென்னாற்காடு ஜில்லா மாதர் மகாநாட்டில் ஒரு தீர் மானம் நிறைவேற்றியிருக்கின்றனர். இவை மிகவும் முக்கியமாகு மென்று நாம் கூற வேண்டியதில்லை. ஆனால் இப் பெண்கட்குத் திருமணம் செய்யவேண்டியது அவசியமென்ற "கிளாஸ்" சேர்க்க விட்டுப் போயிருப்பதற்கு வருந்துகிறோம்.

## இருவருக்கும் ஒரு நீதி.

அதே மகாநாட்டில் "விபசாரிகளுக்கு தண்டனை விதிப்பதுபோலவே விபசாரம் செய்யும் புருஷர்களையும் தண்டனைக்குட்படுத்த வேண்டும்" என்றொரு தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. இக்கொடுமையைச் செய்வதற்கு முக்கிய காரணர் ஆண்மக்களாகவே யிருக் கின்றனரென்பது உலகமறிந்த உண்மை. ஆனால் விபசார ஒழிப்புச்

சட்டம் பெண்களை விரட்டியடிக்கிறதே. அதற்கு மூலகாரணமான ஆண்மக்களைப் பற்றிப் பிடிப்பதாக இல்லையென்பதை இம்மகாநாட்டு தீர்மானம் வற்புறுத்துகிறது விசேஷமாகும்.

## இறப்பதே மார்க்கம்!

ஆக்ராவுக்கு சமீபத்திலுள்ள குபேரபுரம் என்ற ஊரில் கலாவதி தேவி என்ற பிராமணப்பெண் இறந்துபோன தன் கணவனுடைய கட்டையில் கிடந்து நீருனாள் என்ற கொடுமையான செய்தி கிடைத்திருக்கிறது. ஒரு பெண்ணுக்கு கணவனிறந்தால் செய்யக்கூடிய நன்மையான வழி இரண்டில் இது ஒன்று. இப்படி இறந்ததால் சுமங்கிலியாகவே பிறருடைய தூற்றுதலுக்கும் விமோசனமற்ற துக்கத்திற்கும் இழிவுக்கும் ஆளாகாமல் தப்பினுள். அறிவுள்ள பெண்கள் கணவனிறந்தபின்பு நேரும் அவமானத்தையும் இழிவையும் துக்கத்தையும் எண்ணியே இப்படி மாளத் துணிகின்றனரென்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## ஹிந்து விதவைகளுக்கு சொத்துரிமை.

இந்திய சட்டசபையில் டாக்டர் தேஷ்முக் அவர்களால் கொண்டுவரப்பட்ட ஹிந்து விதவைகள் சொத்துரிமை மசோதா நிறைவேறிவிட்டது. இதனுல் ஹிந்து குடும்பங்களில் விதவைகளாகவே யிருக்கிற பெண்கட்கு ஒரு பங்கு சொத்து கிடைத்தல் கூடும். பெண்ணுக்குச் சொத்துரிமை கிடையாதென்ற பழி சிறிது இதனுல் அசைவுற்றதென்பதைத் தவிர இந்த சட்டத்தினுல் விசேஷபயனென்று மேற்படப்போவதில்லை. விதவையான பெண் மறு கல்யாணம் செய்துகொண்டால் இந்த உரிமையும் ஒழிந்துபோகும். அப்பால் ஆண் கையை எதிர்பார்த்து நிற்கவேண்டியதுதான். ஆண் குழந்தைக்கும் பெண் குழந்தைக்கும் சமஉரிமை—சொத்தில் சம பங்கு தரும்படி மற்ற நாடுகளைப்போன்று சட்டமேற்படாத வரையில் ஹிந்துப் பெண்களின் அடிமை நிலை மாறுதற்கில்லை. இம் மசோதா நிறைவேறியதற்கு இந்த நாட்டில் மகிழ்ச்சியடைய வேண்டியது அவசியந்தான். ஆனுல் சட்டசபையில் உள்ள அங்கத்தினர் சிலர் இதையும் வெட்கமின்றி எதிர்த்திருக்கின்றனரென்பது சிரிப்புக்கிடமான செய்கையல்லவா?

### கலப்பு மண மசோதா.

திரு. பகவன் தாஸின் கலப்புமண மசோதாவை உருப்படியாக விடவில்லை. அரசாங்கத்தாரே கச்சைகட்டித் தொலைத்து விட்டமை கவனிக்கத்தக்கது. நல்ல சந்தர்ப்பங்களில் அரசாங்கமானது துணிவாக, தேச ஒற்றுமைக்கும் சமூக ஒற்றுமைக்கும் அடிப்படையான மசோதாக்களைத் தட்டிக் கவிழ்த்திருக்கின்றது. லட்சக் கணக்கான கலப்பு மணங்கள் நாட்டில் நடைபெற்று வருகின்றன. ஆனால் அவ்வழி பிறக்குங் குழந்தைகட்கு சட்டப்படியான உரிமை இப்போது கிடையாது. இதற்கொரு சட்டமியற்ற முற்பட்டால் வரட்டு வைதீகத்தை அரசாங்கம் ஆதரிப்பது பெரிதும் வருந்தத் தக்கதன்றோ?

### காலக் கதிரவன் அல்லது அடிமைகள் வெற்றி.

இப் பெயர்கொண்ட புத்தகம் நமது பார்வைக்கு வந்துளது. சீர்திருத்த ஆர்வம் மிக்க தோழர் வெ. ராமநாதன் அவர்கள் இதன் ஆசிரியராவர். கல்லுப்பட்டி திருவாளர் அழ. சித. வீரப்ப செட்டியாரவர்கள் இப் புத்தகத்தை வெளியிட்டுள்ளார்கள். எளிய இனிய தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இந்திய மக்களை ஏனையோர் நடத்தும் பரிதாப நிலையும், இளம் பெண்களை வயோதிகர்க்கு மணவினையாற்றும் வழக்கத்தின் தீமையும் நன்கு விளக்கப்படுகின்றன. துப்பறியும் துறையில் ஒரு பெண்மணி காட்டுந்திறமும் காதலிற்கனிந்த கதாநாயகர்களின் எழிலும் பாராட்டத்தக்கன. இதன் விலை அணா 12. தாற்கூலி வேறு.

---

## :: நிகழ்ச்சிகள். ::

### மாதர் மறுமணப் பிரசாரம்.

#### ஆ. தெற்கூரில்.

இவ்வூர் போர்டு பள்ளிக்கூடத்தில் 10-1-37 ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணிக்கு காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்தின் சார்பில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டம் ஆரம்பமாவதற்கு முன் பள்ளி மாணவர்கள் தேசீயகீதம் பாடிக்கொண்டு ஊர்வலமாக வந்தார்கள். பள்ளிக்கூட மாணவர்களும் பெரியவர்களும், ஸ்திரீகளுமாக சுமார் 300 பேருக்குமேல் கூடியிருந்

தனர். திருவாளர்களான வி. பரமசிவன் அவர்கள், பழ. நாச்சியப்ப செட்டியார் அவர்கள், 'குமரன்' ஆசிரியர் சொ. முருகப்பா அவர்கள் ஆகியோர் விதவா விவாகத்தின் அவசியம் குறித்து உபந்யாசம் செய்தனர். பின்னர் திருவாளர் சொ. முருகப்பா அவர்களால் மாஜிக்லாண்டர்ன் படக்காட்சி காண்பிக்கப்பட்டது.

அரிமழத்தில்

தை ௴ 3-உ மாலை 5-30 மணிக்கு சுப்பிரமணிய சுவாமி கோயில் முன் மண்டபத்தில் கூட்டம் ஆரம்பமாயிற்று. ஜனங்கள் உற்சாகத்துடன் கூடினர். இரண்டு சிறுவர்கள் பாடினர். கடியாபட்டி திரு. சு. பழனியப்பா அவர்களும், திரு. சொ. முருகப்பா அவர்களும் விதவா விவாகத்தின் அவசியம் குறித்து விரிவாக உபந்யசித்தார்கள். பின்னர் படக்காட்சி நடைபெற்றது. இக்கூட்டத்திற்கு சுமார் 200 ஜனங்கள் வந்திருந்தனர்.

ராயவரத்தில்

தை௴ 4-உ மாலை 6 மணிக்கு காந்தி பாடசாலையில் கூட்டம் நடைபெற்றது. பாடசாலை மாணவிகள் இருவர் பாரதி கீதம் பாடினர். கூட்டத்திற்கு திரு. கு. முத்தையா செட்டியாரவர்கள் தலைமை வகித்து முன்னுரையாக பேசியபின்பு, திரு. சு. பழனியப்பா அவர்கள், குமரன் ஆசிரியர் சொ. முருகப்பா அவர்கள் ஆகியோர் விதவைகளின் துயரம் குறித்தும் அதை நீக்க வேண்டுவதின் அவசியம் குறித்தும் சொற்பொழிவாற்றினர். தலைவர் முடிவுரைக்குப் பின்பு படக்காட்சி காண்பிக்கப்பட்டது. சுமார் 800 பேருக்கு மேல் விஜயஞ்செய்திருந்தார்கள். 300 க்கு மேற்பட்ட ஸ்திரீகள் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

ஜெயங்கொண்டபுரத்தில்

தை ௴ 8உ வியாழன் மாலை 5 மணிக்கு காரைக்குடி, ஜெயங்கொண்டபுரம் கம்பனி பங்களாவில், கல்லுப்பட்டி திரு. பழ. மெ. சாமிநாதன் செட்டியாரவர்கள் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. தலைவர் முன்னுரைக்குப்பின் ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் திரு. பழ. நாச்சியப்ப செட்டியாரவர்கள், குமரன் ஆசிரியர் திரு. சொ. முருகப்பா அவர்கள் ஆகியோர் விதவைகளுக்கு மறுமணம் செய்யவேண்டியதின் அவசியம் குறித்துப் பேசினார்கள். தலைவர் முடிவுரைக்குப் பின்னர் படக்காட்சி காண்பிக்கப்பட்டது. பெரியவர்களும் ஸ்திரீகளுமாக சுமார் 500 பேருக்குமேல் கூடியிருந்தனர்.

கண்டரமாணிக்கத்தில்

தை ௴ 18உ திங்களன்று மாலை சுமார் 4-30 மணிக்கு மெ. பெரி மெ. கஞ்சிமடத்து பங்களாவில் ஆ. முத்துப்பட்டணம் திரு. அழ. ராமசாமி செட்டியாரவர்களின் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. ஒரு மாணவர் பாட்டுப் பாடினார். தலைவர் முடிவுரைக்குப்பின், கடியாபட்டி திரு. சு. பழனியப்பா அவர்கள், திரு. நா. பழ. நா. நாராயணன் செட்டியாரவர்கள், குமரன் ஆசிரியர் திரு. சொ. முருகப்பா அவர்கள் ஆகியோர் மாதர் மறுமணத்தின் அவசியம் குறித்து இரண்டு மணி நேரம் விஸ்தாரமாகப் பேசினார்கள் தலைவர் முடிவுரைக்குபின் மாஜிக்லாண்டர்ன் படக்காட்சி காட்டப்பட்டது. சுமார் 1000 க்கு மேல் ஜனங்கள் கூடியிருந்தனர். இடம் போதவில்லை. சுமார் 300 க்கு மேல் பெண்கள் வந்திருந்தது குறிப்பிடத்

தக்கது. ஜனங்கள் உற்சாகத்துட னிருந்தனர். வெகு குதூகலத்தினி டையே கூட்டம் இரவு 9 மணிக்கு நிறைவெய்தியது.

## மதுரையில் விதவா விவாகம்

மதுரை, ஜன 19

மதுரை முனிச்சாலை ரஸ்தா கரீம் சாபள்ளிவாசல் தெருவிலுள்ள அகம் படிய வகுப்பைச் சேர்ந்த முத்து சேர்வை மகன் சுந்தரம் சேர்வைக்கும் மானாமதுரை தாலுகா செய்களத்தூர் ஷண்முகசுந்தரம் பிள்ளை மகள் ஸ்ரீரங்கத்தம்மாளு (விதவை) க்கும் திருப்பரங்குன்றம் ஸ்ரீ சுப்ரமண்யசாமி கோயிலில் 18-1-37ல் திருமணம் விமரிசையாக நடைபெற்றது. மண மக்கள் நண்பர்கள் பலர் வந்திருந்த னர்.

## சிதம்பரபுரத்தில் விதவா மணம்

திருநெல்வேலி ஜில்லா நான்கு நேரித் தாலூகா களக்காட்டைச் சேர்ந்த சிதம்பரபுரம் திரு. சொக்கலிங்க ஆச்சாரியார் புதல்வர் தோழர் நயினார் ஆச்சாரிக்கும், தருவை திரு. இசக்கி ஆச்சாரியார் புதல்வி தோழியர் ராம லெட்சுமி அம்மாளுக்கும் 31—1—37 ஞாயிற்றுக்கிழமை காலை 6 மணிக்கு மணமகன் இல்லத்தில் விதவா விவா கம் சீர்திருத்த முறையில் சிறப்பாக நடைபெற்றது. அன்பர்கள் சரமாரி யாக சொற்பொழி வாற்றினார்கள். சமூகத்தின் ஆண் பெண் இருபால ரும் திரள் திரளாக விஜயம் செய்து மணமக்களின் மேன்மையான செய லைப் புகழ்ந்து வாழ்த்தினார்கள். 12 மணிக்கு சமபந்தி போஜனம் நடை பெற்றது. மணமகன் நயினார் ஆச் சாரியார் முதல் மனைவியை இழந்த வர், தவிர மணமகள் ராமலெட்சுமி அம்மாளின் முதல் கணவர் (லேட்) ஆறுமுகம் ஆச்சாரிக்கு உடன்பிறந்த தமையனுமாவார். இவர்கள் அஞ்சா நெஞ்சத்துடன் ஜாதி மத சமூக எதிர்ப்புக்களை வரவேற்றும் வாய் வேதாந்தம் பேசும் வைதீகத்திற்கு சாவுமணி அடித்தும், விதவைச் சகோ தரிகளின் விடுதலைக்கு வீரச் செய லுடன் வழிகாட்டிய, பரம்பரை வைதீ கக் குடும்பத்தைச் சேர்ந்த விஸ்வ பிராமண தம்பதிகளை தமிழர் சீர்திருத்த சங்கத்தார் பாராட்டுவதாக காரியதரிசி எழுதுகிறார்.

## விழுப்புரத்தில் விதவா விவாகம்

விழுப்புரம், பிப்ரவரி 4உ

நேற்று முன் தினம் இருளன் சந்தை ஸ்ரீராமகிருஷ்ண ரெட்டியார் கிரகத்தில் ஓர் விதவா விவாகம் நடைபெற்றதாக செய்தி எட்டியிருக் கிறது. கிருஷ்ணபுரம் வைத்திலிங்க ரெட்டியார் குமாரர் சுமார் 25 வய துள்ள ஸ்ரீ வெங்கடகிருஷ்ண ரெட் டியார் மணமகனெனவும் இருளன் சந்தை லக்ஷிமி ரெட்டியார் குமாரத்தி ஸ்ரீமதி விசாலாக்ஷி அம்மாள் மணமக ளெனவும் தெரிகிறது. திருமணத் திற்கு அநேகர் வந்திருந்தாகவும் தாலுகா காங்கிரஸ் கமிட்டி. அங்கத்தி னரில் சிலரும் வந்திருந்ததாகவும் தெரியவருகிறது. தம்பதிகளுக்கு விசேஷ நன்கொடைகள் அளிக்கப் பட்டன. தினமணி.

## விஸ்வகர்ம சமூகத்தார் ஆதரவு

தாது-ஹு மார்கழி-மீ 23உ புதன் கிழமை மாலை 5 மணிக்கு இராமனாத புரம் ஜில்லா நேமுத்துப்பட்டி மெ. மு. பழ. சத்திரத்தில் புதுவயல் அழ கப்ப ஆச்சாரியார் தலைமையில் நடை பெற்ற சமூகக் கூட்டத்திற்கு நேமுத் துப்பட்டி, கானாடுகாத்தான், அளகா புரி, புதுவயல், ஆணைவாரி, புதுப்

பட்டி, கடியாபட்டி, ராயவரம் முதலான ஊர்களிலிருந்து பலர் விஜயஞ் செய்திருந்தார்கள். அவ்வமயம் கீழ்க் கண்ட தீர்மானங்கள் ஏகமனதாய் நிறைவேற்றப்பட்டன. கல்யாண காரியங்களையும், உபநயன காரியங்களையும் சிக்கன முறையில் நடத்த வேண்டுமென்றும், சமூகத்தில் விதவா விவாகம் செய்கிறவர்களை ஆக்ஷேபிப்பதில்லை என்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

## புதிய பெண் அட்வகேட்

ஜனவரி, 21.

ஸ்ரீமதி எம். ஏ. ருக்மணி அவர்கள் சென்னை நீதிமன்றத்தின் அட்வகேட்டாக பதிவு செய்து கொள்ளப்பட்டிருக்கிறார். இவரின் மூத்த சகோதரிகள் ஸ்ரீமதிகள் ஜானகி, எதுகிரி, கிருஷ்ணம்மா இம்மூவரும் வழக்கறிஞர்களாக இருந்து வருகின்றனர். இப்போது சென்னை ஹைக்கோர்ட்டில் 7 பெண் அட்வகேட்டுகளிருக்கின்றனர்.

## பெண்கள் விமானப்போலீஸ்

அமெரிக்க ஐக்கிய நாட்டு நகரமாகிய ஸான் பிரான்ஸிஸ்கோ மூன்று பறக்கும் பெண் கான்ஸ்டேபிள்களை நியமித்திருக்கிறது. அப் பெண்கள் ரேடியோக்கள் அமைக்கப்பட்ட இரண்டுபேர் உட்காரக்கூடிய ஆகாய விமானங்கள் வைத்திருக்கிறார்கள். அவர்கள் சுடுவதற்கும் குண்டு வீசுவதற்கும் பழக்கப்படுகிறார்கள். அவசியமான சமயங்களில் நகரப் போலீசாருக்கு உதவி செய்வார்களாம்.

---

# வரன் தேவை.

1. வயது பதின்மூன்றரை. குழந்தை விதவை. வேளாள ஜாதி. 6-வது வரை தமிழ் படித்திருக்கிறது. ஹிந்தியும் மலையாளமும் பேசத் தெரியும். கண்ணியமான மணமகன் தேவை.

2. விஸ்வகர்ம வகுப்பு. ஐந்து வயதில் விவாஹமாகி மனுஷியான மறு வருஷமே விதவையான பெண். வயது 16. ஆறுவது பாரம் வரை படித்திருக்கிறது.

3. ஜாதி ஹிந்து கன்னிப்பெண். நல்ல லக்ஷணம். நல்ல படிப்பு. வயது 15. அழகும் செல்வமும் உள்ள ஜாதி ஹிந்துவரன் தேவை.

4. மாத்வ பிராமணவகுப்பு. வயது 23. வரன் தேவை. பிராமண வகுப்பானாலும் சரி வேறு உயர் ஜாதி ஹிந்துவானாலும் பாதகமில்லை.

5. வேளாள வகுப்பு. நாகரிகமான பெண். கலப்புமணம் செய்யவேண்டுமென்பதே நோக்கம். வயது 16. தமிழில் நல்ல படிப்பு. ஆங்கிலமும் சிறிது தெரியும். தையல், பின்னல் சித்திர மெழுதுதலிலும் பயிற்சியுண்டு. சங்கீதப் பயிற்சி போதிய அளவு பயிற்றப்பட்டிருக்கிறது. நல்ல செல்வமும் நாகரிகமுமான முதல்தார மணமகன் தேவை.

# பெண் தேவை.

1. நாட்டுக்கோட்டைச்செட்டியார். வயது 30. மனைவியில்லை 30 ஆயிரம் ரூபாய் சொத்துள்ளவர். விதவைப்பெண் தேவை. சொற்ப படிப்பிருந்தாலும் போதும். வயது 24-க்குள் இருக்க வேண்டும்.

2. நாட்டுக்கோட்டைச் செட்டியார். வயது 21. தமிழும் ஆங்கிலமும் படித்தவர். போதிய பொருள் வசதியுள்ளவர். விதவைப் பெண் தேவை. பெண் எழுதப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டும். இருபது வயதுக்குள் இருத்தல் அவசியம்.

3. நாட்டுக்கோட்டைச் செட்டியார். வயது 23. நல்ல அழகு உள்ளவர். சுமார் 25,000 பொருள் உண்டு. பெண் எழுதப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டும். 22-வயதுக்குட்பட்ட விதவைப் பெண் தேவை.

4. நாட்டுக்கோட்டைச் செட்டியார். வயது 28. சுமார் 70,000 ஆஸ்தியுள்ளவர். மாற்றூர் அல்லாத மற்றைய கோயிலில் செட்டியார் விதவைப் பெண் தேவை. பெண் அழகாகவும், சிறிது படிப்புடனும் இருக்க வேண்டும்.

5. கவுரவ நாயுடு வகுப்பு. வயது 32. தாரமிழந்தவர். கவர்ன்மெண்டு உத்தியோகத்தில் மாதம் 90 ரூபா சம்பளத்திலுள்ளவர். கவுரவ நாயுடு வகுப்பிலாவது வேறு வகுப்பிலாவது விதவைப் பெண் தேவை. பெண்ணுக்கு வயது 23-க்கு மேல் போகக் கூடாது. சிறிது படிப்பிருந்தாலும் போதும்.

6. ஆரிய வைசியர் வகுப்பு. வய்து 23. பத்திரிகைகட்கு விஷயதானம் செய்பவர். போதிய வரும்படியுள்ளவர். விதவைப் பெண் தேவை.

7. உயர் ஜாதி ஹிந்து. வயது 29. எலிமெண்டரி ஹயர் கிரேடு பாஸ்செய்து உபாத்தியாயராக இருக்கிறார். மாத வரும்படி 30 ரூபாய். சிறிது நிலம் உண்டு. முதல்தாரமில்லை. விதவைப் பெண் தேவை.

8. யாதவகுலம். மனைவி யிழந்தவர். வயது 35. மாத சம்பளம் 30 ரூபாய். நிலங்களும் வீடும் உண்டு. விதவைப் பெண் தேவை.

இது சம்பந்தமான நடவடிக்கைகள் ரகசியமாக வைக்கப்படும்.

சோ. முருகப்பா,

காரியதரிசி, மாதர் மறுமண சகாய சங்கம், காரைக்குடி.

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| மலர் 1 | காரைக்குடி<br>தாது-ஹூ பங்குனி-மீ | இதழ் 8 |
|---|---|---|

## ராட்டொடு புலம்பல்.

(ஓர் கைம்பெண் கூறுவது.)

காளவனப்புலவர்.

ஆடாய் ராட்டேசுழன் றாடாய்ராட்டே—விரைந்
தாக்கம் பெறுகவென் றாடாய்ராட்டே.

1. பாரத நாட்டிலே பெண் பிறந்தோம்
பாரத வீரர்தம் பெண்டு மானோம்
தாரக மின்றியே பாரி லின்று
தவிக்கவு மாச்சுதென் றாடாய் ராட்டே (ஆ)

2. இந்திய நாட்டிலே இருக்கும் நல்லோர்
எங்கள் குறையெலாம் நீக்க வல்லோர்
சிந்தையி லுண்மை தெரிந்த போதே
தேசஞ் சிறக்குமென் றாடாய் ராட்டே (ஆ)

3. தக்க வயதிலே தலைவன் மாள
தாமரை இலையிலே தண்ணீர் போல
துக்க நிலையிலே துடிக்க எங்கள்
சோகம் முதிர்ந்ததென் றாடாய் ராட்டே (ஆ)

4. உள்ள குறைகளைச் சொல்வ தானால்
ஓரக முடையவர் கண் சிவக்கும்
பள்ளமு மேடுமென் றோர்வ துண்டோ
(இந்தப்) பாரே கசந்ததென் றாடாய் ராட்டே (ஆ)

5. பெண்டு மடியவே ஆடவர் தான்
பேணி மறுமணம் செய்வ ரெனில்
கொண்டவர் மாண்டபின் பெண்மகளேனோ
கோலங் கெடுவதென் றுடாய் ராட்டே (ஆ)

6. மடவார் தனிப்படும் வாழ்க்கை தன்னில்
வருமோ ராயிரங் கோடி இன்னற்
குடையா தின்னுயிர் போற்று மாற்றல்
உடையரோ வென்றிரைந் தாடாய் ராட்டே (ஆ)

7. மக்களில் இருபா லார்க ளுக்குள்
வஞ்சனை யாகவேற் றுமை வகுத்துப்
புக்கிட மின்றியெமைத் தவிக்க விட்ட
புன்மை சிறிதோவென் றுடாய் ராட்டே (ஆ)

8. தானே தனக்குறு காவ லென்று
சாற்றுஞ் சிறையிலே வைப்ப வர்கள்
ஈனச் சிறைசெய்த ஏது வெல்லாம்
இயம்புவீ ரென்றிரைந் தாடாய் ராட்டே (ஆ)

9. கைம்மை வகுத்துமே காவல் நீக்கி
காந்தையர் பெருக்கிலே சோரஞ் செய்ய
மெய்ம்மை மறைத்துரை காதை எல்லாம்
வெட்ட வெளிச்சமென் றுடாய் ராட்டே (ஆ)

10. பேயை நம்பினும் நம்பலா மாம்
பெண்ணை நம்புதல் பாவமா மாம்
தாயைச் சகோதரி மாரைப் பழிக்கில்
தர்மம் சிதையுமென் றுடாய் ராட்டே (ஆ)

11. தீய வழியிலே சென்ற மைந்தர்
தெரிவையர் மறுப்பிலே சிந்தை நொந்து
வாயில் வடித்தபுன் சொற்க ளெல்லாம்
வையம் அறியுமென் றுடாய் ராட்டே (ஆ)

12. சேலை யுடுத்திடும் மாதை நம்பில்
தெருவி லிரப்பது திண்ண மாயின்

ஞாலத் திவர்தொடர் பேனே கொள்வார்
நவின்றிடு மென்றிரைந் தாடாய் பாட்டே (ஆ)

13. வனிதையர்க் கஞ்சியே முனிவர் கானம்
மறைந்திடில் அநரு யைக்கு நேரே
சினந்தழுஞ் சேய்களாய் மூவர் வீழ்ந்த
செய்தியுமென்னே? என் றாடாய் பாட்டே (ஆ)

14. சோதனைக் கென்றுபொய்க் கதைகள் சொல்லிச்
சோர நினைப்பிலே மைந்தர் செய்யும்
தீதையே தெரிவையர் தலையி லிட்டால்
தெய்வம் பொறுக்காதென் றாடாய் பாட்டே (ஆ)

15. தாலி பெறுமண வீட்டி லெல்லாம்
சாருஞ் சடங்கென அம்மி மிதிக்கும்
கேலிக் கதையையும் நால்வ ரின்று
கேட்க இயம்பீரென் றாடாய் பாட்டே. (ஆ)

---

## ராஜா ராம்மோகன் ராய்.

திருச்சி கே. வி. எஸ். வாஸ், பி. ஏ. (ஆனர்ஸ்)

### அத்தியாயம் 7.

### இருதாப்பிலும் எதிர்ப்பு.

இதுவரையில் ராஜா ராம்மோகன் ராய் அவர்களுடைய வாழ்க்கையில் இரண்டாம் ரகமான நிகழ்ச்சிகளைப்பற்றி பிரஸ்தாபித்துக் கொண்டிருந்தோம். இனி அவருடைய முக்கியமான இலட்சியங்களையும், அவை சித்திபெற்ற வாலாற்றையும் விரிவாகக் கவனிப்போம்.

ராம்மோகனரின் வியாசங்களையும், சொற்பொழிவுகளையும் ஊன்றிப் பரிசீலனை செய்பவர்களுக்கு அவர் கடவுளிடம் அபாரமான நம்பிக்கையும் பக்தியுமுடையவரென்பது நன்கு புலப்படும்.

ஆனல், அவருடைய கடவுளின் பெயர் என்ன? அவருக்கு எத்தகைய குணதிசயங்களை ராம் மோகனர் கொடுத்திருக்கின்ருர்? ஈசுவர பூஜை அவசியமானதா? அவசியமாயின் அதை எவ்வாறு நடத்தவேண்டும்? கடவுளுக்கும் மனிதனுக்குமுள்ள தொடர்பைப் பற்றி ராம்மோகனரின் அபிப்பிராயமென்ன? முதலான பல கேள்விகள் எழுகின்றன. இவைகளுக்கு விடையளிப்பதன் முன்னர் ஹிந்து மதம், கிறிஸ்தவ மதம் ஆகியவைகளுக்கும் ராம்மோகனருக்குமுள்ள தொடர்பைப் பற்றி 1826-ம் வருட பெப்ரவரி மாதம் 20-ம் தேதியன்று டாக்டர் டக்கர்மான் என்பவருக்கு திரு. வில்லியம் ஆடம் எழுதிய ஒரு கடிதத்தை இடையில் குறிப்பிட வேண்டியது அவசியமாக இருக்கின்றது.

"ராம்மோகனர் தம்மை கிறிஸ்தவரெனச் சொல்லிக்கொள்கிருராவென்று திரு. டப்பின் தமது கடிதங்களிலொன்றில் வினவியிருக்கின்ருர். இந்தக் கேள்விக்குச் சரியானபடி விடையளிப்பது மிகமிகக் கடினமானது. ராம்மோகனர் கிறிஸ்தவர்களுடன் பழகுகையில் கிறிஸ்தவராயும், ஹிந்துக்களுடன் பழகுகையில் ஹிந்துவாயுமிருக்கிருரென்ருல், இது ஒரு வகையில் பொருத்தமாயிருப்பதாகும். ஆனல் ராம்மோகனருக்கு அவருடைய சொந்த மதத்தில் பற்றில்லை என்ரே, கிறிஸ்தவ மதத்தில் அபிமான மதிகமென்ரே சொல்லிவிட முடியாது. அவருடைய மனப்பான்மையை அளவிடுவதற்கு முன்னல், அவருடைய நிலைமையை நாம் ஊன்றிக் கவனித்தாகவேண்டும். அவர் விக்ரக பூஜையைப் பலமாகக் கண்டிக்கின்ருர். ஆனல், இது அவரை ஜாதிப்பிரஷ்டம் செய்துவிடவில்லை. அவர் தாம் ஒரு ஹிந்துதான் என்று சொல்லிக்கொண்டு பிராமண வகுப்பினரின் பழக்கவழக்கங்களிற் பலவற்றை அனுஷ்டித்துவருகின்ருர். விக்ரக பூஜையை ஒழிக்கவேண்டுமென்று கூறுகையிலும் அது வேதங்களில் வற்புறுத்தப்படவில்லையென்று விவாதிக்கிருரே தவிர, ஹிந்துமதத்தின் மூலாதாரமான நூல்களைத் தாம் திருத்தம் செய்வதாகச் சொல்லிக்கொள்ளவில்லை. ஹிந்து மதத்தைச் சீர்திருத்தம் செய்வதையே அவர் வாழ்க்கை இலட்சியமாகக் கொண்டிருக்கிருர். அதற்கு அவர் ஒரு ஹிந்துவாக இருக்கவேண்டியது அவசியமாகிவிட்டது. நான் ஹிந்துவல்ல; கிறிஸ்தவன் என்று பகிரங்கமாகச் சொல்லிக்கொள்வதனல் அவர் சுய ஜாதியிலிருந்து

திட்டமாகப் பிரஷ்டம் செய்யப்படுவதுடன் சொத்துக்களையும் இழக்கவேண்டியவராகிவிடுவார். அவரையும் அவருடைய வார்த்தைகளையும் மதமாற்றம் மதிப்பில்லாமற் செய்துவிடும். கிறிஸ்தவ மதத்திலாவது அவருக்கு கௌரவம் கிடைக்குமா? அதுவுமில்லை. ஹிந்து மதத்திலிருந்து கிறிஸ்தவ மதத்திற்கு மாற்றப்பட்ட மத்திய வகுப்பு மங்களைப் போலவே அவரும் கருதப்படுவார். எனவே, தம்மை கிறிஸ்தவரெனச் சொல்லிக்கொள்ள அவர் ஒருக்காலும் விரும்பார். அவருக்கும் கிறிஸ்தவ மதத்திற்குமுள்ள பேதம் அவருக்கும் அனுஷ்டான ஹிந்து மதத்திற்குமுள்ள பேதத்தைக் காட்டிலும் அதிகமன்று. ஹிந்துமதத்திலுள்ள சிற்சில அம்சங்களை எவ்வளவு தூரம் சிலாகிக்கின்ருரோ அதேபோல் கிறிஸ்தவ மதத்திலுள்ள சில சிறந்த அம்சங்களையும் அவர் போற்றுகின்ருர். எனினும் அவர் தம்மை ஹிந்துவென்று சொல்லிக்கொள்வாரேயன்றி கிறிஸ்தவரெனக் கூறிக்கொள்ள விரும்பார்."

இக் கடிதத்தை ராம்மோகனருக்கும் காண்பித்தேன். அவர் இதில் வெளியிடப்பட்டுள்ள அபிப்பிராயங்க ளெல்லாம் சரியானவைகளே என்று ஒப்புக்கொண்டிருக்கிருர்.

1827-ம் வருடம் ஜுன் மாதம் 24-ம் தேதி டாக்டர் டக்கர் மான் அவர்களுக்கு எழுதப்பட்ட மற்ருெரு கடிதத்தில் திரு. ஆடம் தெரிவிப்பதாவது:—

"உணவு சம்பந்தப்பட்டமட்டில் ராம்மோகனர் தமது மதாசாரங்களைப் பின்பற்றி நடக்கிருர். பிராமண வகுப்பாரால் உட்கொள்ளத் தகாதவை யென்று ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கும் பொருள்களை அவர் தீண்டுவதில்லை. பிற மதத்தவர்களுடனும் அவர் சேர்ந்து சாப்பிடுவதில்லை. ஆனுல், சிற்சில சந்தர்ப்பங்களில் இந்தக் கட்டுப்பாடுகளை அவர் மீறி நடந்திருக்கிருர். ஆனுல் பகிரங்கமாக மீறி நடந்தது கிடையாது. குடும்பக் காரியங்களில் அவரை சுத்தமான பிராமணனென்றே சொல்லிவிடலாம்."

ராம்மோகனர் ஹிந்து மத ஆசாரங்களைக் கட்டோடு திரஸ்கரித்துவிடவில்லை யென்பதற்கு மேலே சுட்டிக் காட்டப்பட்டிருக்கும் உதாரணங்கள் போதுமானவை. அர்த்தமுள்ள ஆசாரங்களைப்

பற்றி அவர் என்றுமே குறை கூறியது கிடையாது. அர்த்தமற்ற வைகளை அடியோடு ஒழிக்க வேண்டுமென்பதுதான் அவருடைய வைராக்கியம். இந்து மதத்தில் காணப்படும் கண்மூடித்தனமான பழக்கவழக்கங்களும், எளியவர்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளும் அகற்றப்பட்டுவிட்டால் அதற்கு இணையான மதத்தை எங்குமே காண முடியாதென்று ராம்மோகனர் பன்முறை கூறியிருக்கின்றார். தவிர, சொந்த மதத்தில் ஆயிரங் குறைகளிருக்கையிலும், பிற மதத்தவர்களுடன் விவாதிக்கையில் நம் நாட்டு மக்களை அவர் காட்டிக்கொடுத்ததேயில்லை. உதாரணமாக 1828-ம் வருடம் ஜனவரி மாதம் 18-ம் தேதி எழுதிய ஒரு கடிதத்தில்;

"இந்துக்களால் அனுஷ்டிக்கப்பட்டு வரும் மதக்கொள்கை அவர்களுடைய அரசியல் முன்னேற்றத்திற்கு பெருந்தடையாக இருக்கின்றது. இவ்விஷயத்தை மிகுந்த விசனத்தோடு நான் வெளியிடுகின்றேன். எனினும் ஐரோப்பாவிலோ அல்லது அமெரிக்காவிலோ அனுஷ்டிக்கப்பட்டு வருகின்ற கிறிஸ்தவ மதத்தைக் காட்டிலும் இந்துக்களால் அனுஷ்டிக்கப்பட்டு வரும் ஹிந்து மதத்தில் அதிக தீமைகளிருப்பதாக நான் கருதவில்லை."

என்று அவர் கூறுகிறார். அரசியல் முன்னேற்றத்திற்கு சமூக வித்தியாசங்கள் பெருந்தடைகளென்பது ராம்மோகனரின் திடமான அபிப்பிராயம். இந்துக்கள் அரசியலிலும், சமூக விஷயங்களிலும் அபிவிருத்தியடையவேண்டுமானால், ஜாதிக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிய வேண்டுமென்று பல பிரசங்கங்களில் அவர் சொல்லியிருக்கிறார். தவிர வகுப்பு வேற்றுமைகளைப் பலமாகத் தாக்கி புத்தகோஷ் என்னும் பௌத்த சந்நியாசியார் வரைந்த பாஸ்திர சூசி என்ற நூலையும் அவர் வங்காளத்தில் மொழி பெயர்த்து இலவசமாக வழங்கினார். இவ்வளவு செய்தும் பயன் படாமற்போகவே புதிய சித்தாந்த மொன்றை ஸ்தாபித்து அதன் மூலமாக ஜனங்களைச் சீர்திருத்தம் செய்யவேண்டுமென்று அவர் தீர்மானித்தார். அப்படி ஸ்தாபிக்கப்பட்ட சித்தாந்தத்தையே இன்று நாம் பிரம்ம சமாஜம் என்கின்றோம்.

பிரம்ம சமாஜத்தின் பூர்வீக வரலாறுகளைக் கவனிப்பதன் முன்னர் மற்றொரு ஸ்தாபனத்தைப்பற்றி நாம் இடையில் பிரஸ்தா

பிக்கவேண்டியது அவசியமாகஇருக்கின்றது. 1821-ம் வருடம் கல்கத்தாவில் யூனிடேரியன் கமிட்டி என்ற பெயரோடு ஒரு ஸ்தாபனம் உண்டாயிற்று. அதில் ராம்மோகனரைத் தலைவராகக் கொண்ட பல இந்தியர்களும், அனேகம் ஐரோப்பியர்களும் மெம்பர்களாயிருந்தார்கள். அந்த ஸ்தாபனத்தின் பல கொள்கைகளுள் (1) உலகைப் படைத்தவனும், ரக்ஷித்துவருபவனும் ஒரே கடவுள் தான் என்பதைப் பிரசாரம் செய்தல். (2) ஏசுநாதரின் உபதேசங்களை உண்மையான தாத்பர்யத்துடன் ஜகம்பூராவும் பிரசாரம் செய்தல். (3) உலகில் அனேக வகையான மதங்களிருப்பினும் அவைகளின் சாரமும் நோக்கமும் ஒன்றுதான் என்பதை மக்களின் மனதில் பதியும்படி உணர்த்தல். (4) கண்மூடித்தனமான பழக்கவழக்கங்களைக் களைந்தெறியப் பாடுபடுதல் முதலியவை முக்கியமானவைகளாகும்.

ஏசுநாதரின் உபதேசங்களைப் பிரசாரம்செய்ய ராம்மோகனர் எவ்வாறு சம்மதித்தாரென்று நேயர்களிற் சிலர் வினவலாம். அவர் இந்து மதத்தில் அளப்பரிய பற்று வைத்திருந்தாரே யாயினும் பிற மதங்களிடம் பகை பாராட்டியது கிடையாதென்று ஏற்கனவே சொல்லியிருக்கின்றோம். தவிர, ஏசுநாதரின் உபதேசங்களை சன்மார்க்க போதனைகளாகக் கருதினரேயன்றி தேவ வாக்காக நினைக்கவில்லை. ஏசுநாதரைக் கடவுளின் அம்சமென்று கூறியதுமில்லை. 1822-ம் வருடம் அக்டோபர்மீ 22-உ எழுதிய ஒரு கடிதத்தில் ராம்மோகனர் தமது மனோபாவத்தைப் பின்வருமாறு தெளிவாக விளக்கியிருக்கிறார்.

"ஏசுநாதரின் அரிய உபதேசங்கள் பிற்கால மக்களால் ஆபாசம் செய்யப்பட்டுவிட்டன. அந்த ஆபாசங்களைப் போக்கி ஏசுவின் உண்மையான சற்போதனைகளை பிரபல்யப்படுத்துவதே எங்கள் நோக்கமாகும். மனித வர்க்கம் பூராவிற்கும் ஒருவர்தான் தந்தையென்று கிறிஸ்தவ மதம் கூறுகிறது. ஆகையால் உலக மக்களுக்கிடையே பரஸ்பரமான பாந்தவ்யத்தையும் பாசத்தையும் உண்டுபண்ண கிறிஸ்துவின் சித்தாந்தங்கள் சாதனக் கருவிகளாயிருக்குமென்பது என் அபிப்பிராயம்."

ராம்மோகனர் யூனிடேரியன் கமிட்டிக்குச் செய்த உபகாரம்

ஒன்றிரண்டன்று. அவர் மேற்படி ஸ்தாபனத்தின் செலவுகளில் பெரும்பாலான பாகத்தை தம் கையிலிருந்தே கொடுத்துவந்தார். அப்படியிருந்தும் அவருடைய உண்மையான கருத்தை கிறிஸ்தவப் பாதிரிமார்கள் நன்குணர்ந்து கொள்ளவில்லை. ஒரு சமயம் "ஏசுநாதரைக் கடவுளாகவோ அல்லது கடவுளின் அம்சமாகவோ நான் கருதவில்லை. மனு, கிருஷ்ணன், முதலான பெரியோர்களைப் போலவே ஏசுவையும் ஒருபெரியாராக நான் மதிக்கின்றேன்" என்று ராம்மோகனர் எழுதினர். இது கிருஸ்தவப் பாதிரிமார்களுக்கு அடங்காக் கோபத்தை உண்டுபண்ணிவிட்டது. "கிறிஸ்தவ மதத்தை ஹிந்து மதத்திற்கும் ஏசுநாதரை கிருஷ்ணனுக்கும் ஒப்பிட்டுக் கூற இவனுக்கு என்ன திமிர்!" என்று சீறினர் ஒரு பாதிரியார். "பேய்களையும் பிசாசங்களையும் பூஜிக்கும் ஹிந்து மதம் ஒரு மதமா? அது கிறிஸ்தவ மதத்தின் முன் எம்மாத்திரம்?" என்றார் மற்றொரு பாதிரியார். "மொகலாய காலத்திற்கு முற்பட்ட புத்தகம் இந்துக்களிடம் கிடையவே கிடையாது. புத்தர் சாலிவாஹனர், கிருஷ்ணன் முதலியோர்களுடைய உபதேசங்களெல்லாம் கிறிஸ்தவ வேத நூலிலிருந்து காப்பியடிக்கப்பட்டவைகளே!" என்று டாக்டர் ஆர் டைட்லர் என்பவர் மிகுந்த கோபத்துடன் எழுதினர். அதைப் படித்ததும் ராம்மோகனருக்கு மிகுந்த கோபமுண்டாயிற்று. அவர் கிறிஸ்தவப் பாதிரிமார்களுக்கு தக்க மறுமொழிகளைத் தமது பத்திரிகையின் வாயிலாக வெளியிட்டார். அவைகளிலிருந்து ராம்மோகனருக்கும் பாதிரிமார்களுக்கும் அடுத்த சில ஆண்டுகள் வரையில் பலமான விவாதம் நடைபெற்றுவந்தது.

இவ்வாறு வைதீக கிறிஸ்தவர்களின் எதிர்ப்பு ஒருபுறமிருக்க மற்றொரு புறம் சனாதன இந்துக்கள் ராம்மோகனரைத் தாக்கவாரம்பித்தார்கள். ஒரு சனாதனி "மத ஸ்தாபகர்" என்ற புனைபெயரோடு விசித்திரமான நான்கு வினாக்களை ராம்மோகனருக்கு விடுத்தார். அவைகளும், அவைகளுக்கு ராம்மோகனர் அளித்த விடைகளும் பின் வருமாறு:—

வினா:-1. சாஸ்திரங்களையெல்லாம் கசடறக் கற்றறிந்துவிட்டதாகச் சொல்லிக் கொள்ளும் ராம்மோகனரும், அறியாக் குழந்தைகளான அவரது சீடர்களும் இந்துமதத்தை திரஸ்கரித்து பிற மதத்

தைத் தழுவ விரும்புகிறார்களா? அல்லது ராம் மோகனரையும் அவருடைய சகாக்களையும் ஹிந்து மதத்திலிருந்து பிரஷ்டம் செய்வது நியாயமானதல்லவா?

விடை:—ஹிந்து மதத்தவர்களுள் சகல சடங்குகளையும் சரிவரச் செய்கின்றவர்கள் எவ்வளவு பேர் இருக்கிறார்கள்? அன்னியர்களை சேவை செய்யாதவர்களும், அன்னியர்களின் சாமான்களை உபயோகிக்காதவர்களும் எவ்வளவு பேர் இருக்கிறார்கள்? முகமதியர்களுடன் சேர்ந்து பள்ளியில் படிக்கும் இந்து மாணவர்களின் தொகை எவ்வளவு? எவ்வளவு ஹிந்துக்கள் சாஸ்திரங்களைப் பிற மதத்தவர்களுக்கு கற்றுக்கொடுக்கிறார்கள்? இவைகளெல்லாம் சாஸ்திர விரோதமல்லவாயின் எங்களுடைய நடத்தையையும் சாஸ்திர விரோதமாகக் கருத முடியாது.

வினா:-2. இந்துக்களின் பழக்க வழக்கங்களைப் பரிகசிப்பதும், கடவுளைக் கண்டறிந்து விட்டதாகப் பிதற்றுவதும், நம்பிக்கையில்லாமல் பூணூலை தரித்திருப்பதும் ஆத்மத் துரோகமல்லவா?

விடை:- இக்கேள்வியைக் கேட்பவர் வைஷ்ணவ சம்பிரதாயங்கள் அனைத்தையும் ஒன்றுவிடாமல் அனுஷ்டிக்கிறாரா? மீன் சாப்பிடாமலிருக்கிறாரா? அனுதினமும் குறித்த நேரங்களில் உபாகர்மாக்களைச் செய்கிறாரா? சுத்த வைஷ்ணவரென்று வெளியில் சொல்லிக்கொண்டிருப்பவர்களில், வீட்டிற்குள் அநாசாரமாய் இருப்பவர்களின் தொகை எவ்வளவு? உள்ளொன்று வைத்து புறமொன்று பேசுவதைக் காட்டிலும் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் பகிரங்கமாக வாழ்க்கையை நடத்துவது சிறந்ததல்லவா?

வினா:-3. வயிற்றை நிரப்புவதற்காக அனுதினமும் அநேக ஆடுகளைக் கொலை செய்பவர்களுக்கு விண்ணுலகில் என்ன வெகுமதி கிடைக்கும்?

விடை:—கடவுளுக்கு அர்ப்பணம் செய்த இறைச்சியை மனிதன் புசிப்பது பாபமல்லவென்று சாஸ்திரங்கள் சாற்றுகின்றன. இது ஒருபுறமிருக்க இந்தக் கேள்வியை விடுத்திருப்பவர் மீன் சாப்பிடாமலிருக்கிறாரா? என்று வினவ விரும்புகிறேன்.

வினா:-4. மதத்தையும் பொதுஜன அபிப்பிராயத்தையும் புறக்

கணித்து சிலர் தலைச்சிகையைக் கத்தரித்துக் கொள்கின்றனர்; மது பானம் செய்கின்றனர்; நாஸ்திகர்களின் பெண்களோடு கூடுகின்றனர். இவர்களை யெல்லாம் ஜாதியிலிருந்து பிரஷ்டம் செய்வது தகாததா?

விடை:—காரணமின்றி சிகையைக் கத்தரித்துக்கொள்வது தான் சாஸ்திரத்தில் தடைசெய்யப்பட்டிருக்கிறது. இது ஒருபுற மிருக்க இரகசியமாக குடிப்பவர்களையும், வீட்டில் வேலைசெய்யும் இஸ்லாமியப் பெண்களோடு கள்ளத்தனமாக கலவி செய்பவர்களை யும் நீங்கள் பிரஷ்டம் செய்துவிட்டீர்களா என்று அறிய விரும்புகி றேன்.

இவ்வாறு குறும்புத்தனமாக கேட்கப்பட்ட வினாக்களுக்கு ராம்மோகனர் குறும்புத்தனமாகவே விடையளித்தார். இப்ப டியே மற்றும் பல கேள்விகள் ராம்மோகனருக்கு விடுக்கப்பட்டன. அவைகளைத் தவிர, ராம்மோகனரை கோர்ட்டிற்கு இழுத்து தொந் தரவு செய்வதென்றும் சனாதனிகள் தீர்மானித்தார்கள். அவர்களு டைய தூண்டுதலின் மீது பர்துவான் ராஜா ராம்மோகனர் மீது ஒரு வழக்குத் தொடர்ந்தார். அவ்வழக்கில் ராம்மோகனரின் தந்தை பர்துவான் ராஜாவிடமிருந்து 7501 ரூபாய் கடன் வாங்கி யிருந்தாரென்றும், அது வட்டியுடன் 15,002 ரூபாயாக ஆகியிருக் கிறதென்றும், இந்தத் தொகையை ராம்மோகனர்தான் செலுத்த வேண்டுமென்றும் விவாதிக்கப்பட்டது. இதைக் கண்டு ராம் மோகனர் கொஞ்சமும் அஞ்சவில்லை. அவர் நீதிவானுக்கு முக்கிய மாக மூன்று விஷயங்களை எடுத்துரைத்தார். (1) என்னுடைய தந்தை தமது ஜீவிய காலத்திலேயே என்னைத் துறந்துவிட்டார். ஆகையால் அவருடைய கடனுக்கு நான் பாத்தியப்பட்டவனல்ல. (2) எனது தந்தையின் ஜீவியகாலத்திலோ அல்லது அதன் பிறகோ பிரஸ்தாபக் கடனைச் செலுத்தும்படி பர்துவான் ராஜா கேட்டதே கிடையாது. (3) பன்னிரண்டு வருடங்கள் வரையில் திருப்பிக் கோரப்படாத கடன் சட்டப்படி செல்லுபடியாகமாட்டாது. தவிர இந்த வழக்கு பகைமையினாலும், பிறருடைய தூண்டுதலாலுமே தொடரப்பட்டிருக்கிறது.

ராம்மோகனர் இவ்வாறு ஆணித்தரமாக விவாதிக்கவும், அவ

ருக்கு சாதகமாகவே தீர்ப்பளிக்கப்பட்டிருக்குமென்பதை நாம் சொல்ல வேண்டியதில்லை. கீழ்க்கோர்ட்டில் அபஜயமடைந்த பர்துவான் ராஜா அப்பீல் செய்துகொண்டார். அவருடைய அப்பீல் தொடர்ச்சியாகப் பல வருடங்கள் வரையில் நடைபெற்று வந்தது.

இவ்விதம் சனாதன இந்துக்களாலும், வைதீக கிறிஸ்தவர்களாலும் ஒருங்கே எதிர்க்கப்படவே இரு கக்ஷியார்களிடமும் ராம் மோகனருக்கு வெறுப்பு ஏற்பட்டது. இதன் பிறகு அவர் பிரம்ம சமாஜத்தை ஸ்தாபனம் செய்தார். இனி சமாஜத்தின் வரலாறுகளைச் சிறிது கவனிப்போம்.

---

# தங்கையின் துயர்களைந்த தமையன்

க. சி. அழகப்பன்.

வேலாங்குடி கிராமத்தில் அது பெரிய ஊராக இல்லாவிட்டாலும் சுமார் 400, 500 வீடுகள் இருக்கும். இயற்கையழகு பார்ப்பவர்கள் உள்ளங் கவரும்வண்ணம் அமைந்தது.

பெரிய பண்ணை சாமிநாதய்யர் பெரிய மிராசுதார். அக்கிராமம் பூராவும் அவரின் கிஸ்திக்குட்பட்டதுதான். அய்யர் சொல்லுக்கு இரண்டில்லை. அவ்வூருக்கு சமீபத்திலுள்ள குப்பம்பட்டி சிவலிங்கய்யர் மகள் ஜானகி அம்மாளைக் கல்யாணம் செய்ததில் 18 வயதுள்ள பஞ்சாட்சரம் என்ற பையனும், 12வயது நிறைந்த சரஸ்வதி என்ற பெண்ணும் தவிர வேறு குழந்தைகளில்லை. பஞ்சாட்சரம் தமிழில் 8-ம் புத்தகமும் இங்கிலீஷ் 3-வது பாரம் வரையிலும் வாசித்தான். மேலே படிப்பதற்குப் பிரியமில்லாமல் ஸ்கூலுக்குப் போவதை நிறுத்திவிட்டான். சரஸ்வதியும் தமிழ் 5-வது புத்தகம்வரை படித்து இருக்கிறாள்.

சாமிநாத அய்யருக்கு 45 வயதிற்கு மேலாகிறது. அவர் சம்சாரம் ஜானகி அம்மாளுக்கு மட்டிலும் மகள் 'சரசுக்கு' (சரஸ்வதியை சுருக்கப்பெயருடன் அழைப்பது) ஒரு வரனைத்தேடி தன் கண்ணுள்ளபோதே அவள் வயிற்றில் போன் பேத்திகளைக் காண

வேண்டுமென்று அவா. என்ன செய்கிறது? சாமிநாதய்யர் பாடு முன்போலில்லை. சர்க்காருக்குக் கட்ட வேண்டிய கிஸ்திப் பணத்திற்குக்கூட நெல் விற்கமுடியவில்லை. கலியாணம் செய்வதென்றால் ஒரு பெரிய மனிதர் வீட்டுக்கு லேசான காரியமா? அப்படியே ஒரு வருஷம் கழிந்தது.

மேலப்பட்டி சிவசாமி அய்யர் மகன் நடராசன் பட்டணத்தில் எப். ஏ. க்குப் படிக்கிறான். நல்ல கட்டமைந்த சரீரம். வயது 20 இருக்கும். சிவசாமி அய்யர் தன் மகன் நடராசனுக்கு 5000 ரூபாய் வரதக்ஷிணையுடன் சரஸ்வதியைத் தருவதாயிருந்தால் இவ்வருஷமே முகூர்த்தம்வைத்து நடத்திவிடலாமென்று சொல்லிவிட்டார். வேறு வழியில்லாமல் போகவே சாமிநாதய்யர் ஜானகி அம்மாளின் பிடிவாதத்திற்கஞ்சி கிராமத்தை அடுத்த ஊர் சம்பந்தம் செட்டியாரிடம் ஈடாக வைத்து 10000 ரூபாய் கடன் வாங்கி வெகு சிறப்பாக சரஸ்வதியை நடராசனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்தார். மாப்பிள்ளை நடராசன் கல்யாணச் சடங்குகள் முடிந்ததும் படிப்பை முன்னிட்டு பட்டணத்திற்குப் போய்விட்டான். பஞ்சாட்சரத்திற்கும் கல்யாணம் செய்துவிட்டால் கவலை தீர்ந்துவிடுமென்று சாமிநாதய்யரும் ஜானகி அம்மாளும் எண்ணினார்கள். ஆனால் பஞ்சாட்சரம் தனக்கு இப்போது கல்யாணம் வேண்டாமென்று தடுத்துவிட்டான்.

இது நடந்து மூன்று வருஷத்திற்குப் பிறகு சாமிநாதய்யர் வீட்டில் பஞ்சாட்சரமும், வைதவ்யமடைந்த தாயும், அதே நிலையிலுள்ள சரஸ்வதியும் தவிர வேறு ஒருவருமில்லை. ஜானகி அம்மாள் துக்கமே உருவாய் கண்கள் குழி விழுந்து எலும்புந் தோலுமாய் சதா அழுதுகொண்டிருக்கிறாள். முன்பு இவளைப் பார்த்தவர்கள் இப்பொழுது பார்த்தால் அடையாளம் காண முடியாது. அவ்வளவு மாறுதல். காரணமென்ன?

போன வருஷம் சரஸ்வதி புருஷன் நடராஜன் பட்டணத்தில் காலராவில் அவதிப்படுவதாக தந்தி வந்தது. சாமிநாதய்யர் குடும்பமும் சிவசாமி அய்யர் குடும்பமும் அலறி அடித்துக்கொண்டு பட்டணம் போனார்கள். போன அன்றிரவே நடராஜன் காலராவின் கொடுமைக்காற்றாது உயிர் துறந்தான். என்ன செய்கிறது. அம்

பாயுள் சீவன். நடராஜன் சடலத்தை பட்டணம் மண்ணுக்கு இரை கொடுத்துவிட்டு கண்ணீரும் கம்பலையுமாய் வீடுவந்து சேர்ந்தனர். சாமிநாதய்யர் அதே கவலையாயிருந்து மூன்று மாதத்திற்குள் மாப் பிள்ளையைத் தேடி சொர்க்கத்திற்குச் சென்றுவிட்டார். சரஸ்வதி பருவமடைந்த பெண்ணானாள். என்ன சுகம்? அழகிய ரோஜா மலர்கள் பூத்து மெல்லிய சுகந்தத்தை வாரிவாரி இறைக்கின்றன. இருப் பினும் என்ன? அதை அனுபவிப்பவர்கள் கையில் கிடைத்தாலல்லாது மாலையில் வாடித் துவண்டு உதிரும் தன்மைபோல் சரஸ்வதியின் இளமை இன்ப வாழ்வு மூட வைதிகப் பிசாசுகளினால் சிதறடிக் கப்பட்டது. சரஸ்வதி விதவையானாளேயன்றி மற்ற விதவைப் பெண்களின் நிலைமைக்கு தமையன் பஞ்சாட்சரம் கொண்டுவர இடம்கொடுக்கவில்லை. அவன் தாயார் எவ்வளவோ சொல்லிப்பார்த் தும் சரஸ்வதி எப்போதும்போல் ஆபரணங்கள் அணிந்துவரவும் ஆடைகளில் மாற்றமில்லாமலும் சுருங்கச் சொன்னால் கணவனை இழந்த மனைவி என்றே தோற்றாதவாறு நடத்தி வந்தான். அவர் களின் சுற்றத்தார்கள் யாவரும் இவர்கள் குடும்பத்தைப் பிரஷ்டம் செய்துவிட்டார்கள். என்றாலும் அதுவும் பஞ்சாட்சரம் எதிர்பார்த் ததுதான். இவ்வளவு துன்பத்திற்கிடையில் ஜானகிஅம்மாள் அதிக நாள் ஜீவித்திருந்தாளென்று சொல்லுவதற்கில்லை. மகன் பஞ்சாட் சரம் விவாகமில்லாமலிருப்பதும் ஆருயிர்ச் செல்வி சரஸ்வதி ஒரு சுகமுமறியாமல் பாலப்பருவத்தில் அவள் வாழ்க்கை பாழாகி விட்டதையும் எண்ணி எண்ணி வருந்தி ஏக்கமுற்று அதே வியாதியாய்க் கிடந்து தவறிவிட்டாள். பஞ்சாட்சரம் சகல கிரியைகளையும் செய்து முடித்துவிட்டு பூர்வகால முதல் தன் குடும்பத்தினர் அனுபவித்து வந்த கிராமத்தை கிரயத்திற்கு விற்று செட்டியாருக்குச் சேர வேண்டிய வட்டியையும் முதலையும் கொடுத்துவிட்டு மிஞ்சிய ரூ. 7000-த்தை எடுத்துக்கொண்டு தங்கை ஜானகியையும் அழைத்துக் கொண்டு பட்டணத்திற்கு வந்து சேர்ந்தான்.

அவனின் முழு நோக்கம் தங்கை சரஸ்வதியின் வாழ்க்கை செம்மையடைய வேண்டுமென்பதுதான். ஆனால், சமூகத்தில் இருந்துகொண்டு என்ன செய்ய முடியும்? சமூகத்தைப் பார்க்கிலும் தன் தங்கையின் க்ஷேமமே பெரிதென வெண்ணினான். சமூ

கச் சிறையை உடைத்து, துவம்சம் செய்து, தங்கையுடன் வெளி யேறினன் உண்மைத் தியாகி பஞ்சாட்சரம்.

பட்டணம் வந்த சில நாட்களுக்குள் ஒரு பாவமும் அறியாத இளங்கன்னி விதவைகளுக்கு உதவி புரிந்துவரும் விதவா விவாக சங்கத்துத் தலைவருடன் சிநேகனுனன். அவரின் உதவியினல் தங்கை சரஸ்வதிக்கு ஒரு மணமகன் தெரிந்து அவளின் சம்மதத் தின் பேரில் கல்யாணம் முடித்துவைத்தான். அன்றுதான் அவன் இவ்வுலகத்தில் பிறந்ததன் பலனைப் பெற்றதாக வெண்ணினுன். கிராமம் விற்றதில் கையில் இருந்த ரூ. 7000 த்தில் 5000 ரூபாயை தங்கை சரஸ்வதியின் பிற்கால வாழ்க்கைக்கு உதவியாகும் பொருட்டு, அவள் பேரால் பாங்கியில் டிபாஸிட் செய்துவைத் தான். மீதமுள்ள ரூ. 2000 யும், தன் தங்கையின் துயர் களைந்த விதவா விவாக சங்கத்திற்கு அளித்தான். அதுசமயம் மகாத்மா காந்தியடிகளின் சத்தியாக்கிரகப் போர் நடந்தது. பஞ்சாட்சரம் அப்புனிதத் தொண்டில் ஈடுபட்டு அரசாங்கத்தாரால் இரண்டு வரு டச் சிறைவாசத் தண்டனை யடைந்தான்.

வசந்தகாலம்; பூரணச் சந்திரன் தன் அழகிய கிரணங்களி னல், இப்பூமியின் கண் செழித்து வளமப்பெற்ற மரங்களின் இடை வெளியில் ஊடுருவிப் பாய்ந்து, பட்டப்பகல் போன்று இரவு 8 மணி சுமாருக்கு பிரகாசித்துக்கொண்டிருக்கின்ருன். ஓடுக்கு மாடி வீட் டின் உள் முற்றத்தில் பிரம்பினல் பின்னப் பெற்ற ஓர் சோபாவில் சரஸ்வதி சுமார் ஓராண்டு நிறைந்த ஆண் குழந்தையுடன் கொஞ்சி விளையாடிக்கொண்டிருந்தவள், ஏதோ நினைத்தவளாய் அருகிலிருக் கும் கணவனை அழைத்து "நாதா இன்ருேடு என் தமயனுருக்கு சிறைத்தண்டனை காலம் பூர்த்தியாவதாகச் சொன்னீர்களே. ஏன் இன்னும் வரத் தாமதம்? அந்தோ போலீஸ்காரர்கள் மீண்டும் அவர் மீது ஏதேனும் குற்றத்தைச் சாட்டி கைது செய்திருப்பார் களோ?" என்று கண் கலங்கத்துடன் மொழிந்தாள்.

கணவன்:- கண்ணே கலங்காதே. இன்னும் சில விநாடியில் வந்துவிடுவாரென்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே வீட்டு வாயிலின் முன் ஓர் கார் வந்து நின்றது. இருவரும் எழுந்து தெருப்பக்கம் நோக்கினர். காரிலிருந்து ஓர் வாலிபனும் அழகிய

நங்கை ஒருத்தியும் இறங்கினர். அவ்வளவுதான் சரஸ்வதி தன்னையு மறந்தவளாய் கையில் இருந்த குழந்தையை நீட்டிக்கொண்டு 'அண்ணா அண்ணா' வென்று அலறி ஆனந்தக் கண்ணீருகுத்தாள். பஞ்சாட்சரம் சரஸ்வதி கையிலிருந்த குழந்தையை வாங்கி முத்த மிட்டுக் கொஞ்சி மகிழ்ந்தான். சரஸ்வதி தன் தமயனைக் கண்ட ஆனந்தத்தில் மூழ்கிக் கரையேற மாட்டாமல் தத்தளித்தாள். அச் சமயம் மாமனிடம் இருந்த தன் அரும் பெரும் மணி ஆருயிர் அனைய செல்வன் புது மனிதனை மாமனை ஏற இறங்கப் பார்த்து விட்டு வேற்றுளென்று தெரிந்து, 'குவா குவா' வென்று சத்தமிட்ட பின்புதான் சரஸ்வதி உணர்ச்சி யடைந்து குழந்தையை வாங்கி யணைத்துக்கொண்டு, தன் அண்ணனுடன் வந்திருக்கும் பெண்மணி யாவளெனக் கேட்டாள். பஞ்சாட்சரம் தன் தங்கையை நோக்கி "தங்காய் நான் சிறைப்பட்டதன்பின்பு இப்பெண்ணை சிறையில் சந்தித்தேன். அவளுக்கும் விவாகமில்லாமல் இருந்ததாலும், என்னை அவள் காதலித்ததாலும் இருவரும் நேசம் கொண்டோம். இவள் வங்காளத்தில் பிறந்த வீரப் பெண். பெயர் நீலாதேவி. 'சட்ட மறுப்பியக்கத்திலீடுபட்டு இவளும் என்னைப் போல் சிறைவாசமனுபவித்தவள். எனக்கு முன்னேயே விடுதலை பெற்றுவிட்டாள். இன்று நான் வருவது தெரிந்து கார் வைத்துக்கொண்டு தயாராக இருந்தாள். நான் வெளிவந்ததும் நேரே இங்குதான் வந்தோம்" என்றான். சரஸ்வதி நீலாதேவியை தன் அண்ணி யென்பது தெரிந்து ஆலிங்கனம் செய்துகொண்டாள்.

இப்பொழுது நீலாதேவிக்கும் பஞ்சாட்சரத்திற்கும் ஒரு பெண் குழந்தை பிறந்திருப்பதாகக் கேள்வி.

---

**கருணை உள்ள இடத்தில் — — — விதவை இல்லை.**

# பழமை விரும்புவோர் பகுத்தறிவைச் செலுத்துங்கள்

ராம. அண்ணாமலை

பழைய கட்டுப்பாடென்ற ஜாதி, சமயக் கட்டுகளின்படிதான் நடப்போம் என்று மன உறுதியுடன் இருப்பவர்களிடம் அவர்கள் கொள்கையை மாற்றிக்கொள்ளும்படி யாரும் சொல்ல முன்வரவில்லை. அவர்களோடல்லாமல் அவர்கள் சந்ததியாருக்கும் உபதேசிக்கட்டும்! கவலை இல்லை. ஆனால் வைதீகம் பேசும் பெரும்பாலோருடைய நடத்தையும், விவேகமும் எம்மட்டிலிருக்கிறதென்று யோசித்துப் பார்க்கவேண்டியது விவேகிகளின் கடமை. ஜாதிக் கட்டுப்பாடுகளை ஒவ்வொரு காலங்களில் அவ்வக்கால நிலையை அனுசரித்து அறிவாளிகள் வகுத்திருக்கலாம். காலம் செல்லச்செல்ல அதற்குக் காலாவதிதோஷம் பீடிக்கலாம். மக்களின் பழக்க வழக்கங்களும் காலத்திற்கேற்ப மாறுதலடைந்து வரலாம். அப்படி ஏற்படுவது இயல்பும் உண்மையுமாகும். ஆண் பெண் இருபாலாருக்கும் வாழ்க்கையில் சம உரிமை ஒரு காலத்தில் இருந்திருக்கலாம். மற்றொரு காலத்தில் அதாவது 25, 30 வயதில் கல்யாணமாகி 90, 100 வயது சென்றும், நரை திரை ஏற்பட்டுக் கூனிக் குறுகி, கண் ஒளி மங்கி, காது செவிடுபட்டு, தொண்டைக்கும் நெஞ்சுக்குமாய் இழுத்துக்கொண்டிருந்தும் சாவுஏற்படாமல் 'மதமதக்காத்தாழி'யில் வைத்தகாலத்தில் 90 வயது கிழவிகள் விதந்துவாகும் காலத்தில் (அடடா எவ்வளவு ரூபலாவண்யமும் திடகாத்திரமும் உள்ள பருவம்) விதவைகள் மறுமணம் செய்துகொள்ளப்படாதென்ற வழக்கமிருந்திருக்கலாம். 12, 13 வயதில் அம்மாள் திரளவும் ஐயா பள்ளியில் இருக்கும்போதே கல்யாணம் செய்து அடுத்த வருஷத்தில் முழங்காலைப் பிடித்து மறு வருஷத்திற்குள் மண்ணுலகை விட்டு விண்ணுலகத்திற்கேகும் இக்காலத்தில் அவ்வழக்கத்தை அனுஷ்டிக்க வேணுமென்பது பொருத்தப்படுமா?

உலகப்போக்கை அனுசரிக்காது, சொன்னதைச் சொல்லி சாதித்துக்கொண்டு, அக்கம்பக்கத்தை எறிட்டுப் பார்க்காது, போன போக்கிலே ஒரே போக்காய் போய்க்கொண்டிருந்து தடுமாறி விழுந்

தால் பல் உடைந்து விடுமல்லவா? பழைய கட்டுத்தான் பரமசுகம் என்று பழைய முறைப்படி, பழக்க வழக்கப்படி வரம்பு கடவாமல் இருந்து வருவதாய் எந்த மனிதனுவது விரல் நீட்டிச் சொல்ல முன் வரமுடியுமா? பழைய கட்டின் அஸ்திவாரங்களேயே எங்கு பார்த்தாலும் பெருச்சாளிகள் பெரும் பெரும் கோடுகளைத் துளைத்துக் கொண்டு சுயேச்சையாய் வாழ்ந்து வருகின்றன. மேங்கோப்பு சுவர், முகடு முதலான இடங்களில் எலிகள் வளைகளைச் சரிக்கட்டிக் கொண்டு வாழ்ந்து வருகின்றன. கைமரம் முதலானதுகளில் கரையான்கள் குடி இருந்துவருகின்றன. காற்ரோட்டமில்லா மேல்மச்சு முதலான இடங்களில் வௌவால் அடைந்து வாழ்ந்து வருகிறது. சுவர்கள் பெரும்பாலும் மூச்சுவிட்டுப்போயின. பெருச்சாளி, எலி, வௌவால் முதலானவைகளின் புளுக்கையின் துர்நாற்றம் நாசியைத் துளைத்துக்கொண்டு பாய்கிறது. (இதைப்போல் ஜாதிக் கட்டுகளும் நாற்றமெடுத்துவிட்டன.) இக் கட்டில் வசிக்கும் ஒருவனைப் பார்த்து "ஐயா! இந்தக் கட்டில் இருந்து வசித்துவந்தால் தீரா நோய்க்கு ஆளாவீர்கள், மனிதனுடைய ஆயுள் குறைந்து போகும், இதில் இருக்கவேண்டாம். எதிரில் தெரிகிற கட்டிடம் மனிதன் சுகாதாரத்துடன் வாழ்வதற்கு வேண்டிய வசதியுடன் அமைக்கப் பெற்றிருக்கிறது. அதில் பெருச்சாளி, எலி முதலானவைகள் பிரவேசிக்க கொஞ்சமும் இடமில்லை; மிக மிக சிக்கனமுறையில் வாழ்க்கை நடத்தலாம். ஆனதால் அதிலிருந்து வசிக்கலாம்'' என்றால் அதைக் கேட்ட மாத்திரத்தில் "அடடா என்னகாரியம் சொன்னுய் இன்னொரு முறை சொல்லாதே. இப்போது நான் இருந்துவரும் கட்டு எனது பாட்டன் 'பூட்டனால்' கட்டப்பட்டது. அதை விட்டு ஒரு நாளும் நான் வரமாட்டேன்" என்றால் இக்கொள்கையுடைய மனிதரை என்னென்று அழைப்பதென்று நமக்கே புலப்படவில்லை!

விதவை என்ற கட்டைத் தகர்க்கப்படாதென்று சொல்லும் வைதீகர்களில் பெரும்பாலோர் பழைய கட்டுப்பாடுகளில் உள்ள தங்கள் சுயநலங்கள் பாதிக்கப்படுமே என்றஞ்சும் பெருச்சாளிகளுக் கொப்பாகவும், அவர்கள் வாலைப் பிடிக்கும் வாலிபர்களில் சிலர் தம் தம் சுயநலங்கள் பாதிக்குமே என்றஞ்சும் எலிகளுக்கொப்பாகவும் இருப்பார்களே தவிர வேறல்ல.

பழைய நாள்பட்ட கட்டிடங்களை இடித்துப் புதுப்பித்துக் கட்டும்படி அவ்வவ்வூர்களில் உள்ள டவுன் போர்டுகளிலிருந்து நோட்டீஸ் பிறப்பித்து அதுபோல் வேலைகள் நடந்துவருவது பிரத்தியக்ஷம். இதைக் கண்டிக்க மேலே சொன்ன பெருச்சாளி, எலி முதலானவைகள் மகாநாடுகள் கூட்டி நாங்கள் நெடுநாளாய் குடி இருந்து அனுபவித்து வருகிற பழைய கட்டுகளைப் புதுப்பிக்கப்படா தென்று தீர்மானங்கள் நிறைவேற்றி புதுப்பிக்க விடாமல் நிறுத்தி விடப்பார்ப்பது முடியக்கூடிய வேலையா? இதைப்போல் விதவை என்ற பழைய கட்டைத்தகர்த்து தரைமட்டமாக்கி புதுக்கட்டு கட்டுவதற்கு ஆங்காங்கு அனேக சங்கங்கள் ஏற்பட்டு பிரதி வருஷமும் ஆயிரக்கணக்கான மறுமணங்கள் நடந்து வருவது பிரத்தியக்ஷம். இதை சில சுயநல வைதீகர்கள் மறைமுகமாகவும் நேர்முகமாகவும் கூச்சல்கள் போட்டு நிறுத்திவிட முடியுமா என்பதைச் சிந்தித்துப்பாருங்கள்.

---

## மாதர் மறுமண கீதம்.

(திரு. காந்திதாசன் பாடியது.)

"மன மயிலமிட்டே தன தேசபட்டேஜி" என்ற சந்தம்

(1) தமிழ் நாடெங்கும் மாதர் மறுமணம் நடைபெறவே
நாட்டு வோம்புவியில் ஜண்டா! வெளி
நாட்டுப் பெண்களினிக் கூட்டமிட்டுப் பேசி
நகைப்பதற்கே யிடமுண்டா? இதனுற்
பாதக மேற்பட லுண்டா? ஏ
காதிபத்தியம் போனதுண்டா? நல்ல
சாதகமிதற்கு மேலுண்டா? இதைத்
தடைசெய்வதற் கிடமுண்டா? இது
தான் நிச்சயம்! ஆம் நிச்சயம்!
ஆம் நிச்சயம்! ஆம் நிச்சயம்!
சத்யம்! சத்யம்! நிச்சயம் (தமிழ்)

(2) கணவனிருக்கமுன் தாரை சந்திரனைக்
காதலித்தாள் சோரத்தாலே! பரிமள
கந்தி! யம் பாலிகை! யம்பிகை! குந்தி! பாஞ்
சாலி! யும் அப்படித்தானே? இதை
ஆராய்ந்தீரோ பெரியோரே? நன்
கறிவு மிக்கப் படைத்தோரே! இன்னும்
பாரா முகமேன் சொல்வீரே? என்றும்
பாரபட்சம் விடுவீரே! அது
தான் பாக்கியம்! ஆம் பாக்கியம்!
ஆம் பாக்கியம்! ஆம் பாக்கியம்!
தமிழ்ப் பெண்கள் பாக்கியம்! (தமிழ்)

(3) மாதொருவள் கணவன் இறந் தாலிளமைதனில்
மறுமண மிலையென்னல் முறையோ? முதல்
மனைவியை இழந்த கிழவன் புதுப்பெண் மணக்க
வகுத்தசட்டம் நல்ல முறையோ? இரு
வர்க்கும் காதல் பொதுவில்லையோ? உங்
கட்கிது தெரியவே இலையோ? ஆண்
மக்கட்கொரு நீதி நிலையோ? பெண்
மக்கட்கந்த நீதி இல்லையோ? என்றும்
மனம் திருந்துவீர்! தினம் இரங்குவீர்!
இனம் உணருவீர்! கனம் தருகுவீர்!
மாதர் புவியின் பாக்யம்! (தமிழ்)

(4) பாலப்பருவத்தில் முனிவனுக் கிணங்கிய
பரிமள கந்தியொரு சாக்ஷி! யதுகுலப்
பாண்டு மனைவிகள் மார்த்தாண்டனொடு பலரை
வேண்டிக் கலந்ததொரு சாக்ஷி! அம்
பாலிகை! யம்பிகை! சாக்ஷி! துரு
பதன் மகள் பாஞ்சாலி சாக்ஷி! அந்தப்
பாராசர முனிவன் சாக்ஷி! எம
தருமராஜனொரு சாக்ஷி!
மதி யொருசாக்ஷி! ரவி யொருசாக்ஷி!
நதி யொருசாக்ஷி! புவி யொருசாக்ஷி!
(மா) முனிராஜன் சாக்ஷி! சாக்ஷி! (தமிழ்)

குறிப்புரை:—

1. ஏகாதிபத்தியம்—உலக முழுமையும் ஒரு குடை நிழலி லரசு செய்த திருதாட்டிரன் ஆட்சி

4. முனிவன்—பராசரன்
மார்த்தாண்டனொடு பலர்—சூரியன் எமதருமன் இந்தி ரன் அசுவினிதேவர்கள்
பாஞ்சாலி—துரோபதை மணஞ்செய்த கணவனிருந் தும் பாண்டவரில் மற்றையோரைக் காதலித்தாள்
மதி—சந்திரன், ரவி—சூரியன்
நதி—கங்கை, புவி—பூமி தேவி, முனிராஜன்—வியாசன்.

---

# தேசிய ஆக்க வேலை

(ஸ்ரீமான் சு. பழனியப்பா)

புனாவில் இரண்டு உயிர்களின் முயற்சியால் அருங்காரியஞ் செய்து வருவதை ஈண்டு பெருமகிழ்ச்சியோடு எடுத்துக் காட்டுகின் றேன்.

புனாவில் அறிஞர் கார்வும் அவரது மனைவியாரும் விதவைகட் காக விதைத்த விதை இப்பொழுது பெரியமரமாகிக் கனிதருகிறது. புனாவில் 1896ம் வருடத்தில் ஒரு விதவாச்சிரம சங்கம் காணப்பட் டது. அச்சங்க முயற்சியால் விதவாசிரமம் 1899ம் வருடம் ஸ்தா பிக்கப்பட்டது. ஒரு சிறு குடிசையில் அவ்வாச்சிரமம் முதல் முதல் அமைக்கப்பட்ட தென்பதை நேயர்கட்கு ஈண்டு குறிப்பிடுகின்றேன். அக்குடிசை இன்னும் ஒரு பெரிய வெளியில் பாதுகாக்கப்படுகின் றது.

குடிசையில் பிறந்த விதவாசிரமம் இப்பொழுது குன்றில் வெள்ளிபோல் பிரகாசிக்கின்றது. இதன் வளர்ச்சிக்குக் காரணர் ஒரு வர் ஆவர். அவர்தான் அறிஞர் கார்வ் என்பவர். இப்பெரியார் ஒரு விதவையை மணஞ்செய்து கொண்டு அவர் உதவிபெற்று விதவைகளுக்கென ஒரு அன்னசாலை—விடுதி 1907-வது வருடங்

கண்டு அதை 1915ம் வருடம் மேற்போந்த விதவாச்சிரம சங்கத்திற்குத் தானஞ் செய்தனர். அறிஞர் கார்வும் அவரது மனைவியாரும் செய்த முயற்சி நாளுக்கு நாள் வளர்ந்துவந்தது பாராட்டத்தக்கது. இவர் முயற்சியால் விதவை சர்வகலாசாலை ஏற்படுத்தப்பட்டது. அதன் கட்டட விலை ரூ.160,000 பெறும். இவர்களுக்கு உதவியாக பார்வதிபாய் என்னும் மற்றுமொரு மாதரசி சேர்ந்தனர். அவர் உழைப்பால் 1902 முதல் 1912ம் வருடம் வரை சங்கத்திற்காக சேர்ந்த தொகை ரூ. 80,000. மேலும் அவ்வம்மையார் யுனைடெட் ஸ்டேட்ஸில் விதவாசிரம சங்கத்துக்காக பாடுபட்டு பின் இந்தியா வந்தார். இவ்வம்மையார் புதல்வரும் போதிய உதவிபுரிந்தார்.

இவ்வாசிரம சங்கம் இதுகாறும் ஐநூறு விதவைகட்கு மேல் உதவி செய்திருக்கிறது. அவருள் சுமார் ஐம்பது பேருக்குமேல் இல்லறத்தை நடத்திவருகின்றனர். சுமார் அறுபதுபேர் வைத்திய இலாகாவில் சேர்ந்திருக்கின்றனர். சுமார் நூற்றைம்பது பேர் கலாசாலைகளில் ஊழியஞ் செய்கின்றனர். ஏனையோர் விதவைகள் நலங்கருதி பிரசார வேலைசெய்து வருகின்றனர். குடிசையில் தோன்றிய இவ் விதவாசிரமம் எவ்வளவு வேலை செய்திருக்கிறது. எத்தனை உயிர்கட்கு ஞானத்தை ஊட்டி இருக்கிறது. இஃதன்றோ உழைப்பு?

அறிஞர் கார்வும் அவரது மனைவியாரும் அவர்க்குத் துணைபுரிவோரும் செய்து வரும் வேலை தேசத்தில் என்றும் நின்று பயனளித்துக்கொண்டே யிருப்பதாகும். அவர்கள் செயலைப் போற்றி நாமும் பின்பற்ற முயற்சிப்போமாக.

நமது தமிழ்நாட்டில் சென்னையில் ஏற்பட்டு நடப்பதோடு அதை அபிவிருத்திக்குக் கொண்டுவருவதும் இன்னும் சிற்சில ஊர்களிலும் ஆசிரமம் ஏற்படுத்தி நடத்தவேண்டியதும் அவசியமாகும். விதவைகளின் கஷ்டத்தைக் கவனித்தல் அவசியம். பணக்காரர்களும் படிப்பாளிகளும் இப்புண்ணியத் தொண்டைச் செய்ய முன்வாலாகாதா? நமது நாட்டில் விதவைகள் துக்கம் பெருகிவருவதைக் கவனிப்பாரில்லையோ? இவ்வாச்சிரம அமைப்புக்குத் தொடக்கத்தில் பெருந்தொகை வேண்டுவதில்லை. புனா ஆசிரமம் குடிசையில் பிறந்தது. அதுபோன்ற ஒரு குடிசை தமிழ்நாட்டிலில்லையோ? பொது

ஜன சேவையில் ஈடுபட்டுள்ள நம் தாய்மார்களாவது விதவைக ளுக்கென ஒரு சில ஆசிரமத்தை ஏற்படுத்தி நடத்த முன்வரலா காதோ?

இம்மாதிரி 1921ல் ஒருவர் எழுதியிருக்கிறார். இப்பொழுது இந்த ஸ்தாபனம் இன்னும் மிகுந்த அபிவிருத்தியில் நடந்து வரு கிறது.

---

## அந்தோ சமூகத்தின் கொடுமை!

ரா. ராமன்.

நான் ஒரு ஏழைக் குமாஸ்தாவா யிருந்தேன். ஆனால், இப்பொ ழுது இல்லையோவென்றால், ஆம்! இல்லைதான். நேயர்காள்! என் ஊர்ப்பெயரை மட்டிலும் கேட்காதீர்கள்.

என் பெயர் 'பெண் பித்து மாதவன்' எனக் கூப்பிடுவார்கள். இவ்வாறு பெயர் வந்ததின் காரணத்தை நேயர்கள் ஒருவரிடத்தி லும் சொல்லாது ரகசியமாய் வைத்துக்கொண்டிருப்பீர்கள் எனும் நம்பிக்கை கொண்டு வெளியிடுகிறேன். நான் எல்லோரிடத்தும் உலகத்தில் பெண்கள்தான் மேன்மையான சிருஷ்டி என்றும், அவர்களுடைய அழகு, யௌவனம் முதலியவைகளையே வர்ணித் தும், அவர்களே வீட்டிற்கு வெளிச்சம் கொடுக்கக்கூடியவர்கள் என்றும், பெண் மக்களைப் பற்றியே பேசிக்கொண்டிருப்பேன். (பெண்டிர்கள் எவ்வாறு வீட்டிற்கு வெளிச்சம் கொடுக்கக்கூடியவ ரென்றால், அவர்கள்தான் வீட்டில் விளக்குகளை ஏற்றியும், சமைப்ப தற்கு அடுப்பு மூட்டியும் வீட்டில் வெளிச்சத்தை உண்டுபண்ணு கிறார்கள்.) அதனால் எல்லோரும் எனக்கு இப் பெயரை வழங்கலா யினர். இது நிற்க, நான் ஒரு ஏழை குமாஸ்தாவென்று முன் கூறி னேனல்லவா? குமாஸ்தாக்களுக்குள்ளும் எவ்வளவோ பிரிவுகள் இருக்கின்றனவே. ஆதலால் தெளிவாகக் கூறுகிறேன். நான் ஒரு வக்கீல் குமாஸ்தா. இப்பொழுது வக்கீல்களைப்பற்றி கூறவேண்டிய தேயில்லை. துட்டுக்கு ஒரு வக்கீல்தான். ஆனாலும் என் வக்கீலுக்கு

மட்டிலும் திட்டமாக மாதம் ரூபாய் ஐம்பதுக்குக் குறையாது. ஆகவே என் சம்பளத்தை நான் சொல்லாமலே நீங்கள் அறியக் கூடும். மாதத்திற்கு 31 நாளுக்குமேல் 32 நாட்களானுலும் ஆகும். என் வரும்படி மட்டும் ரூபாய் இருபதுக்குமேல் போகாது.

இது ஒருபுறமிருக்க, என் வாழ்க்கைக் கதையை ஆரம்பிக் கிறேன். என் குடும்பம் மிகப் பெரிது. என் குடும்பத்தில் அடங் கியவர்களில் ஒருவரைக்கூட விடாமல் கூறுகிறேன். நாங்கள் மொத்தம் ஆறுபேர்கள். நான் ஒன்று, என் மனைவி ஒன்று, என் பத்து வயது மகளான நீலா ஒன்று, என் விதவையான அக்காள் ஒன்று, சிறு வயதிலேயே விதவையான என் தங்கை ஒன்று, 16 வயது தடியனுன என் அக்காள் மகன் ஒன்று. ஆக நபர் ஆறு. நான் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்க வேண்டியது. மற்ற எல்லோரும் சாப் பிட வேண்டியது. ஆனுல், பெண்டிர்கள் சம்பாதிக்க மாட்டேன் எனக் கூறவில்லை. சமூகந்தான் இடங்கொடுக்க மறுக்கிறது.

நான் இவ்வாறு கஷ்டப்பட்டு சாப்பாட்டிற்கும் 'லாட்டரி' போட்டுக்கொண்டிருக்குங் காலை, நம் ஹிந்து சமூகம் என்னை வந்து தாக்கிற்று. சமூகம் நேரே வந்து தாக்குமா என்று நினையாதீர் கள். நேரே வரவில்லை. ஆனுல் அதன் பிரதிநிதிகளான 'வைதீ கர்கள்' என்று சொல்லிக்கொள்பவர்கள் வந்து தாக்கினுர்கள். 'அடிபிடி கலகமுண்டா' என்று கேட்காதீர்கள். வைதீக சிரேஷ் டர்கள் சிலர் என்னிடம் வந்து 'நீ என்னடா ஒரு வக்கீல் குமாஸ்தா என்று சொல்லுகிறுய். தடிகணக்கான ஒரு பெண்ணை வைத்துக் கொண்டு இன்னமும் விவாகம் செய்து கொடுக்காமலிருக்கிறுய்; ஏழு வயதிலேயே செய்துகொடுக்க வேண்டியதிருக்க பத்து வய தாயும் கல்யாணம் செய்துகொடுக்கவில்லை. நம் சமூகத்திற்கே ஒரு கோடரிக் காம்பு போல் வந்திருக்கிறுயே' என்று பலவாறுகப் பழி சொன்னுர்கள். அவர்களை எதிர்த்துப் பதில் சொல்ல எனக்கு தைரியம் போதவில்லை. சமூகத்திற்குப் பயந்து உடனே ஜாத கத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டேன் வரன் தேட.

ஒரு வருஷம் வரன் தேடுவதிலேயே கழித்தேன். என் பெண்ணுக்கு மட்டிலும் வரன் கிடைக்கவில்லை. 'போன மச் சான் திரும்பி வந்தான் பூமணத்தோடே' என்றபடி திரும்பி வந்

தேன். இவ்வளவு சங்கடப்பட்ட பிறகு 'ஏன் நீலாவை நம் மருமானுக்குக் கொடுக்கக் கூடாது' என்ற எண்ணம் தோன்றிற்று. எதுவும் என் மனைவி ஒப்புக்கொண்டால்தான் செய்யலாம். ஏனெனில் என் மனைவியைக் கண்டால் எனக்குப் பயம். தைரியத்தைக் கைக்கொண்டு அவளிடம் என் யோஜனையைச் சொன்னேன். அவ்வளவுதான் தாமதம். என் மனைவி பத்திரகாளி உருக்கொண்டாள். "அந்தத் தடியன், நீர் கட்டி வைத்திருக்கும் தர்ம சத்திரத்தில் சாப்பிட்டு ஒரு சம்பாத்தியமுமில்லாமல் திரிகிறுன். நீர் இச்சத்திரத்தை நிறுத்திவிட்டால் என்னே அவன் கதி! நம் நீலாவை அவனுக்கு வாழ்க்கைப்படுத்திக் கொடுக்க நீர் நினைத்து வாழ்க்கைப்படுத்தினுல் நானும் அவளும் கிணற்றில் விழுந்து இறந்துவிடுவோம்" என்று கன்னத்தில் அடித்தாற்போல் பதிலளித்தாள். வேறே சொல்ல நாவெழாமல் என் மனைவியிடமே வரனைத் தேடும் பொறுப்பை ஒப்புவித்துவிட்டேன்.

சில நாட்களுக்குள்ளேயே என் மனைவி அருமை நீலாவுக்கு ஒரு வரனைத் தேடி, கல்யாணத்திற்கு முகூர்த்தம் முதல் பார்த்து வந்ததாக என்னிடம் கூறினுள். பிறகு மாப்பிள்ளையைப் பற்றி வர்ணிக்கத் தொடங்கினுள். வர்ணித்தாளோ இல்லையோ வந்தது கோபம் எனக்கு. கோபம் வந்தால் என்ன செய்ய. தூணில் முட்டிக்கொள்ள வேண்டியதுதான். அந்த மாப்பிள்ளை இதற்கு முன் ஆறு முறை மாப்பிள்ளையாக இருந்திருந்தாராம். ஆறு மனைவிகளையும் இழந்தாராம். அவருக்கு வயது ஐம்பத்தைந்துதான் ஆகிறதாம். ஹா! இப்பேர்ப்பட்ட தொண்டு கிழவனுக்கு மனைவியாகப் போகிறவளின் பின் நிலைமை எவ்வாறிருக்கும்? என்னுல் வேறு ஒன்றும் செய்ய முடியாது என்பது எனக்கு நன்கு தெரியும். அதனுல் நடக்கிறது போல் நடக்கட்டும். என்று பேசாமலிருந்து விட்டேன். கல்யாண மகோத்ஸவமும் மேளதாளத்துடன் நடந்தேறியது. ஆனுல் நான் மட்டிலும் இந்தச் சந்தோஷ காலத்தில் பங்கெடுத்துக்கொள்ளவில்லை.

இரண்டு மாதங்கள் கழிந்தன. நான் என் ஜோலிகளின் மத்தியில் என் வாழ்நாட்களைக் கழித்துவந்தேன். வீட்டு சமாச்சாரங்களில் தலையிடாமலிருந்தவனுக்கு தலையிடும்படி நேர்ந்தது. என்

வீட்டில் கைம்பெண்கள் இரண்டிலிருந்து மூன்ருயிற்று. புதிதாய் ஒரு விதவையும் வரவில்லை. என் மாப்பிள்ளை துஞ்சினதின் பலனாக என் மகள் விதவையானள். சமூகத்தின் கொடுமையே என் கண் முன் நின்றது. சமூகம், சமூகம் என்று பயப்படுவதினுல் யாதொரு பயனுமில்லை என்று தைரியங்கொண்டு என் மகளுக்கு விதவைக் குரிய சடங்குகளைச் செய்யாமல் முன் போலவே இருக்கும்படி செய்தேன். பொறுக்குமா நம் சமூகத்திற்கு. உடனே என் குடும் பத்தின் மேல் போட்டார்கள் 144.

* * *

இவ்வாருக வருடம் எட்டு கழிந்தது. என் மகளும் அன்று மலர்ந்த புஷ்பம் போலானள். சமூகத்தைப் பற்றி நினைக்க நினைக்க அதனிடத்து வெறுப்பே அதிகரித்து வந்தது. அப்பாழும் சமூ கம் பெண்களுக்கு கணவர்களைத் தேடிக்கொள்ளும் உரிமையை இழக்கும்படி செய்ததுமல்லாமல் பால்யவிதவைகளையே இறக்கு மதி செய்துகொண்டிருக்கிறதே. அந்தோ! இவ்விறக்குமதியின் பேரில் 144 போடக்கூடாதா. இக்காலத்தில் ஆணுக்கும் பெண் ணுக்கும் அங்க அமைப்பிலன்றி அறிவிலோ திறமையிலோ வித்தி யாசமில்லையே என்று பலவாருக எண்ணி கடைசியில் என்ன வந் தாலும் சரி நான் என் மகளுக்கு மறுமணம் செய்துவைக்கவேணு மென்று தீர்மானித்துக்கொண்டேன். இந்த எண்ணத்தை என் மனைவியிடம் சொல்லி அவள் அனுமதி பெற அவாக் கொண்டேன். அவள் ஆமோதியாவிடினும் எப்படியாவது செய்தே தீரவேண்டும். கைம்பெண்ணுயிருந்து பார்க்கச் சகிக்க முடியவில்லை. பார்த்தீர் களா புழுவுக்கு வந்த தைரியத்தை!

என் மனைவியிடம் அனுமதி பெற ஒரு தந்திரம் கையாண் டேன். மனைவி முதலானேர்கள் ஒருநாள் குழுமி உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அதுவே தக்க சமயமென்று நினைத்துச் சென்று தைரியத்துடன் "நான் நம் நீலாவிற்கு மறு விவாகம் செய்து வைக்க நினைக்கிறேன்" என்று கூறிவிட்டு எல்லோர் முகத் தையும் உற்று நோக்கினேன். ஒருவர் முகத்திலாவது அருவருப்புக் குரிய தோற்றம் காணவில்லை. சரி என்று நினைத்துக் கொண்டு "மறு மணமாக நம் மருமகனுக்கே கொடுக்க நினைக்கிறேன்"

என்று சொல்லிவிட்டு நான் வெளியில் சென்றேன். அவர்களுக்கு இதைப்பற்றி யோஜிக்க அவகாசம் கிடைத்தது.

பிறகு, நான் வெளியிலிருந்து வந்ததும் என் மனைவியிடம் கேட்டேன். அதற்கு அவள் "உங்கள் வார்த்தையைத் தட்டிச் சொல்ல எனக்கு நா இல்லை. உங்கள் இஷ்டம்" என்று முடித்தாள். நானும் இம்மாதிரியான பதிலையே எதிர்பார்த்தவனாதலால் உடனே நீலாவின் அபிப்பிராயத்தை அறிந்தேன். இதைக் கேட்டவுடன் அவளுக்குண்டான சந்தோஷத்தைச் சொல்ல இயலாது. அடுத்த நாளே இருவருக்கும் கல்யாணம் செய்வித்தேன். என்ன மாதிரி கல்யாணம் என்றால் ஒரு விதமான படாடோபமின்றி "ரிஜிஸ்டர் கல்யாணமே." இப்பொழுது தம்பதிகள் சவுக்கியமாக விருக்கிறார்கள். மாப்பிள்ளை ஒரு இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி ஏஜெண்டாகவிருந்து ரூபாய் ஐம்பதுவரை சம்பாதிக்கிறான். மாப்பிள்ளையின் சுக்ரதிசை ஆரம்பம்போலும்.

நான் இப்பொழுது என்ன செய்கிறேன் தெரியுமா? என்னை எல்லா நிபுணர்களும் சேர்ந்து 'நம் சமூகத்தையே கெடுத்து விட்டான்' என்று ஓடோடி அடிக்க வந்தார்கள். நான் என்ன செய்வேன். ஊரைவிட்டு ஓடி வேறு பக்கத்து ஊரில் குடியேறினேன். சமூகம் அத்தோடுமட்டிலும் விடவில்லை. என் வயிற்றிலும் அடிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன், என்னை குமாஸ்தா வேலையினின்றும் நீக்குமாறு என் வக்கீலிடம் சமூக சிரேஷ்டர்கள் கூற, அவரும் அவ்வாறே செய்தனர். அதுதான் நலம் என்று நினைத்து நான் என் மாப்பிள்ளைக்கு அவர் வேலையில் உதவிபுரிந்துவருகிறேன்.

நேயர்களே! நம் சமூகம் எவ்வளவு கெட்டிருக்கிறது. எவ்வளவோ பெரியோர்கள் இதைச் சீர்திருத்தம் செய்ய முயன்றும் மதம், ஜாதிக்கட்டு எனும் இரு ஆறுகளையும் முழுதும் தாண்டி முன் வர முடியவில்லை. ஆடவர்களாகப் பிறந்தவர்கள் எத்தனை தடவையானாலும் கல்யாணம் புரிந்துகொள்ளலாமாம். பாவம் செய்து உலகத்திலே ஜனித்த பெண்டிர்கள் ஒரே ஒரு தருணம் மட்டிலும் விவாகம் செய்துகொள்ளலாமாம். அதுவும் பேதைப் பருவத்தே

நடத்தல் வேண்டுமாம். என்ன சட்டம்! என்ன அநியாயம்! விதவைகளின் கண்ணீர் என்று ஒழியுமோ? என்று பால்ய விவாகம் ஒழியுமோ? அன்று முதல்தான் நம் சமூகம் முன்னிலை அடையும்.

---

# பரிதாபம்!

S. சிவப்பிரகாசம்

(இந்துஸ்தான் மெட்டு)

அந்தோ பரிதாபமே—விதவை
யானோர் நிலைமோசமே!—நாளும்
சிந்தை மிகத்தாபமே—கொண்டு
தீர்ந்தார் நலம்யாவுமே!

நிந்தை யடைந்தாரிந்தப் புவியில்
நொந்தே மனம்வாடி வருந்தினரே! (அந்தோ)

ஆண்கள் மறுமணமே—புரிந்
தாசைகொள்வார் தினமே!—மரத்
தூண்கள் எனநினைத்தார்—பெண்கள்
தூய மணம் மறுத்தார்!

வீணேசிறு விதவைகட் கேதுயர்
ஏனோ புரிந்திடுகின்றார் புவியோர்? (அந்தோ)

மீசை நரைத்தோர்களும்—திரை
மேனி பழுத்தோர்களும்—மாதர்
ஆசை மறந்ததுண்டோ?—மிகும்
ஆவல் தணிந்ததுண்டோ?

மோசம் பெருமோசம் இதுவலவோ?
பேசும் மதநாசம் புரிந்திடுவோம்! (அந்தோ)

# விதவைகள் வேண்டுவது விவாகம்.

P. சோக்கலிங்கம், ஷண்முகநாதபுரம்.

அறிவிற் சிறந்த விதவை சகோதரிகள் விரும்புவது ஒரு முக்கியமான பொருள். அது யாதெனில் மனதுக்கேற்ற மணாளன். வேறு என்ன கேட்கிறார்கள்? நாம் ஏன் அதற்குத் தடை செய்ய வேண்டும் என்று மனதுக்குள் நினைத்துக்கொண்டு வெளியில் சொல்ல அஞ்சுவானேன்? தாராளமாக பலபேர் பார்க்க விவாகம் நடத்திவிடலாமே என்று ஒரு வாலிபன் தன் பிதாவினிடம் சொல்லவும் உடனே வந்தது கோபம்! பையனைக் கடிந்து பேசி திட்டி அடித்து விரட்டி விட்டார்! மனதறிய ஒருவருக்கு பகிரங்கமாக விவாகம் செய்துகொடுக்க இசைவதில்லை. நடைபெறும் தவறுகளைத் தடுக்கவும் முடிவதில்லை.

அன்பிற் சிறந்த பெரியோர்களே! விதவைகளுக்கு மறுமணம் செய்வதால் நம்முடைய குலம் அழிந்து விடாது! பயப்பட வேண்டாம். மனதில் நினைப்பது போல் வெளியில் செய்து காட்டி விதவைகள் கண்ணீரைத் துடையுங்கள்! அது உங்களுடைய கடமை.

வாலிப இளைஞர்களே! எழுங்கள்! விதவை யென்னும் பட்டத்தை உடனே நீக்குங்கள்! உங்களால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை. பெரியோர்களிடம் நயந்து விதவைகளைக் கலியாணம் செய்து வையுங்கள் என்று சொல்லி அவர்கள் மனதைத் திருத்துங்கள். நீங்களெல்லாம் பின்னடைந்தால் விதவை சகோதரிகள் எப்படி இம்மண்ணுலகில் கௌரவமாக வாழ முடியும் என்பதை யோசித்துப் பாருங்கள்.

விதவை சகோதரிகளே! உங்களுக்கு விரைவில் நல்வாழ்வு கிடைக்குமென்பது எனதபிப்பிராயம்! என் அபிப்பிராயம் போல் பெரும்பாலோர் உங்களை நல்ல நிலைமைக்குக் கொண்டுவந்து விடப் பாடுபடுகிறார்கள். இனி நீங்கள் கவலை அடையவேண்டாம். ஆனால் நீங்கள் ஒரு ஏற்பாடு செய்தால் கூடியசீக்கிரம் உங்களுக்கு நல்ல மணாளனைத் தேடிவைக்கவும் விவாகத்தை முடித்துவைக்கவும் தகுந்தவர்கள் காரைக்குடியிலிருக்கும் மாதர்மறுமண சகாய சங்கத்

தார்ஆவர் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு நேரிலோ அல்லது லெட்டர்மூலமோ உங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்து விடுங்கள்! இப்படிச் செய்வதைத் தவிர்த்து தனக்கிசைந்த கள்ளக்காதலனுடன் சேர்ந்து வெளியூர்கள் சென்று கையில் உள்ள பொருள் யாவற்றையும் செலவு செய்து கஷ்டம் வந்த சமயத்தில் வயிற்றில் சிசு உற்பத்தியாகிவிட்டால் திரும்பி வீட்டுக்கு வந்தால் கேவலம் என்று தாமரையில் தத்தளிக்கும் தண்ணீரைப் போல் வருந்தும், சமயத்தில் சிசுவளர்வதை தடுக்க மருந்து சாப்பிட்டும் தீராமல் பிறந்து விட்டால் சாக்கடையிலாவது குப்பைத் தொட்டியிலாவது எறிந்து விடுவது ரெம்ப அவமானம் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு வெளியூர்கள் செல்லாமல் பல பேரறிய தனக்கிசைந்த மணாளனை பகிரங்கமாக மணந்து கொண்டு சுகமாகக் காலங் கழிப்பது தான் மேன்மை.

சமூகப் பெரியோர்களில் சிலர் மறுமணத்துக்கு ஆதரவளித்தும் சிலர் அப்படிச் செய்வது கூடாது என்றும் தடைசெய்கிறார்கள். அதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். ஏன் அப்படிச் செய்தால் என்னவென்று கேட்டால் நம் ஜாதி வழக்கமல்ல என்றும், விதவைகளுக்குக் கலியாணம் செய்வது சாஸ்திர விரோதமென்றும் சமூகம் இடங்கொடுக்கவில்லையென்றும், இன்னும் பல வாறாகவும் பேசுகிறார்கள். அப்படிச் சொல்லுகிற பெரியோர்களே! உங்களுக்கு ஒரு வார்த்தை! மறு விவாகம் செய்யக்கூடாது! ஆண்களுக்கு மாத்திரம் ஒரு தாரம் முதல் ஐந்தாறு தாரம் வரை செய்யலாம்; இது எந்த சாஸ்திரத்தில் இருக்கிறது என்று கேட்கிறேன். விதவைகள் பல சந்தர்ப்பத்தில் கள்ளத்தனமாக சிற்றின்ப வழிகளில் ஈடுபட்டு காலங்கழிப்பதில் தங்களுக்கு இஷ்டமா? அப்படி அவர்கள் கெட்டுப்போவதால் சமூகத்துக்கு அவமானம் ஏற்படுகிறது அல்லவா? நன்றாய் யோஜித்துப்பாருங்கள். விதவைகளுக்கு விவாகம் செய்து வைப்பதுதான் நலம் என்று உங்கள் மனதுக்கே தெரியும். ஆனால் பகிரங்கமாக ஆதரிக்க அஞ்சுகிறீர்கள்!

# மாதர் மறுமணமும் மறுவிலாப் பண்பும்

ரா. ராமன்.

வருங்கால வாழ்க்கையை ஏற்றியக்கவும் ஈந்துவக்கவும் தயாரி லுள்ள இளைஞர்களே! முதியவர்களே! எழுங்கள்! எழுங்கள்!! இன்னும் உறங்காதீர்கள்!!! ஊக்கத்துடன் ஏற்பன செய்புங்கள். அங்கத்திலும் அகவையிலும் அறிவிலும் பெரியோர்களே! ஏற் பனவென்ப தின்னதெனத் தெரியுமா? அது நீங்கள் நற்பொருத்தம் பார்த்து, நல்லறம் புகுந்து நங்கையைத் தழுவி, நாலாறு (பத்துத்) திங்கள் சுமந்து பெற்று இடுக்கி ஏந்தி, "எங்கள் குலம் விளங்க வந்த ஏந்திழையே கண்வளராய்" என்று தாலாட்டிச் சீராட்டி வளர்த்த பெண் பதின்மூன்றாண் டடைந்ததும் பூக்காததுகண்ட நீவிர் வருந்திப் பல தலங்கள் சென்று, வணங்கி வாழ்த்தி வரம்பல வேண்டி, படாதபாடெல்லாம் பட்டு, வளர்த்து பக்குவமாகிய பெண்ணை படு கிழவனுக்கும், தொழுநோயனுக்கும் கட்டிவைத்து, மாப்பிள்ளையைக் கட்டையிலேற்றிவிட்டுப் பெண்ணைச் சீர்குலைத்து வைத்திருக்குங் கொடுமையையும், விதிவசத்தாற் புருடனையிழந்த பூவையரைப் பூட்டிவைத்திருக்குங் கொலையையும் அறவேயொழி த்து, அடுத்தவர்க்கு மணஞ்செய்விப்பதுதான் ஏற்பன செய்வ தென்பது.

பெரியோர்களே! நம் நாட்டில் எத்தனை திருவிழா, எத்தனை புதுமை, எவ்வளவு கல்யாணம், நல்லநேரம் பொருத்தம் சகுனம் பார்த்து நாடொறும் நடத்துகின்றோம்; இத்துணை நற்காரியங்களும் மங்களமுழவதிர நடைபெற்றுக்கொண்டிருக்கும் நாட்டில் எங்கு நோக்கினும் இதற்கெல்லாம் மாறாக, அபசகுனம்போல் அழுகைப் பேரொலி கேட்பது நோக்குமின், நோக்கி அழுகையை விரைவினி லொழித்துப் பண்பும் பயனுங் காணுமின்.

அவ் விதவையர்கள், ஒரு பாழ்பட்ட மூலையிற் பதுங்கிக் கொண்டு, விம்மி விம்மி அழுவதாற் குற்றமில்லை என்ற அசட்டுத் தன்மையை ஒழித்திடுமின். அழுதழுது அகம் வேவாரை, நாட்டி னுள்ளும் வீட்டினுள்ளும் அடைத்துவைத்திருப்பதானது வருங்

காலத்திற் பெரியதொரு தீங்கினை விளைக்கும் என்பதற்கு இற்றைய நிலையே சான்றாம்.

"ஆயிரக்கணக்கான விதவைகளை நம் மத்தியில் வைத்துக் கொண்டிருப்பது, ஒரு வெடிச்சுரங்கத்தின்மேல் உட்கார்ந்துகொண்டிருப்பதற்குச் சமமாகும், எந்த நிமிஷத்தில் அது வெடித்து ஆபத்து உண்டுபண்ணுமோ தெரியாது" என்று மகாத்மா காந்தியடிகள் கூறுவதுங் காண்க.

அநுபவத்திற் சிறந்த பெரியோர்களே! இயற்கையுணர்ச்சியைச் சிறிது நோக்குங்கள்- அப்பொழுது, புல் முதல் தேவரீறாக வுள்ள, எல்லாரிடத்தும் புயக்க வேட்கை முதிர்ந்து நிற்பது காணலாம். காவியத்தில் ஓவியத்திற் காதற் சிறப்புணர்த்துமிடங்களையுற்றுச் சிந்தியுங்கள். மணமாகவேண்டும் ஒரு பெண், மாடத்தும்பருலாவும்போழ்து வழிவழியே செல்லுமொருவனைத், தனக்கேற்றானிவனே என்றெண்ணங்கொண்டதும், அவன் மீது தங்கெண்டையந்தடங்கண்ணை யோச்சித், தன் மின் ஆற்றலாலீர்த்து, அசைவுறாது நிற்கச் செய்து அவன் புகலிடமறியாது திகைத்து இவனிடம் மயங்கினனாய் நிற்கும், மனித இயற்கையுணர்ச்சியை உள்ளவாறே கூறுங் கம்பசித்திரம், வள்ளுவர் வாய்மை, பிற நூற்களிலுங் காணலாம். காணவே தம்மக்களுக்கு மணஞ்செய்து வைக்குங் கவலையுடையவராய் ஈன்றோர்கள் முயற்சி யிருக்கும்பொழுது ஒன்றுமறியா இளஞ் சிறாருக்குள் இவ்வளவு துணிபும் வேட்கையுமிருக்குமானல் "பழக்கங் கொடியதுபார் பாறையினுங் கோழி கிழிக்கும் பொலியைக் கிளறும்" என்றபடி இல்லிடைப்புகுந்து மருவிக் களித்துப் பழகிய ஆணும்பெண்ணும் அதனை எவ்வாறு மறக்கமுடியும்? இளஞ் சிறுவர் கண்டதுங் கொள்ளுங்காதல் போலன்று. இவர்களைப் பூட்டிவைப்பினும் முன் பழக்க வலிவால் எண்ணியெண்ணி வருந்தா நிற்பரன்றோ? இளைஞர்களே! உங்கள் இள நங்கையைப் பிரிந்து ஒரு நாள் அடுத்த ஊரிற்றங்கும் நீவிர் உள்ளம் குழம்பி, உறக்கமும் கொள்ளாது வருந்தியதை ஒன்றுகூடியஞான்று பேசிப் பெண்தன்மை ஆண்தன்மை யறிந்திருப்பீர்களன்றோ? இவ்வியற்கை நவிற்சியானெல்லாம் ஆண் பெண் இருபாலார்க்கும் மறுவிலாப் பண்பாம் மறுமணம் வேண்டுவதின்றியமையாததாக இருக்க, ஆண்

களுக்குமட்டும் அவர் மனைவி இறந்த பிணப்பந்தலே மணப்பந்தலாய் நிறுத்தி அவனுக்கு மறுமணம் செய்விக்கின்றார்கள். என்னே! இவர்களின் ஒருதலை ஊனக் கண்ணோக்கு. ஈன்ற நற்பெரியோர்களே! இவனுக்கு மட்டும் மறுமணம் வேண்டியதின்றியமையாமை எவ்வாறென்பதை எண்ணிப்பாருங்கள். "கெடுவல் யானென்பதறிகதன்னெஞ்ச, நடுவொரீஇ யல்லசெயின்" என்ற திருக்குறளுக்கு மஞ்சாது இவர்கள் நடுவிகந்த தன்மை இதுவேயன்றி வேறில்லையாகவேண்டும். அது:—ஆண் மூர்க்கருக்கு மறுமணஞ் செய்யாதிருப்பின் அவர்களை வேரறுத்து உண்ணவும் உடுக்கவும் படுக்கவும் இடங்கொடாது, மாட்டுக் தொழுவிலடைத்து வைப்பனென்றஞ்சியும் பேதமைக்குணமும் பொறுமையுமே குடிகொண்ட பெண்களை தமக்கு எளிதானதாலும், மனோவேக்காட்டால் ஒரு பக்கம் மறைவாக வெந்து கரிந்து வருகின்றதை வெளிப்படையாக அறியாததினுலுமே ஒருதலை நோக்காயிருக்கின்றார்கள். இந்நோக்கு தந்தைக்கொருக்காலொவ்வுமெனும், "தக்க தசமதிதாயொடு தான்படுந் துக்கசாகரத்துயரிடைப் பிழைத்து" என்றபடி பெருந் துன்பக் கடலிடை மூழ்கி யெடுத்த ஒப்பில் மணியன்ன பெண்மணியைப் பெற்றெடுத்த தாய்களும் வாளாவிருத்தல் எவ்வாற்றானும் ஒவ்வாததாகும். ஆகவே அவர்கள் என் செய்யவேண்டுமெனின்:—

"பத்துத் திங்கள் பாழும் வயிற்றிற் சுமந்துபெற்ற இப்பேரழகியை, இவள்பால் காணப் பேரவாகொண்டிருந்த பேறுகளெல்லாம் மறையச் சீர்குலைத்து மூலையிலொதுக்கி வைத்துவிட்டு நானும், நீவிரும் மகிழ்தல் நன்றன்று; ஆகவே, அவளுங்கொரு வழி பிறக்காதவரையில், முன் மோசம் செய்ததுபோல் பின்னுஞ் செய்யலாமென்றெண்ணி எம்பாலணுகாதீர்! உம் உறவால் இன்னும் இவள் போன்ற இடைக்கொடி இளமதி முகத்தாளைப் பெற்றுப் பெற்று பெரும்புலி போன்றாகிய உங்கள்பால் தவிக்கற்கு விட்டிருக்க எம் உள்ளம் ஒருப்பட்டிலது. ஆண்டவனாணையாக எங்களினத்திற்கு இக்கொடுமை யொழியும்வரை நோன்பிருப்பேன். உறுதி! உறுதி!!" என்று கூறி நோற்பின் இதற்கொரு வழி பிறக்கும் என்பது திண்ணம்.

அருமைத் தாய்மார்களே! இன்னும் பேசாதிருப்பீர்களா

யின் உங்கள் கற்பென்னுந் திண்மையைக் குலேத்து நீங்கள் முயங்கி, முயன்று முன்னும் பின்னும் துன்பத்தாற் பெற்றெடுத்த அருமை யிளம் பெண்ணினத்தை, நீங்களே பெற்ற ஆணினம் சித்திரவதை செய்வதை யொழிக்க மாட்டார்களாதலால் மேற்கொள்ளப்பட்ட வாறு உறுதி பூண்டு நில்லுங்கள்! "சத்திதான் மாமுங் காழ்ப்பும்" என்றபடி நீங்கள் நினைத்தால் இவ்வாண்களுக்கின்பமேது? இவ்வுல கமேயேது? இல்லையேயன்றோ! ஆண்மக்களே விழித்தெழுங்கள்! நாம் செய்துவந்த—செய்கின்ற கொடுமைகள் அவர்கள் உள்ளத்தி லேறி உன்னத் தொடங்கியுள்ளார்கள், அவ்வாறெண்ணுவதில் நம்மைப் பிழைபாடாய்க் காணுமுன்னேயே அவர்களை மறுமணஞ் செய்து வைக்க முன் வாருங்கள். இல்லையேல் "மணம்" என்ற ஓசையே இல்லாதொழிந்துபோம். மாதர் மறுமணத்திற்குழைக்க முற்போந்தவர்களுள் எண்ணிக் கைப்பெருக்கமும், தலைமை தாங்கி நிற்பவர்களெல்லாம் பெண்களென்பதைக் கருத்திலிருத்துங்கள். அத் தலைமைப் பதவி நமக்குத் தாரதென்னை? தாமாட்டார்களோ? என்ற வினவை யெழுப்பிப் புண்படுத்துங்கள். இப்பொழுது ஆண் களாகிய நம் மீது நம்பிக்கையை யிழந்துள்ளார்கள். ஏன்? நாம் செய்த பெருமோசத்தாற் பின்னும் இழந்து வருகிறார்கள். ஆத லால் நல்லவர்களாய் நடந்து, நடுநிலைமை கொண்டபின் நம்பிக்கை யேற்பட்டு எல்லாவற்றிற்கும் நம்மைச் சேர்த்துக்கொள்வார்கள். அதற்கேற்ற வழியில் நடக்க முன்வாருங்கள்.

என்றுமறியாச் சிறுமியரை, நன்றலா தொன்றிலாழ்த்தலா காது, பெண்ணொரு பாகத்தனை நோக்கித் பின்வருமாறு:—

"வெந்த சாம்பலை விரையெனப் பூசியே
தந்தையாரோடு தாயிலர் தம்மையே
எந்த நாளுஞ் சிந்தை செய்வாளனை
வெந்து நொந்திடச் செய்வதுன் நீதியோ"

"உமையவள்பாகா உலகுக் கொருவனே
இமை தொறு மென்னுளம் ஏங்குதல் காணாய்
அமையாத தொன்றை ஆண்மக்களெனக்குச்
சுமையாக வைத்துள்ள சூழல்தான் தொலைத்திடே"

என்று தம் உள்ள நிலை கூறிக் குறையிரந்து கங்கையைச் சடையில் வைத்தோனிடம் வேண்டா நிற்கும் அம்மங்கையர்கட்கு நல்வழிக்கூட்டிவைப்பான் என்பது திண்ணம்.

விதவையின் துயரம் விரைவினி லொழிகவே!

---

## ஆடவர்கட்கோர் வேண்டுகோள்

(சித. ச. சுப. மணி)

(காந்தியோ பரம ஏழை—என்ற மெட்டு)

பணத்தாசையாலே பாரிலுள்ளோரே
பால்ய விவாகத்திற்கு உட்படாதீரே
உலகில் விதவையென உரைத்திடும் நீரே
உற்பத்தி செய்வீரானல் தடுப்பது யாரே
பால்ய விதவை நாங்கள் படுந்துயர்கண்டு
பரிகாசம் செய்வதன்றி மறுமணமென்று
முன்னின்று செய்யவே முழுமனமின்றி
மூக்காடிட்டலைகின்ற நீரன்றோ பெண்டீர்
மனுதர்ம சாஸ்திரத்தை யெடுத்துமே பாரும்—நம்
மறுமணத்திற்கு அதில் மறுப்புண்டோ கூறும்
இதுமட்டுமல்ல இன்னும் கண்கண்ட காட்சி
எட்டாம் எட்வர்ட் மன்னரே இதற்கு அத்தாட்சி
பஞ்சமா பாதகம் செய்திடலாமோ
பால்ய விதவைகளைத் தள்ளிடலாமோ
கொஞ்சிடும் குழவியைக் கொலைசெய்யலாமா—இதன்
குறிப்பறியாத பெற்றோர் குலம்பெரிதாமா
முன்பின் அறியாமல் மோசங்கள் போனீர்
முன்னோரை நம்பியே இக்கதி யானீர்
தன்னலங்கருதிடும் சமயத்தைப் பாராதீர்
தமியாள்சொற் கேட்டென்றும் தாரணியில் வாழ்வீர்
(பணத்தாசை)

---

# எனது கதை.

## மாஜி சுமங்கலி பூமீஸ்வரி.

உலகத்து மக்களுக்கு ஒன்று சொல்கிறேன். ஐயன்மீர்! அம்மையார்களே! "நீங்கள் மனிதர்களாக இருங்கள்!" என்பது தான். சுவாமி விவேகானந்தர் இதைத்தான் உபதேசித்தார். மனிதர் மனிதராக இருக்கவேண்டாமா? கோபங்கொள்ளவேண்டாம். மனிதர்களைப் பார்த்து நீங்கள் மனிதர்களாக இருக்கவேண்டும் என்று கேட்கும்படி இன்றைய உலகம் ஆகிவிட்டது. இரக்கமெங்கே! புறாவைக் காக்கத் தொடையை அறுத்துக் கொடுத்த மனிதன் அரசாண்டதாக இந்நாட்டுப் பெருமை எழுதப்படுகிறது. பசுங்கன்றைக் கொன்றதற்காகத் தன் மகனைத் தேர்க்காலில் கிடத்திக் கொன்ற மனிதன் ஆண்டதாக இந்நாட்டுப் பெருமை கூறப்படுகிறது. கணவனில்லாத வீட்டின் கதவைத் தட்டியதற்காகத் தன் கையை வெட்டிப் பொற்கை அமைத்துக்கொண்ட மனிதன் ஆண்டதாகப் பெருமையுரைக்கப்படுகிறது. ஆஹா! இக்கதைகள் எவ்வளவு இன்பமாக இருக்கின்றன. பிற உயிரைக் காப்பாற்றவும் பிற உயிரின் துன்பத்தைப் போக்கவும் நீதி செலுத்தவும் இப்படிப்பட்ட மன்னர்கள் திகழ்ந்த தமிழ்நாடு இன்றெப்படியிருக்கிறது? யோசித்துப்பாருங்கள்!

* * *

இந்நாட்டில் எத்தனை ஆண்மக்கள்! எத்தனை பெண்மக்கள்! கோடிக்கணக்கல்லவா? இத்தனை பெயருங்கும் இடமளித்திருக்கிற இந்தியத்தாயின் மடியில் நானும் ஒரு பெண் இருக்கிறேன். இந்த நாட்டில் மனிதர் மிருகம் பக்ஷி ஊர்வன நீர்வாழும்பிராணிகள் மரம் செடிகள் முதலிய எவ்வளவு பொருள்கள் இருக்கின்றன. இவைகளையெல்லாம் நினைத்துக்கொள்ளுங்கள். இத்தனை பொருள்கட்கிடையில் நானும் இருக்கிறேன்.

* * *

நானும் எனது கூட்டாளிகளுமாகப் பொழுதுபோக்கும்போது மாதர் மறுமணம் பத்திரிகை கிடைத்தது. எனது சினேகிதி

யொருத்தி 'இதில் பெண்கள் பலர் வியாசம் எழுதுகிறார்களே, நீயேன் எழுதவில்லை' யென்று கேட்டாள். தொழுவில் அடைபட்டுக்கிடக்கும் எனக்குக் கட்டுரை யெழுத இயல்பாகத் தோன்றவில்லை. அப்பெண் சொன்னவுடன் ஏன் எழுதக்கூடாது என்று கருதினேன். பேனாவை யெடுத்தேன். காகிதத்தையும் முன்னே வைத்துக்கொண்டேன். எழுத வரவில்லை. ஆனால், கண்ணீர் வந்தது. எழுதப் போனபோது கண்ணீர் ஏன் வந்தது என்று நினைப்பீர்கள். வாஸ்தவம்தான். நான் யோசித்து யோசித்துப் பார்த்தேன். என் கதையைத் தவிர வேறு கட்டுக்கதை யெழுதுவது அவ்வளவு பிரயோஜனப்படாதென்று கருதினேன். எழுத ஆரம்பிக்கும்போது என்னுடைய பழய அனுபவங்கள் ஞாபகங்கள் துன்பங்கள் துயரங்கள் வரிசையாக ஞாபகத்துக்கு வந்தன. பல வருஷங்களாக மறந்துபோன விஷயங்கள் மறுபடியும் ஞாபகத்துக்கு வந்தன. அப்பால் என்ன வருமென்று நினைக்கிறீர்கள்! கண்ணீர்தான் வந்தது. படிக்கிற உங்களுடைய வாழ்க்கையைப்போன்ற சந்தோஷ வாழ்க்கையானலல்லவா நினைக்கும்போது மகிழ்ச்சி வரும். நான் ஒரு துர்ப்பாக்கியவதி. பரிதாபத்துக்குரியவள். துன்பப்புள். தொழுவிலடைபட்ட பசுங்கன்று. கூட்டிலடைத்த குஞ்சரம். வலையிலகப்பட்ட மான். தூக்கில் போட்டும் சாகாமல் ஊசலாடும் மனித ஜன்மம். அல்லவா? எழுதுகிறேன். என் கதையைக் கேளுங்கள்:

* * *

நான் பிறந்தது திரிச்சி பெண்கள் ஆஸ்பத்திரியில். என் பெற்றோர் அங்கே தொழில் செய்துகொண்டிருந்தார்கள். அப்போது நான் ஆணாகப் பிறவாமல் பெண்ணாகப் பிறந்தேன். ஒரு தீண்டாத ஜாதி கிறிஸ்தவ ஜாதி துலுக்க ஜாதியிலாவது பிறந்தேனா? உயர்ஜாதியினருக்குப் பெண்ணாகப்பிறந்தேன். என்னை வளர்த்தார்கள். 8 வயதாயிற்று. மகிழ்ச்சியுடன் சிறு வீடு கட்டித் தெருவில் விளையாடினேன். பள்ளியில் படித்தேன். பாடலுங் கற்றேன். ஆர்மோனியம் பயின்றேன். விளையாடுமிடமெல்லாம் எனது நிறத்தையும் அழகையுங் கருதி என்னையே மணப் பெண்ணாக வைத்துப் பிள்ளைகள் விளையாடுவார்கள். செல்வர் மகளாகவும் செல்வத்திருவாகவும் விளங்கினேன். 12 வயது ஆயிற்று. படிப்பை நிறுத்தினர். கல்யாணம் பேசினர். முடித்தனர். அன்று முதல் நான் ஒரு சுமங்கலியானேன்.

மூன்று வருஷம் நான் செல்வத் தொட்டியில் குளித்தேன். ஒரே பெண். லட்சாதிபதி குடும்பம். மாமியாள் முன் அனுப்பப்படாத நிலை. எனக்களித்த சேலைகட்குக் கணக்கில்லை. நகைகளைக் குறிக்க முடியாது. பூலோகத்தில் கிடைக்கும் உயர்தரப் பொருள்கள் எனக்காக வந்து குவிந்திருந்தன. எனக்கு என்னுடைய வாழ்வுக் காக என் பெற்றோர்கள் அளித்த நன்கொடைப்பொருள்கள் சொல் லுக்கு அடங்குவனவல்ல. 500 ரூபா விலையுள்ள பட்டாடைகள் பல. 2500 செலவில் நான் படுத்துறங்கக் கட்டில். கட்டிற்கால்க ளுக்கு வெள்ளிப் பூண். அதிற் போட்டுள்ள மெத்தையின் மென் மையும் தன்மையும் வருணிக்க முடியாதனவாகும். வெள்ளிப் பாத் திரங்கள், தங்கப் பாத்திரங்கள் ஒன்றிரண்டா? குப்பை கோலோ வயிரமென்று கவியரசர் சொன்ன மாதிரி உடலெல்லாம் மூடவேண் டுமானல் என் பெற்றோர் அளித்த நகைகளே போதியதாகும். அழ கிய இன்பக் களஞ்சியமான மாளிகையொன்றை என் வாழ்வுக் கென அமைத்தார்கள். என் வாழ்வில் கவலை யென்பதைக் கண்ட தில்லை. துன்பம் தெரியாது. துயரத்தை நான் பார்க்கவில்லை. சோறு சமைத்தறியேன்; சுடு சொல்லைக் கேட்டறியேன். பாடு தெரியாது; பதறி நினைத்ததில்லை. மானாக, மயிலாக, குயிலாக வாழ்ந்தேன். எனக் குக் கல்யாணம் செய்யப்பட்ட மாப்பிள்ளை தொலைக்குக் கைபழகச் சென்றிருந்தார். என் பெற்றோர் எவ்வளவு சொல்லியும் ஒரு முறை யாவது போய்வாமல் முடியாதென்று அவருடைய தகப்பனர் வெளிநாட்டுக்கு அனுப்பிவிட்டார். அன்பர்களே! மாயத் தந்திவந்த தென்றூர்கள். ஒன்றுமறியேன். முதல்நாளிரவுவரை துள்ளி விளையா டினேன். விடிந்தது. உன் வாழ்வு ஒழிந்ததென்று கூறினர்கள். மின் னுமலிடித்ததென்று ஆய்விட்டது. பெரிய பூகம்பத்திலகப்பட்ட மாதிரி அணைப்பாரும் எடுப்பாருமின்றித் தவித்தேன், ஆறுதல் கூறு வாரில்லை. நடுக்கடலில் கப்பல் முழுகினற்போல யாவரும் பரிதபித் தனர். அழுதனர். துயரப்பட்டனர். கடலில் அலையில் அபாயத்தில் உழலும் எனக்கு உதவியளிக்க மனிதர் இல்லை. என் வாழ்வை நினைத்தேன். நேற்றுவரை இருந்த நிலையை நினைத்தேன். எதிர்காலத் தை நினைத்தேன். என்னுடைய பருவத்தை நினைத்தேன். எனக்கி ருந்த ஆசையெல்லாம் நினைத்தேன். எண்ணமெல்லாம் பறிபோச்சே என்று கருதினேன். ஆஹா எத்தனை ஆசைப்பட்டேன்; கணவன்

வருவான்; தனிவாழ்விருந்து அவனுடன் கொஞ்சி விளையாடலா மென்று வாயூறினேன். மற்றவர்க்குக்கிடைக்காத மாளிகையில் அந்த வெள்ளிக் கட்டிலில் பஞ்சணைப்பட்டு மெத்தையில் நாயகனோடு மகிழுலாமென்று ஆசைப்பட்டேன். குழந்தை பெற்று மடியில் வைத்துத் தாலாட்ட நினைத்தேன். ஐயோ என்னென்ன ஆசையெல்லாம் மனதில் எண்ணி யெதிர்பார்த்திருந்தேன். ஒரே ஒரு இரவில் படுக்கச் சென்றேன். எழுந்திருக்குமுன் என்னுடைய சகல வாழ்வும் சகல இன்பமும் எல்லா எண்ணமும் பஞ்சாகப் பறந்துவிட்டன. எண்ணியெண்ணி அழுதேன். இதற்குள் "அழுதென்ன செய்கிறது. சேலையை உரி; நகைகளைக் கழட்டுங்கள்" என்று சொல்லிக்கொண்டு இரண்டு மூன்று பெண்கள் நெருங்கினார்கள். என் செய்வேன், மயக்கம்போட்டுக் கீழே விழுந்தேன். வெகு நேரத்திற்குப் பின் விழித்தேன். என்னுடைய பரிதாப நிலையென்ன? பட்டாடையில்லை. அதற்குப் பதிலாக ஒரு வெள்ளைத்துணி என் உடலை மூடி நின்றது. வயிர நகைகள் போட்டிருந்த துவாரங்கள் மட்டும் இருந்தன. எல்லாம் பறிமுதல் செய்துவிட்டார்கள். அன்று முதல் இன்றுவரை அழுகையே எனக்குத் துணை, இன்று மாதர் மறுமணம் பத்திரிகை வெளிவருகிறது. எங்கள் அழுகையை அது சொல்கிறது. மறந்த கதையை ஞாபகப்படுத்துவதால் நாங்கள் போனதை நினைத்துநினைத்து அதிகமாக அழுகிறோம். படிக்கிற உங்கள் கண்ணிலும் கண்ணீர்வரும். கண்ணீர் வீண் நீராகாமல் ஏதாவது எங்கள் கண்ணீரைத் துடைக்க முற்படுவீர்களா? சமூகம் எங்களை வேண்டாத குப்பையில் ஒதுக்கித் தள்ளிவிட்டது. நாங்கள் குப்பைகளல்ல. மனிதர்கள்தான். உங்கள் தங்கையும் தமக்கையும் தாயும் மகளுமாகத்தான் பிறந்தோம் வளர்ந்தோம் வாழ்ந்தோம். குப்பையில் தள்ளிவிட்டீர்கள். நாங்களும் மனிதர்களாக உதவி செய்வீர்களா?

குட்டிச்சாத்தன்.

---

# பசித்தோருக்கு

# உணவளியுங்கள்!

# எங்கள் விதிக்கொரு மருந்தில்லையோ?

சிரம்பான், திரு. அ. பழ. பழனியப்ப செட்டியார்.

குறிப்பு:—ஓர் இளம் கைம்பெண் கலைமகளன்ன கல்வி நிறைவுடையாள். அழகில் திருமகள். பெண்களுக்குரிய நாற்குணமும் நாற்படையாக உள்ளவள். இம் மங்கைக்கு வினைத் தெரியாத வயதில் பொம்மைக் கல்யாணம் நடந்தது. தக்க வயது வந்ததும் சதிபதிகள் இல்லறத்தில் ஈடுபட்டனர். திடீரென்று கணவன் உயிர் கயிலை ஏகியது. பாவை துடிதுடிக்கிருள். அவள் அழும் கண்ணீர் சமூகக் கட்டுப்பாடு என்னும் கோட்டையைத் தகர்த்தெறிகிறது. அவள் கைம்பெண்ணிற்குரிய அலங்கோலத்துடன் வீட்டில் அடைபட்டுக் கிடக்கிருள். அவள் விடும் ஒவ்வொரு மூச்சும், மாமி, நாத்தி ஏனையோரின் கொடுமை, சாதி, ஆசாரம், மதக்கோட்பாடு மதில்களை ஜர்மன் குண்டுபோல் தவிடுபொடியாக்குகிறது. இந்நிலையிலுள்ள ஓர் விதவைப்பெண் சில வார்த்தைகளைப் பிறருக்கு எடுத்துரைப்பதாக இக் கட்டுரை அமைந்துள்ளது.

*என் அருமை சகோதரர்களே!*

பெண் என்ருல் பேயும் இரங்கும் என்பர். பெண் அபலை. ஆண்களின் அன்பிற்கும் பாதுகாப்பிற்கும் உரியவள். இன்று பெண் ஆண் பேதத்திற்கு சாவு மணி அடித்தாயிற்று. பெண் இன்றி ஆண் அமையாது. ஆணின்றி பெண் இல்லை. இரண்டும் சேர்ந்தால் இகபரம் சொலிக்கும். எனவே, பெண்ணைப் பழித்தல், பெண்ணை யிழித்தல், பெண்ணை ஒடுக்கல், ஆண்கட்கு அழகன்று. தர்மமன்று.

*வீர இளைஞர்களே!*

எங்கள் துயரைப்பற்றி, எங்கட்குற்ற விதியைப்பற்றி எவ்வளவோ பேசிவிட்டீர்கள். எழுதிவிட்டீர்கள். இனி மேடைப் பேச்சால் பயனில்லை. உண்மையில் நீங்கள் என்போன்ற விதவையர் நலன் கருதுவீர்களாயின், எம் துயரத்தை, துடிப்பை, சிலதொன்ருக்கத் துணிவீர்களாயின், என் போன்ற சகோதரிகளு

டன் நீங்கள் பிறந்திருப்பீர்களேயாயின், இப்போதே முன் வாருங்கள். எங்களைப் பெண்வேட்டையாட நினைக்காது, எங்களைக் கற்பழிக்க நினைக்காது, ஒழுங்கான இல்லறம் நடத்தத் தகுதியுடையோர் உடலுறுதியுள்ளோர் வாருங்கள். எங்கள் மறுமணத்திற்குப் போதரவு தாருங்கள். நீங்கள் வீரம் செறிந்த ஆண் மக்களாயின் களவொழுக்கம் விரும்பாதீர்கள். பகிரங்கமாக முன் வந்து மணம் புரியுங்கள். விதவைகளை மணம் புரிந்து கொண்டால் உலகு நகைக்குமே, வீட்டோர் ஏசுவார்களே, உறவினர் இழிப்பார்களே என்று அஞ்சுவோர் மரியாதையாய் வீட்டில் இருந்துவிடுங்கள். எங்களைக் கெடுத்துப் பழிக்காளாக்கவேண்டாம்.

கேவலம் காம இச்சைக்காக அன்றி உண்மையிலேயே திரிகரண சுத்தியுடன் அறநெறிப்பட்ட இல்வாழ்வு வாழ விரும்புவோர் அவ்வில்லறம் தாங்க ஆற்றலுள்ளோர் எங்களை சக்தித்திருவாக எண்ணி மறுமணம் புரிந்தால் நம் இளைஞர்களிடையே வியபசாரம் அற்று நாடு புனிதமுற்று முன்னேறும். விதவையர் எல்லாம் விளங்கும் சக்தியே. தாலியிழப்பது தயாபரச் செயலால். அது எங்கள் தப்பிதம் எப்படியாகும். எங்களுக்கு அறியாவுலகே அளித்தது கொடுமையை. கணவன் இழந்த காரிகையொருத்தி மறுமணம் வேண்டின் மறுத்தல் அழகோ? எதற்கெடுத்தாலும் சாத்திரம். சாத்திரம், சாத்திரம் என்கிறீர். சாத்திரம் என் செயும்.

அன்பர்களே, நாட்டிற்கு வேண்டியது சுதந்திரம் சுதந்திரம் என்று ஆவேசம்கொள்ளுகிறீர். ஆனால் உங்கள் வீட்டில் வாழும் இளம் கைம்பெண்களுக்கு நியாயமான உரிமையைத் தர மறுக்கிறீர். இது தகுமா. உங்கள் வீட்டில் குழப்பம் இருந்தால் நாட்டிலும் குழப்பம்தான். வீடுகளினீட்டமே விரிநாடாயிற்று அறிக. அறிக.

---

## மனைவி இறந்தால் ...

## ... விதவையைக் கொள்

## பத்திராதிபர் குறிப்புகள்.

### சாரதா சட்டம்!

ஜவகர்லால் இடம் சிலர் சென்று சாரதா சட்டத்தைப்பற்றி அபிப்பிராயம் கேட்டார்களாம். அதற்கு அவர் செம்மையான பதில் கொடுத்திருக்கிறார். "சட்டம் சரியானதுதான்; இதனைச் சொல்ல நான் அஞ்சவில்லை; ஆனால் அந்தச் சட்டத்தில் குறையுண்டு. அந்தக் குறை அச்சட்டம் தீவிரமாக இருந்து தக்கபடி அமுல் நடத்தப்படாமலிருப்பது தான்." என்று கூறினாராம். இந்த விஷயத்தில் அவரிடமிருந்து இதைவிட எந்த அபிப்பிராயம் வெளிவரமுடியும்? அவருடைய பெண்ணுக்கு 20 வயதுக்கு மேலாகியும் இன்னும் கல்யாணம் ஆகவில்லை. வைதீகர் சட்டப்படி 8 வயதுக்கு முன்பு பெண்ணுக்குக் கல்யாணம் செய்யவேண்டும். இதற்கு ஆதாரம் ஜவகர்லால் வாயிலிருந்து 1937 ல் தேட முற்படலாமா?

### ஏன் இறந்தாள்?

ஐக்கிய மாகாணத்தில் சுமார் 2 மாதங்கட்கு முன் கணவன் இறந்த தினத்தில் மனைவியும் தீக்குளித்து உயிர்நீங்கிய செய்தியைக் கேள்விப்பட்டோம். "இப்பொழுது அதே மாகாணத்தில் ஒருவர் நீண்டகால வியாதியால் இறந்துபோனாராம். அவருடைய உடலுடன் அவரது இள மனைவியும் திடீரென்று படுத்துவிட்டதாகச் சொல்லப்படுகிறது. இறந்துபோய்விட்டாள். தீவைத்தவர் யாரென்பது மர்மமாக இருக்கிறது. போலீசார் விசாரிக்கின்றனர்". இச்செய்தி மிகவும் வருந்தத்தக்கது. புருஷன் இறந்தபிறகு மறுமண உரிமை இல்லாதிருக்கிற வரை சாவுதான் நல்ல மருந்தென்று ஒழுங்கான பெண்கள் கருதுவதில் ஆச்சரியமில்லை. இந்தக் காலத்தில் ஹிந்துக்களுக்குள் ஒரு இளம்பெண் கணவனின்றி வாழ்வது துயரமான காரியமேயாகுமென்பதை எவராலும் மறுக்கமுடியாது. கணவனிடமுள்ள அன்பு காரணமாகவோ அல்லது இருந்துபடவேண்டிய அவமானத்திற்கும் துயரத்திற்கும் பயந்தோ ஒரு பெண் பலியாகிவிட்டாள். இதுபோல் எத்தனையோ பெண்கள் மாண்டுபோயிருக்கின்றனர். சமூகம் பார்த்துக்கொண்டு இன்னும் அனுமார் வேஷம் போடுகிறது.

## இந்தியப் பெண்களும் விஞ்ஞானமும்.

பெண்கள் வாழ்க்கை ஒளி வீச ஆரம்பித்துவிட்டது. அவர்கள் மீது சுமத்தப்பட்டிருந்த இருட் படலங்களையெல்லாம் அவர்கள் தைரியமாக ஒதுக்கி முன்னேறிக்கொண்டு வருகின்றனர். சாதாரணக் கல்வி மட்டுமன்றி விஞ்ஞான உலகிலும் இந்தியப் பெண்கள் அதி தீவிரமாக முற்போக்கடைந்து வருகின்றனர். ஹைதராபாத்தில் சமீபத்தில் நடைபெற்ற இந்திய விஞ்ஞானக் காங்கிரசிலே கீழ்க் குறிப்பிடும் பெண்கள் கீழ்க்கண்ட விஷயங்களைப் பற்றிய கட்டுரைகளைப் படித்தனர்.

கோயமுத்தூரைச் சேர்ந்த டாக்டர் ஜானகி அம்மாள் அவர்கள் விவசாய சம்பந்தமான சில விஞ்ஞான நுட்பங்களைப் பற்றியும், தாவர சாஸ்திரம் சம்பந்தமாக ஸ்ரீமதி ஷா அவர்களும், ரசாயன சாஸ்திரம் சம்பந்தமாக ஸ்ரீமதிகள் ரத்னம்பாள் (பம்பாய்) ஆலிவ் ஜோசப் (பம்பாய்) கரந்தகா (பம்பாய்) பி. தேவி (பெங்களூர்) ஆகியவர்களும் எழுதியுள்ளார்கள்.

பெண்களுக்கு ஆண்களின் சாதாரண அறிவுகூடக் கிடையாது என்று கூக்குரலிட்டவர்கள் சிறிது கண்ணைத் திறந்து பார்க்க வேண்டுகிறோம். அறிவாராய்ச்சியில் மிக உச்சஸ்தானத்தை வகிக்கும் விஞ்ஞானத் துறையில் கூட பெண்கள் மிகத் தீவிரமாகப் புகுந்திருக்கின்றனரென்பது எவ்வளவு பாராட்டக்கூடிய விஷயம்!

கட்டிப்போட்டிருக்கும் குதிரை ஓடவில்லை ஓடவில்லையென்று சொன்னால் எப்படித்தான் அது ஓடமுடியும். அவிழ்த்து விட்டாலல்லவா வேகத்தைப் பார்க்கலாம்!

இந்தியப் பெண்கள் நிலையும் இதுவரை அப்படித்தான் இருந்தது. சந்தர்ப்பமே கொடுக்காமல் புத்தி கிடையாது என்று கேலி செய்யப்பட்டு வந்தது. இப்பொழுது சந்தர்ப்பமும் கிடைத்தது. சக்தியும் விளங்க ஆரம்பித்துவிட்டது!

## மகாராணியின் பிரசங்கம்

பெண்கள் முன்னேற்றத்தில் அதிக சிரத்தையுடையவரும், அதற்காகப் பலவருஷங்களாகப் பாடுபட்டுவருபவருமான திருவாங்

கூர் மகாராணி ஸேதுபார்வதி பாய் அவர்கள் சமீபத்தில் சென்னையில் பின்வருமாறு பேசியிருக்கிறார்கள்:—

"அஹமதாபாத் மஹா நாட்டில் ஸ்ரீமதி கஸின்ஸ் அரியதோர் பிரசங்கம் செய்திருக்கிறார். மாதர்கள், குழந்தைகள் ஆகியவர்களின் நிலைமையை அவர் நன்றாக எடுத்து விளக்கியிருப்பதன்றி ஒழுக்கங்களில் மாதர்களுக்கு ஒரு வழியும் புருஷர்களுக்கு மற்றோர் வழியும் கற்பிப்பது தவறென்பதையும் ஆடவரும் பெண்டிரும் எல்லாத் துறைகளிலும் சமத்துவமுடையவர்களா யிருக்க வேண்டுமென்பதையும் எடுத்துக்கூறியிருக்கிறார். அகில இந்திய மாதர் கூட்டங்களில் நாம் பல பிரச்னைகளை ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டியது அவசியமான போதிலும் அக்கூட்டங்களில் ஏற்படும் முடிவுகளை சரியானபடி அமுலுக்குக் கொண்டுவர வேண்டிய கடமை தேசத்தின் பல பாகங்களிலிருக்கும் கிளை ஸ்தாபனங்களுடையதாகும். பள்ளிக்கூடங்களுக்கு வைத்திய இன்ஸ்பெக்டர்களை ஏற்படுத்தியதாலும் ஸ்திரீ தொழிலாளருக்கு சில வசதிகளை ஏற்படுத்தியதாலும் நாம் அதிக வேலை செய்துவிட்டவர்களாக மாட்டோம். இனிமேல் தான் நாம் செய்யவேண்டிய வேலை அதிகமாகவிருக்கிறது. நாம் கிராமங்களிலும் பட்டணங்களிலும் இடைவிடாது வேலை செய்து இதர தேச மாதர்கள் போல் நாமும் தேசீய அபிவிர்த்திக்கு உழைக்க முடியுமென்பதை நிரூபிக்க வேண்டும். நாம் அவ்வப் பொழுதிருக்கும் நிலைமையை உணர்ந்து தகுந்தபடி வேலை செய்து எல்லாத் துறைகளிலும் நாம் ஆடவருக்கு சமமென்பதை ருசுப்பிக்க வேண்டும்."

---

## :: நிகழ்ச்சிகள். ::

**மாதர் மறுமண சகாயசங்கக் கூட்டம்**

**கல்லலில்**

மாசி 10வ ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30-க்கு கல்லல் கோயில்பட்டி சிவாலயத்தின் மேலவீதியில் கூட்டம் ஆரம்பமாயிற்று. திருவாளர்களான குமரன் உதவியாசிரியர் வி. பரமசிவன் அவர்கள், செட்டிமார் நாட்டு விகடன் கிருஷ்ணஸ்வாமி அவர்கள் மாதர் மறு

மணம் பத்திராதிபரும் காரைக்குடி முனிசிபல் கௌன்சிலருமான ஸ்ரீமதி மாகதவல்லி அம்மாள் அவர்கள், திருவாளர் சொ. முருகப்பா அவர்கள் ஆகியோர் மாதர் மறுமண அவசியம் குறித்து உபந்யாசம் செய்தனர். சுமார் 200 பெண்மக்களும், 600 ஆண்மக்களும் கூடியிருந்தனர். 9 மணிக்குக் கூட்டம் முடிந்தது.

பின்னர் டிராமாக்கொட்டகையில் மாஜிக்லாண்டர்ன் படக்காட்சி காட்டப்பட்டது. 2000 ஜனங்கள் கூடியிருந்தனர்.

மாற்றூரில்

மாசி-மீ 14உ இரவு சுமார் 7 மணிக்கு மாற்றூர் கீழவீதியும், தெற்கு வீதியும் சந்திக்கும் மூலையில் கூட்டம் ஆரம்பமாயிற்று. திரு. K. N. அண்ணாமலை பாட்டுக்கள் பாடினார். காரைக்குடி முனிசிபல் கௌன்சிலர் திருவாளர் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் தலைமை வகித்து முன்னுரை பேசினார்கள். பின்னர் காரைக்குடி நகரத்தார் நலஉரிமைச் சங்கக் காரியதரிசி திருவாளர் பழ. நாச்சியப்ப செட்டியாரவர்கள், காரைக்குடி முனிசிபல் கௌன்சிலர் ஸ்ரீமதி மு. மரகதவல்லி அம்மாளவர்கள், குமரன் ஆசிரியர் திருவாளர் சொ. முருகப்பா அவர்கள் ஆகியோர் மாதர் மறுமணத்தின் அவசியங் குறித்துப் பேசினார்கள். 9-30க்குக் கூட்டம் இனிது முடிந்தது. பின்னர் வாகனக்கொட்டகையில் மாஜிக்லாண்டர்ன் படக்காட்சி காட்டப்பட்டது.

ஷண்முகநாதபுரத்தில்

மாசி-மீ 24உ ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30க்கு, ஷண்முகநாதபுரம் திரு. சி. சு. செ. காசிச் செட்டியார் அவர்கள் வீட்டில் கூட்டம் ஆரம்பமாயிற்று. திருவாளர் ராம. நாகப்பா அவர்கள் தலைமை வகித்து முன்னுரை பேசினார்கள். பின்பு திருவாளர்கள் N. சோமசுந்தரன் அவர்கள், செட்டிமார்நாட்டு விகடன் எஸ். கிருஷ்ணஸ்வாமி அவர்கள், காரைக்குடி முனிசிபல் கௌன்சிலர் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள், செட்டியார்கள் நலஉரிமைச் சங்க காரியதரிசி, பழ. நாச்சியப்ப செட்டியாரவர்கள், குமரன் ஆசிரியர் சொ. முருகப்பா அவர்கள் ஆகியோர் விதவைகளின் துயரம்குறித்து நீண்ட நேரம் உபந்யாசம் செய்தனர்.

பிறகு தலைவர் உணர்ச்சி செறிந்த முடிவுரை புகன்றதும் திருவாளர் சொ. முருகப்பா அவர்களால் மாஜிக்லாண்டர்ன் படக்காட்சி காட்டப்பட்டது. சுமார் 200 பெண் மக்களும் 300 ஆண் மக்களும் கூடியிருந்தனர்.

## லூடியானவில் விதவா விவாகம்

1936 டிசம்பர் 24உ லூடியானா விதவா விவாக சகாய சங்கத்தின் ஆதரவில் லாலா கௌரிசங்கர் அவர்களுக்கும் ஸ்ரீமதி பகவந்தி என்பவருக்கும் மிக்க ஆடம்பரமாக விதவா விவாகம் நடைபெற்றது. 100 பிரமுகர்களும் மிகுதியான பெண்மக்களும் விஜயஞ் செய்திருந்தனர். தம்பதிகள் அறிமுகஞ் செய்துவைக்கப்பெற்ற பின்பு பண்டித விஷ்ணு தத்தர் அவர்கள் விதவா விவாகத்தின் அவசியம் குறித்து நீண்டதொரு பிரசங்கஞ் செய்த பின் விவாகத்தை நடத்திவைத்தார். பின்னர் சிறப்பான விருந்து நடைபெற்றது. மணமகன் ஸ்ரீமான் கௌரிசங்கர் அவர்கள் ஷை சங்கத்துக்கு 11 ரூ. நன்கொடையளித்தார். சங்

கக் காரியதரிசி நன்றிகூற விவாகம் இனிது நிறைவெய்தியது.

### பாட்னுவில் விதவா விவாகம்

பங்கிபூர் (பாட்னு) சர். கங்காராம் விதவா பவனத்தின் ஆதரவில் 1936 நவம்பர் மாதத்தில் ஸ்ரீமதி அனிக்ஷா தேவிக்கும் தேசராஜ் என்பவருக்கும், ஸ்ரீமதி பனினீதேவிக்கும் ராமநாத் என்பவருக்கும், ஸ்ரீமதி லால்பரிதே விக்கும் ஸ்ரீமான் சிவதயாலுக்கும் விதவா விவாகங்கள் மிகச் சிறப்பாக நடைபெற்றன. ஏராளமானவர் வந்திருந்து தம்பதிகளை வாழ்த்தினர்.

### வைசிய குலத்தில் விதவா விவாகம்.

ஆரிய வைசிய (கோமுட்டி) குலத்தில் விதவைகளுக்கு மறுமணம் செய்வதில்லை. அந்தப் பழய வழக்கம் சிதறடிக்கப்பட்டுவிட்டது. சேலத்தில் பிப்ரவரி 7௳ மறுமணம் ஒன்று நடந்தது. இது மூன்றாவது திருமணம். நூற்றுக் கணக்கான பிரமுகர்கள் திருமணத்தைச் சிறப்பிக்க வந்தனர். மணமகள் சில நாளைக்கு முன் கணவனை இழந்த 14 வயதுடைய தன லட்சுமி; மணமகன் 24 வயதுடைய தர்மலிங்கம் செட்டியாராவர். சேலம் முதல் அக்கிரகார வைசிய மடத்தில் ஆர்ய வைசிய புரோகிதரைக்கொண்டு விவாகம் நடந்தது. திரு. எம். வி. கோபால் செட்டியார் திருமணத்தை ஆதரித்துப் பேசுகையில் "வைசியர்கள் கோசம்ரக்ஷணம் செய்கிறீர்கள். தருமத்தில் சிறந்து விளங்குகிறீர்கள். ஆனால் விதவைப் பெண்களிடத்தில் கருணை காட்டாமல் கண்ணை மூடிக் கொண்டிருக்கிறீர்கள். இனி நமது சகோதரிகளின் துன்பக் கண்ணீரைத் துடைக்கப் பாடுபட வேண்டும்" என்று குறிப்பிட்டார். பல பிரமுகர்கள் மணமக்களுக்கு ஏராளமான பரிசுகள் வழங்கினர். ஸ்வாமி தரிசனத்திற்குப் பின் ஊர்வலம் நடைபெற்றது.

### மற்றொரு வைசியகுல விதவா விவாகம்.

பிப்ரவரி 15௳ சேலம் வைசிய மடத்தில் ஒரு விதவா விவாகம் நடந்தது. ராசீபுரம் புதுப்பாளையத்தைச் சேர்ந்த திரு. மாணிக்கம் செட்டியார் குமாரத்தி ஸ்ரீமதி ஆண்டாளுக்கும், ஆத்தூர் நரசிங்கபுரம் திரு. ராமனுதன் செட்டியாருக்கும் விவாகம் நடந்தேறியது. இதற்கு முன்னர் நடந்த விவாகங்களைவிட இதில் கவனிக்கத் தக்கது ஏராளமான பெண்கள் விஜயஞ் செய்திருந்ததுதான். ஊர்வலத்தில் மணமக்களுக்கு மாலைகளும் பரிசுகளும் வழங்கப்பட்டன.

### ஹிந்து விதவைகளுக்கு மறுமணம்.

ஹிந்து விதவைகளை மறுமணம் செய்துகொள்ள அனுமதிப்பது என்ற மசோதா திருவாங்கூர் அசெம்பிளியில் மூன்றாவது தடவையாகப் படிக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டது. இதை மேல் சபை அங்கீகரித்துவிட்டால் மசோதா சட்டப் புத்தகத்தில் இடம் பெற்றுவிடும். இந்த மசோதாவை ஸ்ரீமதி T. நாராயணி அம்மாள் எனும் பெண்தான் இங்கு புகுத்தினர். பாலிய விவாகங்களைத் தடுப்பதுபற்றியும் சர்க்கார் சட்டமியற்ற யோசித்து வருகின்றனர்.

### பிரபல விதவா விவாகம்.

ஒரு நிலச் சொந்தக்காரரின் முயற்சியால் பிப்ரவரி 15௳ யன்று இடசாராவில் ஒரு விதவா விவாகம் நடந்தது. மணமகனுக்கு வயது 22. மண

மகளுக்கு வயது 17. தம்பதிகள் சட கோப வகுப்பைச் சேர்ந்தவர்கள். விவாகத்திற்கு பல பண்டிதர்கள் விஜ யம் செய்திருந்தார்கள்.

## இன்னுமொரு விவாகம்.

பிப்ரவரி மீ 22உ காலை புதுவை ஆர்ய வைசிய சமாஜத்தில் வைஸ்ய சமூகத்தைச் சேர்ந்த—ஆண்டக்குடி பொம்மா சுப்பிரமணிய செட்டியார் குமாரத்தி விதவை ஸ்ரீமதி பாலாம் பாளம்மாளுக்கும், கும்பகோணம் திரு. வி. எஸ். வெங்கடகிருஷ்ண செட்டியார் சகோதரர் திரு. பாலபட் டாபி செட்டியாருக்கும் புனர் விவாக மஹோற்சவம் வெகு சிறப்பாக நடை பெற்றது. ஏராளமான பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தார்கள். பலர் வாழ்த்துச் செய்திக ளனுப்பியிருந்த னர். முகூர்த்தத்தின் போது விதவா விவாகத்தை ஆதரித்தும் பால்ய மணத்தைக் கண்டித்தும் துண்டுப் பிரசுரங்களும் பழமொழிக் குறிப்பு களும் வழங்கப்பட்டன.

## விழுப்புரத்தில் விதவா விவாகம்.

கிருஷ்ணுபுர கிராமத்தில் சென்ற சில தினங்களுக்கு முன்பு ஒரு விதவா விவாகம் நடைபெற்றது. ஷை யூர் திரு. கிருஷ்ண ரெட்டியார் கிர கத்தில் திரு. வெங்கடகிருஷ்ண ரெட்டியாருக்கும், லட்சுமண ரெட் டியார் மகள் திருமதி விசாலாக்ஷி அம் மாளுக்கும் திருமணம் வெகு சிறப் பாக நடைபெற்றது. ஷை விவாகத் திற்குப் பல பிரபலஸ்தர்களும் மற்று முள்ளவர்களும் வந்திருந்தனர். தம்ப திகளை ஆசீர்வதித்து தம்பதிகளுக்குப் பரிசுகள் அளித்தனர்.

## மூல்தானில் விதவா விவாகம்

மூல்தான் சர். கங்காராம் விதவா பவனத்தின் ஆதரவில் 1937 ஜனவரி 14உ இரவு 10 மணிக்கு ஷை விவ பவனத் தலைவர் தலைமையின் கீழ் ஸ்ரீமதி லச்சீதேவி சுபுத்ரிக்கும் பனு வைச் சேர்ந்த அரோடா வகுப்பு லாலா ஈசுவரதயாள் என்பவருக்கும் மிகச் சிறப்புடன் மறுமணம் நடை பெற்றது. மணப்பெண்ணின் வயது 29. மணமகன் வயது 40. விவாகத் தின் பின் சிறப்பான விருந்து நடை பெற்றது.

## ராவல்பிண்டியில் விதவா விவாகம்

. 1937 ஜனவரி 29உயன்று ராவல் பிண்டி விதவா விவாக சகாய சபை யின் சார்பில் ஸ்ரீமதி வீராதேவிக்கும் குஜரான்வாலாவைச் சேர்ந்த லாலா மேல்ராமுக்கும் மிக உற்சாகமாக விதவா விவாகம் நடைபெற்றது. விவாகம் பூரண வைதீக முறையில் நடந்தேறியது.

## விதவா விவாகத்திற்கு நகரத்தார் ஆதரவு.

### பினாங்கு நகரத்தார் இளைஞர் சங்கம்.

தாது ஆண்டு தைத் திங்கள் 15உ வியாழக்கிழமை இளைஞர் சங்க முத லாவதாண்டு விழா நடைபெற்றது. அப்பொழுது கீழ்க்கண்ட தீர்மா னம் ஏகமனதாக நிறைவேற்றப்பட் டது.

"நமது மரபில் வினைப்பயன் விளை வால் கணவனை இழக்கப்பெற்ற வித வையர், தங்கள் மனப்போக்கைப்பண் படுத்தி, மறுமணம் பெறுவதற்கோ அன்றி. அறிவு கைவரப்பெற்று மக்கள் நலங்கருதி உலகினர்க்கு உதவி புரிவ தற்கோ, ஏதும் தொழில்முறை கற்

றுத் தேர்ச்சி பெறுவதற்கோ, சாதனமாக ஓர் ஸ்தாபனத்தைக் காணுதல் வேண்டும். அதில் நின்று கணவனைப் பிரிந்த மங்கையர் யாவரும் தம் தம் மனோநிலைக்கேற்றவாறு நிர்வாகஸ்தர்களிடம் தங்கள் தங்கள் எண்ணத்தைத் தெரிவித்து வெளிவருவதை நாம் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்வதோடு அந்த ஸ்தாபனமும் மகளிர் மனப்பான்மையும் நிறைவெய்த நாம் தாராள சிந்தையுடன் இடங்கொடுத்து உதவி புரிதல் வேண்டும் என்று இம் மகாசபை பெரிதும் வேண்டுகின்றது.''

## மலாக்கா செட்டியார்கள் சங்கம்.

தாது வருடம் தை மீ 9உ வெள்ளிக் கிழமை மாலை மலாக்கா செட்டியார்கள் சங்கத்தின் நான்காவது வருட விழா வெகுசிறப்பாக நடைபெற்றது. அப்பொழுது "விதவா விவாக விஷயமாய் அகில பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் மகாநாட்டில் செய்த தீர்மானத்தை ஆதரிப்பதாகவும், நமது சமூகத்தில் மறுமணம் செய்ய விரும்புகிற அத்தனை விதவைப்பெண்களும் மறுமணம் செய்து கொள்வதற்கு அநுமதி கொடுக்க வேண்டுமெனவும் தாய் நாட்டிலுள்ள நகரத்தாரவர்கட்கு சிபார்சு செய்வதெனத் தீர்மானிக்கப்பெற்றது.'' என்ற தீர்மானம் ஏகமனதாக வெகு குதூகலத்துடன் நிறைவேறியது.

## செட்டியார்கள் நல உரிமைச் சங்கம்.

காரைக்குடி செட்டியார்கள் நல உரிமைச் சங்க இரண்டாவது ஆண்டு ஆறுவது மாதக் கூட்டம் 28-2-37 மாலையில் நடந்தது. இப்பொழுது தனவணிக சமூகத்தில் உள்ள விதவைகளில் விரும்புகிறவர்களுக்கு மறுமணம் செய்துகொள்ள உரிமை அளிப்பதோடு, வெள்ளை உடையை அகற்றிவிடும்படி இச்சமூகத்தை இச்சங்கம் வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறது. ரெங்கோன், பினங்கு, மலாக்கா, செய்கோன் முதலிய ஊர்களில் நகரத்தார் சங்கங்கள் ஆதரிப்பதைப் போல் ஏனைய சங்கங்களும், சமூக இளைஞர்களும் இதில் ஆதரவுடன் ஒத்துழைக்கும்படி இச்சங்கம் விரும்புகிறது'' என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

## முதல் ஸ்திரீ பப்ளிக் பிராசிக்யூடர்.

பம்பாய் மாகாணத்தில் முதல் முதலாக ஒரு ஸ்திரீ, பப்ளிக் பிராசிக்யூடராக நியமிக்கப்பட்டிருக்கிறார். அவர் ஸ்ரீமதி சுமத்திரா தர்குந்தி பி. ஏ., எல். எல். பி. நகரக்கோர்ட்டில் அவர் கிரிமினல் வழக்குகளில் சர்க்கார் தரப்பில் கேசுகளை நடத்த நியமிக்கப்பட்டிருக்கிறார்.

## அங்கும் இங்கும்.

"திருவாங்கூரில் 1000 பெண்களுக்கு 119 விதவைகள் வீதமும் இந்தியாவில் 155 விதவைகள் வீதமும் இருக்கின்றனர்'' என்று திருவாங்கூர் சட்டசபையில் ஸ்ரீமதி நாராயணி அம்மாள் பேசும்பொழுது குறிப்பிட்டார்கள்.

## மூல்டானில் விதவா விவாக மகாநாடு

மூல்டானைச் சேர்ந்த ககரோட் நகரில் டிசம்பர் 26உயன்று அட்வகேட் மதார் தேக்சந்து தலைமையில் விதவா விவாக மகாநாடு நடைபெற்

றது. வரவேற்புத் தலைவரான மாஜி ஓவர்சீயர் முன்ஷி கிர்தாரிலால் அவர்கள் யாவரையும் வரவேற்று விதவைகளின் துயரத்தை விளக்கி ஓர் உபந்யாசம் செய்தார். வயது சென்ற விதவைகள் விரும்பினல் கலியாணம் செய்துவைப்பது அவசியமென்றும், குழந்தை பெறுத இளம் விதவைகளைக் கன்னிகைகளாகவே கருதவேண்டுமென்றும், அவர்களுக்கு விவாகம் செய்துவைக்க எல்லாவிதமான உதவிகளையும் செய்யவேண்டுமென்றும், பால்ய விதவைகள் அதிகப்படாமல் இருக்க இளமை மணத்தையும் கிழவர்கள் மணம் செய்து கொள்வதையும் தடுக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

## எத்தனை மணம்!

லாகூர் விதவா விவாக சகாய சபைக்கு 1936 டிசம்பரிலும் 1937 ஜனவரியிலும் நடைபெற்ற விதவா விவாகக் கணக்குகள் கிடைத்திருக்கின்றன. அவற்றின் விவரம் வருமாறு:

1936 டிசம்பரிலும் 37 ஜனவரியிலும் ஜாதிவாரியாக நடைபெற்ற விதவா விவாகங்கள்:—

| | 1936 டிசம்பர் | 1937 ஜனவரி |
|---|---|---|
| பிராம்மணர் | 85 | 62 |
| க்ஷத்திரியர் | 83 | 54 |
| அரோடா | 62 | 47 |
| அக்ரஸால் | 30 | 18 |
| காயஸ்தர் | 19 | 17 |
| ரஜபுத்ரர் | 56 | 33 |
| இதரர் | 62 | 21 |
| மொத்தம் | 377 | 252 |

மாகாண வாரியாக நடைபெற்ற விபரம்:—

| | 1936 டிசம்பர் | 1937 ஜனவரி |
|---|---|---|
| பஞ்சாப் | 67 | 57 |
| ஐக்கிய மாகாணம் | 141 | 63 |
| மத்திய மாகாணம் | 39 | 25 |
| பம்பாய் | 5 | 4 |
| மத்திய இந்தியா | 5 | 1 |
| வங்காளம் | 95 | 91 |
| பீஹார் ஒரிஸா | 24 | 11 |
| மதராஸ் | 1 | ... |

## திருவாங்கூர் ஹிந்துஸ்திரீகள் மகாநாடு

ஆலயப் பிரவேசப் பிரகடனத்தைக் கொண்டாடுதற்கும் மகாராணி சேது பார்வதிபாய்க்கு ஒரு உபசார பத்திரத்தை அளிப்பதற்கும் அகில திருவாங்கூர் ஹிந்துஸ்திரீகள் மகாநாடு ஏப்ரல் மாதத்தில் கூடுமென்று, மகாநாட்டுக் கார்யக்கமிட்டி காரியதரிசிகள் அறிவிக்கின்றனர். மத்திய திருவாங்கூரிலுள்ள ஆதூரில் பிப்ரவரி 20-ந் தேதி நடைபெற்ற அகில திருவாங்கூர் ஹிந்துஸ்திரீ பிரதிநிதிகள் கூட்டத்தில் 101 மெம்பர்களடங்கிய கார்யக் கமிட்டி யொன்று அமைக்கப்பட்ட தென்றும் அறிவிக்கப்படுகிறது.

## பெண்கள் திறமை

மாணவர்களை விட மாணவிகள் தான் ஆங்கிலப் பரீக்ஷை முதல் எல்லாபரீக்ஷைகளிலும் வெகு சுலபமாகத் தேறிவிடுகின்றனர். அவர்கள் நடையும் வெகு அழகாக இருக்கிறது'' என்று ஒரு சர்வகலாசாலை வெளியிடுகிறது.

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| மலர் 1 | காரைக்குடி<br>தாது-ஹூ சித்திரை-மீ | இதழ் 9 |
|---|---|---|


## ராட்டொடு புலம்பல்.

(ஓர் கைம்பெண் கூறுவது.)

காளவனப்புலவர்.

16. கோழி வெருவெனக் கோலங் காட்டி
குற்ற மிழைத்தவன் உற்று நோக்க
ஏழை அகல்யையை மிதிப்ப தந்த
ஈசன் பொறுக்கானென் றூடாய் ராட்டே (ஆ)

17. சீதையைத் திருடிய காதை தன்னில்
தெரிவையால் முடிந்தது நாச மென்றே
ஓதிய சூதெலாம் நாட்கள் செல்ல
உண்மை வெளுத்ததென் றூடாய் ராட்டே (ஆ)

18. ஆடவர் செய்கையால் வந்த கேட்டை
அரிவையர் செயலெனச் சொல்லிச் சொல்லி
நீடிய துயரிலே நீந்த விட்டு
நெஞ்சு துடிக்குதென் றூடாய் ராட்டே (ஆ)

19. மண்ணு ருலகிலே பாவ மெல்லாம்
வாரிப் பிரமனர் பண்ணும் பாண்டம்
பெண்ணோ ஆணோசொல் என்று கேட்கப்
பிரமனே சொல்வனென் றூடாய் ராட்டே (ஆ)

20. பெண்டுக ளூட்டிட உண்ட மக்கள்
பேதகம் அவர்க்குமே செய்வரென்றால்
அண்டியே ஜாதிசெய் போர்க ளெல்லாம்
அதிசயம் அல்லவென் றூடாய் ராட்டே (ஆ)

21. தாமே வாழ்ந்திடக் குறித்த மாந்தர்
சார்ந்தோர் வாழ்வும் குறிப்ப துண்டேல்
போமோ பாரதம் அடிமை புக்குப்
போகா தென்றிரைந் தாடாய் ராட்டே (ஆ)

22. கட்டுக் கதைகளைக் கூறிக் கூறிக்
கைம்மைக் கோலமே பேணி இன்னும்
பட்ட மரமென ஆக்கிடாமல்
பாரதம் பேணிரென் றாடாய் ராட்டே (ஆ)

23. மங்கையர் களிப்புறு நாடுக ளெல்லாம்
மங்கலஞ் செறிந்துறக் கண்டிருந்தும்
மங்கலங் கழற்றவே நிற்பதாயின்
வாழ்வே குலையுமென் றாடாய் ராட்டே (ஆ)

24. மதப்பேய் தலையிலே பழி சுமப்ப
வஞ்சனைக் குள்ளேபா ரதமு மேங்க
விதவையர் கண்ணினீர் வடிக்கிலது
வீணாகப் போகாதென் றாடாய் ராட்டே (ஆ)

25. ஒருத்தி சிறையிலே வடித்த கண்ணீர்
ஒக்க இலங்கையை முடித்துமையோ!
கருத்தினி லாடவர் எண்ணு கில்லார்!
கன்மமென் றேயிரைந் தாடாய் ராட்டே (ஆ)

26. அழுதபிள்ளையே பால் குடிக்கு மென்ன
அன்றுநம் பாட்டியர் சொன்ன பேச்சே
தொழில்கள் முடக்கமென் றுலகி லின்று
தோன்றின காணிரென் றாடாய் ராட்டே (ஆ)

27. தன்பலம் அறிந்திடா யானையைப் போல்
சார்ந்து பணி கொளும் மாத ரெல்லாம்
புன்மை தவிர்க்கவென் றெழுன்று சேர்ந்த
போதே விடியுமென் றாடாய் ராட்டே (ஆ

28. பெண்களியக்கமோர் நாழிகைக்குள்
பேசும் பலனெலா மீந்திடாதோ
கண்களும் கண்ணாடி வேண்டலுண்டோ
கைப்புண்ணைக் காணவென் றுடாய் ராட்டே (ஆ)

29. ஆன்ற பெரியவர் ஆயிழையார்
ஆற்று மியக்கமே சார்ந்து தம்மால்
ஏன்ற உதவிகள் செய்யநின்றும்
ஏனோ தயக்கமென் றுடாய் ராட்டே (ஆ)

30. கன்னியை-விதவர் கலந்து கொள்ளும்
காசினி கைத்தமா பவத்தை யுன்னி
நன்னுதலாரெலாம் மறுத்த அன்றே
நன்மையும் பெற்றோமென் றுடாய் ராட்டே (ஆ)

---

## ராஜா ராம்மோகன்ராய்.

திருச்சி கே. வி. எஸ். வாஸ், பி. ஏ. (ஆனர்ஸ்)

### அத்தியாயம் 8.

### பிரம்ம சமாஜமும் அதன் கொள்கைகளும்.

பிரம்ம சமாஜத்தின் ஆரம்பத்தைப்பற்றி தனித்தனியே இரண்டு வரலாறுகள் சொல்லப்படுகின்றன. அவைகளில் எது வாஸ்தவமானதென்பதை நம்மால் நிச்சயமாக நிர்ணயித்துக் கூற முடியாது. எனினும் தத்வபோதினி என்ற பத்திரிகையில் பாபு ராஜ் நாராயண் என்பவர் வரைந்துள்ள வரலாறுகளே மிக மிகப் பிரபல்யமாயிருக்கின்றன. ஆகையால் அவற்றை முதலில் இங்கு கொடுக்கின்றோம்,

"பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வட இந்தியாவிலே ஹர்க்கரா என்றோர் பத்திரிகை நடந்து வந்தது. அதனு

டைய காரியாலயத்தில் யூனிடேரியன் கமிட்டி என்ற பெயரோடு திரு. ஆடம் ஒரு சங்கத்தை ஸ்தாபனம் செய்தார். அதில் ராம் மோகனரும் அவருடைய சகாக்களும் பிரதானமான பங்கெடுத்துக்கொண்டிருந்தனர். ஒருநாள் ராம்மோகனரும் அவருடைய சகாக்களும் யூனிடேரியன் சங்கத்தில் பிரார்த்தனைகளை நடத்திவிட்டு ஹர்க்காரா பத்திரிகையின் காரியாலத்திலிருந்து வெளிவந்துகொண்டிருந்தனர். அப்பொழுது பிரார்த்தனைகளை நடத்த நாம் ஏன் அன்னியர்களின் வீட்டிற்குச் செல்ல வேண்டும். நாம் சொந்தமாக ஒரு ஸ்தாபனத்தை ஏன் நிறுவலாகாது?" என்று தாராசந்நி சக்கிரவர்த்தியும், சந்திரசேகர தேவும் யோசனை கூறினார்கள். அந்த யோசனையே பிரம்ம சமாஜத்தின் மூலகாரணமாயிருந்தது.

மேற்படி யோசனை எப்பொழுது சொல்லப்பட்டதென்பதை நம்மால் நிச்சயமாகக் கூறமுடியாது. எனினும், அது பிரஸ்தாபிக்கப்பட்டவுடன் ராம்மோகனர் அதைப் பலமாக ஆதரித்தாரென்று தெரிகிறது. அவர் துவாரகாநாத் தங்கூர், ராப் காளிநாத்முன்ஷி ஆகியோர்களுடன் கலந்து பேசிவிட்டுத் தமதுவீட்டில் ஒரு கூட்டம் நடத்தினர். அதற்குப் பல நண்பர்கள் விஜயம் செய்திருந்தனர். அக் கூட்டத்தில் தேவப் பிரார்த்தனைகளை நடத்துவதற்காக புதிதாய் ஒரு கட்டிடத்தை அமைப்பதென்றும், அது அமைக்கப்படும் வரையில் சித்பூர் ரஸ்தாவிலிருந்த கமலலோசன போஸ் வீட்டில் பிரார்த்தனைகளை நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

பிரம்ம சமாஜத்தைப்பற்றிய மற்றொரு விருத்தாந்தத்தில் திரு. ஆடம் அவர்களுக்கு முக்கியமான ஸ்தானம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு 1828-ம் வருடம் பிப்ரவரி மாதம் 5ம் தேதியன்று திரு. ஜான் என்பவருக்கு திரு. ஆடம் எழுதிய ஒருகடிதமே ஆதாரமாகும். அந்தக் கடிதத்தில் திரு. ஆடம் தெரிவித்திருப்பதாவது:—

கடவுள் ஒருவரே என்று கூறும் கல்கத்தா வாழ் இந்துக்களை ஐக்கியப்படுத்தி, ஹிந்து யூனிடேரியன் சங்கம் என்ற பெயரோடு ஒரு ஸ்தாபனத்தை நிறுவ நான் முயற்சி செய்துவருகிறேன். இந்த ஸ்தாபனம் கிறிஸ்தவ யூனிடேரியன் சங்கத்தோடு நெருங்கிய சம்பந்தம் வைத்துக்கொண்டிருக்கும். ஆனால், ஹிந்து யூனிடேரியன்

சங்கத்தில் கிறிஸ்தவ மதபோதனைகள் தற்காலிகமாக புகுத்தப்பட மாட்டா.

பிறகு 1829-ம் வருடம் ஜனவரி மாதம் 22-ம் தேதி எழுதிய மற்றொரு கடிதத்தில் திரு. ஆடம் தெரிவிப்பதாவது:—

"ஹிந்து யூனிடேரியன் சங்கம் என்ற பெயரோடு ஒரு ஸ்தாபனம் நிறுவப்பட்டிருக்கிறது. அதனுடைய கொள்கை திட்டமாக இந்து மதப் பிரசாரமேயன்றி கிறிஸ்தவ மத வளர்ச்சியல்ல. அதாவது ஹிந்து யூனிடேரியன் சங்கத்தார் உலகைப் படைத்து ரக்ஷிக்கும் கடவுள் ஒருவரே என்றும், அவரை வேதங்களில் கூறப்பட்டுள்ளபடி பூஜிக்கவேண்டுமென்றும் பிரசாரம் செய்கிறார்கள். கிறிஸ்தவ வேத சம்பிரதாயங்களை அவர்கள் அனுஷ்டிப்பதில்லை. எனினும் ஹிந்து யூனிடேரியன் கொள்கை கிறிஸ்தவ மதத்தின் வளர்ச்சிக்கு எதிர்காலத்தில் தூண்டுதலாக இருக்குமென்று நம்புகிறேன். ஆகையால், நான் அவர்களை மனப்பூர்வமாக ஆதரித்துவருகிறேன். தவிர, அவர்களுடைய சங்கத்திற்கு 500 ரூபாய் மானியமளிக்கும்படி கிறிஸ்தவ யூனிடேரியன் கமிட்டிக்கும் நான் சிபார்சு செய்திருக்கிறேன்.

திரு. ஆடம் குறிப்பிடும் இந்த சங்கத்தைத்தான் இன்று நாம் பிரம்ம சமாஜமென்கின்றோம். மேற்படி இரு விருத்தாந்தங்களுள் எது வாஸ்தவமாயினும், பிரம்ம சமாஜத்தை ஸ்தாபனம் செய்தவர் ராம்மோகனரே என்பதை எவரும் ஆக்ஷேபிக்க வில்லை. உண்மையைக் கவனிக்குமிடத்தில் திரு. ஆடம் அவர்களை வைதீக கிறிஸ்தவ மதத்திலிருந்து கிறிஸ்தவ யூனிடேரியன் கொள்கைக்கு மாற்றியவர் ராம்மோகனர்தான். தவிர, மத சம்பந்தமான பிரசாரங்களில் ராம்மோகனர் ஆதியிலிருந்தே சிரத்தைகாட்டிவந்திருக்கிறார். அதில் அவருக்கு அபாரமான அனுபவமும் உண்டு. 1815-ம் வருடத்தில் ஆத்மீயசபை என்ற பெயரோடு ஒரு ஸ்தாபனத்தை அவர் நிறுவினரென்றும் 1927-ம் வருடம் கிறிஸ்தவ யூனிடேரியன் சங்கத்தில் பிரதானமான ஸ்தானத்தை வகித்துவந்தாரென்றும் ஏற்கனவே கூறியிருக்கிறோம். இவைகளிலிருந்து மத ஸ்தாபனங்களை நிறுவி நிர்வகிப்பதில் அவருக்குப் போதிய பயிற்சி யுண்டென்பது புலனாகும். அவர் ஏற்படுத்திய ஸ்தாபனங்களுள் பிரம்ம சமாஜமே முக்

கியமானதாகும். நாளதுவரையில் பலருடைய புகழ்ச்சிக்கும் பாத்திரமாகி நீடித்துநிற்பதும் இதுவே.

பிரம்ம சமாஜத்தின் ஸ்தாபனம் இந்தியாவிலிருந்த ஐரோப்பியர்களுக்கு மிகுந்த ஏமாற்றத்தைக் கொடுத்தது. இந்து மதத்தில் தென்பட்ட குறைகளை பகிரங்கமாக எடுத்துக் காட்டி கண்டனம் செய்து வந்தவரும், ஐரோப்பிய யூனிடேரியன் சங்கத்தின் வளர்ச்சியில் அளப்பரிய சிரத்தை காட்டி வந்தவருமான ராம்மோகனர் இந்தியாவைக் கிறிஸ்தவ மயமாக்கத் துணைக்கருவியா யிருப்பாரென்று அவர்கள் மனப்பால் குடித்துக்கொண்டிருந்தார்கள். அந்த எண்ணத்தை பிரம்ம சமாஜத்தின் ஸ்தாபனம் பகற் கனவாக்கி விட்டது. இது விஷயமாக கல்கத்தாவிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த "ஜான் புல்" பத்திரிகை 1828-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 23-ம் தேதி இதழில் பின்வருமாறு ஓலமிட்டிருந்தது:—

ராம்மோகனருக்கு கிறிஸ்தவ மதத்தில் உண்மையான பற்றுத லுண்டென்றும் அந்த மதத்தை இந்தியாவில் பரப்ப அவர் உதவியாயிருப்பாரென்றும் நாளது வரை நாம் நம்பி வந்தோம். பிரம்ம சமாஜத்தின் ஸ்தாபனம் இந்த நம்பிக்கையைக் குழிதோண்டிப் புதைத்துவிட்டது. ராம் மோகனர் இந்து மதத்திலுள்ள குற்றம் குறைகளை பகிரங்கமாகவும் பயமில்லாமலும் கண்டனம் செய்கிறாரென்பது வாஸ்தவமே. ஆனால், புதிதாக ஏற்பட்டிருக்கும் அவருடைய சமாஜம் இந்து மதத்தைச் சீர்திருத்தி யமைக்கப் பாடுபடுகின்றதேயன்றி ஏசுநாதரின் திருவாக்குகளைக் கொஞ்சமும் பின் பற்றவில்லை.

இவ்வாறே மற்றும் சில ஆங்கிலப் பத்திரிகைகளும் ஒப்பாரி வைத்திருந்தன. சமாஜத்தின் ஸ்தாபனத்திற்கு திரு. ஆடம் அவர்களும் யோசனை கூறியதாகச் சிலர் சொல்லுகின்றார்கள். இது வாஸ்தவமாக இருப்பின் சமாஜத்தின் மூலமாக கிறிஸ்தவ மதப்பிரசாரத்தை மும்முறமாக நடத்தலாமென்று ஆரம்பத்தில் அவர் நினைத்திருக்கவேண்டும். இன்றேல், சமாஜத்தின் நடவடிக்கைகள் ஹிந்து மதத்தைப் பரிசுத்தம் செய்வதாயிருக்கக் கண்டு அவர் ஏமாற்றமடைந்திருக்கத் தேவையில்லை. "கடவுளைப் பற்றிய உண்மையான தத்துவங்களை ஜனங்களிடையே பிரசாரம் செய்வதற்கும்

ஹிந்துமத வேதங்களின் புனிதத் தன்மையை ஸ்திரமாக ஊர்ஜிதம் செய்வதற்குமே பிரம்ம சமாஜம் பயன்படுத்திக் கொள்ளப்படுகிறது.

கிறிஸ்தவ வேதம் ஈசுவர சிருஷ்டி யென்பதில் ராம்மோகனருக்கு நம்பிக்கை கிடையாது. ஏசுநாதரின் தெய்வீகத் தன்மையிலும் அவருக்கு நம்பிக்கை யிருப்பதாகத் தோன்றவில்லை !" என்று திரு. ஆடம் விசனத்தோடு தெரிவித்திருக்கின்றார். இதிலிருந்து பிரம்ம சமாஜம் பெரும்பாலான ஐரோப்பியர்களால் எவ்வாறு நோக்கப்பட்டு வந்ததென்பதை நாம் சுலபமாக ஊகித்துக்கொண்டு விடலாம்.

வெள்ளையர்களின் எதிர்ப்பு பலப்பட்டு வந்தபொழுதிலும் கல்வியறிவுள்ள கல்கத்தா ஹிந்துக்களிடையே சமாஜத்தின் செல் வாக்கு தினே தினே அதிகரித்துக்கொண்டு வந்தது. அதனு டைய பிரார்த்தனைக் கூட்டங்களுக்கு ஜனங்கள் திரள் திரளாகக் குழுமிக்கொண்டிருந்தனர். சமாஜத்தின் நிதியும் சொற்ப காலத் திற்குள் போதுமான அளவிற்குப் பெருகிவிட்டது.

காலக்கிரமத்தில், சமாஜிகள் ஒரு தனிப்பட்ட கோஷ்டியாகி விட்டார்கள். அவர்களுடைய பழக்க வழக்கங்களில் அனேக விதமான புதிய மாறுதல்கள் புகுத்தப்பட்டன. உணவிலும், உடை யிலும், பேச்சிலும் கூட அவர்கள் முன்போலில்லை. ஒரு சமாஜி மற்றொரு சமாஜியைச் சந்திக்கும்பொழுது "பிரேடர்" என்றுதான் சாதாரணமாக அழைப்பது வழக்கம். பிரேடர் என்பது பாரசீக பாஷையிலிருந்து பொறுக்கியெடுக்கப்பட்ட பதம். இதற்கு "அன் புள்ள சகோதரா" என்பது சரியான தாத்பர்யம். சமாஜிகள் தங் களது சகாக்களையழைக்க இந்தப் பதத்தைப் பிரயோகிப்பதானது அவர்களுடைய சமத்துவ உணர்ச்சியையும் சகோதரபாவத்தையும் சுட்டிக்காட்டுவதாக இருக்கின்றது. ராம்மோகனர் மட்டும் "திவான்ஜீ" என்று மரியாதையாக அழைக்கப்படுவது வழக்கம். ஆனால், இதை அவர் விரும்புவதில்லை. "என்னை திவான்ஜீ" என் றழைப்பதானது உங்களுடைய அடிமைப்புத்தியைக் குறிப்பதாக இருக்கின்றது. உங்களைப்போல் நானும் ஒரு மனிதப்பிறவிதானே! என்னையும் பிரேடரென்று சாதாரணமாக ஏன் அழைக்கக்கூடாது?"

எனப் பன்முறை ராம்மோகனர் வற்புறுத்தியிருப்பதாகச் சொல்லப்படுகின்றது.

உடுப்பு விஷயத்தில் இஸ்லாமியர்களின் வழக்கத்தையே ராம்மோகனர் ஆதரித்தார். எந்த இடத்திற்கும் தலைப்பாகையின்றி அவர் செல்வதில்லை. வீட்டிலிருக்கையிலும் குல்லாய் இல்லாமல் சிரசைத் திறந்துபோட்டுக்கொண்டு அவர் இருந்தது கிடையாது. உணவிலும் இஸ்லாமியர்களையே அவர் பின்பற்றி வந்தார். அநுஷ்டானங்களில் மட்டுமே அவர் ஒரு பழுத்த ஹிந்து. பிறப்பில் பிராமணராதலால் மரணகாலம் வரை பூணூலை அவர் கழற்றவில்லை. அதே சமயம் பூணூல் அணிந்திருப்பவர்களெல்லாம் உயர்ந்தவர்களென்ற நினைப்பும் அவருக்குக் கிடையாது. பிரார்த்தனைக்கு வருகின்றவர்கள் எவ்வாறு உடையணிந்திருக்கவேண்டுமென்பதைப்பற்றியும், சமாஜிகள் சாதாரண காலங்களில் எப்படி உடுப்பணிந்திருக்கவேண்டுமென்பதைப்பற்றியும் அவர் சில விதிகளைச் சிருஷ்டித்திருந்தார். அந்த விதிகள் சமாஜிகளால் நாளதுவரை கவனிக்கப்பட்டு வருகின்றன. "அனைவரும் ஆண்டவனின் மக்கள். ஆகையால் அவருடைய சந்நிதானத்தில் எல்லோரும் ஒரேவிதமாக உடுப்பணிந்திருக்கவேண்டும்" என்பது சமாஜிகளின் கொள்கை. ஒரு சமயம் உத்தியோக உடுப்பில் பிரார்த்தனைக்கு வந்த ஒரு சமாஜி வெட்கித் தலைகுனியும்படி செய்யப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது.

சில்லரைக் குற்றங்களுக்காக சகாக்களை ராம்மோகனர் கண்டிப்பது கிடையாது. அதே சமயம் பெருந்தவறு செய்பவர்களை இலேசில் விட்டுவிடுவதுமில்லை. ஒரு சமயம் சமாஜத்தைச் சேர்ந்த ஒருவர் அளவிற்குமேல் அதிகமாகக் குடித்துவிட்டு மயங்கிக்கிடந்ததாயும், அவருக்கு ஆறுமாத காலம்வரை ராம்மோகனர் பேட்டியளிக்க மறுத்துவிட்டதாயும் பாபு ஆர். என். போஸ் தமது புத்தகத்தில் பிரஸ்தாபித்திருக்கின்றார். இதேபோல் தமது தவறுகளைப் பிறர் கண்டனம்செய்தால் அதைச் சாந்தமாக ஏற்றுக்கொள்ளும் பெருந்தன்மை ராம்மோகனரிடம் உண்டு. ஒருநாள் உடுப்பணியும் அறையிலிருந்த கண்ணாடியின் முன்பாக நீண்டநேரம்வரையில் நின்று அவர் தலைசீவிக்கொண்டிருந்தாராம். அப்பொழுது அவருடைய நண்பர்களுள் ஒருவராகிய தாராசந்த் சக்கிரவர்த்தி என்பவர் சிறிது உரத்த

குரலில் "எவ்வளவு நேரம்வரையில்தான் அழகைக் கண்ணுடியில் பார்த்து அகமகிழ்ந்து கொண்டிருப்பீர்கள்?" என்று பொருள்படும் படியான கவிதையொன்றைப் பாடினாராம். அதைச் செவியுற்ற ராம்மோகனர் தமது பிழையை உணர்ந்து "நண்பா! நீ சொல்லுவது வாஸ்தவம்தான். இனி உடுப்பணிவதற்கு அதிகநேரம் செலவிட மாட்டேன்!!" என்று மன்னிப்புக் கேட்டுக்கொண்டதாய்ச் சொல்லப்படுகிறது.

தவறுசெய்வது மனிதனுக்கு சகஜம். அதைத் திருத்தம்செய்வது அண்டையிலுள்ளவர்களின் கடமை. இந்தக் கடமையை நிறைவேற்றுவதில் உயர்வு தாழ்வு கிடையாது. ஒருவன் உயர்குலத்திலுதித்தவன் என்ற காரணத்தினுலோ அல்லது பெரிய பதவியை வகிப்பவன் என்ற காரணத்தினுலோ அவனுடைய தவறுகளை எடுத்துக்காட்ட பக்கத்திலுள்ளவர்கள் பின்வாங்குவார்களாயின் அவர்கள் தங்களது கடமையைச் செய்யத் தவறியவர்களாவார்கள். அதே சமயம் பிழைகள் சுட்டிக்காட்டப்படுகையில் அதைப் பெருந்தன்மையோடு ஏற்றுக்கொள்ளாதவன் அற்பகுணமுடையவனுகவே கருதப்படுவான். தீயவழிகளில் பிரவேசிப்பவர்களைத்திருத்தம் செயயும் உரிமை எல்லோருக்கும் உண்டு. ஏனெனில், எல்லோரும் ஒரே கடவுளின் புதல்வர்கள். மண்ணிலும் விண்ணிலும் சகோதர சகோதரிகளாயிருக்கவேண்டியவர்கள். இதுதான் நமது பெரியார் ராம்மோகனரின் கொள்கை.

ராம்மோகனரின் சகோதரத்துவ உணர்ச்சியைச் சுட்டிக்காட்ட சிறந்ததோர் உதாரணமுண்டு. அந்த உதாரணத்தை பாபு ஆர். என். போஸ் என்பவர் ஸ்ரீமதி ஸோபியா டாப்ஸன் கோலட் என்பவருக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறுர்:—

ஒரு நாள் காலை புதிய உடுப்புகளணிந்து பஜாரின் வழியாக ராம்மோகனர் சென்றுகொண்டிருந்தார். அப்பொழுது வயோதிகனெருவன் வியர்வை வடிய வழியில் நின்றுகொண்டிருந்தான். அவன் பக்கத்தில் கறிகாய்க்கூடை யொன்றிருந்தது. ராம்மோகனரைக் கண்டதும் "சாமி! இந்தக்கூடை ரொம்பவும் பளுவாக இருக்கின்றது. தயவுசெய்து இதைப்பிடித்து எனது தலையில் வையுங்கள்!" என்று பணிவாகக் கேட்டுக்கொண்டான். நடுத்தெருவில்

நின்றுகொண்டு கிராமவாசியின் தலையில் கூடையைத் தூக்கிவைப்பதை ராம்மோகனர் கௌரவக் குறைவாகக் கருதவில்லை. வயோதிகனின் கோரிக்கையை உடனே அவர் நிறைவேற்றிவைத்தார். இம்மாதிரி மற்றொருவர் செய்திருப்பாரா?

---

## ராஜா—மணி
அல்லது
## வஞ்சக வீழ்ச்சி

(புதுவை R. S. ராஜலக்ஷ்மி)

“என்ன? உங்களைத்தானே இப்படி எப்பப்பார்த்தாலும் துக்கமயமாயிருந்தால் என்ன செய்வது? போனதுபோக இருக்கிறதாவது நன்றாய் வாழவேண்டாமா? ஆச்சு, அவனும் போய் எட்டு வருடமாகிறது.” என்று அதிகாரத்துடன் கூறினாள் புருஷோத்தமரின் மனைவி கனகம்மாள்.

“கனகம் எனக்கு ஒவ்வொரு நிமிடமும்அவனது துக்கம் அதிகரித்தே வருகிறது. என்னால் மறக்கமுடிய வில்லையே!” என்று கூறிமுடிக்கு முன் அவரது பாலிய சினேகிதரும் சென்னையில் ரயில்வே டிபார்ட்டுமெண்டு உத்யோகஸ்தருமாகிய ராமனாத் என்பவர் ‘புருஷோத்தமா’ என்று கூறியவாறே உள் நுழைந்தார். கனகம்மாளும் உடன் சென்று விட்டாள்.

“யாரது? ஓ ராமனாதா? வரவேண்டும் வரவேண்டும் உட்காருங்கள்” என்று உபசரித்தார்.

ராமனாத்:—நண்பா! எல்லோரும் சவுக்யந்தானே? பையன் சுப்ரமணி எங்கே? எனக்கு எப்பொழுதும் அவன் ஞாபகந்தான். நான் அவனை அவன் கல்யாணத்தின் போது பார்த்தேன். அதன் பிறகுதான் சந்தர்ப்பமே வாய்க்கவில்லையே? எங்கே மணியைக் கூபபிடுங்கள்.

புருஷோத்தமா:—ஐயோ ராமனாத் நான் மகாபா....பி....அந்த பாழும் காவேரியாறு...................

அதற்குமேல் கூற நாவெழவில்லை. துக்கம் அடைத்துக் கொண்டு கண்ணீர் வடிந்தது; சிறுபிள்ளை போல் தேம்பியழுதார். நண்பருக்கு யாதும் புரியவில்லை.

"புருஷோத்தமா ஏன் வருந்துகிருய்? மணி எங்கே? விபரத்தைக் கூறு" என்ருர்.

அதற்குள் வேலைக்கார ராமசாமி வருத்தத்துடன் ஐயோ எங்க மணி எறந்துபோயி வருஷக்கணக்காகி விட்டது. தங்களுக்குத் தெரியாதா? என்ருன்.

"ஆ என்ன! மணி இறந்துவிட்டானு? அடடா நண்பரே! இவையெலாம் கடவுள் சோதனைபோலும்."

"நண்பா! ராமனுத்! என் கண்மணியை அந்தப்பாழும் காவேரியாறு பலிகொண்டு விட்டது. என் தாயாரின் கட்டளைபோல அவனுக்கு சிறுவயதில் மணம் செய்து கண்ணுல் கண்டுமகிழ்வுற்ருேம். என் தமக்கையின் மகள் ராஜத்தைத் தான் மணமுடித்துவைத்தோம். விளையாடுவதும் படிப்பதும் இவ்விதமாய் அதிகமகிழ்வு தரும்படியாய் இருந்தார்கள். மறுவருடம் பள்ளிப்பிள்ளைகளுடன் காவேரியில் விளையாடச் சென்ருனும். ஆடிமாதப் பெருக்கு காவேரி பிரவாகமாய் ஓடுகிறது. ஆற்றில் குதித்தவன் மீண்டும் கரைசேரவேயில்லை. எவ்வளவோ முயற்சியெடுத்தும் வீணுயிற்று. ஒருவாரத்திற்குப் பிறகு பக்கத்துகிராமத்தில் ஆற்றோரமாய் என் மணியின் பிணம் ஒதுக்கப்பட்டு உருமாறிக் கிடந்ததாம். அவன் இருந்தால் இப்போ இருபத்திரண்டு வயது வாலிபனுயிருப்பான் அல்லவா? நான் கொடுத்துவையாத பாவி. 14 வயதில் மணிக்கு மணமுடித்தேன். ராஜத்திற்கு வயது 9, ஐயோ 17 வயது பருவமங்கையாகியும் உலகவாழ்க்கை இன்னதென அறியாமல் இருக்கிருள். ராஜத்தை நினைக்கும் போது தான் மனம் வெடிக்கின்றது."

என்று தன் நேசரிடம் கூறி வருத்தமுற்ருர். இவைகளைக் கேட்ட ராமனுத் மனம் வருந்தி நண்பருக்கு ஆறுதல்கூறி விடைபெற்றுச் சென்ருர்.

மறுபடியும் கனகம் மணியின் காட்சி.

"ஏன்டா ராமசாமி! யாராவது வந்தால் அவர்களுக் கெல்லாம் நம் சரித்திரத்தைச் சொல்ல வேணுமோ? ஏது இதற்குத்தான் போது இருக்கிறது. எஜமான் யோசனையாயிருக்கிறார் பிறகு வாருங்கள் என்று சொல்லி அனுப்பக் கூடாதா?"

அம்மா அவர் நம்ம எஜமானின் பாலியசினேகிதர் 'மணியிடம் அவ்வளவு அன்பு உள்ளவர்' சொன்னே னென்னம்மா?

ஆமாமாம் இருக்கிற பிள்ளையைப்பற்றிப் பேச்சே காணேம் செத்தபிள்ளையைக் கொஞ்சுகிறீர்களாக்கும். என்ன நீங்கள் இப்படி அழுதுகொண்டேயிருந்தால் மணி வந்து விடுவானே? வாருங்கள் காபிசாப்பிட்டு விட்டு காவேரிப்பக்கம் காற்றுடச் சென்று வருவோம். ராமசாமி! காரைக்கொண்டுவரச் சொல். எனக் கூறி விட்டு கணவனை அழைத்துப் போனாள் கனகம்மாள்.

ஃ ஃ ஃ

சென்னை மங்களவிலாஸ் பங்களாவின் பின்புறத் தோட்டம். மாலைநேரம் பலவித நறுமலர் பரிமளம் வீச பறவைகள் மனமகிழ்ந்து பாங்குடன் பேச இனிமையாய் இளந்தென்றல் எங்கிலும் பரவ அலங்கார சோலையின் மத்தியில் பதினாறு வயதுள்ள பருவ மங்கை பரிதாப முகத்துடன் மலர்களைப் பறித்து ஒரு மேடை மீது வந்தமர்ந்தாள். தான் பறித்த மலர்களை மாலையாய்த் தொடுத்துத் தன் மடியிலிருந்த ஒரு உருவப்படத்திற்கு அணிவித்து அதனையே உற்று நோக்கிக கண்களில் நீர்பெருகக் கூறுகின்றாள். 'ஆ என் அன்பே. தங்களை நான் இச்சென்மத்தில் மறுமுறையும் காண்பேனே? ஐயோ தெய்வமே எனது உயிரைப் பிரித்த பிறகு என்னை வைத்திருப்பதில் என்ன பிரயோஜனம்?' நாம் இளமையில் எவ்வளவு நேசமாயிருந்தோம். என் ஆருயிரே தாங்கள் அன்று கூறியவை யாவும் கனவாய் மறைந்து விட்டனவே. என்னைப் பிரிந்து எத்தனை வருடமாகிவிட்டது. அந்தக் காவேரியம்மன் செய்த பூஜாபலன் கூட நான் செய்யவில்லையே என்று பலவிதமாய் வருந்தினாள். வளர்பிறைச் சந்திரன் போன்ற அவளது வதனம் வாடி வதங்கியது. மின்னல் போன்ற மேனி மெலிவுற்றது.

மனதிற்கு மகிழ்வுதரும் வசந்த காலமானது தேகத்தை தகிக்கும் தீக்காற்றெனத் தோன்றியது.

மனக்கலக்கத்தோடு மாதரசியாள் இருக்கும் வேளையில் அவளது சகோதரன் ரமணீ தன்னை அழைக்கும் குரல் கேட்டு எழுந்து பங்களாவை நாடினாள்.

"ராஜம்! நீ தினமும் இவ்விதமே வாடிவருந்துவது எங்கள் மனதைப் புண்படுத்துகிறது. மறைந்த மணியை நினைந்து யாது பயன்? உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. உனக்கேற்ற வரனை நான் பார்த்து மணம் செய்து வைக்கிறேன். உன் மகிழ்ச்சியே எங்கள் மகிழ்வு."

"அண்ணா! என் மனக்கோயிலில் குடியிருக்கும் அம்மணாளரை விட்டு என் மனத்தை மாற்ற இயலுமா? என் அதிர்ஷ்டப்படி யல்லவோ யாவும் நடக்கும்? நான் செய்த பாக்யம் அவ்வளவுதான்."

"தங்காய்! நீ கூறுவது உண்மையே. ஆயினும் சீர் திருத்தம் மிளிர்ந்திருக்கும் இந் நாளில் நீ இவ்வித பரிதாப வாழ்க்கை நடத்துவதுதான் வருந்தத்தக்கது."

'என் அன்புள்ள அண்ணா! தேசத்திற்குப் பணி செய்து ஏழை மக்களை ஆதரித்து நம் நாட்டுத் தொழிலை விருத்திசெய்து அன்னிய நாட்டுத் துணியை பகிஷ்கரித்துக் கதரை ஆதரித்துவரும் காருண்ய மகான் காந்தி மகாத்மாவின் கண்ய மொழிகளைப் பின்பற்றி நம்மால் கூடுமானவரை தேசத்தொண்டாற்றுவதே நமக்கும் நாட்டிற்கும் மகிழ்வும் உயர்வும் அளிக்குமன்றோ? இதைவிடச் சிறந்த மகிழ்வும் உண்டா?' என்று ராஜம் கூற, அவளது சாதுர்யத்தையும் தைரிய மொழிகளையும் கேட்ட ரமணீ ஆனந்த பரவசனாய்,

ராஜம் இன்று காங்கிரஸ் மண்டபத்தில் பிரசங்கமல்லவா? நாம் போய்வருவோமென்று இருவரும் புறப்பட்டனர்.

ஃ ஃ ஃ

திருச்சி புருஷோத்தமர் தன் குமாரன் சுப்பிரமணி ஆற்றில் மறைந்து மடிந்துவிட்டபடியால், அதே துயரினால் மெலிவுற்று தன் சொந்த பாங்கையும் கவனியாமல் விசனத்திலாழ்ந்தார். இளைய மனைவி கனகம்மாளின் புதல்வன் கமலநாதன் தன் தந்தையின் சொத்துக்களுக்கெல்லாம் தலைமை வகித்து வந்தான். சுப்பிரமணி இறந்தது கனகம்மாளுக்கு அதிக திருப்திதான். ஏனென்

றல் தன் மைந்தன் தனியாய் எல்லா சொத்துக்கும் உடையவனுகி விட்டதே காரணம். புருஷோத்தமரின் முதல் மனைவி கல்யாணி சுப்பிரமணியன் ஆறுவது வயதில் இறந்தாள். அவ்வருடமே கன கம்மாளும் மனைவியாய் வரப்பெற்ருள். அதிலிருந்து சகல அதிகார மும் அந்த அம்மாளுடையதுதான். மணியின்மீது ஒரு கண் வைத் துக்கொண்டே வந்தாள். ஆற்றில் விழுந்த செய்தி கேட்டவுடன் அகமகிழ்ந்தாள். ஏராளமான செல்வத்திற்கும் பங்களாவுக்கும் இனி தன் மகன் ஒருக்கனே அதிகாரி என்று நினைத்தாள். இது பூர்வ கதை.

இப்பொழுது கமலநாதன் ஆளுவார் அடக்குவாரற்று தான் தோன்றியாய்த் திரிந்ததினுல் பாங்கிலுள்ள மூன்று லக்ஷம் முதலும் சிதறிப்போயிற்று. கிண்டிப் பந்தயத்தில் முதல் தோல்வி கமலநாத னுடையதுதான். இன்னும அனேக துர்வழிகளில் மனதைச் செலு த்தி இறுதியில் பங்களா ஒன்றுதான் பாக்கி வைத்தான்.

செல்வந்தராய் வாழ்ந்த புருஷோத்தமர் சிறுமை நிலையடைந் தார், வறுமை மிகுந்தார். இதற்குக் காரணபூதமாகிய கமலநாதனைக் கடிந்தார். தான் செய்தவை யாவும் தவறெனக் கமலநாதன் உணர் ந்தான். தந்தையின் பாதம் பணிந்தான். மாதா பிதாக்களின் மன் னிப்பைப்பெற்று நல்வழிபட்டு கமலநாதன் இருக்கும் நாளையில் கனகம்மாள் நோய்வாய் பட்டாள்.

ஃ ஃ ஃ

சென்னையில் சத்யாக்கிரகம் தீவிரமாய் நடந்து வருகிறது. எங் கும் பிரசங்கங்கள், மறியல்கள், தடியடிகள் நடந்துவருகின்றன.

ஓர் தினம். சைனுபஜார் ரோட்டில் ஜவுளிக்கடை மறியல் செய் ததின் பயனுய் ஒரு வாலிபன் தடியடிபட்டு மயக்கமாய்த் தரையில் வீழ்ந்தான். அதே கணம், அவ்வழியே காரில் வந்துகொண்டிருக் கும் ரமணி பார்த்து அவ்வாலிபனைத் தூக்கிக் காரில் போட்டுக் கொண்டு பங்களா வந்துசேர்ந்தான். அடிபட்ட வாலிபனை ஒரு கட்டிலில் கிடத்தி டாக்டரை யழைத்து சிகிச்சைகள் செய்துவந்த னர்.

ஒரு வாரத்தில் வாலிபன் பூரண குணமடைந்து எழுந்து உட் கார்ந்தான். அருகிலிருந்த ரமணியைப் பார்த்து ‘அன்பார்ந்த நண்

பரே தாங்கள் செய்த பேருதவியை என்றும் மறவேன். இது யாருடைய பங்களா? தங்கள் நாமம் யாது? சொல்லக்கூடுமா?' என்ருன்.

நண்பரே, இது ராகவேந்திரர் பங்களா. நான் அவருடைய புத்ரன். என் பெயர் ரமணி. தாங்கள் யாரோ?

நான் பிறந்து வளர்ந்தது இந்நாடே. ஆயினும் என் தந்தையுடன் ரங்கூனில் தான் இதுவரை வசித்துவந்தது. தந்தை யிறந்துவிட்டபடியால் நான் அங்கிருக்க மனமில்லாமல் என் செல்வங்கள் யாவையும் பொதுஜன சேவைக்கு அளித்து நானும் தொண்டியற்றி வருகிறேன். இம்பீரியல் பாங்கில் (30) முப்பதாயிர ரூபாய் என்பெயருக்கிருக்கிறது. என் பெயர் சோமு என்ருன்.

நேசா! நாங்களும் உன்னைப்போல உலக நன்மை நாடுபவர்கள் தான். என் சகோதரிக்கு கதர்தான் உயிர். நீ எப்பொழுதும் எங்களோடேயிருக்கவேண்டும். எனக்கு உன்மீது அதிக அன்பு உதிக்கின்றது என்றனன். அதற்கு வாலிபனும் உட்பட்டு அன்றுமுதல் யாவரும் அதிக அன்புடன் ஒன்ருயிருந்து வந்தனர்.

நாட்கள் சில மறைந்தன.

ஃ ஃ ஃ

சோமு:—ரமணீ! உன் சகோதரிக்கு இளமையிலேயே மணமாகி அவள் கணவனும் இறந்துவிட்டதாய்க் கூறுகிருய். ஏன் நீ மறுமணம் செய்து கொடுக்கக்கூடாது? ஹரிஜனர்கள் ஆலயப் பிரவேசமாகிவிட்டனர். விதவையர்களுக்கு விமோசனமும் பிறந்துவிட்டது. சாதிபேதமின்றி சமத்துவம் நிலவிவரும் இந்நாளில் ஏன் இன்னும் நீ கவலைகொள்ளவில்லை?

ரமணீ:—நண்பா! நான் எவ்வளவோ கூறியும் அவள் பிடிவாதமாக இருக்கிருள். ஏன் நீதான் அவளிடம் சொல்லிப்பாரேன்?

இத்துடன் இருவரும் பிரிந்தனர். ரமணியின் மனதில் மகிழ்ச்சி எழும்பியது. ஆகா இந்த உத்தமனுக்கு என் ராஜத்தை மணம் செய்துகொடுத்தால் இருவர் சேவையும் ஒன்றுபட்டு நாட்டிற்குப் பலன் தருமே. அவளோ பிடிவாதமாயிருக்கிருள் என்று யோசித்துக்கொண்டே சென்ருன்.

சோமுவின் மனதில் ராஜத்தின் உருவமே பதிந்திருந்தது. ஓர் நாள் ரமணி வெளியே சென்றிருந்தான். ராஜம் மாடி மீதிருந்தாள். அத்தருணம் சோமு அவளைக் காண்பதற்காக மாடிமீதேறினான். ராஜத்தின் அறைக் கதவு கொஞ்சம் திறந்திருந்தது. உள்ளில் ராஜம் தன் கணவன் மணியின் படத்தைப் பார்த்து வாய்விட்டுக் கூறுகின்றாள். 'நாதா தங்கள் தெரிசனம் நேரில் கிடைக்கப் பெறாதா? இத்தனை காலமாக என்னை மறந்தல்லவா இருக்கிறீர்கள்?' என்று வருந்தினாள். இவை யாவும் சோமுவின் காதில் ஒலித்தன. உடனே உட்சென்று அன்பே! ராஜம்! நீ என்ன பயித்தியக்காரியா யிருக்கிறாய்? மாண்டவர் மீண்டும் வருவரோ? ராஜம்! நான் உன்னை மனப்பூர்வமாய்க் காதலிக்கிறேன். ரமணிக்கும் இது சம்மதந்தான். நாம் இருவரும் இனிமை வாழ்க்கை நடத்துவோம். என்று இனிய மொழியில் கெஞ்சுதலாய்க் கூறினான் சோமு.

இம் மொழிகளைக் கேட்டு ராஜம் திடுக்கிட்டாள். எழுந்து திரும்பி பார்த்தாள். மறுபடியும் சோமு 'ராஜம்! நான் உனது அன்பைப் பெற வந்திருக்கின்றேன்" என்றான். "அன்பரே! தாங்கள் அவ்வார்த்தை கூறவேண்டாம். தாங்கள் நினைத்திருப்பது பகற்கனவுதான். என் நினைவை மறந்துவிடுங்கள். தயவு செய்து இனிமேல் இவ்வித வார்த்தைகள் கூறாதிருக்க வேண்டுகின்றேன்" என்றாள் ஏந்திழை ராஜம். அவளது உறுதியைக் கண்டு உளம் உவந்து 'சரி ராஜம் அப்படியே நடந்துகொள்கிறேன். விரைவில் நீ வலியவே என் காதலைப் பெற முன்றுடுவாய். இருக்கட்டும். போய்வருகிறேன்' எனக் கூறிச் சென்றான் சோமு. சோமு கூறிய வார்த்தையானது ராஜத்திற்கு மனவருத்தமளித்தது. என்ன நான் மனது மாறிவிடுவேனா? உம்- ஒருபோதும் நடவாது என்று தன்னைத் தேற்றிக்கொண்டாள். சிலநாள் சென்றபிறகு ரமணிக்கு ஒரு தந்தி வந்தது. அவசரமாய் அதைப் பிரித்துப் பார்க்க அதில் திருச்சியில் கனகம்மாளுக்கு மிகவும் அபாயமாயிருப்பதால் யாவரும் உடனே வந்துசேர வேண்டுமென்று குறிப்பிட்டிருந்தது. உடனே ரமணி, ராஜம், சோமு, ரமணியின் மனைவி முதலியவர்கள் பிரயாணமாகி மறுநாள் திருச்சி புருஷோத்தமர் வீட்டை அடைந்தனர்.

ராஜத்தைக்கண்ட கனகம்மாள் படுக்கையிலிருந்தபடியே அவளை அணைத்துக்கொண்டு என் கண்மணி பாவி நான்............... அதற்குமேல் பேச சக்தியில்லை. மயக்கம் தலைசுற்றியது. சுயநினைவு மாறியது. பலவிதமாய்ப் புலம்பவாரம்பித்தாள். மறுபடியும் கண்களை விழித்தாள். இவைகளைக்கண்ட ராஜம் ஐயோ மாமி தங்களுக்கு என்ன செய்கின்றது? என அலறினாள். புருஷோத்தமரும் கமலநாதனும் செய்வகை அறியாது தயங்கினர். யாவரும் கனகம்மாளையே நோக்கி கலக்கமுற்றனர்.

கனகம்மாள் தன் கணவரை அருகிலழைத்து "நாதா நான் இனி பிழைப்பது அருமை. நிலையற்ற செல்வத்தை நம்பி என் விலையுற்ற குலக்கொழுந்தை...................ஐயோ என்னை மன்னிக்கவேண்டும் நாதா நான் சண்டாளி துரோகி" என்றாள்.

இதைக்கேட்ட புருஷோத்தமர் என்ன? கனகம் ஒன்றும் விளங்கவில்லையே விபரமாய்க்கூறு என படபடத்துக் கேட்டனர்.

"நாதா தங்களது சொத்து முழுமையும் என் மகன் கமலநாதனுக்கே கிடைக்கவெண்டுமென எண்ணி ஐயோ வேலைக்கார ராமசாமியிடம் நமது ம.......ணி.......யை ஆ........ற்........றி....... ல் தள்ளிக் கொன்று........வி........டு........ம்........படி........கூறினேன்."

'என்ன! என்ன!! ஆ அடிசண்டாளி என்று கூறிவிட்டு அருகில் நிற்கும் ராமசாமியை நோக்கி' அடேய் நீயா என் செல்வனைக் கொன்றாய்' என்று அவன் மென்னியைப் பிடித்தார். உடனே ராமசாமி அவாது கைகளை விலக்கி எஜமான் உங்க மணி உயிரோடு இருக்கிறார் என்றான்.

அவ்வளவுதான் உடனே ராமசாமியைக் கட்டிக்கொண்டார். ராமசாமி! என் மணி உயிரோடு இருக்கிறானா? எங்கே? எங்கே? என்றார். எல்லோரும் ஆச்சரியமுற்றனர்.

ராமசாமி கூறுகிறான். 'எஜமான் ஆற்றில் தள்ளி மணியை நான் கொல்லாவிட்டால் என்னை அம்மாள் கொன்றுவிடுவதாக ஆக்கினை செய்தார்கள். அதற்குப் பயந்து நான் என் தம்பி வேலனோடு யோசித்தேன். என் தம்பி ரங்கூனில் ஒருவர் வீட்டில் வேலையிலிருந்து என்னைப் பார்ப்பதற்காக இங்கே வந்திருந்தான்.

அவன் எஜமானருக்கு ஏராளமான செல்வமிருந்தும் குழந்தை யில்லாததினால் அவன் மணியை ரங்கூனுக்கு அழைத்துப்போய்விட்டான். அங்கு மணியை செல்வமாய் வளர்த்துவருவதுடன் கல்வியும் போதித்து அவரது செல்வம் அனைத்தும் மணி பேருக்கு எழுதிவிட்டதாயும் எனக்கு அவ்வப்போது கடிதம் வந்துகொண்டிருக்கும். அவரும் அடிக்கடி இவ்வூர் வந்து செல்வார். இப்பொழுது மணியை வளர்த்தவர் இறந்து ஒரு வருஷமாச்சு. என் தம்பி இங்குதான் இருக்கிறான். மணி உலக மக்களுக்கு உழைத்துவருகிறாராம். அவர் இருப்பிடத்தை நான் என் தம்பியிடம் கேட்டுத் தெரிவிக்கின்றேன் என்று கூறிமுடித்தான்.

உடனே கனகம்மாள் ஆ என் செல்லமணி நீ உயிரோடு இருக்கிறாயா? என் ஆவி பிரியுமுன் உன்னைப் பார்க்க முடியாதா என் மன்னிப்பை உன்னிடம் கேட்கமுடியாதா? என்று பிதற்றினாள். ஆ ஐயோ மாரை அடைக்கிறது அப்பா — மணீ — மணீ என் கண்மணீ — ஐயோ ஒரு முறை உன்னைக் கண்டால் பிழைத்து விடுவேன்' என்று பலவாறு பிதற்றினாள்.

இந்த பரிதாப மொழிகளையும் காட்சிகளையும் கண்ட சோமுவின் மனம் துடித்தது, கண்ணீர் வடிந்தது. கனகம்மாளுக்குத் தேறுதல் கூறும் நிமித்தம் அருகில் சென்று கட்டிலின் கீழ் அமர்ந்து அம்மா அதைரியப்படாதீர்கள். தங்களுக்கு ஒன்றும் செய்யாது என்றான். கண் திறந்து சோமுவை நோக்கினாள். பன்முறை உற்றுப்பார்த்தாள். சோமுவின் நெற்றியில் இள வயதில் காயம்பட்ட ஓர் அடையாளம் இருந்தது. சட்டென்றெழுந்தாள். சோமுவின் வலக் கரத்தைப் பிடித்து பரிசோதித்தாள், வலக் கரத்தில் மச்சம் ஒன்றிருந்தது. ஆ மணீ — என் செல்வ மணீ — என் கண்ணே என்று அணைத்துக்கொண்டாள். அம்மா தாங்கள் நிகழ்ந்தவைகளை நினையாதீர்கள் என்று தேற்றிப் புருஷோத்தமரை நமஸ்கரித்து "தந்தையே நான் செய்த பாக்யத்தால் தங்களை அடைந்தேன், கவலையுறுதீர்கள்" என்றான். கனகம்மாளின் நோய் கணப்பொழுதில் மறைந்துவிட்டது. நமது மணி ராஜத்தை நோக்க அவள் நாணத்தால் தரையை நோக்கினாள். மறுதினம் யாவரும் சென்னைக்கே வந்துவிட்டனர். ரமணி தன் சகோதரியின் அதிர்ஷ்டத்

தை எண்ணி மகிழ்ந்தான். கமலநாதனும் தேசசேவையி லீடுபட்டான்.

ஃ ஃ ஃ

மாலை நேரம். மெல்லிய தென்றல். மலர்வனத்தில் மணி அமர்ந்திருக்கிறுன். ராஜம் அவனது கரத்தைப்பற்றி "நாதா என் பாக்கியமே சிறந்தது. என் கோரிக்கை ஈடேறியது" என்று தன் காதலன் கரத்தைக் கண்களில் ஒற்றிக்கொண்டாள்.

"ராஜம் நான்தான் பகற்கனவு கண்டிருக்கிறேன். நீ இரவு கனவு கண்டவளல்லவா? என்னைத் தொடாதே" என்ருன் மணி.

"என் இன்னுயிர்த் தலைவ! என்னை மன்னிக்கவேண்டும். தாங்கள் என்று அறிந்திருந்தால் அவ்விதம் சொல்வேனே? நாதா உங்களை அடையாளமே கண்டுபிடிக்க முடியவில்லையே?"

"என் அன்பே உன்மனேவுறுதியைக்கண்டு மகிழ்வடைந்தேன். என் மனதில் உன் எண்ணந்தான் குடிகொண்டிருக்கும். இறைவன் திருவுளமிரங்கி நம்மை ஒன்றுபடுத்தினர்- நான் மறை பெயர் வைத்திராவிட்டால் என் தந்தை தெரிந்துகொள்வார். அதனுல் என் சிற்றன்னைக்கு ஆபத்து நேருமெனக் கருதியே பெயரையும் மாற்றிக்கொண்டேன்."

"நாதா நான் தங்களைக்காண என்ன ஆவல்கொண்டிருந்தேன் தெரியுமா? நம்மை ஒன்றுபடுத்திய கடவுளை இருவரும் பிரார்த்திப்போம்."

"கண்ணே ராஜம் உன்போன்ற மனவுறுதியும் தைரியமும் தேசப்பற்றும் உள்ள பெண்மணிகளால்தான் நமது பாரதநாடு விடுதலை பெறவேண்டும். நாம் இருவரும் தாய்நாட்டுக்குத் தொண்டுசெய்யக் கடமைப்பட்டுள்ளோம்."

"நாதா அதோ பாருங்கள் பறவைகள் எவ்வளவு சுதந்திரமாய் விளையாடுகின்றன."

"ஆம். அன்பே வா, நாம் இந்த சோலையைச்சுற்றி பார்ப்போம்." என்று இருவரும் மகிழ்ந்து உலாவச்சென்றனர்.

---

# சுகாதாரக் கும்மி.

(B. A. பட்டம் பெற்ற ஒரு பெண்மணி பாடியது.)

பாவையரே என்றன் பாங்கியரே—கும்மி
பாடிவிளையாடும் தோழியரே
ஆவலொடு சுகவாழ்வை யடைவதற்
காகும் வழிகளைத் தேடுவீரே. 1

உள்ளம் உடலையே பற்றிநிற்கும்—இந்த
உண்மை மறந்திட லாகாதம்மா
தெள்ளத் தெளிந்த அறிவுடையோர் மொழி
தெய்வமொழி யென்றுணர்வாயம்மா. 2

மாசொ டறியாமை நேசமாகித் தம்முள்
வாய்த்த மணஞ்செயும் காரணத்தால்
பேசுமுலகினில் நோய்களெனும் பல
பிள்ளைகள் வந்து பிறக்குமம்மா. 3

சுத்தமே என்றும் சுகமளிக்கும்—தீய
சோம்பலை ஓட்டித் துரத்துமம்மா
இத்தரை வாழ்வைப் பெருக்குமம்மா—அதற்
கீடெதும் இல்லையான் சொன்னேனம்மா. 4

ஏது மழுக்கிலா ஆகாயமே—உடற்
கென்றும் உறுதி பயக்குமம்மா
மோது கடற்கரை சென்றுலவி—உண்மை
முற்றும் தெளிவுறக் காண்பாயம்மா. 5

'கந்தையானாலும் கசக்கியுடு' எனும்
கற்பனை போற்றி நடப்பாயம்மா
சுந்தரமேனி யுண்டாகுமம்மா—நல்ல
சுத்தத்தின் நன்மை சிறிதோவம்மா. 6

மட்டுக்கு மிஞ்சிடில் வானமுதும்—குணம்
மாறி விஷமாகிப் போகுமம்மா
இட்டமுள்ள தோழித் தங்கமே—நீயிதை
என்றும் மறவாதிருப்பாயம்மா. 7

சுண்டப்பசித்துண்ணும் வேளையிலே—பழஞ்
சோறும் சுவையமு தாகுமம்மா
பண்டி நிறைந்த பின் உண்பவர்க்கு—நல்ல
பாலும் கசப்பாகிப் போகுமம்மா. 8

வேலை செய்யாது சோம்பேறிகளாய்—நிதம்
வீட்டிலிருப்பதும் ஆகாதம்மா
மூலையிலிட்ட இரும்பு துரும்பேறி
மோசமாய்ப் போவதும் கண்டிலீரோ. 9

நோய்கள் உடலை அணுகிடாமல்—ஆயுள்
நூற்றினும் மேலாய் வளருமம்மா
தீய உணவை அகற்றிடம்மா—வேலை
செய்திட நித்தம் பழகிடம்மா. 10

வேலைகள் செய்துடல் வன்மை பெறின்—இந்த
மேதினி முற்றும் நமதேயம்மா
காலனையும் வென்று வாழ் வோமம்மா—ஒரு
காலும் தளர்ச்சி யுண்டாகா தம்மா. 11

நித்தமும் நோயாளி யாகி ஐயோ—கட்டில்
நீங்காது நீண்டு கிடப்பவருக்
கெத்தனை செல்வமிருந்திடினும்—அதில்
யாதும் பயனுண்டோ சொல்லுமம்மா. 12

மன்னுயிர்க்காக உழைத்து நிதம்—சுக
வாழ்வை யளிக்க முயலுவோர் தம்
பொன்னுரை போற்றி ஒழுகு வமேல்—நாமும்
பூரண வாழ்வை யடை வோமம்மா. 13

நாடும் சுகாதார சங்கமெல்லாம்—இந்த
நானிலத் தோங்கித் தழைகுகவே
ஆடி விளையாடும் தோழியரும்—நீண்ட
ஆயுளைப் பெற்று வளர்குகவே. 14

---

## விவாகரத்து உரிமை.

திரு. எஸ். எஸ். நாராயணன் பி. ஏ.

"முழுமுட்டாள் தனமாக நிலைமைகளை மாற்றிக்கொள்வதாலும் குருட்டுத்தனமாக மாற்றங்களைத் தடைசெய்வதாலும் ஓர் நாட்டின் எதிர்காலம் ஆபத்துக்குள்ளாகிவிடும்" என்று ஓர் அங்கில அறிஞர் கூறினர். விவாகரத்து விஷயத்திலும் இக்கூற்று முற்றிலும் பொருந்தும். ஒரு சாரார் விவாகரத்து செய்வதென்றால் ஒரு பெண் பல ஆடவரை வரிப்பதென்றோ அல்லது' விபசாரம் செய்வதென்றோ கருதுகின்றனர்; மற்றொரு சாரர் விவாகரத்து சாஸ்திரங்களுக்கு விரோதமானதென்று எதிர்க்கின்றனர். இவ்விரு தரப்பினர் அபிப்பிராயங்களும் ஏற்றுக்கொள்ளத்தக்கனவல்ல. இவ்விஷயத்தில் நாம் பரிசீலனை செய்யவேண்டிய விஷயம் சமூக முன்னேற்றத்திற்கும் சமூக நீதிக்கும் பொருத்தமானதெது என்பதைக் கவனிப்பதே யாகும்.

### ஏமாற்ற மணங்கள்

மணங்களுக்கு அஸ்திவாரமாக இருப்பது காதல். அஃதின்று பலாத்காரத்தாலும், ஏமாற்றத்தாலும், பெற்றோர்களது பிடிவாதத்தாலும் மணங்கள் நிகழ்கிறவரையில் விவாகரத்தும் இன்றியமையாததேயாகும். இதன் விளைவாக பொருத்தமற்ற மனமொவ்வாத ஆண்களும் பெண்களும் சதிபதிகளாகி விட நேரிடுகிறது. மற்றும் சில சந்தர்ப்பங்களில் நோயாளிகளையும் தமது வாழ்க்கைத் துணையாகக் கொண்டுவிட நேரிடுகிறது. இந்நிலைமையில் நன்னடத்தையையும், நீதியையும் கருதி விவாகரத்துச் செய்துகொள்ள அனுமதியளிக்கப்படல் வேண்டும். ஆனல் மற்றொரு முக்கியமான கேள்வி

எழுகின்றது. பூர்ண சம்மதத்துடன் நடைபெற்ற மணவாழ்க்கை யில் சந்தர்ப்பங்களினால் சதிபதிகளுக்குள் ஒத்துவாழ முடியாமல் செய்து விட்டால் என் செய்வது? டால்ஸ்டாய் தம்பதிகளைப் போல் 'ஓர் பெரியாரும், ஓர் நற்குணவதியும் ஒருவரை யொருவர் சித்திகலங்கச் செய்தால் என் செய்வது? அப்போது தான் விவாக ரத்து கட்டாயமாக வேண்டும்.

### மண ஒப்பந்தம்

மணவாழ்க்கை ஓர் ஒப்பந்தமாகும். ஓர் ஆடவரும் ஓர் பெண் ணும்தாம்மற்றவருடன் தனது ஆயுள்நாளைக் கழிப்பதென ஒப்பந்தம் செய்து கொள்வதையே நாம் மணமென்கிறோம். மேனாட்டில் மண வாழ்க்கை வெறும் ஒப்பந்தமாக மட்டுமே கருதப்படுகிறது. ஆனால் இந்த ஒப்பந்தத்தில் ஒரு வித்தியாசம் இருக்கிறது. இதில் சில விசேஷ நிபந்தனைகளடங்கி யிருக்கின்றன. இவ்வொப்பந்தத்தில் ஈடு படும் இருசாராரும் சம்மதப்பட்டாலன்றி பலாத்காரத்தால்,—சட் டத்தால் அதை நிறைவேற்ற முடியாது. கோர்ட்டாரால் ஒருவரை சிறந்த கணவராகவோ அல்லது ஒருவளை ஏற்ற மனைவியாகவோ நடந்து கொள்ளுமாறு வற்புறுத்த முடியுமா?

### சட்டத்தின் எல்லை.

மணவாழ்க்கை ஒப்பந்தத்தை மீறினவர் மறு வழக்குத் தொடர்ந்து வெற்றிபெறுவதாக வைத்துக்கொள்வோம். அதனால் என்னபயன்? நீதிமன்றத் தீர்ப்பு ஆடவரையோ, அல்லது பெண்டி ரையோ—அவர்களுக்கு விருப்பமற்ற வாழ்க்கைத் துணையுடன் வாழும்படி பலாத்காரப்படுத்தும்படி மேலும் இத்தீர்ப்பில் நஷ்டத் திற்கேற்ற ஈடுபெறுவது சாத்தியமல்ல. ஒரு பெண்ணை அவளது கணவன் கைவிட்டுவிட்டால், சட்டம் அவளுக்கு செலவுக்குக் கொடுக்குமாறு செய்யலாம். ஆனால் மணவாழ்க்கை உரிமைகளுக் கும், இல்வாழ்க்கை இன்பத்திற்கும் பதில் பணம்—செலவுக்குப் பணம் ஈடாகுமா? ஈடாகவேஈடாகாது. இந்நிலைமையை அறிவுடை யோர் ஆழ்ந்தாலோசனை செய்யவேண்டும். நேர்ந்த நஷ்டத்தை இல் லாது செய்யவோ அல்லது அதற்குச் சரியான ஈடுசெய்யவோ முடி யாத ஓர் ஒப்பந்தத்தை—விவாக ஒப்பந்தத்தை—ரத்துச் செய்து விடுவது எத்துணை நலம்—எனவே விவாகரத்து, அல்லோல்நல்லோ

லப்படும் சதிபதிகளுக்கு ஓர் அரிய நிவாரணமாகும். அன்பும் காதலும், பாசமும் இருதரப்பிலும் இருந்தாலன்றி மணவாழ்க்கை இன்ப வாழ்க்கையாகாது. எனவே பிரியவிரும்பும் இருவரை இணைத்துவைப்பது கொடுமையாகும்.

"கடவுள் பிரிந்தே வாழவேண்டுமென கருதும் இருவரை மனிதர் பலாத்காரமாக இணைப்பது தகாது..........."

பலாத்காரத்தால் இணைக்கப்படும் பெண்களும், ஆண்களும் முதலாவதாக மனமுடைகிறார்கள். அதன் விளைவாக அவர்கள் பின் சரீரம் உடைகின்றனர். இந்நிலைமை மிகவும் பரிதாபகரமானது; இருவரது நிலைமையும் இரங்கத்தக்கது. இருவர் ஒன்றிவாழ எவ்வளவு சுதந்தரம் வேண்டுமோ அது போல இருவர் பிரிந்து வாழவும் சுதந்திரம் இருக்கவேண்டும். விருப்பமற்ற ஆண், பெண் பாலரை சதிபதிகளாக்குவது பெரும் கொடுமை! பிரிய மிக்க ஆண் பெண் பாலரை பிரித்துவிடுவது அதனினும் கொடுமை!

## ஒழுக்கம்.

விவாகரத்தினால் ஒழுக்கக்குறைவோ, சமூகத்திற்குக்கேடோ விளையுமென் றஞ்ச இடமில்லை. அன்பும், ஒற்றுமையும், பக்ஷபாதமின்மையும் இல்லாவிடத்து புனிதத்வம் எவ்வாறு ஏற்படும்? ஆனால் இப்பொழுதிருக்கும் நிலைமை மிகக்கொடியது. ஆடவர் எத்தனைமுறை வேண்டுமானாலும் மணம் செய்துகொள்ளலாம்...............அன்றியும் அவர்........! ஆனால் பெண்கள் விலங்கு கொண்ட மிருகங்களாகவே இருக்கவேண்டும்.

விவாகரத்து செய்வதற்கு சட்டம் அனுமதித்தால் விவாகங்களைவிட விவாகரத்துகள் அதிகரித்துவிடலாமென சிலர் கருதக்கூடும். மனப்பான்மை இதுவானால் அவ்வாறு ஏற்படுவதற்கு அஞ்சத்தேவையில்லை. பற்பல காரணங்களையொட்டி ஏற்படும் மணங்கள் இருதரப்பினரின் கருத்துப்படி ரத்துச்செய்யப்பட்டுவிட்டால் விவாகரத்துக்கள் அதிகம் ஏற்படக் காரணமில்லை. மணம் மணமற்றதாவதைத் தடுக்க விவாகரத்து ஓர் சிறந்த பாதுகாப்பாகும்.

ஒரு சமூகம் ஒழுக்கத்திற் சிறந்து விளங்க வேண்டுமானால் ஒழுக்கக் கேடுகளுக்கு துணையாக நிற்கும் தளைகள் அகற்றப்பட

வேண்டும். அவைகளுள் விவாகரத்து அனுமதிக்கப்படுவதும் ஒன்றாகும். விவாக ரத்தால் பரிசுத்தத் தன்மை அழிந்துவிடுமென்று கூறுவது உண்மையல்ல. தனக்கு விருப்பமற்ற ஒருவரோடு சேர்ந்து வாழ்க்கை நடத்துமாறு ஓர் ஆடவரோ பெண்டிரோ கட்டாயப் படுத்தப்பட்டால் நாளடைவில் அவர் ஒழுக்கத்தை இழக்க நேரிடும். விவாக ரத்துகள் இன்றி சமூகக் கட்டுப்பாடுகள் அதிகமாக இருக்குமிடங்களில் விபசாரம் செழித்தோங்கும். கல்யாணச் சட்டங்கள் அதிக கட்டுப்பாடுகள் இருக்கும் நாடுகளில் சோரத்தனம் மிகுந்திருப்பதுடன் சட்டரீதியான தந்தை தாயற்ற குழந்தைகள் அதிகமாக இருக்கின்றனவென்றும் புள்ளி விபரங்கள் தெரிவிக்கின்றன.

## விவாக ரத்து அதிகரித்து விடுமா?

விவாகரத்து சட்டரீதியாக அனுமதிக்கப்பட்டால் கல்யாணமான தம்பதிகள் அற்ப காரணங்களை முன்னிட்டும் விவாகரத்துகள் செய்துகொள்வார்களென ஒரு சாரார் கூறுகின்றனர். ஆனால் இக் கூற்றைக்கண்டு நாம் அஞ்சத் தேவையில்லை. நண்பர்களில் பலர் நட்பை இடைவழியே சிதைத்து விடுகிறபோதிலும் நாம் வாழ்நாட்கள் முழுவதும் இணைபிரியாமலிருக்கும் நண்பர்களைப் பெற்றிருக்கவில்லையா? விவாகரத்து என்ற வழியுடன் தப்ப வழியில்லையே என்ற வருத்தத்தால் கல்யாணமான எல்லா தம்பதிகளும் உழல்கிறார்களென நாம் கருத சிறிதும் இடமில்லை. கல்யாணத்தை நாம் அவ்வளவு கொடுமையாக நினைக்கத் தேவையில்லை.

ஆடவர்களில் குணக்கேடுகள் நிறைந்த ஒரு சாரார் இருக்கின்றனர். இத்தகைய பெண்களும் உண்டு. அவர்கள் விவாகம் செய்வதையும் அனுமதிக்கப்பட்டால் விவாகரத்து செய்வதையுமே தொழிலாகக் கொண்டுவிடுவார்கள். இது மிகவும் கொடிது. ஆனால் புல்லறிவாளர்களாகிய அம்மனிதருடன் இடைவிடாது துயரப்படுவதினும் விவாக ரத்துச்செய்து பிரிந்து வாழ்வது நலமன்றோ?

விவாகரத்துகளில் பெரும்பாலானவைகளுக்கு மூலகாரணம் ஒன்றுண்டு. அதாவது ஆண் பெண்பாலர்களில் எவருக்காயினும் சரி, அவரவர்க்குரிய லக்ஷணங்களில் ஒரு அம்சம் திட்டமாகக் குறைவுபட்டிருந்தால் அவரை வாழ்க்கைத் துணையாகக் கொள்ளும்

மற்றவர் அவர்மீது வெறுப்புக்கொள்கிறார். அந் நிலைமையில் இரக்கம், காரணம், கடமை அல்லது வேறெதுவாக இருந்தாலும் சரி, அவருக்கு அவரது வாழ்க்கைத் துணையிடமுள்ள வெறுப்பை அகற்ற இயலாது. இது இயற்கை. இது நியாயமா இல்லையா என்பது வேறு விஷயம். ஆனால் இது நிகழ்வதுமட்டும் உண்மை. இச் சந்தர்ப்பத்திலும் மற்று சதிபதிகளில் ஒருவர் கொடிய நோய், புத்தி சுவாதீனமின்மை இவைகளை உடையவராக இருந்தாலும் விவாகரத்து கட்டாயமாக அனுமதிக்கப்படவேண்டும். ஆரோக்கியமுள்ள திடகாத்திரமான ஒருவர், வாழ்க்கையில் தமக்குத் தகுந்த ஓர் துணை இல்லாமல் தயங்குவது மிகவும் பரிதாபம்! மேலும் கொடிய நோய்களை தலைமுறைகளாக பரப்பி வருவதும் இச் சமூகக் கட்டுப்பாடன்றோ?

## குழந்தைகளின் கதி

குழந்தைகளை ஈன்றெடுத்த தம்பதிகள் விவாகரத்துச் செய்துகொள்வது சரியா? ஆனால் அவர்களது குழந்தைகளின் கதி என்ன என்பவற்றை அடுத்தபடியாக கவனிக்கவேண்டும். ஆனால் குழந்தை தனக்கு இருக்கிறதென்ற எண்ணம் கணவனையும், மனைவியையும் சமாதானப்படுத்தும் ஓர் முக்கியமான துணையாகும். அவ்வாறிருந்தும் அவர்களால் சமாதானத்துடன் வாழமுடியவில்லையானால், அவர்கள் சேர்ந்து வாழ்க்கைநடத்துவது எற்றுக்கு? தம் பெற்றோர்கள் போர் தொடுத்துக்கொண்டிருக்கும் காட்சிகள் பச்சிளங் குழந்தைகளின் மனதில் கொடிய விஷயங்களைப் பதியச் செய்துவிடும். உலகமே அவர்களுக்கு கொடுமையாகத் தோன்றும். மேலும் கணவனும் மனைவியும் பல காரணங்களை முன்னிட்டு பிரிய விரும்பினாலும் இருவரும் தம் குழந்தையை நேசிக்கிறார்கள். அந்நிலைமையில் அவர்களது குழந்தை கஷ்டத்திற்காளாவதை அவர்கள் சகிக்க மாட்டார்கள். இருந்தாலும் அவர்கள் பிரிந்தே வாழவேண்டுமெனக் கருதினால் கட்டாயமாக அவர்களுக்கு விவாக ரத்து சுதந்திரம் வழங்கப்படல் வேண்டும். ஆனால் குழந்தைக்கு போதிய அளவு பாதுகாப்புக்கள் அளிக்கப்படவேண்டியதவசியம்.

விவாக ரத்து அனுமதிக்கப்படுவதால் அற்ப காரணங்களை முன்னிட்டும் கூட அவை நிகழக்கூடுமாதலால் பெருங் கஷ்டங்கள்

ஏற்படுகின்றன வென்பது உண்மை. ஆனல் முன்னேற்ற வழி கஷ்டமானதுதான்; நஷ்டங்களும் ஏற்படலாம். அதற்காக முன்னேற்றமே வேண்டாமென்று வாளாவிருப்பதா? நம்பிக்கையுடனும் தீரத்துடனும், பாடுபட்டால் எந்த நஷ்டத்திற்கும் தகுந்தாற்போல் ஈடுசெய்யமுடியும்; தோல்வியும் வெற்றியாகும். இதனல் சுகமாக வாழ்ந்துகொண்டிருக்கும் சதிபதிகள் எவரும் விவாக ரத்துச் செய்துகொள்ளுமாறு கட்டாயப்படுத்தப்படவில்லை என்பதை வாசகர்கள் கவனிக்கவேண்டும். ஆனல் தற்போது நமது சமூகத்தில் கொடிய ஒவ்வாத மணங்களால் வருந்துர் யுவர்களும் யுவதிகளும் ஏராளமாக இருக்கின்றனரென்பது மறுக்கமுடியாத உண்மை. அவர்களுக்கு விடுதலையளிப்பது நம் கடமை. அர்த்தமற்ற வைதீகத்தைவிட மனித ஜென்மம் விலை உயர்ந்தது; மாண்புடையது; மனித சுதந்திரம் உலகில் எப்பொருளையும்விட பெரிது என்பவற்றை நாம் உள்ளத்தில் அழுத்தமாக இருத்தி இவ் விஷயத்தை சிந்தனைசெய்யவேண்டும்.

---

# பழி நீக்குவோம்.

(S. சிவப்பிரகாசம்)

(மதுரா நகரிலோ சாலனம் என்ற மெட்டு)

பல்லவி

விதவையெனும் பழி போக்குவோம் மாதரின்
வேதனை நிலைதவிர்ப்போம்! நாட்டில் (வித)

சரணம்

மதம் புகன்றிடும் நீதி மாதர்க் கநீதி!
மாசு தீர்ந்திட உழைப்போம்! நாமே (வித)
சுவையுள கனிகளை வேம்பென்க் கூறும்
சூதினையுடைத் தெறிவோம்! பாழும் (வித)
கட்டுக் கடங்கா மங்கைப் பருவம் பொல்லாது
காதலும் பொது வாகுமே! நாட்டில் (வித)

ஸ்வரத்திற்கு

வாது பேசிடுவதேன் ?—கொடும் (வித)
மாதர் சுகமுற மறுமணம் புரிவது பிழையிலை
அறிகுவீர் ! —கொடும் (வித)
ஜீவகாருண்யம் புகலுந் தேசமதில்
சிறுமை யான செயல் புரிவதுமேன் ?
சரியிலை சிந் திப் பீர் ! —கொடும் (வித)
மனைவி மாண் டவுடன் கிழவனாக இருந்
திடினு மோரிளம் பெண் மணமுடிப்பான் !
கணவன் மாண்டபின ரிளமை வாய்ந்திடு நற்பே
ரழகு மகளிர் சுகமே விரும்பி
மணமே புரிந்தால் மறுப்பதுவோ ?—கொடும் (வித)
துயரக் கடலில் நிதம் முழுகும் விதவை கண்ணீரோ
சுகந் தருநம தரியநல் வாழ்வைச்
சுடும் பெரிய கொடிய தொரு தீயே !
இதை இனியு முணரா திருப்பீரோ !
இனல் மதமே யழிய உழைப் பீரே !
இதில் மிகப்படு சோர்விருத்தல் தீதே !
பல-எழிலிள விதவையர் நலம்பெறச் சிவப்பிர
காசன்சொல் புவிதனிலே
பாடியே மறுமணமே
ஓங்கச் செய்திடுவமே ! (வித)

ஸ்வரம்.

நீஸகா மப· கம கம
மாமா பதபப கரிகம பநிதப மகரிச
நிசாகம கம
பாத மாபகரி ஸகரிகாம பம
பநித பாதமப மதபதஸா
ஸ்க்ரிஸ்ா நி—த—ப மப
பநித பாதமப மதப மாகரிஸ
ஸகரி காம பம பதப தஸ்ா
ஸ்க்ரிஸ்ா ரிநிஸ் பதம பாதமப ஸ்ா

ரிஸ்நிதபதா ஸகரிகமபா மகரிஸாநி
ஸாரி கரிகம கம
பதப பதப மப மதப மகரிஸரி மாமா
பத பநிதப மகரிஷ மாமா
பத பநித பநிதபத தாதா
மப மதப மதப மப பாபா
கரி ஸகரி கமப் தப பாபா
தாப மநிதநி ஸ்நிதம ஸ்ாஸ்ா
க்ரி ச்க்ரிக் ஸ்ரிநிச் நிரிஸ்நி தபமப
ஸாநிதா ஸ்நிதபம
நிதம நிதபமப
தாப தபமகம

---

# இந்தியாவிலுள்ள ஜனத்தொகை.

## 1931-வரு ஜன சங்கையின்படி

| | | |
|---|---|---|
| கல்யாணம் ஆகாத பெண்கள் | .... | 5,96,98,043 |
| கல்யாணம் ஆன பெண்கள் | .... | 8,36,07,223 |
| விதவைகள் | .... | 2,62,48,468 |
| கணக்கு விபரம் தெரியாத பெண்கள் | .... | 14,55,121 |
| மொத்தம் | .... | 17,10,08,855 |
| கல்யாணம் ஆகாத ஆண்கள் | .... | 8,63,68,001 |
| கல்யாணம் ஆன ஆண்கள் | .... | 8,42,08,467 |
| மனைவி இழந்தவர்கள் | .... | 96,29,116 |
| கணக்கு விபரம் தெரியாத ஆண்கள் | .... | 16,23,339 |
| மொத்தம் | .... | 18,18,28,923 |

இந்தக் கணக்கு அரசாங்கத்தாரின் ஜனகணிதத்திலுள்ளது. இதைக் கூர்ந்து கவனிக்க வேண்டியதவசியமாகும். 18 கோடி ஆண்மக்களிருக்கின்றனர். பெண்கள் 17 கோடிதா னுள்ளனர். இந்த 17 கோடியில் 2½ கோடிக்கு மேல் விதவைகளாக்கப்பட்டு கழித்து ஒதுக்கப்பட்டுக் கிடக்கின்றனர். இதையும் கழித்தால் பெண்களின் தொகை 14½ கோடிதான் தேறும். இவர்களில் பலர் இரண்டாம் தாரம் மூன்றுந்தாரமென்று கட்டப்பட்டு விடுவதாலும் பெண்கள் கிராக்கி யேற்படுகிறது. சுமார் 18 கோடி ஆண்கட்கு 14 கோடி பெண்களே யிருப்பதால் பெண்ணுக்கு கிராக்கி யேற்படுவதில் அதிசயமில்லை. விதவைகட்கும் கல்யாணம் செய்யும் வழக்கத்தை யேற்படுத்தினால் பெண்கிராக்கி யேற்படாது. இக்கணக்கின் படி கல்யாணத்திற்குப் பெண் கிடைக்காமல் 4 கோடி ஆடவர் டெம்பரரியாகத் திரிய வேண்டியிருக்கிற தென்பது சுத்தமாகத் தெரிகிறது. 2½ கோடி பெண்களும் கட்டாயத்திற்காக சன்யாச வேஷம் போட்டுக்கொண்டிருக்கிற நிலைமையை மாற்றிவிட்டால் ஓரளவு சௌகர்யமுண்டாகு மென்பதில் ஐயமுண்டோ?

---

## விதவையின் குமாரன்.

(ஒரு சிறு கதை.)

ரவி திரும்பினபொழுது சாயந்திர இருட்டானது நாலு பக்கமும் பரவியிருந்தது. வீடோ வெகு தூரத்தில் இருந்தது. அவன் வெகு சீக்கிரமாகப் போக ஆரம்பித்தான். ஆனால், நதியின் கரையில் வந்து திடீரென்று திடுக்கிட்டு நின்றுவிட்டான்........நிழல் போன்றஒன்றுமெல்லமெல்லக்கரையின்படிவழியாகக்கீழேஇறங்கிக் கொண்டிருந்தது. அவனுக்குக் கொஞ்சம் சந்தேகம் உண்டாயிற்று. அவன் சிறிது வேகமாகவே சென்று அதற்குப் பின்னால்போய் நின்றுகொண்டான். அங்கே உள்ளதைப் பார்த்தவுடன் அவனுடைய ஹிருதயம் நடுங்கி விட்டது.

ஒரு ஸ்திரீ ஒரு பச்சைக் குழந்தையை மார்பில் வைத்துக் கொண்டு நின்றுகொண்டிருந்தாள். அவள் அதை நதியில் எறிவ

தற்கு வந்திருப்பதாகத் தெரிந்தது. ரவியால் இந்நிலைமையைப் பொறுக்க முடியவில்லை. அவள்முன் சென்றான். நீயாரென்றும், இந்த இருள் நேரத்தில் இங்கே என்ன செய்துகொண்டிருக்கிறாய் என்றும் அவளைக் கேட்டான்.

ரவியின் வார்த்தைகளைக் கேட்ட அப்பெண் திடுக்கிட்டாள். குழந்தை அவளுடைய மடியிலேயே இருந்தது. அழுதுகொண்டிருந்த அவள், ரவியை உற்று நோக்கினாள். ஏதோ பேச வாயெடுத்தாள். ஆனால், ஒன்றுமில்லையென்று சொன்னாள் அவள். ரவி திருப்தியடையவில்லை. மறுபடியும் அவளிடத்தில் "விஷயத்தைச்சொல்லு. பயப்படாதே! நான் உனக்கு ஒருவித தீங்கும் செய்யமாட்டேன்"னென்று அபயமளித்துக் கூறினான்.

அவள் பேசவில்லை. மேலும் அழுதுகொண்டே இருந்தாள். ரவியோ எல்லாவற்றையும் ஊகித்து அறிந்துகொண்டான். இருந்தாலும் அவளுடைய கதையை அவளுடைய வாயிலாகவே கேட்க வேண்டுமென்பது அவன் ஆசை.

ரவி மேலும் மேலும் கேட்டதின் பயனாக அவள் பால்ய விதவையென்றும், ஒரு வாலிபனின் ஆசையில் அகப்பட்டுக் கொண்டு கெட்ட வழியில் இறங்கிவிட்டதாகவும் மாத்திரமே அவளால் சொல்ல முடிந்தது.

"நல்லது, நான் தெரிந்துகொண்டேன். இந்தக் குழந்தையை நீ நதியில் எறிவதற்கு வந்திருக்கிறாய் அல்லவா? என்றான் ரவி.

இப்பொழுது அவளுடைய வெட்கம் ஒழிந்துவிட்டது. "ஆமாம், சமூகத்தின் கொடுமையிலிருந்தும், உலகப் பழியிலிருந்தும்தப்புவதற்காக நான் இந்தப் பாபத்தைச் செய்யத் துணிந்தேன். ஆனால், நான் குழப்பமான நிலையில் இருந்துகொண்டிருக்கிறேன். இந்த அபாக்கியக் குழந்தையைப் பிழைக்கும்படி செய்தாலோ, சமூகம் பிழைக்க விடாது. கொன்றாலோ சர்க்காரின் தண்டனைக்கு உட்பட வேண்டும். நான் என்ன செய்வது" என்றுஅவள் துக்கக் குரலில் கேட்டாள். அவள் கண்களில் நீர் பெருகி வழிந்தது.

ரவி யோசிக்க ஆரம்பித்தான். நாலு பக்கமும் நிசப்தம் குடிகொண்டிருந்தது. நதியிலுள்ள தெளிந்த நீரின் கலகலவென்ற

சப்தத்தோடு அந்தத் துர்ப்பாக்கியப் பெண்ணின் அழுகையும் கல ந்து விட்டது. அதனுல் அது யாருடைய காதிலும் விழவில்லே.

கொஞ்ச நேரமாயிற்று. "சகோதரி! நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன். நீ செய்யத் தயாரா?" என்று கேட்டான் ரவி.

அந்த ஸ்திரீ ஆச்சரியமடைந்தவளாய் ரவியின் பக்கமாகத் திரும்பினுள். அவளுடைய துக்கம் நிறைந்த பார்வையானது "நீ யாரைச் சகோதரியென்று சொல்லுகிருு"யென்று கேட்பதுபோல் இருந்தது?

ரவி அவளுடைய பதிலே எதிர்பார்க்காமலே 'தெரிந்தோ தெரியாமலோ நீ பாபம் செய்துவிட்டாய்! அதைப்பற்றிப் யோசிப்பது வீணுனது. ஆனுல் அந்தப் பாபத்தின் தண்டனேயை இந்தக் குற்ற மற்ற குழந்தை ஏன் அனுபவிக்க வேண்டுமென்பதுதான் இப்பொழுது யோசிக்கவேண்டிய விஷயம்" என்ருன் அவன்.

"சமூகத்தை ஏமாற்றுவதற்காகவே இந்தப் பாபத்தை செய்ய வேண்டியிருக்கிறது"என்று மாத்திரம் அந்த ஸ்திரீயால் சொல்ல முடிந்தது.

"இப்பேர்ப்பட்ட வேலேயைச்செய்யும்பொழுது தாயாரின் ஹிருதயம் அழுதுகொண்டிருக்காதா" என்று கேட்டான் ரவி.

"தாயாரின் ஹிருதயமா, அதற்கு என்ன பதிலே நான் கூறுவேன். தாயாராக ஆனதற்காகவே இது செய்யப்படுகிறதென்று" அவள் சொன்னுள்.

ரவி நடுங்கிவிட்டான். "அப்படியானுல் ஒரு வேலே செய். இந்தக் குழந்தையை என்னிடத்தில் ஒப்பித்துவிடு. உன்னுடைய வேலேயும் முடிந்துவிடும். மேலும் குழந்தையினுடைய கொலேயின் பாபத்திலிருந்து நீ தப்பித்துவிடுவாய்".

ரவியினுடைய இந்த வார்த்தையைக் கேட்டு அவள் கொஞ்ச நேரம் யோசித்தாள். தன்னேயறியாமல் அவள் கதறினுள். ஏன்? தாயின் அன்பால் அன்று. ஆனுல் தன்னுடைய பாபம் இவ்வளவு சுலபமாக விலகுவதைக்கண்டு அவளுடைய ஹிருதயமானது வருந்தியது. ரவி வேருென்றும் யோசிக்கவில்லே. அந்தக் குழந்தையை அப்படியே தூக்கிக்கொண்டு இருட்டிற்குள் மறைந்துவிட்டான். அவனேக் காணவே முடியவில்லே.

(2)

அந்த சம்பவம் நடந்த ஐந்து வருஷத்திற்கு பின். ரவி ஒருநாள் தன் தாயினிடத்தில் சதாப்தியான உத்ஸவத்திற்காக லாகூருக்கு போகப்போவதாகவும் நீயும் வருகிறாயா என்றும் கேட்டான்.

"நான் ஹரித்வாரம் போவதாக இருக்கிறேன். நீ உன் மனைவியையும் சோமுவையும் கூட்டிக்கொண்டு போய்வா" என்று சொன்னாள் ரவியின் தாய்.

ரவி தாயின் வார்த்தையை மறுக்கவில்லை. லாகூருக்கு இவர்கள் புறப்பட்டார்கள். ஒருநாள் அவர்கள் லாரன்ஸ் கார்டனில் உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். சாயங்கால நேரமாக இருந்தது. எங்கும் ஒரே இரைச்சல், பையன்கள் விளையாட்டு, வாலிபர்கள் வம்பளப்பு, வாலிபப் பெண்களின் பேச்சுகள், காதலர்களின் விளையாட்டு இவ்வளவும் சேர்ந்து பெருஞ்சப்தமாக இருந்தது அங்கே.

மூலையில் சில விளையாட்டுக்காரர்கள் சீட்டு முதலியவை ஆடிக்கொண்டிருந்தார்கள். மற்றொரு பக்கத்தில் வயது சென்ற சிலர் சமூகத்தைப் பற்றியும் மதத்தைப் பற்றியும் விவாதம் செய்துகொண்டிருந்தார்கள். சிலபேர்களுக்கு காந்திஜி தேசத்தைக் காப்பாற்றக்கூடியவராகவும் சிலபேருக்கு அவர் விரோதியாகவும் இருந்தார். "ஆரிய சமூகமானது தன்னுடைய மூன்று யுகங்களையும் கழித்துவிட்டு நாலாவது யுகத்தில் பிரவேசித்தவுடன் நியமத்தின் பிரகாரம் அதன் புத்தியானது கெட்டுப்போய்விட்டது" என்ற அபிப்பிராயம்கூட அங்கே வெகு தீவிரமாக தெரியப்படுத்தப்பட்டது. ஆனால் அந்த விவாதங்களெல்லாம் ஒரு சிறு கூட்டத்தாரிடம்தான் காணப்பட்டது.

ரவி தன் மனைவியுடன் அந்தத் தோட்டத்தில் ஒரு பெஞ்சியின் மேல் உட்கார்ந்துகொண்டு சம்பாஷணை செய்துகொண்டிருந்தான். சோமு விளையாடிக்கொண்டே வெகுதூரத்தில் நின்றான்.

திடீரென்று அவர்களின் கவனத்தில் மாறுதல் ஏற்பட்டது.

'கேட்கவில்லையா, சோமு கத்திக்கொண்டிருக்கிறானே' என்று லக்ஷ்மி பதட்டத்தோடு கூறினாள்.

ரவி திடுக்கிட்டான். "ஆமாம் அழுதுகொண்டல்லவோ வருகிறுன்" என்ருன் அவன். ரவி ஓட்டமாக அங்கு சென்ருன். சோமு ஒரு சைக்கிளில் மோதிக் கீழே விழுந்ததாகவும் அவன் வலி பொறுக்காமல் அழுதுகொண்டிருந்ததாகவும் ஒரு ஸ்திரீ அவனை எடுத்துச் சும்மாயிருக்கும்படி செய்ய முயற்சிப்பதையும் கண்டான் ரவி.

பையனின் தலையில் காயம் பட்டிருந்தது.

ரவி ஓடிப்போய் அவனைத் தன் மடியில் எடுத்துவைத்துக்கொண்டான். ஸ்திரீ திடுக்கிட்டாள். தங்களுடைய குழந்தையா என்று வியப்போடு அவள் கேட்டாள்.

இதற்குள் இரண்டு மனிதர்கள் அங்கே வந்தனர். பார்வையில் அவர்கள் நல்ல மனிதர்களாகத் தோன்றவில்லை. அவர்களில் ஒருவன் சிரித்துக்கொண்டு "புறப்படு மோஹினி, நேரம் ஆகிறது" என்ருன்.

மோஹினியினுடைய பெயரைக் கேட்டு ரவி திடுக்கிட்டான். லாகூரிலுள்ள பிரபலமான நாட்டிய மோஹினியின் ஞாபகம் அவனுக்கு வந்தது.

இரண்டு மனிதர்களும் புன்சிரிப்புச் சிரித்துக் கொண்டு போய் விட்டார்கள். மோஹினி அங்கேயே நின்று கொண்டிருந்தாள். ரவிக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவனுக்குப் பழைய விஷயங்கள் சில ஞாபகத்திற்கு வந்தன. மோஹினி ரவியின் அருகில் வந்தாள். அவனுக்கு முன்னல் நின்றுகொண்டாள். அவளுடைய கண்களில் கண்ணீர் நிரம்பியிருந்தது. தாங்கள் என்னைத் தெரிந்துகொண்டீர்களா என்று கேட்டாள் அவள். ரவி சிறிது திடுக்கிட்டு "நான் உங்களைத் தெரிந்து கொள்ளவில்லை" என்று இழுத்துக்கொண்டே கூறினுன்.

"இல்லை! முற்றிலும் இல்லை!! ஞாபகப்படுத்திப் பாருங்கள். ஒருநாள் நதியின் கரையில் நீங்கள்........."

மோஹினியினுடைய இந்த வார்த்தையைக்கேட்டு ரவிக்கு அந்த தினம் நதியின் கரையில் நடந்தசம்பவம் திடீரென்று நினைவுக்குவந்து

விட்டது. "ஆமாம் இப்பொழுது தெரிந்துகொண்டேன்" என்றான். மோஹினியின் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் ஓடிக்கொண்டேயிருந்தது. ரவியால் ஒன்றும் சொல்லமுடியவில்லை. "ஹா! சோமுவின் தாயார்?" என்று பேராச்சரியத்துடன் கேட்டான் அவன்.

'நான் உன்னை ஸஹோதரன் என்று அழைக்க முடியாது. என்னை மன்னிக்கவேண்டும். ஒரு வேலைமாத்திரம் எனக்கு நீசெய்யவேண்டும். என்னுடைய கயிறு தயாராகும் வரை நீ சோமுவை என்மடியில் கொடுத்துவிடு. நான் ஒருதடவை அவனை முத்தமிட்டு விட்டுப் போய்விடுகிறேன், மறுபடியும் திரும்பிவர மாட்டேன் நீ இதைச் செய்வாயா?' என்றாள் அவள்.

ரவி புத்தி ஸ்வாதீனம் இல்லாதவன் போல் நின்றான் "இல்லை, அவ்விதம் செய்யமுடியாது. நீ போய்விடு. சோமனுக்கும் உனக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை" என்று சொன்னான்.

அவனுடைய கண்களிலிருந்து வெறுப்பும் கோபமும் வெளிப்பட்டுக் கொண்டிருந்தன.

மோஹினி மண்டியிட்டுக் கெஞ்சினாள். ஆனால் ரவியின் மனம் இளகவில்லை. ஆனால் இதுவரை பொம்மைமாதிரி நின்று அழுது கொண்டிருந்த லக்ஷ்மி மெதுவாக முன்னால் வந்தாள். சோமுவை மோகினியினுடைய மடியில் வைத்து, ஒரு தடவை இல்லை, ஆயிரம் தடவை முத்தமிட அனுமதித்தாள். "இவன் உனக்கு சொந்தமானவன். மேலும் உன்னுடையவனாகவேயிருப்பான்," என்று கூறினாள் லட்சுமி.

மோஹினி பைத்தியம் பிடித்துப் போய் சோமுவை மடியில் வைத்துகொண்டு கட்டிக்கொண்டாள். ஆனால் அவள் ஒருதடவை கூட அவனை முத்தமிடவில்லை. பாவம்! ஒருவன்—நேரமாகிவிட்டதென்று அவளைக் கூப்பிட்டுவிட்டான்.

அவள் அதேமாதிரி சோமுவை லக்ஷ்மியினுடைய மடியில் கொடுத்துவிட்டுப் பரிதாபகரமான தோற்றத்தோடு சென்றாள். யாரோ அவளை பலாத்காரமாக இழுத்துக்கொண்டு போவதாகத் தெரிந்தது.

லக்ஷ்மி ரவியோடும் ரவி லக்ஷ்மியோடும் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

மறுநாள் காலையில் ரவி ஆச்சரியத்தோடு ட்ரிப்யூன் பத்திரிகையைப் படித்துக்கொண்டிருந்தான். நேற்று இரவு உலகப்பிரசித்தி பெற்ற நாட்டியக்காரியான மோஹினி மச்சிலிருந்து தொங்கித் தற்கொலை செய்துகொண்டு விட்டாள் என்றும் காரணம் ஒன்றும் தெரியவில்லை என்றும் அதில் காணப்பட்டது. ரவி அதைப் படித்து முடித்ததும் பைத்தியம் பிடித்ததுபோல நின்றான். சமூகம் செய்யும் கொடுமையைவிடத்தான் செய்த கொடுமை அதிகமானது என்று அவன் திடுக்கிட்டான். "குழந்தையை நான் காப்பாற்றியதே மோஹினியின் கொலைக்குக் காரணம்" என்று அவன் சொன்னபொழுது அவன் கண்களிலிருந்து நீர்வடிந்தது.

---

## சற்றுக் கவனியுங்கள்!

(தனுஷ்கோடி).

ராஜம் வைசிய குலத்தைச் சேர்ந்த பெண். தற்போது வயது 15. பள்ளியில் வாசித்துக்கொண்டிருக்கும்போதே அதாவது 10 வயதிலேயே கல்யாணம் நடந்துவிட்டது. ராஜத்திற்கு 12 வயதானவுடன் இனி பள்ளிக்கூடம் செல்லக்கூடாதென்று தகப்பனார் நிறுத்திவிட்டார். அப்போது அங்கு தோன்றிய "சூறுவளி"க் காற்றால் (காலராவால்) ராஜத்தின் கணவன் அடித்துக்கொண்டு போகப்பட்டார். ராஜத்திற்கு "விதவை" என்ற பட்டத்தைச் சூட்டினார்கள். மூக்குத்திருகு முதல் மாங்கல்யம் வரையுள்ள சகல பொருள்களும் தகப்பனாரால் பறிக்கப்பட்டன. சமையல் செய்து தாய் தந்தையர்களுக்குப் போட்டு மிகுதியுள்ளவைகளில் சிறிது தானும் உண்டு இருப்பதுதான் ராஜத்தின்வேலை.

பாலாமணி அம்மாள் என்பவர் அவ்வூருக்கே மிகவும் கண்ணியம் வாய்ந்தவரும், சிறிது ஆஸ்தியுடையவரும் ஆவார். அவர் தனது 45வது வயதில் விதவையானார். அவருக்கு ஒரே ஒரு மகன் மட்டும்

இருந்தான். நல்ல செல்வமாக வளர்த்து வந்தார். மேலும் நல்ல கல்வியும் போதித்தார். தற்போது கண்ணன் 22-வயதுடையவ ராகவும், நல்ல கல்வியறிவும், சமூக சீர்திருத்தத்தில் மிகவும் பற்றுள் ளவராகவும், நல்ல திடகாத்திரமும், பார்வைக்கு மிகவும் அழகாக வும், இனிமையாகப் பேசும் திறமையும் ஒருங்கே அமையப்பெற்று திலகமாய் விளங்கினர்.

ஆகையால் அவர் தன் தாயின் மூலம், "விதவைகள் ஆசிர மம்" என்று ஓர் ஆசிரமம் ஏற்படுத்தி, அதை வெகு திறமையாக நடத்திவரச் செய்தார். அந்த ஆசிரமத்திற்கு பல பத்திரிகைகளும் வருகின்றன. அங்கு பல ஸ்திரீகள் வந்து வாசித்துவிட்டு போவது வழக்கம். அங்கு நமது ராஜமும் அடிக்கடி சென்று வாசித்து வரு வது வழக்கம். இதன் காரணமாக 'நாமும் ஏன் மறுமணம் செய்து கொண்டு சுகமாக இருக்கக்கூடாது' என்ற முடிவிற்கு ராஜம் வந்துவிட்டாள். ஆசிரமத்திற்குச் செல்லும் வழியில் பாலாமணி அம் மாள் வீடு இருக்கிறதாகையால், அடிக்கடி ராஜம் அங்கு செல்வது வழக்கம். பாலாமணி அம்மாளுக்கு ராஜத்தைக் கண்டால் வெகு பிரீதி. ஆகையால், அடிக்கடி தன்னை வந்து பார்த்துப் போகும்படி கூறியிருந்தாள். ராஜம் அங்கு செல்லும்பொழுது அடிக்கடி கண் ணனை சந்திப்பது உண்டு. அப்பொழுது அவர்களை யறியாமலே இருவருக்கும் ஓர் உணர்ச்சி ஏற்பட்டுவிட்டது. ஆனால் 'அதன் காரணம் இருவருக்குமே விளங்குவதில்லை. சிறிது நாட்களில் அவர் கள் சகஜமாக அடிக்கடி பேச ஆரம்பித்துவிட்டார்கள். அது நாள டைவில் காதலாக மாறிவிட்டதென்பதைக் கூறவும் வேண்டுமோ?

இது விஷயம் பாலாமணிக்குத் தெரிந்ததும் உடனே ராஜத் தின் தந்தையினிடம் சென்று ராஜத்தைத் தன் மகனுக்கு விவாகம் செய்து வைக்கும்படி மிகவும் மன்றாடிக் கேட்டாள். ஆனால் வைதீகப் பித்துக்கொண்ட வேலாயுதம் அம்மாதிரி செய்ய முடியா தென்று உறுதியாகக் கூறிவிட்டார். பின் ராஜம் ஆசிரமத்திற்குச் செல்வதையும் அடியோடு நிறுத்திவிட்டார். வீட்டைவிட்டு வெளி யில் செல்லக்கூடாதென தடையுத்திரவும் பிறப்பித்துவிட்டார். பாவம்! என்ன செய்வாள் ராஜம். காதலன் முகத்தைக்கூட பார்க்க முடியாமல் போய்விட்டது. ஆனால் கண்ணன் காதலியின்

முகத்தைப் காணுமல் இருக்க முடியவில்லை. ரகசியமாக தினம் இருவரும் சந்தித்து வந்தனர். இதை யெப்படியோ தெரிந்து கொண்ட வேலாயுதம் ஒருநாள் ராஜத்தினிடம்வந்து, கண்ணனை தன் ஆட்களைக் கொண்டு அடித்துக் கொன்றுவிட்டதாகவும், அவன் பிரேதத்தை ஆற்றில் எறிந்துவிட்டதாகவும் கூறினுர்.

பேதை ராஜம் யாதறிவாள்? தந்தை கூறியதை வேதவாக்காக நம்பினுள். காதலனைக் கொன்று விட்டதற்காக தந்தையை வைதாள். சபித்தாள், அழுதாள், கதறினுள், துடித்தாள், மனம் நொந்தாள். இனி என்ன செய்வது? தனக்கு ஆதரவாய் இருந்த காதலனை இழந்தாள். இனி என்ன செய்வாள்? சாப்பிடவுமில்லை. மாலைவரை துக்கசாகரத்திலேயே ஆழ்ந்திருந்தாள். தானும் அதே ஆற்றில் விழுந்து இறப்பதே மேல் என்று தீர்மானித்தாள். அதைவிட வேறு வழி அவளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அந்த அபலை ராஜம் தன் முடிவை எதிர் நோக்கி நடந்தாள்.

வேலாயுதம் ராஜத்தினிடம் கூறிவிட்டுச் சென்றவுடன் இனி அந்தப்பயலும் இங்குவாராமலிருக்க வழிதேடவேண்டுமென்று நினைத்து கண்ணனுக்கு ஒருகடிதம் எழுதி அதை ஒரு வேலையாளிடம் கொடுத்துக் கண்ணனிடம் சேர்ப்பிக்கும்படி செய்தார்.

கண்ணன் வேலையாள்கொடுத்த கடிதத்தைப் பிரித்துவாசிக்கத் தொடங்கினுன். அதில் கீழ்வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

மிஸ்டர் கண்ணன் அவர்களுக்கு எழுதியது என்னவென்றுல், இப்பவும் உன்தாயாரும், நீரும் இவ்வூருக்கே என்றும் மாரு இழிச் சொல் வாங்கிவைத்தீர்கள். விதவைகள் ஆசிரமம் என்று உங்களை யார் ஏற்படுத்தச் சொன்னது? விதவைகளை யெல்லாம் கெடுப்பதற்காக இவ்வாறு செய்கிறீர்கள் என்று எனக்கு நன்ருய்த் தெரியும். உங்களால் தான் என் அருமையான ஒரே ஒரு மகளை இழக்கும்படி நேரிட்டது. நேற்றிரவே அவள் இறந்திருப்பாள். என்னுடைய ஒரே யொரு மகளை இழக்கக் காரணமாயிருந்த உங்களை பழிக்குபழி வாங்கவேண்டுமென்று தோன்றுகிறது. ஆனுல் நீங்கள் இன்னும் ஒருவாரத்திற்குள்ளாக உங்கள் ஆசிரமத்தைத்தூக்கிக் கொண்டு ஊரைவிட்டு ஓடிவிட வேண்டும். இல்லாவிடில் முன் சொன்னபடி

பழிக்குப்பழி வாங்காமல் விடமாட்டேன். ஆகையால் சீக்கிரம் ஊரைவிட்டு ஓடத்தயாராகுங்கள்.

இப்படிக்கு
கடைசிமுறையாக எச்சரிக்கும்
வேலாயுதம் செட்டி

கடிதத்தைப் பார்த்த கண்ணனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. மனதில் பற்பல யோசனைகள் மாறி மாறிச் சூழ்ந்தன. நேற்று சாயங்காலம் என்னிடம் பேசிய ராஜம் அதற்குள்ளாகவா இறப்பாள்? இருக்கட்டும் எதற்கும் இன்று வழக்கம்போல் அங்கு சென்று பார்ப்போம் என்று தீர்மானித்தவனாய் அன்றையப்பொழுதைப் போக்கினான். அன்று மாலை 7 மணிக்கு தாங்கள் சந்திக்கும் இடத்திற்கு சென்றான். இரவு மணி 10 வரையில் ஒருவரும் வரவேயில்லை என்ன செய்வான். சரி, வேலாயுதம் எழுதிய கடிதம் உண்மை என்று புலப்பட்டது. உடனே எழுந்தான்! நடந்தான் வெகு வேகமாக.

ஃ ஃ ஃ

அமாவாசை; நள்ளிரவு. மணியோ சுமார் 11 இருக்கலாம். ஆகாயத்தில் மேகங்கள் சஞ்சரித்துக்கொண்டிருந்தன. சிறுசிறு தூறலாக மழையும் தூறிக்கொண்டிருந்தது. இடியும் மின்னலும் மனதையும் கண்ணையும் பறிக்கின்றன. காற்று வேகமாக வீசுகின்றது. காற்றின் வேகத்தில் மரங்கள் ஒன்றோடொன்று மோதி சளசளவென்ற பயங்கர சப்தத்தை உண்டாக்குகின்றன. நகரின் வீடுகளும் கடைகளும் அடைபட்டுக்கிடந்தன. முனிசிபல் விளக்குகள் மட்டும் மூலைக்கொன்று மின்மினிப் பூச்சிபோல் மின்னிக்கொண்டிருந்தன. எவ்வளவு தைரியசாலியான வீரனும் அந்நேரம் வெளியில் வர அஞ்சுவானென்றால், அச்சமயமிருந்த பயங்கரத்தை விரிவாகக் கூறவேண்டியதில்லை. இப்படி யிருக்கையில் சிறிதும் அச்சமின்றி நகரின் வடக்கே செல்லும் ஓர் தனிமையான பாதையில் ஓர் இளம்பெண் வெகு விரைவாக சென்றுகொண்டிருந்தாள். அவள் மனமோ மிகவும் சஞ்சலப்பட்டுக்கொண்டிருந்தது. அப்படியிருந்தும், மழையையும் காற்றையும் சிறிதும் லக்ஷியம் செய்யாமல் நடந்துகொண்டேயிருந்தாள். சிறிது தூரம் சென்றதும்

ஆற்றங்கரை சேர்ந்தாள். ஆற்றில் மெதுவாக தண்ணீர் சென்று கொண்டிருந்தது. அவள் ஆற்றைப் பார்த்து தேம்பித்தேம்பி அழுகிறாள். "ஏ ஹிந்து சமூகமே! இப்படியா என் கதி முடியவேண்டும் பாவி! நான் ஏன் இப் பூவுலகில் பிறந்தேன். நான் பிறந்தும் என்ன பயன்! கணவனை இழந்த நான் இருந்தென்ன? இறந்தென்ன? கணவனை இழந்துவிட்டால் வேறு விவாகம் செய்து கொள்ளக்கூடாதா? பாழும் சமூகக் கொடுமை! ஆண்கள் எத்தனை முறையேனும் விவாகம் செய்துகொள்ளலாம் பெண்கள் மாத்திரம் செய்துகொள்ளக்கூடாதா? இது என்ன? ஆணுக்கொரு நீதி பெண்ணுக்கொரு நீதியா? அது எப்படியிருப்பினும் சரி! என் காதலனும் என்னை கைவிட்டார். இனி நான்மாத்திரம் இருந்து என்னபயன்! இதோ நானும் இவ்வாற்றில் குதித்து உயிர் விடுகிறேன். ஆனால் ஏ! ஹிந்துசமூகமே! உன்னை நான் ஒன்று வேண்டிக் கொள்கிறேன். அதாவது இன்னும் இச் சமூக மூடப் பழக்க வழக்கங்களை ஒழித்து மக்களை ஈடேரச் செய்வாயாக" என்று கூறிக் கொண்டே ஆற்றில் குதித்துவிட்டாள். அனாதையாக விழுந்த அவளை அந்நேரத்தில் யார் காப்பாற்றப்போகிறார்கள்?

ஃ ஃ ஃ

ராஜம் ஆற்றில் குதித்த சிறிது நேரத்தில் அவ்வூரின் மேற்கே செல்லும் பாதையில் ஓர் வாலிபன் வெகு விரைவாகச் சென்று கொண்டிருந்தான். சிறிது நேரத்தில் அதே ஆற்றின் சிறிது தூரத்தில் உள்ள ஒரு பாலத்தின் அருகாமையில் வந்துசேர்ந்தான். அவன் மனம் பட்டபாட்டை யாரால் அறியமுடியும். காதலியை இழந்த துக்கத்தை எப்படி அவனால் சகிக்கமுடியும். சட்டென பாலத்திலிருந்து எட்டி ஆற்றில் குதித்தான்? நள்ளிரவில் ஆற்றில் விழுந்த இருவரையும் யார் காப்பாற்றப்போகிறார்கள்?

---

**கருணை உள்ள இடத்தில் — — — விதவை இல்லை.**

# விதவையர் துயரை விலக்க முன் வாருங்கள்

(எஸ். சோக்கநாதபுரம் சி. சோம. கண்ணப்பா எழுதுவது)

அன்பார்ந்த சகோதரர்களே! நமது மானிடப் பிறவியில் நேர் பாதியான பெண்மக்களை மிகவும் கேவலமாக நினைத்து அன்னார்களை அடிமைப்படுத்தி வைத்திருப்பது போதாதென அவர்களில் கணவனை இழந்த காரிகையைப் படுத்திவைக்கும் தொல்லை ஒரு விதத்தி லில்லை. பகுத்தறிவுள்ள எவரும் இச்செயலை ஒப்புக்கொள்ளார். உலகில் கணவனிழந்தாரை விதவையென ஒதுக்குதல் இந்தியா நாட்டி லல்லாது வேறு எந்த நாட்டிலு மிருப்பதாகத் தெரியவில்லை. நடுநிலைமையுள்ளார் எவரும் இச்செயலை கண்டியாமலிரார். ஒரு பெண் தக்க பருவம் எய்து முன்னரே பணத்திற்காக ஆசைப்பட்டு கிழமானாலும் சரி, நமக்குப் பணம் வந்தால் போதுமென நினைத்துத் தன் பிள்ளையைப் பாழுங்கிணற்றில் தள்ளியதற் கொப்ப கிழட்டுப் பிணத்திற்கு மணமுடித்து விடுகிறார்கள். பெண் என்செய்யும்? பாவம்! தக்க பருவம் வந்தபின் செய்தாலன்றோ கிழக்கிணற்றில் என்னைத் தள்ளவேண்டாமென இயம்புதல் கூடும். சிற்றாடை கட்டதெரியாத போழ்து பொற்றாலி விலங்கிட்டில் என் செய்வர்? அந்தோ பரிதாபம்! கணவனிறந்து விடின் இன்னாரின் நிலமை சொல்லுந்தரமன்று. பொற்றாலியையும் பறித்து வெண்மைச் சேலையைக் கொடுத்து அன்று பிணத்தினருகிலும் மூட்டிக் கொண்டு அழச்செய்கிறார்கள் அத்துடன் நின்றதா? இல்லை! இல்லை!! இல்லை!!! அன்னார் துயர் மண்ணின்று விண்ணேகும் வரையிலும் மாயாதிருக்கிறது, அந்தோ பரிதாபம்! அவர்கள் புஷ்ப முடித்தல் கூடாதாம், பொட்டுவைத்தல் கூடாதாம், மஞ்சள் பூசக்கூடாதாம், இதுபோன்ற கொடிய நிர்ப்பந்தங்கள் நாட்டில் உலாவி வருகின்றன. கணவனிறந்த மூன்று வருடம் வரை வெளிக்கிளம்ப லாகாதெனவுங் கடுங்காவல் விதித்திருக்கின்றனர். அம்மட்டோடு நின்றுவிடவில்லை, மாமியாள்காரி தன் வசைமொழிகளை யெல்லாம் மருமகளிடம்பிரயோகித்துவிடுகின்றாள். நாயே, பேயே, யென்றும் தோசி, என் மகனை விழுங்கி விட்டாயே என்றும் பலவாறு நிந்திக்கிறார்கள். நாத்தியோவெ

னில் நாவில் தீ சுட்டது போன்று அவள் வசைமொழி இருக்கிறது. விதவைகளைக் கண்டால் சகுனத்தடையாம். ஆனால் மனைவியை யிழந்த புருடனைக் கண்டால் சகுனத்தடை இல்லையாம். ஏனெனில், அவன் மீண்டும் திருமணம் செய்யலாமென்ற வழக்கமிருக்கிறப்படி யால் போலும்! ஆணுக்கொரு நீதி பெண்ணுக்கொரு நீதி யெனச் செய்வது, கருப்பனுக்கு ஒரு சட்டம், வெள்ளையனுக்கொரு சட்டம் செய்தல் போன்றிருக்கின்றது. நமது நாட்டில் மனைவியை இழந்த புருடன் விவாகம் செய்துகொள்ளலாமாம். ஆனால், புருடனை இழந்த பூவையர்கள் மறுமணம் செய்தல்கூடாதாம். என்னே நமது நாட்டின் விபரீதப் போக்கு! சகோதரர்களே! இனியும் வாளாதிராது மனைவியைஇழந்தோர் இன்றே மறுமணம் செய்ய முன்வாருங்கள். பெண்கள் அழுங் கண்ணீர் பெரும்பாறையையும் தகர்க்குமென்பதைச் சிந்தியுங்கள்.

---

# பத்திராதிபர் குறிப்புகள்.

## கலப்பு விவாக மசோதா.

ஹிந்துக்கள் ஒரே மதத்தினராக இருந்தும் கல்யாண உரிமை ஒருபடித்தாக இல்லை யென்பதும் பலவிதத்திலும் ஒற்றுமை யடைந்த இருவர் கல்யாணம் செய்துகொண்டால் சட்டத்தின் ஆதரவு கிடைக்காமற் போவது மிகவும் பரிதாபகரமான விஷயமாக இருக்கிறது. மதம் ஒன்றானாலும் ஜாதி பேதம் எண்ணற்று நிற்பதால் ஒரு ஜாதியார் மற்றொரு ஜாதியில் மணம் புரிந்தால் சட்டப்படியான விவாகமாவதற்கில்லை. இக்குறையை நிவர்த்திப்பதற்காகப் பலமுறை மசோதாக்கள் கொண்டுவரப்பட்டும் பயனேற்படவில்லை. ஆனால் ஆரிய சமாஜிகளுக்குள் கலப்பு மணம் செல்லுபடியாகுமென்பதாகக் கொண்டுவரப்பட்ட மசோதா சட்டமாக்கப்பட்டிருப்பது ஒருவாறு மகிழ்ச்சியடையத்தக்கதாகும். ஜாதிமத பேதமின்றி ஆரிய சமாஜியாகலாம். சேர்ந்த பிறகு ஜாதிமத வேற்றுமையும் அங்கே கிடையா. அவர்கள்

செய்துகொள்ளுங் கலியாணத்திலும் ஜாதிக்கலப்பாக இருக்குமானல் சட்டப்படியான உரிமை கிடைக்க முடியாமலிருந்த தடை நீங்கிவிட்டது ஒருவாறு மகிழ்ச்சிக்குரியதாகும்.

## மோடியின் குறுக்கு.

சர். எச். பி. மோடி என்பவர் ஒரு முதலாளி வர்க்கத்தைச் சேர்ந்தவர். தொழிலாளிகளைப் பாதாளத்தில் தள்ளி முதலாளி வர்க்கத்தை சிம்மாசனத்தில் வைக்க விரும்புபவர். இப்போது பெண்கள் மேல் பாய்ந்திருக்கிறார். அவர் அருளியிருக்கிற திருவாக்கு வருமாறு:—

"இதுவரையில் ஆண்களின் ஆதிக்கத்திலிருந்து வந்த எல்லாத் துறைகளையும் சிறுகச் சிறுக நவ நாகரீகப் பெண்கள் கைப்பற்றி வருகின்றனர். பரம்பரையாக ஆண்களே தனியாக்ஷி புரிந்துவந்த இலாக்காக்களைக்கூட பெண்கள் தீவிரமாகப் படையெடுத்து வருகின்றனர். இனி ஆண்களுக்கெல்லாம் பாதிரித்தொழில் சவப்பெட்டி வேலை ஆகியவற்றைத் தவிர வேறு தொழில் கிட்டாது. அவர்களைத் தடுத்து மடக்குவதற்கு வேறு வழி காணுமல் அஞ்சுகிறேன்."

பெண் தலை தூக்குவதைக் கண்டு அலறுகிற மோடி, இதுவரை ஆண்கட்குக் கீழே மடங்கிக் கிடந்து நசுங்கும் பெண்கள் எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பார்களென்பதை யோசிக்கவில்லை. பெண்களை மடக்குவதற்கு வழி தெரியாத மோடியின் வகையரு ஆசாமிகள் தாங்கள் வெகு சீக்கிரம் மடங்கிவிடுவார்களென்பதில் சந்தேகமில்லை. இந்த மோடி பின் வருமாறு பேசுகிறார்:—

"அமெரிக்காவில் மாத்திரம் 110 லக்ஷத்துக்குக் குறையாத பெண்கள் உத்தியோகத்திலிருக்கிறார்களாம். இதன் பயனாய் எத்தனை வேலை செய்ய சக்தியுள்ள ஆண்கள் வேலையற்றிருப்பார்கள் என்பதை நினைக்கும்போது கஷ்டமாயிருக்கிறது."

அமெரிக்காவை நினைக்கும்போது கஷ்டமாக இருக்கிறதாம். வேலையுமில்லாமல் கூலியுமில்லாமல் தவிக்கும் கோடிக்கணக்கான பெண்களும் கோடிக்கணக்கான ஆதாவற்ற விதவைகளும் நம் நாட்டில் ஆண் மக்களின் அநீதியை நினைத்து வடிக்கும் கண்ணீர் கங்கையாற்றினும் பெரிதன்றோ? முதலை ஆளை விழுங்கிவிட்டுக்

கண்ணீர் வடிக்குமாம். அம்மாதிரி மோடி அழும் அழுகை யாருக்குத் தேவை?

## சோவியத் வாழ்க!

சமதர்ம ரஷ்யா தேசத்திலிருந்து பின் வரும் செய்தி கிடைத்திருக்கிறது.

"தேர்ச்சி பெற்ற இருபது லட்சம் ரஷ்யப் பெண்கள் யுத்த காலத்தில் ஆண்களுக்கு பதிலாக தொழில் சாலைகளிலும் வயல்களிலும் வேலை செய்யத் தயாராக இருக்கிறார்கள். அவசியமானால் ஆகாய விமானங்களி லிருந்துகொண்டும் தரையில் ஆயுதந்தாங்கிப் போர் செய்யவும் தயார்."

இச் செய்தி எவ்வளவு உணர்ச்சி பொருந்தியிருக்கிறது? பெண்ணுக்கு பலமில்லையா? சக்தியில்லையா? கட்டை அவிழ்த்து விட்டாடல்லவா தெரியும்! விலங்கையும் மாட்டி வைத்துக் கொண்டு "மட்டம்" என்று கதை கட்டும் வைதீகர்கட்கு இச் செய்தியை சமர்ப்பிக்கிறோம்! மோடியின் மூளை இதையும் கேட்டு கிறுக்கு ஆகட்டும்.

---

## :: நிகழ்ச்சிகள். ::

### மாதர் மறுமண சகாய சங்கக் கூட்டம்

#### நாட்டரசன் கோட்டையில்

மாசிமீ 30உ (13—3—37) சனிக்கிழமை மாலையில் நாட்டரசன் கோட்டை திருவாளர் கண. உல. மா. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் காம்பவுண்டில் கூட்டம் ஆரம்பமாயிற்று. சுமார் 500 ஜனங்கள் கூடியிருந்தனர். இராமச்சந்திரபுரம் திருவாளர் சு. பழனியப்பா அவர்கள் தலைமை வகித்தார்கள். குமரன் உதவியாசிரியர் வி. பரமசிவம் அவர்கள் கூட்டத்தின் அவசியம்பற்றிப் பேசினார். பின்னர் ஸ்ரீமதி பி. நா. சொ. விசாலாட்சி அம்மாளவர்கள் மாதர் மறுமணத்தின் அவசியத்தை வற்புறுத்தி அழகான பிரசங்கம் புரிந்தார்கள். செட்டிமார் நாட்டு விகடன் கிருஷ்ணசாமி, ஆதி. சுந்தரம், நாட்டரசன்கோட்டை பாரதிவாசகசாலை காரியதரிசி சோம. லெட்சுமணன், ஷண்முகநாதபுரம் ராம. நாகப்பா, குமரன் ஆசிரியர் சொ. முருகப்பா ஆகியவர்கள் உபந்யசித்தார்கள். பின்னர் படம் காட்டப்பட்டு இரவு சுமார் 9—30க்கு கூட்டம் இனிது நிறைவேறியது.

பலவான்குடியில்

பங்குனி 1உ (14—3—37) ஞாயிற்றுக்கிழமை மாலையில் பலவான்குடி மேலப்பிள்ளையார் கூடத்தில் கூட்டம் நடைபெற்றது. உள்ளூர் திருவாளர் N. K. N. சுப்ரமணியன் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். திருவாளர் சு. பழனியப்பா அவர்களும் செட்டி மார் நாட்டு விகடன் கிருஷ்ண சாமி அவர்களும் கூட்டத்தின் அவசியத்தைப் பற்றிப் பேசினார்கள். உ. சிறுவயல் திருவாளர் சு. நா. அழகப்பன் அவர்கள் சிறிதுநேரம் பேசினார்கள். பின்னர் தோழர் சா. கணேசன் அவர்கள் வீரம் நிறைந்த உணர்ச்சியான தமது பிரசங்கத்தைத் தொடங்கி சுமார் ஒருமணி நேரம் மாதர் மறுமணத்தின் அவசியத்தைப் பற்றி சரமாரியாகப் பேசினார். கூட்டம் கட்டிடங் கொள்ளவில்லை. அடைப்புத் தட்டிகள் பிரிக்கப்பட்டன. பின்னர் சொ. முருகப்பா அவர்கள் பேசினார்கள். 8-30க்கு படம் ஆரம்பிக்கப்பட்டது. அப்போது சுமார் 1000 ஜனங்கட்கு மேல் கூடிவிட்டனர். 9-30க்கு கூட்டம் இனிது முடிந்தது.

கோ. அளகாபுரியில்

(பங்குனி 4உ) மாலை 6 மணிக்கு கோட்டையூர் அளகாபுரி திருவாளர் சி. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் வீட்டில் கூட்டம் ஆரம்பமாயிற்று. குழந்தைகள் பாடல் பாடினர். காரைக்குடி செட்டியார் நலஉரிமைச் சங்கக் காரியதரிசி திருவாளர் பழ. காச்சியப்ப செட்டியாரவர்கள், காரைக்குடி முனிசிபல் கௌன்சிலர் திருவாளர் ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள், திருவாளர் சொ. முருகப்பா அவர்கள் ஆகியோர் விதவா விவாகத்தின் அவசியத்தைப்பற்றி வற்புறுத்திப் பேசினார்கள். படங் காட்டப்பட்டது.

பனையப்பட்டியில்

பங்குனி 19உ வியாழனன்று மாலை 5 மணிக்கு பனையப்பட்டி சாதுக்கள் மடத்தின் முன் கொட்டகையில் கூட்டம் ஆரம்பமாயிற்று. கடியாபட்டி சு. பழனியப்பா அவர்கள் தலைமை வகித்தார்கள். கூழிபிறை திரு. பி. ஆர். அருணசலம், ராயவரம் திரு. கு. முத்தையா செட்டியார், செட்டி மார் நாட்டு விகடன் கிருஷ்ணசாமி, குமரன் ஆசிரியர் சொ. முருகப்பா ஆகியவர்கள் கல்வியின் அவசியம், சீர்திருத்தம், மாதர் மறுமணம் ஆகிய விஷயங்களைப்பற்றிப் பேசினார்கள். கூழி பிறையிலிருந்து இளைஞர் கூட்டம் வந்திருந்தனர். சுமார் 350 ஜனங்கள் குழுமினர். படம் காட்டப்பட்டு இரவு 8-30 மணிக்குக் கூட்டம் முடிவுற்றது.

ராங்கியத்தில்

பங்குனி 20உ வெள்ளியன்று மாலை 5 மணிக்கு ராங்கியம் வாசக சாலைக் கட்டிடத்தில் கூட்டம் ஆரம்பமாயிற்று. சிறுவர்கள் பாடல்கள் பாடினர். திருவாளர் ராம. மு. சிவலிங்கம் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். செட்டிமார் நாட்டு விகடன் கிருஷ்ணசாமி, கடியாபட்டி சு. பழனியப்பா, மாதர் மறுமணம் பத்திராதிபர் மு. மரகதவல்லியார், சா. கணேசன் ஆகியவர்கள் சீர்திருத்தம், பெண்ணுரிமை, மாதர் மறுமணம் ஆகிய பல இன்றியமையாத விஷயங்களைப் பற்றிச் சொற்பெருக்காற்றினர். சொ. முருகப்பர் அவர்கள் லாண்டர்ன் படங்களின் மூலம்] ஒரு சொற்பொழிவாற்றினா

கள். இரவு 9 மணிக்குக் கூட்டம் முடிவு பெற்றது. சுமார் 200 பெண்களும் 300 ஆண் மக்களும் குழுமியிருந்தனர்.

### ஆ. முத்துப்பட்டணத்தில்

பங்குனிமீ 27உ (5-4-37) திங்கட்கிழமை மாலை 6மணிக்கு ஆ. முத்துப்பட்டணம் லோகநாயகி வித்தியாசாலையில் கூட்டம் கூடியது. திருவாளர் சா. கணேசன் அவர்கள் தலைமை வகித்தார்கள். செட்டிமார்நாடு விகடன் கிருஷ்ணசாமி, செட்டியார் நல உரிமைச் சங்கக் காரியதரிசி பழ. நாச்சியப்ப செட்டியார், முனிஸிபல் கௌன்சிலர் ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார், "மாதர் மறுமணம்" ஆசிரியரும் முனிஸிபல் கௌன்ஸிலருமான மு. மரகதவல்லியம்மாள், 'குமரன்' ஆசிரியர் சொ. முருகப்பா, லோகநாயகி வித்தியாசாலை மாணக்கி மங்கையர்க்கரசி ஆகியவர்கள் உபந்யாசம் புரிந்தார்கள்.

தலைவர் தக்க முடிவுரை பகர்ந்தார். பின்னர், அழ. அருணசலம் செட்டியார் யாவருக்கும் வந்தனமளித்தார். பள்ளிக்கூட விளையாட்டு மைதானத்தில் படக்காட்சி காட்டப்பட்டது. ஆண் பெண்கள் சுமார் 300 பேர் கூடியிருந்தனர். வித்தியாசாலை மாணவர் மாணக்கியர் அரிய பாடல்கள் பாடினர்.

### ஆவினிப்பட்டியில்

பங்குனி மீ 26உ (8-4-37) வியாழக்கிழமை மாலை 5-30மணிக்கு ஆவினிப்பட்டி ஆ. சு. வீட்டு கல்யாணக் கொட்டகையில் கூட்டம் ஆரம்பமாயிற்று. விவேகானந்த கல்விக் கழக மாணவர் பாட்டுகள் பாடினர். 'வீரகேசரி' ஆசிரியர் திருவாளர் பெ. பெரி. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். குமரன் உதவியாசிரியர் வி. பரமசிவம், செட்டிமார்நாட்டு விகடன் கிருஷ்ணசாமி, 'மாதர் மறுமணம்' ஆசிரியர் மரகதவல்லியம்மாள், குமரன் ஆசிரியர் சொ. முருகப்பா ஆகியவர்கள் மாதர் மறுமணத்தின் அவசியம் பெண் உரிமை முதலியவற்றைப்பற்றி உபந்யாசித்தார்கள். ஆண் பெண்மக்கள் ஏராளமாகக் கூடியிருந்தனர். தலைவர் முடிவுரைக்குப் பின் கூட்டம் இனிது முடிந்தது. கீரணிப்பட்டி உற்சவத்திற்குச் செல்வதை உத்தேசித்துப் படம் அன்று காட்டப்படவில்லை.

### காரைக்குடியில்

பங்குனி 28உ (10-4-37) சனிக்கிழமை மாலை 5-30க்கு நாபுதூர் பாரதி பள்ளிக்கூடத்தில் கூட்டம் ஆரம்பமாயிற்று. இளைஞர்களும் பெண்மக்களும் சிறுவர் சிறுமியரு மாக நிறையக் கூடியிருந்தனர். பாரதி பள்ளிக்கூட மாணவிகள் அழ. இன்பவல்லியும், ந. சாரதாம்பாளும் மாதர் மறுமணப் பாடல்கள் பாடினர் திருவாளர். சொ. நாராயணன் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். செட்டிமார் நாட்டு விகடன், மு. மரகதவல்லியம்மாள், சா. கணேசன், சொ. முருகப்பா, ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியார், சு. மு. பழ. நாச்சியப்பன் ஆகியோர்கள் உபந்யாசித்தனர், தலைவர் முடிப்புரை கூறினர். பின்னர், மாஜிக்லாண்டர்ண் படக்காட்சி நடைபெற்றது.

### அகோலாவில் மறுமணம்.

பம்பாய் வாசியான வாத்தியார் பிரேமசங்கர் என்பவருக்கும் ஸ்ரீமதி சரஸ்வதிபாய்க்கும் மார்ச்-மீ 3-உ யன்று அகோலாஜைன விதவாவிவாக

ஆசிரமத்தில் நடைபெற்றது. இந்த விதவாவிவாகத்தைக் கூடியிருந்த பலர் ஆசீர்வதித்த பின் வைபவம் இனிது முடிவுபெற்றது.

## ஜலந்தரில் விதவா விவாகம்.

மார்ச்மீ 3உ யன்று ஜலந்தரில் ஸ்ரீமான் போலாசிம்க் என்பவருக்கும் ஸ்ரீமதி கிருஷ்ணுபாய்கும்விதவாவிவாகம்நடைபெற்றது. நூற்றுக்கணக்கான பிரமுகர்கள் விஜயம் செயதிருந்தனர். பண்டிட் தீனநாத் வைதீக முறைப்படி விவாகத்தை நடத்திவைத்தார். மணமகனுக்கு வயது 30 மணமகளுக்கு வயது 22.

## பிரபலமான விதவா விவாகம்.

அமிர்தரஸில் தீவிரமாக விதவாவிவாகப் பிரசாரம் நடந்துகொண்டிருக்கிறது. இதன் பயனுக க்ஷத்திரிய ஜாதியில் பிப்பரவரிமாத ஆரம்பத்தில் ஒரு கோடீஸ்வரருடைய விதவைப் பெண் ஸ்ரீமதி லீலாதேவிக்கும் பால முகுந்த கபூருக்கும் விதவாவிவாகம் நடைபெற்றது. தாய் தந்தையர் ஆஜராகியிருந்தது குறிப்பிடத்தக்கது. முக்கிய ஹிந்துக்கள் பலர் கூடியிருந்தனர்.

## மூல்தானில் மறுமணம்.

பிப்ரவரி 27உ ஸ்ரீமதி தேசகவுர் என்னும் விதவைப் பெண்ணுக்கும் ஸ்ரீமான் ராம் என்பவருக்கும் மூல்தானிலுள்ள சர் கங்காராம் விதவா பவனத்தில் மறுமணம் நடைபெற்றது. விவாகச் சடங்கு நடைபெற்றபோது நகர பிரபலஸ்தர்களும் மணமக்களுடைய பந்துக்களும் வந்திருந்தனர். மகதா வாசுதேவஜீ திருமணத்தைப் பாராட்டி பேசி மணமக்களை ஆசீர்வதித்தார்.

## அமிர்தசரஸில் மற்ருெரு விவாகம்

மார்ச் 16உ விதவா விவாக சகாய சபையில் லாலா பாபு ராம் என்பவருக்கும் ஸ்ரீமதி ஞானதேவிக்கும் விதவா விவாகம் சிறப்பாக நடைபெற்றது. சபைத் தலைவர் தீனநாத் வைதீக முறைப்படி விவாகத்தை நடத்திவைத்தார். ஏராளமான பெண்மக்கள் இவ்வைபவத்தைப் பார்க்க வந்திருந்தனர். மணமகனுக்கு வயது 35. மணமகளுக்கு வயது 23.

## விதவா விவாகக் கணக்கு.

1937 பிப்ரவரியில் விதவாவிவாக சகாயசங்கத்தின் மூலமாகவும் மற்ற வகையிலும் 31உ கல்யாணம் நடைபெற்றரிப்போர்ட்கிடைத்திருக்கிறது.

| | |
|---|---|
| பிராமணர் | 83 |
| க்ஷத்திரியர் | 52 |
| அரோடா | 49 |
| அக்ரவால் | 14 |
| காயஸ்தா | 19 |
| ரஜபுத் | 38 |
| மற்றவை | 57 |
| | 312 |

மாகாணவாரியாக விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| பஞ்சாப் | 89 |
| ஐக்கியமாகாணம் | 97 |
| மத்யமாகாணம் | 43 |
| பம்பாய் | 4 |
| வங்காளம் | 68 |
| பீகார் ஒரிஸா | 11 |
| சென்னை | — |
| | 312 |

## திருநெல்வேலியில் விதவா விவாகம்

5-3-37 திங்கட்கிழமை மாலை 5

மணிக்கு திருநெல்வேலி டவுன் தாயம்மையம்மாள் பெண்கல்விச்சாலையில், தமிழர் சீர்திருத்த சங்க ஆதரவில் சங்கத் தலைவர் திரு. K. K. A. பெரியசாமி அவர்கள் தலைமையின் கீழ் . திருநெல்வேலி டவுன் ஸ்ரீமதி ராஜேஸ்வரிஅம்மாள் (விதவை)அவர்களுக்கும், தஞ்சாவூர் ஜில்லா விண்ணமங்கலம் போர்டு பாடசாலை ஆசிரியர் திரு T. N. வடிவேலு அவர்களுக்கும் திருமண ஒப்பந்தம் நடைபெற்றது. பெண்களும் ஆண்களும் 1000-க்கு மேல் கூடியிருந்தனர். பெண்ணுரிமைக் கீதங்கள் பாடப்பட்டன. வாழ்த்துத் தந்திகள் வாசிக்கப்பட்டன. பல பிரமுகர்கள் தம்பதிகளை பாராட்டிப் பேசினர்.

## கச்சிராயபாளையத்தில் விதவா விவாகம்

கள்ளக்குறிச்சி தாலூகாவைச் சேர்ந்த கக்சிராயபாளயத்தில் சுமார் ஒரு வாரத்திற்கு முன் திரு. முத்துசாமி ஆச்சாரி என்பவருக்கும் நமச்சிவாயபுரம் சௌந்திராம்பாள் என்ற மறுமணப்பெண்ணுக்கும் விதவாவிவாகம் நடந்தேறியது. அதுசமயம் கள்ளக்குறிச்சியிலுள்ள சீர்திருத்த வாதிகளான கன்னையன், தேசிங்குமுதலியார் முதலியவர் விஜயம் செய்து தம்பதிகளை வாழ்த்தியதுடன் தற்காலம் பெண்கள் முன்னேற்றத் துறையில் ஆண்மையுடன் இறங்கியது மிகவும் போற்றத்தக்கதெனப் பேசினார்கள்.

## பாதிரி விதவா விவாகம்

அயர்லாந்து பாதிரியான திரு. வில்லியம் ஜே. பி. மெக்காலே என்பவர் நியூயார்க் நகரில் மிஸஸ் நிகொலஸ் பிராடி என்ற விதவையை விவாகஞ் செய்துகொண்டார். இருவரும் ரோம்புரிக்குப் புறப்பட்டனர். இவ் விதவைக்கு 20 லட்சம் பொன் சொத்து உண்டு.

## விதவைகள் நிலயம்

திருநெல்வேலி டவுன் தெற்கு ரத வீதியில் பெண்கள் நிலயம் ஸ்தாபிக்க முடிவு செய்து வேலைகள் வெகு துரிதமாக நடைபெற்று வருகிறது. இந் நிலயத்தில் விதவைகள், அனாதை சிறுமிகள், ஏழைப்பெண்கள் முதலியவர்களை ஜாதிமத பேதமன்னியில் சேர்த்துக்கொள்ளப்படும். இலவசமாக சாப்பாடும் உடையும் கொடுத்து கல்வி தையல்வேலை சங்கீதம் முதலியன கற்பிக்கப்படும் என்று தெரிகிகிறது.

## "முகமூடி போடாதே"

ஐரோப்பாவிலுள்ள முஸ்லீம் நாடுகளில் பெணகள் முகமூடி தரிக்கும் வழக்கம் அநேகமாக ஒழிந்துவிட்டது. அல்பேனியா சர்க்கார் அல்பேனியாவில் பெண்கள் எக்காரணம் கொண்டும் முகமூடிகள் தரிக்கக் கூடாதென்று தடை யுத்திரவு பிறப்பித்துவிட்டார்கள். சமீபத்தில் அல்பேனியாவின் ஸாக்மன்னர் செய்த பிரசங்கங்களிலிருந்து இன்னும் பல சீர்திருத்தங்கள் விரைவில்ஏற்படுமென்று கூறப்படுகிறது.

## பெண்களுக்கு விஷப் புகைப் பயிற்சி

ருஷியாவில் கர்னல் கிரிலோவ்என்பவர் பிப்ரவரி மாதம் முதற்றேதி முதற்கொண்டு இரசாயன சாமான்களை உபயோகிக்கும் படைத் திட்டத்தை நிறுவியிருக்கிறார். இதில் வாலிபர்களும், பெண்மணிகளும் தான் சேர்த்துகொள்ளப்படுகின்றனர். அதிலும் பெண்மணிகளுக்குத்தான் இதில் அதிகமாகச் சிட்சை யளிக்கப் படுகிறது.

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| மலர் 1 | காரைக்குடி<br>ஈஸ்வர-ளூ வைகாசி-மீ | இதழ் 10 |
| --- | --- | --- |

## வினுவிடை வெண்பா

காளவனப்புலவர்

ஆண்பால் விதவருண்டோ? அச்சொல் நிகண்டிலுண்டோ?
வீண்பெயரேன் சொல்வார் வெகுண்டண்ணே?—சேண்படைத்த
ஆங்கிலத்தில் தோன்றுமடா அம்மொழியை நம்பெண்டிர்
தாங்கிடச்செய் தோமதுதான் தப்பு. (1)

ஆங்கிலத்திற் றோன்றுமெனில் அச்சொல்லை நம்நூலோர்
நீங்கவைத்த தென்ன நிமித்தமண்ணே?—ஈங்கதுகேள்
ஆண்டான் புருடன் அடிமைபெண் ணென்றிடவே
பூண்டாரிச் சூதினையப் போது. (2)

ஆண்டா னடிமைமுறை ஆதரிக்க நம்முன்னோர்
பூண்ட பணியிதனுற் போந்தபயன்?—நீண்ட
சிறகிழந்த புட்போல் தெரிவையர்தம் வீட்டின்
புறங்கடவார் கன்மம் புரிந்து. (3)

சிறகிழந்த புட்போல் தெரிவையர்தம் வீட்டின்
புறங்கடந்து கன்மம் புரிபோதோ?—மறங்கசந்
தாண்பால் விதவர்க் களித்திடார் கன்னியளை
வீண்போர் விளைப்பார் விரைந்து. (4)

ஆண்பால் விதவர்க் களித்திடா ரேலவர்க்கு
மாண்புடைய வேறு வழியெதுவோ?—நாண்பறித்த
மாதர் மனங்குளிர வாய்த்தமணஞ் செய்தன்பாய்
ஆதரிப்ப தன்றோ அறம். (5)

# ராஜா ராம் மோகன் ராய்.

திருச்சி கே. வி. எஸ். வாஸ், பி. ஏ. (ஆனர்ஸ்)

## அத்தியாயம் 9.

### சதியொழிப்புச் சட்டமும்-சனாதனிகள் கிளர்ச்சியும்

உடன்கட்டை யேறும் வழக்கத்தைப் பற்றியும், அதை ஒழிப்பதற்காக ராம்மோகனரும் அவருடைய சகாக்களும் செய்துவந்த தீவிரமான பிரசாரங்களைப் பற்றியும் முந்திய அத்தியாயங்களில் விரிவாகப் பிரஸ்தாபித்திருக்கிறோம். இனி இவ்வழக்கம் நிரந்தரமாக எவ்வாறு அகற்றப்பட்டதென்பதைக் கவனிப்போம்.

1826-ம் ஆண்டில் நீதிபதி திரு. ஸ்மித் அவர்களும் நீதிபதி திரு. ராஸ் அவர்களும் சதியொழிப்பை ஆதரித்துச் சர்க்காருக்கு ஒரு கடிதமெழுதினார்கள். அந்தக் கடிதம் ராஜப்பிரதிநிதியின் நிர்வாக சபையில் ஆலோசனைக்கெடுத்துக்கொள்ளப்பட்டபொழுது "சதி சம்பந்தமான பழைய சட்டங்கள் இதுவரை அமுல் செய்யப்படாமலிருக்கும் இடங்களிலும், சமீபமாக பிரிட்டிஷ் அதிகாரத்திற்கு வந்திருக்கும் டெல்லி, ரங்பூர், லாகூர், நர்புத்தா, குமாயூன் முதலான ஜில்லாக்களிலும், இனி அமுல் செய்யப்பட வேண்டும்" என்று வைஸிராய் அம்ஹர்ஸ்ட் பிரபுவிற்கு சிபார்சு செய்யப்பட்டது. இந்த சிபார்சை வற்புறுத்தி நிர்வாக சபையின் உபதலைவராயிருந்த திரு. பெய்லி என்பவரும் சொந்த ஹோதாவில் வைஸிராய்க்கு ஒரு கடிதம் எழுதினர். 1827ம் வருடம் பெப்ரவரி மாதம் 18-ம் தேதியன்று திரு. ஹாரிங்டன் என்னும் பிரபல ஆங்கிலேயர் சதியை ஒழிப்பதற்காகச் சர்க்காருக்கு ஒரு திட்டத்தையும் தயார் செய்துகொடுத்தார். இவ்விஷயம் நிர்வாக சபையில் மறுபடியும் ஆலோசனைக்கு வந்தது. சபையின் உபதலைவர் ஸ்தானத்தை அப்பொழுது வகித்துவந்த திரு. கோம்பர்மீயர் என்பவரும் திரு. பெய்லியின் யோசனைகளை ஆதரித்துத்தான் சர்க்காருக்குச் சிபார்சு செய்தார். இவ்வாறாக, பொதுஜனத் தலைவர்களும், மத்திய நிர்வாக சபையும் சதியை ஒழிக்க வேண்டுமென்று வற்புறுத்த வைஸி

ராய் அம்ஹர்ஸ்ட் பிரபு மாத்திரம் இதற்கு இணங்கவில்லை. உடன் கட்டை யேறும் வழக்கத்தில் தலையிடுவதானது பிரிட்டிஷ் அதிகாரத்திற்கு பங்கத்தை விளைவிப்பதாயிருக்குமென்று அவர் திட்டமாக அபிப்பிராயப்பட்டார். ஆகையால், "கல்வியறிவைப் பரப்பினால் உடன்கட்டையேறும் வழக்கம் தானாகவே தடைப்பட்டுப் போய்விடும்" என்று கடைசிவரை சொல்லிக்கொண்டிருந்துவிட்டு 1828-ம் வருடம் மார்ச்சு மாதம் இங்கிலாந்திற்கு அவர் திரும்பினர். அடுத்தாற்போல் இந்தியாவின் ராஜப்பிரதிநிதியாக வந்த வில்லியம் பெண்டிங்க் பிரபுவின் காலத்தில்தான் உடன்கட்டை யேறும் வழக்கம் சட்டரீதியாகத் தடுக்கப்பட்டது.

வில்லியம் பெண்டிங்க் பிரபு அதிகப் படிப்புப் படித்தவரல்ல. ஆனல், நெஞ்சழுத்தத்தில் அவருக்கு இணையான ஆங்கிலேயர் ஒருவர்கூட அக்காலத்திலில்லையென்று துணிவுடன் சொல்லி விடலாம். எந்தப் பிரச்னையையும் சாந்தமாகச் சிந்திக்கும் அவர் ஒரு காரியத்தைச் செய்ய வேண்டுமென்று நினைத்துவிட்டால் அதை எப்படியாவது செய்தே தீருவார். பொது ஜனங்கள் கிளர்ச்சி செய்வார்களோவென்று ஒருபொழுதும் அவர் அஞ்சியது கிடையாது. நிர்வாக சபையின் ஆக்ஷேபணைகளையும் அவர் சட்டை செய்வது கிடையாது. இந்தியாவிற்கு ராஜப்பிரதிநிதியாக வந்தவுடன் உடன்கட்டை யேறும் கொடிய வழக்கம்தான் முதன் முதலாக அவருடைய மனதை உறுத்தியது. இவ் வழக்கத்தைப் பற்றி இங்கிலாந்திலிருக்கையிலேயே அவர் கேள்விப்பட்டிருந்தார். ஆனல், செத்தவர்களுடன் உயிருள்ளவர்களையும் சேர்த்துவைத்துக் கொளுத்துவார்களாவென்பது அவருக்குச் சந்தேகமாயிருந்தது. இதை நேரில் கண்டவுடன் எப்படியாவது இக் கொடுமையை அடியோடு அகற்ற வேண்டுமென்று அவர் கங்கணங் கட்டிக் கொண்டார். அம்ஹர்ஸ்ட் பிரபுவைப் போன்ற அபிப்பிராயமுடைய சிலர் "அவசரப்பட்டு ஒன்றையும் செய்து விடாதீர்கள்! இன்னும் கொஞ்சகாலம்வரை பொறுத்திருந்து பாருங்கள்!" என்று அவருக்கு யோசனை கூறினர்கள். ஆனல், இந்த யோசனைகளை ஏற்றுக்கொண்டு வாளாவிருக்க அவரால் இயலவில்லை. எனினும் இந்தியச் சிப்பாய்களின் அபிப்பிராயம் எவ்வாறிருக்கின்றதென்

பதை அறிய இரகசியமாக அவர் விசாரணை நடத்திப் பார்த்தார். நாற்பத்தொன்பது இராணுவ உத்தியோகஸ்தர்களுள் இருபத்தி நான்கு பேர்கள் வரை சதியொழிப்பை பலமாக ஆதரித்தார்கள். மிருதிப் பேர்களிலும் ஐந்து உத்தியோகஸ்தர்கள்தான் இதை ஆக்ஷேபித்தார்கள். எனவே சதியொழிப்புத் திட்டம் சிப்பாய்க் கலகத்தைத் தூண்டி விடாதென்பது பெண்டிங் பிரபுவிற்கு நிச்சய மாகத் தெரிந்து விட்டது. பிறகு இந்தியத் தலைவர்களோடு அவர் கலந்து யோசித்தார். இது சம்பந்தமாக அவருக்கும் ராம்மோக னருக்கும் நடந்த சம்பாஷணையைப்பற்றி ஒரு ரஸமான வரலாறு எழுதிவைக்கப்பட்டிருக்கிறது. அதன் சாராம்சம் பின்வருமாறு:—

இந்தியப் பொது ஜனங்களிடையே ராம் மோகனருக்கு மிகுந்த செல்வாக்கிருக்கின்றதென்பதும், சதியொழிப்பு விஷயத் தில் வெகுதூரம்வரை அவர் உதவி செய்யக்கூடுமென்பதும், பெண் டிங்க் பிரபுவிற்குத் தெரிய வந்தது. அவர் ராம்மோகனரைக் காண விரும்புவதாக மெய்ப்பாது காவலர் மூலம் ஒரு செய்தியனுப்பினர். அச் செய்தி ராம்மோகனரிடம் அறிவிக்கப்பட்டபொழுது "தற் சமயம் மதச் சீர்திருத்தத்தில் நான் ஈடுபட்டிருக்கின்றேன். ஆகை யால் ராஜப்பிரதிநிதியின் முன்னிலையில் ஆஜராக முடியாமலிருப் பதற்காக மெத்தவும் விசனிக்கின்றேன்!" என்று அவர் விடை யளித்தார். இதை ராஜப்பிரதிநிதியிடம் அவருடைய மெய்ப் பாது காவலர் கொண்டுபோய்க் கொடுத்தார். பெண்டிங் பிரபு சில நிமி டங்கள் வரை சிந்தனையிலாழ்ந்திருந்துவிட்டு மெய்ப் பாதுகாவலரை மறுபடியும் அழைத்து "ராம்மோகனரிடம் நீர் என்ன கூறினீர்?" என்று வினவினர். "தங்களை ராஜப்பிரதிநிதி பார்க்க விரும்புகிறு ரென்று தெரிவித்தேன்" என்று மெய்ப் பாதுகாவலர் பதிலளித் தார். நீங்கள் மறுபடியும் போய் திரு வில்லியம் பெண்டிங் உங்க ளைக் கண்டுபேச ரெம்பவும் அவாவுகின்றார். தயவுசெய்து ஒரு முறை தரிசனமளிக்கக்கூடுமாயின் அவர் மிகுந்த நன்றியுள்ளவரா இருப்பார் என்று சொல்லிவிட்டு வாரும்" என்று தெரிவித்து மெய்ப்பாதுகாவலரை ராம்மோகனரிடம் மறுபடியும் ராஜப்பிரதிநிதி அனுப்பி வைத்தார். மறுமுறையாக வந்த அழைப்பை ராம்மோகன ரால் திரஸ்கரிக்க முடியவில்லை. ஆகையால் அவர் ராஜப்பிரதிநிதியை

பேட்டிகண்டு சதியொழிப்பு சம்பந்தமான தமது அபிப்பிராயங்களை வெளியிட்டார்.

இவ்வாறு ராஜாராம் மோகன்ராய் அவர்களையும் மற்றும் பல தலைவர்களையும் கலந்து யோசித்த பின்னர் சதியொழிப்புத் திட்டமொன்றை பெண்டிங்க் பிரபு தயார்செய்தார். அந்தத் திட்டம் 1829-ம் வருடம் டிஸம்பர் மாதம் நான்காம் தேதியன்று சட்டமாகப் பிரகடனம் செய்யப்பட்டது. இச்சட்டத்தின் சாராம்சம் பின்வருமாறு:—

உடன்கட்டை யெறுவது சட்டவிரோதமான காரியம். இதைச் செய்பவர்கள் தண்டிக்கப்படுவார்கள். ஹிந்து விதவைகள் (அவர்கள் விரும்பினாலும் சரி; விரும்பாவிடினும் சரி; வேண்டிக்கொண்டாலும் சரி; இல்லாவிடினும் சரி;) உடன்கட்டை யேறுவதற்கு உதவியாகவும் உடந்தையாகவு மிருப்பவர்கள் கொலைக்குற்றத்திற்கு உட்பட்டவர்கள். சதிவிஷயத்தில், விதவைகளின் மீது பலாத்காரத்தைப் பிரயோகிப்பவர்களுக்கு கோர்ட்டார் மரணதண்டனை விதிக்கலாம்.

மேற்படி சட்டம் சனாதன இந்துக்களிடையே பெருத்த கிளர்ச்சியை உண்டுபண்ணியது. "சமாச்சார் சந்திரிகா" என்னும் மிதவாதப் பத்திரிகையில் சர்க்காரின் நடவடிக்கையைத் தாக்கி அனேகம் கட்டுரைகள் அடுக்கடுக்காக வெளிவந்தன. 1830-ம் வருடம் ஜனவரிமாதம் 14-ம் தேதியன்று கல்கத்தாவைச் சேர்ந்த சுமார் 800 சனாதனிகள் ராஜப்பிரதிநிதியிடம் ஒரு மகஜரைச் சமர்ப்பித்தார்கள். அந்த மகஜரில் "சதியொழிப்புச் சட்டத்தை உடனே ரத்துசெய்ய வேண்டும். ஏனெனில் இச்சட்டம் எங்களுடைய மதத்தில் தலையிடுவதாகவும், எங்களுடைய கர்மாக்களைத் தடைசெய்வதாகவு மிருக்கின்றது. உடன்கட்டை யேறுவதை இந்துமதம் வற்புறுத்தவில்லை யென்று சிலர் விதண்டாவாதம் செய்கின்றனர். ஆனால், அவர்களுடைய கூற்று உண்மையானதல்ல. எங்களுடைய சாஸ்திரங்களுக்கு உரைகூற வைதீகப் பிராமணர்களும் பண்டிதர்களுமே தகுதியுடையவர்கள். சொந்த சமயத்தை நிராகரித்து, ஒதுக்கப்பட்ட பதார்த்தங்களைப் புசித்து யதேச்சையாகத் திரியும் மதத்துரோகிகள் தகுதியுடையவர்களல்ல. சதியொழிப்பை

ஆதரிப்பவர்களெல்லாம் இந்துமதத்தைவிட்டு விலகியவர்கள். புலால் உண்பவர்களும், சாராயம் குடிப்பவர்களும், சிகையைக் கத்தரித்துக் கொண்டிருப்பவர்களுமான அவர்களுடைய கூற்றை சர்க்கார் செவிகொடுத்துக் கேட்கலாகாது. பண்டிதர்களோடு கலந்து யோசித்து, உடன்கட்டை யேறும் வழக்கத்தை இந்துமத சாஸ்திரங்கள் வற்புறுத்துகின்றனவா இல்லையா என்பதைத் திட்டமாக அறிந்து கொண்டபின்னரே இச்சட்டத்தை அமுல்செய்ய வேண்டும்" என்று அவர்கள் கோரியிருந்தனர்.

ஷை கோஷ்டியாருக்கு விடையளிக்கையில் "உடன்கட்டை வழக்கத்தை இந்துமதம் ஆதரிக்கவில்லை யென்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஆகையால்தான் இச்சட்டத்தை நான் அமுல் செய்கிறேன். எனது அபிப்பிராயத்தை ஆக்ஷேபிப்பவர்கள் மன்னர் பிரானுக்கு நேரில் மனுச்செய்து கொள்ளலாம்" என்று பெண்டிங்க் பிரபு தெரிவித்தார். அடுத்தாற்போல் 346 பேர்களின் கையொப்பங்களோடு கிடைத்த மற்றொரு மகஜருக்கும் மேற்கண்டவாறுகவே பதிலளிக்கப்பட்டது.

சதியொழிப்புச் சட்டத்தைப் பாராட்டியும் அனேக மகஜர்கள் ராஜப்பிரதிநிதிக்கு அனுப்பிவைக்கப்பட்டிருந்தன. ராஜாராம் மோகன் ராய் அவர்களைத் தலைவராகக்கொண்டு சுமார் 300 பேர்களுடைய கையொப்பங்களோடு சமர்ப்பிக்கப்பட்ட ஒரு மகஜரில் 'உடன் கட்டையேறும் வழக்கத்திற்கு பொறாமையும் சுயநலமுமே மூலகாரணமாகும். விதவைகளை சம்ரக்ஷிப்பது வீண்செலவெனச் சிலரால் கருதப்படுகின்றது. மாண்டவனின் மனைவியும் சுட்டுப்பொசுக்கப் பட்டுவிட்டால் அவர்களுடைய சொத்தைக் கைப்பற்றுவதற்கு விக்னங்களிருக்காது என்று மற்றும் சிலர் எண்ணுகின்றார்கள். இதேபோல் மற்றும் பலவகையான கெட்ட எண்ணங்களே மதத்தின் பெயரைச்சொல்லி இக்கொடிய வழக்கத்தை ஆதரித்து வருகின்றன. உடன்கட்டையேறுவதை ஒழிப்பதானது உண்மையான இந்துமதத்தின் வளர்ச்சிக்கு உதவிசெய்வதாகவே இருக்கும். சதியை சட்டவிரோதமாகச் செய்ததற்காக ஜனங்கள் தங்களது மனப்பூர்வமான நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்ளவிரும்புகின்றார்கள்!' என்று கூறப்பட்டிருந்தது.

சனாதனிகளுக்கு மேற்படி மகஜர் மிகுந்த ஆத்திரத்தை உண்டு பண்ணியது. அவர்கள் உடனே ஒரு பெரிய மகாநாட்டைக்கூட்டி சதியொழிப்புச் சட்டத்தைப்பற்றி இங்கிலாந்திலுள்ள அதிகாரிகளிடம் முறையிட்டுக்கொள்வதென்று தீர்மானித்தார்கள். அத்துடன் ராம்மோகனரின் பிரம்மசமாஜத்தைப்போல் சனாதனக் கொள்கைகளைப் பிரசாரம் செய்ய 'தர்மசபா' என்னும் பெயரோடு ஒரு ஸ்தாபனத்தை நிறுவுவதென்றும் அவர்கள் முடிவு செய்தார்கள். அஃது ஸ்தாபனத்தின் கட்டிடத்திற்காக அதே கூட்டத்தில் 11,260 ரூபாய்வரை வசூலாகியது. இக்கூட்டத்தில் இந்து மதாசாரங்களைச் சரியாக அனுஷ்டிக்காதவர்கள் ஜாதிப்பிரஷ்டம் செய்யப்படவேண்டுமென்றும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

இவ்வாறாக, ராம்மோகனரின் சதியொழிப்புப் பிரசாரங்கள் விரும்பிய பலனை இறுதியில் கொடுத்தன. பிறகு, பொதுஜனங்களின் உரிமைகளைப் பாதுகாக்கும் மற்றொரு விஷயத்தில் அவர் கவனம் செலுத்த ஆரம்பித்தார். 1828-ம் வருட ஆகஸ்டு மாதம் 18-ம் தேதியன்று அனேகம் இந்துக்களாலும் இஸ்லாமியர்களாலும் கையொப்பமிட்ட ஒரு மகஜரை காமன்ஸ் சபையிலும் பிரபுக்கள் சபையிலும் சமர்ப்பணம் செய்வதற்காக திரு. ஜே. கிராபோர்டு என்னும் பார்லிமெண்டு அங்கத்தினரொருவருக்கு அவர் அனுப்பி வைத்தார். அந்த மகஜர் கட்டுப்பாடு போர்டுத் தலைவராகிய திரு. வைன் என்பவரால் தயார் செய்யப்பட்டதும் 1827-ம் வருட முற்பகுதியிலிருந்து அமுலுக்குக் கொண்டுவரப்பட்டதுமான ஜூரிச் சட்டத்தை பலமாக ஆட்சேபிப்பதற்காகவே அனுப்பப்பட்டதாகும். அதில், நமது ராம்மோகனர் இந்தியர்களின் மனோபாவத்தைப் பின்கண்ட வார்த்தைகளில் தெளிவாக விளக்கியிருந்தார்:—

கட்டுப்பாடு போர்டுத் தலைவராகிய திரு. வைன் அவர்களால் தயார்செய்து அமுலுக்கு வந்திருக்கும் ஜூரிச் சட்டம் நீதி நிர்வாகத்தில் வகுப்புத் துவேஷத்தையும், வேற்றுமைகளையும் கிளப்பிவிட்டிருக்கின்றது. அதைக் கண்டு இந்தியப் பொதுஜனங்கள் கலவரமடைந்திருக்கிறார்கள். இந்தச் சட்டத்தில் சுதேசிகளாயிருக்கும் இந்துக்களும் இஸ்லாமியர்களும் கிறிஸ்தவ ஜூரர்களாலேயே விசாரணை செய்யப்பட வேண்டுமென்று விதியேற்படுத்தப்பட்டி

ருக்கிறது. அதே சமயம் ஐரோப்பியர்களும், கிறிஸ்தவ மதத்தைத் தழுவியுள்ள சுதேசிகளும் இந்து ஜூரர்களாலோ அல்லது இஸ்லாமிய ஜூரர்களாலோ விசாரணை செய்யப்படலாகாதென்றும் தடை விதிக்கப்பட்டிருக்கிறது. இத்துடன் கிராண்ட் ஜூரி சபையில் இந்துக்களுக்கும் இஸ்லாமியர்களுக்கும் அவர்களுடைய இனத்தவர்கள் விசாரணை செய்யப்படும் பொழுதுகூட ஸ்தானமளிக்கப் பிரஸ்தாபச் சட்டம் மறுக்கின்றது. இத்தகைய பாரபக்ஷமான ஷரத்துகளை கீழே கையொப்பமிட்டுள்ள நாங்கள் பலமாக ஆக்ஷேபிக்கின்றோம்.''

இவ்வாறு சொல்லிவிட்டு, ஐயர்லாந்தில் அப்பொழுது ஏற்பட்டிருந்த சுதந்திரக் கிளர்ச்சியையும், அதேபோல் இந்தியாவில் எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய சுதந்திரப் போராட்டத்தையும், இவ்விரண்டிற்கு முள்ள பேதாபேதங்களையும் பற்றி ராம்மோகனர் தமது மகஜரில் பின்கண்டவாறு பிரஸ்தாபித்திருந்தார்.

சுமார் நூறுவருடங்களுக்குப் பிறகு, இந்தியர்களின் அரசியல் ஞானம் வளர்ச்சியடைந்து விடுவதாக வைத்துக்கொள்ளுங்கள்: அப்பொழுது இந்தியப் பொதுஜனங்களை அவமானம் செய்வதாயும், அடக்குவதாயும், அநீதமாயு மிருக்கின்ற இச்சட்டத்தை அவர்கள் தீவிரமாக எதிர்க்காமலிருப்பார்களா? அவர்களுடைய எதிர்ப்பை பிரிட்டனுல் சமாளித்துக் கொள்ளமுடியுமா, அண்டையிலிருக்கும் ஐயர்லாந்தி லேற்பட்டுள்ள சுதந்திரக் கிளர்ச்சியை பிரிட்டிஷ் சர்க்கார் தங்களது கடற்படைகளை யனுப்பி சுலபமாக அடக்கிவிடக் கூடும். இந்தியப் பொதுஜனங்கள் சுதந்திர தாகத்தோடு கிளர்ச்சி செய்யத் தலைப்பட்டாலோ அதை அடக்குவதற்கு வெகுதூரத்திற் கப்பாலிருக்கும் பிரிட்டனுல் நிச்சயமாக முடியாது. அங்ஙனமிருக்க இந்தியா சர்க்கார் இந்தியப் பொதுஜனங்களின் யோசனையைக் கேளாமலும், அவர்களுக்கு மனக்கசப்பை உண்டுபண்ணக் கூடியவகையிலும் அனேகவிதமான சட்டதிட்டங்களை அடுத்தடுத்துச் சிருஷ்டி செய்துவருவது எங்களுக்கு மிகுந்த விசனத்தைக் கொடுக்கின்றது.

மேற்படி கடிதத்தைக் கூர்மையாகப் பரிசீலனைசெய்து பார்ப்ப

வர்களுக்கு மூன்று விஷயங்கள் தெளிவாகப்புலப்படும். ஒன்று இந்தியா சர்க்காரின் எதிர்கால ஆட்சி அடக்குமுறையையும் அவசரச் சட்டங்களையுமே அடிப்படையாகக்கொண்டிருக்குமென்பதை ராம் மோகனர் முன்னதாகவே ஊகித்தறிந்து கொண்டிருக்கிறார். இரண்டாவதாக அரசியல் ஞானத்தில் இந்தியர்கள் வெகுவிரைவாகத் தேர்ச்சிபெற்றுவிடுவார்களென்பது அவருக்கு நன்றாகப் புலப்பட்டிருக்கிறது. மூன்றாவதாக தமக்குப் பின்னால் பலதலைவர்கள் தோன்றி பொதுஜனங்களின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காகப் போராடி பாரதநாட்டிற்குச் சுதந்திரத்தை வாங்கிக் கொடுக்கப்போகிறார்களென்று அவர் எதிர்பார்த்திருக்கின்றார். சுருங்கக் கூறுங்கால் நமது தேசத்தில் இன்று நடக்கும் மும்முரமான சுதந்திரப் போராட்டத்தை ராம்மோகனர் நிச்சயமாக எதிர்பார்த்திருக்கிறாரென்பது மேற்படி மகஜரிலிருந்து தெளிவாக விளங்குகின்றது.

---

# பெண்கள் உலகே பிரியமாய் வருவீர்

குலாலன் பாடியவை.

பாரதியார் பாடலில் "சின்னஞ்சிறு கிளியே" என்ற மெட்டு.

1. பாரத பூமியில் வாழ்—மாதர்காள்
பக்ஷமுடனெழுந்தே
வீரமுடனுழைத்துப்—புவியில்
வேண்டா தொழித்திடவே

2. நாடு நகர் முழுதும்—மாதர்காள்
நன்மை பெருகிடவே
கூடுவோம் ஒன்றாக—வருவீர்
கோழைமை நீக்கிடவே

3. கன்னி மணம் தவிர்ப்போம்—மாதர்காள்
காதல் மணம் பெருக

அன்னிய நாட்டவர்போல்—நாமும்
ஆண்மையுடன் திகழ

4. கல்விச்சாலை செல்வோம்—மாதர்காள்
கற்று உணர்ந்திடுவோம்
செல்விகள் இவ்வுலகில்—இனிமேல்
சேமமாய் வாழ்ந்திடுவோம்

5. பெண்களை விற்று வரும்—மாதர்காள்
பேதைமைக் கொள்கை எல்லாம்
கண்களுக் கெட்டாமல்—விரட்டிக்
காணாது ஓட்டிடுவோம்

6. ஆண் விதவையானால்—மாதர்காள்
அப்பொழுதே மணமாம்!
தேன்மொழி மாதர்களோ—இன்று
தேம்பிப் பொருமுகின்றோம்

7. ஜாதியிரண்டென்றே—மாதர்காள்
சாற்றினர் முன்னோர்கள்
வீதியில் சென்றாலும்—சிலரை
விரட்டுறார் போவென்று

8. காந்திக் கிழவன் வந்தார்—மாதர்காள்
காருண்யம் உண்டாக்க
சாந்தியுடன் மொழியும்—அவரின்
சாதனைபோல் நடப்போம்

9. மறுமணம் தேவையென்றே—மாதர்காள்
மண்டல மெங்கணுமே
உறுதியுடன் மொழிந்தும்—செயலில்
ஊக்கமும் காட்டிடுவோம்

10. தமிழ் வளர்த்திடுவோம்—மாதர்காள்
தாய்குறை தீர்த்திடுவோம்
அமிழ்தினு மே இனிய—பாக்கள்
ஆக்கிடுவோம் வருவீர்

# இது குற்றமா?

ஸ்ரீமதி. நீ. லக்ஷ்மி.

"அடாடா! பேஷான ஜாதகம்! இந்தப் பெண்ணுக்கு இந்தப் புருஷன் என்றும், இந்தப் புருஷனுக்கு இந்தப் பெண் என்றும் சிருஷ்டி செய்ததுபோல் இருக்கிறதே இந்த ஜாதகத்தின் பொருத்தம்! நீண்ட ஆயுள்! நல்ல புத்திர சந்தானம்!........ ..." இவ்வாறு அடுக்கிக்கொண்டே போனார் புலிக்குட்டி ஜோசியர் பூவராகவய்யங்கார். சுந்தரியின் தந்தைக்கும், நாகநாதனின் பிதாவுக்கும் பரம சந்தோஷம். தலையசைக்கும் ஆசாமிகள் நல்ல இடத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தால் ஒரு தட்டுத் தட்டவேண்டியதுதானே! ஜோசியருக்கு நல்ல வருவாய். அந்த ஜோசியரைக்கொண்டே சுப வேளையுள்ள பன்னிரண்டாம் தேதி முகூர்த்தம் வைக்கப்பட்டது.

ஃ ஃ ஃ

சுந்தரிக்கு வயது பத்து. அழகு நிறைந்த கன்னி. சுந்தரியின் தந்தை பொன்னேரி கிராமத்தில் பெரிய மிராசுதார். இப்பொழுது சென்னையில் வசித்து வருகிறார். வயது 50க்கு மேலாகி விட்டது. கடைசி காலத்தில் கவலையற்றிருக்க-வேண்டுமென்பது அவருடைய அபிப்பிராயம். தன் கடைசிப் பெண்ணான சுந்தரிக்குக் கலியாணம் செய்துவிட்டால் தனக்கு வேறு கவலை இராதென்றெண்ணினார். அவ்விதம் கவலையற்றிருப்பதற்காக வரன் தேடினார். நாகநாதனின் தந்தையும் நல்ல பணக்காரர். கௌரவமான குடும்பம். நாகநாதன் சென்னையில் படித்துக்கொண்டிருக்கிறான். வயது பதினான்கு.

ஜோசியம் பார்த்து சுபவேளையெனத் தீர்மானிக்கப்பெற்ற பன்னிரண்டாம் தேதியே திருமணம். 6-நாள் கலியாணம். சாப்பாடு ரொம்ப ஜோர்! ஒரு தீட்டு தீட்டிவிட்டார்கள்!

ஃ ஃ ஃ

மே மாதம். பள்ளிக்கூடங்களுக்கு விடுமுறைநாள். நாகநாதன் விடுமுறையைக் கழிக்க தன் சொந்த கிராமமாகிய கோயிலூருக்குச் சென்றிருந்தான்.

சென்னையில் சுந்தரியின் வீட்டில் ஏக ஆர்ப்பாட்டம். சுந்தரி புஷ்பவதியாகிவிட்டாள். அதற்கான சடங்குகளையெல்லாம் செய்து கொண்டு அனைவரும் ஆனந்தத்தில் மூழ்கியிருந்தனர். தபாற் சேவகன் ' தந்தி ' என்றான். அய்யருக்கு அடிவயிற்றில் 'கபீர்' என்றது. வாங்கினார், பிரித்தார், படித்தார். மூர்ச்சித்து கீழே விழுந்து விட்டார். மற்றொருவர் தந்தியை எடுத்தார். கை நடுங்கிற்று. படித்தார். ' நாகநாதன் காலராவில் இறந்தான் '. சுந்தரியின் தாய் கோவெனக் கதறினாள். விழுந்தாள். புரளுகிறாள். சுந்தரிக்கு ஒன்றும் தோன்றவில்லை. கற்சிலைபோல நின்றாள். அடியற்ற மரம்போல சாய்ந்தாள். தந்தையையும் மகளையும் மூர்ச்சை தெளிவிக்க முயற்சித்தனர் வந்திருந்தோர்.

"இவ்வளவு பால்ய வயதில் கலியாணம்செய்திருக்கக்கூடாது" "பால்ய விவாகக் கொடுமை இது" என்று சில இளைஞர்களும், "விதியின் பயன்" "தலையெழுத்துப்படி தானே நடக்கும்" "அவ்வளவு தான் கொடுத்து வைத்தது கடவுள் செயல்" என்று சில வைதீகப் பிச்சுகளும் பேசிக்கொண்டே வழி நடந்தனர்.

சில மணி நேரத்திற்குப்பின்பு சுந்தரியின் குடும்பத்தார் கோயிலூருக்குப் புறப்பட்டனர். அழுதனர். புரண்டனர். கதறினர். யாது பயன்? மாண்டவன் மீள்வதெங்கே?

பத்தாவது தினம். கொடுமையான தினம். சுந்தரியின் உள்ளம், சில நிமிடத்தில் தூக்குத் தண்டனையை யடையப்போகும் கைதியின் மனத்தைவிட அதிக இம்சையை அனுபவித்தது. பஞ்சுபோன்ற அவளுடைய உடல் முட்கள் நிறைந்த பலகையில் கிடத்தப்பட்டது போன்ற உணர்ச்சியை அடைந்தாள். எதிர்காலத்தை எண்ணினாள். வெம்பினாள். இன்னதென்று சொல்ல இயலாத பரமசங்கடமான நிலையில் பரிதவித்தாள்.

அவளணிந்திருந்த நகைகள் பலவந்தமாகப் பிடுங்கப்பட்டன. பட்டுச்சேலையைப் பறித்துக்கொண்டு வெள்ளைச்சேலையைக் கொடுத்தார்கள். பால்ய வயதை உத்தேசித்து தலையை மொட்டையடிக்கவில்லை. இவையெல்லாம் " விதியின் பயன் " என்று அவளுக்கு போதிக்கப்பட்டது. ஆனால் அங்கிருந்த சில இளைஞர்கள் மட்டும் " இந்த ஒரு பாவமுமறியாத கன்னிக்கு விதவைப் பட்டத்தைக்

கட்டுவது தருமமா?" என்றெண்ணிய வண்ணம் வெளியே சென்றனர்.

ஃ ஃ ஃ

ஒரு மாதமாயிற்று. நண்பகல். சுந்தரி அறைக்குள் படுத்திருந்தாள். தலையணை கண்ணீரால் நனைக்கப்பட்டிருந்தது. சுந்தரியின் மாமியார் பக்கத்து வீட்டுப் பாட்டியிடம் "ஐயோ! இந்த விடியா மூஞ்சி—மூதேவி—இவள் வந்துதானே என் ஒரே மகனை விழுங்கிவிட்டாள். இவள் நாசமாப் போக. இன்னும் ஏன் இங்கிருக்கிருள்? போய்த் தொலைகிறதுதானே எல்லோரும்" என்று சொல்லிக்கொண்டிருந்ததை சுந்தரி கேட்டாள். அவள் உடல் நடுங்கியது. உள்ளம் பதறியது. "உங்கள் மகனை நானு கொன்றேன்?" என்று கேட்க எண்ணினுள். தைரியமில்லை. மறுநாள் தன் தாயிடம் தெரிவித்தாள். அதற்கடுத்த நாள் சுந்தரியும் அவளது பெற்ரேரும் சென்னைக்குப் புறப்பட்டனர்.

ஃ ஃ ஃ

கவலையற்றிருக்க நினைத்த சுந்தரியின் தந்தை பெருங்கவலையில் ஆழ்ந்தார் என்று சொல்லவா வேண்டும். 'கவலை மனிதனைக் கொல்லும்' என்பது பொய்யா? கவலை பலிகொண்டது அவரை. கஷ்டத்தின்மேல் கஷ்டம் சுந்தரியின் குடும்பத்தை ஆட்டிவைக்கிறது. 'பால்ய விவாகம்தானே நம் குடும்பத்திற்கு ஏற்பட்ட இவ்வளவு கேடுகளுக்கும் காரணம்' என்று சுந்தரியின் தாய் ஓரோர் சமயங்களில் நினைப்பதுண்டு. நினைத்தபோதெல்லாம், வெம்புவாள். வீழ்ந்தழுவாள். என்ன பயன்?

சுந்தரி கலியாணம் வேண்டுமென்ருளா? கலியாணம் நடந்ததே கணவனைக் கொன்ருளா? அந்த அழகிய—கட்டுமஸ்தான தேகமுடைய ஒரு பாவமுமறியாத கன்னிக்கு 'விதவை' என்ற பட்டம் சூட்டப்பட்டதுதானே பலன்?

காலச் சக்கரத்தின் வேகம் சாமான்யமா? ஓராண்டு கழிந்தது. பருவமடைந்த சுந்தரியின் அவயவங்கள் நல்ல வளர்ச்சியடைந்தன. அவளுக்கு 'விதவை' என்ற பட்டம் சூட்டப்பட்டதே தவிர அவளுடைய அவயவங்கள் ஒன்றும் விதவையாகிவிடவில்லை. சக்தியிழந்துவிடவில்லை என்பதை உணர்ந்தாள். இயற்கை உணர்ச்சி

அவளைப் பற்றியது. வாடினாள் சமூகவிலங்கு அவளது உணர்ச்சியை மட்டம்தட்டியது. நினைவை மாற்றமுயன்றாள். அதன் பலன் உடல் இளைத்துப்போனதுதான். அவளுக்குவேண்டிய மருந்தைக் கொடுக்க யார் முயற்சித்தது? இல்லை.

மதுரையிலிருக்கும் சுந்தரியின் தமக்கை குடும்பத்தார் ஜனவரிப் பண்டிகைக்காக சென்னை வந்திருந்தனர். தமக்கையின் புதல்வி ஐந்து வயதுள்ள சரோஜாவுடன் விளையாடிக்கொண்டிருப்பது சுந்தரிக்குச் சிறிது பொழுதுபோக்காக இருந்தது ஓர் தினம் எல்லோரும் சினிமாவுக்குச் செல்ல ஆயத்தப்பட்டனர். சுந்தரி குழந்தை சரோஜாவுக்கு தலை பின்னினாள். பூ வைத்தாள். குழந்தை சரோஜாவுக்கு என்ன தோன்றிற்றோ என்னவோ ? "சித்தி! ஏன் சித்தி நீ மட்டிலும் அம்மாவாட்டமா பொடவை கட்டிக்கிறதில்லை? வெள்ளைப்பொடவையே கட்டிண்டிருக்கயே! எனக்கு ஏன் இவ்வளவு பூ, நீயும் கொஞ்சம் வச்சுக்க சித்தி" என்று சொன்னாள் குழந்தை.

குழந்தையின் கேள்வி சுந்தரியின் பழய நினைவுகளைத் தூண்டிவிட்டது. என்ன பதில் சொல்வாள்? தலை கவிழ்ந்தாள். கண்களிலிருந்து நீர் சொட்டியது. குழந்தை உள்ளம் பதறியது. "சித்தி ஏன் அழறே" என்றாள் சரோஜா. சுந்தரி விழித்தாள். யாரோ வரும் சப்தம் கேட்டது. கண்களைத் துடைத்துக்கொண்டாள். தெருவில் போகும் சினிமா வண்டியைக் காண்பித்தாள் குழந்தைக்கு சுந்தரி.

சுந்தரியின் தாய் உள்பட எல்லோரும் சினிமாவுக்குச் சென்றார்கள். வீட்டுக்குக் காவல் விதவைப்பட்டம் சூட்டப்பட்ட சுந்தரி.

குழந்தையின்கேள்வி அவள் உள்ளத்தில் உறுத்திக்கொண்டேயிருந்தது. இயற்கை உணர்ச்சி அவள் மனதைப் பிறிட்டுக்கொண்டு வெளிக்கிளம்பிற்று. கட்டிலில் குப்புற வீழ்ந்தாள். தலைமயிர் பூமியைத் தொட்டது. கண்ணீரால் கழுவப்பட்டது தலையணை.

திடீரென "உங்க அத்திம்பேரா வந்திருக்கிறார்?" என்று யாரோ கேட்பது காதில் விழுந்தது. திடுக்கிட்டு எழுந்தாள். அடுத்த வீட்டு ராமநாதன் வாசற்படியைப் பிடித்துக்கொண்டு நின்றான். அவன் "ஐயோ! ஏன் இப்படி அலங்கோலமாக கிடக்கிறாய்? என்ன நேர்ந்தது? வீட்டில் யாருமில்லையா?" என்றான். சுந்தரி கண்களைத்

துடைத்துக்கொண்டு இரண்டு நிமிடம் மௌனமாயிருந்தாள். பிறகு "உள்ளே வாயேன்" என்றாள்.

ஃ ஃ ஃ

சில நிமிடத்திற்குப்பின், ராமநாதன் சுற்றுமுற்றும் பார்த்த வண்ணம் வெளியே சென்றான்.

சுந்தரியின் உடை அலங்கோலமாயிருந்தது. அவள் என்றுமே அனுபவிக்காத இன்ப உணர்ச்சியை அனுபவித்த மாதிரியாக அவளுக்குத் தோன்றியது. மிரள மிரள விழித்தாள். "ஆ! என்ன காரியம் செய்தேன்" என்ற வார்த்தை அவளுடைய வாயிலி ருந்து எழுந்தது. எதிரிலிருந்த தூணைப்பார்த்து பைத்தியக்காரியைப் போல சிரித்தாள். பயங்கரமாயிருந்தது அந்தச் சிரிப்பு. உடனே முகத்தைச் சுளித்துக்கொண்டாள். "என் தாய்க்கு இவ்விஷயம் தெரிந்து போகுமா? நான் செய்தது குற்றமா?" என்றகேள்விகளைக் கேட்டாள். இல்லை. சரிதான், எல்லோருக்கும் ஏற்படும் ஆசை என க்கும் ஏற்பட்டது; எல்லோரையும் போல நானும் அனுபவித்தேன். இது தவறல்லவே ஆனால், ஐயோ! அம்மா! என்ன இவ்வளவு பய மாயிருக்கிறதே. நான் செய்தது குற்றமா? எனக்கு என்னநேரும்?" இவ்வாறு மாறி மாறிப் பிதற்றினாள். தான் செய்தது சரியா, தவறா என்பதை நிச்சயிக்க அவளால் இயலவில்லை. திடீரென உண் டான அதிர்ச்சியால் மூளை குழம்பிவிட்டதோ? அந்தோ! கொடுமை! கொடுமை!! அக் கைம்பெண்ணின் கஷ்டம் பார்க்க சகிக்கவில்லை.

செய்வதறியாது விழிக்கிறாள். சுவாதீனமிழந்தாள். ஒருவித உணர்ச்சி உந்துகிறது அவளை. பயங்கரமான முகத்தோற்றம் அவளைப் பார்ப்பவர்கள்—பெரும் பிழையை—கொலைக்குச் சமமான குற்றத்தைச் செய்துவிட்டவள் என்று சொல்வார்கள். அளவுக்கு மீறிய இயற்கை உணர்ச்சியால் சமூகக் கட்டை உடைத்தாள். உடைத்தாளே தவிர தைரியமில்லை. கோழை. மேற்கொண்டு எக் காரியமும் செய்ய கிலி அவளை விடவில்லை.

எழுந்தாள். பைத்தியக்காரியைப் போல ஆடியசைந்து கொண்டு நடந்தாள். வீதிக்கு வந்தாள். கிழக்கு நோக்கிப் புறப் பட்டாள். இருட்டிவிட்ட நேரம். அபலைப் பெண்ணொருத்தி தெரு வில் போவதைக் கவனிக்க யாருக்கென்ன கவலை?

அவள் எங்கு செல்கிறுள்? சென்னைக்குக் கிழக்கே என்ன இருக்கிறது. பரந்த கடல்.

ஏ சமூகமே! நீ பலிகொண்ட எண்ணிக்கைகளுள் சுந்தரியையும் ஒன்ருகச் சேர்த்துக்கொண்டனையோ?

---

## மாதர் மறுமண கீதம்.

பட்டமங்கலம் M. K. சுதன் பாடியது

(கதர்க்கப்பல் கோடி தோணுதே என்ற மெட்டு)

பல்லவி

மாதர்கள் மறுமணமே
மாநிலத்தீர் புரிதல் பெருந்தியாகமே (மா)

அநுபல்லவி

காதலனை யிழந்து கண்ணீ ருதிர்க்கு மிளம்
மாதரை மணப்பது மாபெரும் புண்ணியம். (மா)

சரணம்

ஆண் துணை யிழந்திடில்
அடுத்து மணஞ் செய்தல் போல்
தான் பதி யிழந்திடில்
தையலர் மணஞ் செய்தால்
ஏற்கா தோ
புவி போற்ரு தோ
தூற்ருது போற்றுவீர். (மா)

சரணம்

சின்னஞ் சிறுவர் மணம்
இன்னதென் றறியா முனம்
அன்னவ ரீன்ற வரும்
ஆக்கினர் பொம்மை மணம்
ஆண் மடிந்தால்
அந்தோ ஆரணங்கை
அமங்கிலியாகச் செய்யாது (மா)

# வேதசாஸ்திரப் பிரமாணங்கள்.

மாதர் மறுமணத்திற்குச் சாஸ்திரங்கள் முற்றும் ஆதரவளிக்கின்றன. ஆனால் அறைகுறையான சாஸ்திரிகள் சிலர் பட்டிக்காடுகளிலிருந்து பொது ஜனங்களிடம் தவறான பிரசாரத்தைச்செய்ய முற்படுகின்றனர். அவர்களுடைய பொய்யுரையைப் பொய்யாக்க இதன்கீழ் குறிப்பிடப்பெறும் வேத சாஸ்திர ஆதாரங்கள் பயனளித்தல் கூடும்.

உதிர்ஷ்வ நார்யபிஜீவலோக மிதாஸு மேதமுபசேஷ ஏஹி,
ஹஸ்தக்ராபஸ்ய திதிஷோஸ்த்வ மேதத்பத்யுர் ஜநித்வ
மபிஸம்பபூவ

கிருஷ்ணயஜுர்வேத தைத்திரிய ஸம்ஹிதை (6-1-14)

பெண்ணே! நீ இந்த இறந்துபோன நாயகனோடு தூங்கிக் கொண்டிருக்கிறாய். எழுந்திரு! உயிரோடு வாழுகின்ற சீவர்கள் கூட்டத்தின் முன்னால்வா, விதவையின் கைகளைப் பிடிக்கின்றவனும், மறுமணத்தில் விருப்பமுள்ளவனுமாகிய நாயகனுக்கு மனைவி ஆகு.

—சாயணர் உரை.

இயம் நாரி பதிலோகம் வ்ருணாநா நிபத்யத உபத்வா மர்த்ய
[ப்ரேதம்
தர்மம் புராண மனுபாலயந்தீ தஸ்யை த்ரவிணம் சேஹதேஹி

அதர்வம் காண்டம் 18, அனுவாகம் 3, மந்திரம் 1.

கணவன் இறந்தபிறகு சந்தானத்தை விரும்புகின்ற பெண்ணை இல்லறவொழுக்கந் தழுவி நடக்கும் புருடனுக்கு மறுமணஞ் செய்வித்து குழந்தைகளும் செல்வமும் அடையும்படியாகச் செய்வீர். அந்தப் புருடனும் அவளை மனைவியாகக் கொண்டு சந்தானத்தாலும் பொருளாலும் காப்பாற்றி வருக.

குஹஸ்வி த்தோஷா குஹவஸ்தோரஸ்விநா குஹாபிஷித்வம்
காத் குஹோஷது

கோவாம் சயுத்ரா விதவேவ தேவரம் மர்ய்யம் நயோஷா
க்ருணுதே ஸதஸ்த ஆ.

இருக்கு 10-8-40-2.

அஸ்வினி குமாரா! இரவில் நீ எங்கே வசிக்கிறாய், பகலில் உன்னுடைய இருப்பிடம் எங்கே? யாகம் செய்கின்றவர் உன்னை வேதிகைக்கு அழைப்பதுபோன்று, விதவை தனது மறு கணவனை அல்லது மனைவி தனது நாயகனை தன்னுடைய சயன அறைக்கு அழைக்கின்றாள்.

யா பூர்வ பதிம் விதவா அதாங்யம் விந்ததேபரம்
பஞ்செளதனம் ச தாவஜம் ததாதோ ந வியோஷித

அதர்வம் காண்டம் 9, அனுவாகம் 3, சூக்தம் 5, மந்திரம் 27.

ஒரு பெண் தனது புருடன் இறந்தபிறகு மற்றொருவனை மறு மணம் செய்துகொள்கின்றாள். அவர்களிருவரும் ஐம்புலன்களா லும் ஒன்றுபட்டு காதலித்து வாழ்வார்களானல் எக்காலத்திலும் அவர்களுக்குள் பிரிவு ஏற்படப் போவதில்லை.

ஸமாந லோகோ பவதி புனர்புவாபர: பதி:
யோ அஜம் பஞ்செளதனம் தக்ஷிணாஜ்யோதிஷம் ததாதி

அதர்வம் 9-3-5-28.

ஐம்புலன்களாலும் ஒன்றுபட்டு ஒத்த மனப் பண்புடன் காத லிக்குந் தன்மை வாய்ந்த இருவர் மறுமணம் செய்துகொள்வதற் குத் தகுதி வாய்ந்தவர். அத்தகைய புருடன் புனர் விவாகம் செய்துகொண்ட பெண்ணுக்குத் தகுந்த கணவனாவான்.

யஸ்யா ம்ரியேத் கன்யாயா வாசா ஸத்யேக்ருதே பதி
தாமநேந விதாநேந நிஜோ விந்தேத தேவர:

மனுஸ்மிருதி9-96

ஒரு பெண்ணை நிச்சிதார்த்தம் செய்திருந்த புருஷன் இறந்து விட்டால் அந்தப் பெண்ணின் மைத்துனன் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளலாம்.

கன்யை வாக்ஷதயோர்வா பாணிக்ரஹண தூஷிதா
புநர்பூ: ப்ரதமா ப்ரோக்தா புந: ஸம்ஸ்கார கர்மணா
நாரதஸ்மிருதி 12-46

ஒரு பெண்ணுக்கு கல்யாணம் மாத்திரம் நடந்திருந்து புருஷனோடு அவளுடைய சம்ஸர்க்கம் நடக்காமலிருந்தால் அவள் கன்னிகைக்கு ஒப்பாவாள். அவள் மறுபடியும் கல்யாணம் செய்துகொள்வதால் அவளைப் 'புனர்பூ' என்பர்.

ப்ராஹ்மணா: க்ஷத்ரியா: வைஸ்யா: சூத்ரா: ஸ்வகுல யோஷிதாம்,
புநர் விவாஹம் குர்வீரந் நன்யதா பாபஸம்பவ:
—ஜாபாலஸ்மிருதி.

பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் தங்கள் தங்கள் குலத்திலுள்ள விதவைகளுக்கு மறுமணம் செய்யவேண்டும். இல்லாவிட்டால் கெட்ட நடத்தை ஏற்படுவதற்கு ஏதுவாகும்.

நஷ்டே ம்ருதே ப்ரப்ரஜிதே க்லீவேச பதிதே பதௌ,
பஞ்சஸ்வா பத்ஸு நாரீணாம் பதிரந்யோ விதீயதே.
—பராசரஸ்மிருதி 4–28.

புருஷனுடைய புலன் தெரியாமலிருந்தாலும், இறந்துபோய்விட்டாலும், சந்நியாசியாகப் போயிருந்தாலும், பேடியாகவிருந்தாலும் அல்லது கெட்ட நடத்தையில் ஈடுபட்டிருந்தாலும் இந்த ஐந்து ஆபத்துக்களினின்றும் தன்னைக் காப்பதற்குப் பெண்ணானவள் மற்றொரு புருடனை மணந்து கொள்ளலாம்.

வரயித்வா து ய: கஸ்சித் ப்ரணஸ்யேத் புருஷோ யதா
ருத்வாகமாம் ஸ்திரீணதீத்ய கன்யா அந்யம் வரயேத்வாம்.
—காத்யாயனர் வாக்கு.

பெண்ணினுடைய விவாஹத்திற்கு பிறகு புருஷன் இறந்துபோய்விட்டால் மூன்று வருடங்களுக்குப் பின் அந்தப் பெண்ணுக்கு மறுமணம் செய்துவைக்கலாம்.

பாணிக்ரஹே ம்ருதே வாலா கேவலம் மந்த்ர ஸம்ஸ்க்ருதா

ஸா சேதக்ஷதயோநி: ஸ்யாத் புந: ஸம்ஸ்காரமர்ஹதி.

—வசிஷ்டர் அத்தியாயம் 17

விவாஹத்திற்கு பின் புருஷன் இறந்துபோனாலும், பெண்ணுக்கு மந்திரச் சடங்குகள் மாத்திரம் நடந்து புருஷனுக்கும் அவளுக்கும் சம்ஸர்க்கம் நடக்காமலிருந்திருந்தாலும் அந்தப் பெண் மறு மணத்துக்கு தகுதியுள்ளவள்.

கன்யாயாம் தத்த ஸுல்காயாம் ம்ரியேத யதி ஸுல்கத:
தேவராய ப்ரதாதவ்யா யதி கன்யா அனுமந்யதே.

மனுஸ்மிருதி 9-67.

சீதனமாகப் பசு அல்லது பணம் கொடுத்து பெண்ணுக்கு விவாஹம் நடந்திருந்து, அந்தப் பெண்ணின் புருஷன் இறந்துவிட்டால், அதன் பிறகு அந்தப் பெண் சம்மதப்பட்டால் அந்தப் பெண்ணின் மைத்துனனுக்கு விவாஹம் செய்து கொடுக்கலாம்.

யா பத்யாவா பரித்யக்தா விதவா வா ஸ்வயேச்சயா
உத்பாதயேத்புநர் பூத்வா ஸ பௌனர்பவ உச்யதே

மனுஸ்மிருதி 9-175

ஒரு ஸ்திரியை அவளுடைய புருஷன் வேண்டியதில்லையென்று நீக்கிவிட்டாலும் அல்லது அவள் விதவையாகிவிட்டாலும், அவள் தன்னுடைய விருப்பப்படி மறுமணம் செய்துகொண்டு குழந்தைகளைப் பெற்றால் அவளை பௌனர்பவ என்று சொல்லுகிறார்கள்.

அக்ஷதா ச க்ஷதா சைவ புனர்பூ:
சம்ஸ்கிருதா புன:

பெண்குறி இருந்தாலும் சரி, இல்லாமலிருந்தாலும் சரி, மறு கல்யாணம் செய்வதனால் புனர்பூக என்று சொல்லப்படுகிறது.

யாக்யவல்க்ய ஸ்மிருதி:- விவாகபிரகாணம் 3 ஸ்லோகம் 67

ஸசேதக்ஷத யோனி: சியாத்கத ப்ரத்ய கதா பிவா
பவுனர்பர் ஹதி வேன பர்த்ரா ஸ புன: சம்ஸ்காரம

மனுஸ்மிருதி 9-சு 176

ஒரு பெண் தன் புருஷனுடன் புணராமலிருந்தாலும் அல்லது புருஷனுடைய வீட்டிலிருந்து திரும்பி வந்திருந்தாலும் அவளுக்கு சாஸ்திரப்படி மறுமணம் செய்து வைக்கலாம்.

த்வௌது யௌ விவதெயாதாம்
த்வாப்யாம் ஜாதௌஸ் த்ரியாதநெ
தயொர்யத் யஸ்யபித்ர்யம் ஸ்யாத்
தத்ஸக்ருஹ்ணீத நெதர:

மனு அத்தி 9-சு 191

புத்திரன் பிறந்தபின் கணவனிறந்து பின்பு அந்த மனையாள் மற்றொருவனை மணந்து ஒரு பிள்ளையைப் பெற்றுக்கொண்டால் அவ்விரண்டு புத்திரர்களும் தன்தன் பிதாவின் ஆஸ்தியை எடுத்துக் கொள்ள வேண்டியதே யல்லது இரண்டாஸ்தியையும் சேர்த்துப் பிரித்துக்கொள்ளக்கூடாது.

அபச்யம் யுவதிம் நீயமானாம் ஜீவாம்ருதபிய: பரிணீயமானாம்
அந்தேநயத் தமஸா ப்ராவிருதாஸித் பிராக்தோ ஆபாசீ மனயம் ததேனும்

அதர்வம் 8-3-3

வாலிப ஸ்திரீ இறந்துபோன புருஷனுடைய தியானத்தால் தனியாக வைக்கப்பட்டு மறுபடியும் கலியாணம் செய்து வைத்திருப்பதைப் பார்த்திருக்கிறேன். அவள் முதலில் அதிக துக்கத்தாலும் வருத்தத்தாலும் பீடிக்கப்பட்டிருந்தவள் இப்பொழுது அதிக சுகத்தோடிருக்கிறுள்.

உத்வாஹிதாபி யாகன்யா நசேத் ஸம்ப்ராப்தமைதுநா
புந: ஸம்ஸ்கார் மர்ஹேத யதாகன்யா ததைவ ஸா

நாரதஸ்மிருதி 12-22

கல்யாணமான பெண் தன்னுடைய புருஷனோடு சம்ஸர்க்கம் செய்யாமலிருந்திருந்தால், கல்யாணம் ஆகாத பெண்களைப் போல் அவள் மறுபடியும் கல்யாணம் செய்துகொள்ளத் தகுந்தவளாவாள்.

நிஸ்ருஷ்டோ வாஹதோ வாபி யஸ்யா பர்தா ம்ரியேதவா

ஸாசேதகக்ஷத யோநி: ஸ்யாத் கதப்ரத்யா கதாபிவா
பௌனர்பவேன விதிநா புந: ஸம்ஸ்கார மர்ஹதி

பௌதாயன ஸ்மிருதி 4-17

ஒரு ஸ்திரியின் புருஷன் எங்கேயாவது காணமல் போனாலும் சரி, இறந்து போனாலும் சரி, அல்லது அந்த பெண்ணோடு சம்ஸர்க்கமில்லாமல் இருந்தால் மறுபடியும் அந்தப் பெண்ணுக்கு மறு விவாஹ சடங்குகளின் பிரகாரம் மறுமணம் செய்து வைப்பது சரியானது.

யதி ஸா பாலவிதவா பலாத்யக்தா அதவா க்வசித்
ததா பூயஸ்து ஸம்ஸ்கார் யாக்ருஹீத்வா யேனகேனசித்

போதாயன முனி 4-1-16

ஒரு பெண் பால்ய விதவையாக இருந்தாலும் அல்லது புருஷனால் அவளைப் பலாத்காரமாகத் தள்ளப்பட்டிருந்தாலும் எப்படியிருந்தபோதிலும் அவளுக்கு மறுமணம் செய்துவைக்க வேண்டும்.

நஷ்டே ஸந்யாஸமா பன்னே வ்யாதி க்ரஸ்தேச பர்தரி
புந: ஸ்திரிணாம் விவாஹ: ஸ்யாத் கலாவபி ந ஸம்சய:

அத்திரி ஸ்மிருதி.

புருஷன் இறந்தபிறகும் சந்யாசியாகி விட்டாலும் ஓயாமல் நோயாளியாக விருந்தாலும், கலியுகத்திலும் கூட அப்பேர்பட்ட மனிதனின் ஸ்திரீக்கு மறுமணம் செய்துவிட வேண்டும்.

பத்னி நாஸே யதாபும்ஸோ பர்த்ருநாஸே ததாஸ்திரியா:
புனர் விவாஹ: கர்த்தவ்ய: கலாவபியுகே ததா

வியாக்ரஸ்மிருதி.

மனைவி இறந்ததற்குப்பின் எப்படி புருஷன் மறுமணம் செய்து கொள்ளுகிறானோ அவ்விதமாகவே கலியுகத்தில் புருஷன் இறந்ததற்குப்பின் அந்த ஸ்திரீக்கு மறுமணம் செய்ய வேண்டும்.

மரணானந்தரம் பர்தூர்யத்ய நாஹதயோன்ய!
ஸ்திரியோ விவாஹ மர்ஹந்தி நாத்ர கார்யா விசாரணா.

—கௌதமஸ்மிருதி.

புருஷன் இறந்ததற்குப் பின் பக்குவமாகாத விதவைப் பெண்ணுக்கு மறுமணம் செய்துவிடவேண்டும். இப்படிச் செய்வதில் கூச்சப்படக்கூடாது.

புருஷாணுமிவ ஸ்திரிணும் விவாஹா வஹவோமதா:
பர்த்ரு நாஸே புந: ஸ்திரிணும் பும்ஸாம் பத்னீலயே யதா.

—வைசம்பாயனர்.

ஆண் மக்களைப் போன்று பெண்மக்களுக்கும் மறுமணம் உண்டு. மனைவி இறந்ததற்குப் பின் புருஷன் மறுமணம் செய்துகொள்வது போல புருஷன் இறந்த பிறகு மனைவிக்கும் மறுமணம் செய்வது சரியானதாகும்.

ஆஷோடஸ வயோ நார்யோ யதிதா மிருத பர்த்ருகா:
புனர் விவாஹ மர்ஹந்தி நதத்ர விஷயோபவேத்.

—கஸ்யபஸ்மிருதி.

பெண்ணின் புருஷன் இறந்துபோய் அந்த பெண்ணின் வயது பதினாறுக்குள் இருந்தால் அவள் மறுமணம் செய்துகொள்ளத் தகுந்தவள். இப்படிச் செய்வதில் எவ்வித சந்தேகமும் வேண்டாம்.

பர்த்ரபாவே வய: ஸ்திரிணும் புந: பரிணயோ மத:
ந தத்ர பாபம் நாரீணும் மன்யதா தக்கதிர்நஹி.

—அகஸ்தியஸ்மிருதி.

புருஷன் இறந்ததற்கு பின் அந்தப் பெண்ணுக்கு சரியான வயதாக இருந்தால், அவளுக்கு மறுமணம் செய்துவைப்பது சரியானது. இப்படி செய்வதில் பாபம் ஒன்றுமில்லை. இல்லாவிட்டால் அவளுடைய நல்ல நடத்தை கெட்டுவிடுகிறது.

அஸ்பிருஷ்டலிங்க யோநீ னாமாவிம்ஸதி வய ஸ்திரியா:
புநர் விவாஹ கர்தவ்யஸ் சதுஷ்ர்வபி யுகேஷ்வபி.

—விஸ்வாமித்ரஸ்மிருதி.

ஸ்திரிக்கும் புருஷனுக்கும் ஸம்ஸர்க்கம் நடக்காமல் இருந்து அந்த பெண்ணின் வயது 20-க்கு கீழ்ப்பட்டிருந்தால் நாலு யுகங்களிலும் அப்பேர்ப்பட்ட பெண்ணுக்கு மறுமணம் செய்துவிடவேண்டும்.

காசி ராஜாவான தேவதாஸ் தன் மகள் வித்யோத்தமாவை மந்திரியின் ஆலோசனைப்படி மறுமணம் செய்துவைத்தார்.

—பத்மபுராணம் பூமிகண்டம். அத். 85.

நாகராஜனுகிய ஐராவதன் போரில் சுபர்ணனுல் கொல்லப்பட்டு கணவனை இழந்த விதவையாகிய தன் மகளை அருச்சுனனுக்கு மறுமணம் செய்துவைத்தான். அவர்களுக்கு அரவான் என்ற மகனும் பிறந்தான்.

—மகாபாரதம் பீஷ்மபர்வம் அத் 19.

நளன் தமயந்தியை கைவிட்டபிறகு அவள் மறுமணம் செய்துகொள்வதற்காக சுயம்வரம் ஏற்பாடு செய்திருந்ததில் வெகு தூரங்களிலிருந்து அனேக ராஜாக்கள் அவளை மறுமணம் செய்துகொள்ளுவதற்காக சுயம்வரத்திற்கு வந்திருந்தார்கள்.

மஹாபாரதம் வனபர்வம் 17-23-24-25

வாலியின் மனைவி தாரை தனக்கு அங்கதன் என்ற மகன் பிறந்ததற்குப் பிறகும் தன்னுடைய மைத்துனனுன சுக்ரீவனை மறுமணம் செய்துகொண்டாள்.

ராமாயணம் கிஷ்கிந்தா காண்டம் 33

ஒரு பெண்ணின் விவாஹம் பேடியோடு நடந்திருந்து கொஞ்ச காலத்திற்குப் பின் அவன் பேடியென்று தெரிந்தால் ராஜா அவளுக்கு மறுமணம் செய்து வைக்க கடமைப்பட்டிருக்கிறுன். பெண்ணுக்கும் புருஷனுக்கும் சம்ஸர்க்கம் நடந்திருந்து பெண் விதவையானல் அந்தப் பெண்ணின் தகப்பனுர் மறுமணம் செய்துவைக்க கடமைப்பட்டிருக்கிறுன். இவ் விஷயம் சைவ தர்மத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

மஹா நிர்வாணதந்த்ரம் உல்லாஸ் ஸ்லோகம் 66-67

பிரசித்திபெற்ற ராஜா ஹமீர் சிங் தன்னுடைய படைத் தலைவனை மாலதேவ் என்பவரின் விதவை மகளோடு மறுமணம் செய்துகொண்டார்.

டாட் ராஜஸ்தான் (சிவ. வ்ருதலால்) பக்கம் 64-65-66

# வளையல் விழா அல்லது வீரர் தேர்தல்

"ஏயஸ்"

பல நூறு ஆண்டுகள் வணங்காமுடி மன்னராகத் திகழ்ந்த பெருமை இந்தியாவில் ராஜபுத்திர மன்னர்களுக்குண்டு. சீரும் சிறப்பும் ஓங்க அவர்கள் ஆண்டுவந்த மீவார் தேசம் உலகப்பிரசித்தி பெற்ற வீரதீரர்களையும் வீரப் பெண்மணிகளையும் இந்நாட்டில் தோற்றுவித்துப் புகழ் அடைந்திருக்கிறது.

பேரும் புகழும் பெற்ற ராஜபுத்திரர்கள் ஆண்ட ராஜஸ்தான மென்னும் இந்நாட்டில் வஸந்த காலத்திய வளையல் விழா நிகழும். இவ்விழாவின்போது துணை நாடி நிற்கும் மங்கையர் தமக்கேற்ற வீரர்களைத் தேர்ந்தெடுப்பர். எனினும் இதில் காதல் கலப்புக் கடுகளவுமிருக்காது. சகோதர நேசமே இருபாலார்க்கிடையிலும் நிலவ இவ்விழா வழிகோலும். ஒரு ராஜபுத்திரப்பெண்மணி தனது தோழி மூலமோ அல்லது குடும்பப் புரோகிதர் மூலமோ, தனக்கேற்ற வீரனுக்கு ஒரு வளையை அனுப்புவாள். வளையை ஏற்றுக்கொண்டால், ஏற்றுக்கொண்ட வீரன் அம்மங்கையின் தத்து சோதரனுகக் கருதப்படுவான். அவ்வாறு தத்து சோதரனுக முன்வரும் எந்தவீரனும் அம்மங்கைக்கு ஆபத்து ஏற்படும் எச்சமயத்திலும், தன் உயிரையும் தியாகஞ்செய்து அவளைக் காப்பாற்ற முன்னிற்பது வழக்கம். ஆனல், இந்த சோதர இணைப்பில் வேறு எத்தகைய இழிவான நோக்கமோ கொள்கையோ கற்பிப்பதற்கு இடமேற்பட்டதில்லை. உற்ற சமயத்தில் உவந்து வந்து உயிர் காப்பதே வளையல் பெற்ற வல்வீரர்களின் வழக்கமாக இருந்துவந்தது. எவரும் தாம் செய்து கொண்ட பிரதிக்ஞையை மீறியதாகச் சரித்திரம் சான்றுபகரவில்லை. இவ்வீரர்கள் சில சமயத்து வெவ்வேறு இனத்தினராகவோ, மதத்தினராகவோ கூட இருந்திருக்கின்றனர். அச்சமயத்திலும் இந்த சோதர இணைப்பு எத்தகைய உட்கருத்தைக்கொண்டு ஏற்பட்டுள்ளது என்பதை வீரர்கள் நன்குணர்ந்து தம் கடமையை நிறைவேற்றியிருப்பது இவ்வளையல் விழாவின் அழியாச்சிறப்பை அதி உன்னதப்படுத்தியிருக்கின்றது.

வளையல் மூலம் 'கத்து சோதரனு'கத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு வீரன், தனது சோதரிக்கு ஆபத்து ஏற்படும் சமயத்து தன் உயிரையே கொடுத்துக் காப்பாற்ற நேர்ந்த காலத்தும், அவனது தீரத்தைப் பாராட்டுவதாக அவளிடமிருந்து புன்சிரிப்பைக்கூடப் பெறுவது இயலாத காரியமாகவே இருக்குமாம். அவ்வளவு புனித மானதாக இந்த 'தத்தெடுப்பு' கருதப்பட்டு வந்தது. அம்மட்டோ! சில வீரர்களுக்குத் தாங்கள் வளையல் பெற்ற வனிதைகளின் வதனத்தைக்கூடப் பார்க்க முடியாமலிருந்திருக்கிறதாம். பார்க்கவேண்டுமென்ற ஆவலோ, அவசியமோ, ஏற்படுவதில்லை, வளையல்மூலம் வீர சோதரனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், வேறு எவ்வித பந்தமோ, விரோதமோ, நிபந்தனையோ இந்த வளையயல் இணைப்பைக் குலைக்க முடியாது.

இவ்வளவு கடினமான, பலமான இணைப்பை உண்டுபண்ணும் வளையல் விலையுயர்ந்ததாக இருக்குமோ என்றும் சந்தேகிக்கவேண்டியதில்லை அது பெயரளவில் ஒரு வளையலாகமட்டும் இருந்தால் போதும். மிக உன்னதமானது; விலை மதிப்பிற்குட்படாதது. உயிரையும் திரணமாக மதிக்கச் செய்யும் இந்த வளையல் இணைப்புக்கு ஈடாகக் காதல் இணைப்பைச் சொல்லமுடியுமோ? சந்தேகந்தான் என்று சரித்திரம் பதில் தருகின்றது.

ஓர்சமயம் சித்தூர், குஜராத் சுல்தானல் தாக்கப்பட்டபொழுது இந்த வளையல் இணைப்பின் நோக்கம் பூரணமாக நிறைவேறியதைச் சரித்திரத்தின் மூலம் அறியலாம்.

உதயசிங் இளவரசன். வயதில் சிறுவன். ஆகவே, போர்க்காலத்தில் பண்டியில் பாதுகாக்கப்பட்டான்.

குஜராத் சுல்தானுடைய பீரங்கிகளை எதிர்த்து சித்தூர் கோட்டை நிற்கமுடியவில்லை. மன்னனுடைய தாய் ஜவாஹிபாய் போர் உடைதரித்து, எதிரிகளை எதிர்த்து உயிர்துறந்தாள். அவளைப் பின் பற்றினர் வீரப் பெண்மணிகள் பலர். நிலைமையை உணர்ந்து கதி கலங்கிய கருணாவதி—உதய சிங்கின் அன்னை—மொகலாய மன்னன் ஹுமாயூனுடைய உதவியை 'வளையல் இணைப்பு' மூலம் நாடினாள். மொகலாய மன்னனும் மாதரசியின் வேண்டுகோளை மறுக்காது

வளையலை ஏற்றுக்கொண்டான். ஆனால், இனி எதிரிகளை எதிர்த்து நிற்கமுடியாது என்ற நிலைமை ஏற்படுவதுவரை தன் பிரதிக்ஞையை நிறைவேற்றுமாறு ஹுமாயூன் கேட்டுக்கொள்ளப்படவில்லை.

பகைவர் சித்தூரைத் தாக்கினர். அந்தப் பெரும் போரில் பதின் மூவாயிரம் பெண்கள் ஒரே அடியாக உயிர்த்தியாகம் பண்ணினர். கோட்டைக் கதவுகள் திறக்கப்பட்டன. போர்வீரர்கள் வெளியே போந்தனர்.

இனி நிலைமை தாங்கவொண்ணாது என்று தோன்றிய பின்னர் ஹுமாயூனுடைய உதவி கோரப்பட்டது. தன் பிரதிக்ஞையை நிறைவேற்ற ஹுமாயூன் சற்றும் பின்வாங்கவில்லை. தன் 'சோதரி' யின் வேண்டுகோளை நிறைவேற்ற வங்காளத்தில் தான் ஆரம்பித்திருந்த திக்விஜயத்தைக் கைவிட்டுவிட்டு சித்தூர் நோக்கி விரைந்து வந்தான். அவனது வருகையால், குஜராத் சுல்தான் முற்றுகையை விட்டு விட்டுத் தன்னாடு திரும்பினான். எதிரியின் தேசத்தின் ஒரு பகுதியும் பிடுங்கப்பட்டு மீவாருடன் சேர்க்கப்பட்டது. வளையல் விழாவின் மகிமைதான் என்னே?

---

# கனகாம்பரம்.

குட்டிச்சாத்தன் A B C D E F etc.

கனகாம்பரம் என்றால் பெண்கட்கு வெகு பிரியம். கனகாம்பரமென்றால் என்னவென்று நினைக்கிறீர்கள்? கனகம் என்றால் தங்கம். அம்பரமென்றால் துணி. தங்கத்காலான துணி போன்றது என்று பொருள். கனகாம்பரமென்று எதைச் சொல்கிறார்கள்? ஒரு புஷ்பத்தை. இந்தக் கனகாம்பரப் பூ பெண்மக்களுடைய மனத்தைக் கொள்ளையடித்துவிட்டது. என்னய்யா காரணம்? அதில் மணமிருக்கிறதா குணமிருக்கிறதா? சாஸ்திர சம்மதமுள்ளதா? குல தெய்வத்துக்கு பிரியமானதா?

மல்லிகைப் பூவைப் பாருங்கள். எவ்வளவு மணம்! தலையில் சூடிக்கொண்டால் கமகமவென்று மணக்கிறது. தொட்ட கை

மணக்கிறது. ரோஜாப் பூவின் அழகென்ன? நிறமென்ன? மணமென்ன? ஆஹா ரோஜாவைப் போலொரு பூவுண்டா? ஜெவ்வந்தி மலர் என்னகலர்? எவ்வளவு மணம். தோற்றப் பொலிவு. தஞ்சாவூர் கதம்பத்துக்கு இணை வேறு எதைச் சொல்லமுடியும்? இப்புஷ்பங்களை நமது பெண் மக்கள் எவ்வளவு பிரியமாகச் சூடிக்கொண்டனர். இப்புஷ்பங்களைப் பல பெண்கள் சூடிக்கொண்டு கூடிவிட்டால் அந்தப் பக்கத்தில் போகமுடியுமா! எவ்வளவு மணமாக இருக்கும். பெண்கள் கூட்டம் பூந்தோட்டமாக மணக்குமே!

இவ்வளவு மனோகரமான புஷ்பங்கள் எங்கே? இறந்தா போயின. இல்லை. உயிருடன் மலர்ந்துகொண்டிருக்கின்றன. மதுரைக் கோயிலில் அம்மன் சன்னதியில் புகுந்து பாருங்கள். என்ன மணம் மணக்கிறது. பூக்கடை வீதியில் புகுந்தால் மணக்கிற மணத்தைக் காகிதத்தில் எழுதமுடியுமா? இந்தப் புஷ்பங்களில் சுழன்ற நமது பெண் மக்களின் மனமானது ஒரே அடியாக கனகாம்பரத்தில் புகுந்துவிட்டது. கனகாம்பரத்தில் மனத்தை இழுத்துப் பெண்மக்களை அடிமை கொள்ளும்படியான குணமென்ன இருக்கிறது. "ஒன்றுமில்லை வீண்" என்று ஒரே வைதீகம் பேசிவிடுவதில் பிரயோசனமில்லை. ஏதோ ஒரு சக்தி கனகாம்பரத்திலிருக்கிறது. இல்லாவிட்டால் இத்தனை பெண்களும் அதைச் சூடிக்கொள்ள முன் வருவார்களா?

இந்தக் கனகாம்பரத்தைப்பற்றி ஒரு கதை இருக்கிறது. புராணமல்ல, உண்மைக்கதை. இன்றும் நடக்கிற சங்கதி. ஒரு இளங்காதலனும் இளங்காதலியும் கல்யாணம் செய்து கொண்டார்கள். சிறு குடித்தனத்தையும் துவங்கினார்கள். சிறிய வீடு. அழகான வீடு. கூண்டில் இரண்டு கிளிகள் வசிப்பது போல வசித்தார்கள். அந்த வீட்டைச்சுற்றிச் சிறு தோட்டமிருந்தது. அதில் கொஞ்சம் காய்கறி போட்டார்கள். சில புஷ்பச் செடிகளையும் வைத்தார்கள். இரண்டு கிளிகளுமாக அவற்றிற்குத் தண்ணீர் விட்டுவளர்த்தன. காய்கறிச் செடிகள் காய்த்தன. பூஞ்செடிகள் பூத்தன.. காதலர்கள் பூவெடுத்துச் செண்டுகட்டிச் சூடி விளையாடி மகிழ்ந்தனர். இப்படிப்பட்ட இளம் ஜோடிகளுக்கு ஒரு பிரிவுகாலம் வந்தது. தொழில் முறையில் கணவன் கப்பலேறினான். அயல்நாடு சென்றான். இரு

வருடைய உடலும் பிரிந்து நின்றன. ஆனால் அவர்களுடைய மனம் ஒன்றையொன்று விடவில்லை. காதலி உள்ளத்தில் இரவும் பகலும் இடைவிடாமல் காதலன் காட்சி கொடுத்தான். அப்படியே அவனுள்ளத்தை விட்டு ஒரு வினாடிகூட அந்நங்கை பிரியவில்லை. என்றாலும் இருவருடைய உடற்பிரிவு அவர்களை வெறுப்பியது. வாரமொரு கடிதம் எழுதிக்கொள்வார்கள். அந்தக் காதற் பெண் பின் வருமாறு தன் கணவனுக்கு ஒரு கடித மெழுதினாள்:—

என் காதல் செல்வமே!

நாம் வளர்த்த செடிகளில் வெண்டி காய்க்கிறது. அது தங்கள் கைவிரலைப்போலிருக்கிறது. பறிக்க மனம்வரவில்லை. புடலையிலிருக்கும் பிஞ்சுகளும், கத்தரிக் காயும் தங்கள் வரவை நோக்கித் தலைகீழாக நின்று தவம்புரிகின்றன. தங்கட்கு மிகவும் இன்பந் தரும் ஜாதி மல்லிகை மலர்ந்து வீடெல்லாம் மணம் வீசுகின்றது. அதில் சில புஷ்பங்களைத் தங்கட்கு அனுப்பியிருக்கிறேன்.

கனகம்.

என்ற கடிதத்தைக் கணவனான ஏகாம்பரம் பிரித்தான். முத்தமிட்டுப் படிக்க ஆரம்பித்தான். உலகமே மறந்து போய்விட்டது. பிரிந்த வெஞ்சுரத்தில் தவிக்கும் உள்ளமுடைய காதலன் காதலி கடிதம் கையிற் கிடைக்கப்பெற்றால் என்ன பாடு படுவான்? அதனை உண்மையான காதற் செல்வத்தை அடைந்தவர்தானே அறிய முடியும். கடிதத்தை முற்றும் படித்தான். பூ எங்கே? கையிலிருக்கும் காகிதக் கூட்டைக் கவனித்தான். நான்கு மல்லிகைப் பூக்கள் இருந்தன? எப்படியிருந்தன? கவரினுள்ளே ஒட்டிக்கொண்டிருந்தன. வலித்தெடுத்தான். ஆஹா! மல்லிகையே! மணமலரே! எங்கே உன்னுடைய நிறம்? அழகெங்கே? மணமெங்கே? மேனியின் குளிர்ச்சியெங்கே? எல்லாம்வற்றி வரண்டு காய்ந்து நன்மணமும் மாறிப்போய் விட்டனையே? பிரிந்த காதலர் படும் பாட்டை நீயும் பட்டனையோ? என்று புலம்பினான். அடுத்த பதில் கடிதத்தில் பின் வருமாறு தன்காதலிக்கு எழுதினான்:—

கண்ணே!

ஜாதி மலர் கிடைத்தது. ஆனால், அதன் மணமும் குணமும் இங்கே வந்து சேரவில்லை. நாமிருவரும் பிரிந்து வருந்தும் வருத்தத்

தை அப் பூவும் பெற்றது போலும்! வாடி வதங்கி நன்மனம் புன்மணமாகி நிறை கலங்கி வந்துற்றது. உன்னையடைந்து நான் மகிழும் போது அப்பூவினமும் நறுமணந் தந்து மகிழ்ச்சியளிக்கும். அந்நாளை எதிர்பார்த்து ஏங்கிநிற்கிறேன்.

ஏகாம்பரம்.

இதனைக் காதலி கனகம் பார்த்தாள். ஐயோ! எனக்கு இன்பந்தரும் மலர்கள் அவருக்கு இன்பமளிக்க மறுக்கின்றனவே. ஆம்! 11 நாள் கடல்யாத்திரை செய்தால் மெல்லிய பூ எப்படி வாடாதிருக்கும்? நாம் செய்தது பிழைதான்; என்று கவலையடைந்தாள். கத்திரி காய்க்கிறதே. வெண்டிக்காயை எண்ண முடியவில்லையே? அவர் இட்ட புடலையும் அவரையும் காய்த்துக் குலுங்குகின்றனவே. இந்தப் புத்தம் புதிய காய்களை அவருக்கு அனுப்ப முடியவில்லையே. வற்றலும் வடகமுமாக்கியனுப்பி என் பயன்? இங்கே இன்பமளிக்கும் பூ அங்கே உருமாறிவிடுகின்றதே என்று கவலையடைந்தாள்.

சென்னையில் வாங்கிவந்து விதைத்த கனகாம்பரச் செடிகள் முளைத்து வளர்ந்து வந்தன. கணவன் சென்ற மூன்றும் மாதம் பூக்க ஆரம்பித்தன. வீட்டில் மலர்ந்த பல்வேறு மலர்களையும் பறித்து வைத்தாள். 11 நாட்களாகியும் கனகாம்பரப்பூ இருந்தபடியே இருந்தது. கண்டாள். ஆனந்தம் கொண்டாள். பின்வருமாறு ஒரு கடிதத்தை நாயகனுக்கு எழுதினாள்.

அன்பே!

கவலை மாறினேன். மல்லிகைப்பூ செய்த மோசம் என் மனத்தைத் துன்புறுத்தியது. மகா மோசமாக மல்லிகை மலர் ஏமாற்றிவிட்டது. எனக்கு அழகாகவும் மணமாகவும் தோன்றி மயக்கி தங்களிடம் வரும்போது அவற்றை இழந்து வெறுப்பை உண்டாக்கிவிட்டது. இனி அதைத் தொடவும் மனம் வரவில்லை. அப்படியே எல்லாப் பூவுமிருக்கின்றன. ஆனால் இந்தக் கனகாம்பரம் உயர்ந்த குணமுள்ளது. சினேகிதத்துக்கு நல்ல பூ. என்னிடம் எப்படியிருக்கிறதோ அப்படியே உங்களிடமும் இருக்கும். நிறம் மாறாது; வாடாது; அழுகாது; நாளாக ஆக உருமாறி வெறுப்பைத்தராது.

இப்படிப்பட்ட பூவொன்று பூக்க ஆரம்பித்துவிட்டது. மணமுள்ள புஷ்பமெல்லாம் பெண்கள் சூடினால் சில மணி நேரத்தில் வாடிவதங்கிப்போகும். இது அப்படிவாடுவதில்லை. ஆதலால் பெண்கள் யாவரும் இதனை விரும்புகின்றனர். இந்த மங்காத மலரை உங்கட்கு அனுப்புகிறேன்.

கனகம்.

இக் கடிதத்தைக் காதலன் பிரித்தான். படித்தான். கனகாம்பரத்தை எடுத்தான், காகிதப் பூவோ என்று சந்தேகப்பட்டான். இல்லை. கனகாம்பரம். சந்தேகமில்லை. காதலருக்கு சன்மானமளிக்கவென் தூதனுப்ப—இருவருக்கும் வித்தியாசமில்லாமல் காட்சியளிக்கும் இன்பப்பூ இதுதானே என்று மகிழ்ந்தான். கடிதமெழுத ஆரம்பித்தான்!

என் செல்வமே!

கனகாம்பரம்! நல்ல பெயர்! எவ்வளவு பொருத்தம்! நீ கனகம்; நான் அம்பரம். இடையில் ஏகம் எதற்கு? இனி என் பெயரை அம்பரம் என்று மாற்றிவிட்டேன். இரண்டையும் இப்பூ ஒன்று சேர்க்கிறது. சரிதானா? நீ கனகம் நான் அம்பரம். இரண்டும் சேர்ந்தால் கனகாம்பரம். கனகாம்பரம் நல்ல நிறம்! நல்ல குணம்! மல்லிகைப் பூவில் மணமிருக்கிறது. அல்பபுத்தி. மாலை மலர்ந்து இரவே வாடி நாறிப்போவதும் காலை மலர்ந்து மாலையில் வாடி மறைவதுமான மலர்களால் என்னபயன்! கனகாம்பரம் ஒரு தனி வகை. அந்த அழகான செந்நிறம் வெகு நயமாக இருக்கிறது. ஒரு நூறு பூவை ஒன்றாகக் குஞ்சமாகக் கட்டி ஜடையின் உச்சியில்வைத்து முடித்துவிட்ட இளம்பெண்கட்கு நகை யெதற்கு? நல்ல கருங்கூந்தலில் கனகாம்பரக் கலர் வெகு நயமாக விளங்குமல்லவா? ஆறு மாதங்கட்குள் வந்துவிடுகிறேன். நான் வரும்போது கனகாம்பரம் ஏராளமாகப் பூக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டுகிறேன். என் கையால் செண்டு கட்டி உன்னுடைய நீண்ட கூந்தலில் சூட்டி மகிழ்கிறேன். சரியா! சரி. கனகாம்பரம் வாழ்க.

கனகாம்பரம்.

---

# கெட்டலைய வேண்டாம்.

வீடெல்லாம் மாதர் விதவையெனக் கண்கலங்கிப்
பாடெல்லாம் பற்றிப் பரிதபிக்கக்—காடுறையும்
பாம்புக்குப் பால்வார்த்துப் பன்னு திருமணத்தை
வேம்புக்குச் செய்திடுவார் வீண்.

சேலே விழியாகித் தீங்கரும்பே சொல்லாகிப்
பாலே மனமான பைங்கிளியை—ஞாலமதில்
சேலை நகைபறித்தார் தீண்டாத குப்பையென்று
காலாலே தள்ளினர் காண்.

பெற்ற சிறுமகளைப் பேய்க்கோல மாக்கிவைத்துக்
கற்றோர் வெறுக்கவிந்தக் காசினியில்—பெற்றோர்தாம்
கொஞ்சிக் குலாவிக் குழந்தை பலபெற்று
மிஞ்சி மகிழ்ந்திடுவார் வீண்.

கண்டீரோ நங்கையரே காசினியில் ஆடவர்தாம்
பெண்டீர் தனையிழந்தால் பேச்சுண்டோ—அண்டிவரும்
பூங்கிளிபோற் பெண்ணைப் புதிதாகத் தாமணப்பார்
ஏங்குபெண்ணிற் குண்டோ இது.

தலையை மழித்திடுவார் சாஸ்திரங்கள் பேசிப்
புலைமக்கள் தன்மை பொருந்திக் —கலைமாற்றிக்
கோலங் கெடுத்துக் கொடுமைசெய் வார்கருணை
ஞாலமதி லுண்டோ நவில்

S. M.



# அந்தோ பரிதாபம்!

(P. தனுஷ்கோடி)

கமலா ஒரு கணவனிழந்த விதவைப்பெண். அவள் மங்கைப் பருவமடைந்த பின்புதான் தான் கணவனிழந்த ஸ்திரீ என்று அவளுக்குத் தெரியும். தற்போது 20 வயதுடைய அழகிய மங்கைப் பருவமாய்த் திகழ்கின்றாள். அவள் பொன்னிறங்கலந்த பூர்ண சந்திரனின் தோற்றமுடைய முகமும், பவளத்தைப்போன்ற உதடுகளும், முத்துப்போன்ற பற்களும், கறுத்திருக்கும் அடர்ந்த கூந்தலும், அதை அழகாக வாரி பின்னியிருந்ததும், பார்ப்பவர் மனம் வசீகரிக்கும் திறமையுடைய முகமும், ஒருங்கே அமையப்பெற்று "காந்தம்"போல் விளங்கினாள். அத்துடன் அவள் அணிந்திருந்த வைரத்தோடுகளும், வைர மூக்குத்திகளும், கைகளில் அணிந்திருந்த பொன் வளையல்களின் இனிமையான சப்தமும் அவளைப் பன்மடங்கு வசீகரிக்கச் செய்தன.

ஆனால், 'அவள் ஒரு விதவை' என்ற சொல் மாத்திரம் அவளை விட்டு அகலவில்லை. அவளுடைய தகப்பனாரின் குணாதிசயங்களினாலும், பெருந்தன்மையாலும், மூடப்பழக்க வழக்கங்களை வெறுத்ததாலுமே கமலாவிற்கு 'விதவைக்குரிய சின்னங்கள்' ஏற்படாமற் போயிற்று.

ராமசேஷன் என்பவன் தாய் தந்தையர்களை இழந்த ஓர் பிராமண வாலிபன். அவனுக்கு தற்போது 25 வயதேயானாலும், சமூகக் கொடுமைகளை நன்கு உணர்ந்தும், சமூகக் கட்டுப்பாட்டிற்கு அஞ்சாமலும், விதவையர் துயர் களைய அரும்பாடுபட்டுக்கொண்டும் வைதீகம், சாஸ்திரம், பழக்கம், வழக்கம், என்று கூறுபவர்களைத் தைரியமாய் எதிர்த்துப் போராடும் 'அஞ்சா நெஞ்சம்' படைத்த வாலிபன்.

(2)

கமலாவின் பள்ளித்தோழன் ராமசேஷன் என்னும் சிறுவன். ராமசேஷனிடம் பேசிக்கொண்டிருந்தால் கமலாவிற்கு ஆகாரம் கூட தேவையில்லை. கமலா, ராமசேஷன் மீது கொண்டிருந்த அன்பை அளவிட்டுக் கூறமுடியாது. கமலா பள்ளி நேரம்போக

பீதி கோபத்தை ராமசேஷனிடமே பேசிக்கழிப்பாள். இதைப் போலவே கமலாவின் பேரில் ராமசேஷனுக்கு பூரண அன்பு உண்டு. கமலாவிற்கு ஒருதீங்கு நேறுவதைக் காண சகிக்கமாட்டான். கமலாவிற்காக தன்னுயிரையும் கொடுக்கச் சித்தமாயிருந்தான்.

இவ்வளவு நேசத்துடனிருக்கையில்தான்—கமலாவின் எட்டாவது வயதில்—விவாஹம் நடந்தது. திரண்ட ஐஸ்வரியமுடைய ஒருவர் தமது பெண்ணைக் கேட்பது கண்டு, இதுவே சமயமென்று, கமலாவின் பெற்றோர்கள் விவாஹத்தை நடத்திவிட்டனர். அப்போது ராமசேஷனுக்கு 13 வயதுதான் ஆகிறது. அவன் அப்பொழுது சிறிய அறிவும், ஆற்றலும் உடையவனாயிருந்தான். இவ்விவாஹம் நடப்பது அவனுக்கு இஷ்டமில்லைதான். ஏனெனில் இவ்வளவு சிறிய வயதில் விவாஹம் செய்யக்கூடாது என்பதே. ஆனால் அவ்விளம் வயதில் அவனால் அவ்வளவு பெரிய காரியத்தை நிறுத்த முடியாயாமற் போய்விட்டது.

அப்பொம்மைக் கலியாணம் நடந்த பிறகும், கமலா பள்ளிக்கூடம் வந்துகொண்டிருந்தாள். ஆனால் ராமசேஷன் அவளிடம் முன்போல்—அவ்வளவு அதிகமாக பேசுவது இல்லை. பாட விஷயம் எவ்வளவோ அவ்வளவோடு பேச்சை நிறுத்திக்கொள்வான். அதன் காரணம் அவனுக்கே விளங்காமல் இருந்தது.

இரண்டு வருடங்கள் கழிந்தன. ஒரு நாள் ராமசேஷன் பள்ளிக்கூட விஷயமாக கமலாவின் வீட்டிற்குச் செல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ராமசேஷன் அங்கு சென்று கமலாவினிடம் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, ஒரு தந்தி கமலாவின் தந்தைக்கு வந்தது. அதை அவர் வாங்கி ராமசேஷனிடம் கொடுத்து வாசிக்கச் சொன்னார். அது கீழ்வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

நேற்று மாலை திடீரென ஏற்பட்ட மாரடைப்பால் ஸ்ரீநிவாசன் சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் இறந்துவிட்டான்.

இப்படிக்கு
சந்திரசேகர ஐயர்.

தந்தியை வாசித்தவுடன் கமலாவின் தந்தை திடீரென விழுந்து மூர்ச்சையானார். காரணம் என்னவெனில் ஸ்ரீநிவாசன்தான் கமலா

வின் கணவன், ஐயோ கமலாவினுடைய எதிர்காலத்தின் விபரீதம் அவரை அவ்வாறு மூர்ச்சிக்கும்படிச் செய்துவிட்டது.

சிறிது நேரத்தில் அங்கிருந்தவர்களின் உபசாரத்தால், மூர்ச்சைதெளிந்தார். பிறகு சென்னை சென்று அந்திய காரியங்களை முடித்துவிட்டு தன் சொந்தவூர் திரும்பினார். கமலாவின் பரிதாப நிலையைக் கண்டு "விதவைக்குரிய சின்னங்களை" ஏற்படுத்த மனமில்லாமல் எவ்வளவோ சமூகப் பெரியார்களின் எதிர்ப்புகளுக்கஞ்சாமலும் வெறுமனே இருந்ததினால் சமூகத்தினின்றும் விலக்கப்பட்டார். விலக்கியதற்கும் அஞ்சாமல் கமலாவை வழக்கம்போல் பள்ளிக்கு அனுப்பினார். இவ்வளவு இடரிலும் அவர் தம் தொழிலான "இன்சூரன்ஸ் ஏஜண்டு" தொழிலை விடாமல் வெகு திறமையாய் நடத்திவந்தார். இத்தொழிலை முன்னேற்றத்துடன் நடத்தியதுமல்லாமல் ஓய்வு காலத்தில் சமூக சீர்திருத்த விஷயங்களைப் பரப்பி வந்ததினாலும் அவ்வூரில் அவருக்கு மிகுந்த செல்வாக்கு ஏற்பட்டுவிட்டது.

நான்கு வருடங்கள் ஓடி மறைந்தன. ராமசேஷனுக்கும், கமலாவிற்கும் நட்பு அதிகமாகிக்கொண்டேவந்தது. அடிக்கடி—ஏன்? அவர்கள் பேச்சு ஒவ்வொன்றிலும்—காதல் வார்த்தைகள் தென்பட்டன. ராமசேஷன் அவளுக்கேற்ற காதலன் என்றே கூறவேண்டும். அதைப்போலவே காதலனுக்கேற்ற காதலியாகவே கமலாவும் விளங்கினாள். இது விஷயம் "ஜாடை"யாக கமலாவின் பெற்றோர்களுக்குத் தெரிந்தது. அவர்களும் ஒரு நாள் தீர ஆலோசித்து கமலாவிற்கு மறுமணம் செய்துவிடுவது என்று தீர்மானித்தனர். ஆனால் கமலாவின் தாயாரான காமாட்சி அம்மாளின் பிடிவாதத்தால் "புரோகிதரை"க் கொண்டு விவாஹம் நடத்த கமலாவின் தந்தை ஒப்புக்கொண்டார்.

இப்படியிருக்கையில் கமலா புஷ்பவதியாகவே பள்ளியை விட்டு நிறுத்தி விட்டனர். அப்பொழுதுதான் கமலாவின் பெற்றோர்கள், கமலாவிற்கு முன்பொரு விவாகம் நடந்த வரலாற்றைக் கூறி, ராமசேஷனை மறு விவாகம் செய்துகொள்கிறாயா? என்று கேட்டனர். தனக்கு முன்பொருதடவை விவாஹம் நடந்த வரலா

ற்றைக் கேட்டகமலா மிக்க வருந்தினாளானாலும், ராமசேஷன் மீதுள்ள காதலால் மறுமணத்திற்கு ஒப்புக்கொண்டாள்.

ஃ ஃ ஃ

ஒரே அமர்க்களம். ஏக தடபுடல். எங்கும் ஒரே பேச்சு. புரோகிதர்களின் அட்டகாசத்தால், கமலாவின் கலியாணம் தடைபட்டது. வைதீகப் பெரியார்களின் கூச்சல் சொல்லி முடியாது. அன்று தான் கலியாணநாள். மணப் பந்தலில் மணப் பெண்ணும், மணமகனும் உட்கார்ந்துகொண்டிருக்கின்றனர். புரோகிதர் வரவை எதிர் நோக்கியிருந்தனர். சிறிது நேரத்தில் புரோகிதர் வந்தார். அவர் பின்னாலேயே பல வைதீகப் பிராமணர்கள் வசைமொழி பாடிக் கொண்டே வந்தனர். பிறகு கேட்க வேண்டுமா அமர்க்களத்தை? ராமசேஷனுக்கும், கமலாவிற்கும் அவமானம் தாங்கமுடியவில்லை. என்ன செய்வார்கள். எப்படியும் கலியாணம் நின்று விட்டது.

ஃ ஃ ஃ

அன்று இரவு சுமார் 11 மணியிருக்கலாம். வளர்பிறைக் காலமானதால், சீக்கிரத்திலேயே சந்திரன் மறைந்துவிட்டான். ஆகையால் எங்கும் ஒரே இருட்டு. அந் நள்ளிரவில் இரு உருவங்கள் ஒருவர் தோள்மேல் ஒருவர் கைபோட்டுக் கொண்டு மிகவும் ஒற்றுமையாய் சென்றுகொண்டிருந்தன. இரு உருவமும் இரகஸ்யமாய் பேசிக்கொண்டு சென்றன. சிறிது நேரத்தில் காவிரி ஆற்றங்கரையினருகே அடைந்தனர். இருவரும் கடவுள்துதி செய்துவிட்டு ஆற்றில் குதித்துவிட்டனர். வைதீகர்கள் எதிர்ப்பும், அவர்களின் அடங்காப் பிடாரித்தனமும் இருக்கும்வரையில், காதலர்கள் ஒன்று கூடி வாழ்வது மிகவும் கஷ்டமே. தாங்க முடியாத அவமானத்தால் ராமசேஷனும் கமலாவும் ஆற்றில் குதித்து உயிர்விட்டார்கள் என்பதைக் கூறவும் வேண்டுமோ? எப்படியும் கமலாவின் விவாஹத்தை தடைசெய்த வைதீகர்கள் இரு நரபலிக்கு ஆளானார்கள் என்ற குற்றத்தை எக்காலும் மறக்கமுடியாது.

---

துணையிழந்தாரை

மணப்பது புண்ணியம்.

# அக்ரமம்!

P. S.

விதவா விவாகம் என்று சொன்னால், உடனே சாஸ்திரத்தைப் புரட்டிப்பார்க்கின்றனர் வைதீகர். அதில் ஆதாரமிருக்கிறதா? இல்லையானால் அது செய்யத்தக்கதல்ல என்கின்றனர் அவர்கள். ஆனால் சாஸ்திரத்தில் ஆதாரமிருக்கிறதா இல்லையா என்ற விஷயமே வேறு. நல்லதென்று படுகிற ஒரு காரியத்துக்கு சாஸ்திர ஆதாரம் அவசியமா? என்பது தான் இப்பொழுதைய கேள்வி.

ஃ ஃ ஃ

இருக்கட்டும். எத்தனை வைதீகர் தாங்கள் செய்யுங் காரியங்களுக் கெல்லாம் சாஸ்திரத்தை ஒத்துப்பார்த்து நடக்கின்றனர்? என்பது முதலில் நமக்குத் தெரிய வேண்டும். சரி, சாஸ்திரத்தில் குறிப்பிடாத காரியத்தைச் செய்வதைப்பற்றிப் பேசவேண்டாம். ஆனால் சாஸ்திரத்தில் பட்டவர்த்தனமாக எழுதியுள்ள எத்தனை விஷயங்களை வைதீகர் மீறியிருக்கின்றனர்—அல்லது அநுஷ்டிக்க முடியாமலிருக்கின்றனர்? இந்தக்குப்பைகளை யெல்லாம் கிண்டுவது என்று சொன்னால் அது பெரிய மூட்டையாகி விடும். ஆகவே சாஸ்திரத்தைக் கிண்டிக் கிளறும் வேலையை நிறுத்திவிட்டு மேலே செல்லுவோம்.

ஃ ஃ ஃ

எல்லாக் காலத்துக்கும், எல்லாருக்கும், எப்பொழுதும் பொருத்தமாக இருக்கும்படி ஒரு சட்டத்தை—விதியை ஏற்படுத்துவதென்பது இன்றுவரை சாத்தியமாக இருந்ததாகத் தெரியவில்லை. சாத்தியமாக இருக்கவும் முடியாது. 15 வருஷத்துக்கு பிறகு நமது உடல் நிலை எப்படியிருக்கு'மென்று நமக் கெப்படித் தெரியும்? அதற்கு இன்றைக்கே சட்டைதைத்து வைத்துக் கொள்வதென்பது பொருத்தமாக இருக்குமா?

ஃ ஃ ஃ

அன்று நம்முடைய உடல் நிலைமை, மனப்பான்மை, சீதோஷ்ண நிலை இவ்வளவும் இப்பொழுதிருப்பது போலவே இருக்குமென்பதற்கு என்ன நிச்சயம்? திடீரென்று ஏறுக்குமாறாக உடல்

பெருத்துப்போனாலும் போகலாம், அல்லது மிகவும் சிறுத்துப் போகவும் கூடும். அல்லது நம்முடைய மனோபாவத்திலே மாறுதல் ஏற்பட்டுப் புதுமாதிரியான சட்டையொன்றைத் தைத்துப் போட வேண்டுமென்று தோன்றினாலும் தோன்றலாம். 1901ம் வருஷத்திலே இருந்த ஒரு மகான் அப்பொழுதிருந்த சிறு குழந்தைகளைப் பார்த்து 1937ம் வருஷத்திலே நீங்களெல்லோரும் சீமைத் துணிதான் கட்டவேண்டுமென்று ஒரு கட்டளையிட்டிருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது அது சரியாக இருந்தது. ஏற்றுக்கொண்டோம். இந்த தேசிய மகாசக்தி பெருகிவருகிற இந்தக் காலத்திலே அந்த மகானுடைய கட்டளையை நமக்கு நினைத்துப் பார்க்கவாவது நேரமுண்டோ?

ஃ ஃ ஃ

இதே போன்றவைதான் சமூக விதிகளும். அன்று சில வழக்கங்களை ஏற்படுத்தினார்கள். அப்பொழுதைய காலநிலைக்கு அது சரி. இப்பொழுது அது ஒத்துவரவில்லையென்றால் வழியென்ன? இதைத்தான் நாம் சிந்தித்துப்பார்ப்பதே இல்லை. மனிதனுக்கு புத்தி—அறிவு என ஒரு பொருள் விசேஷமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைக் கொஞ்சமாவது வேலைசெய்ய விடுவதா வேண்டாமா என்பதுதான் நம்முடைய கேள்வி. பழைய வழக்கமிருக்கிறது, சாஸ்திரமிருக்கிறது, எல்லாம் அது காட்டிய வழியிலேதான் நடக்கவேண்டும் என்று சொன்னால் நமக்கு புத்தியென ஒன்றைத் தலையிலே வைத்திருக்கவேண்டிய அவசியமென்ன? கையிலே விளக்கை வைத்துக் கொண்டே இருட்டிலே போய் கல்லிலே முட்டி மண்டையை உடைத்துக்கொள்வது அவசியமா?

ஃ ஃ ஃ

சமூகத்திலே சில அவசரமான அவசியமான ஆபத்து நிறைந்த பல சந்தர்ப்பங்கள் வரக்கூடும். அந்த சமயங்களிலெல்லாம் சாஸ்திரத்தைப் புரட்டிக்கொண்டிருப்பதென்பது சரியல்ல. திடீரென்று வீட்டில் நெருப்புப்பிடித்ததென்று வைத்துக்கொள்ளுங்கள். சூறாவளியும் பிரமாதமாக அடிக்கிறது! புத்திசாலியும் இரக்கமுள்ளவனுமான மனிதன் இப்பொழுது செய்யவேண்டிய காரியமென்ன? தண்ணீர் ஊற்றி அணைக்க முயல்வது என்ற ஒன்றுதானே? இந்த

சமயத்திலும், நெருப்பை அணைப்பதற்கு சாஸ்திரத்தில் ஆதாரமிருக்கிறதா என்று தேடுவது எவ்வளவு பெரிய ஆபத்தான காரியம்! எவ்வளவு பெரிய மடமையான செயல்!

ஃ ஃ ஃ

வைதவ்யம் நம்முடைய நாட்டிலே மிக ஆபத்தான பிரச்னையாக இருக்கிறது. வாழ்க்கையின் எல்லா சுகங்களும் பறிமுதல் செய்யப்பட்டு அவர்கள் நிர்க்கதியாக இருந்து தவிக்கிறார்கள். ஒரே தாய், ஒரே தந்தை, ஒரே வயிற்றில் பிறந்த இரண்டு பெண்கள். ஒருத்தி பூச்சூடுகிறாள், பட்டுச்சேலையுடுத்துகிறாள், நகை பூண்கிறாள், என்னென்னவோ அலங்காரங்களெல்லாம் செய்துகொள்கிறாள்! சந்தோஷமாக இருக்கிறாள், ஆனால் அதே பெண்ணின் சகோதரி இந்த சுகங்களுக்கெல்லாம் முற்றும் விலக்கப்பட்டவளாக—தீண்டப்படாதவளாக நிர்ப்பந்தப்படுத்தி வைக்கப்பட்டிருக்கிறாள்!

ஃ ஃ ஃ

என்ன அக்ரமம்! என்ன அநீதி! இந்த சமூகத்திலே நியாய உணர்ச்சியே வறண்டுபோய்விட்டதா என்று கேட்கும்படியாக இல்லையா இந்தக் காரியம்!

ஃ ஃ ஃ

சரி. இப்படி இவர்களை இன்பங்களையெல்லாம் அனுபவிக்க விடாமல் ஒரேயடியாக அடக்கிவைத்திருக்கிறோமே. இவர்கள் செய்த குற்றந்தான் என்ன? மன்னிக்கமுடியாத இவ்வளவு பெரிய குற்றம் அவர்கள் என்னதான் செய்துவிட்டார்கள்? என்று பார்த்தால் ஒன்றுமே இல்லை. குற்றஞ்செய்தவர் விதவைகளல்ல. விதவைகளை உண்டாக்கினவர்தான்! பெண்ணின் சம்மதி கேட்டோ கேளாமலோ, அப்பெண்ணிற்கு விவரந்தெரிந்த காலத்திலோ தெரியாத காலத்திலோ பெற்றோரின் இஷ்டத்திற்கு ஒரு மாப்பிள்ளையை மணம் முடித்துவைக்க, என்ன காரணத்தினாலோ அவன் இறந்துவிடுகிறான்! இதற்குப் பொறுப்பு பெண்ணென்று சொன்னால் இதை எந்த மனித ஜென்மமாவது ஒத்துக்கொள்ள முடியுமா?

ஒரு புருஷனுடைய மரணத்திற்கு ஒரு பெண் பொறுப்பாளியென்று சொல்வதற்கு எந்தச் சட்டம், எந்தநியாயம் இடங்கொடுக்கிறது என்பது நமக்குப் புரியவில்லை. பெண் குற்றவாளியாகவேண்

டுமானல், அவள் கத்தியாலோ, விஷத்தைக் கொடுத்தோ, இதர முறைகளாலோ புருஷனை வேண்டுமென்றே கொலைசெய்திருக்க வேண்டும்! அப்படிக் கொலை செய்தாலும் சமூகந் தண்டிக்கவேண்டிய உரிமையொன்றும் கிடையாதே. நீதி இலாகா இருக்கிறதே அதைக் கவனித்துக்கொள்ள! மேலும் விவரந்தெரியாத காலத்திலேயே ஒரு பெண்ணின் புருஷன் இறந்துவிடுகிறான்! இதற்குக் கூடவா பெண் பொறுப்புடையவள் ஆகிறாள்.

சரி அப்படியே வைத்துக்கொள்வோம். ஒரு புருஷனின் மனைவியான பெண் இறந்துவிடுகிறாள் என்று வைத்துக்கொள்வோம் அப்பொழுது வைதீகரின் இந்தச் சட்டம் ஆண்களையேன் பாதிப்பதில்லை. அவர்களுக்கும் பெண்களுக்கு விதிக்கும் அந்த தண்டனையை வைதீக உலகம் ஏன் அளிக்கத் துணிவதில்லை. மனைவியை இழந்த புருஷனும், இப்பொழுது புருஷனை இழந்த பெண் அனுபவிக்கும் துன்பங்களையெல்லாம் அடையவேண்டுமென்று வைதீக உலகம் ஏன் சட்டஞ்செய்யவில்லை? அக்ரமம்! அநீதி! இது ஆண்களின்— வைதீகப் புருஷர்களின் யதேச்சாதிகார புத்தி!

ஃ ஃ ஃ

இதற்கெல்லாம் பிரகானமான காரணம் சட்டஞ் செய்யும் உரிமையை ஆண்கள் ஏகபோகமாக அடக்கிவைத்துக்கொண்டிருந்தார்கள் என்பதேயாகும். பெண்களுடைய உரிமையைப்பற்றி ஒரு சிறு பேச்சுப்பேசவும் அக்காலத்தில் நாதியற்றுப் போய்விட்டது. இதனால் வந்த வினைதான் இது! இனிப் பெண்கள் கிளம்பவேண்டும். சட்ட இலாகாவில் அவர்களது உரிமை முழக்கம் இருந்துகொண்டிருந்தால் அல்லாமல், ஆண்களுக்கு இந்த ஞாபகம் இல்லாமலே போய்விடக்கூடும்.

ஃ ஃ ஃ

அடுத்த விதவா விவாகம் பெண்களின் ஜீவாதார உரிமை. இந்த உரிமையை மறுப்பதை விடப் பெண்கள் உயிரோடு வாழ்வதையே மறுப்பது மேலாக இருக்கும்! ஒரு பெண் கலியாணஞ் செய்து கொள்ளக் கூடாது, பிள்ளைபெறக் கூடாது, என்று சொல்வதைக் காட்டினும் மிருகத்தனமான கட்டளை வேறுஇருக்க முடியுமோ? ஆனல் ஒருவிஷயம் மட்டும் நிச்சயமென்று தோன்றுகிறது. 'விதவைகளை மறுமணம் செய்துகொள்ளக் கூடாது' என்று

ஒரு கூட்டத்தார் பிடிவாதமாக மறுப்பதற்குக் காரணம் என்ன? விபசாரக் கூட்டமொன்று நாட்டிலே பெருகி வந்திருக்கிறது. அத்தகைய கூட்டத்தினர் இவ்வாறு மணம் மறுக்கப்பட்ட ஒரு குழுவினர் இருப்பதே வசதியாக இருக்குமென்று கருதினர். அதனால் தான் இந்தநிலைமை வற்புறுத்தப்பட்டு வந்திருக்கிறது என்று நாம் ஊகிப்பதைத் தவிர விதவாவிவாகம் கூடாதென்று ஒரு கூட்டத்தார் புலம்புவதற்கு வேறு காரணம் இருப்பதாகத் தெரியவில்லை.

ஃ ஃ ஃ

இரண்டரைக்கோடி பெண்கள் இந்த நாட்டிலே அநாகரிகமான விதவைக் கோலத்திற்கு ஆளாகி அவதிப்பட்டு அலமருகிறார்கள். இந்தத் துன்பக் கேணியைக் கண்டுவிட்டால் இதைத் தூர்க்காத வரைக்கும் வேறு கதி மோட்சம் நமக்குக் கிடையாது என்று எந்த மனிதனும் கருதவேண்டியதாக இருக்கிறது! உரிமைக்கு மேல் உரிமை பெற்றுக்கொண்டு வளர்கிறார்கள் மேல்நாட்டுப் பெண்கள்! உரிமைக்கு மேல் உரிமை இழந்து தவிக்கிறார்கள் இந் நாட்டுப் பெண்கள்!

ஃ ஃ ஃ

இரண்டு லட்சம் பெண்கள்! ஒரே உடை, ஒரே உயரம், ஒரே வித ஆயுதங்கள் தாங்கி ஒரே வரிசையில் பெண் பட்டாளம் அணி வகுத்து நிற்கிறது ரஷ்யாவில்! இங்கே ஒரே துயரம், ஒரே கவலை, ஒரே அழுகை, ஒரே வெள்ளையுடை அணிந்துகொண்டு அந்த இரண்டரைக்கோடிப் பெண்களும் "வெள்ளைப்பட்டாளமாக" துயரக் காட்சி யளித்து நிற்கின்றனர் நம்முடைய நாட்டிலே!

ஃ ஃ ஃ

இந்த வெண் சேனையாகிய பெண் சேனைகள் ஒரு பெருமூச்சு விட்டால் போதாதா இந்த சாஸ்திரக் கோட்டைகளெல்லாம் தகர்ந்துவிடுவதற்கு! ஆனால் பாவம்! யானை தன் சக்தியை மறந்து சீரழிவதுபோலப் பெண்கள் தங்களுடைய சக்தியை மறந்து அல்லற்படுகின்றனர். அவர்களுடைய சக்தியை வளர்த்து, இப்பொழுதிருக்கும் கேவல நிலையையும் அவர்களுணருமாறு செய்துவிட்டோமானால் இந்த வைதவ்ய அக்ரமம் ஒரு நிமிஷத்தில் அழிந்துவிடுமென்பதில் சந்தேகமென்ன?

---

# பத்திரா்திபர் குறிப்புகள்.

## கடைக்கண் பணி

நமது கவி பாரதியார் காதற்பெண்ணினுடைய கடைக்கண் பணியிலே எதையும் செய்வோம் என்று கூறியிருக்கிறார். இன்று அல்பானியா மன்னர் ஹங்கேரியைச் சேர்ந்த பெண்ணொன்றைக் காதலித்து வரும் செய்தி யாவரும் அறிந்தது. அந்தப் பெண்,

"நான் அல்பானியா தேசத்தின் ராணியாக வேண்டுமானால் பல நூற்றாண்டுகளாக அங்குள்ள முஸ்லிம் பெண்கள் பர்தா அணியும் வழக்கத்தை ரத்து செய்யவேண்டும். அதோடு ஆண்மக்கள் ஏகபத்தினி விரதமுடையவராக வேண்டும்" என்று அறிவித்தாள். இதை யொட்டி அங்குள்ள முஸ்லிம் மாதர்கள் பர்தா அணிய வேண்டுமென்பது கட்டாயமில்லை யென்று அரசர் உத்தரவிட்டிருக்கிறார். அல்பானியாவுக்கு அரசியாக வரும் பெண்மணி பெண்கட்கு விடுதலையளிப்பதான நல்வரத்தைக் கோரினார். பழைய பத்ததிப் பெண்ணாக இருந்தால் "உயர்ந்த வயிர நகை" வேண்டுமென்று கேட்டிருப்பாள். நாகரிக நங்கையை ராணியாகப் பெறும் அல்பானியாவாழ்க !

## இனி எங்கே போவார்கள்?

பால்ய விவாகத்தடைச் சட்டம் இந்தியாவில் அமுலுக்கு வந்திருக்கிறது. சத்தில்லாத இச் சட்டமானது வைதீகர்கட்குப் பிடிக்கவில்லை யென்று சொல்லவேண்டியதில்லை. இவர்கள் இச் சட்டத்திற்குப் பயந்து காரைக்கால் பாண்டிச்சேரி போன்ற பிரெஞ்சு சர்க்காருக்குச் சொந்தமான இடங்களில் கல்யாணங்களைச் செய்து வந்தனர். இப்படிப்பட்ட தேசாந்திரக் கல்யாணங்கள் அங்கே நடைபெற்றன. இதைப்பற்றி இந்தியா அரசாங்கத்தார் ஷை பிரஞ்சு சர்க்காருடன் கடிதப் போக்கு வரத்து செய்ததன் பயனாக பிரெஞ்சு இந்திய எல்லையில் ஆணுக்குப் பதினெட்டும் பெண்ணுக்கு பதினாலும் ஆவதற்குமுன் கல்யாணம் செய்யப்படாதென்று சட்டமியற்றி விட்டனர். மிகச் சந்தோஷம். இனி எங்கே செய்

வது. ஒரு ஜாண் புதுக்கோட்டையிருக்கிறதே! அங்கே சட்டம் இந்த யுகத்தில் வருமா? இந்திய அரசாங்கத்தாரின் கடிதப் போக்கு வாத்து தெற்கே திரும்புமா? பார்க்கலாம்.

## சாஸ்திரியார் கருத்து-

திரு. டி. ஆர். வெங்கட்டராம சாஸ்திரியார் ஹிந்துவில் எழுதியிருப்பதின் பகுதி வருமாறு:—

"சிலவிடங்களில் ஒருவகை மணம் நடந்திருக்கிறது, அதாவது கலியாண முறையில் சிறிது மாறுதல். விவாகம் முன்னாலேயே நிச்சயம் செய்யப்பட்டுவிடும். பெண் பருவமடையும்வரை கலியாணம் நடைபெறாதிருக்கும். பருவமடைந்த பிறகே கலியாணம். இக்கலியாணம் நடைபெறுமுன் அவ்விருவரில் யார் இறந்தாலும் சரி, உயிருடனிருப்பவரை வைதவ்யம் பாதியாது. இவ்விருவரும் உயிருடனிருந்தால் விவாக நிச்சயத்தை மாற்ற முடியாது. இதுவே கிரேக்கர் மணமுறையுமாகும். மகாபாரதம் அனுசாஸன பர்வதத்தில் இவ்விஷயம் காணப்படுகிறது. 'கேவலம் மந்திர ஸம்ஸ்கிருதா' என்று ஸ்மிருதிகளிலே சொல்லப்படுகிறது. அதாவது மந்திரபூர்வமாகக் கலியாணம் மாத்திரம் செய்துகொண்டவர் என்று அர்த்தம். கலியாணம் மாத்திரம் செய்துகொண்டு இல்வாழ்வின் இன்பத்தை அனுபவியாதவர்கள் மறுமணம் செய்துகொள்ளலாம் என்று ஸ்மிருதிகளிலே விதவா விவாகத்துக்கு ஆதாரமிருக்கிறது."

இதிலிருந்து சாஸ்திரக் கல்யாணம் வெறும் சடங்குதானென்பதும் மணமக்களின் உடல் சம்பந்தமே உண்மையான கல்யாணக் கருத்தை விளக்குவதென்பதும் விளங்கும். புருஷனோடு வாழ்வு நடத்தாத பெண்ணை விதவைக் கொடுமைக்குட்படுத்தல் சகிக்க முடியாதகொடுமையாகுமென்பதை அறிவுள்ள எவர்தான் மறுக்க முடியும்?

## உடல் வலிமை வேண்டும்

அமெரிக்காவில் பெண்களுக்காகப் பிரத்தியேகமாக ஏற்படுத்தப்பட்ட 3500 உடற்பயிற்சிசாலைகள் இருக்கின்றனவென்று ஒரு செய்தி கூறுகிறது. இதில் பெரும் பகுதி சர்க்காரின் நிர்வாகத்திற்கு உட்பட்டவையாம்.

இந்தியப் பொது மக்களுக்கும் சர்க்காருக்கும் இச் செய்தியைச் சமர்ப்பிக்கிறோம். பொதுவாக உடல்வலிமை எவ்வளவு அவசியமென்று நாம் சொல்லவேண்டிய அவசியமில்லை. அதிலும் பெண்களுக்கு உடல் வலிமை மிகமிக அவசியமென்பதில் சிறிதும் சந்தேகங் கிடையாது. வரை மிஞ்சிய அதிக்கிரமச் செயல்களெல்லாம் பெண்களிடம்தான் ஏராளமாகச் செய்யப்படுகின்றன என்பது கண்கூடு. பெண் ஜென்மம் ஒரு சோதா ஜென்மம் என்ற எண்ணம் ஆண்களிடம் பலப்பட்டு நிற்கிறது. இதனால்தான் எந்தப் பெரிய போக்கிரித்தனத்தையும் ஒரு சிறு பையன் கூடப் பெண்களிடம் செய்யக்கூடிய பரிதாப நிலை ஏற்பட்டிருக்கிறது. பெண்களிடம் இன்று அறவே இல்லாதிருக்கும் உடல் பலமும் மனோ தைரியமும் ஓரளவாவது அதிகப்படுமானால் ஆண்கள் இவ்வளவு தைரியமாக இவ்வளவு எளிதாக எந்த அக்கிரமத்தையும் செய்யத் துணிவு கொள்ளமாட்டார்கள். மேல் நாடுகளில் எல்லாப் பெண்களிடமும் இந்த மாதிரியான போக்கிரித்தனத்தைக் காட்டமுடியாதென்பதற்குக் காரணம் இதுவேயாகும். ஆகையால் பெண்களின் உடல் பலத்தையும் மனோ பலத்தையும் பெருக்கிக் கொள்வது அவசியத்திலும் அவசியமாகும்.

---

## :: நிகழ்ச்சிகள். ::

### விதவா விவாகம்

#### சென்னையில்

14—4—37 புதன்கிழமை காலை 9-30 மணிக்கு பழைய வண்ணாரப்பேட்டை ராமானுஜய்யர் வீதியிலுள்ள "நிஷ்சிந்தபவனத்தில்" மதுரை சி. எம். வி. பிரஸ் மானேஜர் திரு. பி. வேணுகோபாலுக்கும், காக்கினாடா விதவை திருமதி தூர்க்காபாய் அவர்களுக்கும் பண்டித வி. ராமசாமி அவர்கள் தலைமையில் வாழ்க்கை ஒப்பந்தம் நடைபெற்றது. பல பிரபலஸ்தர்கள் விஜயம் செய்திருந்தார்கள். அன்பர்கள் பலர் விதவாவிவாகம் குறித்து சொற்பொழிவுகளாற்றினர்.

#### சிங்கம்புரிணயில்

இராமநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூகா சிங்கம்புணரியிலிருக்கும் ஆரியவைசிய (கோமுட்டி) பாலுசாமி செட்டியார் குமாரன் கிச்சு

செட்டிக்கு ஷையூர் வீராசாமி செட்டியார் குமாரத்தி ஆரிய வைசிய (கோமுட்டி) விதவை செல்லியம்மாளை மறுமணம் செய்ய தீவிரவாதிகளான கே. பி. குருமூர்த்தி செட்டி, வி. எ. நாகராஜு செட்டியார், நத்தம் ராஜகோபால் செட்டி, புதுக்கோட்டை வி. எஸ். வெங்கட்டராமன் செட்டி, காரைக்குடி கே. வி. லக்ஷ்மணன் செட்டி முதலிய இன்னும் அநேக ஆரிய வைசியகுலத்தலைவர்களால் நிச்சயிக்கப்பெற்று 14—4—1937-ல சிங்கம்புணரியில் உள்ளூர் அயலூர் பிரபலஸ்தர்கள் முன்னிலையில் மரபு முறைப்படி திருமணம் நடந்தேறியது. வாழ்த்துத் தந்திகளும் பத்திரங்களும் படிக்கப்பட்டன. மணப்பந்தலில் நடந்த கூட்டத்தில் திரு. ப. சிங்காரம், மதுரை தேவராஜு நாயுடு முதலியோர் விதவை மணத்தின் அவசியத்தைப்பற்றிப் பேசினர். ஊர்வலம் நடைபெற்றது.

## ராவல்பிண்டியில் விதவா விவாகம்

ராவல்பிண்டி விதவா விவாக சபையின் ஆதரவில் 1937 மார்ச் 11-ல சிவராத்திரி சுபதினத்தன்று இரவு 8 மணிக்கு விதவை ஸ்ரீமதி சாந்திதேவிக்கும் திரு. லாலாடோடா சாண்ஜைஜனுக்கும் மிக விமரிசையாக விதவா விவாகம் நடந்தது. நூற்றுக் கணக்கான ஆடவர் பெண்டிர் குழுமியிருந்தனர். விவாகத்தின் பின்னர் ராவல்பிண்டி விதவாவிவாக சபைத் தலைவர் லாலாஹரிவம்சலால் அவர்களால் கேட்போர் மனதில் ஒரு எழுச்சி தோன்றும்படியானதோர் உருக்கமான விரிவுரை நிகழ்த்தப்பெற்றது. விதவா ஆச்சிரமத்திற்கு நன்கொடை அளிக்கப்பெற்றது.

## மற்றொரு விதவா விவாகம்

15—3—37-ல் ஆர்ய சமாஜக் கட்டிடத்தில் ஸ்ரீமதி லட்சுமிதேவிக்கும் திரு. பக்சிபோதராஜா அவர்களுக்கும் விதவாவிவாகம் நடைபெற்றது. மணமகன் பக்சி அவர்கள் விவாகத்திற்குரிய வேத மந்திரங்களை தாமே உச்சரித்தார். அவர் ஆர்ய சமாஜத்தின் முக்கியஸ்தரும் சமூக சீர்திருத்தத்தில் ஆர்வமிக்கவருமாவர். 10 மணிக்கு விவாகம் நிறைவேறியது. வனிதா ஆசிரமத்திற்கு 20 ரூ. நன்கொடை வழங்கப்பெற்றது. இந்த இரண்டு கல்யாணங்களும் டி. ஏ. வி. ஸ்கூல் உபாத்தியாயர் பண்டித டோபன் ராம் அவர்களால் மிக விமரிசையாக நடத்திவைக்கப்பெற்றது.

## விதவா விவாகக் கணக்கு.

1937 மார்ச்சு மாதத்தில் லாகூர் விதவா விவாக சகாய சங்கத்தின் மூலமாகவும், மற்ற வகையிலும் நடைபெற்ற விதவா விவாகங்களின் கணக்கு வருமாறு:—

ஜாதிவாரியாக

| | |
|---|---|
| பிராமணர் | 81 |
| க்ஷத்திரியர் | 50 |
| அரோடா | 47 |
| அகர்வால் | 13 |
| காயஸ்தர் | 18 |
| ரஜபுத்தர் | 36 |
| மற்றவை | 55 |
| | 300 |

மாகாணவாரியாக

| | |
|---|---|
| பஞ்சாப் | 83 |
| ஐக்கியமாகணம் | 73 |
| மத்தியமாகாணம் | 34 |
| பம்பாய் | 3 |

| | |
|---|---|
| வங்காளம் | 90 |
| பீகார்—ஒரிஸா | 10 |
| மத்திய இந்தியா | 7 |
| | 300 |

## பத்து வயதுக் கணவன் மீது ஜீவனும்ச வழக்கு

கல்கத்தாவில் ஒரு ருசிகரமான வழக்கு நடைபெற்றிருக்கிறது. அதை கேட்கும் போது ஒரு பக்கம் சிரிப்பு. மற்றொரு பக்கம் அழுகை வருகின்றது. பதினேழு வயதுப் பெண் கௌசல்யா என்பவள் தமது கணவன் பத்து வயதுடைய லட்சுமிச் சந்த் என்பவன்மீது செலவிற்காக வழக்குத் தொடர்ந்திருக்கின்ருள். சுமார் 8 வருடங்களுக்கு முன்னுல் லட்சுமி சந்துக்கு இவளை விவாகம் செய்யப் பட்டது. ஆனுல் இதுவரையிலும் அவள் தன் தந்தை வீட்டில் தங்கி வருகின்ருள். ஏனென்ருல் அடிக்கடி தன்கணவன் அங்குவந்து அழைத்துக்கொண்டு போவதாகச் சொல்வதைத்தவிர அழைத்துச்செல்லவில்லை. சென்ற ஏப்ரல்மாதம் அவள் தன் கணவன் வீட்டிற்குச் சென்ருள். அங்கு கணவனைச் சேர்ந்தோர் கௌசல்யா தேவியை கையப் புடைத்து வைது திருப்பி தந்தை வீட்டிற்கே அனுப்பிவிட்டார்கள். தன் கணவன் தனக்கு செலவிற்குப் பணம் தரவில்லையென்று வழக்குத் தொடர்ந்திருக்கிருள். அவன் வெற்றிலைப்பாக்கு கடை வைத்திருப்பதாகவும், மாதம் சுமார் 40 ரூ. வருமானம் வருகிறதென்றும் அப்பெண் வழக்கில் குறிப்பிட்டிருக்கின்ருள். மாஜிஸ்திரேட் இருவரையும் கோர்ட்டில் பார்த்ததும் கணவனைவிட மனைவி மிகப் பெரியவளாக இருப்பதைப் பார்த்து வியப்புற்ருர்.

## பெண் சேனதிபதி!

ஸ்பெயினில் நடந்துவருகின்ற பெரிய யுத்தத்தில் சர்க்காரைச் சேர்ந்த பாஸ்க் படையில் ஓர் வீரப் பெண் இருக்கிருள். இவளது வயது 24. பாஸ்க் ராணுவத்தைஇவள் தலைமை கொண்டு நடத்துகிருள்.

எந்த யுத்த அரங்கத்தில் மிக நெருக்கடியாக இருக்கிறதோ அந்த இடங்களில் அவளுடைய உதவிதான் வேண்டப்படுகிறதாம். கலகக்காரர் இவளுடைய படைக்குத்தான் மிகவும் அஞ்சுகின்றனராம். இவளது படைமட்டும் இதுவரை தோல்வியடைந்ததே இல்லையாம். வாழ்க பெண் சக்தி!

## போலோ விளையாடும் போபால் இளவரசி

“போலோ” என்பது குதிரை மீதிருந்து கொண்டு விளையாடவேண்டிய விளையாட்டு. இது பழக்கமுள்ள வாலிபர்களையே திணற அடித்துவிடக்கூடியது. இதில் ஒரு பெண் திறமைசாலி எனப் பெயர் வாங்குவது சுலபமா? போப்பால் சமஸ்தானத்தின் நவாபினுடைய அழகிற் சிறந்த புதல்வி இளவரசி, இங்கிலாந்தில் ஆண் உடையில் ஆண்களுடன் திறமையாக போலோ விளையாடுகிருள். ஆண் உடை அவளுக்கு மிகவும் பொருத்தமாக இருக்கிறதாம்.

## புலிக்குக் கலியாணம்!

பிரதிம்பாஷா எஸ்டேட்டுக்குச் சொந்தமான ஒரு பெண்புலிக்கு மாப்பிள்ளை தேட பட்டபாடு சொல்லி முடியாதாம். முடிவில் ஒரு ஆண் புலி விலைக்கு வாங்கப்பட்டு கலியாணம் செய்து வைக்கப்பட்டதாம்.

கலியாணச் செலவு இரண்டாயிரம் ரூபாய். கலியாண காலத்தில் மிகவும் ஆடம்பரமான விருந்து ஒன்று நடத்தப்பட்டதாம்.

என்ன வேடிக்கை பாருங்கள்! விதவைகள் இந்தப் புலிகளைவிடவா கேவலமானவர்கள்! நாற்கால் மிருகங்களாகிய புலிகளுக்குக்கூடக் கலியாணம் நடக்கும்போது விதவைகளுக்கு நடந்தால் வரும் ஆபத்து என்ன?

## பெண்கள் அடிமைகளா?

புருஷன் ஸ்திரீகளை அடிமைகளாக நினைத்து நடத்தும்வரை சமூகத்தில் சீர்கேடு இருக்கத்தான் செய்யும். பெண்களை ஆண்கள் அடக்கியாளாவிடில் ஒழுக்கக்குறைவும் கற்புக்குப் பங்கமும் ஏற்படும் என்று காரணங் கூறுவது ஒப்புக்கொள்ளக் கூடியதன்று. ஆண் மகனிடம் எத்தகைய ஒழுக்கம் இருக்கிறதோ அத்தகைய ஒழுக்கம் பெண் மகளிடமும் இருக்கும். பெண்களைக் காமக்கருவிகளாக நினைத்து உபயோகிக்கும் மனிதர்களும் இருக்கிறார்கள். அவர்கள் மனிதராயினும் மிருகங்களே.

—ஸர் எஸ். இராதாகிருஷ்ணன்.

## இந்தியா முன்னேற வேண்டுமானால்

இந்தியா பழைய பெருமையை அடைய வேண்டுமானால் இந்திய மாதர் எல்லா வழிகளிலும் சுதந்திரம் பெற்று ஓங்கவேண்டும். பாரத தேசத்தின் விமோசனம் இந்திய மாதர் கையில்தானிருக்கிறது. பெண்மணி மனைவியாயிருந்து தேசவிடுதலைக்குத் தம் கணவரைத் தூண்டுவார்; தாயாயிருந்து நாட்டிற்குழைக்குமாறு தம் மக்களுக்கு அறிவுறுத்துவார். இந்தியா முன்னேற வேண்டுமானால் ஆணும் பெண்ணும் சமத்துவம் பெற்று விளங்கவேண்டும்.

—அன்னை வசந்தையார்.

## பெண்கள் அபிவிருத்தி!

பிரின்ஸ்பால் ஏ. டி. முக்கர்ஜியின் குமாரி ஸ்ரீமதி நிலிமா முக்கர்ஜி பாட்னா சர்வகலாசாலையில் B. Sc. பட்டம் பெற்றுள்ளாள், பிஹாரில் அப்பெண் முதல்தரமாகத் தேறியிருக்கிறாள்.

ஸ்ரீமதி கலாவந்தி பத்தேஜா என்ற மாதும் பாட்னா சர்வகலாசாலையில் I Sc பட்டம் பெற்றுள்ளாள். அவ்வகுப்பில் இவளே இரண்டாந்தர மதிப்புப் பெற்றிருக்கிறாள்.

ஸ்ரீமதி ரோமா முகர்ஜி என்ற மாதும் மேற்கூறிய I Sc பரிட்சையில் தேறியிருக்கிறாள்.

## ஜெக்கோஸ்லோவேகியா முன்னேறுகிறது.

39 வயதுவரையில் எல்லா ஸ்திரீ புருஷர்களுக்கும் இராணுவப்பயிற்சியளிக்கவேண்டுமென்று ஒரு திட்டம் ஜெக்கோஸ்லோவேகிய ஸர்க்காரால் நிறைவேற்றி வைக்கப்படுமென்று அறியக்கிடக்கிறது. "திடீரென்று யுத்தம் வந்தால் நம் நாடு தகுந்த பாதுகாப்புடன் இருக்கவேண்டுமென்பதற்காக நம்நாட்டு ஜனங்களனைவரும் நவீன முறையில் இராணுவக் கல்வி பெற்றாகவேண்டுமென்று ஸர்க்கார் தீர்மானித்திருக்கிறது" என்பதாக யுத்த மந்திரியாகிய ஜெனரல் குக்னிக் 'ஜெக்' பார்லிமெண்டில் அறிவித்தார்.

## ருஷ்ய ஸ்திரீகள் போர்க்கோலம்

கியூபான் காஸக் பிரதேசத்திலுள்ள ஸோவியத் ருஷ்ய ஸ்திரீகள் ஒரே

உடையணிந்துகொண்டு யுத்தப்பயிற்சி பெற்று ஒரு படையாகத் தயாராய் விளங்குகின்றனர். இவர்களும் இவர்களுடைய குழந்தைகளும், இவர்களுடைய கணவன்மார்களாலேயே பயிற்சியளிக்கப்பட்டிருக்கின்றனர். இவர்கள் எச்சமயத்திலும் பாவிஸ்தத்திற்கு எதிரிடையாகப் போர்புரியச் சித்தமாயிருக்கின்றனர்.

## பெண் கல்விதான் முதலில்

வடமேற்கு எல்லைப்புற மாகாணத்து சர்க்கார் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில், அவர்கள் பெண் கல்வியில் தான் முதலில் கவனம் செலுத்தப் போவதாகக் கூறுகிறார்கள். தேசத்தின் க்ஷேமத்துக்குப் பெண் கல்வி மிகவும் அவசியமென்று அவர்கள் கருதுகிறார்கள். மாலாகண்ட் மின்சாரத் திட்டத்தில் பெண்கள் பலருக்கு 'லைன்மென்' 'வயர்மென்' முதலிய வேலைகளில் பயிற்சி கொடுப்பார்களாம்.

## பெண்ணரசு நாடு

மலய நாட்டில் பாடங் மேட்டுப் பாகங்களில் பெண்களே குடும்பத் தலைவிகளாம். அங்கே புருஷர்கள் மனைவிகளை அடக்கியாள்வதில்லையாம். பெண்களே புருஷர்களை அடக்கி ஆள்கிறார்கள். மனைவிமார் புருஷர்களை ஆடுமாடுகளைப்போல விற்கிறார்கள். ஆளுக்குத் தக்க விலையாம், அழகிய வாலிபப் புருஷனுக்கு இருபது பொன் விலையாம். பெண்களே சகல வேலைகளையும் செய்கிறார்கள்.

---

# மாதர் மறுமண சகாய சங்கப் பிரசுரங்கள்

1. ஒரு கண்ணில் வெண்ணை ஒரு கண்ணில் சுண்ணும்பா?
2. வாலிபர்களே! என்ன செய்யப்போகிறீர்கள் ?
3. கணவன்மார்களின் கடமை.
4. பெண் மக்களே உங்கள் எதிர்காலத்தை நினைத்துப் பாருங்கள்!
5. விதவைகள் பட்டுப்புடவை கட்டிக்கொள்ளலாம். (நகரத்தார் தீர்மானம்)
6. வெளிநாட்டில் வதியும் அன்பர்கட்கு வேண்டுகோள்.
7. சுப சகுனம்.
8. மகாத்மாவின் பொன்னுரை.
9. பராஸர ஸ்மிருதி.
10. பாரதத்தைப் பார்த்தீர்களா ?
11. விதவா விவாகத்தை ஆதரிக்கும் வேதசாஸ்திரங்களின் தெளிவான பிரமாணங்கள்.

இந்தப் பிரசுரங்கள் தனித்தனியே தேவைப்பட்டவர்களுக்கு இனமாக அனுப்பிவைக்கப்படும். எல்லாப் பிரசுரங்களும் தேவையானல் தபாற்செலவு அனுப்பிவைக்க வேண்டும்.

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| மலர் 1 | காரைக்குடி<br>ஈஸ்வர-ஹூ ஆனி-மீ | இதழ் 11 |
|---|---|---|


## கைம்மைப் பிணியைக் களையுங்கள்.

(இராஜ சரஸ்வதி.)

பாபம் செய்யாதிரு மனமே—என்ற மெட்டு.

இந்தியப் பெண்ணுலகில்—எண்ணில்
இரண்டரைக் கோடியாம் இன்னல்சூழ் விதவையர்
வெந்த புண்ணினிடையே—கூர்
வேல் புகுந்தாலென கொழுநன் மாய்ந்திடவும்
சிந்தை கலங்கிநிற்க—பின்னும்
சித்திர வதையினைச் செய்வதற்கொப்பாக
பந்துக்கள் நிர்ப்பந்தமும்—எங்கு
பார்க்கினும் பழிசொலும் தாக்கிட யேங்கியே
எந்த நேரத்திலுமே—மூண்
டெரிதழல் மெழுகென வுருகிட மனமிக
நொந்து கண்ணீர் பொழிந்து—நாவா
லுவலொணாத் துயருற்று அகமிக நலிகின்றார்
அந்தோ மிகக் கொடுமை—உயர்
அருளென்பதில்லாத தன்னலங் கருதிடும்
தந்திர வைதீகர் சொல்—நம்பி
தையலரை யிந்த அல்லற்காளாக்காதீர். (இந்)

# ராஜா ராம்மோகன் ராய்.

திருச்சி கே. வி. எஸ். வாஸ், பி. ஏ. (ஆனர்ஸ்)

## அத்தியாயம் 10.

### ராம் மோகனரின் கல்விச் சீர்திருத்தம்.

அந்நியர்களின் வருகையினால் எந்த தேசத்திற்கும் தீமையேற்பட்டு விடாது. குடியேறுகின்றவர்கள் அதிகாரம் செலுத்த வாரம்பித்தால் தான் உள்நாட்டவர்களுக்கு கஷ்டங்களும் நஷ்டங்களுமேற்படும். ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசத்தில் குடியேறுகின்றவர்களுக்கு தங்களது பொருளாதார நிலைமையை அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டுமென்பதே பொதுவான நோக்கமாக இருக்கின்றது. இந்த நோக்கத்தைப் பூர்த்திசெய்து கொள்ள அவர்கள் அந்நியநாடுகளில் ஏராளமான மூலதனத்தை முடக்கிப் பெரிய பெரிய தொழில் ஸ்தாபனங்களை நிறுவுகின்றனர். அவைகளால் அவர்கள் இலாபமடைவதுடன் அவர்கள் குடியேறி யிருக்கும் தேசமும் நன்மையடைகின்றது. உதாரணமாக இலங்கை தேசத்தில் எவ்வளவோ இந்தியர்கள் இதுவரையில் குடியேறி யிருக்கின்றார்கள். இன்னமும் குடியேறிக் கொண்டிருக்கிறார்கள். . அவர்களால் அத்தேசம் நன்மையடைந்திருக்கின்றதே யன்றி பொறாமையும் குறுகிய நோக்கமுமுள்ள சில சிங்களத் தலைவர்கள் ஊளையிடுவதைப் போல் நஷ்டமடைந்து விடவில்லை. காடுகளாகவும் குன்றுகளாகவுமிருந்த இலங்கை தேசம் சுபீக்ஷமான பிரதேசமாக இன்று காணப்படுவதற்கு அங்கு குடியேறிய இந்தியர்களே காரணமென்பதை எவராலும் மறுக்கமுடியாது. இவ்விஷயத்தை இலங்கை இமிகிரேஷன் கமிஷனரிடம் சாக்ஷியம் கொடுத்த பல பிரமுகர்களும் ஒப்புக் கொண்டிருக்கின்றார்கள். குடியேறும் மக்கள் அதிகாரம் செலுத்த வாரம்பித்து விட்டாலோ அதன் விளைவு முற்றிலும் வேறாக மாறி விடுகின்றது. இதற்கு இந்திய சரித்திரத்தை விட்டு மற்றோரிடத்தில் உதாரணம் தேட வேண்டியதில்லை. கௌரவமான வர்த்தகர்களென்னச் சொல்லிக்கொண்டு வந்த வெள்ளையர்கள் சிறிது சிறிதாக அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டு விட்டமையால் நமது

தேசத்தின் நிலைமை இன்று எவ்வளவு மோசமாகி விட்டதென்பதை வாசக நேயர்கள் நன்கறிவார்கள்.

1826,ம் ஆண்டில் இண்டிகோவின் பயிர்த்தொழில் சம்பந்தமாக வங்காளத்தில் ஏற்பட்ட ஒரு பிரச்னையைப்பற்றி பிரஸ்தாபிக்கையில் மேற்படி விஷயத்தைத்தான் ராம்மோகனர் வற்புறுத்திக் கூறினர், அப்பொழுது அவர் தெரிவித்ததாவது:—

வெளிநாடுகளிலிருந்து குடியேறும் ஐரோப்பியர்கள் இண்டிகோ பயிர்த்தொழிலில் ஈடுபட்டிருக்கக்கூடாதென்றும் அவர்கள் அவ்வாறு செய்வதினால் சுதேசிகளுக்கு நஷ்டமேற்படுகிறதென்றும் வங்காளிகளிற் சிலர் விதண்டாவாதம் செய்கின்றனர். இது விஷயமறிந்து சொல்லும் வார்த்தையாகமாட்டாது. கண்ணியமாக நடந்து கொள்ளும் தோட்டத் துறைமார்களின் கீழ் இந்தியத் தொழிலாளிகளுக்கு நன்மையேற்படுகின்றதேயன்றி நஷ்டமுண்டாகவில்லை. தரிசு நிலங்களாகக் கிடக்கும் பிரதேசங்களையும் தோட்டத்துறைமார்கள் சீர்திருத்திப் பயிரிடுவதால் வேலையேற்றிருக்கும் ஏராளமான இந்தியத் தொழிலாளிகளுக்கு ஜீவனம் கிடைக்கின்றது. தவிர, சில்லறை ஜமீன்தார்களின் கொடுமைகளைச் சகியாமல் கலங்கிக் கண்ணீர் வடித்துக்கொண்டிருக்கும் பல்லாயிரக்கணக்கான ஏழை ஜனங்களுக்கு விடுதலையும், வாழ்க்கையில் திருப்தியும் ஐரோப்பியத் தோட்டத் துறைகளினால் கிடைக்கின்றது,

இண்டிகோவின் விலை உயரும் காலங்களில் தோட்டத் துறைகளுக்குக் கொழுத்த லாபம் கிடைக்கின்றது. அப்பொழுது தொழிலாளிகளின் கூலியையும் அவர்கள் உயர்த்துகின்றார்கள். ஜமீன்தார்களோ அவ்வாறு செய்வதில்லை. இவர்கள் அண்டியிருப்பவர்களின் நன்மையைக் கவனியாமல் தங்களது இலாபத்திலேயே கண்ணு யிருக்கின்றனர். எனவே, ஐரோப்பியர்களனைவரையும் வெளியேற்ற வேண்டுமென்று ஒரு கிளர்ச்சியேற்பட்டால் அந்தக் கிளர்ச்சியை ஜமீன்தார்கள் ஆதரிப்பார்களேயன்றி தொழிலாளிகள் ஆதரிக்கமாட்டார்களென்பது நிச்சயம். ஐரோப்பியத் தோட்டத் துறைமார்களால் இந்தியத் தோட்டத் தொழிலாளியின் நிலைமை வெகுவாக அபிவிருத்தி யடைந்திருக்கின்றது. ஆகையால் ஐரோப்பியர்கள் தோட்டத்தொழிலில் ஈடுபட்டிருக்கலாகாதென்று

வங்காளத் தலைவர்கள் கிளர்ச்சி செய்வது நாட்டின் பொது க்ஷேமத்தைக் கருதுவதாகமாட்டாது. பொது ஜனங்களுக்கு நன்மை செய்வதாகவும் கருதப்படமாட்டாது.

இதுதான் ராம்மோகனரின் கக்ஷி. அவருடைய மேற்படி மகஜர் 1829-ம் வருடம் ஜூன் மாதம் 5-ம் தேதியன்று பார்லிமெண்டு சபையில் திரு. வைன் அவர்களால் சமர்ப்பணம் செய்யப்பட்டது. அப்பொழுது மகஜரில் கண்ட விஷயங்களில் சர்க்கார் கவனம் செலுத்துவார்களென்று ஷாப்ட்ஸ்பரி பிரபு வாக்குறுதி செய்தார்.

இத்தகைய பிரசாரங்களுக்கிடையே மதச் சீர்திருத்தத்தையும் ராம்மோகனர் மறந்துவிடவில்லை. 1929-ம் வருடத்தில் சர்வஜன மதம் என்ற மகுடத்தோடு அவர் புதிய புத்தகமொன்றை வெளியிட்டார். அந்தப் புத்தகத்தில் கடவுள் ஒருவரே யென்றும், அவரையே ஒவ்வொரு மதத்தவர்களும் வெவ்வேறு பெயரைக்கொண்டு அழைக்கிறார்களென்றும், மத விஷயமாகச் சண்டையிடுவதைவிட மௌடீகமான காரியம் வேறொன்று மில்லையென்றும் அனேக ஆதாரங்களோடு அழகாக விவாதித்திருந்தார்.

அதற்கடுத்த ஆண்டில் பிரம்ம சமாஜத்திற்குப் போதுமான நிதி சேர்த்து விட்டமையால் பிரத்யோகமாக ஒரு கட்டடம் வாங்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. 1830-ம் வருடம் ஜனவரி மாதம் 8-ம் தேதி யிடப்பட்ட மேற்படி கட்டிடத்தின் சாஸனக் கடிதம் பிரம்ம சமாஜத்தில் சரித்திர பெருமை வாய்ந்ததோர் புனித தஸ்தவேஜாகும். இந்த தஸ்தவேஜில் பிரஸ்தாபக் கட்டிடம் துவாரகாநாத் தாகூர், கலீநாத் ராய், பிரஸன்னகுமார் தாகூர், ராமச்சந்தர் பிதியபாகிஷ், ராம்மோகன்ராய் ஆகியோர்களால் பாய்நெல்ண்டநாத் ராய், ராதாப்பிரசாத் ராய், ராமானந்த தாகூர் ஆகியோர்களை டிரஸ்டிகளாக நியமித்து அவர்களின் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டிருப்பதாக எழுதப்பட்டிருக்கிறது. அத்துடன் பிரார்த்தனைகளை ஒழுங்காக நடத்தவும் சமாஜத்தைத் தொடர்ந்து நிர்வகிக்கவும் மேற்படி டிரஸ்டிகளிடம் ஒரு நிதியும் ஒப்படைக்கப்பட்டது. பிரம்ம சமாஜத்தின் ஆரம்பக் கொள்கையைத் தெளிவாகச் சுட்டிக்காட்டும் இந்த தஸ்தவேஜு அனேக வகைகளில்

முக்கியமானதாகும். அதில் பின்கண்ட நிபந்தனைகள் காணப்படுகின்றன.

(1) பிரம்ம சமாஜத்திற்காகக் கொடுக்கப்படும் இந்தக் கட்டிடம் ஒழுங்காகவும் ஈசுவர பக்தியுடனும் இருக்கும் எல்லா வகுப்பினர்களாலும், எல்லா தேசத்தினர்களாலும், எல்லா நிறத்தவர்களாலும் வேற்றுமைகளின்றி பொதுக் கூட்டங்களுக்கு பயன்படுத்திக் கொள்ளலாம்.

(2) உலகங்களைச் சிருஷ்டித்தவரும், அவைகளைக் காத்து வருகின்றவரும், ஆதியும் அந்தமும் இல்லாதவருமான சர்வேசுவரனின் பூஜைக்காக இந்தக் கட்டிடம் பிரயோஜனப்படுத்திக்கொள்ளப்படலாம். ஆனால், அந்த சர்வேசுவரன் விக்ரக ரூபமாகவோ, சித்திர ரூபமாகவோ, அல்லது மனிதனால் சிருஷ்டிசெய்யப்பட்ட வேறு எந்த வடிவமாகவோ இக் கட்டிடத்திற்குள் வைத்து பூஜிக்கப்படலாகாது.

(3) இந்தக் கட்டிடத்தில் விருந்துகளும், களியாட்டங்களும் சதியாலோசனைகளும் மதுபானமும் நடைபெறக்கூடாது.

(4) பிரார்த்தனைகளின் பொழுதோ, பிரசங்கங்களின் பொழுதோ தூஷணையான பதங்களும், பிறருக்கு மனவருத்தத்தை உண்டுபண்ணக்கூடிய வார்த்தைகளும் உபயோகிக்கப்படலாகாது.

இந்தக் கட்டிடம் 1830-ம் வருட ஜனவரி மாதம் 23-ம் தேதியன்று ராம்மோகனரால் திறந்துவைக்கப்பட்டது. திறப்புவிழாவிற்கு சுமார் ஐநூறு ஹிந்துக்கள் விஜயஞ் செய்திருந்தார்கள். அவர்களிற் பெரும்பாலோர் பிராமணர்கள். ஸ்ரீமதி. ஸோபியா டாப்ஸன் காலட் என்னும் ஐரோப்பிய மாதும் மேற்படி வைபவத்திற்குப் பிரசன்னமாகியிருந்தார்.

இதே வருடத்தில், கல்வி விஷயமாக ராம்மோகனர் மற்றொரு அரிய சேவையைச் செய்தார். அதாவது ஜயிக்கப்பட்ட இந்தியர்களின் அபசியல் பொருளாதார ஞானத்தை ஜயித்தவர்களாகிய ஆங்கிலேயர்களுக்குச் சமதையாக்க வேண்டுமானால் மேல்நாட்டுக் கல்வி முறையை இந்தியாவிலும் புகுத்த வேண்டுமென்பது ராம்மோகனரின் அபிப்பிராயமாயிருந்ததென ஏற்கனவே நாம் குறிப்

பிட்டிருக்கின்றோம். தவிர ஆங்கில பாஷை எதிர்காலத்தில் முக்கியமான ஸ்தானத்தை வகிக்கப் போகின்றதென்றும், ஆகையால் அந்தப் பாஷையில் பெரும்பாலான இந்தியர்களைப் பாண்டித்ய முடையவர்களாகச் செய்துவிடவேண்டுமென்றும் அவர் விரும்பினார். இந்த நோக்கத்துடன் கல்வி விஷயமாகப் பிரசாரம் செய்யவும், ஆங்கிலப் பள்ளிக்கூடங்களைப் புதிதாகத் திறக்கவும் சில பாதிரிமார்களை யனுப்பிவைக்கும்படி ஸ்காட்லாந்தைச் சேர்ந்த செண்ட் ஆண்ட்ரூஸ் தேவாலய அதிகாரிகளுக்கு அவர் மனுச்செய்துகொண்டார். அந்த மனுவிற்கிணங்க மேற்படி ஆலய அதிகாரிகள் அலெக்ஜாண்டர்டப் என்னும் ஒரு பாதிரியை இந்தியாவிற்கு அனுப்பிவைத்தார்கள். அலெக்ஜாண்டர்டப் ஒரு இளைஞர். அவருக்கு கிறிஸ்தவ மதத்தில் மட்டற்ற நம்பிக்கையுண்டு. அதேசமயம் பிற மதத்தவர்களையும் பெருந்தன்மையோடு நடத்தும் சுபாவ முடையவர். கிறிஸ்தவர்களை யெல்லாம் ஒழுங்காக நடந்துகொள்ளும்படி செய்வதற்கும் கிறிஸ்தவரல்லாதாரை நேர்மையான முறையில் மதமாற்றுவதற்கும் அவர் தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்தவர். இந்தியாவைக் கிறிஸ்தவ மயமாக்கிவிடவேண்டுமென்னும் ஆசை அவருக்கு ரொம்பவும் உண்டு. ஆனால், இதற்காக நேர்மையான முறைகளைக் கைப்பற்றி நடக்க எக்காலத்திலும் அவர் விரும்பியவரல்ல.

அலெக்ஜாண்டர் டப் இந்தியாவிற்கு வந்ததும் ராம்மோகனரைச் சந்தித்து தமது அபிப்பிராயங்களையும் திட்டங்களையும் எடுத்துரைத்தார். அதே சமயத்தில் பிரம்ம சமாஜம் அதனுடைய பழைய கட்டிடத்திலிருந்து புதிய கட்டிடத்திற்கு மாற்றப்படுவதாயிருந்தது. பழைய கட்டிடத்தை ஆங்கிலப் பாடசாலையின் ஸ்தாபனத்திற்காக குடிக்கூலிக்குக் கொடுப்பதாய் ராம்மோகனர் ஒப்புக்கொண்டார். 1930-ம் வருடம் ஜூலை மாதம் 13ம் தேதியன்று புதிய பள்ளிக்கூடம் திறந்துவைக்கப்பட்டது. திறப்புவிழாவிற்கு ராம்மோகனர் விஜயம் செய்து ஆங்கிலப் பாதிரியாரால் நடத்தி நிர்வாகிக்கப்படும் பள்ளிக்கூடத்தின் விஷயத்தில் இந்தியர்களுக்கு ஏற்படக்கூடிய சந்தேகங்களை நிவர்த்தி செய்வதற்காக ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். அத்துடன் ஆங்கிலக் கல்வியின் அவ

சியத்தை வற்புறுத்தி புதிய பள்ளிக்கூடத்திற்கு சிறுவர் சிறுமி களை அனுப்பி வைக்கும்படி இந்தியப் பெற்றோர்களைக் கேட்டுக் கொண்டார். அவருடைய பெருமுயற்சியின் காரணமாக அலெக் ஜாண்டர்டப் பின் பள்ளிக்கூடத்தில் அனேகம் மாணவர்கள் சேர்ந் தார்கள். ஆனால் அவர்களுக்கு 'பைபிள்'புத்தகம் படிப்பதற்காக வழ ங்கப்பட்டபொழுது சில ஆக்ஷேபனைகள் எழுந்தன. அந்தச் சந்தர்ப் பத்தில் ராம்மோகனர் முன்வந்து "டாக்டர் ஹொரேஸ் ஹேமன் வில்சன் முதலான ஆங்கிலேயர்கள் ஹிந்துமத சாஸ்திரங்களைப் படிக்கின்றார்கள். அதனால் அவர்கள் கிரஸ்தவ மதத்தைத் திரஸ் கரித்து ஹிந்துமதத்தைத் தழுவிவிடவில்லை. நான் திரு. குர் ஆனை அனேகமுறை படித்திருக்கின்றேன். அது என்னை இஸ்லாமிய ராக்கிவிட்டதா? இல்லை. கிறிஸ்தவவேதத்தை எவ்வளவோ முறை நான் படித்திருக்கின்றேன். அதனால் நான் கிறிஸ்தவனாகிவிடவில்லை யென்பதையும் நீங்கள் அறிவீர்கள். அங்ஙனமிருக்க, மாணவர்கள் 'பைபிள்' புத்தகத்தைப் படிப்பதனால் ஏன் தீமை ஏற்படவேண் டும். ஒவ்வொரு மதத்திலுமுள்ள சித்தாந்தங்களை இளைஞர்கள் ஆராய்ந்தறிய வேண்டுவது அவசியமன்றோ?' என்று சொல்லி பெற் றோர்களைச் சமாதானப்படுத்தினர்.

ஆங்கிலக் கல்வியபிவிருத்தியில் சிரத்தை யெடுத்துக்கொண்ட ராம்மோகனர் சுதேச பாஷைகளைக் கைவிட்டு விட்டதாகவோ அல்லது அவைகளின் அபிவிருத்தியை அவசியமாகக் கருதவில்லை யென்றோ வாசகநேயர்கள் தீர்மானித்துவிடக் கூடாது. சுதேச பாஷைகளையும், ஹிந்துமத சாஸ்திரக் ஞானத்தையும் வளர்ப்பதற் காக அவர் வெகுதூரம் பிரயாசைப்பட்டிருக்கிறார். இவ்விஷயத்தை முந்திய அத்தியாயங்களில் விரிவாகக் குறிப்பிட்டிருக்கின்றமையால் மீண்டும் இங்கு பிரஸ்தாபிக்க வேண்டியதில்லை.

இதற்கிடையில், ஐரோப்பாவில் சுற்றுப்பிரயாணம் செய்வதற் காகவும், மேல்நாட்டு மதத்தலைவர்களைப் பெட்டிகண்டு பேசுவதற் காகவும் ராம்மோகனர் ஏற்பாடு செய்து கொண்டிருந்தார். இது டெல்லியிருந்த மொகலாய சக்கிரவர்த்தியின் செவிகளுக்கு எட்டி யது. மேற்படி மொகலாயச் சக்கிரவர்த்தி பெயருக்குச் சக்கிரவர்த்தி யாக இருந்தாரேயாயினும் அவருடைய ராஜரீக அதிகாரம் கிழக்கிந்

தியக் கம்பெனியாரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அதற்கு பதி லாக கிழக்கிந்தியக் கம்பெனியார் சக்கிரவர்த்திக்கு வருடந்தோறும் ஒரு தொகையை மான்யமாக அளிப்பதாய் ஒப்புக்கொண்டிருந்த னர். ஒப்பந்தத்தின்படி ஒப்புக்கொள்ளப்பட்ட தொகை சக்கிரவர்த் திக்கு உண்மையில் செலுத்தப்படவில்லை. தவிரவும், கம்பெனியா ரின் மான்யம் சக்கிரவர்த்தியின் குடும்பச் செலவுகளுக்குப் போது மானதாகவுமில்லை. இதுவிஷயமாக இந்தியாவிலிருந்த அதிகாரிகளி டம் அரசர் அனேக முறை சொல்லிப் பார்த்தார். ஆனால், அவரு டைய முறையீடுகள் விழலுக்கிறைத்த நீரைப் போலாகிவிட்டன. எனவே, தமது சார்பாக பிரிட்டிஷ் மன்னருக்கு ஒரு தூதரை அனுப்புவதென்று அவர் தீர்மானித்தார். நமது ராம்மோகனர் ஐரோப்பாவிற்குச் செல்ல ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறார் என் பதைக் கேள்விப்பட்டவுடன் அவரைத் தருவித்து "என் சார் பாக பிரிட்டிஷ் மன்னரை பேட்டி கண்டு எனது குறைகளை அவ ரிடம் எடுத்துரைக்கவேண்டும். இந்த உதவியைச் செய்வீர்களா னால் தங்களை நான் என்றும் மறவேன்!" என்று சக்கரவர்த்தி கூறினார். அவருடைய கோரிக்கையை ராம்மோகனரும் மகிழ்ச்சி யோடு ஏற்றுக்கொண்டார்.

---

## விதவையின் துயர்

(தோண்டர்)

கோமதி தனவணிக மரபைச் சேர்ந்த ஓர் இளம் பெண். அவ ளின் தந்தை சுப்பிரமணியன் செட்டியார் மிகுந்த செல்வந்தர். பழமை விரும்பும் கூட்டத்தினுள்ளொருவர். தாய் சிவகாமி ஆச்சி ஏறக்குறைய செட்டியாரின் குணமறிந்து நடக்கக்கூடிய கர்நாட கம். இவர்களுக்கு கோமதியைத் தவிர வேறு பிள்ளையில்லை. அதனால் கோமதி சிறு வயது முதல் செல்வத்துடன் வளர்த்துவரப் பட்டாள். செல்வத்தில் வளர்ந்த சிறுமிக்குச் சிலரின் தூண்டுத லால் சிறிது கல்வி போதிக்கப்பட்டது. கோமதியின் பத்தா

வது வயதில் பர்த்தாவைத் தேடிவிட்டனர். தக்க பணக்காரர் வீட்டில் மூன்ருவது வகுப்பிலிருந்து, நான்காவது வகுப்புக்குச் செல்ல இரண்டாண்டுகள் பகீரதப் பிரயத்னம் செய்த ஓர் மாப்பிள் ளேயைத் தேர்ந்தெடுத்தனர். நல்ல வனப்பும் முகவசீகரமும், செக் கச் சிவந்த மேனியும் உள்ள மாப்பிள்ளே கிடைத்ததைக் கண்டு தாய் தந்தையர் அளவற்ற மகிழ் வெய்தினர். துரிதத்தில் நிச்ச யார்த்தம் முதலியவைகள் நடைபெற்றன. விவாகத் தேதியும் குறிப்பிடப்பட்டது. கேட்பானேன் ?உப்பு முதல் கற்பூரம் வரை யாவும் சித்தப்படுத்தினர். வழக்கம்போல் கண்காட்சிப் பொருட் கள் சேகரிக்கப்பட்டு பரப்பப்பட்டன. சாதாரணமாக பொன் கொடுத்துப் பெண் வாங்கும் கல்யாணமே தடபுடல் மிகுதியாயி ருக்கு மென்ருல், பெண்ணுடன் பொன்னேயும் கொடுத்துச் செய் யும் கல்யாணம் ஆடம்பரமற்று இருக்கும் ? இருதரப்புக்கும் அதிகப் பணச்செலவு. உற்ருர் உறவினர் இனி எந்தப் பிள்ளேக்கு இவர் கல்யாணம் செய்து சாப்பாடு பொடப் போகிருர் என்ற எண்ணத் துடன் 10 நாட்கள் வரை இருந்து தின்றுவிட்டுச் சென்றனர். கல்யாணம் எவ்வித விக்னமுமின்றி சர்வாடம்பரத்துடன் சம்பிரம மாய் முடிந்தது. மணமக்கள் இருவரும் தங்கள் இளமைப் பழக் கத்தை விடாதிருந்தனர். சில ஆண்டுகள் சென்றன. மாப்பிள்ளே பையனேக் கப்பலேற்றி அனுப்ப தாய் தந்தையர் கருதினர். பெண் வீட்டாரும் ஒப்பினர். நல்ல நாளில் பையன் பர்மாவுக்குத் தங்கள் கடைக்குச் சென்ருன். கோமதி இளஞ் சிறுமிகளுடன் விளேயாடுவதை இன்னும் நிறுத்தியபாடில்லே. வயது பதினென்கு நிரம்பிவிட்டமையால் தாய் தந்தையர் கோமதியை வெளியிற் செல் லக்கூடாதெனக் கண்டிக்கத் தலேப்பட்டனர். ஒரு நாள் கோமதி தன் தாய் தந்தையரிடம் சந்தோஷமாய் உரையாடிக்கொண்டிருக் கும்பொழுது தெருவில் ஒரு மோட்டார் வண்டி வெகு வேகமாய் வந்து நின்றது. ஒரு மனிதர் உள்ளிருந்து மிக அவசரமாய்க் கீழி றங்கி ஓடிவந்தார். யாரெனப் பார்க்க சுப்பிரமணியன் செட்டியார் எழுந்திருந்தார். வந்தவர் நெருங்கி வந்து ஓர் கடிதத்தைக் கையிற் கொடுக்க, சுப்பிரமணியன் செட்டியார் பிரித்துப் பார்த்ததும், தன் னேயுமறியாமல் வந்தவரைப் பல கேள்விகள் கேட்டுத் திண்டாட

வைத்துவிட்டார். தாயும் மகளும் ஒன்றும் விளங்காமல் சுப்பிரமணியன் செட்டியாரை என்ன விஷயம் என்று கேட்டனர். அதற்குள் வந்தவர் ஏதோ சில வார்த்தைகள் கூறிவிட்டு திரும்பிச் சென்ருர். சுப்பிரமணியன் செட்டியார் முகவாட்டத்துடன் சாய்மான நாற்காலியில் அமர்ந்தார். சிவகாமி ஆச்சி பல முறை கடிந்து விஷயம் என்னவென்று கேட்டபின் சுப்பிரமணியன் செட்டியாரின் வாய் திறந்தது. "பர்மாவிலிருந்து மாப்பிள்ளைப் பையனுக்கு "பிளேக்" என்னும் நோய் கண்டிருப்பதாகவும் டாக்டர் மூலம் வைத்தியம் பார்ப்பதாகவும் குணமடைந்து விடுமெனவும் தகவல் வந்திருக்கிறது. வேறு ஒன்றுமில்லை" யென்று வருத்தத்துடன் கூறினர். உடனே சிவகாமி ஓவென்றலறத் தொடங்கிவிட்டாள். கோமதி ஒன்றுமறியாமல் "எந்த மாப்பிள்ளைக்கு நோய் கண்டிருக்கிறது? அதனுல் நமக்கென்ன நீங்கள் ஏன் வருந்துகிறீர்கள்?" என்று சமாதானம் சொல்ல ஆரம்பித்தாள். பிறகு சுப்பிரமணியன் செட்டியாரின் தீவிர முயற்சியால் சிவகாமி ஆச்சி ஒருவாறு தேறினுள். கோமதிக்கு எல்லா விபரங்களும் எடுத்துரைத்தனர். பர்மாவிற்குப் பல தந்திகள் பறந்தன! மறுநாள் கோமதி புஷ்பவதியாகிவிட்டாள். கோமதிக்கு தன் நாயகனின் உருவம் மட்டும்சிறிது ஞாபகமிருந்தது. எல்லோரும் இவளைப்பார்த்து வருந்தும்பொழுது இவளும் அவ்வுருவத்தை நினைத்து வருந்துவாள். இவ்வித நிலையில் நான்குநாட்களும் விரைந்தோடின. பகல் 12மணிக்குத்தந்திச்சேவகன் ஒரு தந்தியைக் கொண்டுவந்து சுப்பிரமணியன் செட்டியாரிடம் கொடுத்துப் போயினுன். பக்கத்திலுள்ள ஒருவரிடம் தந்தி மொழி பெயர்க்கச் சென்றது. சுப்பிரமணியன் செட்டியார் மொழிபெயர்ப்பைப் பார்த்ததும் அடியற்ற மரம்போற் சாய்ந்தார். அனைவருக்கும் விஷயம் ஒருவாறு தெரிந்து விட்டது. எண்ணற்ற ஆடவர் பெண்டிர் குழுமி விட்டனர். ஒரே அழுகையும் ஒப்பாரியும் கூக்குரலுமாகவிருந்தது. குழுமிய மக்கள் ஒவ்வொருவரும் உலக வழக்குகள் பேச ஆரம்பித்துவிட்டனர். சுப்பிரமணியன் செட்டியார் பலர் தேற்றத் தேறி எழுந்தார். இதற்குள் மாப்பிள்ளை வீட்டாரும் ஓவென்றலறிக்கொண்டு வந்தனர். விரிப்பானேன்? புஷ்பவதியான பெண்ணின் புஷ்பம் பறிமுதல் செய்

யப்பட்டன. அவளின் இயற்கை அழகைத் தவிர செயற்கையழகனைத்தும் பறிமுதல் செய்தனர். கோமதி சமூகப் பேய்க்கு அடிமையானாள். பழக்க—வழக்கமெனும் தேவதைக்குப் பலியானாள். சுதந்திரமிழந்தாள்; வெள்ளைத் துணியுடுத்தி மூலையில் ஓர் பாய் தலையணையுடன் தள்ளப்பட்டாள். போதாக்குறைக்கு உற்றார் உறவினர் அக்கம்பக்கத்தார் வெந்த புண்ணில் வேலெடுத்துக் குத்துவதைப்போல இவளின் மனவேதனையைப் பெருக்கிவந்தனர். கோமதியின் இளமைமணம் எண்ணற்ற துன்பமளித்தது. சமூகக் கொடுமை கூர்கொண்டு தாக்கிற்று. என் செய்வாள்? இளம் பெண்! விதியை நொந்து நொந்து வாடுகின்றாள். இவளின் துயரைத் தீர்க்க வழியில்லையா? அவளின் கண்ணீர் நம்மை முன்னுக்கு வரவிடுமா? விதவை என்ற பட்டத்துடன் வேதனைப்படைபவர்களை விடுத்து, நாம் ஒன்றுக்கு நான்கு மனைவிகளுடன் கூடிவாழ்தல் நலமா! ஆணுக்கொரு நீதியும் பெண்ணுக்கொரு நீதியும் அளிக்கும் இச்சமூகம் எவ்விதம் முன்னேறப்போகின்றது?

பெரியோர்களே! இளைஞர்களே? உங்கட்கு பகுத்தறிவு எங்கு சென்றது? ஆண்களாகிய உங்களை இவ்விதம் கொடுமைப்படுத்தினால் சகித்துக்கொண்டிருப்பீர்களா? செல்வாக்குப்படைத்த உங்கள் சமூகத்தில் இவ்வித சீர்கேடு இருப்பது பெருமையளிக்குமா? காலம் மாறிவருகிறது. அதற்குத் தகுந்தாற்போல் நீங்களும் மாறித்தான் தீரவேண்டும். இல்லையேல் அந்தகாரமான இருளில் அகப்பட்டு அவதிப்படுவீர்கள் என்பதை ஞாபகப்படுத்துகிறேன்.

---

# பார்வதியின் பரிதாபம்

'ஏயஸ்'

யார் விஷயத்திலாவது சோதிடம் பூரணமாகத் தோல்வியுற்றதென்றால், அது பார்வதி விஷயத்தில்தான். செல்வத்தில் பிறந்து, செல்லக் குழந்தையாக வளர்ந்து, பருவமுற்றுக் கல்யாணமாவது வரை எவ்விதக் கவலையுமின்றி விளங்கிய பார்வதி கடைசியில் இந்த

விதமான பரிதாப நிலையை அடைவாள் என்று யாரும் எதிர்பார்க்க வில்லை. இந்துப்பெண்கள் எந்த நிலையில் இருக்கின்றார்களென்பதற்கு ஓர்தகுந்த அறிகுறியாக அவள் இன்று விளங்குகின்றாள். சீர்குலைந்து துயரக்கடலில் கரைகாணமுடியாது, தத்தளிக்கும் இந்தக் கப்ப லுக்கு உறுதுணையாக யாரேனும் முன் வருவார்களா? அல்லது துணையைத் தேடிப்பிடிக்கக் கலங்கரை விளக்கமாவது உண்டா?

இந்தக் கேள்விக்குப் பதில் வாசகர்களே தரவேண்டும். பார் வதியின் வரலாற்றைச் சுருக்கமாகக் கீழே தருகிறேன்.

பார்வதியின் தந்தையாருக்குத் திருவனந்தபுரம் ஸர்க்கார் அச் சுக்கூடத்தில் வேலை. மாதம் நாற்பது ரூ. சம்பளம், பூர்வீகச் சொத் துக்களாகச் சில நிலபுலன்களுமுண்டு. அவர் மிகுந்த செட்டாகக் காலங்கழித்துக் கொஞ்சம் பணந்தேடிவைத்தார். பார்வதி ஒரே குழந்தை யாதலால் அவளுக்கு எவ்விதக் குறையுமின்றிச் செல்ல மாக வளர்த்துவந்தார்.

தன் செல்லக் குழந்தையை நன்கு படிக்கவைக்க வேண்டு மென்பது தந்தையாரின் ஆசை. ஆனால், தாயாரின் மௌடீகம் அவர் ஆசையில் மண்ணைவாரிப்போட்டது. பார்வதி நாலாவது வகுப்புடன் தன்படிப்புக்கு முற்றுப்புள்ளி போட்டுவிட்டு ஹிட்ல ரின் உபதேசத்தைப் பின்பற்ற நேர்ந்தது. தந்தையின் ஆவல் பூர்த்தியாகாமல் போனதற்கு இன்னொரு காரணமுமுண்டு.

பார்வதியின் தாய்தந்தையர்க்கு சோதிடத்தில் அபார நம்பிக் கை. பாண்டியிலிருந்து மிகுந்த பணக்கார படித்த மாப்பிள்ளை வாய்க் கப்போகின்றானென்று சோதிடர் உறுதி கூறியது பெற்றோருக்கு மிகுந்த உற்சாகத்தை யளித்தது. இனி என்ன கவலை? தங்கள் ஏகபுத்திரி எப்படியும் சௌக்கியமாக வாழவேண்டும்—அவ்வளவு தானே! பணத்திற்குப் பணம், படிப்புக்குப் படிப்பு, ஒழுக்கத் துக்கு ஒழுக்கம்—அப்பாடா, இவ்வளவு குணங்களுமுள்ள மாப் பிள்ளையிருக்கும்போது படிப்பு—பெண்ணுக்கு எதற்கு?— என்று தாயார் கூறிய பொன் மொழிகளைத் தந்தையார் தட்ட தைரியங் கொள்ளவில்லை.

உரியகாலத்தில் வரனும் பார்வதியைத் தேடிவந்தான். வா னல்ல, தரகன் வந்தான்; மாப்பிள்ளையின் பெயர் பரமசிவம்.

முதலாவது பாருங்கள் பெயர்ப் பொருத்தம்! பின் கேட்பானேன்? அழகில் இணையில்லை; பணத்துக்குக் கணக்கில்லை—பாங்கியில் போய் கேட்கவேண்டியதுதான்; படிப்புக்கோ அளவில்லை—சரஸ்வதிகூட இன்னும் படித்துக்கொண்டுதானிருக்கிறாள்! எல்லாம் இல்லை என்று முடிவதுபோல் வேலை என்னவென்றால் அதுவும் இல்லைதான்! சகல ஐசுவரியங்களும் சித்தித்து இருக்கும்போது வேலை என்ன வகைக்கு?—என்றெல்லாம் அளந்தான் தரகன்.

தமது பெண்ணின் சாதக பலனுக்கு ஏற்ற மாப்பிள்ளை கிடைத்துவிட்டதாகப் பார்வதியின் பெற்றோர் உள்ளுக்குள் எண்ணிப் பூரிப்படைந்தனர். பெண் தேடிவந்த தரகன்சொன்னான்: ஒன்றுமட்டும் நான் சொல்லாமலிருக்கமுடியாது; மாப்பிள்ளையின் தாய் தந்தையர் உங்களைப் போலவே தங்கமான குணம், யாரிடமும் வம்புக்குப் போகமாட்டார்கள். தாம்உண்டு, தம் வீடுஉண்டு என்றிருப்பவர்கள். இதனால் பலருக்கு அவர்கள் மேல் துவேஷமுண்டு. பணக்கார மமதை பிடித்திருக்கிறார்கள் என்று பலர் சொல்வதை நானே நேரில் கேட்டிருக்கின்றேன். ஆகலால் நீங்கள் தப்பித்தவறி விரோதிகள் யாரிடமாவது போய்க் கேட்டுவிடப்போகிறீர்கள். ஒரு சுப தினத்தைப்பார்த்து ஊருக்கு வாருங்கள், சம்பந்திகள் வீட்டிலேயே தங்கி எல்லா விஷயங்களையும் நேரில் பார்த்து அறிந்துகொள்ளலாம். மாப்பிள்ளைக்கு இரண்டு இளைய சகோதரர்கள் உண்டு. எல்லாம் தங்கமான பையன்கள். உங்களிடத்தில் வேறு பெண்ணில்லை; இருந்தால் அந்தப் பையன்களுக்கே கொடுக்க விரும்புவீர்கள். இதைவிட நல்ல சம்பந்தம் உங்களுக்குக் கிடைப்பது அரிது. இனி உங்களிஷ்டம்.

ஃ ஃ ஃ

சுபதினத்தில் பார்வதியின் தந்தையார் வீரவநல்லூர் போய்ச் சேர்ந்தார். தனக்கு சம்பந்தி ஆகப்போகிற ஆறுமுக முதலியார் வீட்டில் நான்குநாள் தங்கியிருந்தார். அங்கு நடக்கிற நடபடிக்கைகளெல்லாம் அவருக்கு மிகுந்த திருப்தியை அளித்தன. ஆறுமுக முதலியார் ஒரு பெரிய மிராசுதாராகவேயிருக்கவேண்டும்! உள்ளூரிலுள்ள பல மனிதர்களும் அங்கு வந்து பண விஷயமாகப் பேசியும் கொடுக்கல் வாங்கல் செய்தும் போவதைக் கண்டார். மாப்பிள்ளைப்

பையனே பெரிய சாதுவாகத் தோன்றினன். அழகில் மன்மதன் போல் தோன்றுவிட்டாலும், குறையெதுவுமில்லை. கலியாணம் நிச்சயமான பின்பே அவர் தம் ஊர் திரும்பினர்.

ஃ ஃ ஃ

உரிய காலத்தில் திருமணம் சிறப்பாக நடந்தது. கொஞ்ச நாளைக்குப் புது மனையில் பார்வதி சுகமாகவே காலங்கழித்து வந்தாள். பெற்றோருடைய உதவியும் கிடைத்துவந்தது. பின்னர் தான் அவள் மாமனர் வீட்டுக் காரியங்களெல்லாம் தெளிவாயின. உண்மையில் அவர் ஒரு பணக்காரரல்ல. கொடுக்க வேண்டியிருந்ததே யொழிய வாங்கவேண்டியது ஒன்றுமில்லை. பார்வதியின் தந்தை அங்கு தங்கியிருந்தபொழுது நடந்ததெல்லாம் வெறும் நாடகம். தமக்குப் பணம் கொடுக்க வேண்டியவர்கள் பலர் இருப்பதாக அவர் நினைக்கத் தக்கவண்ணம், தாமனது யோசனைப்படி பல நடபடிகள் நடக்க ஏற்பாடு செய்திருந்தார். வெளியாருக்கு அவர் பேரில் வெறுப்பு உண்டு என்று சொல்லி விசாரிக்க வெட்டாமல் தடுத்ததும் பகட்டுத்தான். எதையும் நம்பிவிடக்கூடிய சுபாபமுள்ள பார்வதியின் தந்தை எளிதில் அவர்கள் வலையில் சிக்கிக்கொண்டார்.

பரமசிவமோ வெறும் பரமசிவந்தான். சாப்பாடு வேண்டும். அப்பால் அவன்பாடு பரம குஷிதான்! குறுக்கு வளையாது. எந்த வேலைக்கும் லாயக்கில்லை. படிப்போ சூன்யம், புத்தி உலக்கைக் கொழுந்து தான்! கொஞ்ச நாளையில் மாமனர் வீட்டுச் சாயம் வெளுத்துவிட்டது. பார்வதி கவலைக்கடலில் ஆழ்ந்தாள். மனக்குறை உணர்ந்தறியாத பெண்ணுக்கு இது ஒரு பெரிய மலைபோல் தோன்றிற்று. நிலைமையை எப்படி சமாளிப்பது என்றோ, அல்லது அதை எப்படிப் பொறுத்துக்கொள்வதென்றோ அவள் அறிய முடியவில்லை. தாய் தந்தையருக்கும் பரமசிவத்துக்கும் மனஸ்தாபமேற்பட்டு, அதனல் புதுத் தம்பதிகள் தனிக்குடித்தனம் பண்ண வேண்டியதாயிற்று. மூத்தபையனுக்குக் கல்யாணமாகாவிட்டால், மற்றப்பையன்களுக்குப் பெண்கிடைக்காதே யென்பதும், பரமசிவத்துக்கு ஏற்றபெண்ணை தூரமான இடத்திலேயே பார்த்து, தந்திரமாக முடித்துவிட வேண்டுமென்பதும் பரமசிவத்தின் பெற்

ஞேர்கள் எண்ணம். அவர்கள் எண்ணம் நிறைவேறியது. இனிஅவர்களை ஒதுக்கிவைத்தால் தான் நல்லதுஎன்று கருதினர்கள். இல்லாவிடின் ஈன்றெடுத்த தாயும் வேண்டாளல்லவா?

பார்வதியின் தந்தையார் சேமித்த பொருளனைத்தும் பார்வதிக்கே சிறிது சிறிதாக அனுப்பப்பட்டுச் செலவாயிற்று. எவ்வளவு உதவிசெய்தும். பரமசிவம் முன்னுக்கு வரவழியைக்காணும். அவன் மனைவியை ஒழுங்காகவைத்து நடத்தவுமில்லை. அந்தக்கவலையில் அவள் பெற்றோர்கள் விரைவாக விண்ணுலக கெய்தினர். பார்வதியின் கதி அதோகதியாயிற்று. பெருவெள்ளத்தில் அடித்துக் கொண்டு போகப்படும் ஒருவன், தப்புவதற்குச் சாதனமென நம்பியிருந்த புல்லும் நீரில் மூழ்கி மறைந்தால் அவன் அவஸ்தை எப்படியிருக்குமோ அவ்வாறு பார்வதியும் அவஸ்தைப்பட்டாள்.

கையிலொரு காசுமில்லை; கடன் கொடுப்பார் யாருமில்லை. வேலை செய்தறியாத பார்வதிக்கு ஒரு தொழிலும் தெரியாது. பக்கத்து வீட்டில் பாத்திரம் சுத்தி செய்தல், வீடு மெழுகுதல், வீடு சுத்தம் செய்தல் முதலிய வேலைசெய்து மாதம் இரண்டு ரூபாய் சம்பாதிக்கும் நிர்ப்பந்தத்துக்கு ஆளானள்.

பரமசிவம் சோம்பேறியாகி, சோம்பேறிக் கூட்டத்தில் சேர்ந்து வம்பளக்கும் தொழிலை நடத்தி வந்தான். ஒரு பாவமுமறியாத பார்வதிக்கு ஒழுக்க தோஷத்தைக் கற்பித்தான். இதனல் அவர்களுக்குள்ள சண்டை சச்சரவுகள் சர்வ சாதாரணமாக நிகழ்ந்து வந்தன.

ஓர்நாள் திடீரென்று பரமசிவம் காணுமல் போய்விட்டான். ஓர் பெரும்பாரம் பார்வதியின் தலையிலிருந்து நீங்கியது. கூலி வேலை செய்தாவது பிழைத்துக்கொள்ளலாம் என்ற தைரியம் அவளுக்கு ஏற்பட்டுவிட்டது. ஆனல், அக்கம் பக்கத்து வாலிபர்களது துஷ்ட முயற்சிகளேயும், இயற்கை உணர்ச்சியையும் தடுக்க சக்தியற்றுத் தவிக்கின்ருள்.

பரமசிவம் தஞ்சாவூரில் அன்னக்காவடி மடத்தில் சேர்ந்து வயிறு வளர்த்து வருவதாகத் தெரிகிறது. விதவைகளுக்காவது விரும்பினல், தைரியம் உண்டானல் மறுமணஞ்செய்ய இடமுண்டு;

பார்வதியைப்போன்ற 'சுமங்கிலி'களின் கதியென்ன? அவள் விபசாரத்தில் ஈடுபட்டால், அதற்கு ஜவாப்தாரியார்? ஐயோ பரிதாபம்! பரிதாபம்!!

---

## ஒரு உண்மைச் சரிதம்.



காளவனப் புலவர்.

பொருநைத் துறைவன் அரசாண்ட புண்ணிய பூமியிலே எல்லைப்புறத்தையடுத்த ஓர் ஊரிலே ஒரு கிறிஸ்தவ குடும்பத்திலே ஆடம்பரமற்ற சாதுவான ஒரு பிதாவிற்கு மகளாகத் தோன்றினாள் தாயி என்னும் பெண்மணி. தாயி என்னும் பெயர் செல்லப் பெயராயிருக்குமானால் கிறிஸ்தவ நாமம் வேறொன்றிருத்தல் கூடும். அவளது சிறுபிராயத்திலேயே தந்தை காலகதியை யடைந்துவிட்டதாகத் தெரிகிறது. பத்து வருஷங்களுக்கு முன்னே நான் அந்த உத்தமியைப் பார்க்க நேர்ந்தபோது அவளுக்கு 25 அல்லது 28 வயதிற் குட்பட்ட பிராயந்தானிருக்கும். அவள் உயர்குணமும் மதப்பற்றும் தெய்வஞானமும் ஒருங்கேயடைந்து பொலிவுற்றாள்.

ஏற்கனவே அந்தமாது இருமுறை விவாஹபந்தத்திற் குட்பட்டும் சந்தான லாபமற்றவளாகக் காலகதியால் விதவைப் பெயரையே பெற்றிருக்க நேர்ந்தது. அவள் அடைந்த மனச்சலிப்பினால் மூன்றுவதும் ஒரு விவாஹம் வேண்டுமென்று நினைக்கவில்லை; நினைத்த சுற்றத்தவாது நினைப்பிற்கு அவள் இடங்கொடுக்கவு மில்லை. இவ்வாருக நாட்கள் சிறிது கடந்தன; ஆயினும் பெற்றவளின் கண்ணீருக்கும் அப்பெற்றாளை ஈன்ற தன்பாட்டியின் நிர்ப்பந்தத்திற்கும் அது சமயம் கிரககாரியங்களை மேற்பார்வை செய்துவந்த சிறிய தகப்பனுடைய பிடிவாதத்திற்கும் கீழ்ப்படிய நேர்ந்து கொண்டதனால் அவளுக்கு மூன்றுவது விவாஹமும் நடைபெற்றது. அந்த விவாஹத்தினால் அவளுக்கு இரண்டு பெண்குழந்தைகள் தோன்றின. அக்குழந்தைகளில் மூத்த குழந்தை மூன்றுவயதும் இளையது கைக்கு

ழுந்தையு மாயிருந்த காலத்திற்றான் நான் அந்தப் பெண்மணியை நேரில் பார்க்க நேர்ந்ததென்று மேலேகூறினேன்.

மூன்றாவதாக வந்த கணவரும் உயர்குணமும் ஒழுக்க நடையும் உடையவர். அவர் 100—மைல்களுக்குப்பால் ஒரு தோட்டத்தில் குமஸ்தாவாக இருந்தார். போதுமான வரும்படி யுடையவர். ஆயினும் மனைவியின்சரீர சுகத்திற்குப் பங்கம் விளைந்து விடுமோ என்ற சங்கையினால் அவளை மலைக்குக் கூட்டிச் செல்ல விரும்பவில்லை. அவரே நாட்டிற்கு வந்துபோயிருந்தார். மாதா மாதம் வேண்டிய அளவிற்கான தொகையை அனுப்பிக் கொடுப்பார். தேகசுகத்தைக் குறித்த கடிதங்கள் தினமும் அவர்கள் தம்மில் போய் வந்துகொண்டிருக்கும்.

தாயம்மாள் சிக்கனமான செலவில் வெகு தாற்பரியமுடையவள்; மாதந்தோறும் ஸேவிங்ஸ் பாங்கியில் ஒரு தொகை மீதி வைக்கிறதுண்டு. ஒருசமயம் அவள் தன் பர்த்தாவின் அனுமதியுடன் அதிலிருந்து கொஞ்சம் பணமெடுத்துத் தன் வீட்டைப் புதுப்பிக்கலானாள். வேலை பூர்த்தியாகுமுன் ஒருநாள் அதிகாலையில் ஸேவிங்ஸ் பாங்கிப் புத்தகத்தை எடுத்துக்கொண்டு கவலையுற்ற தோற்றத்துடன் பாங்கியில் மாஸ்டர் அறையை நோக்கிச் செல்லலானாள். இவளது வரவைக் கண்ட அவர் எழுந்துவந்து உபசாரமாக "என்னம்மா? என்ன வேண்டும்" என்று கேட்டார். "ஐயா உங்களுடைய பாங்கி ஸமயம் வேறாயிருக்கலாம்; என் தாயார் கூறியது போல் தாங்களும் தடை கூறிவிடாதீர்கள்; ஏழு ரூபாய் வேண்டும்; இந்த சமயத்தில் நீங்கள் செய்வது என்னுடைய ஜீவிதத்திலேற்படுவதான ஒரு முக்கிய சம்பவத்திற்குதவுவதாயிருக்கும்; செய்வீர்களா?" என்று வருந்திக் கூறிக்கொண்டே புத்தகத்தையும் ரசீதையும் அவர் கையில் கொடுத்தாள். அவளுடைய நிலைமையில் மறுத்துச் சொல்ல ஒன்றுந் தோற்றாத அவர் அவைகளை வாங்கிக்கொண்டு, தன் சொந்த ஜாகையிற் பிரவேசித்து, ஏழு ரூபாயை எடுத்து வந்துகொடுத்து "12 மணிக்குப் புத்தகத்தை வீட்டிற்கு அனுப்பிவிடுகிறேன்" என்று சொன்னார். "அந்த சிரமம் தங்களுக்கு வேண்டியதில்லை; நானே வந்து வாங்கிக் கொள்கிறேன்;

ரெம்ப உபகாரம்; சலாம்" என்று சொல்லிக்கொண்டு போய்விட்டாள்.

போன அவள் தன்னையும் குழந்தைகளையும் அன்று மாலை 3 மணிக்கு மலைவட்டத்து மோட்டார் நிலையத்தில் வந்தழைத்துப் போக வேண்டுமென்ற தந்திச் சமாசாரத்தைத் தன் பர்த்தாவிற்கனுப்பினாள். பிறகு சுமார் 9 மணிக்குத் தன் சிற்றப்பனைத் துணைக்கொண்டு குழந்தைகளுடன் அவள் பிரயாணமானாள். அந்த சிற்றப்பன் பாதி வழி வரையிலுஞ் சென்று, அங்கிருந்து மலைக்குச் செல்லும் மோட்டாரில் மகளையுங் குழந்தைகளையும் அனுப்பிவிட்டுத் திரும்பினார். அவர்களும் மலை நோக்கிச் சென்றனர்.

தந்தி வர்த்தமானத்தைப் பெற்ற பர்த்தாவானவர் கொஞ்சம் சிற்றுண்டிகளையுங் கொண்டு, ரண்டு மூன்று வேலையாட்களுடன் மோட்டார் நிலையத்தில் வந்து காத்திருந்தார். சரியாய் பிற்பகல் 3 மணிக்கு வந்துசேர்ந்த பஸ்ஸிலிருந்து இறங்கிய மனைவியைக் கை குலுக்கி அவர் வரவேற்றார்; குழந்தைகளை எடுத்து முத்தினார்; சிற்றோடைகளும் சிறு கற்பாறைகளும் செறிய வானத்தை யளாவி நின்ற மரச் சோலையிலே ஒரு தனி இடத்தில் எல்லோரும் பிரவேசித்து, சிற்றுண்டியருந்திச் சிறிதிளைப்பாறினர்.

அப்பால், குழந்தைகளையும் சாமான்களையும் வேலையாட்கள் எடுத்துவரக் கையோடு கைகோர்த்துத் தானும் மனைவியுஞ் சாவதானத்தில் நடக்கலாயினர். அவர் மனைவியைப் பார்த்து "தாயீ! நீ பைத்தியக்காரி! எதற்காக இவ்வளவு சிரமத்தை எடுத்துக்கொண்டாய்? உனக்காவது குழந்தைகளுக்காவது என்னைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையிருந்தால் அது விபரம் அறிந்ததும் நானே வந்துவிடுவேனாயிருந்ததே! இன்று காலையிற் கிடைத்த வழக்கமான கடிதத்திலும் நீ ஒன்றும் சொல்லவில்லையே! ஏன்? குழந்தைகளுக்கும் எவ்வளவு சிரமம்! எதானாலும் உங்கள் யாத்திரைக்குப் பூரண சுகமளித்த கர்த்தருக்கு நான் தோத்திரஞ் சொல்கிறேன்" என்று சொன்னார். சொன்னதும் "பிரியமுள்ள தலைவரே! என்னில் தயவுபாராட்டுங்கள்; இனி அதுபற்றி ஒன்றும் என்னைக் கேட்காதீர்கள்; கேட்டால், நானொன்றும் சொல்ல அறியேன். ஆனால் உண்மையில் ஒன்றறிவேன்; தங்களை உடன்

பார்த்துத்தீரவேண்டுமென்ற ஒரு ஆத்திரம் என்மனத்தே தோன்றியது. அந்த ஆத்திரமோ என் வருதிக் குட்பட்டதாயிருக்கவில்லை; வெகு நிர்ப்பந்தத்தோடு கூடியதாயிருந்தது; பின் நான் என்னசெய்வேன், என்னால் என்ன செய்யமுடியும்? நான் இங்கு வருவதில் என் தாய் முதலியோருக்குப் பிரியமில்லை. அவர்கள் முதலில் தடை சொன்னார்கள்; பிறகு பரிகாச வார்த்தைகளினாலாவது நிறுத்திவிடலாமென் றெண்ணினார்கள். அவர்களது அறியாமையினாற் சொல்லுகிற தடைகளுக்கும் பரிகாசங்களுக்கும் என் மன உணர்ச்சியைத் தடுக்கும் வலியுண்டா? என் கருணையுள்ள தலைவரைப் பூரண சுகங்கொண்ட ஆரோக்கியத்தோடும் மனக் குளிர்ச்சியோடும் இந்தப் பைத்தியக்காரி பார்ப்பதற்குக் கிருபை செய்த இரக்கமுள்ள கர்த்தருக்கு என் தோத்திரம்" என்று சொல்லிக்கொண்டே கண்ணீர் வடித்து உள்ளங் கலங்கினாள் அவள். அதுகண்ட கணவர் திகைப்புற்றார்; கைக்குட்டையால் அவள் கண்ணீரைத் துடைத்தார். "என் பிரியமுள்ள தாயீ! நீ எதற்காக கண்ணீர் சிந்தவேண்டும்? நீ சிறு குழந்தையல்லவே! உன் தேகம் சிரமம் தாங்கத்தக்கதல்லவென்று நினைத்தல்லவா கூறினேன். அதனாலென்ன? எதானாலும் நீ வந்தது நலமாயிற்று. தோட்டத்திலே எங்கள் அம்மாள் உன்னைப் பார்க்கவேண்டுமென்று ரொம்ப ஆசை கொண்டிருக்கிறாள். தினமும் அதுபற்றி என்னிடம் சொல்வதுண்டு. இன்றும் "வேனிலுக்கு இந்த மலையை எல்லோரும் சுக வாசத்திற்கு விரும்ப, நீர் இது சமயம் உம்து மனைவியாரை இங்கழையாதிருப்பதுபற்றி வருத்தமடைகிறேன்" என்று பரிந்துகூறினாள். அப்படிக் கூறின அந்த அம்மாளிடம் காலை 10 மணிக்கெல்லாம் உன் தந்தியைக் காண்பித்தேன்; ஆச்சரியமும் சந்தோஷமுமடைந்தாள்; என்னை துரிதப்படுத்தி மோட்டார் நிலயத்திற் கனுப்பினதோடு நான் கொண்டுவந்த சிற்றுண்டிகளை உங்களுக்காகத் தந்ததும் அந்த அம்மாள்தான். நாம் முதலாவது அவர்களைப் பார்த்துவிட்டுப் பிறகுதான் நம் ஜாகைக்குச் செல்லவேண்டும்" என்று அவர் கூறினார். "அதற்கென்ன துரையவர்களையும், அம்மாளையும் பார்க்கிறதற்காகவே சில நாட்டுப் பதார்த்தங்களைத் தயாரித்துக்கொண்டு வந்திருக்கிறேன். அவைகளை

அவர்கள் விசேஷமாய் விரும்புவதுண்டு" என்று அவளும் பதிற் சொல்ல, எல்லோருந் தோட்டத்தை யடைந்தனர்.

அடைந்ததும் சில பண்டங்களை எடுத்துக்கொண்டு அவர்கள் குழந்தைகளுடன் பங்களாவிற்குச்சென்றார்கள். அங்கே ஸூப்பரின் டென்ட் துரையவர்களும் மதாமையும் அவர்களை உற்சாகத்துடன் வரவேற்றுபசரித்தார்கள். பிறகு தம்பதிகள் அவர்களிடம் விடை பெற்றுத் தம் ஜாகைக்குச் செல்லலாயினர்.

சென்றதும் அங்கே சிறிதிளைப்பாறின பிறகு, தேவாராதனை நடந்தது. 8 மணியானதும் இராப்போஜனத்திற்கா யுட்கார்ந்தார்கள். பண்டங்கள் படைத்த பீங்கான்கள் கொண்டுவைக்கப்பட்டன. அவைகளைப் பார்த்துக்கொண்டு "தாயீ! அன்றைய உணவு எனக்கு ருசிகரமானது; உனக்கும் அப்படியிருக்குமல்லவா? என்று சொன்ன அவர், உடனேதானே தொடர்ந்து தாயீ! என்னைத் தாங்கிக் கொள்" என்று உரக்கக் கத்தினர். மனந் தட்டழிந்தவளாக அவளும் அருகே இருந்த கணவரைத் தன் தேகத்தோடணைத்தாள். தலைசரிந்து வீழ்வது கண்டு வேலைக்காரனை அவள் அழைத்து இருவருமாக அவரை மெதுவாயெடுத்துக் கட்டிலிற் கிடத்தினர். சுவாசமில்லாதிருப்பது கண்டு அவள் ஏங்கிக் கதறினள். கதறின சப்தத்தைக் கேட்ட மதாமையும் துரையவர்களும் என்ன விசேஷம் என்று ஓடி வந்தார்கள். வந்து பார்த்ததும் நிலைமை மோசமாயிருப்பதுகண்டு உடனேதானே போன் செய்து டாக்டரை யழைத்தார்கள்; டாக்டர் வந்துபார்த்ததும், இருதயம் நின்றுவிட்டதாகச் சங்கடப்பட்டார். தன் காதலன்—ஆருயிர்த் துணைவன் உயிர் நீங்கிவிட்டானென்றறிந்தால் அவள் மனம் எப்படி இருக்கும். இடிபேற்றமரம் போல் எரிந்துவீழ்ந்தாள். ஓவென்றலறினள்; முத்தினள்; மோதினள்: உருண்டாள்; வெருண்டாள்; அக்கினியிற் புழுப்போல் துடித்தாள்; சலனமற்றாள்; தாவியெழுந்தாள். "என்னை நிர்ப்பந்தஞ் செய்து, கட்டாயப்படுத்தி, வீட்டில் நின்று வெளியிலிறக்கி, வெகு தொலைக்கப்பால் என்னை ஒண்டியாய்க் கொண்டுவந்து இந்த நெருப்பாற்றில் தள்ளிவிட்டீரே கர்த்தரே! இவ்வளவு பகைமை பாராட்டநானுமக்கு என்ன குற்றஞ்செய்துவிட்டேன் கர்த்தரே! ஐயோ! நான் பாவி ஒன்றுந்தெரியாமல் மயக்கமடைகிறேனே! என்னுயிரையும் ஏற்றுக்கொள்ளக்கூடாதா கர்த்தரே! நீர் ஊட்டி நான் அனுப

வித்த சுகமெல்லாம எனக்குப் போதாதா? நீர் இன்னும் திருப்தி யடையவில்லையா கர்த்தரே! என்று பிரலாபித்துக் கண்ணீர் யாரு யொழுக்குகின்றுளவள். அவளது மூன்று வயதுக் குழந்தையோ தாயின் முகத்தோடு முகத்தைச்சேர்த்துக்கொண்டு "அம்மா! எனக் குப் பயமாயிருக்கு, கர்த்தர் என்னைக் கைவிடுவாரா? சொல்லம்மா சொல்லு" என்று கூச்சலிடுகிறது, இந்த மறுங்கடியைக்காண யார் மனந்தான்சகிக்கும். அந்தஐரோப்பிய மாதோ மனமுருகிவிட்டாள். அவர்கள் யாவரும் அந்த இடத்தைவிட்டுத் திரும்பவில்லை. இரவு முழுவதும் அந்தப் பெண்மணிக்கு ஆறுதலளிப்பதிலேயே சமயத் தைப் போக்கினர். பொழுது விடிந்ததும் விதிப்படி பிரேதத்தை அடக்கம் செய்தனர்.

பின் மூன்று தினங்கள் வரையிலும் அந்தப் பெண்மணியைத் தோட்டத்திலேயே வைத்திருந்து, பல தேற்று மொழிகளால், சமாதானப்படுத்தி, நான்காம் நாள் தமது சொந்த மோட்டாரில் அவர்களை நாட்டிற்கனுப்பினர் கருணையுள்ள அந்த ஐரோப்பிய தம் பதிகள். மேலும் அவர்கள், இறந்துபோனவருக்குச் சொந்தமான சகல சாமான்களையும் அந்தப் பெண்மணிக்கே அனுப்பிக்கொடுத்த னர்.

மூன்றாது விவாஹத்திலுந் தோல்வியடைந்து விட்டமையால் பரிதாபமடைந்த அந்த மாது வீடு சேர்ந்ததும் உயிர்ப்பிணமாகக் காலந்தள்ளலானாள். மாதங்கள் நான்கு கழிந்தன. ஐந்தா மாதம் தோட்டத்திலிருந்து ஒரு கடிதமும் அத்துடன் ஒரு மணியார்ட ரும் அவளுக்குக் கிடைத்தன. கடிதத்தை அவள் பிரித்துப்பார்த் தாள். அக்கடிதம் கீழ்க்கண்ட கருத்துகளமைந்திருக்கக் கண்டு பதிற் கடிதமொன்றெழுதி மணியார்டரைத் திரும்பத் தோட்டத் திற்கனுப்பிவிட்டாள்.

அக்கடிதங்கள் வருமாறு:—

(தோட்டக் கடிதம்)

இடம்.......................

தேதி.......................

என் பிரியமுள்ள தாயீ!

கர்த்தருடைய கிருபையால் உங்கள் தேகசுகம் ஒருவாறு தேற்றமடைந்திருக்குமென்று நம்புகிறேன். உங்களுக்கு நேர்ந்த

துக்கத்திலே துரையவர்கள் பெரிதும் சலனமடைந்துவிட்டார். ஒருவருக்கு ஒரு வேலையாள் அல்லது ஒரு உற்ற துணைவன் அமைவதும் இசைவான ஒரு மனைவி வாய்ப்பதும் அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது. இறந்துபோனவர் தோட்டத்திற்கு உண்மையாயுழைத்தவர். அவருக்கு நீரோ உண்மை மனைவியாயிருந்து அவரது முழு நேசத்தையும் பெற்றவர். ஆகவே நீங்களிருவரும் இந்த ஜடத்தினாலேற்பட்ட கட்டுப்பாட்டின் கடப்பாடுகளைச் செய்துவிட்டீர்களென்பதில் சிறிதும் ஐயமில்லை. தவிரவும், நீங்கள் கர்த்தருக்கு மனமுவந்த மங்களாகவுமிருக்கிறீர்கள். அல்லையானால் நீங்கள் இருவரும் விவாஹஞ் செய்துகொண்ட நாலைந்து வருஷங்களுக்கிடையில் இந்தத் தோட்டத்தைக் கண்டிராத நீர், அன்று நீர் நொந்து கண்ணீர் வடித்துச் சொன்னபடியே, அந்தக் கர்த்தருடைய நிர்ப்பந்தங்கொண்டல்லாமல் வேறு யாருடைய நிர்பந்தத்தினாற்றான் இங்கு நேர்ந்த சம்பவத்தின் குறித்த நேரத்திலே உம்மைக் காண்பதற்கியலும்? கர்த்தர் கருணையுள்ளவர். நியமப்படி நேர்ந்த பிரிவுகாலத்தில் உங்களைச் சந்திக்கச் செய்த அவருடைய கருணை பெரிது. பெருமையுடையது. சிந்தித்துப்பாரும்.

அருமையுள்ள தாயி! நீங்கள் இங்கிருந்து பிரிந்த அன்று தானே உங்களில் கொண்ட அனுதாபத்தினால், துரையவர்கள் கம்பெனியாருக்கு விபரங்களைத் தெரிவித்தார். அவர் விரும்பியவாறு உமது சந்தானங்கள் பிராய பூர்த்தியாகும் வரையிலும் நீர் இனியொரு காதலரை ஏற்றுக்கொள்ள விரும்பாத கால அளவிற்கும், உங்களுக்கு ஜீவித உபகாரச் சம்பளமாக மாதம் 15 ரூபாய் வீதம் அனுமதிக்கப்பட்டு மறுபடி கிடைத்ததனால் இறந்துபோனவருக்குச் செல்லவேண்டியதாயிருந்த சம்பள பாக்கியுள்பட அந்தத் தொகைகளை இன்று உமது பெயருக்கு அனுப்புகிறேன். கூப்பனில் கண்ட விபரப்படி ரசீதை அனுப்ப வேண்டும். கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக.

உங்கள் நன்மையை விரும்பும்

உமது பிரியமுள்ள

(கையெழுத்து)

பதிற் கடிதம்

இடம்....................
தேதி....................

கண்யமுள்ள சீமாட்டி !

தங்களுடையவும் கருணையுள்ள துரையவர்களுடையவும் சமூகங்களுக்கு எனது மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்திக்கொள்கிறேன்.

நான் பாபி. நீங்கள் எங்களில் காட்டிக்கொண்டிருக்கும் அளவற்ற அன்பிற்கும் எல்லையற்ற பேருதவிக்கும் நாங்கள் என்றுங் கடமைப்பட்டிருக்கிறோமென்று சொல்வதைத்தவிர எனக்கென்ன தெரிகிறது.

கனம் பொருந்திய தாயே!

நீங்கள் யாருக்காகப் பரிவுகொண்டு ஏழைகளான எங்களில் இரக்கங் கொண்டீர்களோ அந்தப் பிரியமான என் தலைவருக்கு முந்திய தாரத்திலே பிறந்த ஒரு ஆண்மகன் தலைநகரில் கிறிஸ்தவ போர்டிங் பாடசாலையில் படித்துக்கொண்டிருக்கிறான். நீங்கள் அனுப்புந் தொகைகளை அவனுக்கும், இந்தப் பசலைகளோடு எனக்கும் தாங்களே பங்கிட்டுத்தர வேண்டுமென்று தங்களிடத்தில் நானிரங்கிக் கேட்டுக்கொள்கிறேன். அதற்காக மணியார்டரைத் திரும்ப அனுப்புகிறேன். கருணை செய்யுங்கள். கர்த்தர் உங்கள் பங்கிலிருப்பாராக.

உங்கள் உண்மை ஊழியத்திற்
குரித்தான
(கையெழுத்து)

இக்கடிதங்கண்ட அம்மாள் மிகவுஞ் சந்தோஷமடைந்து அவள் கேட்டுக்கொண்டபடியே அத்தொகையைப் பங்கிட்டனுப்பி வைத்தார். இப்பவும் அவ்வுபகாரத்தைப் பெற்றுக்கொண்டு அவர்களெல்லோரும் சுகமாய் வாழ்கின்றனர்.

இது கிறிஸ்தவ மதத்தினரில் நிகழ்ந்தது. நம் மதத்தில் ஒரு புருஷன் பல மனைவிகளுக்காகத் தன் அன்பைப் பங்கிட்டு உறவு கொண்டாடுவது வேத சம்மதமாம்! புருஷனை இழந்த பின்னும் ஒரு

பெண் வேறொரு புருஷனைத் துணைகோருவது பாவமாம்! இந்தப் பித்தலாட்டம் எத்தனை நாட்களுக்குச் செல்லுபடியாகத்தக்கது?

ஐய! உலகில் கற்புடையவர்கள் எத்தனைபேர்? என்று ஒருவரைக் கேட்டால் அவர் உடன்றானே ஐந்து பெயர்கள் என்றும், அவர்கள் அகல்யை, துரோபதை, சீதை, மண்டோதரி, தாரை என்றும் சொல்லிவிடுகிறார்கள். ஐய! இவர்கள் இந்த யுகத்திற் கப்பாற்பட்டவர்களல்லவா? இப்போதுள்ளவர்களைக் கூறுங்களென்று சொன்னால்.

"கற்புடை மகளீ ராவார் ஆயிரத்தொருவ ரென்று
சொற்புடை பெயரவேனுந் துணிவது கொள்ள லாமோ"

என்ற இரண்டடியைக் காட்டுகிறார்கள். ஆயிரத்தி லொருத்தியுண்டென்று சொல்லக்கூட முடியவில்லையாமே! என்ன அநியாயம்! இருக்கட்டும், அவரிடத்தே தங்கள் வீட்டுச் சாக்குகளெல்லாம் விபசாரிகள் தானா என்று கேட்கலாமா? கேட்டால் விடுவாரா? கேட்டவரின் உயிர் உடலில் தங்குமா? ஆனால் அவர் பதிலில் அந்தப்பொருள் தானே தொனிக்கிறது. ஏன் அவருக்குத் தெரிகிறதில்லை?

அந்த ஐரோப்பிய மாது மேலே கூறியபடி "விவாஹம்" ஜட சம்பந்தமாக ஏற்பட்ட ஒரு கட்டுப்பாடு, தெய்வீகமான ஆபத்தினால் அக்கட்டுப்பாட்டிற்கு முறிவேற்படுமானால், ஆணானாலும் பெண்ணானாலும் அவசியப்படுமானால் வேறொரு கட்டுப்பாட்டைச் செய்துகொள்வது தான் நியாயம்- நீதியும் அதுவே.

நமது முன்னோர்கள் பெரிய அறிவாளிகள். அக்காலத்தில் பால்ய விவாஹ மிருந்திருக்குமானால் அரசகுமாரிகளுக்கும் சுயம்வர மேது? திடகாத்திரமான ஆரோக்கியத்தையும் சந்தானப் பேற்றையுங் கொண்டு அன்றைய உலகம் பொலிவுற்றது. சொத்துரிமையைக் காப்பதற்காக அந்த அறிவாளிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்ட பிள்ளையார் இன்று சுரங்காய்ச் சமைந்து கொண்டால் நாம் அதை வணங்க வேண்டுமா?

---

# கொடுமை! கொடுமை!

P. தனுஷ்கோடி.

பாக்கியத்தின் அத்தை மகன் பொன்னுச்சாமி. அவன் தன் வீட்டில் சொல்லாமல் அயலூர் ஓடிப்போவதும், கையிலிருக்கும் பணம் சிலவழிந்தவுடன் திரும்பி வீடுவந்து சேருவதும், வீட்டில் சிலநாள் நல்லவன் போல இருந்து பிறகு சில பொருள்களைக் களவாடிக்கொண்டு ஓடி விடுவதும், பணம் சிலவழிந்தவுடன் திரும்பி வருவதுமாயிருந்தான்.

ஆகையால், பொன்னுச்சாமியின் தாயாரான சுசீலா என்பவள் "இவனுக்கு கலியாணம் செய்துவிட்டால் இப்படியெல்லாம் ஊர் சுற்றமாட்டான். பிறகு நல்லபிள்ளையாகிவிடுவான்" என்று நினைத்து தனது சகோதரனை சம்பந்தரிடம் ஒருநாள் வந்து தனது மகன் விஷயத்தைப் பற்றி விரிவாகக்கூறி, தன் மகனுக்கு அவசியம் பெண் கொடுக்க வேண்டுமென்றும், அதனால் பையன் திருந்தி நல்வழிப் படுவானென்றும் கூறினாள்.

அதைக்கேட்ட சம்பந்தம் சற்று தயங்கினானாலும், அக்காளின் வார்த்தையை மீறமாட்டாதவராய் விவாகத்திற்கு ஒப்புக் கொண்டார்.

பிறகு, ஒரு சுபநாளில் 8-வயது நிரம்பப்பெற்ற பாக்கியத்திற்கும், 16 வயதுடைய பொன்னுச்சாமிக்கும் விவாஹம் சிறப்பாய் ஜவுளிக்கடை சம்மந்தம் செட்டியார் வீட்டிலேயே நடந்தது. கலியாண தினங்களாகிய ஐந்து நாட்களிலும் செட்டியார் வீட்டுச் சாப்பாட்டைச் சாப்பிடாத ஏழைகள் ஒருவரும் அவ்வூரிலிருக்க மாட்டார்கள்.

சாப்பாடு, சந்தன தாம்பூலம், நாட்டியம், மேளக் கச்சேரி, வாணவேடிக்கைகள், வேஷ்டி முதலிய இனம்கள் எல்லாம் வெகு விமரிசையாகவே நடைபெற்றன.

ஃ ஃ ஃ

மூன்று மாதங்கள் கழிந்தன. சம்மந்தமும், சுசீலாவும் எதிர்பார்த்ததற்கு மாறாக பொன்னுச்சாமி நடக்கத் தலைப்பட்டான்.

ஒருநாள் சுமார் 150 ரூபாய்களை செட்டியார் கடையிலிருந்து எடுத்துக்கொண்டு பழயபடி ஊரைவிட்டு ஓடிவிட்டான். அதைக் கண்டு செட்டியார் பல ஆட்களைவிட்டு தேடச்சொன்னார். பல பத்திரிகைகளில் அங்க அடையாளம், புகைப்படம் முதலியவற்றை வெளியிட்டுப் பார்த்தார். போலீஸில் ரிபோர்ட் செய்தார். என்ன செய்தும் பலன் ஒன்றுமில்லை. பொன்னுச்சாமி அகப்படவேயில்லை.

ஃ ஃ ஃ

வருடங்கள் ஏழு மறைந்தன. பாக்கியம் புஷ்பவதி ஆகி ஒருவருடம் தான் ஆகின்றது. தற்போது அவள் நல்ல மங்கைப் பருவத்துடன் திகழ்கின்றாள். நல்ல அழகும், நிறைந்த முகமும், பரந்த நெற்றியும், விசாலமான கண்களும், வில்போன்று வளைந்து விளங்கும் புருவமும், அவளைப்பன்மடங்கு அழகு செய்தன. என்றாலும் அவளைக் கவலை விடவில்லை.

அவளை இயற்கையுணர்ச்சி புகுந்து வாட்டிற்று. வீதிப்பக்கம் யாரேனும் ஆணும் பெண்ணுமாக போவதைக் கண்டால், அவளின் உணர்ச்சி பீறிட்டு எழும். அச்சக்தியை யடக்க அவளால் முடிவதில்லை. தன் கண்ணெதிரில் தோன்றிய காட்சி மறைந்து வேறு எதிலாகிலும் கவனம் செலுத்தினால் தான் அவ்வுணர்ச்சி மாறும். இரவில் அவள் படும் அவஸ்தையை எழுதிமுடியாது. பொதுவாகக் கூறவேண்டுமானால் அவள் ஒருவரையும் காதலிக்காமலே காதல் அவஸ்தையில் அகப்பட்டுக் கிடந்தாள் என்றுதான் கூறவேண்டும்.

அவள் ஒவ்வொரு சமயத்தில், தன் கழுத்திலிருக்கும் மாங்கல்யத்தைக்காட்டி, தனக்கு எப்பொழுது கலியாணமாயிற் றென்றும், தன் கணவன் எங்கே? என்றும் தன் தாயாரைக் கேட்பாள். தாயார் இச்சொற்களைக் கேட்டதும் விம்மி விம்மி அழுவாள். அப்புறம் "கண்ணே! அதைப்பற்றி நீகேட்காதே, பிறகு ஒருசமயம் கூறுகிறேன்" என்று அவளை சமாதானப்படுத்தி அனுப்புவாள். அவளும் தாயார் அழுவதை சகிக்கமாட்டாமல் சென்று விடுவாள். எத்தனை முறை பாக்கியம் கேட்டாலும் இதே பதில்தான் அவள் தாயாரிடமிருந்து கிடைத்தது.

ஒருநாள் பாக்கியம் தன் தகப்பனாரிடம் அதே கேள்வியைக் கேட்டாள். அந்தோ! அவரிடமும் அதே பதில்தான் கிடைத்தது.

பிறகு பாக்கியம் "என்ன அப்பா! அம்மாவும் அப்படியே கூறுகிறார்கள். நீங்களும் அப்படியே கூறுகிறீர்கள். விஷயத்தைச் சொல்லுங்கள்" என்று மிகவும் கனிவாகக் கேட்டாள். ஹா! அக்கேள்வி அவரைத் திடுக்கிடச் செய்தது. சிறுகுழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தார். மளமள வென்று கண்ணீர் உதிர்ந்தது. பாக்கியம் தந்தையழுவதைக் காணச்சகியாது உள்ளே சென்று விட்டாள். அதன் பிறகு அவள் யாரையும் அதுவிஷயமாகக் கேட்பதேயில்லை.

இயற்கை யுணர்ச்சி அவளை வதைசெய்து வருகிறதென்று சொன்னோமல்லவா? அது அண்டை வீட்டு அருணாசலம் மீது பாய்ந்தது. அருணாசலம் ஓர் இளம் வாலிபன். சிவந்தமேனியும், அழகிய முகமும், கனிவாகப் பேசும் திறமையும் உடையவனுயிருந்தான்.

அண்டை வீட்டிற்கும் பாக்கியம் வீட்டிற்கும் ஒரே கிணறு. ஆகையால், பாக்கியம் தண்ணீர் இறைக்கும்பொழுது அருணாசலம் ஒரு முறை பார்த்துவிட்டான். அவளும் அவனைப் பார்த்து விட்டாள். "கண்ணொடு கண் சந்தித்தது." அவள் அவனை "அழகன்" என மதித்தாள். அவன் அவளை "அழகி" என மதித்தான்.

வீட்டிற்குத் தெரியாமலே இருவரும் இரவில் சந்திக்கலாயினர். சிறிது நாளில் பாக்கியத்திற்கு கர்ப்பமும் தோன்றியது. அதனால் அவள் சற்று மனக்கலக்கமடைந்தாள். எனினும் தன் நிலைமையை மறைத்து வந்தாள்.

ஃ ஃ ஃ

சில மாதங்கள் கழிந்தன. ஒருநாள் சம்மந்தம் அவசர அவசரமாக தன் வீட்டினுள் நுழைந்தார். அவர் கையில் ஒரு கடிதம் தென்பட்டது. உள்ளே சென்று ஒரு சோபாவிலமர்ந்து "பாக்யம்! பாக்யம்! அம்மாவை அழைத்துவா?" என்றார். அவர் முகத்தில் கோபமும், அவமானமும், ஆத்திரமும் கலந்த குறிகள் தென்பட்டன. உடம்பெல்லாம் வியர்வை காண்கிறது. ஒரு பெருமூச்சு விடுகிறார்.

தந்தை அழைத்ததைக் கேட்ட பாக்கியமும் தாயார் கமலாட்

சியும் ஓடிவந்தனர். தந்தையின் அலங்கோலத்தைக் கண்டு 'என்ன அப்பா?' என்ருள். அவர் பரிதாபகரமான பார்வையுடன் கையிலிருந்த கடிதத்தை நீட்டினர். பாக்கியம் அக்கடிதத்தைப் பெற்று வாசித்தாள். அவள் வாசிப்பதை மறுபடியும் கேட்கச் சகியாது உட்கார்ந்தவாறே மயக்கமுற்றுச் சாய்ந்தார். அக்கடிதத்தில்:—

"கல்கத்தாவிலிருந்து பொன்னுச்சாமி தனது வெள்ளைக்கார மனையாளுடனும் இரு குழந்தைகளுடனும், மறுநாள் அங்கு வருவதாகவும், 'இனி உமது மகளுக்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை'யென்றும்" எழுதப்பட்டிருந்தது.

அதைக் கேட்ட கமலாட்சி "ஐயோ! கண்ணே! உன் கதி இப்படியா முடியவேண்டும்? அவன் நாசமாய்ப்போக, ஏன் திரும்பிவருகிருன். ஒழிந்த சனியன் மீண்டும் பெரிய சனியாகவல்லவோ வருகிறது. இது "பெருமாள் பெரிய பெருமாள்" ஆன கதை போலல்லவா இருக்கிறது. போதாதற்கு இனிமேல் என் மகளுக்கும் அவனுக்கும் சம்பந்தம் இல்லையாம்! என்ன கொழுப்பு!" என்று வசைமொழி பாடினுள்.

இவ் விஷயங்களை அறிந்த பாக்கியத்தின் மன நிலை எப்படி இருக்கும் என்று வாசகர்களே யூகித்துப்பாருங்கள்! பாக்கியம் அனலில் விழுந்த புழுவெனத் துடித்தாள். தாய் கூறியதிலிருந்து பொன்னுசாமியே தன் கணவனென அறிந்தாள். தன் எதிர்காலத்தை நோக்கினுள். சொந்தக் கணவன் வந்து அவமான மடைவது ஒரு புறம்! தன் வயிற்றுப் பளு ஒரு புறம்! அந்தோ கொடுமை! கொடுமை!

அன்றிரவு நடுநிசி வேளை; பாக்யம் அடிக்கடி திரும்பிப் பார்த்துக்கொண்டே தோட்டக் கிணற்றை நோக்கி நடந்தாள். அவள் கண்களில் தாரை தாரையாக வழிகின்றது கண்ணீர். கிணற்றுத் திட்டின்மீது வந்து உட்கார்ந்தாள்; அவள் மனமோ படபடவென்றடிக்கின்றது. காற்று ஜிலுஜிலுவென்றடிக்கின்றது. அவளணிந்திருந்த ரோஸ்மஸ்லின் புடவை காற்றின் வேகத்தில் படபடவென்றடித்தது. ஆனுலும், அவள் உடம்பில் வியர்வை கொட்டுகிறது. அவள் தனது எதிர்காலத்தின் விபரீதங்களை ஆலோசித்தாள். தற்கொலையை விட சிறந்த வழி ஏதுமில்லை

என்றாள்; வேறு வழி கிடைக்குமாவெனப் பார்த்தாள்; ஆம்! பல வழிகளிருந்தன. அவையெல்லாம் இளமைப் பருவத்திற்கு—கற்புக்கு—பங்கம்நேரும் எனத் தோன்றின. ஆம்! கற்பையிழந்து உயிர்வாழ்வதைக் காட்கிலும் வேறு மானங்கெட்ட தொழில் என்ன இருக்கமுடியும்? பால்ய விவாகத்தின் கொடுமையே கொடுமை! அதைக்காட்டிலும் கொடுமையான தொழில் வேறெதுவும் இருக்கமுடியாது! என்றாள். எல்லாம் அவன் (கடவுள்) இட்டபடி நடக்கும் என்று சமாதானம் கூறுவதைக்காட்டிலும், ஏன் இந்த சர்க்கார் "பால்ய விவாகத் தடை செய்யக் கூடாது? என்று கேளுங்கள்" என்றாள்; பலவிதமாகப் பிதற்றினாள். பின் அவளை அக்கிணறு பலிகொண்டது என்பதைக் கூறவும் வேண்டுமோ?

ஒழிக! ஒழிக! பால்ய விவாகம் ஒழிக!

---

## குமுதத்தின் முடிவு.

(தலாத்து ஓயா—க. கணேசன்).

குமுதவல்லி பட்டுப்பாவாடையுடுத்தி, பச்சைத்தாவணி போட்டுப் பள்ளிக்கூடஞ் சென்றாளானாள் அன்று பள்ளிக்கூடமே நிறைந்தமாதிரி இருக்கும். சிறுவயதிலேயே இங்ஙனமானால் பெரியவளான பின் எங்ஙனம் இருந்திருப்பாள் என்று கூறவேண்டியதில்லையல்லவா?

ஐந்து வயதிலேயே தனது மகளின் கல்யாணக் கோலத்தைப் பார்க்க ஆசைகொண்ட குமுதத்தின் தாய் சிவகாமி, சீர்திருத்தப் பிரியரான தனது கணவர் எவ்வான் பிள்ளையையு மாற்றித் தனது அண்ணன் மகன் லெக்ஷ்மணனுக்குக் கல்யாணம் செய்து வைத்தாள். லெக்ஷ்மணும் திருச்சி ஜோசப் காலேஜில் பத்தாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தவன். கோடை விடுமுறைக்குத் தன் கிராமம் சென்றிருந்த பொழுது திடீரெனக் காலராக்கண்டு இறந்துவிட்டான். அவன் இறந்த செய்தி கிடைக்கும் பொழுது குமுதம் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தாள். அதுசமயம் குமுதத்

தின் வேலையாள் மாரிமுத்து ஓடிவந்து "அம்மா! ஒங்களே அவசரமா வரச் சொன்னாங்க" என்றான். தனது தாயார் எதுவும் விசேஷ பக்ஷணம்செய்திருப்பாள் போலிருக்கிறது. அதற்காகத்தான் கூப்பிட்டனுப்பி யிருக்க வேண்டும் என்று எண்ணினாள் குழந்தை குமுதா. வீட்டருகிற் சென்றவுடன் வீடு அல்லோல கல்லோலப்படுவதைக் கண்டு விரைவிற் போய் அழுது கொண்டிருக்கும் தன் அன்னையிடம் "என்னம்மா அழுகிறே!" என்று கொஞ்சிய குரலிற் கேட்டாள். "ஐயோ! ஐந்து வயதில் தாலி கட்டிய உனது ஆசைக் கணவன் போனானேடீ! அன்று உனது அப்பா சொன்னதையுங் கேளாமலல்லவா இந்தக் கதி நேர்ந்தது. ஐயோ! உனது அழகிய முடியைப் பின்னிப்பின்னி ஆனந்தங் கொண்ட நான் இன்னும் கொஞ்ச நாளிலே இழப்பதைப் பார்ப்பேனா! ஆசையாய் நீ கணவனுடன் வாழவேண்டும் என்றிருந்த எனது மனக்கோட்டை இடிந்துபோய் விட்டதே" என்று பலவாறு தான் செய்த தவறினைக் குறித்தும், தனது மகளின் எதிர்கால நிலையினைக் குறித்தும்வருந்தியவளாகிப் பற்பலவாறு பிதற்றினாள். அன்று முதல் குமுதம் பள்ளி செல்வதை நிறுத்தி ஓய்வு நேரத்தில் ஈஸ்வரன் பிள்ளை கற்றுக்கொடுப்பார். விதவைக்கு பள்ளி எதற்கு என்று எண்ணினார்களோ என்னமோ தெரியவில்லை.

## II

வக்கீல் ஈஸ்வரன் பிள்ளையின் ஸீனியரான சக்ஷிணாமூர்த்திப் பிள்ளையின் குமாஸ்தா கோபாலன் சில கேஸ்கள் சம்பந்தமாக அடிக்கடி ஈஸ்வரன் பிள்ளை வீடுவர நேர்ந்தது. அது சமயங்களில் குமுதம் அங்கிருப்பதைக்கண்டிருக்கிறான். ஆயினும் இப்பொழுது அதே குமுதம் அல்ல, இன்று 14 வயதுள்ள குமுதம். பெண்களைத் திரும்பிப் பார்க்காத சுபாவத்தையுடையவன். ஆயினும் அன்று குமுதத்தைக் கண்டான், அவளுந் தற்செயலாகப் பார்க்க நேரிட்டது. இருவருக்கும் அன்பு, காதற்போர் நடந்தது. போர் அதிகமாகச் சென்றுவிட்டால் ஆபத்தல்லவா? ஆதலால் போர் ஒத்திவைக்கப்பட்டது.

நாளடைவில் இருவர்கட்கு மிடையே சம்பாஷணைகள் நடைபெற்றன. அவர்கள் என்னென்ன பேசினார்களோ யானறியேன்.

அவர் தாய் தந்தையர்கட்கே அறியாமல் நடக்கும்பொழுது எனக்கு எங்ஙனந் தெரியும்.

III

பரிதிக் கடவுள் தாம் உலகினுக்குச் செய்த உபகாரத்தை ஒருவரும் ஓர்வில்லையே என எண்ணி ஆயாச மேலீட்டால் மேற்றிசை வீடுசேர்ந்தான். இதுதான் சமயமென்று வட்டவடிவான வெண்ணிலாவானது, சூரியனைவிட நானே சிறந்தவன் என்று போட்டி போட்டுக்கொண்டு பிரகாசிக்கின்றது. அத்தகைய வேளையில் ஈசுவரன் பிள்ளை வீட்டின் பின்தோட்டத்தில் இரு உருவங்கள் ரகசியமாக ஏதோ பேசிக்கொண்டிருந்தனர். அது என்ன என்று பார்ப்போம்.

"கோபாலா! எத்தனைகாலந்தான் யான் இங்ஙனம் இருப்பது. ஐயோ! இந்தப் பாழும் சமூகப் பேய், யான் இஷ்டப்படும் மணாளனை மணக்க விடுகின்றதில்லையே"

"ஆம், அது உண்மைதான். விதவைகளாகிப் பின்பு விபசாரம் செய்தல் நல்லதுபோலிருக்கு!

வெள்ளை யாடை யுடுத்து
விபசாரம் செய்தல் நன்றோ?
கள்ள வழிகளின்றி—கிளியே
கல்யாணஞ் செய்யவிடார்

இப்பாவிகள். ஐந்து வயதிலே விதவையானவளுக்கும், ஐம்பது வயதிலே விதவையானவளுக்கும் ஒரே தண்டனைதான்."

"அது சரி! நேரமாகிறது! இந்த நிலையில்லாமல் சீக்கிரம் எங்காவது போய்விடுவோம்!"

"ஆம்! அதுதான் சரி! நாளைக்கழித்து சிங்கப்பூர் கப்பல் போகிறது. அங்கு போய் நாம் கஷ்டப்பட்டாவது இன்பமாக இல்வாழ்க்கையை நடத்துவோம்."

"சரி நான் போகின்றேன்."

இச் சம்பாஷணைகளை ஓர் உருவம் ஒட்டுக் கேட்டுத் தலையை ஆட்டிச் செல்வதை இவர்கள் அறியவில்லை.

IV

கொலைகார ராமன் என்றால் அந்த கள்ளூர் முழுவதுமே யறி

யும். அவன் மீசையை முறுக்கிக்கொண்டு "ராமன் தலையிட்ட காரியம் என்றும் ஜெயந்தான்" என்று வீறுப்புப் பேசுவதுண்டு. அன்று என்றுமில்லாமல் தன்வீட்டிற்கு சிவகாமியம்மை வருவதைக்கண்டு "என்னங்கம்மா ஏதோ ஏழைக் குடிசைக்கி" என்றான்.

"ஒரு விஷயம், ரொம்ப அவசரம்" என்று காதோடுரகசியமாக ஏதோ கூறினள்.

"அது சரிங்கம்மா? இன்னைக்கு ராத்திரிக்குள்ளே நடக்காட்டி எம்பேரு ராமன் இல்லே" என்றான்.

V

அன்று ஊர் முழுதும் அதே பேச்சு. "கோபாலன் கொல்லப் பட்டான்! நல்ல பையனுச்சே அவனுக்கும் விரோதியா?"

குமுதம் ஆசையுடன் தான் விடுதலையடைந்து, இன்புற்றிருக்கும் நேரம் நெருங்குவதைக்கண்டு இன்பக்கனவுகண்டுகொண்டிருந்தாள். அதுசமயம் தோழி அம்புஜம் "என்னடி ஒரு மாதிரியா இருக்கே! இன்னைக்கி சங்கதி தெரியுமா? ஒங்காத்துக்கு வருவானே கோபாலன், அவனை யாரோ நேற்றிரவு கொலை..............................
"ஐயோ அடா பாவி! அவருக்கும் விரோதியா" என்று திடீரென மூர்ச்சையானாள். அவளுள்ளக் கருத்தையறியா அம்புஜம் அவளுக்கு மூர்ச்சை தெளிவித்தாள். தெளிந்தவுடன், குமுதம். "அவருக்கும் விரோதியா! அவருக்கும் விரோதியா!!" என்று பிதற்றினாள். திடீரென நேர்ந்த இவ்விபத்தினைக்கண்ட சிவகாமியும் ஈஸ்வரன் பிள்ளையும் என் செய்வதென்று தெரியாமல் விழித்தார்கள். சிவகாமியின் மனது திடுதிடுவென அடித்துக்கொண்டது. "குற்றமுள்ள நெஞ்சு குரு குரு என்னும்" அல்லவா. ஆயினும் சரியாய்ப் போய்விடும் என்று நிம்மதியுடனிருந்தாள்.

குமுதம் கள்ளூர் முழுவதும், "அவருக்கும் விரோதியா!" என்று பிதற்றிக்கொண்டே சென்றாள். அவளுடைய பிரேதத்தைப் பின்னர் ஓர் கிணற்றினிற் கண்டெடுத்தார்களாம்.

VI

இடைவிடாத நோயினிடையே சிவகாமி படுத்துக் கொண்டு பிதற்றுகிறாள் "ஐயோ! குமுதம், நானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்ததே! ஊர்சிரிக்கும், என்று அவனைக்கொல்ல

உன்னையோ கொன்றேனே! இந்தப் பாழுஞ் சமூகமல்லவா உன்னைக் கொன்றது. சமூகத்தினை நோக்காமல் உனக்கு மணம் செய்திருக்கலாமே! எல்லாங் கெடுத்தேன் என்று புலம்புகிறாள். சிலகாலங்கள் கழித்து நான் கள்ளூர் சென்றிருந்தபோது சிவகாமி குமுதத்தின் பிரிவாற்றாமையினால் இறந்தாளென்றும் ஈஸ்வரன் பிள்ளை, இப்பொழுது வெகு தீவிரமாக "மாதர் மறுமண"த்திற்கு உழைப்பதாகவும் கேள்வி.

காலதேவன் எத்தனையோ குமுதங்களும், சிவகாமிகளும் கோபாலன்களும் இறப்பதைப் பார்த்துக்கொண்டே இருக்கின்றான். அதனை அகற்ற ஈஸ்வரன் பிள்ளைகள் பலர் தோன்றவேண்டும்! ஆனால் ஈஸ்வரன் பிள்ளையைப் போல் பாடம் படித்த பின்பு முனைவதை விட முன்னரே முயல்வது நன்றன்றோ!

"வெள்ளம், வருவதற்கு முன்னரணை கோலி வையார்
பெருகுதற்க ணென்செய்வார் பேசு.

# புதல்வியை இழந்து புலம்பும் தந்தை

(குலாலன்.)

'சாத்திரங்கள் பல தேடினேன்' என்ற மெட்டு.

1. காடு முழுமையும் தேடினேன்—என்
கன்னி விதவையைக் காண்கிலேன்—மறு
நாடு கடத்திய தொண்டர்போல்—மனம்
நைந்துருகினே னவ்வேளையில்—குயிற்
பேடு பிரிந்தது போலவே—எந்தன்
பிரிய மனைவி புலம்பினாள்—நான்
கூடுமானவரை தேறுதல்—கூறி
கொஞ்சம் வருத்தத்தை நீக்கினேன்.

2. பாழும் குலத்தவர் செய்கையால்—சிறு
பாலியப் பெண்ணை யிழந்தேனான்—என்
நாளும் கவலைக் கடலதை—தாண்ட

நானென்றும் வழி யறிந்திலேன்—வீணில்
மாளும் பெண்களினம் எத்தனை—இந்த
மாண்பு நலமாமோ சொல்லுவீர்—ஆணுடன்
வாழும் முறைமை தடுத்ததால்—இவ்
வையகத்தில் வினை மூண்டது.

3. பெண் பிறந்தேழு வயதினில்—மாமன்
பேசினன் கல்யாணம் செய்யவே—ஒரு
கண் தெரியாத குருடனே—என்பின்
கல்வி சிறிதும் பயின்றிலான்—யான்
புண்பட்ட நெஞ்சாய்ப் புவியினில்—எந்தன்
புத்திரியின் வயதொத்திட்ட—ஓர்
கண்ய முடைய சிறுவனைப்—பார்த்து
கல்யாணம் செய்ய இசைந்துளேன்.

4. வயதினில் நாற்பதென் மைத்துனன்—ஜாதி
வழக்கமாம் மாமனுக் கீந்திடல்—சிறிதும்
தயவு காட்டிடாத சுற்றத்தார்—வந்து
சாற்றினர் மூன்னோர் பழக்கத்தை—நாங்கள்
பயந்திட்டோம் ஜாதிக் கொடுமையால்—எங்கள்
பந்துக்கள் வந்தொன்று கூடினர்—ஊரில்
அயலவர் அய்யய்யோ என்றிட—அன்று
அடியேன் புத்திரியை மணந்திட்டான்.

5. சென்றது நாலைந்து ஆண்டுகள்—பெண்
திரண்டிடும் நாளிற் புருடனை—பேதி
கொன்றதென் செய்வோம் விதிதனைப்—பார்த்து
கோபிப்போர் யாருளர் அன்பர்காள்—செத்த
அன்று முதலாய் இந் நாள்வரை—கைம்மை
ஆனவளாய் மனம் நாணினள்—இன்று
கன்று பசுவைத் தொடர்தல்போல்—எந்தக்
காதலர் பின்னே நடந்திட்டாள்.

6. சுற்றத்தார் வந்து சூழ்ந்திட்டார்—என்னை
துயரத்திடை முற்றும் ஆழ்த்திட்டார்—நன்கு

கற்றவர் யாவரும் சேர்ந்துதான்—பொல்லாக்
கடையரென் றெம்மையே தாழ்த்திட்டார்—இம்மி
குற்றமும் செய்யாத எந்தனே—இக்
குலாலர்கள் செய்தது நீதியோ—உலகில்
பற்றில்லா சந்யாசி போலவே—நாங்கள்
பாரினில் வாழ்கிறோம் அய்யன்மீர்.

7. தேங்காய் திருடிய பையனை—நீக்கி
தெண்டம் இறுப்பதோர் பையனும்—இப்
பாங்குபோல் நியாயம் வகுப்பது—வீண்
பாவந்தானில்லையோ சொல்லுங்கள்—தமிழ்
ஓங்கும் பெரியோரே என்முறை—தனை
ஓயாமல் சொல்லியும் கேட்டிலீர்—பெண்கள்
ஏங்கும் விதத்தையே பார்த்தின்னும்—மனம்
இளகாதிருப்பது நன்மையோ?

8. ஏந்திய ராட்டுடன் வந்திட்டார்—மஹான்
எல்லோரும் ஓர்நிறை என்றிட்டார்—புவியில்
காந்தியாய் முன்வந்து தோன்றிட்டார்—மக்கள்
கவலைகொள்ளாது ஒழித்திட்டார்—யாவரும்
சாந்தமாய வாழ்கென்று சாற்றிட்டார்—உலகில்
சமத்வம் நிறைந்திடப் போற்றிட்டார்—இனி
பாந்தமுடனே அவர்நெறி—பின்
பற்றுவோம் எல்லோரும் வாருங்கள்.

---

# ஆனந்தவாழ்க்கை.

"பி. எஸ்."

இந்தியாவில் ஒரு மனிதன் நூறு வருஷம் வாழ்கிறான். ஒரு மனிதன் 75 வருஷம் வாழ்கிறான், சிலர் பிறந்த ஒரு மாதத்தில் இறந்துவிடுகிறார்கள். சிலர் பிறந்தன்றைக்கே மாண்டுவிடுகின்றனர். இதையெல்லாம் சேர்த்துக் கணக்கிட்டுத்தான் ஒரு தேசத்தின்

சராசரி வயதைக் கண்டுபிடிக்கின்றனர் அறிஞர். அப்படியானால் இந்தியாவின் சராசரி வயதென்னவென்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டுமல்லவா? அரசாங்கத்தாரின் கணக்குப்படி இந்தியாவில் சராசரி ஒரு ஆண் மகன் 24·5 வருஷம்தான் உயிரோடிருக்கிறான். ஆனால் மற்ற நாடுகளில் 44 வயதுக்குக் கீழ்ப்பட்ட சராசரி வயதே கிடையாது. இந்தியர்களாகிய நாம்தான் "அற்பாயுசு" வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்! யாரிட்ட சாபமோ தெரியாது.

ஃ ஃ ஃ

ஆனால் பெண்களுடைய சராசரி வயதென்னவென்று தெரிந்துகொள்ளவேண்டுமல்லவா? இந்தியாவிலுள்ள பெண்களின் சராசரி வயது 25·2 அதாவது இந்தியாவில் பெண்களைக் காட்டிலும் ஆண்கள் சீக்கிரத்தில் இறந்துவிடுகிறார்கள் என்பது விளங்குகிறதல்லவா?

ஃ ஃ ஃ

மேலும் தொழிற்சாலைகள், மோட்டார்ப் பிரயாணம், கப்பற் பிரயாணம், கடுமையான இதர வேலைகள் முதலியவற்றை ஆண்கள் தான் அதிகமாகச் செய்துவருகின்றனர். ஆபத்து நிறைந்த இத்தகைய காரணங்களினாலும் இந்தியாவில் ஆண்கள்தான் சீக்கிரத்தில் இறந்துவிடுவதாக ஒரு புள்ளி விபரம் கூறுகின்றது. இத்தியாதி காரணங்களால் நாம் தெரிந்துகொள்வது என்ன? சுமங்கலிகளாக இருக்கும் பெண்கள் சீக்கிரம் அமங்கலிகள் ஆவதற்கு இந்தியாவில் தான் அதிக சந்தர்ப்பங்கள் இருக்கின்றனவென்று அறிகிறோம் அன்றோ? அத்துடன் இந்தியாவில் ஆண்களைவிடப் பெண் ஜனத்தொகைதான் அதிகமாக இருக்கின்றது என்பதை ஜனக்கணிதம் நிரூபிக்கின்றது. நான் மேலே சொல்லிய விஷயங்களே இதற்குக் காரணமென்று நாம் ஏன் கொள்ளக்கூடாது.

ஃ ஃ ஃ

இன்று கணவன்மாருடன் சுகமாக வாழும் இளம் பெண்கள் இவ்விஷயத்தை மிக ஜாக்கிரதையாகக் கவனிக்கவேண்டும். திடீரென்று அவர்கள் அமங்கலிகள் ஆவதற்குச் சந்தர்ப்பம்இருக்கிறது. இவ்வாறு அமங்கலிகளாகி விதவைப்பட்டத்தை ஏற்றுப் பெண்மக்

கள் பொறுக்கமுடியாத துயரத்தை அனுபவிக்கத் தயாராக இருக்கிறீர்களா?

ஃ ஃ ஃ

இல்லையென்று சொன்னால் உடனே விதவா விவாகத்திற்கு இந்நாட்டுப் பெண்களெல்லாம் உடனே ஆதரவளித்து அதை எப்படியாவது அமுலுக்குக் கொண்டுவர முயற்சிக்கவேண்டும். பெண்கள் முயற்சித்தால்தான் இந்த விதவா விவாகப் பிரச்னை சீக்கிரத்தில் வெற்றிபெற முடியும். பெண்மக்களே! இவ்விஷயத்தை நன்றாக யோசித்துப்பாருங்கள். சமூகத்திலிருக்கும் அர்த்தமில்லாத வழக்கத்தின் காரணமாக நீங்கள் ஏன் உங்கள் வாழ்க்கை இன்பத்தைக் கெடுத்துக்கொள்ளவேண்டும்? அதனால் நாமடையும் நன்மைதான் ஒன்றுமில்லையே!

ஃ ஃ ஃ

"கனியிருப்பக் காய்கவர்ந்தற்று" என்று வள்ளுவர் கூறுகிறார்! நல்ல கனிகள் இருக்கும்பொழுது காயை ஏன் கவரவேண்டும்? விதவைகளே! உங்கள் வாழ்க்கை உயரிய இன்பத்தை அடைய ஆன்றோர் காட்டிய அருமையான வழிகள் இருக்கும்போது ஏன் விதவைத் துயரை வலிந்து ஏற்றுக்கொள்ளவேண்டும்? மேலும் ஒரு விஷயத்தை யோசித்துப்பாருங்கள். நீங்களும் மனிதர்கள்தான்! ஆண்களும் மனிதர்கள்தான்! உங்களைப்போன்று விதவைப் பட்டத்தை ஏற்றுக்கொண்டு அவர்களால் ஒரு நாளாவது இருக்க முடியுமா? இருக்க முடிகிறதா? வீட்டிலே கிளிபோல மனைவியிருக்கும் போதே ஊரைச்சுற்றிக் கொண்டி மாடுகள்போல் எத்தனை ஆண்கள் அலைகின்றனர். ஒரே சமூகத்தில் பிறந்த இருவரில் ஒருவருக்கு ஒரு சட்டம், மற்றொருவருக்கு வேறு சட்டமென்று சொன்னால் இது நியாயமா? இதை நீங்கள் பொறுத்துக்கொண்டிருக்கலாமா?

ஃ ஃ ஃ

ஆண்களுக்குள்ள உரிமை எங்களுக்கும் வேண்டுமென்று நீங்கள் ஏன் சண்டையிடக்கூடாது? பெண்மக்களே! நீங்கள் இன்று பட்டுப்புடவை கட்டியிருக்கிறீர்கள். வைர நகை அணிந்திருக்கிறீர்கள், ஏராளமான நறுமலர்களை அணிந்திருக்கிறீர்கள். ஆனால் உண்மையில் இவைகள் உங்களுக்குச்சொந்தமா? நீங்கள் எப்பொழுதுமே இவற்றை

அணிந்துகொள்ள முடியுமா? முடியாது. முடியவேமுடியாது. இவை நீங்கள் எவ்வளவு பணக்காராக இருந்தாலும் உங்களுக்குச் சொந்தமில்லை. உங்கள் கையில் பத்துலட்சம் ரூபாய் இருக்கலாம். ஆனால்நீங்கள் விதவையென்று அறிவிக்கப்பட்டுவிட்டால் காலணாவுக்குப் புஷ்பம் வாங்க உங்களுக்கு அதிகாரமுண்டா? ஒரு கஜம் பட்டுத்துணி வாங்க உங்களுக்கு உரிமையுண்டா?

யோசித்துப்பாருங்கள். இவ்வளவு நிர்ப்பாக்கியமாக நீங்கள் ஏன் வாழவேண்டும்? ஆமாம் நீங்கள் கோழைகளாகஇருக்கிறீர்கள்! அதனால்தான் இந்த அநாகரிகமான துன்பங்களையெல்லாம் நீங்கள் சுமக்கவேண்டியிருக்கிறது. ஆகவே நீங்கள் இந்தத் துன்பக்கேணியிலேயே எத்தனை காலம் வாழமுடியும்? மூச்சுத்திணறி நாசமாகப் போவதைத் தவிர வேறு வழியில்லை. அந்நிலைமையை அடைய ஆசைப்படுகிறீர்களா? இல்லையானால் இப்பொழுதே துணிந்தெழுங்கள்! பெரிய பெரிய உருக்குக் கோட்டைகள், பலம் பொருந்திய சாம்ராஜ்யங்கள் முதலியவைகள் எல்லாம் இருக்குமிடந்தெரியாமல் தகர்ந்துபோயிருக்கும்போது இந்தக் கறையான் பிடித்த வைதீகச் சட்டங்களாலும், துருப்பிடித்த சாஸ்திரக் குப்பைகளாலும், உளுத்துப்போன வறட்டு மூளைகளாலும் கட்டப்பட்ட இந்தச்சமூகக் கோட்டைகளா நிலைநின்றுவிடப்போகின்றன! விதவைகளே! உங்களிடம்தான் குண்டு இருக்கிறது! துணிந்து வீசி எறிந்தால் இன்றே மூடச்சிறைகள் தகர்ந்துவிடும், ஆனந்த வாழ்வு ப்ராப்தியாகும்.

---

## புழுதியில் எறிந்த வீணை.

குட்டிச்சாத்தன் A. B. C. D. E. F. etc.

இசை இன்பமே இன்பம் என்றுரைத்தார் ஓர்அன்பர். வள்ளுவர் என்ன கூறினர் தெரியுமா? செவிக்குணவில்லாதபோதுதான் வயிற்றுக்கு என்றுரைத்தார். எப்படியோ வயிற்றைக்காட்டினும் செவி முக்கியமானது. இதற்கு சந்தேகமுண்டா? "ஏழிசையாய் இசைப்

பயனாய்" என்று நாயன்மார்கள் தேவாரம் தொடுத்தார்கள். இசையின் வயமாக மக்களும், விலங்கும், பறவை இனமும், பாம்பும் பிறவும் நின்று மயங்கி இன்புற்றுத் திளைப்பதைக் காணலாம்.

அப்படிப்பட்ட இசை இன்பம் பொழிந்து திகழ்வது எங்கே? மாதர் கண்டத்தில்! இதை யார் மறுப்பார்? ஆண்மக்களும் பாடுகின்றனர். தாளமும் ராகத்தின் கணக்கும் இருக்கிறதென்று வேண்டுமானால் பெருமை யடித்துக்கொள்ளலாமே தவிர உண்மையான லயம், நயம், இனிமை, இன்பம் எல்லாம் பெண்ணின் தொண்டைக் கனியிலிருந்துதான் தோன்றிப் பொலிகின்றன. பெண்ணின் குரலில் இன்ப இசை யெழுவதே சங்கீத ஊற்று. மோகனக் கலை அங்கேயிருந்துதான் புறப்படவேண்டும். இதனை யாரே யறியாதார்? யாரே அனுபவியாதார்? ஆஹா! இப்படிப்பட்ட இன்ப ஊற்றான இசைக்கு வற்றாத பாத்திரமாக விளங்கும் பெண்ணினத்தை மாந்தர் சிலர் விலங்கினமாக்கி வைத்திருக்கின்றனரென்றால் அது மிகையா? இந்தப் பெண்களின் மேன்மையும் இனிமையும் உலகிற் புகழ்பெற்றிருக்கவில்லையா?

வைதீகப் புலிகள் இப்பெண்மான் கூட்டத்திற் புகுந்தது. புகுந்த நாள் முதல் பெண்ணினம் விலங்கினமாகி வருத்துகிறது, வருந்துகிறது என்பதில் தடையுண்டா? "நல்லதோர் வீணை செய்தே அதை நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ! சொல்லடி சிவசக்தி" என்று பாரதியார் பாடினார். இசை மகளிர் கண்டத்தில் தோன்றி இன்பு செய்வதென்றேன். ஆஹா! அந்த மாதர் கண்டத்தில் தோன்றும் இசைக்கொடியானது வீணையின் இனிய நாதத்தில் படர்ந்து துவளும்போது என்ன இனிமை! வீணையை நங்கை கையிலேந்திப் புன்முறுவல் தவழும் வாயினாற் பாடும்போது யாரே உருகாதார். யாரே இசையின்பத்தை வெறுப்பவர்? இப்படியாக ஒவ்வொரு பெண்ணும் பாடக்கூடும். ஒவ்வொரு மாதும் வீணையையேந்தி இசையமுதைப் பரிமாறக்கூடும். ஐயோ! பாழும் வைதீகமே! பெண்ணின் சுதந்திரத்தைக் குலைத்தாய்! பெண்ணின் உணர்ச்சியைத் தொலைத்தாய்! இனிமையைக் கெடுத்தாய்! இன்பத்துக்கு ஊறு செய்தாய். நல்லதோர் வீணை! இன்னும் கெடவில்லை. தந்தி தளரவில்லை. ஓட்டையாகவில்லை. உடைந்து சிதையவில்லை. திருகு

கழறவில்லே. அப்படிப்பட்ட அழகிய வீணே, புது வீணே, நல்ல தொரு வீணே. அந்த வீணையைப் புழுதியில் எறியலாமா? வீணே இருக்கவேண்டிய இடமெது? இசைவல்லாருடைய திருக்கர மன்றோ? அறிவாளியின் கரத்தில் விளங்கவேண்டிய அருமையான வீணையைப் புழுதியில் எறியலாமா? இசையறிந்தவர் இசையின் சுவையுணர்ந்தவர் இக்கொடுமைக்கு உடன்படுவரோ? நல்ல வீணே யை அதனுடைய நலம் கெடுமாறு புழுதியில் எறிவார்களா? ஆகாத குப்பையென்று எறியலாமா? என்று பாரதியார் துடிக்கின்ருர்.

தமிழ் நாட்டில் எத்தனே வீணே—வீணே போன்ற எத்தனே இனிய பெண்கள்—வீணே பயிலும் பெண்களெத்தனே—நலமெலாம் வீணுக விதவைக்கோலத்துக் காட்பட்டுக்கிடக்கின்றன. இளம் பருவம்—இன்னல் தெரியாச் சிறு பருவம்—வாழ்வு துலங்கும் பச் சிளம் பருவமுள்ள பசுங்குழந்தைகள் எத்தனே? வீணே பயிலும் மெல்லிய விரல்கள் விதியை நொந்து நெற்றியிற் பொருந்தி நிற்கின் றன. பாழடைந்த தமிழ் நாடே! நன்மையைச் சுட்டுத்தின்னும் வைதீகமே! இந்நாட்டுப் பசுங்குழந்தைகட்கு விதவைக்கோலம் போட்டு வீடுதோறும் வைத்து என்ன இன்பங்கண்டாய்! இனி மேல்தான் என்ன காணப்போகிருய்!

நல்லதொரு வீணையைப் பாடுபட்டுச் செய்து அதைப் பாராட் டத் தெரியாமல் புழுதியிலெறியும் மூர்க்கனேப்போல், படாதபாடு பட்டுத் தேடிப் பெண்ணேப் பெற்று வளர்த்து விதவையாக்கிச் சீர ழிப்பது முறையா? வீணே வாசித்தவன் இறந்தால் அவ்வீணையை மற்ெருருவர் வாசிக்கமுடியாதா? அது பிழையா? வீணே வாங் கியவன் வாசிக்கமுடியாமற் போவாஞயின் அவ்வீணையை புழுதி யில்தான் எறியவேண்டுமா? ஆஹா எத்தனே புது வீணே! எவ் வளவு நயமான வீணே! எத்தனே இனிய வீணே! இன்ப வீணே! வீணுகத் தமிழ்நாட்டுப் புழுதியில் எறியப்பட்டுக் கிடக்கின்றன. இவற்றுக்கு நற்காலம் வரும்படி செய்ய எத்தனேபேர் முன்வரு கிறீர்கள்?

---

**துணேயிழந்தாரை ... ... ... ... மணப்பது புண்ணியம்.**

# பத்திராதிபர் குறிப்புகள்.

## அது தான் சரி

நமது இந்தியச் செல்வம் ஜவகர்லால் சிங்கப்பூரில் இந்திய மாதர் கூட்டத்தில் பேசிய பேச்சு ஜ்வலிக்கிறது. அதன் சுருக்க த்தை இங்கே தருகிறோம்:—

"வனப்பும், நற்குணமும், தன்னம்பிக்கையுமுள்ள மாதர் களே வேண்டும். வெறும் விளையாட்டுப் பொம்மை எங்களு க்கு வேண்டவே வேண்டாம். ஒரே யடியாக நகையைப் போட்டுப் பயங்கரமாக மூடிக் கொண்டிருக்கும் ஸ்திரீகளைக் கண்டால் எனக்குக் கட்டோடு பிடிக்காது. அபலைகள், அபலை கள் என்று சொல்லப்பட்ட இந்த இந்திய ஸ்திரீகள் இப்பொ ழுதெல்லாம் எங்கள் தேசத்தில் ஜீவசக்தியாகத் திகழ்வது தான் சமீப காலத்தில் இந்தியாவில் நடந்த ஆச்சர்யகாமான விஷயம். 1930ம் வருஷத்தில் அவர்கள்போர்க்களத்தில் இறங் கினார்கள். ஆடவர்கள் சிறைக்குச் சென்று கொண்டிருக்கை யில் அவர்கள் விட்டுப்போன வேலையைச் செய்ய இவர்கள் போர்க்களத்தே குதித்தனர். எவ்வளவு உன்னதமாக சேவை செய்தார்கள் தெரியுமா? ஒரு தேசத்தை அந்த தேசத்தின் ஸ்திரீ ரத்னங்களைக் கொண்டு நிர்ணயித்து விடலாம். ஸ்திரீகள் கல்வியில்லாமல் பிற்போக்காளர்களாக இருந்தால் அந்த தேச த்தில் ஆண்கள் எவ்வளவு தான் சிங்கங்களாக இருந்தாலும் என்ன பிரயோஜனம்?"

இப்படிப்பட்ட அபிப்பிராயம் தேசமுழுமையும் பாவவேண்டும். பெண்கள் அடிமைகள், சமையலறைத் தாதிகள் என்று கருதி தேச த்தைச் சீரழித்திருக்கும் பயித்தியக்காரர்கட்கு நமது ஜவகர் கூறும் மொழிகள் அமுதமொழிகளாகும் காலம் வரவேண்டும்.

## எழுங்கள்! எழுங்கள்!

சிலோன் தீவிலுள்ள பூசலா ஹிந்து வாலிப சங்கத்தைச் சேர்ந்த கே. தவமணி எனும் அம்மையார், அட்டன் மருத்துவர்

சங்க ஆண்டுவிழாவில் பேசும்போது பின் வருமாறு குறிப்பிட்டார்கள்:—

"உங்களது சமூகத்திலுள்ள பெண் மக்களுக்கு சம உரிமை அளிக்கவேண்டும். உங்கள் எதிர்கால சந்ததிகள் முன்னேற வேண்டுமானால், அவர்கள் அடிமை புத்தி யொழித்து சுதந்தர புருஷர்களாகத் திகழவேண்டுமானால், உங்களது பெண் மக்களுக்குக் கல்வியும் சுதந்திரமும் அளிக்கவேண்டும். இந்நாட்டில் உங்கள் சமூகத்தவர் அனைவரும் குடும்பத்தோடு வாழ்ந்து நாட்டிற்கும் சமூகத்திற்கும் ஒவ்வொரு குடும்பத் தலைவனும் தலைவியும் சேர்ந்து சமூகத்தொண்டு செய்தல் பெரும் கடமையாகும்."

மருத்துவர் என்றால் வைத்தியர் என்பது பொருள். தமிழ் நாட்டில் ஆங்கில வைத்தியம், யூனானி வைத்தியம், ஆயுர்வேத வைத்தியம் போன்றவை படையெடுத்துத் தமிழர் வைத்தியத்தை மடக்கிவிட்டன. இந்தப் படையெடுப்புக்கு முன் தமிழகத்தில் இம்மருத்துவ குலத்தவரே வைத்தியராக விளங்கினர். இப்போது வைத்தியத்தைப் பறிகொடுத்துவிட்டு மயிர்வினைஞராகி நிற்கின்றனர். வைத்தியத் தொழிலில் காலத்தையறிந்து அதற்கேற்ப முன்னேறி வர முயன்றிருந்தால் இவர்கள் இன்று ஆங்கில வைத்தியத் துறையிலும் முன்னேறி செல்வர்களாகி யிருக்கலாம். அகப்பட்டதைப் பிடித்துத் தொங்குவதும், எதிரி வலியனாகும்போது இழந்து தவிப்பதுமே நமது நாட்டு மக்களுக்கு இயற்கையாகி வந்திருக்கிறது. இதுதான் தருமமென்று பலர் கருதியும் வருகின்றனர். பெண்மக்கள் விஷயத்திலும் இக்கொள்கைதான் அனுட்டிக்கப்பட்டு வருகிறது. அடிமைத்தனமே அவர்கட் கணிகலன் என்று அஞ்சாது கூறியும், ஏட்டில் எழுதியும் வந்திருக்கின்றனர். ஆனால், இன்று தவமணி போன்ற பெண்மணிகள் பலர் மேடையேறி உண்மையுரைக்க முற்பட்டிருப்பதைப் பழங் கொள்கைப் பற்றுடையார் சிந்தித்துத் திருத்தமுறுவாராக!

## பலே மன்னு !

பிரிட்டிஷ் மன்னர் ஐந்தாம் ஜியார்ஜின் பட்டத்து மகன் முடி துறந்த செய்தி உலகமறிந்தது. அவர் முடியை இறக்கித்

தம்பி தலையில் சுமத்திவிட்டுத் தான் காதல் செல்வனாகி உலகுக்கு உற்றதுணர்த்த முற்பட்டிருப்பது உலக மக்களின் பேறாக இருக்கிறது. மறுமணப் பெண்ணை மணக்கும் அவர் பின்வருமாறு கூறுகிறார்:—

"காதலில்லாத கலியாணம் ஒழுக்க ஹீனமாகும். இயற்கைக்கு விரோதமானதுமாகும். உறுதியான குணமுள்ளவன் காதலில்லாக் கலியாணத்தை ஒப்புக்கொள்ளவே மாட்டான். லோகாயத நோக்கங்களுக்காக மட்டும் செய்யப்படும் கலியாணம், மனதால் நினைப்பதற்குக்கூட அருவருப்பைக் கொடுக்கக்கூடிய ஒரு ஆபாசமான தொழிலாகும். அரசாங்கத்தை முன்னிட்டு அப்படிப்பட்ட கலியாணம் செய்யப்படுமாயின் அது விவசாயப் பண்ணையிலே பொலிகாளைகளை பசுமாடுகளுடன் சேர்ப்பதற்கு ஒப்பாகும். காதலின்றிக் கலியாணம் செய்துகொண்டு தங்களை ஒழுக்கமுள்ளவர்கள் என்று சொல்லிக் கொள்ளுபவர்கள் உடனே விவாக ரத்து செய்துவிடவேண்டும். அவர்கள் ஆஷாடபூதிகளாக இருக்க வேண்டாம்".

காதல் கலவாத வரட்டு மணமே உலகில் பெரும்பாலும் நடக்கின்றன. காதல் சுவை தட்டாத வரண்ட உள்ளமானது என்றும் அடங்காத தாகமெடுத்து அலைவதில் ஆச்சரியமுண்டா? "தாகம் வரக்கூடாது அது தோஷம்" என்று ஏடுகளில் எழுதி வைத்துக்கொண்டே தண்ணீரைக் கண்ணில் படவொட்டாமலடிப்பது எவ்வளவு அறிவீனம்? இதைத் தான் நாட்டில் நடக்கும் பெரும்பான்மையான ஜாதி மணங்கள் நமக்கு அறிவுறுத்துகின்றன. மணமக்களுக் குரிமை நல்காது சுற்றத்தார் செய்யும் கட்டாய மணத்தை நோக்கி மன்னர் வின்சர் கூறும் மொழிகளை நமது மக்கள் நோக்குவாராக.

### மானமற்ற மனிதர்

'புருஷனுக்கும் மனைவிக்கும் சண்டை வலுத்தால் பிள்ளையைப் போட்டு அடிப்பதுண்டு' இப்படிப்பட்ட மூடத்தனம் எல்லைப்புறத்தில் நடக்கிறது. ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் சண்டை. ஆண் மக்கள் வீரத்தை ஆண் மக்களிடம் காட்டலாம். ஆனால்,

அங்கு சோதாக்கள் ஆற்முதபோது பெண்களைத் தூக்கிக்கொண்டு போய்விடுகின்றனர். இதைப்பற்றி லாலா துனிசந்த் ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார். அது:—

"பன்னு ஜில்லாவில் நான்கு ஹிந்துப்பெண்கள் அபரிக்கப்பட்டார்கள். ஹிந்துக்களின் கடைகள் சூறையாடப்படுகின்றன. இதைப் பேசாமல் பார்த்துக் கொண்டே இருக்க முடியவில்லை. குற்றமற்றவர்கள் இப்படி சொரம் செய்யப்படுவதை நாடெங்கும் ஒரு முகமாகக் கண்டிக்க வேண்டும். இதை நிறுத்துவதற்கு முக்கியமாக முஸ்லீம் தலைவர்கள் தங்கள் செல்வாக்கை உபயோகிக்க வேண்டும். ஹிந்துப் பெண்கள் அபகரிக்கப்படுவதை நாங்களும் கண்டிக்கிறோமென்று முஸ்லிம் தலைவர்கள் காட்டவேண்டும். கான் அப்துல் கபார்கான், டாக்டர் கான் சாகிப்போன்ற தலைவர்களுக்கு எல்லைப்புற வகுப்பினரிடையே நல்ல செல்வாக்கிருக்கக் கூடும். இந்த மிருகத்தனத்தை நிறுத்துவதற்கு அவர்கள் தங்களாலானதைச் செய்ய வேண்டும். இந்த சமயத்தில் கான் அப்துல் கபார்கான் எல்லைப்புறத்திற்குள் நுழைய முடியாதபடி தடுக்கப்பட்டிருப்பது துரதிர்ஷ்டமே. வெள்ளைக்கார ஸ்திரீகள் பலாத்காரமாகத் தூக்கிச் செல்லப்படுவதாக எப்போதாவது புகார்கள் வருவதுண்டு. அந்த சமயங்களில் மாத்திரம் அவர்களைக் காப்பாற்ற பிரிட்டிஷ் சர்க்காரின் படை முழுதும் திரண்டுவிடுகிறது. ஹிந்து ஸ்திரீகள் விஷயத்திலும் ஏன் அம்மாதிரியே செய்யக்கூடாது? எல்லைப்புற அசெம்ப்ளி இந்த விஷயத்தைக் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அசெம்ப்ளியிலுள்ள ஹிந்து முஸ்லிம், சீக்கிய அங்கத்தினர்கள் யாவரும் சேர்ந்து இதற்குப் பரிகாரம் தேடவேண்டும்."

ஹிந்து முஸ்லிம் சண்டையின் பயனாகப் பெண்மக்கள் அபகரிக்கப்படும் போது அரசாங்கம் துடிக்கவில்லை யென்றால் அது பெரிய அனியாயமல்லவா? அதிலும் வெள்ளைக்காரப் பெண்ணை ஒருவன் தூக்கும் போது இருக்கும் பரபரப்பு ஏன் மற்றபெண்ணைத் தூக்கும் போது இல்லையோ? நாம் என்ன செய்வது? வெள்ளைச் சாயத்தைப் பூசிக்கொள்ளலாமா? வெள்ளைப் பெண்ணுக்குத் தான்

மானம் பதினறு முழமா? ஹிந்துப் பெண்ணுங்குக் குறைவா?

ரமணி பி. ஏ.

இப்பெயர் கொண்ட நாவல் ஒன்று நமது பார்வைக்கு வந்துள்ளது. பல நாவல்களை யெழுதியுள்ள தோழர் ராம. ராமநாதன் அவர்கள் இதன் ஆசிரியராவர். சீர்திருத்த வேட்கை மிக்குடைய ராமநாதன் எழுதியுள்ள இக்கதை சீர்திருத்தச்சுவை ததும்பி நிற்கிறது. பிழை மலிந்த புத்தகங்கள் பல வெளிப்படு மிந்நாள் செவ்விய நடையில் வெளிவந்துள்ள இப்புத்தகம் போற்றத்தக்கதாகும். இதன் விலை அணு 6. தபாற்கூலி வேறு. கிடைக்குமிடம்:- ராம. ராமநாதன் (Eime, Burma.)

---

## :: நிகழ்ச்சிகள். ::

### ஏம்பலில் விதவா விவாகம்.

வைகாசி 18உ மாலை 3-மணிக்கு ஏம்பலில் திரு. சுப. அழகப்ப ஆச்சாரியார் அவர்கள் இல்லத்தில் ஷை அழகப்ப ஆச்சாரியார் அவர்கள் தலைமையில் தஞ்சாவூர் ஜில்லா பாண்டிபத்திரம் மாணிக்க ஆச்சாரியார் மகன் ஸ்ரீமான் அய்யனர் ஆச்சாரியாருக்கும், காரைக்குடி இருளப்ப ஆச்சாரியார் மகள் ஸ்ரீமதி காவேரி அம்மாளுக்கும் விதவா மண ஒப்பந்தம் சிறப்பாக நடைபெற்றது. காரைக்குடி, கடியாபட்டி, தேனிபட்டி, காணுடுகாத்தான், வாகைவாசல் பட்டுக்கோட்டை முதலிய இடங்களிலிருந்து ஏராளமான அன்பர்கள் வந்திருந்தனர். மணமக்கள் இருவரும் ஆசனத்திலமர்ந்ததும், தலைவர் திரு. அழகப்ப ஆச்சாரியார் அவர்கள் தம்பதிகளை வாழ்த்தி மண வினையை ஆரம்பித்துவைத்தார். திருமாங்கல்யதாரணம் நடைபெற்ற பின்பு, விதவா மண ஒப்பந்தப் பத்திரத்தை கடியாபட்டி திரு. ராம. அண்ணுமலை ஆச்சாரியாரவர்கள் படித்து, தம்பதிகளிடமும், விஜயஞ் செய்திருந்த முக்கியஸ்தர்களிடமும் கையெழுத்து வாங்கப்பட்டது. தம்பதிகள் மாலை மாற்றிக்கொண்டனர். சபையோர் விதவா மண தம்பதிகளை வாழ்த்திய பின்பு புகைப்படம் பிடிக்கட்பெற்று திருமணம் இனிது நிறைவெய்தியது.

### போதுக்கூட்டம்.

பின்னர் மாலை சுமார் 5 மணிக்கு வாகைமரப்பொட்டலில் ஸ்ரீமான் ராம. மூ. அழ. ராமசாமி செட்டியாரவர்கள் தலைமையில் விதவா விவாகப் பாராட்டுக்கூட்டம் நடைபெற்றது. ஆண்

களும் பெண்களுமாக ஏராளமானவர் விஜயஞ்செய்திருந்தனர். கடியாபட்டி திரு..ராம. அண்ணுமலை ஆச்சாரியார் அவர்கள், விதவா மண தம்பதிகளை வாழ்த்தியும், சீர்திருத்தத்தின் அவசியத்தை வற்புறுத்தியும் பேசினுர்கள். பின்பு குமரன் உதவியாசிரியர் வி. பரமசிவன் விதவா விவாகம் என்பது குறித்து உபங்யாசம் செய்த பிறகு தலைவர் முடிவுரை கூறினுர். கூட்டம் சுமார் 6-30 மணிக்கு இனிது கலைந்தது.

## அழகு செய்தல்.

"பெண்கள் அழகு செய்துகொள்வதற்கு ஆடம்பரமான நகைகள் தேவையில்லை. புன்னகை ஒன்றே போதும். வேண்டுமானுல் ஆடம்பரமில்லாத நகைகளை அணிந்துகொள்ளலாம். கண்டவிடங்களில் - துவாரங்களைப் போட்டுக்கொண்டு தங்கத்தையும் கற்களையும் தொங்கவிடுவதால் என்ன பயன்? பெண்களென்றுல் நகைகளை மாட்டிவைக்கும் ஸ்டாண்டுகள் என்ற விதமாக அர்த்தஞ் செய்யும்படியாக பெண்கள் நடந்துகொள்ளலாகாது."

—ஸ்ரீமதி கோதைநாயகி.

## மாதர் மறுமணப் பிரசாரம்

செஞ்சி விஸ்வப் பிராம்மண சபையைச் சேர்ந்த பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய ஆச்சாரியார் போளூருக்கு விஜயம் செய்திருப்பதை முன்னிட்டு மேற்படியார் மாதர் மறுமணம் என்பதைப் பற்றி உபங்யசிக்கும்படி இவ்வூர் விஸ்வப்பிராமணர்களில் சிலர் வேண்டிக்கொண்டதற்கிணங்க ஸ்ரீ காமாக்ஷி விலாச சபையின் ஆதரவில் ஒரு பொதுக் கூட்டம் பிரம்மஸ்ரீ ஜி. ராமசாமி ஆச்சாரியார் தொழிற்சாலைக் கட்டிடத்தில் 8-6-37ந் தேதி இரவு 9 மணிக்கு பிரம்மஸ்ரீ பி. பாலகிருஷ்ண ஆச்சாரி தலைமையில் கூடியது. தலைவர் முன்னுரைக்குப் பின் பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய ஆச்சாரியார் மாதர் மறுமண சுதந்திரம் என்பது பற்றி சொற்பொழி வாற்றினுர். அவர் விதவைகளின் நிலையை எடுத்தோதி அவர்கள் எதிர்கால நோக்கின்றி நிராதரவாய் விடப்படுவது சமூகத்தினுக்கு இழுக்கேயாகும் என்றுர். தலைவர் முடிவுரைக்குப் பின் வந்தனோபசாரத்துடன் கூட்டம் கலைந்தது.

## வீரப் பெண்

லட்சுமணபுரி,

அந்த முஸ்லிம் பெண்ணுக்கு அதிக வயதாகவில்லை. ஆயினும் அவள் ஒரு தடியனைத் தீது செயலின்று நிறுத்தி விட்டது தான் ஆச்சரியத்திலும் ஆச்சரியம். அஹபார் மகாநாடு லட்சுமணபுரியில் நடந்தது. அதையொட்டி பெண்கள் மகாநாடொன்றும் ஏற்பாடாகி யிருந்தது, அந்த மகாநாட்டின் பெண்தொண்டர் படையில் அந்தச் சிறுமியும் ஒருவள். பெண்கள் மகாநாட்டுப் பந்தலுக்குத் தீவைத்து விடுவதற்காக ஒரு காலிப்பயல் வந்தானும். அந்த முஸ்லிம் பெண் சிவப்பு முகமூடியோடு அங்கு நின்றிருந்தாள். அவன் வந்தவுடன் சத்தம் போட்டு உருவிய கத்தியோடு அவள் ஓடிவந்தாள்; அந்தத்தூர்த்தனைத் தேக்கிக்கொண்டு பிகிலடித்தாள். இதர தொண்டர்கள் ஓடிவந்தனர். அவன் பிடிக்கப்பட்டு விட்டான்.

## 65-க்கு 13!

ஜூன் 4உ மாலை கருரை அடுத்த தாந்தோன்றி மலையில் வேடசென்

தூர் ஸ்ரீ செ. சடையப்ப செட்டியாருக்கும் (65-வயது) கரூர் அப்பாவு செட்டியார் மகள் ஸ்ரீமதி ரத்தினம் அம்மாளுக்கும் (13-வயது) விவாகம் நடைபெற்றது. மாப்பிள்ளைக்கு முதல் மனைவியும் 7 குமாரத்திகளும் இருக்கின்றனர். 5 பெண்களுக்கு விவாகம் ஆகி விட்டது. மாப்பிள்ளையின் மறுமகப் பிள்ளைகளும், பேத்திகளும், விவாகத்திற்கு வந்திருந்தனர்! தாந்தோன்றி மலையில் திரு. செட்டியார் தாந்தோன்றித் தனமாகவே மணஞ் செய்து கொண்டிருக்கிறார்!

## விதவா விவாகக் கணக்கு

1937 எப்ரல் மாதத்தில் லாகூர் விதவா விவாக சகாய சங்கத்தின் மூலமாகவும் இதர வகையிலும் 342 விதவா விவாகங்கள் நடைபெற்றிருக்கின்றன.

ஜாதிவாரியாக:—

| | |
|---|---|
| பிராமணர் | 90 |
| க்ஷத்திரியர் | 51 |
| அரோடா | 53 |
| அக்ரவாலா | 17 |
| காயஸ்தர் | 21 |
| ராஜபுத்ரர் | 37 |
| பிறர் | 73 |

மாகாண வாரியாக:—

| | |
|---|---|
| பஞ்சாப் | 135 |
| ஐக்கியமாகாணம் | 95 |
| மத்தியமாகாணம் | 41 |
| பம்பாய் | 8 |
| வங்காளம் | 47 |
| பீகார் ஒரிஸா | 13 |
| மத்திய இந்தியா | 3 |

## அம்ருதசரஸில் மறுமணம்

ஏப்ரல் 26௳ அம்ருதசரஸ் நகர் ஆர்ய சமாஜக் கட்டிடத்தில் விதவா விவாக மகாநாடு நடைபெற்றதின்பின்னர் 30௳ இரவு 10 மணிக்கு ஒரு விதவா விவாகம் அரோடா ஜாதியாரில் சிறப்பாக நடைபெற்றது. வரன் 25 வயதுடைய லாலா சீதாராமன் என்பவர். அமிர்தசரஸ் நிமக் மண்டியில் வேலைபார்த்து வருகிறார். விதவைப்பெண் 20 வயதுடைய ராம் பியாரி தேவி என்பவள். நிமக் மண்டியில் இருப்பவள்.

விதவா விவாக சகாய சபையின் உபதேசகர் பண்டித் தீனநாத் வித்யாலங்கர் அவிகரால் வைதீக முறையில் விவாகம் நடத்தி வைக்கப்பெற்றது.

## ராவல்பிண்டியில் விதவா விவாகம்

ராவல்பிண்டியில் எப்ரல்௴ 13-௳ இரவு $8\frac{1}{2}$ மணிக்கு திருமதி கிருஷ்ணாவதிக்கும் லாலா ஜ்யோராம் அவர்களுக்கும் விதவா விவாகம் டி. ஏ. வி. ஸ்கூல் உபாத்தியாயர் பண்டிதர் பரமேஸ்வரிதாஸ் அவர்களால் மிகச் சிறப்பாக நடத்திவைக்கப்பெற்றது. இந்த விவாகத்திற்கு டி. ஏ. வி. காலேஜ் ஆர்யசமாஜம், வனிதா ஆசிரமம், விதவாவிவாக சகாயசபை முதலியவற்றின் அங்கத்தினர்கள் வந்திருந்தனர்.

## ஸிர்ஸாலில் விதவா விவாகம்.

ஸிர்ஸாவில் எப்ரல் 18௳ ஆர்ய சமாஜ மந்திரத்தில் பிராமண விதவை ஸ்ரீமதி ஸரஸ்வதி தேவிக்கும், விதுர பிராமணன் திரு. சுதர்சன சிங்குக்கும் வைதீக முறையில் விதவா விவாகம் நடத்திவைக்கப் பெற்றது. சுமார் 500 பேர் கூடியிருந்தனர். உபந்யாசம் நிகழ்த்தப்பெற்றது.

# மாதர் மறுமணப் பாடல் திரட்டு.

சிறந்த பாடல்கள்! உயர்ந்த காகிதம்!

இது ஒரு சிறந்த பாடல் புத்தகம். இதில் 27 பாடல்கள் அடங்கியுள்ளன. இலக்கியப் பாடல்களும், புதுவகையான மெட்டுப் பாட்டுகளும் நிறைந்திருக்கின்றன. 64 பக்கமுள்ள இவ்வழகிய புத்தகத்தின் விலை இரண்டணாதான். தபாற் கூலி வேறு. ஒரு புஸ்தகம் வேண்டுவோர் மூன்றணா ஸ்டாம்பு அனுப்ப வேண்டும்.

மானேஜர்,
"மாதர் மறுமணம்"
காரைக்குடி.

# நகரத்தார் நாஷனல் பாங்க் லிமிடெட்,
## கண்டனூர்.

கரண்ட் அக்கவுண்டு, சேவிங்ஸ், தவணை டிபாசிட்டுகள், பின்கண்ட வட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| கரண்டு அக்கவுண்டு | ரூ. 100-க்கு வருஷத்திற்கு | | ரூ. 2 |
| சேவிங்ஸ் பாங்க் | ,, | ,, | ரூ. 3½ |
| 3 மாத சாஸ்வத டிபாஸிட் | ,, | ,, | ரூ. 3 |
| 6 மாத ,, | ,, | ,, | ரூ 3½ |
| 12 மாத ,, | ,, | ,, | ரூ. 4½ |
| 24 மாத ,, | ,, | ,, | ரூ. 5 |

சேவிங்ஸ் பாங்கு கணக்கில் வாரத்தில் ரூ. 250வரை எடுத்துக்கொள்ளலாம். எல்லாவிதமான பாங்கிங் வேலைகளும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. விபரத்துக்கு நேரில் அல்லது எழுத்துமூலம் தெரிந்துகொள்ளலாம்.

For Nagarathar National Bank Ltd.,
N. VEERAPPAN,
Managing Director.

# மாதர் மறுமணம்.

பத்திராதிபர்:— மு. மரகதவல்லி.

| மலர் 1 | காரைக்குடி<br>ஈஸ்வர-௵ ஆடி-௴ | இதழ் 12 |
|---|---|---|

## குலவழக்கம்?

(முரு.)

(1) சிட்டி பொறுக்கித் தெருவில் விளையாடும்
குட்டி வயதிலெனைக் கொண்டுவந்து—கட்டி
வராகன்பத் தாயிரத்தை வாங்கிமணம் செய்தார்
தராதலத்தென் தந்தை தாயார்.

(2) மணஞ்செய்த மாப்பிளையின் வாழ்க்கை நலம் பெற்றுக்
குணமறிந்து பேசினனோ கூடிப்—பணந்தேடி
கல்யாண மானவுடன் கப்பல் தனிலேறி
வல்பயணம் போயினரே மற்று.

(3) தாலிகட்டு மென்கணவன் சாம்பினா னென்று சொல்லி
ஓலமிட்டு வந்தா ருறவினர்கள்—மேல்விழுந்து
கத்திக் கதறியெனைக் கட்டி யழுதார்கள்
புத்திகெட்டுப் போனேனப் போது.

(4) ஒன்று மறியேன் ஒருபாவம் செய்ததிலை
என்று கதறினேன் ஈர்த்துவந்து—நின்றகால்
நாலுகொண்ட பந்தல் நடுவிருத்திப் பாவியர்கள்
தாலிக் கயிற்றையறுத் தார்.

(5) வெள்ளைத் துணியளித்தார் மேனி ஒடுங்கவைத்தார்
கள்ளத் தனம்பலவுங் கற்றுவைத்தார்—மெள்ளக்
கலவி பழக்கிக் கருவழித்தார் ஞாலக்
குலவ்ழக்க மென்றூரிக் கோள்.

# ராஜா ராம்மோகன் ராய்.

திருச்சி கே. வி. எஸ். வாஸ், பி. ஏ. (ஆனர்ஸ்)

## அத்தியாயம் 11.

## இங்கிலாந்தில் ராம்மோகனர்.

ராம்மோகனர் இங்கிலாந்திற்குச் செல்ல ஏற்பாடுகளைச் செய்து வந்தாரென்று முந்திய அத்தியாயத்தில் பிரஸ்தாபித்திருந்தோம். அவர் இங்கிலாந்து செல்ல விரும்பியதற்கு முக்கியமாக இரண்டு காரணங்களுண்டு. முதலாவதாக, சதியொழிப்புச் சட்டத்திற்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்து வந்தவர்கள் பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபையில் மனுச்செய்து நடவடிக்கைகளை யெடுத்துக் கொள்வதென்று தீர்மானித்திருந்தார்கள். ஆகையால் அந்த மனுவிற்கு விரோதமாக பிரிட்டிஷ் பொதுஜனங்களிடையே பிரசாரம் செய்ய் தாமே நேரில் செல்லவேண்டு மென்று ராம்மோகனர் விரும்பினர். இரண்டாவதாக, கிழக்கு இந்தியக் கம்பெனியாருக்கு பிரிட்டிஷ் சர்க்கார் செய்து கொடுத்திருந்த சாஸனம் சமீபமாகக் காலாவதியாவதாயிருந்தது. எனவே, புதிய சாஸனம் ஏற்படும் பொழுது பிரிட்டனிலிருந்தால் இந்தியாவிற்கு சாதகமாக ஏதேனும் செய்ய முடியுமென்று அவர் நம்பினர். இவைகளுடன் மொகலாயச் சக்கிரவர்த்தி தமது தூதராக பிரிட்டிஷ் மன்னரிடம் செல்லவேண்டு மென்று கேட்டுக்கொண்டது மூன்ருவது காரணமாயிற்று.

1830-ம் வருட ஜனவரி மாதம் 8-ம் தேதியன்று ராம்மோகனர் வைஸிராய் பெண்டிங்க் பிரபுவிற்கு இங்கிலாந்து செல்லும் தமது உத்தேசத்தைக் குறிப்பிட்டு ஒரு கடிமெழுதி யிருந்தார். அந்தக்கடிதத்தில் அவர் பிரஸ்தாபித்திருந்ததாவது:—

டெல்லிச் சக்கிரவர்த்தியாகிய உபூனிஜஉர் மொய்னுதீன் முகமது அக்பர் பாஷா தமது சார்பாக பிரிட்டிஷ் மன்னரிடம் தூது செல்ல என்னைத் தெரிவு செய்திருப்பதாகச் சில மாதங்களுக்கு முன்னர் அறிவித்திருந்தார். அத்துடன் எனக்கு "ராஜா" என்னும் பட்டத்தை வழங்கியிருப்பதாகவும் அவர் தெரிவித்திருந்தார். பட்

டங்களிலும் பதவிகளிலும் ஆசையில்லாத நான் எனக்கு அளிக்கப் பட்ட ராஜா என்னும் பட்டத்தை நாளதுவரையில் உபயோகித்துக் கொள்ளவில்லை. மிகுந்த கௌரவம் வாய்ந்த மொகலாய ராஜகுடும் பத்தின் தூதுவராகச் செல்லும் நான் பிரஸ்தாபப்பட்டத்துட னேயே போகவேண்டுமென்று சக்கிரவர்த்தி இப்பொழுது விரும் புகின்றார். என்னை டில்லிக்கு அழைத்து மேற்படி பட்டத்திற்கு ரிய சன்னத்துகளையும் நேரில் வழங்கியிருக்கின்றார். ஆகையால் இந்தப் பட்டத்தை நீங்களும் ஆமோதிப்பீர்களென்ற நம்பிக்கை யோடு இக்கடிதத்தை எழுதுகின்றேன்.

மேற்படி கடிதத்திற்கு வைஸிராயின் அந்தரங்கக் காரியதரிசி யாயிருந்த திரு. ஸ்டார்லிங் என்பவரிடமிருந்து விடைகிடைத்தது. அந்த விடையில் பிரஸ்தாபப்பட்டத்தை வைஸிராய் அங்கீகரிக்க மறுப்பதாக அறிவிக்கப்பட்டிருந்தது. அத்துடன் ராம்மோகனரை மொகலாயச் சக்கிரவர்த்தியின் தூதுவராக ஏற்றுக்கொள்ள முடி யாதென்றும் தெரிவிக்கப்பட்டிருந்தது. இந்த பதிலைக்கண்டு ராம் மோகனர் ஆச்சர்யப்படவில்லை. ஏனெனில், மொகலாய மன்ன ரின் தூதுவராகச் செல்லும் தன்னை இந்தியா சர்க்கார் எதிரியா கவே நினைப்பார்களென்றும், ஆகையால் சக்கிரவர்த்தியினால் வழங் கப்பட்ட பட்டத்தையும், தாம் சக்கிரவர்த்தியின் தூதுவனென்ப தையும் அவர்கள் அங்கீகரிக்க மாட்டார்களென்றும் ராம்மோகனர் முன்னதாகவே எதிர்பார்த்தார்.

1831-ம் வருடம் பிறந்தது. இதுதான் ராம்மோகனர் இந்தியா வில் கழித்த கடைசி வருடமாகும். இவ்வருடம் ஆரம்பத்தில் ராம் மோகனரின் சீர்திருத்தங்களை முறியடிக்க சனாதனிகள் அதிதீவிர மாக நடவடிக்கையெடுத்துக் கொண்டார்கள்; அவர்களிற் பலர் கூடிப்பேசி "ராம்மோகனரை ஒழித்துவிட்டால் சீர்திருத்தக் கிளர் ச்சி முற்றாக மறைந்துவிடும். எப்படியாவது அவரைக் கொலை செய்துவிட வேண்டும்!" என்றும் தீர்மானித்தார்கள். இது ராம்மோகனருக்குத் தெரியவந்தது. தமது உயிர் ஒவ்வொரு நிமி டமும் ஆபத்திலிருக்கின்ற தென்பதை அவர் உணர்ந்தார். பகை வர்களிடமிருந்து தப்பிக்கொள்வதற்கான பந்தோபஸ்துகளையும் அவர் செய்துகொண்டார். அவருடைய வீட்டைச்சுற்றி ஆயுதபா

ணிகளாக அனேகம் காவலாளிகள் அமர்த்தப்பட்டனர். வெளியில் புறப்படும் பொழுது கைத்துப்பாக்கியில்லாமல் அவர் செல்லுவதில்லை. எங்கு சென்றாலும் காவலாளிகள் அவரைத் தொடர்ந்து செல்லுவார்கள். காரியதரிசியாகிய திரு. மார்டினும் ஆயுதபாணியாக அவரைப் பின்தொடர்ந்து செல்லுவார். இவ்வளவு பாதுகாப்புகளிருந்தும் அவரைக் கொலைசெய்ய இருமுறை முயற்சிசெய்யப்பட்டது. அந்த இரண்டு சந்தர்ப்பங்களிலும் ராம்மோகனர் தெய்வாதீனமாக உயிர்தப்பினர்.

இந்த சம்பவங்களின் காரணமாக, இந்தியாவை விட்டு இங்கிலாந்திற்குச் செல்லுவதில் ராம்மோகனருக்கு அதிக துக்கம் ஏற்படவில்லை. அவர் 1830-ம் வருடம் நவம்பர் மாதம் 19-ம் தேதியன்று கல்கத்தா துறைமுகத்திலிருந்து புறப்பட்ட "அல்பியான்" என்னும் கப்பலில் இங்கிலாந்திற்குப் பிரயாணமானர். அப்போது தமது அனுஷ்டானங்களைக் கப்பலிலும் சீமையிலும் கைவிடாமலிருப்பதற்காக பிராமண வகுப்பில் பிறந்த ஒரு சமையற்காரனையும் இரண்டு பசுக்களையும் உடன் அழைத்துச் சென்றார். அத்துடன் சீமையில் எதிர்பாராத ஆபத்து ஏற்பட்டு விட்டால் தமது அந்தியக் கிரியைகளை அங்கேயே நடத்திவைப்பதற்காக ராம் ராய் அல்லது ராஜாராம் என்னும் ஒரு ஸ்வீகாரப் புதல்வனையும் அவர் அழைத்துச் சென்றார். இவனுக்குச் சுமார் பன்னிரண்டு வயது தானிருக்கும். இவன் ஒரு அனாதை. குழந்தைப்பருவ முதற்கொண்டே அவனை ராம்மோகனர் போஷித்து வந்தார். அப்படியிருந்தும், ராம்மோகனரின் விரோதிகளான சனாதனிகள் அபாண்டமான கதைகளைக் கட்டி விட்டு ராம்மோகனருக்கு ஒரு தாஸி இருந்ததாயும் அவள் மூலமாகப் பிறந்தவனே ராஜாராம் என்னும் சிறுவனென்றும் பலரை நம்பும்படி செய்து விட்டார்கள்.

கடல் கடந்து அயல் நாடு செல்வது இந்து மதாசாரத்திற்கு விரோதமானது. மேல்நாட்டு நாகரீகம் வெகுவாக முற்றிவரும் இருபதாம் நூற்றாண்டிலும் இந்த சம்பிரதாயத்தைப் பெரும்பாலான இந்துக்கள் அனுஷ்டித்து வருகின்றார்கள். அங்ஙனமிருக்க சனாதனிகளின் சர்வாதிகாரம் செல்லுபடியாகி வந்த பத்தொன்பதாம் நூற்றாண்டில் இக்கொள்கை எவ்வளவு தீவிரமாக அனுஷ்டா

னத்திலிருந்திருக்க வேண்டுமென்பதை நாம் எடுத்துரைக்க வேண்டியதில்லை. கடல் கடக்கும் இந்தியரை சமூகப் பிரஷ்டம் செய்வதோடு அவருக்கு எத்தகைய ஆபத்து ஏற்படினும் பிறர் உதவி செய்யக் கூடாதென்பது கட்டுப்பாடாக இருந்தது. இந்த சம்பிரதாயக் கோட்டையைத் தகர்த்தெறிந்து விட்டு முதன் முதலாகச் சீமைக்குச் சென்ற பிராமணர் நமது ராம்மோகனரேயாவர். ஆகையால் படிப்பிற்காகவும், இதர அலுவலாகவும் இங்கிலாந்திற்குத் துணிவுடன் செல்லும் இன்றைய இந்தியர்களுக்கு ராம்மோகனரையே வழிகாட்டியாகச் சொல்லவேண்டும்.

கப்பல் பிரயாணத்தின்பொழுது ராம்மோகனர் தமது அறையைவிட்டு வெளிவரவேயில்லை. நன்னம்பிக்கை முனையில்மட்டும் அவர் கீழிறங்கினர். அப்பொழுது அவருக்கு ஒரு விபத்து ஏற்பட்டது. அதாவது கரையிலிருந்து கப்பலில் ஏறுகையில் கால் தவறிக் கீழே விழுந்து பலமாகக் காயமடைந்தார். அந்தக் காயம் விரைவாக ஆறிவிட்டதேயாயினும் ஆயுள்வரையில் காலைச் சரியாக ஊன்றி நடக்கமுடியாமலே போய்விட்டது.

1831-ம் வருட ஏப்ரல் மாதம் 8-ம் தேதியன்று ராம்மோகனர் லிவர்பூல் துறைமுகத்தில் வந்திறங்கினர். அவருடைய வரவு ஏற்கனவே எதிர்பார்க்கப்பட்டிருந்தமையால் ஏராளமான ஆங்கிலேயர்கள் அவரைத் துறைமுகத்தில் வரவேற்றார்கள். அவர்களிடையே இந்தியாவின் பிரதிபிம்பமாகவும், கீழ்த்திசைக் கலைகளின் சிகரமாகவும் அவர் விளங்கினர். "இங்கிலாந்தின் போக்கை இந்தியர்களுக்கு எடுத்துரைத்த அறிஞர் இந்தியாவின் போக்கை இங்கிலாந்திற்கு அறிவிக்க இப்பொழுது விஜயம் செய்கின்றார். அவருடைய வரவு நல்வரவாகுக!" என்று பல பிரிட்டிஷ் பிரமுகர்கள் வாய்விட்டுச் சொல்லவும் செய்தனர்.

ராம்மோகனர் விஜயம் செய்த சந்தர்ப்பத்தில் இந்தியாவைப் போல் இங்கிலாந்திலும் சீர்திருத்தப் போராட்டம் வெகு மும்முரமாக நடந்துகொண்டிருந்தது. மூடத்தனமான பழக்கவழக்கங்களையும் மதக் கட்டுப்பாடுகளையும் உடைத்தெறிந்து சமூக நிலைமையை முற்றிலும் வேறாக மாற்றியமைக்க ஆங்கிலேய அறிஞர்கள் அரும்பாடுபட்டுக்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய் வற்புறுத்

துதலால் தயார் செய்யப்பட்டிருந்த சீர்திருத்த மசோதா பார்லிமெண்டு சபையில் இரண்டாவது முறையாக நிறைவேற்றப்படும் தருணத்திலிருந்தது. சுருங்கக் கூறுங்கால் ராம்மோகனரின் விஜயத்தின்பொழுது இங்கிலாந்து தேசம் மறுமலர்ச்சி அடைந்துகொண்டிருந்ததென்றே சொல்லிவிடலாம்.

ராம்மோகனர் முதன்முதலாக ஆங்கிலேயர்களின் மத்தியில் சொற்பொழிவு நிகழ்த்தியது லிவர்பூல் யூனிடேரியன். தேவாலயத்தில்தான். அந்தப் பிரசங்கம் பிரிட்டிஷ் மக்களை பிரமிக்கச் செய்துவிட்டது. இந்தியா தேசத்தை கறுப்பர்களும் காட்டுமிராண்டிகளும் வாழும் அநாகரீக தேசமென்று இதுவரையில் அவர்கள் கருதிவந்தனர். அந்த தேசத்தைச் சேர்ந்த ஒருவர் ஆங்கில பாஷையில் தெளிவாகவும், உணர்ச்சியுடனும் பேசுவதைக் கண்டதே அவர்கள் அதிசயிக்கலாயினர். ராம்மோகனரின் பிரசன்னமும் பிரசங்கமும் இந்தியாவின் கௌரவத்தை ஆங்கிலேயர்களின் திருஷ்டியில் ஆயிரமடங்கு அதிகரித்தது. "கீழ்த்திசை மக்கள் சாதாரணமானவர்களல்ல. கல்வி கேள்விகளில் நம்மைப்போல் அவர்களும் தேர்ந்தவர்கள்தான். இந்தியாவைப்பற்றி இதுவரை நாம் தவறான அபிப்பிராயம் கொண்டிருந்தோம் என்று ஒவ்வொரு ஆங்கிலேயரும் எண்ணலாயினர்.

லிவர்பூலில் சில தினங்கள் வரை தங்கியிருந்துவிட்டு ஏப்ரல் மாதக் கடைசியில் லண்டனுக்கு ராம்மோகனர் புறப்பட்டார். சீர்திருத்த மசோதா இரண்டாவது முறையாகப் பார்லிமெண்டில் பிரேரபிக்கப்படும்பொழுது லண்டனிலிருக்க அவர் விரும்பினர். லண்டனை அடைந்ததும் மாஞ்செஸ்டர் முதலாளிமார்களின் அழைப்பிற்கிணங்க அவர்களுடைய தொழிற்சாலைகளுக்கு ராம்மோகனர் விஜயஞ் செய்தார். இந்த விஜயத்தைப்பற்றி திரு. ஸதர்லாந்து கூறுவதாவது:—

"ராம்மோகனர் வந்திருக்கிறரென்பதைக் கேள்விப்பட்டவுடன் மான்செஸ்டர் தொழிலாளிகளெல்லாம் வேலைநிறுத்தம் செய்துவிட்டு கூட்டம் கூட்டமாக அவரைத் தரிசிக்க வந்தனர். தொழிற்சாலைகளின் தூசிபடர்ந்த அவர்கள் ஒவ்வொருவரும் ராம்மோகனரோடு கைலாகு கொடுக்க விரும்பினர்கள். ஆங்கில மாதர்களிற்

சிலர் அவரை ஆலிங்கனம் செய்துகொள்ளவும் அவாவினர். ஆகையால், ஜன நெருக்கடியைச் சமாளிக்கவும், ராம்மோகனரைத் தொழிற்சாலையினுள் இட்டுச்செல்லவும் போலீசாருடைய உதவி அவசியமாகிவிட்டது."

ராம்மோகனரின் வரவு லண்டன்வாசிகளிடையே காட்டுத் தீயைப்போல் அதி துரிதமாகப் பரவியது. அவர்கள் ஒவ்வொருவரும் ராம்மோகனரின் தரிசனத்தைப் பெறுவதற்காக கூட்டம் கூட்டமாய் வந்தனர். காமன்ஸ் சபையையும் பிரபுக்கள் சபையையும் சேர்ந்த பிரமுகர்கள்கூட ராம்மோகனரை அவருடைய விடுதியில் வந்து சந்தித்தனர். ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கானவர்களுக்கு ராம்மோகனர் பேட்டியளிக்கவேண்டியதாகிவிட்டது.

பிரிட்டிஷ் பொதுஜனங்களளித்த உற்சாகமான வரவேற்புகளும் மரியாதைகளும் ராம்மோகனருக்குப் பல வகைகளில் பேருதவியாயிருந்தன. முதலாவதாக, அதிகாரவர்க்கத்தின் திருஷ்டியில் அவருடைய செல்வாக்கு மேலும் மேலும் அதிகரிக்கலாயிற்று. இந்தியாவைவிட்டு இங்கிலாந்திற்குப் புறப்பட்ட காலத்தில், டெல்லிச் சக்கரவர்த்தியின் தூதரென்று தம்மை அங்கீகரிக்குமாறு ராஜப் பிரதிநிதிக்கு ராம்மோகனர் எழுதியிருந்தார். அதே கடிதத்தில் டெல்லிச் சக்கரவர்த்தியினால் தமக்கு அளிக்கப்பட்டிருந்த ராஜா என்னும் பட்டத்தை அங்கீகரிக்கவேண்டுமென்றும் அவர் கேட்டிருந்தார். ஆனால், இவ்விரண்டையும் அங்கீகரிக்க முடியாதென்று ராஜப்பிரதிநிதியின் காரியதரிசி பதிலெழுதியிருந்ததை முன்னமேயே குறிப்பிட்டிருக்கின்றோம். பிரிட்டிஷ் மந்திரிகளோ, ராம்மோகனரை டெல்லிச் சக்கரவர்த்தியின் தூதுவரென்று ஒப்புக்கொண்டதோடு இந்தியப் பொதுஜனங்களின் பிரதிநிதியாகவும் கருதினார்கள். அவர்களிற் சிலர் ராம்மோகனரைச் சந்தித்துப் பேசுவதற்காக அவருடைய இல்லத்தை நாடிவரவும் செய்தனர்.

பிரிட்டிஷ் பொதுஜனங்களிடமும், அதிகார வக்கத்தினிடமும் ராம்மோகனருக்கு ஏற்பட்டிருந்த செல்வாக்கு இங்கிலாந்திலிருந்த கிழக்கிந்தியக் கம்பெனியாரின் மனோபாவத்தையும் மாற்றிவிட்டது. இந்தியாவிலிருக்கையில் ராம்மோகனரைத் துச்சமாகக் கருதிய இக்கம்பெனியார் சீமைக்கு வந்ததும் அவருக்குத் தனிமரி

யாதையளிக்க வாரம்பித்தார்கள். 1831-ம் வருட ஜூலைமாதம் 6-ம் தேதியன்று நமது ராம்மோகனரை உபசரிப்பதற்காக கம்பெனி டைரக்டர்கள் ஒரு விருந்து நடத்தினர்கள். அந்த விருந்து இந்தியாவிற்குப் பிரயாணமாகும் ராஜப்பிரதிநிதிகளுக்கு அளிப்பதைப்போல் அவ்வளவு ஆடம்பரமாக இல்லாத போதிலும், பெரும்பாலான டைரக்டர்கள் அதற்குச் சமூகமளித்திருந்தார் களென்பது குறிப்பிடத்தக்கது. பிராமண குலத்தில் பிறந்த ராம்மோகனர் இறைச்சியையும், முட்டைகளையும் புசிப்பவர்களோடு எவ்வாறு சமபந்தி போஜனம் செய்தாரென்று சிலர் ஆச்சர்யப்படலாம். சீமைக்கு வந்தவுடன் மத அனுஷ்டானங்களை ராம்மோகனர் கைவிட்டு விட்டாராவென்றும் சிலர் சந்தேகிக்கலாம். சீமையிலிருந்த அவரைப்பற்றி இந்தியப் பொதுஜனங்களில் ஒரு சாரார் அனேக விதமான பொய்க்கதைகளைக் கட்டிவிட்ட பொழுதிலும், தான் ஒரு இந்தியன் என்பதையும், பிராமண குலத்தில் பிறந்தவன் என்பதையும் அவர் மறக்கவேயில்லை. விருந்தில், அவருக்காக வென்று அரிசியுணவும், கறிகாய்களும் பிரத்யேகமாகச் சமைத்துவைக்கப்பட்டிருந்தன. அவைகளைக்கூட ராம்மோகனர் தீண்டவில்லை. ஜலபானம் மட்டுமே அவர் செய்தார். கம்பெனியாரின் அபிப்பிராயங்களையறிவதிலேயே அவருடைய கவனம் பூராவாகச் செலுத்தப்பட்டிருந்தது. விருந்திற்கு அக்கிராசனம் வகித்த கம்பெனி டைரக்டர்களின் தலைவர், ராம்மோகனரைப்பற்றி பிரமாதமாகப் புகழ்ந்து பேசியதோடு அவருடைய விஜயம் மற்றும் பல இந்தியர்களை இங்கிலாந்திற்கு வரும்படி தூண்டுவதாயிருக்கு மென்று நம்புவதாயும் கூறினர். வேறு சில டைரக்டர்கள் ராம்மோகனரின் சீர்திருத்தப் பிரசாரங்களைப்பற்றி தங்களுடைய பிரசங்கங்களில் பிரஸ்தாபித்தார்கள். ஆனல், இந்தியாவின் அரசியல் பொருளாதாரப் பிரச்னைகளைப்பற்றியோ அல்லது நிர்வாகத்தைப் பற்றியோ ஒருவரும் பிரஸ்தாபிக்கவில்லை. இது ராம்மோகனருக்குச் சிறிது ஏமாற்றத்தையளித்தது. ஆயினும், அவர் வாளாவிருக்கவில்லை. கம்பெனிப் பிரதிநிதிகள் இந்தியாவில் எவ்வாறு நடந்துகொள்ளுகிருர்க ளென்பதைப் பற்றி தமது பதில் பிரசங்கத்தில் விரிவாக அவர் எடுத்துரைத்தார். இறுதியில்,

"இந்தியா தேசம் பிரிட்டனேடு நேசப்பான்மையாக இரு

க்கவே விரும்புகின்றது. இதை பிரிட்டிஷ் சர்க்காரும், கம்பெனிப் பிரதிநிதிகளும் நன்குணர்ந்துகொள்ளவேண்டும். அவர்களுடைய நடவடிக்கைகளும் இதற்குத் தகுந்தவாறாக இருத்தல்வேண்டும். வேறுவிதமாக இருந்தால் இந்தியாவிற்கும் பிரிட்டனுக்குமுள்ள நட்பிற்கு நிச்சயமாக பங்கமேற்படும். இந்தியப் பொது ஜனங்களின் சார்பாக இதை உங்களுக்கு வற்புறுத்திக் கூற விரும்புகின்றேன்".

என்று அவர் தெரிவித்தார்.

அதே வருட செப்டம்பர் மாதத்தில் ராம்மோகனருக்கு மற்றொரு புதிய கௌரவமும் கிடைத்தது. ஓர் நாள் பிரிட்டிஷ் மன்னரிடம் இந்தியப் பொதுஜனங்களின் பிரதிநிதி என்ற தோரணையில் அவர் அறிமுகம் செய்துவைக்கப்பட்டார். இந்தியாவில், அதிலும் பிராமண குலத்தில் பிறந்த ஒருவர், பிரிட்டிஷ் மன்னரை நேருக்கு நேராகச் சந்தித்தது இதுவே முதன்முறையாகும். இதோடு, அரசரின் பட்டாபிஷேகத்திற்கு விஜயம் செய்ய டெல்லிச் சக்கிரவர்த்தியின் தூதர் என்ற தோரணையில் ராம்மோகனருக்கு அழைப்பு அனுப்பப்பட்டதும் இங்கு குறிப்பிடத்தகுந்தது.

## விதவை விலோசனி.

(P. N.)

துப்பறியும் துரைராஜனும், அவனுடைய நண்பன் கிருஷ்ணமூர்த்தியும் ராயல் ஹோட்டலில் சிற்றுண்டி அருந்திவிட்டு வெளியே வந்தார்கள்.

துரைராஜ்:—கிருஷ்ணமூர்த்தி! நமக்கு முன்புறம் அமர்ந்து சிற்றுண்டி அருந்தினார்களே, அவர்கள் பேசிக் கொண்டதைக் கவனித்தாயா?

கிருஷ்ணன்:—நான் கவனிக்கவில்லையே! என்ன விசேடம்?

துரை:—டாக்டர் கமலநாதனுடைய கம்பவுண்டர் தூக்கிட்டுக் கொண்டு மாண்டுவிட்டானும்.

கிருஷ்ணன்:—எந்த இடத்தில்?

துரை.—கமலநாதனுடைய வீட்டுத் தோட்டத்திலுள்ள மருந்துசாலையிலாம். நாம் சென்று அதைப்பார்த்து விட்டுவரலாமா?

கிருஷ்ணன்:—அங்கு நமக் கென்னவேலை? வா போகலாம்.

துரை:—அப்படிச் சொல்லக்கூடாது. எதற்கும் பார்ப்போம் வா—என்றான் இருவரும் டாக்டர் கமலநாதனுடைய வீட்டையடைந்தார்கள்.

ஃ ஃ ஃ

டாக்டரின் வீட்டுத் தோட்டத்திலுள்ள மருந்து சாலையில்தான் அந்த கம்பவுண்டர் எப்பொழுதும் படுத்துக்கொள்வதாம். துரைராஜனும், கிருஷ்ணமூர்த்தியும், கம்பவுண்டரின் உடலைப்பார்த்துக் கொண்டே யிருந்தார்கள். அங்குவந்திருந்த மற்றையோர் இச்சம்பவத்தைக் குறித்து பற்பல விதமாகப் பேசிக் கொண்டார்கள். சிறிது நேரத்திற்குப் பின் துரைராஜனும் கிருஷ்ணமூர்த்தியும் வீட்டுக்குச் சென்றார்கள்.

ஃ ஃ ஃ

துரை:—கிருஷ்ணமூர்த்தி! கம்பவுண்டரின் மரணத்தைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?

கிருஷ்ணன்:—நினைப்பதென்ன? அங்கு சொன்னார்களே! அதுதான்.

துரைராஜன்:—என்ன?

கிருஷ்ணன்:—கம்பவுண்டர் ரொம்ப யோக்கியனும். டாக்டர் மருந்துசாலையிலிருந்த ஒரு முக்கியமான மருந்தைக்காணோமென்று கம்பவுண்டரைக் கேட்டாராம். இதுவரை சந்தேகியாத டாக்டர் தன் மீது சந்தேகப்பட்டதற்காக மிகவும் மனம் நொந்து அவன் தூக்கிட்டுக் கொண்டானும்.

துரை:—சரிதான் நீயும் இதை ஆமோதிக்கிறாயா?

கிருஷ்ணன்:—நீ வேறு நினைக்கிறாயா? உன்னுடைய அபிப்பிராய மென்ன?

துரை:—என்னுடைய அபிப்பிராயத்தை நாளைக் காலைவந்து

சொல்கிறேன்.நான் போய்வருகிறேன். என்று கூறிவிட்டுப் புறப் பட்டான்.

ஃ ஃ ஃ

மறுநாள் காலே. கிருஷ்ணமூர்த்தி போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்திருந்தான். துரைராஜன் அவனைத்தட்டி எழுப்ப வேண்டியதாகி விட்டது.

கிருஷ்ணன்:—துரைராஜ்! என்ன கண்டுபிடித்தாய்? அதைச் சொல்லு.

துரை:—சொல்கிறேன் கேள். டாக்டர் கமலநாதனுக்கு விலோசனி என்ற பெண் ஒருத்தி இருக்கிருள்.

கிருஷ்ணன்:—நான்கூட கேள்விப்பட்டிருக்கிறேன்.

துரை:– தெரியுமா? அவள் பாலிய விதவை. அவளுடைய எட்டாவது வயதிலேயே கணவனை இழந்தாள். இப்பொழுது விலோசனிக்கு 18 வயதிருக்கும். கம்பவுண்டர் கண்ணன் இருக்கிருனே அவன் ரொம்ப நல்லவன், பிரம்மச்சாரி. ஒரு நாள் டாக்டர் வெளியூருக்குப் போயிருந்தார். கம்பவுண்டர் மருந்து சாலையின் சாவியை எடுப்பதற்காக வீட்டிற்குள் சென்ருன். கண்ணனும் நல்ல அழகுவாய்ந்தவன்தான். உடல் இச்சை எல்லோருக்கும் பொதுவல்லவா? விதவை விலோசனி கண்ணனைக் கண்டதும் தன் இச்சையைத் தணித்துக்கொள்ள நினைத்ததில் தவறென்ன? விலோசனி கண்ணனை வற்புறுத்தியிருக்கிருள்.

கிருஷ்ணன்:– அவனும் ஒப்புக்கொண்டுவிட்டாஞ?

துரை:– சொல்கிறேன் கேள்! கண்ணன் ரொம்ப யோக்கியன் என்று முன்னமே சொன்னேனல்லவா? அவன் விலோசனியின் இஷ்டத்திற்கிணங்கவில்லை. மறுநாள் டாக்டர் வந்துசேர்ந்தார். கண்ணன் அவரிடம் நடந்ததைக் கூறி விலோசனியை யாருக்காவது மறுமணம் செய்துகொடுத்துவிடுமாறு கூறினான். டாக்டர் யோசித்தார். மறுமணம் செய்ய அவர் மனம் இடந்தரவில்லை. கண்ணன் இவ் விஷயத்தை வெளியில் தெரிவித்துவிட்டால் தனக்கு அவமானமாகிவிடுமெனப் பயந்தார். அதற்காக கண்ணனை வேலை முடித்துவிடுவதெனத் தீர்மானித்தார். நேற்றைய

இரவு டாக்டரும் கார் டிரைவரும் சேர்ந்துகொண்டு கண்ணனுடைய கழுத்தைப் பிடித்து நெரித்துக் கொன்று பின்பு தூக்கில் மாட்டி விட்டார்கள்.

கிருஷ்ணன்:— ஐயோ பாவம்! நீ எப்படி இதைக் கண்டுபிடித்தாய்?

துரை:— கண்ணனை நான் பரிசோதித்துப் பார்த்தேனல்லவா? அவனுடைய கழுத்தில் ஐந்து விரல்களின் நகங்களும் குத்தியிருப்பது போன்ற காயங்களும் தென்பட்டன. தூக்கில் மாட்டிக்கொண்டால் இப்படிப்பட்ட காயம் தென்படாதல்லவா? அப்பொழுதே எனக்கு சந்தேகந்தான். நேற்றைய இரவு கார் டிரைவருடைய வீட்டிற்குச் சென்று அவன் முன் துப்பாக்கியை நீட்டியவண்ணம் உண்மையைக் கூறிவிடும்படி கேட்டேன். அவன்தான் இவ் வுண்மைகளைக் கூறினன்.

கிருஷ்ணன்:— பார்த்தாயா? இந்தக் கொலை எதனல் நேர்ந்தது. மறுமணம் செய்யாததால்தானே? விதவைகளின் துயர் களையாமல் இந்துசமூகம் முன்னேறுவது பகற் கனவுதான். நாம் போகலாம் வா.

ஃ ஃ ஃ

கலாசாலை மாணவனை நாராயணன் மேற்கண்ட கதையை "அபிவிருத்தி" என்ற பத்திரிகையில் படித்து முடித்ததும் ஒரு பெருமூச்சு விட்டான். அவன் மனதில் என்ன எண்ணியிருப்பானென்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

---

## விதவையர்க்கு விமோசன மளிக்க!



புதுவை—R. S. ராஜலக்ஷிமி.

---

"வாழ்வதிலே மிகத் தாழ்வடைந்தேனே" என்ற மெட்டு

கண்ணிகள்

பாரத தேசநல் வீர சகோதரர்
பரிந்தெழுந்து மே வருவீர்
தருவீர் பெறுவீர்

ஆதாவின்றியே அபலை விதவையர்கள்
ஆருத்துயர் அகற்றிட
வருவீர் விரைவில் வருவீர் (பா)

தொகையறு

நாட்டினிலே விதவையர்கள் நலங்கருதியுழைத்திட
நயந்து வருவீர்கள் முன்னால்
வீட்டினிலே அடிமையாய்ப் பூட்டியே வைத்திடில்
விபரீதம் விளையும் பின்னால்

பாட்டு

சாதி சமூக சனாதன கொள்கையால்
சார்ந்திடுதே மிக தீது
வாது சூது
நீதியின்றிமிகநிக் தனைபேசியே
நிஷ்டூரம் கூறுகின்றாரே
பாரில் பெண்கள் நேரில் ( n)

தொகையறு

மனைவியிறந்தொருமாத மாகுமுன்பு கணவன்
மறுமணம் கொள்ள வில்லையோ
வினையினால் கணவன் விண்ணுலகடைந்திடில்
விசவையென ஒதுக்கல் முறையோ

பாட்டு

பாதகமாய் இளம் பதியிழந்த பாவைமேல்
பழியுரைத்திடல் நீதியோ
விதியோ சதியோ
நீத மறுமணம் நாடிலோ மனம்
நேர்மையடை வாரே தினம்
மகிழ்ச்சி இன்ப நிகழ்ச்சி

# மீனாட்சியின் துணிபு.

எஸ். அழகப்பா, இராயவரம்.

ஒரு நாள் மாலைப்பொழுதில் ஒரு மாடிவீட்டின் பின்பக்கத்து தோட்டத்தில், கிணற்றுக்கு சமீபத்திலிருந்த ஓர் மரத்தடியில் ஓரிளமங்கை தனியே உட்கார்ந்து தனக்குள் எதைப்பற்றியோ ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தாள். அவளின் முகம் கவலைக்குறியைக் காட்டியது. கண்களிலிருந்து நீர் பெருக்கெடுத்தோடியது. இடையிடையே தேம்பித் தேம்பி அழும் சப்தமும் கேட்டது. அவளுடம்பில் ஓர் தூய வெண்மையான புடவையைத் தவிர வேறு எவ்வித உடையும் நகையும் காணப்படவில்லை. அம்மங்கையின் வாயிலிருந்து சிறிது நேரத்திற்கு ஒரு தரம் "ஏ தெய்வமே! உனக்கு கண்ணில்லையா? எனது பருவகாலமெல்லாம் பாழாக்கவோ என்னைப் படைத்தாய்? என் தாய்தந்தையர்கள் இவ்விதக் கோலத்துடன் என்னை வைத்து அழகுபார்க்காமல் ஏதேனும் விஷத்தைப் போட்டுக் கொன்றுவிட்டால் எவ்வளவோ நன்மையாயிருக்குமன்றோ? சமூக கட்டுப்பாடாம்! பண்டைக்கால பழக்க வழக்கமாம்! என்னே! கொடுமை! ஓரிளம் பெண்ணின் கணவன் இளமையிலே அந்தகனுக்கு இரையானால் அப்பெண் சமூகக் கட்டுப்பாட்டுக்கும், ஆடவர்கள் செய்யும் கொடுமைகளுக்கும் உட்பட்டுக் கிடக்க வேண்டுமாம்? உயர்ந்த பட்டாடைகள் நகைகள் அணியக் கூடாதாம்! இயற்கையாய்க் கிடைக்கும் நறுமண மலர்களையும் செயற்கைப் பொருட்களையும் கொண்டு அழகுபடுத்திக் கொள்ளக் கூடாதாம்! முக்காடிட்டு மூலையிற் படுத்திருக்கவும், காலமெல்லாம் கண்ணீரும் கவலையுமாய்த் தள்ளவும், வீட்டு வேலை செய்துவரவும் சமூகச் சட்டம் கூறுகிறதாம்! இவ்விதப் பாழும் மூடப்பழக்க வழக்கங்கட்கும், சுதந்திரத்தைப் பறிக்கும் கட்டுப்பாட்டுக்கும், எத்தனை காலந்தான் என்போன்ற இளம் விதவைகள் கட்டுப்பட்டு எவ்வித சுகமுமின்றி பருவகாலத்தை யெல்லாம் பாழாக்கி நொந்து வெம்பி மனம் நொதித்து உள்ளுநாப் பொருமி உயிர்வாழ்வது? ஏ தெய்வமே! உனக்கு இது நீதியா? சமூகமே! உன் கருணையற்ற நடத்தையால் கன்னியர்களைக் கலங்கவைப்பது தருமமா? ஆடவர்களே! உங்களுடன் பிறந்த எங்களுக்கொரு நீதியும் உங்களுக்கொரு

நீதியும் எவ்விதத்தில் அடுக்கும்? எங்கள் கணவன் இறந்தால் நாங்கள் விதவையென்ற பட்டம் பெற்று இறுதிவரை எங்கள் வாழ்நாளெல்லாம் வீணாக்கி மடிவதும்; உங்கள் மனைவி இறந்தால் நீங்கள் புதுமாப்பிள்ளைக் கோலங் கொண்டு இன்ப சுகங்களை அனுபவிப்பதும் நியாயமாகுமா?" என்று பிதற்றிக் கொண்டிருந்தாள். அத்தோட்டத்திற்குப் பக்கத்து வீட்டின் மாடியில் ஓர் யுவன், காற்றுக்காக உலாத்திக் கொண்டிருந்தான். நல்ல கட்டழகும் சுமார் 17 வயது மதிக்கத்தக்கவனுமான அவ்வாலிபனின் கண்கள் பக்கத்துத் தோட்டத்திலிருந்த மங்கையை நோக்கியது. மங்கையும் வாலிபனை நோக்கினாள். இருவருள்ளத்திலும் ஓர் உணர்ச்சி தாக்கியது. இருவரும் ஒருவரையொருவர் நீண்டநேரம் பார்த்துக் கொண்டிருந்தனர். இப்படியே தினந்தோறும் இருவரும் முகதரிசனம் செய்து வரலானார்கள். இருவருள்ளத்திலும் தோன்றிய காதல் எனும் பயிர் வளர்ந்து வரலாயிற்று; வாய்திறந்து பேசவும், ஒருவர் விருப்பத்தை மற்றவரிடம் தெரிவிக்கவும் சமூகக் கட்டுப்பாடும், தாய் தந்தையர்களிடமுள்ள பயமும், ஊர்ஜனங்களின் தூற்றுதலும் குறுக்கே நின்றன.

இனி மங்கையையும் வாலிபனையும் பற்றிய விருத்தாந்தங்களைச் சொல்லிப் பின் கதையைத் தொடங்குவோம்.

சோமசுந்தரம் செட்டியாருக்கும் தெய்வானை ஆச்சிக்கும் பிறந்த மீனாட்சி என்ற பெண் தான் அம்மங்கை. மீனாட்சியின் தந்தை பெரிய செல்வந்தர். தனக்கு ஆண்மகவு இல்லாமையாலும், மீனாட்சி மட்டும் ஏகபுத்திரியாக இருந்ததாலும் மிகச் செல்வமாய் வளர்த்து, தக்க செல்வந்தரின் பையனுக்கு 12வது வயதில் பால்ய மணம் புரிந்து பார்த்து மகிழ்ந்த பனிரெண்டாவது மாதம் பையன் பெரியம்மை போட்டு பரலோகம் சென்றான். பெற்றோர்கள் பெருந்துக்கமடைந்தனர். சாதிச் சட்டப்படி மீனாட்சியின் தாலியறுத்தெறியப்பட்டது. வெள்ளைப்புடவை கொடுக்கப்பட்டது. நகை மஞ்சள் புஷ்பம் முதலிய சுமங்கிலியப் பொருள்கள் யாவும் பிடுங்கப்பட்டன. அது முதல் தாய்தந்தையர் வீட்டிலே காலங்கழிக்கலானாள். இப்பொழுது வயது 15 நிரம்பப் பெற்று பருவமடைந்து பன்மடங்கு அழகுடன் விளங்கினாள். மீனாட்சிக்கு சிறிது கல்வி

றிவுண்டு. எப்பொழுதும் தாய் தந்தையர்கட்கும் பிறருக்கும் தெரியாமல் பத்திரிகை—புத்தகங்களை வாசிப்பாள். பெரும்பாலும் சீர்திருத்த நூல்களையும் பத்திரிகைகளையும் வாசிப்பதில் மிகவும் அக்கறை செலுத்திவந்தாள். ஒருவருடனும் அதிகமாய்ப் பேசமாட்டாள். தன் விதியையும் விதவைக் கோலத்தையும் எண்ணி எண்ணிப் பெருமூச்சுவிட்டு வருந்துவாள். சில சமயங்களில் "தாய்தந்தையர்கட்குத் தெரியாமல் மறு ஊர் சென்று நமக்கு ஏற்ற ஓர் கணவனை மணந்து ஏன் வாழக்கூடாது?" என்று எண்ணுவாள். பின்னொரு சமயம் "இவ்வித விதவைக் கோலத்துடன் ஏன் உயிர்வாழ வேண்டும்" என்று நினைப்பாள். இவ்வித நிலையில் வேண்டா வெறுப்புடன் காலத்தைக் கடத்தி வந்தாள். இனி அந்த யுவன் யார்? அவனின் விருத்தாந்தங்களைச் சிறிது கூறுவோம்.

கந்தசாமி செட்டியாருக்கும் வள்ளியம்மை ஆச்சிக்கும் ஏக புத்திரனான சொக்கலிங்கமே அந்தயுவன். கந்தசாமி செட்டியாருக்கு ஒரு மாடி வீடும், கொஞ்சம் நிலமும் 5000 ரூபாய் ரொக்கப் பணமுந் தானுண்டு. பரம்பரையாக கௌரவமாய் வாழ்ந்து வரும் குடும்பங்களில் ஒன்று அவரின் குடும்பம். கந்தசாமி செட்டியார் சொக்கலிங்கத்திடம் பேரன்பு பூண்டவர். சொக்கலிங்கத்தை தமிழ், ஆங்கிலம் முதலியவைகளில் நன்கு தேர்ச்சிபெற வைத்திருந்தார். சொக்கலிங்கமும் தன் தாய்தந்தையர் சொற்கடவாமல் படிப்பதிலும் ஆராய்ச்சி செய்வதிலும் நன்கு தேர்ச்சிபெற்று விளங்கினான். பெண் மார்க்கெட்டின் நிலை உயர்ந்திருந்ததால் சொக்கலிங்கத்திற்கு மணம் செய்யமுடியவில்லை. இதனால் தாய் தந்தையர் மிகுந்த கவலையிலாழ்ந்திருந்தனர். சொக்கலிங்கம் அடிக்கடி தாய் தந்தையர்கட்கு சமாதானம் சொல்லி வருவது வழக்கம். அதனால் அவர்கள் சிறிது சாந்தியடைந்திருந்தனர். சொக்கலிங்கம் சமூக சீர்திருத்தத்தில் மிகவும் ஆர்வங் கொண்டவன். அடிக்கடி சீர்திருத்த பிரஸங்கங்கள் கேட்டுவருவான். பத்திரிகைகட்கு சீர்திருத்தம் பற்றிய கட்டுரைகள் எழுதிவருவான். தான் விவாகம் செய்து கொண்டால் சீர்திருத்த மணமோ அல்லது விதவை மணமோ செய்து கொள்வதென்ற ஓர் உறுதியுடனிருந்தான். அதை தாய்தந்தையரிடம் தெரிவிப்பதிற் பயனில்லை யென்றும் காலத்தானே யாவும் முடிவு பெறும்

என்ற பூர்ண நம்பிக்கையுடன் இருந்து வந்தான். இனிக் கதையைத் தொடர்வோம்.

இளங் காதலரிருவர் உள்ளத்திலும் முளைத்த காதல் பயிர் நன்கு வேரூன்றிவிட்டது. ஓர் நாள் சொக்கலிங்கம் மாடிமீது நின்றிருந்தான். மீனாட்சி தோட்டத்துக் கேணியில் சட்டிமுட்டிகளைத் துலக்கிக்கொண்டிருந்தாள். அத்தருணத்தில் இருவர் கண்களும் நோக்கின. சொக்கலிங்கம் கரத்திலிருந்து ஓர் கடிதம் கீழே விழுந்தது. மீனாட்சி துரிதமாய்க் கடிதம் விழுந்த இடம் சென்று எடுத்து சமையலறையை நோக்கிச் சென்றாள். இவைகளைக் கண்ணிமை கொட்டாமல் பக்கத்து வீட்டு ஜன்னலில் ஒருருவம் பார்த்துக் கொண்டிருந்ததை பாவம் காதலர்கள் அறியவில்லை. சமையலறை சென்ற மீனாட்சி பரபரப்புடனும் ஆனந்த ஆவேசத்துடனும் சுற்று முற்றும் பார்த்துக்கொண்டு கடிதத்தைப் பிரித்துப் படிக்கலானாள். அதில் அடியிற்கண்ட விஷயங்கள் எழுதப்பட்டிருந்தன.

என் அன்புள்ள மீனாட்சிக்கு,

நாமிருவரும் பல நாட்களாக ஒருவரையொருவர் சந்தித்து வருகிறோம். ஆனால் என் கருத்தை வெளியிட சந்தர்ப்பமில்லை. இதைப்போல்தான் நீயும் சந்தர்ப்பமின்றி தயங்குகிறாய் என்று உன் முகத்திலிருந்து யூகித்துக்கொண்டேன். நீ என்மீது காதல்கொண்டிருப்பதை உனது பார்வையிலிருந்து உணர்ந்துகொண்டேன். நாமிருவரும் பகிரங்கமாய் மணம்செய்துகொள்ள நமது சமூகமும் தாய்தந்தையர்களும் இடங்கொடுக்கமாட்டார்கள். ஆதலால் எனக்கொரு யுக்தி தோன்றுகிறது, உன் சம்மதத்தை தெரிவித்தால் பின்பு தெரிவிக்கிறேன். ஒருகால் நீ என்னை விரும்பவில்லை, என்றால் தயவுசெய்து இதிற்கண்ட விஷயத்தை மறந்து என்னை மன்னித்துவிடு. இக் கடிதத்தைக் கிழித்துப் போட்டுவிடுவாயாக!

இப்படிக்கு,
சொக்கலிங்கம்,
11—1—30.

கடிதத்தை முழுதும் படித்த மீனாட்சிக்கு அளவற்ற மகிழ்ச்சியுண்டாகியது. தேடிச் சென்ற பொருள் காலில் தட்டியதுபோல்

எண்ணினாள். முன்னிலும் பன்மடங்கு காதல் வெள்ளம் கரை புரண்டோடியது. கடிதத்தைப் பல முறை படித்துப் பார்த்தாள். அநேக முத்தங்கள் கடிதத்திற்கு ஈந்தாள். அவளின் பருவகால உணர்ச்சிக்கும் உண்மைக் காதலுக்கும் முன்னால் தாய்தந்தையர்களின் பயமும், சமூகக் கட்டுப்பாடும், தான் விதவை என்ற எண்ணமும் தலையெடுக்கவில்லை. அவளின் குற்றமற்ற கபடமற்ற மனம் 'மறுமணம் செய்து கொள்வதே சரி' எனக்கூறியது. சொக்கலிங்கத்தைப்பற்றி ஏற்கனவே அறிந்திருந்தமையால் அவரே தனக்கு ஏற்ற நாயகன் என்று நிச்சயித்துக் கொண்டாள். கடிதத்திற் கண்டபடி பதில் எழுத மனம் தூண்டியது. கரம் விரைந்தது. தன் சம்மதத்தைத் தெரிவித்து அடியிற்கண்ட கடிதத்தை எழுதி முடித்தாள்.

அன்பார்ந்த காதல,

வணக்கம். தங்கள் கடிதத்திற் கண்ட விஷயங்கள் யாவையும் படித்து விட்டுக் கிழித்தெறிந்து விட்டேன். தங்களைக் கண்டது முதல் தங்களையே எனது ஆருயிர் நாயகனைக் கொள்ளத் தீர்மானித்து விட்டேன். எனது சம்மதத்தைக் கேட்க வேண்டாம். நாமிருவரும் ஏகோபித்து இன்ப வாழ்க்கையை நடாத்த தடங்கலாயிருக்கும் சமூகக் கட்டுப்பாடு தாய் தந்தையரின் அடக்குமுறை இவைகளை ஒழித்து விடுதலை பெற மார்க்கம் கூறுங்கள். அதன்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன். எவ்வித இடர்வரினும் அஞ்சேன் என்பது உறுதி. தங்களின் அன்பான பதிலை ஆவலுடன் எதிர்பார்க்கும்

ஆருயிர்க் காதலி,

மீனாட்சி,
11—1—30.

கடிதத்துடன் ஒரு சிறுகல்லைக் கட்டி மாடிமீது வீசினாள். கடிதம் சொக்கலிங்கத்தின் கரம் சேர்ந்தது. அவசரம் அவசரமாய்ப் பிரித்துப் பார்த்தான். ஒவ்வொரு அட்சரமாகப் படித்தான். ஆனந்தக் கடலில் மூழ்கினான். தனது சமூகத்தை சபித்தான். ஜாதியின் கொடுமைகளை எண்ணி நொந்தான். பழக்க—வழக்கங்கள் எனும் பேய் எதிரில் நின்றிருந்தால் அதன் உயிரைக் கொன்று உடலை

சின்னுபின்னப்படுத்தி யிருப்பான். விதவை சகோதரிகளின் நிலை யைக் கண்டு கண்ணீர் விடுத்தான். கீழ்நோக்கிப் பக்கத்து தோட்டத்தைப் பார்த்தான். மீனுட்சியைக் காணவில்லை. உடனே விரைந்து கீழே போய் அடியிற்கண்ட கடிதத்தை எழுதினுன்.

அன்புள்ள காதலி மீனுட்சிக்கு,

உன் கடிதம் கிடைத்தது. உனது அன்புக்கும் அறிவுக்கும் மகிழ்கிறேன். எல்லாம் வல்ல இறையருளால் நமது எண்ணம் பூர்த்தியாகும் என்பதில் சந்தேகம் வேண்டாம். நாமிருவரும் எக்கஷ்டமுமின்றி மணம் செய்து கொண்டு வாழ்க்கையை இன்பமாய்க் கழிக்க எனக்கு ஒருயுக்தி தோன்றுகிறது. நாளை இரவு 8 மணிக்கு ஒரு பட்டுப் புடவையுடன் இத்தெருத் கோடியில் நிற்கும் ஓர் மாத்தடிக்குவந்து சேருவாயாகில் நான் அங்கு உன் வருகையை எதிர்பார்த்து நிற்கிறேன். இருவரும் அங்கிருந்து 200 மைலுக் கப்பாலுள்ள கலிங்கபுரம் சென்று மணமுடித்துக் கொண்டு சுகமாக வாழ்ந்திருக்கலாம்; அதைத்தவிர எனக்கு வேறுவழி தோன்றவில்லை! உனக்குத் தோன்றினுல் எழுது; அதன்படி நடப்போம்.

இங்ஙனம்,
உன் அன்புள்ள காதலன்,
சொக்கலிங்கம்,
12—1—30.

எழுதி முடித்த கடிதத்தை அன்று மாலை மீனுட்சியிடம் சேர்த்தான். பதிலுக்காக எதிர்பார்த்தான். பதில் கிடைக்காததினுல் அதின்படி நடக்க ஒப்பிவிட்டாள், என்ற தீர்மானத்துடன் பிரயாணத்திற்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்யலானுன். கடிதத்தைப் பெற்ற மீனுட்சி ஒன்றும் தோன்ருதவளாய் மனக் கலக்கத்துடன் யோசித்து ஓர் முடிவுக்கு வந்தாள். என்ன நேரினும் சரி, எத்துணை அபவாதங்கள் வந்தாலும் சரி என்ற ஒரே துணிவாய் தன் தந்தையின் பெட்டியைத் திறந்து சில பட்டுப்புடவைகள், நகைகள், 500 ரூபாய்கள் ரொக்கப் பணம் இவைகளைமட்டும் எடுத்து ஒரு இடத்தில் மறைத்து வைத்து மறுநாள் பொழுது எப்பொழுது போகும் என்று ஏங்கி எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். முதன் முதலில்

சொக்கலிங்கம் கடிதத்தைப் போடும் பொழுது ஓர் உருவம் பார்த்துக் கொண்டிருந்ததல்லவா? அது மீனுட்சியின் தாய் தந்தையரிடம் கோள்பற்றவைத்தும் தாய் தந்தையர் நம்பாமல், அவ்வுருவங் கொண்ட கிழவியை வாயில்வந்தபடி வைது திருப்பிவிட்டமையால் அது வெளிக்கு வரவில்லை. நிற்க மீனுட்சி ஒரு கடிதம் எழுதி அதில் தான் எடுத்துப் போன பொருட்களை விளக்கியும் தனது பருவகாலத்தைப் பாழாக்காது தனக்கேற்ற நாயகனை யடைந்து வாழப்போகிறேனென்றும், என்னை வீணில் தேடுவதற்கு பிரயத்தனப்பட வேண்டாமென்றும் குறித்து வைத்து, சரியாக 8 மணிக்கு எல்லோரும் படுக்கைக்குப் போனவுடன் மெதுவாக மறைத்து வைத்திருந்த சாமான்களை எடுத்துக் கொண்டு சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு கடிதத்திற் குறிப்பிட்ட இடம் நோக்கி விரைந்து சென்ருள்.

சொக்கலிங்கம் தன் தாய் தந்தையர்கட்கு ஒரு கடிதம் எழுதி வைத்து விட்டு, ரொக்கப் பணமிருந்ததை எடுத்துக் கொண்டு ஓர் மோட்டார் வாகனத்துடன் குறிப்பிட்ட மரத்தடியில் மீனுட்சியின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். மீனுட்சி வந்து சேர்ந்ததும் இருவரும் காரில் ஏறிக்கொண்டனர். காரை சொக்கலிங்கமே செலுத்திக் கொண்டு போனுன். காதலரிருவரும் கருத்தொருமித்துக் களிப்புடன் சம்பாஷித்துக் கொண்டு ஆனந்தக் கடலில் மூழ்கியவர்களாய்ச் சென்று கொண்டிருந்தனர். கார் ஓர் புகைவண்டி நிலயத்தை அணுகியதும் இருவரும் காரை காட்டிற்குள் ஓர் மறைவான இடத்தில் நிறுத்திவிட்டு, கனவேகமாய் நடந்து புகைவண்டி நிலயமடைந்து பிரயாணச் சீட்டுப்பெற்று, புகைவண்டி ஏறி மறுநாட் பகல் கலிங்கபுரம் அடைந்தனர். அங்கு ஓர் வீட்டை வாடகைக்கு அமர்த்திக் கொண்டிருந்தனர். ஒரு சுப முகூர்த்தத்தில் விடுதலை பெற்ற காதலர்களிருவரும் காதல் மணம் புரிந்து கொண்டனர். கையிற் கொண்டுவந்த ரொக்கப்பணத்தைக் கொண்டு வியாபாரத்துறையிலிறங்கி, அதனுல் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு தங்களின் வாழ்க்கையை இன்பமாயும், புனிதமாயும் கருத்தொருமித்துக் கழித்து வாலானுர்கள்.

பல ஆண்டுகள் சென்றன. காதல் மணம் புரிந்து கொண்ட

கண்ணியர்களைத் தேடித் தேடிக் காணுமல் அதே விசாரமாய் அவர்களின் தாய் தந்தையர் காலஞ்சென்று விட்டனர். இவ்விஷயம் சில நாட்களுக்குப் பின்னர் எவ்விதமாகவோ சொக்கலிங்கம்—மீனுட்சிக்கு எட்டியது. இருவரும் தங்களின் இரு குழந்தைகளுடன் புறப்பட்டு தங்கள் வீடுவந்து சேர்ந்து, இரண்டு வீட்டுக்கும் சொத்துக்களுக்கும் எஜமானர்களாய்ச் சகல செல்வ போகங்களையும் அனுபவித்து இனிது வாழ்ந்திருந்தனர். இவர்களை சமூகம் என்ன செய்ய முடியும்? இதைப்போன்ற காதல் மணம்—மறுமணம் பெருகு நாள் எந்நாளோ? அன்றே நமக்கு நன்னுளாகும்!

## எல்லாம் தலைவிதியா?

எஸ். சோக்கநாதபுரம், சி. சோம. கண்ணப்பா எழுதுவது.

நமது நாட்டுமக்கள் எடுப்பதற்கெல்லாம் தலைவிதி, தலைவிதி, எனக் கூறுகிருர்கள். நம்மால் ஆகக்கூடிய காரியம் ஒன்றுமில்லையாம், எல்லாம் அவன் செயலால் தான் நடந்து வருகிறதாம். முற்காலத்திய ஓர் புலவரும் "அவனன்றி ஓரணுவும் அசையாதெனும் பெரிய ஆப்தமொழி யொன்று கண்டா" யெனக் கூறிப் போந்திருக்கிருர். இவரின் போக்கை யென்னென்றுரைப்பது? சோம்பேறித்தனத்தைக் கையாண்டு பிறருக்கும் இவ்வித போதனையைப் போதித்ததினுலன்ருே இன்றும் நம் நாட்டில் இவ்வித மூடத்தனம் தாண்டவமாடி வருகிறது. தலைவிதி என்று சொல்லி ஒருவன் முட்டக்கூடிய மாட்டின் கிட்டப்போனுல் அது இவனது மூட்டாள்தனமா? அல்லது தலைவிதியா வென்று கேட்கிறேன். இது போன்றே நமது நாட்டில் ஓர் கிழட்டு மாப்பிள்ளைக்கு இளம் பெண்ணை மணமுடித்து விடுகிருர்கள். அவன் வியாதியால் பீடிக்கப் பட்டிருந்தாலும், அல்லது வயது முதிர்ந்து நரையெய்தினும் அவசியமில்லை. நமக்குப் பணந்தான் குறியெனக் கொண்டு அனைத்தும் ஆண்டவன் செயல், எல்லாம் விதிப்படிதான் நடக்குமென்று பெண்ணிற்குத் தாய் தகப்பன் சொல்லி விடுகிருர்கள். இருட்டில் விளக்குக் கொண்டுபோயும் கிணற்றில் விழுந்ததற் கொப்பப் பகுத்தறிவு

என்னும் விளக்கு இருந்தும், அறியாமை என்னும் கிணற்றில் விழுந்து விடுகிறார்கள். என்னே இவரின் மதியீனம்! இதற்குக்கூடவா தலைவிதி என்னும் பைசாசம் நுழைந்து கொண்டிருக்கிறது. இப் பைசாசம்—இத்தலைவிதி நமது நாட்டிற்கு மட்டுமா? அல்லது உலகமக்கள் எல்லோருக்கும் உண்டா? அப்படி உலகமக்களெல்லோருக்கும் இந்தத் தலைவிதி உண்டென்று சொன்னால், பிற நாட்டினர் ஏன் அதை அநுஷ்டிக்கின்றார்களில்லை. அந்நாடுகளில் ஒரு பெண் தக்க பருவம் வாய்ந்தபின்னர் அவளே ஒரு கணவனைத் தெரிந்தெடுத்து இருவர் மனமும் ஒன்றி மணம் செய்து கொள்ளுகிறார்கள் அதனாலன்றோ அங்கு பரஸ்பர ஒற்றுமை யேற்படுகிறது! கணவனிறந்தாலும் வேறு கணவனைத் தெரிந்தெடுத்து அவளுக்கியைந்தவனை மணஞ்செய்து கொள்ளுகிறாள். நமது நாட்டிலோ சில ஜாதிகளில் பருவமடையு முன்னரே பெண்ணை மணஞ்செய்து விடுகிறார்கள். சில ஜாதிகளில் பணக்காரராயிருந்தால் பெண்ணை சிறு பிராயத்திலேயே விவாகம் செய்து விடுகிறார்கள். சிலர் பெண் பருவடைந்த பின் செய்கிறார்கள். ஆனால் பெண் அபேக்ஷையை விரும்பி அவள் விரும்பிய கணவனுக்கு மணஞ்செய்து கொடுக்கும் வழக்கமில்லை. தாய் தகப்பன் இஷ்டத்திற்கு ஒருவனுக்கு அப்பெண்ணை மணஞ்செய்து விடுகிறார்கள். அக்கணவன் அப் பெண்ணிற் கியைந்தவனாயிருந்தாலும் இல்லாவிட்டாலும் அவசியமில்லை யென்று தாய் தகப்பன் கருதுகிறார்கள். இது பெருந்தவறாகும். இதனாலன்றோ கணவன் மனைவியருள் பரஸ்பர ஒற்றுமையில்லாது நாயும் பூனையும் அடித்துக் கொள்வது போல் சண்டை யிடுகிறார்கள், இருவரும் ஒருவர்க் கொருவர் காதலிக்காததன்றோ இதற்குக் காரணம்?

விவாகரத்து நமது நாட்டிலும் அநுமதிக்கப்பட்டிருந்தால் தாய் தகப்பன் இஷ்டத்திற்கு நம்மை ஒருவருக்கு விவாகம் செய்து கொடுத்தாலும் அவர் நம்முடன் ஒன்றி நடந்தால் சரி; இல்லையேல் விவாகரத்து செய்து கொள்ளலாமென பெண் இறும்பூதெய்துதல் கூடும்; இது அப்படியல்ல, எந்தக் கணவனுக்கு மணம் செய்விக்கிறார்களோ அவ்வலையிலே சிக்குண்டு மாளவேண்டியது தான். அவன் பேய்போன்று அடித்தாலும் மிதித்தாலும் எதிர்பேசாதிருக்க வேண்டுமாம். கல்லென்றாலும் கணவனும், புல்லென்றாலும் புருட

ணும், தாய்தகப்பன் கல்லிற்கோ மரத்திற்கோ அவளை மணஞ் செய்வித்தாலும் அவ்வண்ணமே பேசாதிருத்தல் வேண்டுமாம். கணவனை இழந்த பெண்டிர் மறுமணம் செய்து கொள்ளலாகாதாம்; அவளின் வாழ்க்கை அத்துடன் தொலைந்து விட்டதாம்; அவளைக் கண்டாலும் சகுனத்தடையாம், ஆனால் மனைவியை இழந்த புருடனைக் கண்டால் சகுனத்தடையில்லையாம், அவர்கள் எத்தனை பெண்ணை வேண்டுமானாலும் மணஞ் செய்து கொள்ளலாமாம். என்னே ஆண்மக்களின் சுயநலம்! சகோதரர்களே! வெள்ளையர்கள் நம்மை வேற்றுமையாக நினைப்பது போல் பெண்மக்களை யெண்ணல்தகாது! நம் உடன்பிறந்த—நமது சகோதர விதவைகள் படுந் துயரம் அறியாது அவர்களை ஒதுக்கி அவர்கள் தலைவிதி யென்று சொல்லாது அவர்கள் துயர் களைய முனையுங்கள்! விதவையர் மறுமணம் செய்ய வேண்டியவசியம். இன்றே எழுங்கள்!

---

## நான்கண்ட காதல் மங்கை.

கிள்ளுப்போட்டு.

---

தனவணிகர் நாட்டில் தலைநகரமாக விளங்கும் கீழச்சிவல்பட்டி என்ற நகரில் நான்பிறந்தவன். எனக்கோ இப்பொழுதுபிராயம்இருபது தான் எனினும் பருவ உரிமையான காதல் உணர்ச்சி என் உடற்கட்டைப் பாதித்துப் பாழ் படுத்திற்றென்பதை நேயர்கட்கு இயம்பாது யிருக்க இயலவில்லை. பருவகாலம் நெருங்கினால் உள்ளத்தில் காதல் கடுகி வளரும் என்பதை நீங்கள் அறிந்திருக்கலாம்.

அந்தியின் சாயைவிழ ஆரம்பித்துவிட்டது. கதிரவன் தன் பாந்த கிரணங்களை நாலா திசைகளிலும் பரப்பிப் பிரகாசித்த வண்ணம் குடதிசையை நோக்கி விரைந்து போய்க்கொண்டிருந்தான். கீழச்சிவல்பட்டி வடபாரிசத்திலுள்ள அழகிய பூங்காவனத்தில் ஜாதி புஷ்பங்கள் பல பூத்து-மலர்ந்து-பாங்குறச் செழித்துப் பார்ப்போர் மனதைக் கவர்ந்து அருகில் வா வா வென்றழைப்பதைப் போல் தென்றல் காற்றால் நறுமண மலர்கள் தன் ரம்மியமான வாசனையை மக்களின் நாசியுள் பரிவுடன் புகுத்தி உள்ளத்தைக்

கொள்ளை கொண்டன. இனிய மாலை நேரத்தில் அம்மலர் வனத்தின் மத்தியில் நாற் சதுரமுள்ள பளிங்காசனத்தில் அமர்ந்து கொண்டு எனக்கு வாய்க்கும் மனையாள் எக்குலத்தில் எப்பேர்ப்பட்டவளாய் இருப்பாளோ வென்று யோசித்துக்கொண்டிருந்தேன். என் மனதிற் கொன்றும் புலப்படாமற் போகவே அன்று வந்த "மாதர் மறுமண" இதழை ஆவலுடன் எடுத்து அதிலுள்ள அழகிய சீர்திருத்தக் கட்டுரைகளை உற்றுப் படித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு இளநங்கை பதினெட்டு ஆண்டைக் கடந்த பருவ மங்கை என் எதிரில் இருந்த கார்டன் பெஞ்சியில் வந்து அமர்ந்தாள்.

நண்பர்களே! ஒரு இடத்தில் யௌவனமான வாலிபன் தனித்திருக்கும்போது ஒரு அழகிய பருவ மங்கை வந்து உட்காருவதென்றால் யார்தான் திகைக்க மாட்டார்கள். நான் திகைத்துப் போனேன். எனக்கு மிக வெட்கமாக இருந்தது. உடனே கையில் இருந்த பத்திரிகையைப் படிக்கத் தொடங்கினேன். ஆனால் பத்திரிகையில் கண் இருந்தால் தானே? மனது அப்பெண்ணின் முகத்தைப் பார்த்து சித்திரமெழுதத் தொடங்கிவிட்டது. ஓவியக் கலைஞரான ரவிவர்மா கூட இப்பெண்ணைப் பார்த்து சித்திரம் எழுதுவதென்றால் சற்று திகைப்பாரென்று நிச்சயமாய்க் கூறுவேன். அப்படிப்பட்ட சித்திராங்கியின் சித்திரத்தை என் மனத்துள் புகைப்படம் எடுத்தாற் போன்று பதிய வைத்துவிட்டேன்.

ஆனால் அந்நங்கையைக் கூர்ந்து ஆராயும் தன்மையுடன் அவளை நோக்கினால், சிற்சில சந்தேகங்கள் தோற்றா நிற்கும். அம்மங்கை நல்ல அந்தஸ்துள்ள குடும்பத்தில் பிறந்து செல்வமாக வளர்ந்து அருமையாகப் பாராட்டப்பட்டதற்கு அறிகுறிகள் உடம்பில் காணப்படுகின்றன. ஆடவர் இருதயத்தை அள்ளி விழுங்குந்தோற்றம், அழகு ஆரோக்யம் அங்க அமைப்பு நேர்மை முதலியன அவளுக்கு அமைந்த அணிகள் என்னலாம். வளம்பெற்ற பூஞ் செடிபோலத் தோன்றினாள். என்னைக் கேட்டால் அவளை ஒரு நன்கு கனிந்த கனியெனவும் அருந்தப்படும் நாளை அவள் வசிகாம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது என்றும் கூறுவேன். அவள் பாதி நெற்றியை மறைத்திருக்கும் கேசத்தை வாரிப் பின்னி சுகந்த ரோஜா மலர்

களால் அலங்கரித்துக்கொண்டிருந்தாள். அவளை செயற்கை அழகுகள் அழகு செய்யவில்லையாயினும் அவளுக்குள்ள இயற்கையெழிலே அழகாய் அமைந்திருந்ததை நோக்குங்கால் அவள் எனதுஎளிய வாழ்க்கைக்குப் பொருத்தமென்றே தோன்றிற்று. நான் அம்மங்கையிடம் எவ்விதம் பேசுவது என்று தோன்றாமல் இருக்கவே கற்சிலைபோல் வாளாவிருக்க நேர்ந்தது. அந்தக் காதல் மங்கை என்போன்று மிகுந்த மயக்கங் கொள்ளாது விரைந்து, "நண்பரே அது என்ன பத்திரிகையோ?' என வினவினள். அப் பெண்ணின் வாயிலிருந்து வந்த வார்த்தைக்கு அப்பொழுது நான் அடைந்த சந்தோஷத்தை அளவிட முடியாது. அப்பொழுது எனக்கு சற்று தைரியம் ஏற்பட்டதும், "இது காரைக்குடி "மாதர் மறுமண" சகாய சங்கத்தாரால் வெளியிடப்படும் "மாதர் மறுமண" சீர்திருத்தப் பத்திரிகை என்னும் இப் பத்திரிகை கணவனை இழந்த விதவைகளுக்கு மறுமணம் செய்யப் பாடுபடும் மாத சஞ்சிகை" என்று சொல்லி அவள் கரத்தில் கொடுத்து, "பெண்ணே! இச் சிங்காரப் பூஞ்சோலையில் காதலர்கள் பலர் ஜோடி ஜோடியாக உலாவி இன்ப சுகம் நுகரும் பாக்கியம் பெற்றவர்களாய் இருக்கிறார்களே! நீ தனியாக வந்திருப்பதன் காரணமென்ன?" என்று கூறியவண்ணம் அம் மங்கையின் கழுத்தைப் பார்ப்போமென்று சற்று நிமிர்ந்தேன். என்னுடைய கண்கள் கண்டது என்ன? மெல்லிய இரண்டு வடச் சங்கிலியே! வேறொன்றுமில்லை. அப்பொழுது தான் என் மனது ஒருவாறு ஆறுதலடைந்தது. உடனே அம் மங்கையை நோக்கி உனக்கு தி....ரு....ம....ண....மா....கி விட்டதா என்ற வார்த்தை என்னையும் அறியாமல் வாயிலிருந்து வந்து விட்டது. அந்தச் சமயத்தில் அவசரமாக வந்த எனது தோழன் V. K. அப்பன் 'என்னடா உளறிக்கொண்டிருக்கிறாய். இன்றைக்கு டென்னிஸ் ஆடவரவில்லையா மணி 7½ மணி ஆய்விட்டதே' என்ற சொற்கள் என் காதில் விழுந்தன. திடுக்கிட்டு எழுந்திருந்தேன்! அப்பொழுதுதான் நான் கண்டது யாவும் கனவென உணர்ந்து வெட்கித் தலைகுனிந்தேன். பின்பு நடந்த யாவற்றையும் நண்பரிடம் ஒன்றுவிடாமல் சொன்னேன். V. K. அப்பன் கனவில் கண்ட காதல் மங்கை வாய்ப்பாளாவென்று வினயமாய்க் கேட்டார்.

அதுதான் சந்தேகம் என்று சொல்லிக் கொண்ட வண்ணம் டென்னிஸ் கோர்ட்டுக்கு சென்றோம்.

வாசகர்களே! கனவில் கண்ட காதல் மங்கை வாய்த்தால் நண்பர்களாகிய உங்களுக்கு திருமண அழைப்பு அனுப்புகிறேன்.

---

# விதவையர் துயரம்.

சிங்கை, T. V. வைத்திலிங்கம்.

(நோண்டிச் சிந்து)

பார்க்க பரிதாபமே—நம்
பால்ய விதவைகள் படுந்துயரமே (பா)

(1) கணவன் தனைப் பிரிந்தே—இளம்
கைம்பெண் படுந்துயர் தன்னை நினைந்திடில்
தினமும் மனமுருகும்—அதை
சிந்தனை செய்துமே போக்கு வாரில்லையே (பா)

(2) பாழும் வைதீகர்கள்—செய்யும்
பாவத்தை என்னென்று நாவாலுரைப்பது
வாழும் சோதரிகள்—இன்ப
வாழ்க்கையைக் கெடுத்துமே பாழ்படச்செய்குளூர் (பா)

(3) சற்று நினைத்திடிலோ—இந்து
சமூகத்தின் கொடுமையை என்னென்றுரைப்போம்
முற்றும் துறந்து நின்ற—மகா
முனிவருக்கும் மோக முண்டென்று சொல்கிறார் (பா)

(4) பச்சை இளம் பாவை—வயது
பத்துக் கிரண்டு குறைந்திடுவோர்க்கு
இச்சைகள் இருந்திடாதோ—இதை
இந்து சமூகத்தார் ஏனோ தெரிந்திலர் (பா)

(5) புருஷனின் சுகமறியா—இளம்
பூவைகள் தன்னை விதவைகளென்றுமே

வருஷங்கள் பலவும் வீட்டில்—வைத்து
வாட்டி வதைப்பது நம் நாட்டிற்கடுக்குமோ? (பா)

(6) உண்மை அறிந்திடுவீர்—வைதீக
ஊழல்கள் தன்னை ஆழ்ந்திடத்தள்ளியே
நன்மைகள் செய்திடுவீர்—கைம்பெண்
நங்கையர் மறுமணம் எங்கும் புகழ்பெற (பா)

(7) நேசமாய் நீங்கள்பெற்ற—மகள்
நெடுங்காலம் வாழ்ந்திட—வேண்டுமென்றே
நாசம் பல செய்து—அந்த
நங்கையின் வாழ்க்கையை பங்கப்படுத்துறீர் (பா)

(8) கொண்டவன் இறந்தா னென்றே—இளம்
கோதையின் இன்பத்தை வாதனையாக்குறீர்
கண்டவர் சிரிக்கின்றார்—இந்த
கண்றாவி வேறெங்கும் காண்பதற் கில்லையே (பா)

(9) மனைவி இறந்திடிலோ—புருஷன்
மறுமணம் செய்து மகிழ்ந்திருக்கும் போது
கணவனை இழந்தபெண்கள்—வேறு
காதலன் தன்னை மணக்க மறுப்பதேன்? (பா)

(10) மாதர் தம் துயர்போக்க—வந்த
மாதர் மறுமண சகாய சபைதனை
ஆதரிக்க வருவீர்—இந்த
அவனியிலுள்ள அனைவரும் ஒன்றாக (பா)

---

**மனைவி இறந்தால் ... ...**
**... ... விதவையைக் கொள்.**

# இளைஞர்களே! எழுமின்!!

ப. நீ.

"பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமையில்லை" என்றார் பாரதியார். இதைக் கேட்பது யார்? பழங் கதைகள் பேசிப் பேசித்தான் நம்நாடு இந்த நிலைமையை அடைந்ததென்று சொன்னால் அது மிகையாகாது. "வீரன் ஆண்ட நாடு. வீரர்கள் மலிந்த நாடு. தர்ம சீலர்கள் வாழ்ந்த நாடு. மண்ணையும், பொன்னையும், ஏன், பெண்ணையும்கூட பிறருக்கு அளிக்கும் அவ்வளவு தர்ம சிந்தையில் உயர்ந்தோர் வாழ்ந்த நாடு" என்று சொல்லப்படுகிறது. ஆம்! அப்படிச் சொல்லும்போதே இன்றைய நிலைமையையும் ஏன் யோசிக்கக்கூடாது?

தர்ம சிந்தனை மிக மிக உயர்ந்த நிலையில் இருந்ததெனக் கூறப்படும் இந்த இந்து சமூகத்தில் இன்றையதினம் அதர்மமான காரியம் உச்சஸ்தானத்தை அடைந்துவிட்டது. அதன் பயனாகத்தான் நாம் பிறநாட்டாரைவிட இவ்வளவு பிற்போக்கான நிலைமையிலிருக்கிறோம்.

ஃ ஃ ஃ

உதவியற்ற வழிப்போக்கனை நையப் புடைத்து விடுவது சாமர்த்தியமான செய்கையா? வீரத்தனமா? இது தர்மமா? இந்த தான்றோன்றித் தனமான செய்கை நமக்கு எவ்வளவு வெறுப்பைத் தருகிறது. இதைப்போன்ற—ஏன் இதைவிடக் கொடுமையான செய்கை தர்மத்தில் தலைசிறந்தது என்று பறைசாற்றப்படும் இந்த நாட்டில்—நடந்துகொண்டு வருகிறது. வழிப்போக்கனுக்கேனும் அடிபட்டதோடு அவனது தொல்லை ஒழிந்துபோகும். பிறகேனும் அவன் சுகப்பட வழியுண்டு. ஆனால்....ஆனால்....நெஞ்சங் குமுறுகிறது. இந்த விதவையர்க்கு விடுதலையில்லை.

ஃ ஃ ஃ

தர்மசிந்தனை இந்நாட்டு மக்களுக்கு பெருக்கெடுத்து ஓடுவதாக பழம் பெருமை பேசும் சில பெரியவர்கட்கு இச் செய்கை தெரியவில்லையா? விதவைகளின் கொடிய துயரம் அவர்கள் நெஞ்சத்தை

உருக்கவில்லையா? கைம் பெண்களின் கண்ணீர் அவர்கள் கண்களில் படவில்லையா?

நினைத்தால் நெஞ்சங் குமுறுகிறது. உள்ளம் பதறுகிறது. உடல் துடிக்கிறது. இதயத்தை இடிசுது நெஞ்சை ஒடிக்கிறது. தர்ம சிந்தனை நிறைந்த இந்து சமூகம் இதை ஏன் கவனிக்கவில்லை? சமூகம் சாற்றுவதென்ன? 'நெஞ்சு பொறுக்குதில்லையே'

ஃ ஃ ஃ

பல ஆண்டுகட்கு முன்னர் சில சுயநலமிகளால் ஏற்படுத்தப் பட்டுவிட்ட இந்தப் பழக்கம் இன்றைய நிலைமைக்கு ஒத்துவராத போது—இந்தக் கொடுமையை உணர்ந்தும் பரிகாரம் தேட முற் படாதிருப்பவர்களின் நெஞ்சந்தான் என்னே? பரிகாரம்தேட முற்படுபவர்களையும் தடுக்கும் சுபாபமுடையவர்களின் இதய மென்ன இரும்போ?

ஃ ஃ ஃ

அடிமைப்பட்டோன் என்றென்றைக்கும் அடிமைத் தளையில் அவதியுற எண்ணுவானா? மகாத்மா கூறியதுபோல நம்நாட்டில் விதவைகள் மலிந்திருக்கும் வரை வெடிச் சுரங்கத்தின் மேலிருக் கிறோமென்பதை ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும். அடிமைப் பட்டோனின் சுதந்தர உணர்ச்சி பீறிட்டுக்கொண்டு வெளிவருங் கால் "சுரங்கம்" வெடிக்கும். அன்று தெரியும் இந்த அசட்டுச் சனாதனத்தின் மூடப்பிடிவாதத்தின் பயன்?

பக்குவமடையாத பாலியைக்கு மணமாற்றுவது நிறுத்தப் படவேண்டுமெனின், "கன்னிப் பெண் பெருமூச்சு விடுவளேல் அவ்வீடு உருப்படாது" என்கின்றனர் பெரியோரெனப் பெயர் தாங்கியோர். கன்னிப் பெண்ணுனுக்காவது இன்றைக்கல்லாவிடின் நாளைக்காவது நமக்கு இன்பமுண்டு என எண்ண இடமிருக்கிறது. ஆனால்........அந்தோ கைம்பெண்களுக்கு என்றென்றைக்குமே இன்ப மனுபவிக்க முடியாத விலங்கு மாட்டப்பட்டிருக்கிறது. கன்னிப் பெண்களின் பெருமூச்சுக்குப் பயப்படுவோர், விதவை யின் கண்ணீர் வீட்டை அழிக்குமென உணராததேன்?

"அது அவள் தலைவிதி" யாம். தலைவிதியின் "தலைவிதி" யே இன்று மாறி நிற்கிறது. அதை யறியாது தலைவிதியை இழுத்து

தலையில் போட்டுக்கொள்வது ஏமாற்று வார்த்தையென்று கூறுவதைவிட வேறென்னென்று கூறுவது?

°° °° °°

"தலைவிதி" ஊக்கமுள்ள இளைஞர்களை மட்டம்தட்டும் மருந்தாக உபயோகப்படுத்தப் படுகிறது. ஒரு சிலகாலம் ஒரு சிலரை ஏமாற்றலாம். ஆனால் பல காலமும் பலரையும் ஏமாற்றமுடியாது. அனைவருமே காலத்திற் கேற்றவாறு பழக்கவழக்கங்களை மாற்றியமைத்துக் கொள்வதே அறிவுடைமை. விதவா விவாகத்திற்கு முட்டுக்கட்டை போடுவோர் காலப்போக்கை யுணராது தங்கள் காலத்தை வீணாக்குகிறார்கள் என்று தான் கூறவேண்டும்.

தலைவிதி மருந்து இனி பயன்படாது. இளைஞர்களின் உணர்ச்சியாகிய "துப்பாக்கிக்கு" தலைவிதி "மருந்து" சக்தியற்றதாகி விட்டது. தலைவிதியை மாற்றியமைக்கும் சக்தி வாலிபர்களுக்கு ஏற்பட்டுக் கொண்டுவருகிறது.

°° °° °°

இளைஞர்கள் தங்களுக்குச் சரியெனத் தோன்றுவதை வெளியிடத் தயங்கவேண்டாம். தங்களது அபிப்பிராயம் தவறானது என்று பிறரால் சுட்டிக்காட்டப்படும் பொழுது, உண்மையில் தவறானதாகப் படுங்கால் பெருந்தன்மையோடு ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் நம்முடைய சரியான அபிப்பிராயத்திற்கு, அசட்டுக் காரணங்கூறினால், சமாதானம் தவறானது எனத் தெரிந்தும் மௌனமாக இருப்பது எவ்வளவு கோழைத்தனம்!

விதவா விவாகம் நியாயமானது, சட்டத்திற்கும் புறம்பானதல்ல, சாஸ்திரத்தால் ஆதரிக்கப்பட்டது. அனுபவத்தில் தெரிந்த உண்மை. விதவா விவாகம் செய்யப்படாததால் ஏற்படும் கேடுகளும் நமக்குத் தெரிகின்றன. இவைகள் தெரிந்தும் கைம்பெண்களின் துயரைக் களைய முற்படாமலிருக்கலாமா?

இளைஞர்களே! விதவைகளின் துயர்களைய நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்? என்ன செய்யப் போகிறீர்கள்?

---

# நம்மவர் தொழில்.

குட்டிச்சாத்தன் A. B. C. D. E. F. etc.

உலகத்தில் நைத்தொழில் விருத்தியாகிறது. ஒரு தேசத்தோடு மற்றொரு தேசம் போட்டியிடுகிறது. இங்கிலாந்து தேசம்! அங்கேயுள்ள லங்காஷயர், மாஞ்செஸ்டர்! எவ்வளவு நூல் எவ்வளவு துணி, உலகத்தை வளைத்து வாயில் போட்டுக்கொள்ள விடா முயற்சி செய்கிறது. ஜப்பானைப் பாருங்கள்! பூலோகத்திலுள்ள எல்லா தேசத்தின் இடுப்பையும் முறித்துவிட்டது. பட்டுத் தொழில் இனி ஜப்பானுக்குத்தான்! வேறிடத்தில் பட்டு உண்டாக்கிப் பிழைக்க முடியாது. தேச மக்களும் தேச ஆட்சியும் இரண்டறக் கலக்கிறது. தொழிலைச் செய்கிறது; உலகத்தையே கவிழ்த்துவிடுகிறது.

1914ல் யுத்தம் ஆரம்பித்ததே. அப்போது ஜப்பான் தேசத்தில் நெல் விளைவில்லை. பர்மாவிலும் சயாமிலும் இந்தியாவிலும் அங்குமிங்கும் வாங்கித் திண்டாடிக்கொண்டிருந்தது. அன்று முதல் முயற்சிசெய்து இப்போது ஜப்பான் தேவை தீர்ந்து மிஞ்சுகிற அரிசி இந்தியாவிற்கு விற்பனைக்கு வருகிறது. விலையும் மலிவு. சரிதானா.

இன்னும் சில சாமான்களைப் பாருங்கள். அந்த ஆசாமிகள் எப்படித் தொழில் செய்கிறார்கள். அது எவ்வளவு அவசியமாகி விடுகிறது. இதுவரையில் இல்லாத சாமான் இனிமேல் இல்லாமல் தீராது என்றாகிவிடுகிறது. ஒரு சாமானைச் செய்கிறார்கள். அதை உலகமெங்கும் பரப்புகிறார்கள். அழியாத வியாபாரமாகிவிடுகிறது.

ஒரு தையல் மிஷின். எப்படிச் சாமான். எவ்வளவு உபயோகம். கைத் தையலுக்கும் இதற்கும் எவ்வளவு வித்யாசம்? இந்த வியாபாரத்தைத் தடுக்க முடியுமா? எத்தனைபேருக்கு பிழைப்பு! அந்த மிஷின் இல்லாத ஊர் உண்டா?

பௌண்டன் பேனா எவ்வளவு பிரயோஜனம், உலகத்தில் அது எங்கேயில்லை? கடிகாரம் எப்படிப்பட்டது? உலகம் முற்றும் பரவிநிற்கிறது. விளக்குகள்—மின்சாரம், மோட்டார்கார் இது

போன்ற இன்றியமையாத சாமான்கள் எவ்வளவு? கிராமபோன் இல்லாத கிராம முண்டா? கேளாத செவியுண்டா? இப்படிப் பட்ட சாமான்களைச் செய்கின்றனர் மேல்நாட்டுப் பேர்வழிகள். இவைகளை உலகெங்கும் ஒரு நொடியில் பரப்புகின்றனர். பணத்தை வாரிக்கொண்டு போகின்றனர். சுகமாக வாழ்கின்றனர்.

இவ்வளவு தொழில் செய்கின்றனரே! எத்தனை பெரிய தொழிற்சாலை! ஒரு நாளில் எத்தனை சாமான்களைச் செய்துவிடுகின் றனர். அமெரிக்காவில் ஒரு தொழிற்சாலையில் ஒரு நாளில் 400 மோட்டார்கள் செய்வதாகச் சொல்கிறார்கள். நமக்கு சக்தியில் லையா? அந்த தேசங்களிலெல்லாம் செய்ய முற்படாத தொழில் —செய்ய முடியாத தொழில் நம் நாட்டில் இல்லையென்று நினைக்கி றீர்கள்! இருக்கிறது. அந்தப் பொருள் என்ன? தெரியாதா? விதவை! விதவை! இங்கிலாந்து, ஜெர்மனி, ரஷ்யா, இடாலி, ஆஸ்ட்ரியா, பிரான்ஸ், ஸ்பெயின், ஜப்பான், சைனு போன்ற எந்த தேசத்திலாவது இந்த விதவைத் தொழிற்சாலை உண்டா? வித வையை உற்பத்தி செய்து உபயோகமில்லாமல் ஸ்டாக் செய்திருக் கிறார்களா? அப்படிச் செய்ய முடியுமா? நம்முடைய தேசத்து மக்கள் இதற்கொரு சடங்கு வைத்து விதவையை உண்டாக்கி எத் தனை சீர்திருத்தக்காரர் வந்து எதிர்த்தாலும் விடாமல் இவ்வளவு நாகரிகமான காலத்திலே நடத்தி வருகிறார்களென்றால் நம்மவரின் திறமை யென்ன? லேசானதா? இப்படிப்பட்ட விடாப்பிடியான முயற்சியை ஒரு உருப்படியான தொழிலில் காட்டலாகாதா? ஆம் அது கொஞ்சம் கஷ்டந்தான். இது மட்டுமா இன்னும் இருக்கின் றன. கேளுங்கள்! நாம் என்ன சும்மாவா இருக்கிறோம். சும்மா இருக்க முடியுமா?

"கந்துக மதக்கரியை வசமா
நடத்தலாம் கரடிவெம் புலிவாயையும்
கட்டலாம் ஒருசிங்கம் முதுகின்மேற்
கொள்ளலாம் கட்செவி எடுத்தாட்டலாம்
.................சிந்தையை அடக்கியே
சும்மாவிருக்கின்ற திறம் அரிது"

என்று பெரியவர் சொல்லியிருக்கிருரே. சும்மாயிருக்க யாரால் தான் முடியும். முடியாதையா முடியாது. அப்பால் தொழில் செய்ய உடம்பு வணங்காது, வணங்கினுலும் இந்த நாட்டில் உதவி கிடைக்காது. அப்படியானுல் மனிதன் என்னதான் செய்வது? வழி இருக்கிறது. செய்துகொண்டுதானிருக்கிருேம். அவர்கள் கல்யாணங்களை சிறப்பாக நடத்துகிறது. எட்டுநாள் சாப்பிட்டு அவன் வீட்டை ஊற்றிருக்கச் செய்கிறது. பொய்யும் புரட்டும் செய்கிறது. சூதாடுகிறது. குடிக்கிறது. விபசாரம் செய்கிறது. கோர்ட்டுக்குப் போகிறது. தொழிலில்லாதவன் என்ன செய்வான்? சும்மாவோ இருக்கமுடியாது. தொழிலோ கிடையாது. மிச்சமென்ன? ஏதாவது தொல்லே!

இந்த வகையில் இரண்டுதினுசு. ஒன்று போ. மற்றென்று சா. போக்கிரித்தனம் செய்பவனிடம் சாதுக்கள் மாட்டிக் கொள்கின்றனர். சாதுக்கள் மடம் கட்டினுல் போக்கிரி குடி புகுவான். சாதுக்கள் பாடுபட்டுப் பணம் சம்பாதித்தால் போக்கிரிப் பிள்ளையாகவந்து அழிப்பான். ஆனுல் போ—சா எல்லாரும் சேர்ந்து அவதிப்படுவதுமில்லையா? உண்டு; மன்னுதி மன்னன் அறிவாளி சாஸ்திரி சனுதனி நாகரிகக்காரன் யாவரும் முண்ட முடியாதபடி பல குட்டைகளும் தயாராக இருக்கின்றன. தொழில் முன்னேருததற்குக் காரணம் ஒன்ரு இரண்டா? அறிவாளிகள் தொழிலாளிகள் வீரர்கள் தீரர்கள் இந்த தேசத்தில் பிறக்கவில்லையா? அந்தச் சொத்து அமெரிக்கா, ஜெர்மனி, ஜப்பானுக்குத் தான் சொந்தமா? இல்லே. இந்தியாவில் கோடி கோடியாகப் பிறக்கிருர்கள். ஒரு காந்தி, ஒரு டாகூர், ஒரு பிர்லா, ஒரு ராய் இல்லையா? இந்தப் பிறப்புகள் இங்கேயுள்ள கோடானு கோடி படுகுழிகளைத் தாண்டி மலே மேல் தொத்திக் கொண்டவை. மற்றதேசத்தில் தொழிலாளியும் அறிவாளியும் கொஞ்சப் பேர்தான் பிறக்கின்றனர். ஆனுல் அவர்கள் யாவரும் ஏணி வழியில் ஏறிச் செல்ல வசதிகாத்துக் கொண்டிக்கிறது. இங்கே எல்லாம் வழுக்கல்; ஏறமுயன்ருல் எல்லாரும் கேலிசெய்து கீழே இழுத்துப்போட்டு தோலே உரிக்கப் பின்வாங்கவில்லே. ஆயிரம் சங்கிலி பூட்டப்பட்ட அடிமைப்பிள்ளே எப்படி ஆகாயத்தில் பறக்கும்? ஆஹா எத்தனே தளே! எத்தனேமூடத்தனம்!

வெளிநாட்டில் பெண் தெய்வமாகவன்றோ மிளிர்கிறது. இங்கே பெண்ணை சொத்தாகவல்லவா கருதி முடிவு கட்டிவிட்டனர். வீடு, மாடு, குதிரை, கன்றுக்குட்டி, மோட்டார், இரும்புப் பெட்டி மாதிரி மனைவியும் ஒரு சொத்து.

பெரிய குஷ்டரோகியை நோய் பரவாமலிருக்க முனிசிபாலிடியார் ஊரை விட்டு வெளியே துரத்தலாம். ஆனால் அவன் மனைவி அவனுடன் கட்டாயமாக உடனிருக்கவேண்டும். இருக்கிறாள். அதுதான் தர்மமென்று அந்த நோயாளியும் கருதுகிறான். அந்தப் பெண்ணும் ஒப்புக்கொள்கிறாள். ஆக்ஷேபிப்பது தப்பு—கொடுமை என்று ஊர்ஜனம் முழுமையும் சொல்கிறது.

அந்த குஷ்டரோகி அழகான பருவந்துன்றுத தன்மனைவியைக் குழந்தை பிறக்கவில்லை என்று தள்ளிவைத்து வேறொரு கிளியை மணக்கலாம். அந்த அருமைப் பெண் இந்த நோயாளிக்கு வாழ்க்கைப் பட மாட்டேனென்று அழலாம். ஆனாலும் கல்யாணம் நடைபெற்றுவிடுகிறது. பின்னர் ஆயுள் முழுமையும் அந்த குஷ்டரோகியையே நாயகனாகவும் தெய்வமாகவும் கருதவேண்டும். வேறு விடுதலையே கிடையாது. சரி.

அந்த குஷ்டம் இருக்கிறவரை நல்வாழ்வு இல்லையே! இறந்ததென்று வைத்துக்கொள்ளுங்கள். அப்பாலாவது கதியுண்டா? இருக்கிறவரை குஷ்டரோகியைக் கட்டியழுதாள். இறந்த பிறகு குஷ்டரோகி அநியாயமாகச் செத்தானே இருந்திருந்தால் நகை சேலையாவது மிஞ்சியிருக்குமே என்று இரவு பகலாக அவனை மறக்காமல் நினைத்து அழவேண்டியது. இது சரிதானா?

படித்த பெண் மக்களே! இக் கொடுமையை உணருங்கள்! பாரதியார் பாடுகிறார். ஜீவ ஊற்றான பாடல்கள். கேளுங்கள்! விடுதலை பெறுங்கள். ஆண் சிங்கத்துக்குப் பெண் சிங்கம். ஆண் புலிக்குப் பெண்புலி. ஆண் யானைக்குப் பெண் யானை. அதுதான் சரியான ஜோடி. அதில்தான் இன்பமுண்டு. ஆண் சிங்கத்துக்கும் பெண் பூனைக்கும் வாழ்க்கை செம்பீரமாக இருக்குமா? ஆண் புலிக்குப் பெண் எலி சரியாக இருக்குமா? இந்திய ஆண்கள் எல்லாம் ஆண் சிங்கம்! இந்தியப் பெண்களெல்லாம் பெண் சிங்கம்! அப்

படியாக இரண்டும் தலையெடுத்தால் எப்படியிருக்கும்? அந்நிய தேசத்தார் முன் எப்படியிருக்கும்? கிளம்புங்கள்! அடிமைத் தளை தகர்ந்து தவிடுபொடி யாகட்டும். பெண் சிங்கங்களே! பாரதியார் முழக்கத்தைக் கேளுங்கள்!

மாட்டை யடித்து வசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டுவந்தே
வீட்டினில் எம்மிடம் காட்டவந்தாரதை
வெட்டிவிட்டோமென்று கும்மியடி

நல்ல விலைகொண்டு நாயை விற்பாரந்த
நாயிடம் யோசனை கேட்பதுண்டோ
கொல்லத் துணிவின்றி நம்மையு மந்நிலை
கூட்டிவைத்தார் பழி கூட்டிவிட்டார்.

கற்புநிலை யென்று சொல்லவந்தார் இரு
கட்சிக்குமஃது பொதுவில் வைப்போம்
வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக்கொடுக்கும்
வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம்.

---

## லக்ஷமியின் வாழ்க்கை.

P. தனுஷ்கோடி

வையாபுரி முதலியார் ஒரு பெருத்த செல்வந்தர். அவர் ஜவுளி, மளிகை, மண்டி முதலிய பல வியாபாரத் துறைகளில் இறங்கி பொருள் சேர்த்தவர். தற்போது அவர் சம்பாதித்த பொருட்களை வைத்துக்கொண்டு சுகஜீவியாகக் காலங்கடத்தி வருகிறார். அவருக்கு ஒரு குமாரனும், ஒரு மகளும் உண்டு. குமாரன் வரதராஜனுக்கு சுமார் 18 வயதும், குமாரி லக்ஷிமிக்கு 10 வயதும் ஆகின்றது.

வையாபுரி முதலியார் ஒரு பழுத்த வேதாந்தி. சைவ மதப் பித்தர். எப்பொருள் கிடைப்பினும் முருகப்பிரானது அருளால்

கிடைத்தது என்பது அவர் எண்ணம். தினசரி ஆகார வேளைகளில் முருகனுக்கு ஆராதனை செய்தே உண்பார். தனக்குக் கிடைத்த பொருள்கள் யாவும் தமது முயற்சியால் கிடைத்தது என்பது அவர் எண்ணமல்ல. முருகன் அருளால் கிடைத்த பொருள் என்பதே அவர் எண்ணம். ஆனால் அவர் ஏதேனும் ஒரு காரியத்தில் பிரவேசித்தால், தமது எண்ணத்தையே நிலைநாட்டுவார். மிகவும் பிடிவாத குணமுடையவர். அவர் பிரவேசித்த காரியத்தில் மற்றொருவர் பிரவேசிக்க முடியாது.

ஆனால், வரதராஜன் இவற்றிற்கெல்லாம் நேர்மாறாக நடந்தான். தந்தையாரை இவ்வித அர்த்தமில்லாக் குருட்டுப் பழக்க வழக்கங்களை விட்டுவிடும்படிக் கூறினான். அவர் இவனது பேச்சுக்கு செவி சாய்ப்பதில்லை. வரதராஜன் நல்ல குணசாலி. சீர்திருத்தவாதி. ஏழைகளின் துயரை விலக்கப் பாடுபடுபவன். பி. ஏ. வரை படித்து மேல்படிப்பை விரும்பாமல் நின்றுவிட்டான். வேலையில்லாமல் சும்மா இருப்பதால் காங்கிரசுக்காக—தேசத்திற்காக கிராமந்தோறும் சென்று பிரசாரம் செய்துவந்தான்.

ஃ ஃ ஃ

இச்சமயத்தில் வையாபுரி முதலியார் தமது பொன்விழாவை நடத்தினார். அதற்காக ஏழைகளுக்கு தான தருமங்கள், சுவாமிக்கு ஆராதனை, பரத நாட்டியம் முதலியவைகளை வெகு சிறப்பாக நடத்தினார். லக்ஷ்மிக்கு தனது கண்ணிருக்க விவாகம் செய்து பார்க்கவேண்டுமென்று முதலியாருக்கு சிலகாலமாக ஒரு அவா இருந்து வந்தது. ஆகவே விருந்திற்காக வந்தவரும், ஆப்தவியாபார நண்பருமாகிய தணிகாசல முதலியாரை விவாகம் செய்துகொள்ளும்படி கேட்டார். ஏனெனில் தணிகாசலத்திற்கு இரண்டு விவாகமாகியும் குழந்தைப்பேறு இல்லாமல் இரண்டு மனைவிகளையும் இழக்க நேரிட்டதும், தற்போது மூன்றும் தாரத்திற்காகப் பெண் தேடிக்கொண்டிருப்பதுமே காரணம். ஆகவே, அவர் தணிகாசல முதலியாரை மணமகனாகத் தேடிப் பிடித்ததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. அன்றே சுமார் நாற்பது வயதுடைய அவருக்கு நிச்சயமும் செய்துவிட்டார்.

சுற்றுப்பிரயாணத்திலிருந்து திரும்பிய வரதராஜன் தங்கையின் விவாக விஷயத்தைக் கேட்டு திடுக்கிட்டான். பிடிவாத குணமுடைய தன் தந்தையிடம் எவ்வாறு அவன் பேசி தடுக்கமுடியும்? ஆயினும் அவன் மனம் தளரவில்லை. நேரே தந்தையிடம் சென்றான். பால்ய விவாகத்தின் கொடுமையை விளக்கிக் கூறினான். பத்து வயதுடைய லக்ஷ்மியை மணம் செய்விக்கக்கூடாது எனக் கூறினான். அவனது பேச்சுகள் மிகவும் உறுதியாகவும், கண்டிப்பாகவும், வீராவேசத்துடனும் காணப்பட்டன. ஆனால் முதலியார் பிடிவாதமாக குமாரனின் சொல்லை மறுத்துவிட்டார்.

பாவம்! வரதராஜன் என்ன செய்வான்? அவன் மனம் சஞ்சலமடைந்தது. என்ன செய்வதென்று தோன்றவில்லை. தனதறையில் வந்து சற்று நேரம் யோசித்தான். பிறகு ஒரு முடிவுக்கு வந்தவனாகக் காணப்பட்டான். எழுந்து தன் தாயிடம் சென்றான்.

அங்கு தாயார் லக்ஷ்மியின் விவாகத்தைக் குறித்து மட்டற்ற மகிழ்ச்சியுடன், லக்ஷ்மிக்கு தலை பின்னிக்கொண்டிருந்தாள். தயாரின் ஆனந்தத்தைக் கண்டு, வரதராஜன் சீறி விழுந்தான். "என்ன அம்மா! நீங்கள் கூட இதற்கு உடந்தை போல் தோன்றுகிறது. இக்காரியம் உங்களுக்கும் சம்மதந்தானா?" என்று கேட்டான்.

சாந்த ஸ்வரூபியான விசாலம் அவனது கோபத்தை ஒருவாறு அடக்கி விஷயத்தை விபரமாகக் கூறும்படி கேட்டாள்.

வரதராஜனும் பால்ய விவாகத்தின் கொடுமைகளையும், அதனால் வரும் தீமைகளையும், விரிவாக எளிய நடையில் தாயாருக்குப் புரியும்படி கூறினான். விசாலம் அவற்றை நன்குணர்ந்தாளாயினும், முதலியாரின் குணத்தை—செய்கையை மாற்ற முடியாதவளாய், தோன்றினாள். அவளது நிலைமை 'இருதலைக் கொள்ளி எறும்பு போல்' இருந்தது.

அவள் குமாரனுக்கு ஏதேதோ நொண்டிச் சமாதானங்கள் கூறி திருப்திப்படுத்த முயன்றாள். ஆயினும் வரதராஜனுக்கு அவையெல்லாம் பிடிக்கவில்லை. "எனக்கு இந்தக் கலியாணம் வேண்டாம்! என்னால் இக்கலியாணத்தை காணச் சகியாது. நான் எங்

காவது செல்கிறேன்" என்று கூறிக்கொண்டே வீட்டைவிட்டு வெளியேறினன்.

இவற்றை யெல்லாம் விளையாட்டுப் போல் கவனித்துக்கொண்டிருந்த லக்ஷ்மிக்கு, அண்ணன் கோபமாக சென்றதைக் கண்டவுடன் அழுகை வந்துவிட்டது. அவளது கண்களில் கண்ணீர் தாரை தாரையாக வழிகின்றது. "அம்மா! ஏன் அண்ணு கோவிச்சுண்டு போரார்? நீ ஏன் அண்ணுவை திட்டினே!" என்று வினவினள்.

ஹா! அச்சொல் விசாலத்தின் மனதில் "சுளீர்" என்றது. வரதராஜன் கூறியவைகளின் அர்த்தம்—தன்மை—புலப்பட்டது. பேதை—யாதுமறியாச் சிறுமி—கேட்ட கேள்வி அவளை ஸ்தம்பிக்கச் செய்தது. அளது மனம் பாகாயுருகியது. "எவ்வாரேனும் இவ் விவாகம் நடக்காதபடி செய்துவிடவேண்டும். இதனுல் என்ன வாயினும் சரி!" என எண்ணினள். அதே சமயம் அவளது பர்த்தாவின் பயங்கரத் தோற்றம் அவள் மனக்கண் முன் தோன்றியது. முன் எண்ணிய எண்ணம் பூராவும் நேர்மாருக மாறியது கற்சிலை போல் நிலையாய் நின்றுவிட்டாள்!

ஃ ஃ ஃ

ஒரு சுபதினத்தில் லக்ஷ்மிக்கும், தணிகாசல முதலியாருக்கும் விவாகம் நடந்துவிட்டது என்று மட்டும் கூறி நிறுத்திக் கொள்ளுகிறேன்.

ஃ ஃ ஃ

நான்கு வருடங்கள் சென்று மறைந்தன. லக்ஷ்மி புஷ்பவதியாகி கணவனில்லம் சென்றுவிட்டாள். தணிகாசலத்திற்கு நல்ல சமையல் செய்து போடுவதுதான் லக்ஷ்மியின் வேலை. வேறு ஒரு சுகத்தையும் அவள் கண்டறியாள். "எதிர்காலத்திலும் சுகம் கிடையாது" என எண்ணினள். அது வாஸ்த்தவமே

இந்நிலையில் தணிகாசலத்திற்கு இருமல் நோய் கண்டது. சில நாளில் அது க்ஷயரோகம் எனத் தெரிந்தது. ஆறுமாத காலமாகியும் நோய் விட்டபாடில்லை. வீட்டில் எங்குநோக்கினும் அசுத்தம் தென்பட்டது. லக்ஷ்மியும் அவ்வப்போது சுத்திசெய்து கொண்டு வந்தாள். அவ்வசுத்தங்களை அப்புறப்படுத்துவது அவ

ளுக்கு அருவருப்பாக இருந்தது. ஆயினும் பொறுமையே பூஷண மாகக் கொண்டு விளங்கினள். அவளது மாசற்ற முகம் கபடமின் மையைத் தெளிவுபடுத்தியது.

இந்நஷ்டங்களை லக்ஷ்மி அனுபவிப்பது தகாது என்று காலன் நினைத்தான் போலும்! இல்லாவிடில் தணிகாசலத்தின் உயிரை ஏன் கொண்டு செல்லவேண்டும்?

கணவனிறந்த மறு வருடத்தில், மகளின் துயரைக்காணச் சகியாது வையாபுரியும் இறைவனடி சேர்ந்தார். விசாலமும், லக்ஷ்மியும் "விதவை" ப்பட்டத்துடன் காலங்கடத்தி வந்தனர்.

இப்படியிருக்கையில் ஒரு நாள், "அகில இந்திய கால்நடை-சுற்றுப்பிரயாண" கோஷ்டியுடன் சென்றிருந்த வரதராஜன் திரும்பி வந்து சேர்ந்தான். தந்தை இறந்ததையும், லக்ஷ்மியின் கணவனிறந்ததையும் கேட்டு மிக்க மனவருத்த மடைந்தான். ஆயினும் அடுத்த மாதம், தாயாரின் அனுமதியின் பேரில் தங்கைக்கு மறு மணம் செய்துவைத்தான். அதே சமயம், பால்ய விதவையொருவளை வரதராஜனும் மணம் செய்துகொண்டான். "விதவை மணம் ஓங்குக!"

## எனது சுயசரிதை

(ஓர் விதவை எழுதுவது)

அன்புமிக்க ஆருயிர் நேயர்களே!

விதவைகளாகிய எங்கட்கு இதுவரை நீங்கள் இழைத்துவந்த இன்னல்கள் பலப் பல. அஃதில் எனது சுயசரிதையை மட்டும் ஈண்டு எழுதுகிறேன்.

நான் சின்னஞ் சிறுமியாய் சிறுவீடு கட்டி திரியுங்காலத்தில், என்னை ஓர் கிழட்டு மாப்பிள்ளைக்கு, கல்யாணம், செய்தனர். "கல்யாண"மென்றால் அப்பொழுது எனக்கு இன்னதெனத் தெரியாது. ஒரு நாள் எனது தாயர் என்னை அழைத்து, அடி கமலம் உனக்கு "கல்யாண" மடி என்றாள். கல்யாண மென்றால் என்னம்மா

வென்று வினவினேன், அதற்கவள் புதுச்சேலை கட்டி, சீவிச் சடைப்பின்னி, நகைபோட்டு, புஷ்பமுடித்து, மணவறையிலிருப் பது என்றாள். ஏனம்மா இன்றைக்கு அவ்விதம் செய்தாலென்ன வென்றேன், "போடி! நாளைக்குத் தான் நல்லநாள்" என்று ஓர் அதட்டுப் போட்டாள்; பேசாதிருந்து விட்டேன்.

மறுநாள் என்னை அலங்கரித்து மணவறையில் உட்காரவைத்து தலையைக் கவிழ்க்கச் சொன்னார்கள் (கோணிக் கொள்ளுதல்) நான் அவ்விதம் செய்ய மறுத்துவிட்டேன்; பின் ஒருத்திவந்து என்தலை யில் கைவைத்து குனியச் செய்தாள். அப்பொழுது ஏதோ செய் யப்போகிறார்களென நினைத்து தேம்பித் தேம்பி அழத்தொடங்கி விட்டேன். அவ்வமயம் எனக்கு வாழைப்பழமும் தின்பண்டங் களும் கொண்டுவந்து தந்தார்கள், அதனால் அவர்கள் கூறிய வண் ணம் அன்று செய்துவந்தேன். அதன்பின் நாலைந்து தினம் கடந்து கலியாணத்திற்கு வந்திருந்தோரனைவரும் சென்றுவிட்டார்கள். திங்கள் பல கடந்தன. ஓர்நாள் நான் பிறந்த ஊரில் சில சிறுமிகளு டன் விளையாடிக் கொண்டிருந்தேன். அப்பொழுது அச்சிறுமிகளுள் ஒருத்தி "கமலம் உங்கள் ஆத்தில் பெருங் கூச்சலாய் கேட்கின்றதே அஃதென்ன ?" வென வினவினாள். அவள் வினவியதை செவிமடுக் காது விளையாட்டிலே என் மனதை செலுத்திக் கொண்டிருந்தேன். சிறிது நேரம் சென்று என்பாட்டி "அடியே! கமலம் உன் ஆம்ப டையான் செத்துப்போய் விட்டானாம், வா போகணும்" என்று, என்னை அழைத்துச் சென்றாள். "ஏன்; பாட்டி! என் ஆம்புடை யானா? அவர்யார்? இறந்தால் நமக்கென்ன?" வென்றேன். பேசாது வாயேண்டி யென்று சொல்லி என் இல்லத்திற் கழைத்தேகினாள். அங்கோ ஓரேபேரிரைச்சல், வானைப்பிளக்கப் போகும்மாபெரும் இடி போல்கேட்டது. எள் விழ இடமில்லை. அவ்வளவு ஜனம்ஆங்கு குழுமி யிருந்தார்கள். ஒவ்வொருவர் கண்ணிலும் நீர் தாரைதாரையாக உதிர் ந்தது. ஆனால் என் கண்ணில் மட்டும் அப்பொழுது ஒரு துளி கண் ணீர்கூட விழவில்லை. காரணம் அவர்கள் எதற்காக அழுதுகொண் டிருக்கிறார்களென்பது புலப்படாமல்தான். பின் சிறிது நேரம் சென்று என்னை எல்லோரும் கட்டி அழ ஆரம்பித்துவிட்டார்கள். எனக்கு கழுத்து வலி தாங்கமாட்டாது நானும் அழத் தொடங்கி

விட்டேன். அங்கு வந்திருந்தோரனைவரும் நீண்டநேரம் சென்று ஒவ்வொருவராய் தம் தம் இல்லத்திற்கேகினர். நானும் என் பாட்டியும், அம்மாளுமாக காரில் ஏறி நான் வாழ்க்கைப்பட்ட ஊருக்குச் சென்று எங்கள் இல்லத்தில் நுழைந்தோம். அங்கும் பெரிய அமர்க்களமாகத்தானிருந்தது. என்னை ஓர் மூலையில் கிடத்தினார்கள். எல்லோரும் என்னை அங்கும் கட்டி அழுதார்கள். பின் நீண்ட நேரம் சென்று எனது பட்டாடையையும், பொற்றாலியையும் பறித்து, வெண்மைச் சேலையை யீந்தனர். அன்றுமுதல் இன்றளவும் சிந்திய மூக்கும், நொந்த மனமுமாயிருக்கிறேன். எனது பெற்றோர்களும் மாமன் மாமியாளும், கூடிக் குலாவிவருகின்றனர். ஆனால் நான் மட்டும் துன்பம் அநுபவிக்கவேண்டுமாம். என்ன நியதி இது? சகோதரர்களே நம் நாட்டில் எம்போன்றாரின் நிலைமை பெரிதும் விசனிக்கத்தக்கதாக இருக்கிறது. இனியும் நீங்கள் காலந்தாழ்த்தாது இன்றே நாடெங்கும் "விதவை மணத்தை" பரவச் செய்யுங்கள்.

## பத்திராதிபர் குறிப்புகள்.

### பெண் சுதந்திரம்.

பெண்கள் நிலை எப்படியிருக்கிறதோ அப்படித்தான் அந்த தேசமும் இருக்கும். "பெண்ணுக்கு விடுதலை நீர் இல்லை யென்றால் பின்னிந்த உலகினிலே வாழ்க்கை இல்லை." எந்த நாட்டார் இந்த உண்மையை அறிந்து நடக்கிறார்களோ அங்கே தான் உண்மையான சுதந்திரம் குதிகொள்ளுகிறது. சுதந்திர நாடுகளைப் பாருங்கள்! அங்கே பெண்ணுக்குத் தளையில்லை. அடிமைப்பட்டுக் கிடக்கும் நாடுகளில் பெண்கள் அடிமைகளின் அடிமைகளாகக் கிடந்து நலிகின்றனர்.

### துருக்கி மாதர்.

ஐரோப்பாவின் நோய் என்று கூறப்பட்ட துருக்கி இன்று எப்படிருக்கிறது? பெண்ணுக்கு விடுதலை கிடையாது. துணி போட்டு மூட்டை கட்டிப் பிறர் பார்க்காதவாறு கோஷா பார்சல்

செய்து வந்தவரை அந்த தேசமே ஒரு நோய் தேசமாக இருந்தது. தோன்றினர் ஒரு கமால்! பெண்ணுக்கு விடுதலை யென்றார். நோய் நாடு பொன் நாடாகிவிட்டது. வீரத்துருக்கியல்லவா இப் பொழுது.

## வேலைக்காரி யல்ல.

வீட்டில் சம்பளத்துக்கிருந்து வேலைபார்க்கும் பெண்களை இனிமேல் வேலைக்காரி என்று சொல்வது சரியல்ல என்று அங் கேயுள்ள மாதர் சங்கம் தீர்மானித்திருக்கிறது. வீட்டிலே வேலைக் கிருப்போரை யஜமானிகள் 'புழுக்கை' களாக மதிப்பதே இதற்குக் காரணமாகும். அந்த இழிந்த பெயரைப்பெற அந்நாட்டு பெண் கள் இஷ்டப்படவில்லையாம். இதனால் வீட்டுவேலைக்குப் பெண்கள் கிடைக்கவில்லை. 'செர்வண்ட்' என்றழைப்பதற்கு பதிலாக ,லேடி ஹெல்ப்' அல்லது 'ஹவுஸ் ஹோல்டு அஸிஸ்டெண்ட்' என்று அந்தப் பணிப் பெண்கட்குப் பெயர் கொடுக்கலா மென்று அங்குள்ள ஸ்திரீகள் சங்கம் தீர்மானித்திருக்கிறது. ஒரு பெண்ணின் வேலை யை மற்றொரு பெண் செய்ய முற்பட்டால் அப்பெண் உதவி செய்வதாகத் தானே அர்த்தம். அப்படியிருக்க ஏன் அடிமைப்பட்ட த்தைவைத்துக் கொள்ள வேண்டும். யஜமானி வேலைசெய்ய முடி யாதவள். பணிப்பெண் அவளுக்கு உதவியாக வேலைபார்த்துக் கொடுக்கிறாள். ஒருத்தியிடம் பொருளிருக்கிறது. மற்றவளிடம் உடலுழைப்பிருக்கிறது. ஒன்றுக் கொன்று பரிவர்த்தனை நடக்கும் போது ஆண்டான் அடிமைக்கு இடமேது? துருக்கிப் பெண்கள் வாழ்க!

## யுத்தத்தில் பெண்கள்.

அங்கே போர்த்தொழிலிலும் பெண்களைப் பயிற்ற முயற்சி எடுக் கப்பட்டு வருகிறது. பெண்கள் சுகமாக வீட்டிலிருந்து சாப்பிட்டு விட்டு இருந்தார்கள். அவர்கள் இனிமேல் துப்பாக்கி முனையில் நின்று அடிபட்டு சாகவேண்டுமென்று ஒருவர் வருந்துகிறார். எந்தவாழ்வும் தாழ்வும் இருபகுதியாருக்கும் சேர்ந்து வரவேண்டும். அதில் ரசமிருக்கிறது. புருஷனை யுத்திற்கனுப்பிப் பறிகொடுத்து விட்டு வருந்துவதைவிட அவனுடன் களம்புகுந்து வெற்றியோ

தோல்வியோ அடைவது உண்மைக்காதல் உள்ள பெண்ணுக்கு இன்பமென்பது பலருக்கு விளங்குவதில்லை. சாவையும் துயரத்தையும் நோக்கிப்பயந்து அழுகிற மனிதர் கூட்டம் வீரத்தைக்கண்டு நடுங்கிப் புலம்பும் புலப்பமே இதுவாகும். 6 கோடி ஜனமுள்ள தேசத்தில் ஆண்கள் மட்டும் யுத்தம் செய்து ஒரு கோடிப்பேர் மடிவாரானல் அவர்கட்கு ஜோடி சேர்பவரான ஒருகோடி பெண்மக்கள் நிலையென்னவாகும். விதவை வாழ்க்கையா? தற்கொலையா? இருக்கிற புருஷர்களை வேட்டையாடுவதா? நேற்றைய ஐரோப்பிய மகாயுத்தம் முடிந்தபின் பெண்கள் என்னபாடு பட்டனர்? ஆண் எத்தனைபேர் எப்படிச் சாகவும் வாழவும் வழியிருக்கிறதோ அப்படியெல்லாம் பெண்கட்கு மிருந்தாக வேண்டும். அதுவே இயற்கை. அதுவே நேர்மை.

### காதல் அல்லது சாதல்.

உனுவோ என்ற ஜில்லாவில் ஒரு பிராமணப் பெண்ணும் ஒரு வாலிபனும் ஒருவரையொருவர் காதலித்தனர். சுற்றத்தார் இணங்குவதாக இல்லை; இருவரும் வெளியேறினர். போலீசார் பிடித்தனர். சுற்றத்தார் தொல்லையும் வர இருந்தது. ஊரிலும் காதலுக்கு இடமில்லை. ஓடிப்போனலும் இடமில்லை. நல்ல இடம் ஒன்றைக் கண்டுபிடித்தார்கள். நர்மதை நதியில் இருவரும் கட்டித்தழுவிக் கொண்டபடியே குதித்தனராம். காதலர்க்கு உறவினருக்கும் போலீசாருக்குமிடையில் இடமேது? காதல் வாாதவருடன் கலந்து வாழவேண்டும் அல்லது கடலில் வீழவேண்டும். இதுதான் இன்றிருக்கும் ஹிந்து யுவர்களின் நிலைமை!

### பெண் அங்கத்தினர்கள்

பஞ்சாப் அசெம்பிளியில் பெண்களின் விடுதலை குறித்துப் பேசியது அங்கு பெரும் எழுச்சியை உண்டாக்கியிருக்கிறது. அதிலும் அரசியல் கட்சிகள் பலவற்றிலுள்ள பெண்கள் ஒரே விஷயத்தைச்சார்ந்து பேசியது சுவாரஸ்யமான விஷயமாகும். யூனியன் கட்சி அங்கத்தினரான ஸ்ரீமதி லதீப் எனும் மாது கறுப்பு 'பர்தா' வுடன் எழுந்து "பெண்கள் கல்வியில் முன்னேற வேண்டுமென்று துடித்துக் கொண்டிருக்கும் போது ஆண்கள் பணப்பையை இறுக்கிப்பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். நாங்கள் பெரிதும் அலட்சியம்

செய்யப்படுகிறோம். எந்த தேசத்திலும் பெண்கள் ஆண்களிடம் இவ்வளவு விஸ்வாசமாக இருப்பது மில்லை; இவ்வளவு அலட்சியத்துக்கு உட்படுவது மில்லை" என்று பேசினராம். காங்கிரஸ் அங்கத்தினரான ஸ்ரீமதி ரகுவீர்கார், "சர்க்கார் கட்சியிலிருந்து கொண்டு சுதந்திரத்தைப் பற்றிப் பேசுவதில் பிரயோசனம் என்ன?" என்று தொடங்கிய பிரசங்கம் வெகு குதூகலமாக இருந்ததாம் "நீங்கள் பெண்கட்கு உதவிசெய்தாலொழிய சுதந்திரம் பெறமுடியாது" என்று லெனின் உரைகளைக்காட்டி ஒரு சமதர்மப் பிரசங்கத்தை ஸ்ரீமதி கார் என்பவர் செய்தாராம். ஸ்ரீமதி பீகம் ஷாநவாஸ் இந்திய ஜனத்தொகையில் பாதியுள்ள பெண்களுக்குக் கல்வி முதலிய அம்சங்களுக்கான வசதிகள் குறைவேயென்றும் குழந்தைச் சாவுகள் பிரசவம் இவைகட்கு ஒதுக்கும் தொகை போதாதென்றும் சர்க்கார் கருணையுடன் தாராளமாக உதவிசெய்ய வேண்டுமென்றும் கூறினராம். பெண்மக்கள் அடுப்படிக்குத்தான் லாயக்கென்று சொல்லி குண்டுசட்டியில் குதிரை ஓட்டும் வைதீகர்கள் இதனை நோக்குவாராக!

### ஏமாந்த மாப்பிள்ளை

கொண்டா ஜில்லாவில் ஒருவர் தனது முதலாவது மனைவியை வைத்துவிட்டு மறு மனைவியை மணக்கப் புறப்பட்டுச் செல்லும் போது 200 பேர் கொண்ட கூட்டத்தார் வழியில்மறித்துக்கொண்டு நயமாகச் சொன்னர்கள். மாப்பிள்ளை வகையார் கேட்கவில்லை. உடனே மாப்பிள்ளையின் தகப்பனைக் கட்டித் தூக்கினர்கள். மாப்பிள்ளையைபும் தூக்கி முதல் தார மனைவியிருக்கும் ஊருக்குக் கொண்டு சென்றார்கள். ஆனல் மாப்பிள்ளை மட்டும் எப்படியோ தப்பி யோடிவிட்டான். அவன் சென்று மறுதாரம் பேசிய இடத்தில் கல்யாணத்தை முடித்துக்கொண்டான். வீடு சேர்ந்தான். அங்கு பார்த்தால் தனக்கு குறிப்பிட்ட பெண் மனைவியாக வாராமல் அவசரத்தில் அவளின் தங்கையை மணமுடித்த விஷயம் அப்போது தான் தெரிந்தது. ஏமாந்த மாப்பிள்ளை இனி மூன்றாவது தாரம் செய்ய யோசித்துக்கொண்டிருக்கிறானம். வேண்டாமென்றாலும் ஏமாந்தாலும் புதிது புதிதாக மணக்கும் உரிமை ஆண்கட்குத்தானே உண்டு!

# :: நிகழ்ச்சிகள். ::

## பொம்மை மணத்திற்குப் பொம்மைப் பரிசு

அமெரிக்காவைச் சேர்ந்த டென்னஸியின் வடபாகத்திலுள்ள ஒரு ஊரில் 9 வயதான யுனிஸ்வின்ஸ்டட் என்ற சிறுமியும் 22 வயதான சார்லி ஜானஸ் என்ற வாலிபனும் விவாகம் செய்து கொண்டு தனியாக வாழ்க்கை நடத்துகின்றனர். இந்த பாலிய விவாகத்தைக் கண்டு அமெரிக்கா முழுதும் திகைப்படைந்திருக்கிறது. மணமகன் தனது மனைவிக்குப் பெரியதொரு பொம்மையை விவாகப் பரிசாக அளித்தான்.

## ரஷ்ய ஸ்திரீகள் முன்னேற்றம்

பொருளாதாரத் தடைகளிலிருந்து மாதர் விடுதலையடையாவிட்டால் தொழிலாளரியக்கம் வெற்றிபெறுவது கஷ்டமென்று 1866-ம் வருஷத்திலேயே காரல்மார்க்ஸ் கூறினர். 1917-ம் வருஷம் வரையில் ருஷ்ய மாதர் தாழ்ந்த நிலையிலேயே இருந்தனர்; இப்பொழுது அவர்கள் நிலை அபிவிருத்தியடைந்து விட்டது. ஆடவரும் பெண்டிரும் சமத்வமென்ற கொள்கையைக் கொண்டே சட்டங்கள் செய்யப்பட்டன. ஓட்டுரிமை, பதவி நியோகம் முதலியவற்றிலும் சம்பளங்களிலும் இருபாலாரும் சமத்வமாகவே மதிக்கப்படுகின்றனர். கல்யாணமானதாலாவது ஆகாததாலாவது ஸ்திரீகள் அந்தஸ்து மாறிவிடாது.

ஸ்திரீகள் உள்பட இன்றைய ருஷிய ஜனத்தொகையில் 100-ல் 90 பேருக்கு எழுதப்படிக்கத் தெரியும். பள்ளியாசிரியர்களில் 3-ல் இரண்டு பங்கு ஸ்திரீகளாயிருப்பதே இதற்குக் காரணம். டாக்டர்களுள் பெரும்பாலோரும் ஸ்திரீகள். ஏராளமான பெண்கள் ஆராய்ச்சிசாலைகளில் வேலை செய்கின்றனர். இஞ்சினீரிங் உத்தியோகங்களில் பெரும்பான்மையான ஸ்தானங்களில் பெண்டிர் உளர். இராணுவம் கூட இவ்விதிக்கு விலக்கல்ல. ஒரு ராஜதந்திர பதவியாவது ஸ்திரீக்குக் கொடுக்கப்படுகிறது!

## 'காதலுக்குத் தெரியும் காதலின் அருமை'

போலந்து தேசத்தைச் சேர்ந்த இரு வாலிபக் காதலர்கள் கல்யாணம் செய்துகொண்டு சந்தோஷமாக வாழ முடியுமாறு விண்ட்ஸர் கோமகன் 100 பவுனுக்குச் செக் அனுப்பியிருக்கிறார். வீயன்னு சர்வகலாசாலையில் படிப்பை முடித்த டாக்டர் நார்ஸல் ஸ்டானிஸ்லாவில் வசிக்கும் ஒரு அழகான பெண்ணிடம் காதல் கொண்டார். ஆனால் ஏழ்மை காரணமாக அவர்கள் கலியாணம் செய்துகொள்ள முடியவில்லை. 10 தினங்களுக்குமுன் அவர்கள் விண்ட்ஸர் கோமகனுக்கு பாராட்டுதல் கடிதமொன்றெழுதி அதில் தங்கள் நிலைமையையும் தெரிவித்திருந்தார். அவர்கள் ஆச்சரியப்படுமாறு 100 பவுனுக்குச் 'செக்' வந்துவிட்டது. கலியாணம் சீக்கிரம் நடக்கும்.

## விதவா விவாகத்திற்கு நகரத்தார் ஆதரவு

ஐக்கிய மலாய்நாடு நாட்டுக்கோட்டைச்செட்டியார்கள் வர்த்தக சங்கக் கூட்டம் கோலாலம்பூரில் திரு. மு.

ராம. பெரியகருப்பஞ்செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது.

விதவா விவாகத்தை இஷ்டப்பட்டவர்கள் செய்துகொள்கிறதென்று தீர்மானிக்கப்பெற்றது.

## மதுரையில் விதவா விவாகம்

இந்நகர் ஸௌராஷ்டிர சமூக சீர்திருத்த சக்கத்தார் ஜூன்மீ 23ந்தேதியன்று ஓர் விதவா விவாகத்தை நடத்திவைத்தனர். விவாகம்மீனாக்ஷிபுரம் ரசாயன சாயச்சாலை பட்டரையில் நடந்தது. மணமகன் திண்டுக்கல் ஸ்ரீ. நாட்டாமை சங்கரய்யர் என்பவருடைய குமாரரான தாரமிழந்த குப்புசாமி ஐயர் என்பவர். வயது சுமார் 38. மணமகள் பாளையங்கோட்டை ஸ்ரீ. ஆழ்வார் ஐயரின் குமாரத்தி கன்யா விதவை பகவதி அம்மாள். வயது சுமார் 16. விவாகம் பிராமண ஆசாரப்படி நடத்திவைக்கப்பட்டது. உள்ளூர் சமூக சீர்திருத்த சங்கத் தலைவர் ஸ்ரீ. என். எம். எஸ். கிருஷ்ணய்யரும், கமிட்டி அங்கத்தினர்களும், திண்டுக்கல் பிரமுகர்களில் சிலரும், மற்றும் உள்ளூர் வெளியூர் ஸ்திரீ புருடர்களுமாக சுமார் 600 பேர்களுக்கு மேலாக வந்திருந்து புதிய தம்பதிகளை ஆசீர்வதித்தனர்.

## கிழவனையா?—

### முடியவே முடியாது.

பாட்னா, ஜூன் 26—

“ஹ்ஹூம்! அந்தக் கிழவனைக் கல்யாணம் செய்து கொள்ளவே மாட்டேன்” என்றாள் வீரமங்கை!

எதிர்கால இன்பத்தை எதிர்பார்த்திருந்த அந்த இள நங்கையை ஒரு கிழப் பயலின் காலில் கட்டிப்போட்டு வாழ்வைக் குட்டிச்சுவராக்கப் பார்த்தனர்.

“மாப்பிள்ளை” காசி க்ஷேத்திரத்தைச் சேர்ந்தவன். வயது 50 தான்! தங்க விக்ரகம் போல இருக்கும் இந்தக் குட்டியை தட்டிக்கொண்டு போக ரொம்ப ஆசையோடு காசியிலிருந்து வந்தான்.

பெண்ணுக்கோ நல்ல வாலிபப் பருவம். அபார சங்கீத ஞானமுள்ளவள். தங்கப் பதக்கங்கூட பெற்றிருக்கிறாள். இன்னும் படிக்கிறாள். வகுப்பில் கெட்டிக்காரியாம்!

இந்த மாதிரி பொக்கிஷத்தைக் காசிக் கிழவனுக்குக் கட்டிக் கொடுப்பதை சகிக்காத சிலர், பாட்னா மாஜிஸ்திரேட்டிடம் அக்ரமத்தைத் தெரிவித்தனர். அவர் கல்யாணத்தை நிறுத்திவிட்டார். காசிக் கிழவன் ஆசையில் மண் விழுந்தது.

அப்பாவுக்கு புத்தி வந்தது. தகுந்த வரன் தேடிக்கொண்டிருக்கிறார்.

## அல்பேனியப் பெண்கள்

தென் அல்பேனியாவில் இருப்பவர் அனைவரும் முகமதியர். அங்குப் புதிய சட்டம் ஒன்று இயற்றப்பட்டிருக்கிறது. அச்சட்டப்படி பெண்கள் முகமூடிகளை நீக்கிவிடுதல் வேண்டும். அரசாங்கச் சட்டத்தை முஸ்லிம் அஸோஸியேஷனும் ஆதரித்துப் பெண்கள் வெளியில் செல்லலாமென்றும் பொதுக்கூட்டங்களில் பேசலாமென்றும் கூறுகிறது.

## யாருக்கு மனைவி?

ஒரு பிராமணக் கன்னிகை கிறௌரா என்ற கிராமத்தில் வசித்து

வந்த தனது சகோதரியைப் பார்க்கச் சென்றாள். அவளுடைய சகோதரி புருஷன் இரண்டாம்பேருக்குத் தெரியாமல் அவளை தனது தம்பிக்கு விவாகம் செய்துவிட்டான். ஆனால் அக் கன்னிகையை வேறொருவனுக்குக் கொடுப்பதென பெண்ணின் தகப்பனார் ஏற்கனவே நிச்சயித்திருந்தார். அந்த வாலிபன் பெண்ணின் தகப்பனாருக்கு இக் கலியாணத்தைப்பற்றித் தகவல் கொடுத்துவிட்டான்.

அவ்வளவுதான்; 200 பேர்வழிகளுடன் பெண்ணின் தகப்பனார் பெரிய மாப்பிள்ளையின் கிராமத்துக்கு வந்தார். புதிய மாப்பிள்ளையின் உறவினர் எவ்வளவோ தடுத்தும் ரூபா 400 கொடுப்பதாகச் சொல்லியும் கேளாது பெண்ணைத் தந்தை கிராமத்துக்கு அழைத்துச் சென்றார். முன்னர் நிச்சயித்திருந்த பிள்ளைக்கு பெண்ணைக் கொடுக்க கலியாண ஏற்பாடுகளை பலமாகச் செய்தார். பெரிய மாப்பிள்ளையின் பந்துக்கள் கலியாணத்தைத் தடுக்கச் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயின. பெண்ணின் தந்தை இரண்டாம் முறை பெண்ணுக்கு கலியாணத்தை முடித்துத் தீர்த்தார்.

## மனமில்லா மணம் மரணத்தில் முடிந்தது

நாங்குனேரி தாலூகா காடுபட்டி கிராமத்தில் பள்ளர் வகுப்பைச்சேர்ந்த 17 வயதுள்ள ராக்கி என்றவள் தனக்குப் பிடிக்காத கணவன் ஒருவனுக்கு வாழ்க்கைப்பட மறுத்தும் பெற்றோர்கள் அந்த மணமகனுக்கே கலியாணம் செய்வதாக நிச்சயித்து முகூர்த்ததினம் வைத்துவிட்டனர். பார்த்தாள் பெண். பெற்றோர்கள் எப்படியும் அவனுக்கே மணமுடித்து விடுவார்களென்பதை உணர்ந்தாள். விருப்பமற்ற ஒருவனைக் கட்டிக்கொண்டு சீரழிவதில் என்ன நன்மை இருக்கிறது? நாடெங்கும் பார்க்கிறோமே! துயரத்தைத் தவிர வேறு காணமுடியவில்லை. ஆகையால் ஒரே துன்பமாக இறந்து போவது நல்லதென்று அந்தப் பெண் கருதினாள் • போலும்! மணத்திற்கு முன்தினம் நடுநிசியில் தன்வீட்டுக்குப் பின்புறமுள்ள கூடத்தில் கழுத்தில் சுருக்கிட்டு அவள் தற்கொலை புரிந்து கொண்டதாகத் தெரிகிறது.

## விதவா விவாகக் கணக்கு

1937 மே மாதத்தில் லாகூர் விதவா விவாக சகாய சங்கத்தின் சார்பிலும் இதர வகையிலும் 338 விதவா விவாகங்கள் நடைபெற்றிருக்கின்றன. அவற்றின் விபரம்:—

ஜாதி வாரியாக

| | |
|---|---|
| பிராமணர் | 80 |
| க்ஷத்திரியர் | 50 |
| அரோடா | 52 |
| அக்ரவால் | 16 |
| காயஸ்தர் | 21 |
| ரஜபுத்ரர் | 36 |
| இதரர் | 74 |
| மொத்தம் | 338 |

மாகாண வாரியாக

| | |
|---|---|
| பஞ்சாப் | 103 |
| ஐக்கிய மாகாணம் | 90 |
| மத்திய மகாணம் | 34 |
| பம்பாய் | 3 |
| வங்காளம் | 77 |
| பீகார் ஒரிஸா | 22 |

| | |
|---|---|
| மத்திய இந்தியா | 9 |
| மொத்தம் | 338 |

## முராதாபாத்தில் மறுமணம்

1937 மே 30உ. முராதாபாத் ஸ்ரீமதி ராமதேவியின் மகள் பண்டிதை கிருதாரிலால் கௌடாவுக்கும் பண்டிதர் ராம்கோபால் அவர்களுக்கும் மிக விமரிசையாக மறுமணம் நடைபெற்றது. நகரத்திலுள்ள பிரமுகர்கள் பலர் விஜயஞ்செய்திருந்தனர். அந்நகர் காங்கிரஸ் கமிட்டியில் உழைத்துவரும் பண்டிதர் சதமீலால் அவர்களுடைய வீட்டில் இந்தக் கலியாணம் நடைபெற்றது. ஹரித்வாரம் ஸர். கங்காராம் விதவா பவனத்தின் காரியதரிசி பண்டிதர் சாந்தீ சொரூப வித்தியாலங்கார் இந்த சந்தர்ப்பத்தில் எதிர்பாராது அங்கு விஜயம் செய்தது அங்கிருந்தவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தது. தமது சகோதரர் உறவினர்கள் எதிர்த்தும் அதை பொருட் படுத்தாமல் தைரியமாக பண்டிதர் ராம்கோபால் இந்த விவாகத்தை செய்து கொண்டதற்காக யாவரும் பாராட்டினர். விவாகத்திற்குப் பின்னர் யாவருக்கும் நல்லுணவு அளிக்கப்பட்டது.

## ஜபல்பூரில் விதவா விவாகம்

29—4—37ல் ஜபல்பூரில் ஒரு உயர்ந்த குறிப்பிடத்தக்க வீட்டிலுள்ள விதவையாகிய வைசிய அக்ரவால் சமூகத்தைச்சார்ந்த ஸ்ரீமதி சாந்தாதேவிக்கும் அலகாபாத் வாசியும் "சோதே-பையா" ஆசிரியருமாகிய ஸ்ரீமான் லாலா ராமகிருஷ்ண லால்ஜி அக்ரவால் அவர்களுக்கும் மறுமணம் மிக விமரிசையாக நடைபெற்றது. அக்ரவால் சமூகத்திலுள்ள குறிப்பிடத்தக்கவர்கள் சுமார் நூறு பேர்களுக்கு மேல் விஜயம் செய்திருந்தனர். அகில இந்திய அக்ரவால் மகா சபையின் தலைவர் லாலா மூல்ச்சந்த்ஜி அக்ரவாலாவும் கல்கத்தாவிலிருந்து ஸ்ரீயுத ஜமுனா லால்ஜி பஜாஜிம் இன்னும் முக்கியஸ்தர்களும் இந்த விவாகத்தில் கலந்துகொண்டனர். இந்தக் கலியாணம் மிக மேன்மையாகச் சொல்லிக்கொள்ளப்படுகிறது.

## முஸ்லிம்—ரஜபுத்ரர் கலப்பு மணம்

சிருஸா நகரின் ஆரியசமாஜச் சார்பில் பிறப்பிலேயே மூஸ்லீமாகப் பிறந்த ஒரு பெண்ணையும் அவள் புத்திரிக ளிருவரையும் ஆர்யோபதேசகர் பண்டித ஸ்ரீராம்ஜி அவர்களால் சுத்தி செய்விக்கப்பெற்றது. சில நாட்களுக்குப் பின்னர் சூரஜ்சிங் என்ற ரஜபுத்திர வாலிபனுக்கு மேற்கூறிய பெண்ணை 6-6-37-ல் பண்டிதர் ஸ்ரீராம்ஜி அவர்களால் விவாகம் செய்விக்கப்பெற்றது.

விவாக சந்தர்ப்பத்தில் தம்பதிகள் நடந்துகொள்ள வேண்டிய நியதிகள் உபதேசிக்கப்பெற்றன. இந்த விஷயத்தில் ஜனங்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கின்றது.

## தெனாலியில் விதவா விவாகம்

சர் கங்காராம் ஹிந்து விதவா சங்கத்தின் சார்பிலும், சுனிதி சங்கத்தின் சார்பிலும், கலவந்துலு வகுப்பைச் சேர்ந்த ஒரு விதவைக்கு மறுணமம் ஜூலை 4உ நடைபெற்றது. பெண்ணின் பெயர் ஸ்ரீமதி சுப்பம்மாள். மணமகளின் பெயர் ஸ்ரீமான் பிஞலா ஜனார்த்தனராவ்.

# "மாதர் மறுமணப் பாடல் திரட்டு"

# மதிப்புரை.

---

## 'தமிழ் முரசு' சிங்கப்பூர்

காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்தாரால் வெளியிடப்பட்ட ஷை திரட்டுப் பிரதியொன்று நமது பார்வைக்குக் கிடைத்துள்ளது.

தமிழ் நாட்டுக் கணக்கற்ற சமூகக் கொடுமைகளில் பெண்கள் சுதந்திரம் கடியப்பட்டது மொன்றாகும். அதிலும் இயற்கை ஆக்ஞைக்கு விரோதமாய் 'கட்டறுத்த காரிகை' களைக் கடிமணம் புரிந்து கொடுக்காது "வைதவ்" யத்தின் பேரால் அவர்களுக்கு இழைக்கப்பட்டு வரும் இன்னல்கள் எண்ணிலாது மலிந்து கிடக்கின்றன.

இத்தகைய சமூகக் கொடுமைகளை யொழிக்க பல்வகை வழியுண்டு. இவற்றில் மக்களிடை அடிக்கடி சொற்பொழிவு நிகழ்த்தி வருதலும், பத்திரிகை சஞ்சிகை மூலம் எழுதியும் துண்டுப் பிரசுரங்கள் மூலம் விளக்கி வெளியிட்டும் பணியாற்றிவருவது அவைகளில் சிலவாகும். அத்தன்மையில் எளிய நடையில் இனிய பாட்டுகளாக பள்ளி மாணவர் முதல் அரங்கமேறி நடிக்கும் நாடக நடிகர்கள் ஈறாகப்பயின்று பாடிப்பாடி மக்கள் உள்ளத்தில் குடிகொண்டு கிடக்கும் சமூகக் கொடுமைகளை அகற்ற இவ்வெளியீடு பயன் தருமென நம்புகிறோம்.

மாதர் மறுமணத்தை மறுத்து வரும், சமூக சட்ட திட்டங்களை எடுத்துக் கண்டித்தும், மறுமணம் அவசியமென வற்புறுத்தி பல உதாரணக் கதைகளையும் விளக்கிக் காட்டி இனிய மெட்டில் எளிய நடையில் பாடப்பட்டுள்ள பாகங்களை பகுதி பகுதியாகத் தொகுத்து வெளிவந்துள்ள இச் சிறு திரட்டு சமூக சீர்திருத்த உலகுக்குப் பெரும்பணி ஆற்றும் என்பதில் சந்தேகமில்லை.

சமூக சீர்திருத்த வாலிபர், வனிதையர்களும் சங்கீத அபிமானமுள்ள பலரும் இந்நூலைப் பயின்று தொண்டாற்றவும் பயன் படும் என்று நம்புகிறதோடு தமிழர்களனைவரும் இத்தகை வெளி

யீடுகளை ஆதரித்து சமூக சீர்திருத்த சங்கங்களுக்கு துணைபுரிய வேண்டியது கடமையென்றும் எடுத்துக்காட்டுகிறோம்.

## "தேசாபிமானி" பினாங்கு

[மேற்கண்ட புத்தகம் காரைக்குடி "மாதர் மறுமண சகாய சங்க"த்தாரால் வெளியிடப்பட்டிருக்கிறது. இது இந்த வகையில் 4-வது பிரசுரம். அழகிய உருவில் 60 பக்கங்கள் கொண்டது. புத்தகம் விலை 2 அணா. போஸ்டு மூலம் பெற புத்தகத்திற்கு 3 அணா ஸ்டாம்பு அனுப்பல்வேண்டும்.]

ஹிந்து சமூகத்தில் விதவையர் துயரம் பொறுக்கமுடியாத விஷயம். இளமைப் போழ்தில் "விதவை"ப்பட்டம் சூடி இல்வாழ்க்கைச்சுகம் இன்னதென்றறியாது மனம் புழுங்கும் மங்கையர்களுக்கு இந்தியநாட்டில் குறைவு கிடையாது. இத்தகைய மாதர்களுக்கு மறுமணம் செய்து இருண்டுபோன அவர்களது வாழ்வில் புத்துணர்வையும் ஒளியையும் உண்டுபண்ணும் பணியில், காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கம் சிறந்த வேலை செய்து வருவதாயறிகிறோம் தங்களது வேலை வெற்றிபெறும் வழியில், இத்தகைய பிரசுரங்களை வெளியிட்டு வருவது வரவேற்கத்தக்கது. இந்நூலுக்கு பலர், அழகிய உணர்ச்சி ததும்பும் பாடல்களைப் புனைந்து நல்கியுள்ளனர். விதவைகள் துயரை சித்தரித்துக் காட்டும் அவைகளில் பல உள்ளத்தை உருக்கும் தன்மையானவை. "கைம்பெண்க"ளின் பரிதாபகர நிலைமையை விளக்கி அவர்கள்பால் நாட்டினரின் அநுதாபம் செல்லும் வண்ணம் செய்வதில், இச்சிறு பாடல்கள் அடங்கிய "திரட்டு" நற்பயனளிக்கும் என நம்புகிறோம்!

## "தாருல் இஸ்லாம்" சென்னை:

[காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்தினரின் 4-ம் வெளியீடு. விலை 2 அணா. கிரவுன் 1 × 16 அளவில் 60 பக்கங் கொண்டது. 27 பாடல்கள் இருக்கின்றன. அவற்றுள் சில காதைக் கவிதைகள்.]

இதில் பாரதிதாஸன் பாடியிருக்கும் "எங்களிஷ்டம்" "காதலைத் தீய்க்க கட்டுப்பாடு" என்ற கவிதைகள் உள்ளத்தை யள்ளும் கதைகளாக விருக்கின்றன. சுவாமி சுத்தானந்த பாரதியாரும், சாமி சிதம்பரனாரும் எழுதியிருக்கும் கவிகளும் மனமுருக்குபவைகளாக இருக்கின்றன. திரு. சுடலைமுத்துப்பிள்ளையவர்களின் கவிகளின் கவி கண்ணீரெழுப்புகிறது. காளவனப் புலவர், ஸ்ரீமதி

ஜானகி, ஸ்ரீ ரதி ராஜலக்ஷ்மீ ஆகியவர்கள் பாடிய பாட்டுக்களும் நன்ருயிருக்கின்றன. பொதுவில் வைதவ்யக் கொடுமை, கேட்போர் மனம் கரையும் வண்ணம் இச்சிறு நூலில் ஒன்றையொன்று போட்டியிடும் வகையில் பல கவிகள் மூலமாக எடுத்துக்காட்டப் பட்டிருக்கின்றது. ஒவ்வொரு தமிழரும் இதைப் படித்தல் வேண்டும்.

## 'விஸ்வபந்து' காரைக்குடி

[வெளியிட்டவர்: மாதர் மறுமண சகாய சங்கத்தார், காரைக்குடி. விலை அணு 2]

இச் சிறு புத்தகத்தில் விதவைகளின் துயரை விளக்கி பாரதிதாஸன், சுவாமி சுத்தானந்த பாரதி, சாமி சிதம்பரனுர், காளவனப் புலவர், ஸ்ரீ மு. கிருஷ்ண சர்மா போன்ற பல அறிவாளிகளால் இயற்றப்பெற்ற பாடல்கள் ஒன்று திரட்டி வெளியிடப்பட்டிருக்கின்றன. கவிகள் யாவும் எளிய நடையில் இருப்பதோடு, இலகுவில் பெண்டிரும் பாமர மக்களும் உணரத்தக்கவாறு அமைந்திருக்கின்றன.

## "தக்ஷிண பாரதி" இரணியல்

காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்திலிருந்து நமது மதிப்புரைக்காக அனுப்பப்பட்ட 'மாதர் மறுமணப் பாடல் திரட்டு' வந்தனத்துடன் பெற்றுக்கொண்டோம்.

விதவா விவாகத்தையும் மறுமணத்தையும் வழக்கத்தில் கொண்டு வருவதற்கு பல பிரசார முறைகள் இருப்பதுபோல கானங்களின் மூலமான பிரசாரமும் அவசியமேயாகும். இந்நூலில் பல ராகங்களிலமைந்த பாட்டுக்கள் காணப்படுகின்றனவென்ருலும் புதிய மெட்டுகளில் ஒன்றிரண்டு பாட்டுகள் மட்டுமே சேர்க்கப்பட்டிருக்கின்றன. மாதர் மறுமண சங்கத்தாரின் உத்தேசம் கைகூடுவதற்கு உதவி புரியக்கூடிய பல விஷயங்கள் அடங்கியுள்ளதும், 60 பக்கங்கள் உள்ளதும் ஆகிய இந்நூலுக்கு இரண்டணுக்களே விலையேற்படுத்தப்பட்டிருப்பது அதிகமல்ல.

இன்னும் ஏராளமான பாட்டுகளை நவீன வர்ணமெட்டுகளில் யாத்து வெளியிட்டால் விதவா விவாகங்கள் நடப்பில் வருவதில் கஷ்டமில்லையென்பதற்குச் சந்தேகமில்லை.

## "முன்னேற்றம்" சிங்கப்பூர்

(வெளியிட்டவர்:—மாதர் மறுமண சகாய சங்கம், காரைக்குடி; விலை இரண்டணு)

மாதர் மறுமணப் பாடல் திரட்டில், வைதவ்யத்தின் கொடுமையையும், மறுமணத்தின் அவசியத்தையும் விளக்கிக் கூறும் பல அழகிய பாடல்கள் கோர்வை செய்யப்பட்டிருக்கின்றன. "புதுத் தேசத்தின் உதயத்தையும், கட்டுப்பாடுள்ள காதலின் அபத்தத்தையும், புதுவை பாரதி தாசன் "எங்களிஷ்டம்" "காதலைக் தீய்த்த கட்டுப்பாடு" என்ற இரண்டு பாடல்களில் விளக்குகிறார். திரு. பாரதி தாசனின் பாடல்கள் எளிய நடையில், வாசிப்போர் உள்ளம் உருகும் முறையில் அமைந்து விளங்குகின்றன. "பெண்ணின் பெருமை" 'பெண் சக்தி' 'பெண்ணின் கண்ணீர்' முதலியவைகளை சுவாமி சுத்தானந்த பாரதியும் "அரிவையர் ஆனந்தத்தை" சுவாமி சிதம்பரனாரும் சிறு சிறு அழகிய பாடல்கள் மூலம் சித்தரித்துக் காட்டுகின்றனர். பாரதநாட்டுப் பெண்களுக்குச் செய்யும் அநீதியையும், மாதர் மறுமணம் மறுக்கப்படுவதால் நம் நாட்டுப் பெண் மக்கள் அடையும் துயரையும் "வாடும் பயிர்" என்ற பாடலில் நெஞ்சுருக்கும் முறையில் வெளியிடுகிறார் காளவனப் புலவர். ஆண்கள் பெண்களுக்கிழைக்கும் தீமையை திரு. மு. கிருஷ்ண சர்மா "கைம்மையர் விடுதலை" என்ற பாடல் மூலம் விளக்குகிறார். சுடலைமுத்துப்பிள்ளை, ராஜலக்ஷ்மி, ஜானகி அம்மாள், காந்தி தாசன், சிவப்பிரகாசம் போன்ற இன்னும் பல அறிஞர்களின் பாடல்கள் இப்புத்தகத்திலிருக்கின்றன.

பாரத தேசப் பெண்ணினத்தை இழிவுபடுத்தும் மடமையைப் போக்க; "மாதர் மறுமணப் பாடல்" பேருதவி புரியும் என்று நம்புகிறோம். இத்தகைய நூல்கள் பல தமிழ் நாட்டில் வெளிவந்துலவ வேண்டுமென்பது நமது மனப்பூர்வான ஆசை. இப்புத்தகத்தை வெளியிட்ட காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்தாரைப் போற்றுகின்றோம்.

